இந்தியப் பொருளாதார வளர்ச்சி

- இராஜேஸ்வரன் (கே)

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—502

# இந்தியப் பொருளாதார வளர்ச்சி

(சிற்றளவுத் தொழில்களின் சிறப்புத் தொகுப்புடன்)

ஆசிரியர்
கே. இராஜேஸ்வரன், எம்.ஏ.,
தலைமைப் பேராசிரியர், பொருளாதாரத்துறை,
அய்யா நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி,
சிவகாசி.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—September, 1973

T.N.T.B.S. (C.P.) No. 502



# INDIAN ECONOMIC DEVELOPMENT WITH SPECIAL REFERENCE TO SMALL SCALE INDUSTRIES

Price Rs. 9-10

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*
The Darwin Printing Works,
5/5, Whannels Road,
Egmore, Madras-8.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்
## (தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'இந்தியப் பொருளாதார வளர்ச்சி–சிற்றளவுத் தொழில்களின் சிறப்புத் தொகுப்புடன்' என்ற இந் நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 502 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 537 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின், மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனங் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# முன்னுரை

உலகின் பெரும்பகுதி நாடுகள் நாகரிகமடையாத ஒரு காலத்தில், நாகரிகத்தின் அச்சாணியாகவும், வேளாண்மை, தொழில், வணிகம் என்ற பொருளாதாரம் சார்ந்த துறைகளிலும், அரசியல், பண்பாடு, கலாசாரம்போன்ற துறைகளிலும் உயர்நிலை பெற்று விளங்கியது நம் நாடு என்பது வரலாறு காட்டும் பாடங்கள். பொன்னாலும், வெள்ளியாலும், வேறு பல உலோகங்களினாலும் ஆன பொருள்கள், பட்டாடைகள், பருத்தி ஆடைகள் என்று எண்ணற்ற பொருள்களை உற்பத்தி பண்ணும் தொழில்துறையிலே சீரும் சிறப்பும் பெற்று ஒல்காப் புகழ் சூடி விளங்கியது நம் துணைக் கண்டம். ஆயினும், ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில், கண்ணென விளங்கிய இத் தொழில்கள், மேல் ஊட்டம் இல்லாமையால் நலிந்து, நசித்துப் போயின. இதுவும் வரலாறு காட்டும் இன்னொரு காட்சி. இவைகள் எல்லாம் மக்கள் அறியாத உண்மைகளல்ல.

நாடு விடுதலை பெற்றதும், தேசிய அரசு ஆட்சிப் பொறுப்பேற்றதும், நலிந்துபோன பொருளாதாரத்தை வலுவுடையதாக்க, ஆக்க ரீதியான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தொழில் கொள்கைத் தீர்மானங்களின் மூலமாக, நாட்டைத் தொழில்மயமாக்கக் கணக்கற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஐந்தாண்டுத் திட்டங்களின் வழியாகத் தொழில் மலர்ச்சிக்கு வித்திடப்பட்டது. விரைவான தொழில் வளர்ச்சி வீதம் கண்டு, தேசிய சுயதேவை பூர்த்தியடைந்து, மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திட அரசு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் எண்ணற்றவை. இத்தகைய சூழ்நிலையிலும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குச் சிறு தொழில்களும், பெரும் பணி ஆற்றிட வல்லன என்பது உணரப்பட்டது. எனவேதான், அரசின் தொழில் கொள்கைத் தீர்மானத்தில் சிறு தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்களின் வளர்ச்சிக்கான தனி ஷரத்துகள்

சேர்க்கப்பட்டன. வளர்ந்து வரும் பொருளாதார அமைப்புக் கொண்ட நாடுகளில் சிறு தொழில்கள் வளர்ச்சியைப் பேணுதல் ஓர் இன்றியமையா இயல்பாக மாறிவிட்டது.

சிறு தொழில்கள்பற்றி ஆங்கிலத்தில் பரவலாகப் பற்பல நூல்கள் வெளி வந்துள்ளன. சிறு தொழிலோடு தொடர்புகொண்ட ஏதேனும் ஒரு துறைபற்றிய நூல்களாகவே அவைகள் அமைந்து உள்ளன. இந்தியப் பொருளாதார வளர்ச்சியையும், சிறு தொழில்களையும் ஒருங்கிணைத்து ஒரே நூலாக—தனி நூலாக—வெளியிடப்பட்ட நூலினை நானறிந்த மட்டும் காணவியலவில்லை.

தாய்மொழி வழியாக உயர் கல்வி பெறும் நிலை தமிழகத்தில் இன்று காலூன்றிவிட்டது. இளங்கலை வகுப்புவரை, தமிழ்வழி பொருளாதாரம் கற்பித்தல் இன்றைய நடைமுறைச் சாத்தியமாக மாறிவிட்டது. போற்றத்தக்க இம் முயற்சிக்கு உயிர் ஊட்டத்தக்க பற்பல பாடநூல்கள் இன்று வந்துள்ளன. தொடக்க காலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்ட நூல்களே மலிந்திருந்தன. இன்றோ, தமிழ் வழிச் சிந்தனையால் உருவான முதல் நூல்கள் ஒவ்வொன்றாக வெளி வருகின்றன. இத்தகைய நூல்களிலும், சிறு தொழில்களையும், இந்தியப் பொருளாதார வளர்ச்சியையும் ஒருங்கிணைத்துக் கூறவல்ல ஓர் சிறப்பு நூல் வெளிவரவில்லை. அத்தகையதோர் நூலைப் படைக்கும் பணியொன்று கிடைத்ததுபற்றிப் பெருமகிழ்ச்சி கொண்டேன். மாணவருலகுக்குச் சிறு தொழில்கள்பற்றியும், பொருளாதார வளர்ச்சிபற்றியும் விளக்கிக் கூறும் வாய்ப்பாக இந் நூல் அமைந்தது.

இந் நூல் பத்து அதிகாரங்களாகப் பகுக்கப்பெற்று ஆராயப் படுகிறது. இதில் முதல் நான்கு அதிகாரங்கள் விதியியல் பொருளாதார (Pure Economics) விளக்கங்களாகவும், எஞ்சிய ஆறு அதிகாரங்கள் வினைவியல் பொருளாதார (Applied Economics) அல்லது நடைமுறைப் பொருளாதார (Practical Economics) விளக்கங்களாகவும் அமைந்துள்ளன. பொருளாதார வளர்ச்சி, போதா வளர்ச்சி போன்ற சொற்றொடர்களின் இலக்கண விளக்கங்கள், பொருளாதார வளர்ச்சிக்கான மாதிரிப் படிவங்கள், தொழில்மயமாக்கலின் அவசியம், பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில்களின் இன்றியமையாமை என்பன போன்ற விளக்கங்கள் விதியியல் பொருளாதாரச் சார்புடையன. விதியியல் பொருளாதாரக் கருத்துகள் நடைமுறையில் எந்த அளவுக்கு ஆளப்பட்டுள்ளன, ஆளப்படுகின்றன என்பதைப்பற்றி எஞ்சிய அதிகாரங்கள் கூறுகின்றன. இவ்வாறாக இருவகை முறைகளையும் ஒருங்கிணைத்து, இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் சிறுதொழில்கள்

எந்த அளவிற்கு இன்றியமையாதன என்பதை நிலைநாட்ட முயன்றுள்ளேன்.

முதல் அதிகாரத்தில், பொருளாதார வளர்ச்சி இலக்கணங்களையும், வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் முக்கியமான காரணிகளையும், போதா வளர்ச்சிக்கான காரணங்களையும், பொருளாதார வளர்ச்சி ஏன் தேவை என்பதற்கான விவரங்களையும் தெளிவாக விளக்கியுள்ளேன். வளர்ச்சி பெறாத நாடுகள் விரைவான பொருளாதார வளர்ச்சி பெறுவதற்காக, தொன்மைப் பொருளாதாரக் கருத்தினர் முதற்கொண்டு இன்றைய பொருளாதார வல்லுநர்கள்வரை அமைத்துத் தந்துள்ள மாதிரிப் படிவங்களை விளக்குவதே இரண்டாம் அதிகாரம். பின்தங்கிய நாடுகள் தம் பொருளாதாரத்தை வளம்பெறச் செய்ய வேளாண்மைத் துறை ஏற்றதா அல்லது தொழில்துறை ஏற்றதா என்பதை ஆராய்வதே மூன்றாம் அதிகாரமாகும். தொழில்துறைதான் தக்க நிவாரணம் என்பதை அங்கே நிருபணம் செய்துவிட்டு, குறிப்பாகப் பொருளாதார வளர்ச்சிக்குச் சிறு தொழில்கள் எவ்வளவு இன்றியமையாதன என்பது அடுத்த அதிகாரத்தில் தெளிவாக்கப்படுகின்றது. ஐந்தாம் அதிகாரத்தில் இந்தியாவின் கடந்தகால, நிகழ்காலப் பொருளாதார வளர்ச்சியின் வரலாறு பற்றிக் கூறப்படுகிறது. அதனையடுத்து ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலிருந்து இற்றை நாள் வரையான தொழில் துறையின் பல்வேறு கட்ட வளர்ச்சியினை விளக்குவது ஆறாவது அதிகாரம். இந்தியாவில் சிறு தொழில்கள் எத்தகைய இடத்தைப் பெற்றுள்ளன, எதிர்காலத்தில் எத்தகைய வாய்ப்புகளைப் பெறவிருக்கின்றன என்பதைப் பற்றியும், சில சிறுதொழில்களின் வளர்ச்சியைப்பற்றியும், பொதுவாகச் சிறுதொழில்களை எதிர்நோக்கியுள்ள சிக்கல்கள், அவற்றைக் களைய அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் என் பன போன்றவற்றை அதிகாரங்கள் 7, 8, 9 விளக்குகின்றன. அரசின் நடவடிக்கைகள் நிதிச் சார்புடையன, நிதிச் சார்பற்றன என்று இருவகையாக ஆராயப்பட்டுள்ளது. இறுதி அதிகாரத்தில், இந்திய அரசின் தொழில் கொள்கையைக் கூறவல்ல 1948, 1956ஆம் ஆண்டுத் தொழில்கள் (வளர்ச்சி, ஒழுங்கு) சட்டம் போன்றவற்றையும், தொழில் அனுமதிபற்றி ஆய்ந்த ஹசாரி அறிக்கை, தத் குழு அறிக்கையினையும் காணலாம்.

உலகப் போர்களினால் சீர்குலைந்த பொருளாதாரத்தைச் செம்மைசெய்து மிகப் பெரிய தொழில்வள நாடாக இன்று ஜப்பான் விளங்குவதற்குக் காரணம், அந் நாடு சிறுதொழில்களை முறைப்படி பேணியமையேயாகும். எனவே, வளர்ச்சி பெற்றுவரும் நமது

பொருளாதாரத்திற்கு அந் நாட்டின் அனுபவங்கள் துணைபுரிய வல்லன என்பதால் 'ஜப்பானில் சிறுதொழில்கள்' என்ற ஒரு பகுதி பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டுள்ளது. கிராமப் பொருளாதார மலர்ச்சியில் இந்தியாவின் பொருளாதார எழுச்சியுள்ளது என்பதை காந்திய சிந்தனை பொதுவாக வற்புறுத்துகின்றபடியால், 'காந்தியமும் சிறு தொழில்களும்' என்றோர் இணைப்பும் சேர்க்கப் பட்டுள்ளது.

இந்தியாவில் சிறு தொழில்கள்பற்றி கார்வே குழுவும், ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவும் ஆய்ந்தறிந்து சமர்ப்பித்த அறிக்கைகள் பற்றி நூலில் ஆங்காங்கு மேற்கோளாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். எனவே, அக் குழுக்களின் சிறு தொகுப்புகளும் பிற் சேர்க்கையில் இணைக்கப்பட்டன.

இத்துறை பற்றி வெளிவந்துள்ள நூல்களிலேயே மிகச் சிறந்த நூலாக அமைக்கும் பொருட்டு, தலையாய பொருளாதார வல்லுநர்கள் எழுதிய நூல்களே ஆதார நூல்களாகவும் மேற்கோள் நூல்களாகவும் கொள்ளப்பட்டன. மேற்கோள் வரிசைப் பட்டியலை ஒரு கண்ணோட்டம் விடின் இது புலனாகும்.

தமிழ்வழிப் பொருளாதாரம் பயிலும் மாணவர்கட்கு உறு துணையாக இருக்கும் வண்ணம் இந் நூல் விரிவாகவும், பல்வகைக் கருத்துகளையும், புள்ளி விவரங்களையும் உள்ளடக்கியதாகவும் ஆக்கப்பட்டிருக்கிறது. பொருளாதாரக் கலையில் முதுநிலை வகுப்புப் பயிலும் மாணவர்களும் இதனைக் குறிப்பு நூலாகவோ அல்லது துணை நூலாகவோ பயன்படுத்திக்கொள்ளத்தக்க அளவிற்கு விரி வாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டுள்ளது. சிக்கல்களை ஆழ்ந்து அணுகி தக்க விளக்கங்கள் தந்து எளிய நடையில் எழுதப்பட்ட இந் நூல், பல்கலைக்கழக மாணவர்கட்கு மட்டுமன்றி, இந்தியா வின் நடைமுறைப் பொருளாதார வளர்ச்சிபற்றியும், சிறுதொழில் கள் பற்றியும் அறிய விரும்பும் பொதுமக்கட்கும் பயன்படும் என்றே கருதுகிறேன்.

கே. இராஜேஸ்வரன்

# பொருளடக்கம்

# 1. பொருளாதார வளர்ச்சி, போதா வளர்ச்சி : சிறப்பியல்புகள்

## (DEFINITIONS OF ECONOMIC DEVELOPMENT AND UNDER DEVELOPMENT)

'பொருளாதார வளர்ச்சி' எனும் கருத்து உண்மையில் பண்டு நாட்டு ஆராயப்பட்டு வந்துள்ளது. ஆனால், இரண்டாம் உலகப் பாருக்குப் பின்னர்தான் இக் கருத்துக்குச் சிறப்பு ஏற்பட்டது ன்று கூறினல் மிகையாகாது. குறிப்பாக வளர்ச்சியுரு அல்லது ளர்ச்சியுறுகின்ற (Under developed or developing) நாடு ளுக்குப் பொருளாதார முறையிலே கைகொடுத்து உதவ வண்டும் என்ற நல்லெண்ணம் வளர்ச்சியுற்ற சில நாடுகளுக்கு ற்பட்டது அதன் விளைவாகப் 'பொருளாதார வளர்ச்சி' ஓர் அறிவியலாக உருப்பெற்றது. பொருளாதார நிபுணர்கள், புள்ளி விவர ஆய்வாளர்கள், திட்டமிடும் அறிவியலறிஞர்கள் மற்றும் பல மதைகள் தோன்றிச் சிறப்பாக அதனை ஆராயலாயினர். தொன்றுதொட்டுக் கோலோச்சிய சில கோட்பாடுகள் தவிடு பொடியாக்கப்பட்டு அந்த இடத்தில் புதிய கோட்பாடுகள் சில புகுத்தப்பட்டன.

'வளர்ச்சிப் பொருளாதாரம்' (Development Economics) ஓர் அறிவியலாகப் படைக்கப்பட்டவுடன் அது வளர்ந்தோங்கு வதற்குப் பற்பல வழிமுறைகள் தோன்றலாயின. ஏனெனில், ஒவ்வொரு நாட்டிற்கும், அதற்கே உரித்தான சில சமூக, கலாச்சார, சமய நிலைகள் உண்டு. இவற்றைக் கருத்தில் கொண்டு வளர்ச்சிக் கான வழி வகைகளும் அமைந்தன. ஒரே நாட்டிலும் கூட மாறு படும் சூழ்நிலைகளுக்கேற்ப பற்பல விதி முறைகள் வகுக்கப்பட்டன. எனினும், ஒரு நாட்டிற்குரிய தனித்தன்மையினை மையமாகக்

கொண்டு அதன் வளர்ச்சியின் பாணி அமைய வேண்டுவது இன்றி யமையாததாகிறது. சுருங்கக் கூறின், பிற நாடுகள் பொருளாதார வளர்ச்சிக்காக மேற் கொண்ட முறைகளை, நாமும் கண்மூடித்தன மாக மேற்கொள்வது என்பது பகுத்தறிவுக்குப் பொருத்தமற்ற செய லாகும். இதனால்தான் பொருளாதார நிபுணர்கள் வளர்ச்சிப் பிரச் சினைகளுக்குத் தீர்வு காண மேலும் பல இடர்களை மேற்கொள்ள வேண்டிய நிலையில் இருக்கின்றார்கள் போலும்.

உலகில் பெரும்பான்மையான நாடுகள் பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலையில் உள்ளன. அவை, உலக மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பங்கைக் கொண்டுள்ளன. அவற்றின் சமூக-பொருளாதாரப் பிரச்சினையே, இன்றைய இருபதாம் நூற்றாண்டின் தலையாய சமூக, பொருளாதாரப் பிரச்சினையாக உருவெடுத்து, அறிஞர்களின் சிந்தனைக்கு அறை கூவல் விடுத்துள்ளது என்று ஐயமறக் கூறலாம். வருமானத்தில் மிகக் குறைந்த நிலையில் உள்ள இத்தகைய பல நாடுகளுக்கு உதவ வேண்டுமென, நல்லெண்ணம் படைத்த வளர்ச்சியடைந்த சில நாடுகள் விரும்பின. வருமான ஏற்றத் தாழ்வுகள் ஒரு நாட்டினுள் விரும்பத் தக்கதன்று. அது போல் பன்னாட்டு அளவிலும் இப்பிரச்சினைக்குத் தீர்வு காண வேண்டும். இப்பொருளாதார ஏற்றத் தாழ்வுப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டால், அனைத்துலக நாடுகளிடையே அமைதி நிலவும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மனிதாபிமானத்தால் உந்தப்பட்ட சில மேலை நாடுகள், வறுமையில் வாடுகின்ற, வளர்ச்சி குன்றிய பல நாடுகளின் பொருளாதார நிலையை உயர்த்த முடியும். மேலும் சொல்லப் புகுந் தால் அது அவற்றின் தலையாய கடமையுமாகும். எல்லாரும் 'எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே உடையோருமில்லை, இல்லாருமில்லை.' என்று கம்பன் கண்ட சமுதாயம் உருவாக வேண்டும். உடையோரையும் (Haves) இல்லாரையும் (Have nots) பிரித்துள்ள திரையானது கிழிக்கப்பட வேண்டும். வளர்ச்சி யுற்ற நாடுகள் இழைத்த கொடுமைதான் தங்களை இந்நிலைக்கு ஆளாக்கியதென பின்தங்கிய நாடுகள் நினைப்பதில் வியப்பேது மில்லை. தீய கனவாகிய கடந்த கால நிகழ்ச்சிகளை மறந்து, புதிய தொரு எழுச்சியைத் தோற்றுவித்தல் வேண்டும் எனும் ஆர்வம் இத்தகைய நாடுகளிடம் இருப்பது இயல்பே. எனவே, 'பொருளா தார வளர்ச்சி' என்ற தத்துவம், வளர்ச்சியடைந்த நாட்டினருக்கும் வளர்ச்சி குன்றிய நாட்டினருக்கும் இன்றியமையாத ஓர் அம்ச மென்பது யாவராலும் மறுக்க முடியாததோர் உண்மையாகும்.

**பொருளாதார வளர்ச்சி—பொருள்**

பொருளாதார வளர்ச்சி என்ற தொடருக்குப் பலர் பல விளக்கங்கள் அளித்துள்ளனர். ஆயினும், அனைத்து விளக்கங்களும் சுட்டிக் காட்டிடும் குறிக்கோள் ஒன்றுதான்—அதாவது 'வறுமையிலிருந்து விடுபட்டு, வளமுடன் வாழவேண்டும்' என்பதே. இந்த இலக்கினை அடைய உற்பத்தி அளவிலும், மற்றும் தொழில் நுட்பத்திலும் வியக்கத்தகும் முன்னேற்றங்கள் காணவேண்டும் என்று சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். மற்றும் சிலர் சமூகப் பழக்க வழக்க மரபுகளில் (Social Institutions) புரட்சிகரமான மாறுதல்களைத் தோற்றுவித்தால் பொருளாதார முன்னேற்றத்தை அடைந்து விடலாமெனக் கருதுகின்றனர்.

ஒரு நாட்டின் உண்மை வருமானத்தை உயரச் செய்வதால் அதற்கேற்ப அந்நாடு முன்னேற்றம் காணும் என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. எனினும், தலா வருமான மட்டத்தை அதிலிருந்து கணித்துவிட்டால், அந்நாட்டின் நிலையை இன்னும் எளிதாக அறித்து கொள்ள முடியும். இதற்குத் தக்க காரணம் உண்டு. தேசிய வருமான வளர்ச்சி வீதம் மக்கள் தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால், தலா வருமானமும் உயருகின்றது என்பது பொருள். மாறாக, தேசிய வருமான வளர்ச்சி வீதம் மக்கள் தொகைப் பெருக்க வீதத்தை விட குறைவாக இருந்தால் தலா வருமானமும் குறைந்து, வாழ்க்கைத் தரமும் வசதியாக அமையாமல் போய்விடலாம். ஏனெனில், வளர்ந்து வரும் மக்கள்தொகையானது தேசிய வருமானப் பெருக்கத்தை உறிஞ்சிவிடுகிறது. வளர்ச்சியுறும் நாடுகளில் இத்தகைய ஒரு நிலை காணப்பட்டால் பொருளாதார முன்னேற்றம் மேலும் தடைப்படும்.

பல ஆக்க சக்திகள் ஒருங்கிணைந்து பல்லாண்டுகள் செயல்பட்டு தேசிய வருமானத்தை நீண்ட காலத்திலேனும் உயர்த்துவதற்கு ஆயத்தமாக இருக்கலாம். இது வரவேற்கப்பட வேண்டிய கொள்கை தானென்றாலும், இந்த ஒரு வகையினால் மட்டும் பொருளாதார வளர்ச்சியை அடைந்துவிட முடியாது. அதனுடன் இயற்கைச் செல்வங்களை அதிக அளவில் பயன்படுத்தல் (Exploitation of Natural resources) மூலதனத் திரட்சி (Capital formation) மக்கள்தொகைப் பெருக்கம், புதுமைகளைப் புகுத்தல் (Innovation) சமுதாய மரபுகளை மாற்றி அமைத்தல் போன்ற பல அளிப்புப் பகுதியில் செயல்பட வேண்டும். அது போன்று தேவைப் பகுதியிலும் மக்களின் விருப்பு, வெறுப்புகள், வருமானப் பங்கீடு, நுகர்வோர் பண்டவிலை (Price of Consumer Goods)

போன்றவை தகுந்த முறையில் செயல்பட்டால்தான் நாட்டின் உண்மை வருவாயை உயர்த்த முடியும்.

பொருளாதார வளர்ச்சி எனப்படுவது இத்தகைய ஓர் இயக்கத்தைத்தான் குறிப்பிடுகின்றது. இவ்வியக்கம் மூன்று கூறுகளாக அமைந்துள்ளது எனலாம். முதலாவதாக, மேற்கூறியது போன்று உற்பத்திக் காரணி அளிப்பு அல்லது பண்டங்களின் தேவைக் கட்டுமானத்தில் நிகழ்கின்ற மாற்றங்கள். இரண்டாவதாக நாட்டின் உண்மை வருவாய் உயர்வு. உண்மை வருமானமென்பது ஒரு நாட்டிலுள்ள அனைத்து இறுதிப் பண்டங்கள் (End Products) பணிகள் இவற்றின் விலை மதிப்பினை, ஆண்டுக்கொரு முறை கணக்கிடுவதன் மூலம் கிடைப்பதாகும். பணவருமானத்தை அளவுகோலாகக் கொண்டு ஒரு நாட்டின் வாழ்க்கைத் தரத்தை கணக்கிட முடியாது. சான்றாக, குவெய்த்தானது (Kuwait) இத்தாலி அல்லது ஃபிரான்சைக் காட்டிலும் அதிக தலா வருமானத்தைக் கொண்டதாக இருந்தாலும், அதன் வாழ்க்கைத் தரம், மற்ற இரு நாடுகளைக் காட்டிலும் உயர்ந்துள்ளது எனத் திட்டவட்டமாக கூற முடியாது. சில வேளைகளில் அவ்வாறு குவெய்த் போன்ற நாடுகளில் உண்மையாகவே உயர்ந்திருந்தாலும் அது விலக்கேயன்றி விதி ஆகாது. மூன்றாவதாக, இவ்வுண்மை வருமானம் நீண்ட காலப் போக்கில் (Long run trend) உயர்வு அடைய வேண்டும். வணிகச் சுழல்கள் (Business Cycles) காரணமாகப் பொருளாதாரத்தில் ஏற்றத் தாழ்வுகள் தோன்றுவது இயல்பு. அவற்றைப் பொருளாதார வளர்ச்சிக்குரிய அறிகுறிகள் எனக் கொள்ள வேண்டும். அத்தகையச் சுழல்களில் தோன்றும் மிக உயர்ந்திருக்கும் முகட்டைக் (Peak) கொண்டு, அப்பொருளாதாரம் செழிப்புடையதாக உள்ளது என்று கூறுவதைவிட சுழல்களிடையே எதிர்ப்படும் உண்மைவருமானத்தின் உயர்வுதான் செழிப்பு நிலையை வெள்ளிடை மலையெனத் தெள்ளிதின் உணர்த்துவதாகும். இச்செழிப்பு நிலையை எய்துவதற்கு சுமார் இருபதிலிருந்து இருபத்தைந்து ஆண்டுகள் கூட ஆகலாம். இவ்வாறு நீண்ட காலப் போக்கில்தான் பொருளாதார வளர்ச்சியைக் காண வேண்டும்.

வேறு சிலர், உற்பத்திப் பெருக்கத்திற்குச் சிறப்பு அளிப்பதை விட, நாட்டிலுள்ள செல்வத்தின் பங்கீடு செம்மையாக இருத்தல் வேண்டுமெனக் கூறுகிறார்கள். இக் கூற்றையும் போற்ற வேண்டியுள்ளது. ஏனெனில், வருமானப் பங்கீடானது, மிகுந்த ஏற்றத் தாழ்வுகளுடன் இருந்தால், மிகக் குறைந்த ஒரு சிலரே வருமான உயர்வினால் பயனுறுவார்கள். மேலும் வளர்ச்சியுறும் நாடுகளில் மக்கள் தொகைப் பிரச்சினை மிகவும் தீவிரமாக உள்ளதால், தேசிய

வருமான உயர்வினால் வாழ்க்கைத் தரமும் உயர வேண்டு மென்பதில்லை. எனவே, மக்கள் நலம் கருதிப் பொருளாதார வளர்ச்சியைத் தோற்றுவிக்கையில், அது ஒரு சிலரை மட்டிலும் அடையாமல், பரவலாகப் பெரும் பகுதியினர் அனுபவிக்கும் வகை யில் அமைய வேண்டும்.

### பொருளாதார வளர்ச்சிக்குரிய காரணிகள்

இதுகாறும் பொருளாதார வளர்ச்சிபற்றிய சில விளக்கங்கள் கண்டோம். மேலும் பொருளாதார வளர்ச்சியானது சிற்சிலக் காரணிகளைச் சார்ந்துள்ளது என்பதை அறிதல் வேண்டும். அக் காரணிகளைக் காணுதற்கு முன்பு கீழ்வரும் சில குறைகள் நீக்கப் பெற்றாலே பொருளாதார வளர்ச்சி சீராக அமையும் என்பதையும் உணர வேண்டும். அக் குறைகளாவன:

(i) திறமை பற்றாக் குறையினால் அல்லது பருப் பொருள் (Meterial resources) போதாமையினால் ஏற்படும் உற்பத்தித் திறன் குறைவு.

(ii) மூலதனப் பற்றாக்குறை.

(iii) ஏழ்மை நாடுகளுக்கே உரித்தான பாதக வணிக நிலை (Adverse Balance of Trade).

(iv) மக்கள் தொகைப் பெருக்கம்.

இவற்றை முழுவதும் அகற்றுவதற்கோ குறைப்பதற்கோ முயற்சிகள் எடுத்து அதில் வெற்றி கண்டு, அதன் விளைவாகப் பொருளாதாரத்தில், செல்வம், வருமானம் மற்றும் உற்பத்தி அளவு கள் உயர்ந்தாலும், அது வளர்ச்சிக்குரிய சான்று எனத் திட்ட வட்டமாகக் கூற இயலாது. ஏனெனில் பொருளாதாரச் சார்பற்ற வேறு பல சக்திகளும் (Non-economic-forces) வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகின்றன. அவை பெரும்பாலும், சமூக, அரசியல், உள நிலை சார்ந்த காரணிகளாகவே உள்ளன. ஆராயப் புகுந்தால் இவை யாவும் பின்னிப் பிணைந்து பிரிக்கவியலாத நிலையிலுள்ளன.

எனவே, தனியொரு சக்தியினைக் காரணங்காட்டி அதுவே பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுகின்றது எனக் கூற இயலாது. எனினும், பெருகி வருகின்ற மக்கள் தொகையை ஈடு கட்டும் வகையில் தலா வருமானம் உயர்வதாகக் கொண்டால், அதனையே பொருளாதார வளர்ச்சிக்கான அறிகுறி எனக் கூறுவ தில் தவறில்லை. இதனை அணுகுமுறையாகக் கொண்டு நோக்கும் போது, பின்வரும் காரணிகள் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப் படையாக அமைகின்றன:

(i) நில, கனி, தண்ணீர், வனவளங்கள் சேர்ந்துள்ள மூலப் பொருள்கள்

(ii) மக்கள்தொகையின் அளவும் தரமும்

(iii) நாட்டிலுள்ள தொழில் முயல்வோரின் திறன்

(iv) பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கும், சமுகப் பழக்கவழக்க மரபுகள்

(v) பொறுப்புடையோர் வசம் ஒப்படைக்கப்பட்ட நிலையான அரசியல், அதைச் சார்ந்துள்ள ஆட்சி

(vi) நட்புறவு கொள்ளுகின்ற அண்டை நாடுகளுடன் நன்மை தரவல்ல அரசியல், பொருளாதார உடன்படிக்கைகள்

(vii) நாட்டின் வளர்ச்சிக்காக நாட்டு மக்கள் அனைவரும் எத்தகைய இடர்பாடுகளையும் எதிர்நின்று, அரும்பாடுபட விழைகின்ற மனப்பான்மை.

இவற்றைப் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிக்கின்ற முக்கிய காரணிகளாகக் கொண்டு பார்க்கும்பொழுது உலகனைத்திலும் உள்ள வளர்ச்சி நிலைகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம் என ஃபிரையர் (Fryer) கூறுகிறார். அவையாவன:

(i) மிகுந்த வளர்ச்சி கண்ட தொழில் சார்ந்த பொருளாதாரம் (Highly Developed Industrial Economy)

(ii) பகுதித் திறனுற்ற (Semi-skilled) தொழில் மற்றும் வேளாண்மை சார்ந்த அமைப்பு. இவ்விரு தொகுதிகளும் உலகிலுள்ள சுமார் 20 சதவீத மக்களுக்கு ஆதரவு அளிக்கின்றன.

(iii) போதா வளர்ச்சி கண்ட வேளாண்மை சார்ந்த பொருளாதாரங்கள். இத்தகைய அமைப்புகளில் உலக மக்கள்தொகையில் தோராயமாக 50 சதவீத மக்கள் வாழ்ந்து வருவதாகக் கொள்ளலாம்.

(iv) திட்டமிடப்பட்ட கம்யூனிசப் பொருளாதாரம்.

இப் பாகுபாடானது மேலெழுந்தவாரியாக உள்ள சில கருத்துகளைத்தான் வலியுறுத்துகிறதேயன்றிப் பிரச்சினைக்குத் தீர்வு காண்கின்ற வகையில் முற்றிலும் ஆராய்ந்ததாகத் தெரியவில்லை. எனவே, வளர்ச்சி குன்றிய பொருளாதாரத்தைப்பற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

**வளர்ச்சி குன்றிய பொருளாதாரம்**

போதா வளர்ச்சியானது பல நிலைகளில் பல நாடுகளில் காணப்படுகின்றமையினால் அதற்குரிய பரிகாரங்களும் பலதரப்

பட்டவையாக அமைகின்றன. ஒரு நாடு கண்ட வளர்ச்சி முறை யானது வளர்ச்சிகுன்றிய பிற நாடுகளுக்குப் பொருந்தாமல் போகக் கூடும். எனவே, வளர்ச்சி குன்றிய பொருளாதாரத்தை வளர்ச்சி யுற்ற பொருளாதாரத்தைக் கொண்டுதான் விளக்க முடியும். அதற்கான விளக்கங் காட்டிய பிறகு அதற்குக் காரணமாக உள்ள பல தன்மைகளைக் குறிப்பிட்டு, அவற்றை அகற்றுவதற்குரிய வழி முறைகளைக் கூறுவோமாக.

**போதா வளர்ச்சிப் பொருளாதாரம்—இலக்கண விளக்கங்கள்**

பொருளாதார அறிவியலில் மலிந்துள்ள ஏனைய சொற்கள் போன்று 'போதா வளர்ச்சி' எனும் சொற்றொடருக்கும் நுட்ப மானதொரு இலக்கணத்தை வகுத்திட முடியாது. இச் சொற் றொடருக்குரிய இலக்கணம் பல்வேறுபட்ட வகையில் வகுக்கப் பட்ட போதிலும், சிலவற்றை மட்டும், நடைமுறைக்குப் பயனுடை யவை எனக் கருதி அவற்றை விளக்கலாம்.

எடுத்துக்காட்டாக, 'ஐக்கிய நாட்டு அவை' (United Nations Organisation) அறிக்கை பின்வரும் இலக்கணத்தைத் தந்துள்ளது. கனடா, ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டன், ஃபிரான்சு, மேற்கு ஐரோப்பா போன்ற நாடுகளுடன் ஒப்பிடும்பொழுது, உண்மைத் தலா வருமானம் குறைந்துள்ள நாடுகளைப் 'போதா வளர்ச்சிப் பொருளாதார நாடுகள்' எனக் குறிப்பிடலாம். அவ்வாறுள்ள நாடுகளில் வருமான உயர்விற்குரிய சாத்தியக் கூறுகள் பெருமளவி லிருக்கும். பாயர் மற்றும் யாமி (Bauer and Yamey) என்பார் 'வட அமெரிக்கா, மேற்கு ஐரோப்பா மற்றும் ஆஸ்திரேலியாவி லுள்ள தலா உண்மை வருமானம், மூலதனத் தரங்களைவிடக் குறைவாக உள்ள நாடுகளை அல்லது வட்டாரங்களை வளர்ச்சி குன்றிய நாடுகளெனக் கூறலாம்' என்றனர்.

இவ்விரு இலக்கணங்களும் குறைந்த அளவு வருமானத்தை யும், மூலதனப் பற்றுக் குறையையும் போதா வளர்ச்சிக்கு காரணங்களாகச் சுட்டிக்காட்டுகின்றன. இவ்விரண்டுமுள்ள பொருளாதாரத்தில் ஏழ்மை தலைவிரித்தாடும் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஏழ்மை நிலையில்கூட எல்லையற்ற வேற்றுமைகளை உணர லாம். பர்மாவில் சராசரி நிகர தலா வருமானம் ஆண்டொன் றிற்குச் சுமார் ரூ. 400 ஆக இருக்கலாம். ஃபிலிப்பைன்சில் ரூ. 1000 முதல் 1200 வரை, கிரீஸில் ரூ. 1500; சிலியில் ரூ. 2400 எனும் நிலைகள் பல இருக்கலாம். இந்நாடுகள் யாவுமே ஏழை நாடுகள்தாம். இங்கெல்லாம் கீழ்த்தளத்தில் ஏழ்மையானது கொடிய நிலையிலும், மேல் மட்டங்களில் ஓரளவு மிதமானதாக

வும் இருக்கும். மேலும் வருமானப் பங்கீடு இந்நாடுகளில் நிறை வுடையதாக இருக்காது. செல்வத்தின் பெரும்பகுதி ஒருசில செல்வந்தர்களிடம் சிக்கிவிடுகின்றது. இதன் விளைவாகப் பெரும் பாலோரிடையே குறைந்த வருமானமே பகிர்ந்தளிக்கப்படுகையில் தலா வருமானம் மிகவும் குறைந்துவிடுகிறது. வாழ்க்கைத்தரமும் வீழ்ச்சியுற்ற நிலையில் மக்கள் மெலிந்த உள்ளத்துடன் நலிந்த வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய கட்டம் உருவாகின்றது. சில பொருளாதார அமைப்புகள் வளர்ச்சியுறலாம். சில தேக்க நிலையிலேயே நிலைபெற்றுவிடலாம். மற்றவை பின்னோக்கிச் செல்லவும் கூடும்.

சிறு தொழில் ஆராய்ச்சி நிபுணர் யூஜின் ஸ்டேலி (Eugene Staly) வழங்கும் இலக்கணம் மற்றோர் அணுகு முறையைக் கொண்டதாக உள்ளது. இயற்கைச் செல்வங்கள் அதிகமிருந்தும் அவற்றைப் பயன்படுத்தவல்ல வழிவகைகள் முன்னேற்றம் அடையாத நிலை இருப்பதனால் ஏழ்மை ஒரு நாட்டைப் பீடித்திருக்கும். இவ்வணுகுமுறையை ஏறத்தாழ அடியொற்றிய முறையில் இந்திய திட்டக் குழு (Indian Planning Commission) தனது இலக் கணத்தை வரையறுத்துள்ளது. திறன் மிகுந்த உழைப்பு (Skilled Labour) மூலதனம் ஆகியவைகளின் பற்றுக்குறையே பொருளா தார வளர்ச்சிக்கு தடைகளாக உள்ளன. ஆனால், ராக்னர் நர்க்ஸ் (Ragnar Nurkse) 'மூலதனமானது வளர்ச்சிக்கு அவசியமேயன்றி, இன்றியமையாத காரணியாகக் கொள்ளுவதற்கில்லை' எனக் கூறு கிறார்.

இவ்வாறு பல்வேறுபட்ட கருத்துகள் நிலவிவந்தபோதிலும் பொருளாதாரத்தின் போதா வளர்ச்சியைப் பிரதிபலிக்கின்ற வகை யில் அதற்கே உரிய சில சிறப்பியல்புகள் உள்ளன. எடுத்துக் காட்டாக, குறைந்த வருமானம், மிகக் குறைந்த சதவீதம் பயன் படுத்தப்பட்ட இயற்கைச் செல்வங்கள், குறைந்த மூலதனத் திரட்சி வீதம், அபிவிருத்தி அடையா நிலையில் உள்ள போக்கு வரத்து மற்றும் தொடர்பு வசதிகள், அளவுக்கு மீறிய மக்கள் தொகை, குறைந்த அளவு கல்வி கற்றோரின் வீதம் முதலியன வாகும்.

பொருளாதார வளர்ச்சியில் நலிவு கண்டுள்ள நாடுகளைப் 'பின்னடைந்த' அல்லது 'வளர்ச்சியுறும்' நாடுகள் என வழங்கிவந்தார்கள். ஆனால், இருபதாம் நூற்றாண்டின் மத்தி யில் 'போதா வளர்ச்சி' எனும் சொற்றொடரைப் பயன்படுத்த

ஆரம்பித்தனர். இதைத் தழுவி சில நிபுணர்கள் 'வளர்ச்சி குன்றிய' (less developed) எனும் சொல்லையும் கையாண்டனர். 'போதா வளர்ச்சி' 'வளர்ச்சி குன்றிய' என்பன போன்ற சொற்கள் சாபக்கேடாக விளங்கியதில் வியப்பேதுமில்லை. ஏனெனில், இத்தகைய நாடுகளுக்கு இனி விமோசனமே இல்லையெனத் தோன்றும் வகையில் அவ் வார்த்தைகள் அமைந்திருந்தன. வளர்ச்சி என்பது தொடர்ச்சியானதோர் இயக்கமாதலால் 'வளர்ச்சியுறுகின்ற பொருளாதாரம்' எனக் குறிப்பிடுவதுதான் பொருத்தம் என இக் காலத்தில் வல்லுநர்கள் கருதுகிறார்கள். இச் சொற்கள் யாவும் இணை பொருளுடையனவாக உள்ள காரணத்தினால் இவற்றைப் பயன்படுத்துகையில் நுட்பப் பாகுபாடு ஏதும் புகுத்த வேண்டுமென்பதில்லை. ஏனெனில், இவை அனைத்தும் உணர்த்துகின்ற கருத்து ஒன்றுதான்.

## போதா வளர்ச்சிப் பொருளாதாரம்—சிறப்பியல்புகள்

பால். ஜி. ஹாஃப்மான் என்பார் மிக அழகாக வளர்ச்சி குன்றிய பொருளாதாரத்தின் இயல்பினைச் சித்திரித்துள்ளார். 'உள்ளங்கை நெல்லிக்கனி' போன்று தெள்ளத் தெளிவாக வளர்ச்சி குன்றிய பொருளாதாரத்திலுள்ள தன்மைகளை அதனைக் கண்ட மாத்திரத்திலேயே தெரிந்துகொள்ளலாம். கிராமப் புறங்களில் மக்கள் பிழைப்பு மட்டத்தை (Subsistence level) அடைய அரும்பாடு படுவார்கள். மாநகரங்களில் இரவலர்கள் மிகுந்து காணப்படுவார்கள். ஆக ஏழ்மையால் நாடே அவதியுறும். சொந்தமென உரிமை கொண்டாடுவதற்குத் தொழிற்சாலைகள் சில மட்டுமே இருக்கும். அவற்றிலும் போதிய அளவு விசையும், வெளிச்சமும் இருக்காது. அது போன்றே அரசின் பொது வசதிப் பணிகளும் (Public utility Services) அமைந்திருக்கும். மருத்துவப் பணிகளும், உயர் கல்வி வசதியும் போதிய அளவிற்கு இரா. பெரும்பாலோர்க்கு எழுத்தறிவு இரா. இவ்வாறு ஏழ்மை பரவலான வகையில் தென்பட்டாலும் மிகச் சிறுபான்மையினரான சிலர் வசம் மிகுதியான செல்வம் குவிந்துள்ள காரணத்தினால் ஆடம்பர வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பர். வங்கி வளர்ச்சியுறாது. இத்தகைய சூழ்நிலையில் சிறு கடனுதவி கொடுப்பதற்கென அரக்க குணம் கொண்ட லேவாதேவிக்காரர்கள் செயல்படுவார்கள். கச்சாப் பொருள்கள், தாதுப் பொருள்கள், பழங்கள் மற்றும் சில குறிப்பிட்ட ஆடம்பரக் கைவினைப் பண்டங்கள் தாம் இத்தகைய நாடுகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும். இப்பொருள்களைப் பெரும்பாலும் அயல் நாட்டு நிறுவனங்கள் தாம் பண்படுத்துகின்றன.

மேற் கூறப்பட்ட இயல்புகள் அனைத்தும் வளர்ச்சி குன்றிய ஒரு நாட்டில் இருக்க வேண்டுமென்பதில்லை. இது மிகைப்படுத்தப்பட்ட ஒரு கூற்றாகக்கூட இருக்கலாம். எனினும், சில உண்மைகளை இக் குறிப்பு புலப்படுத்துகின்றது. அவ்வுண்மைகளைத்தாம் வளர்ச்சி குன்றிய பொருளாதாரத்தின் அடிப்படை சிறப்பியல்புகளெனக் கொண்டு, அவற்றைப் பின்வரும் சில பக்கங்களில் விளக்குவோம்.

**குறைந்த தலா வருமானமும், பரந்து கிடக்கும் வறுமையும் :—(Low per capita income and wide spread poverty)**

'ஒரு நாடு வறுமையில் இருப்பதற்குக் காரணம் அது வறுமையுடன் இருப்பதனால்தான்' (A Country is poor because it is poor) என்ற மகத்தான உண்மையை நர்க்ஸ், நேர்த்தியாக எடுத்துரைக்கின்றார். மிகக் குறைந்த நிலையில் உள்ள தலா வருமானமானது அனைத்து ஏழை நாடுகளுக்கும் உரிய சிறப்பியல்பாகும். அவ்வாறு தலா வருமானம் குறைந்திட்டால் தலா நுகர்வும் குறைந்து விடுகிறது. பண்டங்கள் மற்றும் பணிகளின் துய்ப்பு குறைவாக இருக்கும். இதன் விளைவாக உற்பத்தித் திறன் மந்தமாக்கப்பட்டு சந்தையின் பரப்பு குறுக்கப்படுகின்றது. உற்பத்தி கட்டுப்படுத்தப்பட்ட நிலையில், வேலை வாய்ப்பு, வருமானம், மற்றும் நுகர்வு வெகுவாகப் பாதிக்கப்படுகின்றது. இவ்வாறு 'வறுமையின் நச்சுச் சுழல்'' (Vicious circle of poverty) ஒன்று உருவாகி அதுவே நிரந்தரமாக இடம் பெற்று விட்டாற்போல் அமைந்து விடுகின்றது.

தலா வருவாய் குறைந்த நிலையில், இன்றியமையாத சில அத்தியாவசியப் பண்டங்களைத்தான் மக்கள் அதிகமாக நுகர்வர். இவர்களுக்கு வருமான உயர்வு சற்று ஏற்பட்டால்கூட நுகர்வதற்குரிய நாட்டம் (propensity to consume) தீவிரமாக இருக்கின்ற காரணத்தினால் மேலும் சில ரக அத்தியாவசியப் பண்டங்களையும் சிற்சில வசதிப் பொருள்களையும்தான் நுகர்வர். இதன் விளைவாகச் சேமிப்பு தடைப்படுகின்றது. வளர்ச்சியுற்ற நாடுகளில் வசிக்கும் மக்களுடன் இத்தகைய சூழலை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது நுகர்வின் உச்ச மட்டத்தை அடைந்த நிலையில் அவர்களுக்கு ஊதிய உயர்வு ஏதேனும் கிடைக்கின்ற வேளையில், அவ் வெச்சமானது நுகரப்படாமல் சேமிக்கப்படுகின்றது. சேமிப்பின் வீதம் மற்றும் அளவு குறைவாக உள்ள காரணத்தினால், முதலீட்டுப் பருமமும் (Volume of investment) குறைந்துவிடுகிறது. இதன் விளைவாக உற்பத்தியும் வாட்டமுற்றுப் பொருளாதார நிலையை மேலும் பாதிக்கின்றது.

மூலதனத் திரட்சியெனும் நடவடிக்கையை அரசாங்கமே செயல்படுத்த விரும்பினாலும் மக்களின் வரி கொடுக்கும் சக்தி (Taxable Capacity) நலிவுற்றிருக்கின்ற காரணத்தினால், அதுவும் பயனற்று விடுகின்றது. சான்றாக நேர்முக வரிவிதிப்பு முறையை மேற் கொண்டால், ஏற்கெனவே குறைந்துள்ள நுகர்வு மற்றும் உற்பத்தி மட்டங்களை அது மேலும் பாதிக்கும். மறைமுக வரிகளைச் செலுத்தினாலோ பணவீக்க நிலைக்கு பொருளாதாரத்தை இழுத்துச் செல்லும். எம் முறையைக் கடைப்பிடித்தாலும் மக்களின் வாழ்க் கைத் தரம் உயர்வதற்கு வழி எதுவுமில்லை என்றே கூறவேண்டும். ஆக குறைந்த வருமானம் ஒரு நாட்டில் ஏழ்மை நிலைக்குக் காரண மாகவும் விளைவாகவும் அமையும் பாங்கு பின்தங்கிய பொருளா தாரத்தில்தான் காணக் கிடைக்கின்றது.

ஆனால், இவையெல்லாம் பெரிதல்ல என்னும் வகையில் மற்றொரு வருந்தத் தக்க குறை உள்ளது. அது யாதெனில் பின் தங்கிய நாடுகள் மற்றும் மேம்பாடு கண்டுள்ள நாடுகளின் வளர்ச்சி வீதத்தை ஒப்புமைக்குள்ளாக்க இயலாததுதான். இரு நாடு களுக்கும் வளர்ச்சி வீதம் ஒரே மாதிரியானதாக இருந்தாலும் ஏற்கெனவே அதிக தலா வருமானத்தைக் கொண்டுள்ள வளர்ச்சி யுற்ற நாட்டிற்குரிய நிகர அதிகரிப்பானது (Net addition) வளர்ச்சி குன்றிய நாட்டின் நிகர அதிகரிப்பைக் காட்டிலும், அதிகமாயிருக் கும். உதாரணமாக 'A' எனும் நாடு வளர்ச்சியுள்ளதாகவும், அதன் தலா வருமானம் ஆண்டொன்றிற்கு ரூ. 10,000 ஆகவும், 'B' எனும் மற்றொரு நாடு பின்தங்கிய காரணத்தினால் அதன் தலா வருமானம் அதே ஆண்டிற்கு ரூ.1,000 ஆகவும் இருந்து இரண்டு நாடுகளிலும் ஐந்து சதவீத வளர்ச்சி வீதம் ஏற்படுவதாக இருந் தால் 'A' நாட்டில் தோன்றும் அதிகரிப்பு ரூ. 500 ஆகவும், 'B'–ல் ரூ. 50 ஆகவும் இருப்பதைக் காணலாம். இவ்விரு அதிகரிப்பு களிடையே காணப்படும் கணிசமான வேறுபாட்டினைக் காண்க. இவ்விடைவெளியைக் குறைப்பதற்கான — அகற்றுவதற்கான — பல நடவடிக்கைகளில் முழுமூச்சாக வளர்ச்சியுறும் நாடுகள் செயல்படுவது அவசியமாகிறது.

### பயன்படுத்தப்படாத இயற்கை வளங்கள் (Unexploited Natural Resources)

தலா வருமானக் குறைவுடன், குறைந்த அளவு மூலப் பொருள் கள் பயன்படுத்தப்பட்ட நிலையும் வளர்ச்சி குன்றிய பொருளா தாரத்தின் மற்றொரு காரணமாகும். இவ் வளங்களைச் செம்மை யாகப் பயன்படுத்துவதன் மூலம், ஒரு நாட்டிற்குரிய தொடர்ச்சி யான உற்பத்தி கிடைத்து வருகின்றது. நாடு தன்னிறைவு

பெற்றுப் பொருளாதாரத்தில் பாதுகாவலான ஒரு கட்டத்தை அடைந்து விடுகிறது. பன்னாட்டு மட்டத்திலும் மதிப்பினைப் பெற்று முன்னேறுகிறது. பின்தங்கிய நாடுகளில் உள்ள இயற்கை வளங்கள் பெரும்பாலும் தகு நிலையில்தான் (Potential) இருக்கும். அவற்றை உண்மை (real) வளங்களாக மாற்றி அமைப்பதற்குப் போதிய மூலதனமும், திறன் மிகுந்த உழைப்பு, மற்றும் அமைப்பும் ஒருங்கிணைந்து செயல்பட வேண்டியது அவசியமாகும். அவை செயல்பட்டு ஆக்க வேலைகள் துரிதமாக முன்னேறும் வேளையில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய சந்தையும் அமையவேண்டும்.

தகு நிலையிலுள்ள வளங்களையோ, அவற்றை வெளிக் கொணர வகுக்கப்படவல்ல தொழில்நுட்ப முறைகளையோ தெரிந்து கொள்வதனால் பயன் இல்லை. உண்மை வளங்களாக மாற்றியபின் அவற்றால் மக்கள் யாதொரு பயனும் அடையவில்லை என்றால் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் வியர்த்தமன்றோ! அதாவது நடப்புக் காலத்தில் உள்ள பொருளாதாரப் பண்ட அளிப்பில் அதிருப்தி ஏற்பட்டு, அதன் விளைவாகப் அபிவிருத்தி காண விழை கின்ற நிலையில் இயற்கை வளங்களைப் பயன்படுத்தும் முயற்சியில் ஈடுபட வேண்டும். இத்தகைய அதிருப்தியை அல்லது அபிவிருத்தி நாட்டத்தை சிறு பான்மையோர் எடுத்துச் சொன்னால் போதாது. சமுதாயமே விழிப்புடன் செயலாற்ற வேண்டும். சுருங்கக் கூறின், சமுதாயச் சூழ்நிலை சாதகமாக அடைந்தால்தான் தொழில் நுட்பத் தில் முன்னேற்றங்கள் கண்டு இயற்கை வளங்களைப் பயன்படுத்த இயலும். அணுக்குண்டுகளை உற்பத்தி செய்ய வேண்டுமென்ற ஆவல் எழுந்தமையால்தான் அவற்றைத் தயாரிப்பதற்குரிய தொழில் நுட்பம் உருவாகியது எனக் கூறலாமல்லவா?

இயற்கை வளங்களை ஆளுவதற்கு முன்பாக, அவற்றின் பொரு ளாதார சாத்தியக் கூறுகளை நன்கு ஆராய்ந்து அவைகளுள் மிகச் சிக்கனமானவற்றையே மேற்கொள்ள வேண்டும். இதற்கு விஞ்ஞான, பொறியியல் துறைகளில் பணியாற்றும் நிபுணர்களின் ஆலோசனைகள் இன்றியமையாதவையாகும். விரிவான ஆய்வுகளை நடத்தித் திட்டமான முடிவுகளை எடுக்க வல்லவர்கள் இவர்களே. அபிவிருத்தி செய்யப்பட்ட நிலையில் (இயற்கை வளங்களைப் பயன் படுத்திய நிலையில்) சந்தையை நிர்ணயிப்பதற்குத் தொழில் அதிபர் கள் மற்றும் பொருளாதார நிபுணர்களின் அறிவுரைகளைக் கோரிப் பெறுதல் அவசியமாகும்.

பற்பல தரங்களுடைய உற்பத்திக் கருவிகள் பல நிலைகளில் மிகுந்த எச்சரிக்கையுடன் புகுத்தப்பட வேண்டும். இதற்குத்தான்

மூலதனத் திரட்சி அவசியமாகிறது. இது சூழ்நிலைக்குத் தக்க வாறு மாறுபட வேண்டும். எடுத்துக்காட்டாக நமது நாட்டின் விவசாயத்தை எடுத்துக்கொண்டோமென்றால் சாதாரண கலப் பையிலிருந்து, மின் விசையினை உருவாக்கும் இயந்திரங்கள் வரை மூலதனம் பயன்படுத்தப் படுகின்றது. தீவிர விஞ்ஞான அபிவிருத்தித் திட்டங்கள் புகுத்தப்பட்ட தாமோதர் பள்ளத்தாக்கு போன்ற இடங்களில் இன்னும் சற்று சிக்கலானதும் உயர் மட்ட நுட்பம் கொண்டதுமான கருவிகள் கையாளப்படுகின்றன. மாறாக மலைப் பகுதிகள் மிகுதியாக உள்ள ஈரான், கொலம்பியா போன்ற நாடுகளில் சாலை அமைத்தல், கிணறு தோண்டுதல் சாதாரண உர உப்புகள் விநியோகித்தல் ஆகிய நடவடிக்கைகளில் திரட்டப் பட்ட மூலதனம் ஈடுபடுத்தப்படுகின்றது.

இவ்வாறு அனைத்து சக்திகளும் ஒருங்கே செயல்பட்டால்தான், புவியில் புதைந்து கிடக்கின்ற இயற்கை வளங்களைப் பயனுடை யவைகளாக மாற்ற முடியும். பல கட்டங்களைத் தாண்டிய பிறகே மேம்பாடு காண முடியும். பாயரும் யாமியும் கூறுவது போல 'ஆண்டவன் உலகை வளர்ச்சி கண்ட நாடுகள் என்றும், வளர்ச்சியற்ற நாடுகள் என்றும் இரு கூறுகளாகப் படைக்கவில்லை. வளர்ச்சியுற்றுள்ள நாடுகளாகட்டும், வளர்ச்சியுறுகின்ற நாடுக ளாகட்டும்—எல்லா நாடுகளும் வளர்ச்சியற்ற நிலையிலிருந்துதான் இன்றைய நிலையை எட்டியுள்ளன.'

**வேளாண்மைத்துறையை அதிகமாகச் சார்ந்திருத்தல் (Excessive dependence on agriculture)**

ஒரு நாடு எந்த அளவுக்கு அதன் சக்தி அனைத்தையும் உணவுப் பண்டங்களைத் தயாரிப்பதற்காகச் செலவிடுமோ, அந்த அளவிற்கு அந்நாட்டில் வறுமை விரவியிருப்பதாகக் கொள்ளலாம். இதன் காரணமாகத்தான் வளர்ச்சியுறும் நாடுகளில் உள்ள மிகப் பெரும்பான்மையான மக்கள் வேளாண்மையை அண்டியிருப்பர். மக்கள் தொகையில் 70 சதவீதத்திற்கும் அதிகமாகவே விவசா யத்தை நம்பியிருப்பதுடன் மொத்த நாட்டு உற்பத்தி அளவில் (Gross National Product) ஒரு பாதி அளவானது இத்துறையி லிருந்து தோன்றுகிறது. மேம்பாடு கண்ட நாடுகளில் விவசா யத்தை நம்பியிருக்கும் மக்கள் எண்ணிக்கையைக் காட்டிலும் சில வளர்ச்சியுறும் நாடுகளில் நான்கு மடங்காக விவசாயத்தைச் சார்ந்த மக்கள் தொகை அமைவதுண்டு. இவர்களுடைய முக்கியத் தொழில் நிலத்தைச் சாகுபடி செய்வதாகும். எனினும், இவர்கள் சில கைவினைத் தொழில்களிலும், விவசாயப் பொருள் களைப் பாடப்படுத்தும் சில்லறைத் தொழில்களிலும் ஈடுபடுவ

துண்டு. கூறப்போனால், சுமார் 20 சதவீதம் விவசாயிகளை வேளாண்மைத் தொழிலிலிருந்து அகற்றிவிடுவதாக இருந்தாலும் விளைச்சல் அளவு எந்தவிதத்திலும் பாதிக்கப்படாது. இத்தகைய உபரி உழைப்பைக் (Surplus labour) கொண்டு பொருளாதார வளர்ச்சி குன்றியுள்ளதாகக் கணக்கிடலாம். இவர்களுக்கு உற்பத்தித் திறன் (Productivity) ஏதுமில்லை யென்று கூறினாலும் மிகையாகாது. இந்நிலையைத்தான் மறைமுக வேலையின்மை (Disguised unemployment) எனக் குறிப்பிடுவர்.

மிதமிஞ்சிய அளவில் வேளாண்மை உழைப்பாளிகள் நிலத்தை நம்பியுள்ள காரணத்தினால், ஏக்கர் ஒன்றுக்குத் தலா விளைச்சல் அளவும் குறைந்து காணப்படுகிறது. இன்று நேற்றல்ல, தலைமுறை தலைமுறையாக இக் குறைபாடு இருப்பதை உணர முடிகின்றது. இதன் விளைவாக விவசாயிகளின் தலா உண்மை வருமானமும் குறைந்திருக்கும். தென் ஆசியாவில் உழைப்பாளிகளுள் நான்கில் ஒருவர்தான் வேளாண்மையற்ற பிற தொழில்களில் ஈடுபடுகின்றனர். ஐக்கிய அமெரிக்காவில் இவ் வீதம் பத்திற்கு ஒன்பதாகவும், ஐரோப்பாவில் மூன்றில் இரண்டாகவும் இருக்கின்றன.

விளைச்சல் அளவு பெருமளவில் குறைந்து காணப்படுகின்ற வளர்ச்சியுறும் நாடுகளில், சில விதிவிலக்குகள் இல்லாமல் இல்லை. குறிப்பாக மூன்றினை இக் கட்டத்தில் கூற முடியும். முதலாவதாக இத்தகைய நாடுகளில் தோட்டப் பண்ணைப் பயிர்கள் (plantation crops) முக்கிய பங்கு வகிக்கின்றன. இலத்தீன் அமெரிக்காவில் சில நாடுகள், இலங்கை, மலேசியா போன்ற நாடுகளில் இம்மாதிரியுள்ள பயிர்களைச் சாகுபடி செய்யும் பொருட்டு, மேற்கு ஐரோப்பாவிலிருந்து மக்கள் குடியேறியுள்ளனர். இதிலிருந்து கிடைக்கின்ற விளைபொருள்கள் ஏற்றுமதிக்கென ஒதுக்கப்படுகின்றன.

மிகச் சீரான முறையில் உழைப்பு மற்றும் அமைப்பு புகுத்தப்பட்டுள்ள காரணத்தினாலும், தொழில் நுட்பம் நேர்த்தியானதொன்றாக அமைந்திட்டதாலும், சற்றுக் கணிசமான மூலதனம் இடப்பட்டிருப்பதாலும், இதனை வேளாண்மைத் தொழில் என்று கூறுவதைவிட கட்டமைந்த தொழில் என்று கூறினால் மிகப் பொருத்தமாக இருக்கும். ஆனால், ஆலைத் தொழில் போன்று விரைவில் விரிவடைவதற்குரிய சாத்தியக் கூறுகள் இத் தொழிலில் மிக அருமையாகத்தானிருக்கும்.

இரண்டாவதாக உணவுப் பொருளற்ற வணிகப் பயிர்கள் (Non-food commercial crops) சாகுபடி செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுவதால், உணவுப் பயிர்களைக் காட்டிலும் அதிக இலாபத்தைப் பெறத்தக்க நிலையில் சில விவசாயிகள் உள்ளனர். இவர்களை இத்துறையிலிருந்து பிரித்திட முடியாது. இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் 'அதிக உணவு உற்பத்திப் பெருக்க திட்டங்கள்' (Grow more food compaign) ஊக்கமளிக்கின்ற வகையில் விளைவுகளைத் தரவில்லை என்பதற்கு இதுவுமொரு காரணமாகும்.

இறுதியாக, எகிப்து போன்ற சில நாடுகளில் குறிப்பாக நிரந்தர நீர்ப்பாசன வசதிகள் அமைந்து மக்கள்–நில விகிதம்(Man–land Ratio) மிகுதியாக இருக்கும் வட்டாரங்களில், விளைச்சல் அபரிமிதமான அளவிற்கு உயர்ந்திருப்பதைப்பார்க்கலாம். ஆனால், இம்மாதிரியான சாதகச் சூழ்நிலைகள் பெரும்பாலான பின்தங்கிய நாடுகளில் அமையப்பெறுவதில்லை.

வேளாண்மை உற்பத்தி வளர்ச்சியுறும் நாடுகளில் 'பரப்பு விரிவுபடுத்தும் முறை'யிலிருந்து மீண்டும் 'விளைச்சல் விரிவு படுத்தும் முறை'யை மேற்கொள்ளுவதில் அதிதீவிர நாட்டம் செலுத்தினால்தான் உணவு உற்பத்தியானது பெருகும். இம் மாற்றத்தை ஏற்படுத்துவதில் ஒரு நாட்டின் வேளாண்மைக் கொள்கை தான் தலைமையாய் விளங்குகின்றது.

**மக்கள்தொகை (Population)**

(1) அளவு (Size): உலக மக்கள்தொகைப் பிரச்சினை புதிதாக உருப்பெற்றதன்று. 'மக்கள்தொகை வெடிப்பு' (Population Explosion) ஓர் எழுச்சி–பல வளர்ச்சியுறும் நாடுகளில் அண்மையில் ஏற்பட்டுள்ள காரணத்தினால் அதனை ஆராய்ந்து விஞ்ஞானபூர்வமான சில திட்டவட்டமான கொள்கைகளை வகுப்பதற்கு ஐக்கிய நாட்டு புள்ளி விவரப் பிரிவினர் இந் நூற்றாண்டில் முன் வந்துள்ளதை அனைவரும் போற்றத்தான் வேண்டும். இயற்கைச் செல்வங்களின் வளர்ச்சியைக் காட்டிலும், மக்கள் தொகை வளர்ச்சி அதிகமாக இருந்தால், பொருளாதார வளர்ச்சி தடைப்படும். தலா வருமானத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் பெருக்கும் பொருட்டு அரசு எடுத்துக்கொள்ளும் அனைத்து நடவடிக்கைகளும் மக்கள் தொகைப் பெருக்கத்தால் வீணாகிவிடுகின்றன. ஏற்கெனவே செறிந்து அமித மக்களுடைய நிலத்தில், பெருகி வரும் மக்கள் தொகையானது உற்பத்தித் திறனை மேலும் வெகுவாகக் குறைத்து விடுகின்றது. வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் பெரிய

அளவில் தோன்றுகின்றது. நகர்ப்புறங்களில் வீட்டு வசதியின்மை, சுகாதாரமின்மை, மிதமிஞ்சிய மக்கள் அடர்த்தி சார்ந்த பிரச்சினைகள் தலைதூக்குகின்றன. எண் பெருக்கப்படுவதால் சமுதாயக் கட்டுமானமே உருக்குலைந்து போகலாம். ஆக மக்கள் தொகைப் பிரச்சினை என்பது தனிப்பட்ட ஒரு சிக்கலாக அல்லாமல், பல பின்னப்பட்ட பிரச்சினைகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட நிலையில் வளர்ச்சி குன்றிய நாடுகளைப் பாதிக்கின்றன.

வளர்ச்சியுறுகின்ற பொருளாதாரங்களில் விஞ்ஞான கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்தி மக்களின் இறப்பு வீதத்தைப் பேரளவில் கட்டுப்படுத்தி விடுவார்கள் மருத்துவ வசதிகள் பெருக்கப்பட்ட காரணத்தினால் தொற்று நோய்கள் வரவொட்டாமல் தடுத்து விடலாம். ஆனால், இறப்பு வீதத்தைக் குறைத்த அளவிற்குப் பிறப்பு வீதத்தைக் கட்டுப்படுத்த இயலாமல் போய்விடுகின்றது. ஏற்கெனவே மக்கள் தொகை அதிகமாக உள்ள நாடுகளில் மிகச் சிறிய அளவிற்கு 2 அல்லது 3 சதவீதப் பெருக்கமிருந்தால்கூட நிகர அதிகரிப்பு பூதாகரமாகக் காணப்படுவது இயல்பு.

பல வழிவகைகள் கடைப்பிடிக்கப்பட்ட நிலையில் பின்தங்கிய நாடுகளில் பிறப்பு வீதம் குறைவாகிவிடினும், ஒரு தலைமுறைக்கும் அதிக காலத்திற்குப் பின்தான் உழைப்பின் அளிப்பானது பிறப்பு வீதக் குறைவின் விளை பயனை அனுபவிக்கின்றது. உடனடி விளைவாகக் குடும்பத்தின் சார்புப் பளு (dependency burden) குறைக்கப்படுகின்றது. குழந்தைகள் வளர்ந்து உழைக்கும் பருவத்தை எட்டுகின்ற வரையில் இப் பளு படிப்படியாகக் குறையலாம். இப் பருவத்தை எட்டுகின்ற வரையில், குழந்தைப் பேற்றைக்கொண்ட மக்கள் தொகைப் பிரிவினரின் எண்ணிக்கையும் குறைந்தே இருக்கும். காலப் போக்கில், மக்கள் தொகையின், வயது வாரியான 'அடித்தளம் பளு கொண்ட (bottom heavy) நிலைமாறி சீரான வயதுத் தொகுப் பொன்றினை அடைந்து சமன்பாட்டினைத் தழுவிவிடும், இத்தகைய சூழ்நிலையில் சார்புப் பளுவானது மிகக் குறைவாகவே இருக்கும். மக்கள் தொகையின் வயதுக் கட்டுமானத்தை (age structure) இவ்வாறு பிறப்பு வீதத்தைக் குறைப்பதன் மூலம் மாற்றி அமைத்திடலாம்; அதன் விளைவாக ஏழ்மை நிலை ஓரளவு அகற்றப்படலாம். இதன் பலன் தலா வருமானப் பெருக்கம் ஆகும்.

தலா வருமானப் பெருக்கத்தால் நுகர்வு மட்டங்களும் உயருகின்றன. உழைப்பின் திறன் உயர்த்தப்படுவதற்கு இது ஒரு சவாலாகவே அமைந்துவிடுகின்றது. சத்துடைய உணவினை உட்

கொண்டு, கல்வி வசதிகள் பல கிடைக்கப்பெற்ற நிலையில் உற்பத்தித் திறனும் உயர்கின்றது.

மேலும் தலா வருமானம் உயர்ந்துள்ள நிலையில் மக்கள் நுகர்வின் மேலுள்ள நாட்டத்தைக் குறைத்து, சேமிப்பதில் விருப்பம் தெரிவிக்கலாம். அவ்வாறு சேமிக்கத் தன்னிச்சையாக முன் வரவில்லையென்றால், அரசாங்கம் தனது வரிவிதிப்பு முறையின் வாயிலாக "கட்டாயச் சேமிப்பைத்" (Forced savings) தோற்றுவிக்கலாம்.

(2) தரம் (Quality)

அளவைச் சார்ந்த நிலையில் ஒரு புறத்தில் மக்கள் தொகை வெடிப்பை வெளிப்படுத்துகையில், மறு புறத்தில் அதன் தரமானது குறைந்துகொண்டே செல்வதை வளர்ச்சியுறும் நாடுகளில் கண்ணுற முடிகின்றது. அளவுக்கு மீறின எண்ணிக்கை இருந்த போதிலும், அதற்குத் தகுந்த முறையில் தரம் அமையாதது வருந்தத் தக்கதாகும். இதன் விளைவாக உழைப்பானது மற்ற உற்பத்திக் காரணிகளுடன் இணைந்து செயல்பட இயலாமல் போய்விடுகின்றது.

சற்று ஊன்றி நோக்கினால் திறன் குறைந்த உழைப்பிற்குப் பல காரணங்கள் புலனாகின்றன. முதலாவதாக ஊட்டச் சத்து குறைவாக உள்ள உணவு உண்ணப்படுகின்ற காரணத்தினால், உடல்-வாட்டமுற்று திறன் மிக்க உழைப்பைத் தரவல்லவன் கூட அடிக்கடி நோயினால் பீடிக்கப்படுகின்றான். அவ்வாறெனில் திறன் குறைந்த சராசரி மக்கள் உழைப்பை இது எவ்வாறு பாதிக்குமென ஊகித்து உணர்ந்துகொள்ளலாம். உணவில், புரதம், வைட்டமின், தாது உப்புக்கள் முதலியன போதிய அளவு இல்லாமையால், துய்க்க வேண்டிய சராசரி கலோரி (Clory)யைக் காட்டிலும் மிகக் குறைந்த அளவே நுகரப்படுகின்றது. மிகக் குறைந்த வருமானத்தைக் கொண்ட மக்கள் இத்தகைய உணவினைத்தான் உண்டு நிறைவு காண வேண்டிய சூழ்நிலை உருவாகின்றது.

இரண்டாவதாக, போதிய மருத்துவ வசதிகள் இல்லாத காரணத்தினால் ஏற்கெனவே ஊட்டச் சத்துப் பற்றாக் குறை நிமித்தம் நலிந்துள்ள மக்கள் பல நோய்களால் அவதியுறுகின்றனர். விஞ்ஞானத் துறையில் முன்னேற்றங்கள் பல ஏற்பட்டதின் விளைவாக நவீன மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால் அவற்றைப் புகட்டத்தான் போதிய அளவு மருத்துவர்கள் இல்லை. கொள்ளை நோய் அடிக்கடி உயிர்களைக் கொள்ளை கொண்டு

போவதிலோ அல்லது நோயாளிகளைப் பலவீனமாக்குவதிலோ வியப்பேதுமில்லை. தலா உற்பத்தித் திறன் குறைந்துள்ள உழைப்பாளர்களின் உடல்நலம் நன்கு பராமரிக்கப்பட்டால், அவர்களுடைய திறமை சிறப்புற்று விளங்கும் என்பதில் ஐயமேதுமிருக்காது.

மக்கள் தொகையின் தரமானது, குறைந்த கல்வி வசதிகளாலும் பாதிக்கப்படுகின்றது. முதியோர், கல்விபெரு நிலையில் தங்களது சந்ததியினரைப் பள்ளிக்கு அனுப்புவது கிடையாது. பல தலைமுறைகள் இவ்வாறுள்ள மனப்பான்மை காரணமாக கல்வி அறிவு ஏதும் பெருமலேயே போய்விடுகின்றன. கல்விக்குண்டான உண்மைத் தேவை (Effective demand for education) கல்வி கற்ருேரிட மிருந்துதான் தோன்றுமென்ற உண்மையை நாம் இங்கு ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

உலகமே நிலத் துண்டங்களில்தாம் உள்ளது என்ற எண்ணம் கொண்ட இலட்சக்கணக்கான குடியானவர்களை அறியாமை ஆட்கொள்ளுகின்றது. தேவைக்கு மிஞ்சிய அளவில் பாரம்பர்யம், பழக்கவழக்க நியதிகள், சமூகக் கட்டுப்பாடுகள், சமய நெறிகள், மூட நம்பிக்கை முதலியவை இவ்வறியாமைக்கு மேலும் உரமூட்டுவதாக அமைகின்றன.

பேரரசு ஆட்சி முறை (Imperialism) எவ்வாறு உள்நாட்டு வேளாண்மை, தொழில், வணிகம் முதலியவற்றைப் புறக்கணித்ததோ அதே கொள்கையைத்தான் கல்வியிலும் கடைப்பிடித்திருந்தது. குடியேற்ற நாட்டுக் கொள்கையால் கல்வி வசதி சிறுபான்மையினருக்குத்தான் நன்மை அளித்தது. இந்தியா, பாகிஸ்தான் மற்றும் இந்தோனிஷியாவில் ‘பேரரசினர்’ கல்வித் துறையில் விட்டுச் சென்ற சுவடுகள் இன்றளவிலும் வியத்தகு மாறுதலுக் குட்படாமல் போய்விட்டதைப் பார்க்கலாம். வறுமையுடைய குடும்பங்களில் தம் வருமானக் குறைவைச் சரிக்கட்டுவதற்காகவே தம் சிருர்களைப் பள்ளிக்கு அனுப்பாமல் வேலைகளில் ஈடுபடுத்தினர். கல்விக்குப் பணம் செலவிட வேண்டிய நிலை ஏற்பட்டதால் குழந்தைகளை அக்காலத்தில் பள்ளிகளுக்கு அனுப்பாமல் விட்டுவிட்டது மற்றொரு காரணமாகும். வளர்ச்சியுறும் நாடுகளில் பொதுக் கல்வியின் நிலை இத்தகையதாக இருக்கையில், தொழில் நுட்பக் கல்வியின் தரத்தைக் கற்பனைசெய்து கண்டு கொள்ளலாம்.

நான்காவதாக, வளர்ச்சி குன்றிய நாடுகளில் உழைப்பானது குறிப்பிட்ட ஓரிடத்தில் செறிந்துவிடுமானுல் அதனைப் இடப்

பெயர்ச்சி செய்வதென்பது கடினமாகிவிடுகின்றது. பெரும்பாலும் சமூக, பொருளாதார, கலாச்சார, சமய சக்திகள்தாம் இதற்குக் காரணங்களாக உள்ளன. குடும்பத்தினருடன் ஏற்பட்டுள்ள பற்றுதல், பிறந்த மண்ணை விட்டுவிட்டு வேறிடங்களைப் பற்ற விடுவதில்லை. அதுபோன்றுதான், மொழி, பழக்கவழக்க நியதிகள் முதலியனவும் உழைப்போனைத் தனது பிறந்த ஊரிலிருந்து விலகி விடாமல் தடுத்துவிடுகின்றன. இவற்றை உதறித் தள்ளி இடப் பெயர்ச்சியில் ஈடுபட வேண்டுமெனில் கவர்ச்சிகரமான ஊதியங் கள் மாற்றிடங்களில் வழங்கப்பட வேண்டும். ஆனால் இவ்வீர்ப்புச் சக்தியைத் தரவல்ல தொழில்கள் ஏழை நாடுகளில் இல்லாத காரணத்தினால் உழைப்பு இடம் விட்டு இடம் செல்வதில்லை.

**வேலையின்மையும், வேலைக் குறைவும் (Prevalence of unemployment and under employment)**

வளர்ச்சி குன்றிய பொருளாதாரங்களில் வேலை வாய்ப்பின்மை (unemployment) மற்றும் வேலைக்குறைவும் (under employment) பரவலாக இருப்பதை உணரலாம். வேலை வாய்ப்பின்மை என்பது வளர்ச்சியுறும் நாடுகளில் மட்டுமின்றி மேம்பாடு கொண்ட வளர்ச்சியுற்ற நாடுகளில் கூட இருக்கக் காணலாம். ஆனால் ஒரு வேறுபாடு; மேலை நாடுகளில் வணிகச் சகடத்தில் ஏற்படும் அலைவுகளால் இது தோன்றும். சில காலத்திற்குப் பின் சரியான தீர்வு முறைகள் கடைப்பிடிக்கப்பட்டதன் விளைவாக இந் நிலை தேய்ந்து, மறைந்துவிடும். வளர்ச்சியுறும் நாடுகளில் வேலை யின்மை நிலையை எளிதில் மாற்றி அமைக்க முடியாமல் போய்விடு கிறது. மேலும் இது நிரந்தரமான ஓரிடத்தைப் பொருளாதாரத்தில் பிடித்துக் கொள்ளும்.

இதற்கு முக்கிய காரணம், போதிய அளவு மூலதனம் போன்ற நிரப்புத் தன்மையுடைய (Complementarily) வளங்கள் இத்தகைய நாடுகளில் மிக அரிதாகத்தான் அமைகின்றன. இதனால் உழைப்பை முற்றிலும் பயன்படுத்த இயலாமல் போய்விடு கின்றது. இவ்வாறாக வளங்களை விரைவில் தோற்றுவிக்க முடியாத காரணத்தினால் பிரச்சினையை வளர்ச்சியுற்ற நாடுகளில் போன்று சுலபமாகச் சமாளிக்க முடியாது.

ஏழை நாடுகள் விவசாயத்தை ஆதாரமாகக் கொண்டு தங்களது பொருளாதாரச் செயல்களை நடத்திச் செல்வதினால் நிலத் தின் மீது தாங்கொணு பளு சுமத்தப்பட்டு தேவைக்கு அதிகமான உழைப்பு நிலவுவதைப் பார்க்கலாம். வெளியே புலனாகாமல் மறைந்து கிடக்கும் இத்தகைய சூழ்நிலையை மறைமுக வேலை

யின்மை (disguised unemployment) என அழைப்பர். தொழில் வேலையின்மை போன்று இது புறத்தே புலனாவதில்லை. இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளில் தொன்று தொட்டு கிராமப் புறங்களில் கடைப்பிடிக்கப்பட்டு வரும் கூட்டுக் குடும்ப முறை (Joint family system) போன்ற சமுதாய மரபுகள் மறைமுக வேலை யின்மையை பெரிதும் ஊக்குவிக்கின்றன. இவ் வியல்பானது பின் தங்கிய எல்லாப் பொருளாதாரங்களிலும் இருக்க வேண்டுமெனக் கட்டாயமில்லை. ஆனால் மக்கள் தொகை அடர்த்தியாக உள்ள வேளாண்மைப் பகுதிகளான தென் கிழக்கு ஐரோப்பா மற்றும் தென்கிழக்கு ஆசியாவில் இது வெகு தீவிரமான பிரச்சினையாகவே உள்ளது.

**குறைந்த முதல் திரட்சி வீதம் (Slow rate of capital formation)**

இது போதிய மூலதனமில்லாது வளர்ச்சியுறுகின்ற பொருளா தாரத்தின் சிறப்பியல்பாகும். இந் நிலையில் மூலதனத் திரட்சியும் குறைந்தே காணப்படும். இவற்றின் விளைவாக தலா வருமானமும் குறைந்திருக்கும். இயற்கை வளத்தைப் பயன்படுத்துவதற்கு மூலதனம் பெருமளவில் தேவைப்படுகின்றது.

மூலதனத் திரட்சி வீதம் குறைவாக இருப்பதற்கு மிகக் குறைந்த வருமானமும் அதிலிருந்து சேமிப்பைத் தோற்றுவிக்க முடியாத நிலையுமாகும். பிழைப்பு மட்டத்தை அடைய அரும்பாடு பட்டுக் கொண்டிருக்கும் ஏழைக் குடியானவனிடமிருந்து சேமிப்பை எதிர்பார்க்க முடியாது. ஒரு சிறிதளவு சேமித்து விட்டால்கூட முதலீடு செய்யத்தக்க வகையில் அவர்களுடைய பழக்கமோ அல்லது வங்கிகளின் செயல்களோ உற்ற வகையில் அமையாத காரணத்தினால் அப் பணமானது பதுக்கப்பட்டு பொரு ளாதாரத்தில் சீர்கேடுகள் தலைதூக்குவதற்கு அடிகோலுகின்றன. வங்கிகள் வளர்ச்சி பெற்று, மக்களிடையே சேமிக்கும் பழக்கமும் ஏற்படுவதாக எண்ணி வைப்புத் தொகைகள் (Deposits) சற்றே பெருகுவதாகக் கொள்வோம். அடுத்த கட்டத்தில் இவற்றைச் சரிவரப் பயன்படுத்தும் பொருட்டு தொழில் அதிபர்கள் முன்வர வேண்டும். தொழில் துவங்குவதற்குப் பல சலுகைகள் வழங்கப் பட்ட நிலையில்தான் இவர்கள் உற்சாகமாகச் செயல் புரிவார்கள். ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் மூலதனத் திரட்சியே தனியார் துறையில் குறைந்து காணப்படுமாதலால் அரசாங்க மானது வரிவிதிப்பு முறையைக் கடைப்பிடித்து வேறு வழி யில்லாமல் வரிப்பளுவை அதிகரிக்கும். இதனை அனுபவிக்க அச்ச முற்று தொழில் அதிபர்கள் தங்களது நடவடிக்கைகளைச் சுருக்கிக்

கொள்வார்கள். மீண்டும் மூலதனத் திரட்சியில் தேக்க நிலை ஏற்பட்டுவிடும். பெருமளவில் சேமிப்பு மற்றும் முதலீடு இல்லாத காரணத்தினுல் தொழில் அதிபர்கள் கொடுக்க வேண்டிய வட்டி வீதம் உயர்ந்தே இருக்கும். இதனுல் அவர்களுக்கு உரிய ஊக்கம் பெரிதும் குன்றிவிடும்.

"முதலீட்டு வாய்ப்புகள்" (Investment opportunities) பலவற்றை உருவாக்கினுல்தான் தொழில் முயல்வோர்கள் ஆக்கமுடனும், ஊக்கமுடனும் செயல் புரிவார்கள். இருப்பிலுள்ள வளங்களுக்கும் தொழில் வாய்ப்புகளுக்கும் இடையே உள்ளதொரு பாலம் போன்று அமைந்து இவர்கள் செயல்பட வேண்டும். இவர்கள் தோன்ருவிடில் எத்துணை தான் மூலதனத்திரட்சி வீதம் உயர்ந்திருந்தாலும் அங்கு தொழில் வளர்ச்சி தடைபடும். தொழில் நிறுவனங்களை எல்லாம் அரசு ஏற்று நடத்த முடியாது. ஏனென்ருல் வளர்ச்சியுறும் நாடுகளில் கோலோச்சுகின்ற அரசாங்கமும், 'பின் தங்கிய' அரசாங்கமாகத்தான் இருக்குமேயன்றி அதற்கு இலாபத்தைத் தரவல்லத் தொழில்களை தெரிந்து இயக்குவதற் குரிய முதிர்ச்சி போதிய அளவில் அதனிட மிருக்காது.

இவ்வாறு பல கட்டடங்க ளூடே மூலத்திரட்சி உருப் பெறுவதற்குப் பற்பல சக்திகளின் ஒத்துழைப்பு இன்றியமையாத தாகும். அதுவும் ஆரம்ப நிலையி லிருக்கும் பின் தங்கிய பொருளாதாரங்களில் ஒவ்வொரு மட்டமும் சிறப்பு வாய்ந்ததாகும். சங்கிலித் தொடர் போன்று அமைந்துள்ள மூலதனத் திரட்சி நடவடிக்கையில் ஏதேனும் ஒரு கண்ணி அற்று விடுமேயானுல் அனைத்து முயற்சிகளும் பயனற்றுப் போகும்.

## ஏற்றுமதியைச் சார்ந்திருத்தல் (Dependence on Exports)

ஏற்றுமதியை நம்பிப் பல வளர்ச்சியுறும் நாடுகள் செயல்படுவதை இன்று பார்க்கலாம். பல ஏழை நாடுகள் இயற்கைச் செல்வங்களை அபரிமிதமான அளவிற்கு உடைமையாக கொண்டிருந்தன. அதே வேளையில் பேரரசு ஆட்சி செலுத்திக் கொண்டிருந்த மேலை நாடுகளிடம் இவை பற்ருக்குறை நிலையி லிருந்தன. வல்லரசுகள் இவ் வாய்ப்பினை நழுவ விடாமல் குடியேற்ற நாடுகளைச் சில குறிப்பிட்ட கச்சாப் பொருள்கள் மற்றும் தாதுப்பொருள்களை ஏற்றுமதி செய்யத் தூண்டின. இதன் விளைவாக எகிப்திலிருந்து பருத்தி, மலேசியா இந்தோனேஷியாவிலிருந்து இரப்பர், க்யூபாவிலிருந்து சர்க்கரை, பிரேசிலிருந்து காப்பிக்கொட்டை, இலங்கையிலிருந்து தேயிலை, கானுவிலிருந்து கோகோ, குவெய்த்திலிருந்து எண்ணெய் என்ற முறையில் ஏற்றுமதிப் பட்டியல் அமைந்தது.

ஏற்றுமதியைச் சார்ந்த பொருளாதாரமாக இருந்ததினால் அதில் குறை ஏதும் கூறுவதற்கில்லை. ஆனால் அவ்வாறுள்ள ஏற்றுமதியில் கச்சாப் பொருள்கள் மட்டுமே இடம் வகிப்பதாக வந்தால் அந் நிலையைச் சற்று கூர்ந்து கவனிக்க வேண்டும். இதில் சில தீமைகள் இல்லாமல் இல்லை. உதாரணமாக, மிக்க தொலைவில் அமைந்துள்ள அயல்நாட்டுச் சந்தைகளுக்கு ஏற்றுமதி செய்கின்ற நாட்டிற்கு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் போய்விடுகின்றது. எதிர்பாரா நிலையில் ஏற்றுமதிப் பொருளின் விலை வீழ்ச்சி பெறுவதாக இருந்தால், உள் நாட்டில் தீவிரமான மந்த நிலை ஏற்பட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக விளங்குகின்றது. தவிர அயல் நாட்டில் வாட்ட நிலை தோன்றுமாயின் அதன் தீய விளைவுகள் ஏழை நாடுகளையும் தாக்குகின்றன.

மேலும் மேலை நாடுகளில் விஞ்ஞான வளர்ச்சி தோன்றியுள்ள காரணத்தினால் பதிலீட்டுப் பண்டங்கள் அல்லது செயற்கை தாதுப் பொருள்கள் கண்டுபிடிப்பதில் வெற்றி கிட்டினால், இயற்கை மூலப் பொருள்களை (Primary products) ஏற்றுமதி செய்கின்ற நாடுகளை அவை வெகுவாகப் பாதிக்கின்றன. நம்பத் தகுந்ததாகவும் உறுதியுடையதாகவும் உள்ள வருவாய் கிடைக்காத வேளையில் வளர்ச்சியுறும் நாடுகள் தங்களது பொருளாதாரத் திட்டங்களைச் சரிவர செயல் படுத்த முடியாமல் அவதியுற வேண்டியிருக்கும்.

ஏற்றுமதித் துறைக் கேற்பத்தான் பொருளாதாரச் செயல்பாடுகளும் ஒரு நாட்டில் நடந்தேறும். உற்பத்தி இயக்கமே இத் துறையை அனுசரித்துத்தான் அமைந்திருக்கும். ஏற்றுமதியைக் கட்டுப்படுத்தும் சக்தி அந்நிய நாட்டினர் வசம் சிக்கி விட்டாலோ இன்னும் அதிக அளவில் அல்லல் படவேண்டி யிருக்கும். சாம்பியாவில் மேலைநாட்டுத் தொழிலதிபர் ஆதிக்கத்தில் உள்ள செம்புக் கனிகள், அந்நாட்டின் வருமானத்தில் சுமார் 95 சதவீதத்தினை வழங்குகின்றது. இத்தொழிலைச் சிறப்புறச் செய்து இலாபத்தின் கணிசமான அளவினைத் தாங்களே எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணம் கொண்ட இத் தொழிலதிபர்கள், சாலைப் போக்குவரத்து மற்றும் தொடர்பு வசதிகளை அதற்குத் தகுந்த வகையில் அமைத்து விடுகின்றனர். பிற துறைகளில் இதனால் விளையப் போகின்ற தீய விளைவுகளை இவர்கள் நோக்குவதில்லை. காலப் போக்கில் மிகச் சிறுபான்மையோராக விளங்கிய முதலாளிகள் கொழுத்த இலாபத்தை அடைந்து செல்வச் சீமான்களாகி விடுகின்றனர். இத்தொகையை வேறு தொழில்களில் முதலீடு செய்வதில்லை. மாறாக அயல் நாட்டு நிறுவனங்களின் கணக்கில் வரவாகக் கொண்ட நிலையில் வெளிநாட்டிற்குப் பணமும் அனுப்பி விடப்படுகின்றது.

ஊறு விளைவிக்கும் சமுதாய அமைப்புகள் (Existence of Inhibitory social institutions :)

இந்தியா போன்ற நாடுகளில் சமுதாய சமய மரபுகள் மலிந்திருப்பதைப் பார்க்கலாம். இதன் காரணமாக அறிவியலும், தொழில் நுட்பமும் விரும்பப்படுவதில்லை. எனவே பொருளாதார முன்னேற்றமும் அதற்கேற்பத் தடைபடுகின்றது. இந்து சமயத்தின் முக்கிய நெறியான 'விதிக் கோட்பாட்டை' (Doctrine of Fate) கடைப்பிடிக்கும் பொருட்டு ஆற்றவேண்டிய செயல்கள் புறக்கணிக்கப்படுகின்றன. 'எல்லாம் விதிப்படி நடப்பது தானே' என்ற எண்ணப் போக்கு மக்களிடம் வேரூன்றி இருக்கின்ற காரணத்தினால் செல்வந்தர்கள் ஏழைகளையும், எழுத்தறிவற்றவர்களையும் சுரண்டுகிறார்கள். பொருளாதாரப் பிரச்சினைகளுக்கு முதன்மை அளிக்காமல் சமய நெறிகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பர். இதில் வியப்புக்குரியது என்னவென்றால் சமயக் கோட்பாடுகள் இயற்றிய காலத்தில் அவற்றுக்குக் கொடுக்கப்பட்ட பொருள் விளக்கங்கள் யாவும் திரிக்கப்பட்டு தற்காலத்தில் மாறுபட்ட நிலையில் அவை அமைந்துள்ளன என்பதாகும் இது போன்றுதான் சமுதாய கட்டுக் கோப்புகள் பல பகுத்தறிவுக்குப் பொருந்தாத நிலையில் கண்மூடித் தனமாக பின்பற்றப் படுகின்றன.

ஆன்மீக நோக்கமுடைய மக்களிடம் செல்வம் திரட்ட வேண்டுமென்ற வேட்கை இல்லா திருப்பதில் வியப்பே இல்லை. இவற்றின் விளைவாக, சீர்திருத்தங்கள் புகுத்தப்படுகையில் எதிர்ப்புகள் தோன்றுகின்றன. பின்தங்கிய நாடுகளில் செயல்படுகின்ற அரசாங்கமும் இம்மாதிரி தொன்று தொட்டுப் பாராட்டப்படுகின்ற சமூக, சமய மரபுகளை எதிர்த்து நடவடிக்கைகள் ஏதும் எடுக்க முடிவதில்லை. மக்கள் பகுத்தறிவு பெற்று அதன் விளைவாக எழுச்சி கொண்டால்தான் இச் சிக்கலிலிருந்து விடுபட முடியும்.

மேற்கண்ட சிறப்பியல்புகளை ஹார்வி லெபன்ஸ்டைன் (Harvey Leibenstein) மூன்று தொகுதிகளுள் அடக்கி வெளியிட்டுள்ளார். முதல் தொகுப்பை 'புள்ளி விவரங்கள் சார்ந்த உண்மைகள்', என அழைக்கிறார். அதில் வேலை வாய்ப்பு, வருமானம், உற்பத்தி மற்றும் நுகர்வின் கட்டுமானங்கள், தலா மூலதனம், தலா வருமானம், பிறப்பு, இறப்பு வீதங்கள், கல்வியறிவு, விளைச்சல் போன்றவற்றைப் பற்றி குறிப்பிடுகின்றார். இரண்டாவது பிரிவை 'பொது நுண்காட்சிகளாகக்' கொண்டு, அதனில் 'குறைந்த கடன்வசதி, குறைந்த விற்பனை வசதிகள்' 'தொன்மை தொழில் நுட்பங்கள்' குறைந்த போக்குவரத்து வசதிகள் போன்றவற்றை உட்படுத்தியுள்ளார். இறுதியாக 'ஆய்வுகள் சார்ந்த முடிவுகள்'

எனும் தலைப்பில் வேளாண்மையில் மறைமுக வேலையின்மை, சத்துணவு ஊட்டக் குறைவு, மூலதனத்தைச் சிக்கனமற்ற நிலையில் வீணாக்குவது போன்ற சில குறிப்புகளை அடக்கியிருக்கிறார். பிறர் வெளியிட்டுள்ள ஆய்வுகளின் அடிப்படையில் தோன்றியவை தாம் இம் முடிவுகள். இவ்வாறு, வளர்ச்சி குன்றிய பொருளாதாரத் திற்கு அடிப்படையாக விளங்குகின்ற சில முக்கியமான சிறப்பி யல்புகள் விளக்கப்பட்டுள்ளன. எல்லா வளர்ச்சியுறும் நாடுகளி லும் அனைத்துச் சிறப்பியல்புகளும் இருக்க வேண்டுமென்பதில்லை. ஆனாலும் சில காரணிகள் இத்தகைய நாடுகளில் இருந்தே தீர வேண்டும். அவற்றில் குறிப்பாக வேளாண்மை சார்ந்த பொருளா தாரம், வேலையில்லாத் திண்டாட்டம், அதிக மக்கள்தொகை, பரவ லான வறுமை, மிகக் குறைந்த கல்வி யறிவு போன்றவற்றைச் சுட்டிக் காட்டலாம்.

## போதா வளர்ச்சிக்கு காரணங்கள் (Causes of under dovelopment)

வளர்ச்சியுறும் நாடுகளுக்குரிய சிறப்பியல்புகள் அனைத்துமே வளர்ச்சி குன்றிய பொருளாதாரங்களில் காணப்பட வேண்டு மென்ப தில்லை. எல்லா நாடுகளிலும் இத்தன்மைகள் அமையப் பெற்றிருந்தாலும் அவை சம அளவில் பரவலாக இருக்க வேண்டு மென்ப தில்லை. ஏனெனில் ஒவ்வொரு நாடும் ஒரு குறிப்பிட்ட வளர்ாசிக் கட்டத்தினூடே நடை போட்டுச் செல்லும். மேலும் இக்காரணிகளில் ஏதேனும் ஒன்றினைச் சுட்டிக் காட்டி வளர்ச்சி குன்றிய நிலைக்கு அதனையே காரணமாகக் கொள்ள முடியாது. பல சக்திகள் பின்னப்பட்ட நிலையில்தான் அவற்றைப் பார்க்க வேண்டி யுள்ளது என்பதுதான் இதற்குக் காரணம்.

சிலர் 'பின்தங்கிய பொருளாதாரத்திற்குரிய சிறப்பியல்புகளை யும்' 'வளர்ச்சி குன்றிய பொருளாதார'த்திற்திற்குரிய காரணங்களை யும் ஒரு பொருள் பன் மொழியாகக் கருதுகின்றனர். இத்தகைய பொருள் விளக்கம் தவறே. அனைத்துப் பின் தங்கிய நாடுகளுக்கும் அடிப்படைத் தன்மைகள் பொதுப்படையான நிலையில் தோன்று கின்றன. குறிப்பிட்ட ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக விளங்கும் வகையில் சில குறுக்கீடுகள் தோன்றுகின்றன. இவற்றைத்தான் 'பின்தங்கிய பொருளாதாரத் திற்குரிய காரணங்கள்' எனக் கொள்ள வேண்டும்.

மேலும் வேளாண்மை சார்ந்த பொருளாதாரம் அல்லது மக்கள் தொகைப் பெருக்கம் போன்றவை வளர்ச்சி குன்றிய பொருளா தாரங்களுக்குக் காரணமாக இருக்க வேண்டுமென்பதில்லை. அவை அத்தகைய பொருளாதாரங்களுக்கு இலக்கணம் என்ற முறையில்

மிர்தால் (Mirdal) கூறுவது போல் அமைந்துள்ளன. எடுத்துக் காட்டாக விவசாயப் பொருளாதாரத்தை ஆராய்ந்து பார்த்தால் அதிலிருந்து தோன்றும் குறைந்த பயிர் விளைச்சல்தான் வளர்ச்சிக் குத் தடையாக இருக்கும்.

அதிகப்படியான மக்கள் நிலத்தை நம்பித் தங்களது வாழ்க் கையை அமைத்துக் கொள்ளும் தன்மையை வறுமையின் விளை வாகத்தான் கொள்ள வேண்டுமேயன்றிக் காரணமாகக் கொள்ளக் கூடாது. இப்பிரிவினர் ஏழ்மை நிலையில் இருப்பார்களென்றால், தொழிலை அண்டியுள்ள மக்களும் அவ்வாறே இருப்பர். மாறாக வேளாண்மையில் விளைச்சல் பெருகி வருமேயானால், விவசாயி களின் வருமானமும் உயர்த்தப்பட்டு பிற பிரிவினர், குறிப்பாகத் தொழில் தொகுப்பினர், முன்னேறுவதற்கும் அவர்களுடைய தொழில்கள் செழிப்பதற்கும் இதுவே காரணமாகி விடுகிறது.

பெருகி வருகின்ற மக்கள் தொகையைப் பிரச்சினையாகக் கருதி அதற்குரிய தீர்வுகளை வகுப்பதில் நாட்டம் செலுத்த வேண்டுமே தவிர, பின் தங்கிய நாட்டில் இதனை ஒரு காரணமாகக் காட்டுவது தவறாகும். முன்னேற்றப் பாதையினூடே செல்லுகின்ற நாடு களில் மக்கள்தொகை பிரச்சினையாக இருக்காது. மாறாக போதா மக்களைக் கொண்ட நாடுகள், தங்களது மக்கள்தொகை பெருகாதா என ஏங்கக் கூடச் செய்வார்கள். இவ்வாறு மக்கள் தொகைச் சுமை, வளர்ச்சியுறும் நாடுகளிலுள்ள சிறப்பியல்புகளுக்கு ஒரு காரணமாக இருக்காது. உதாரணத்திற்கு ஜப்பானை எடுத்துக் கொள்ளலாம். வேளாண்மை சார்ந்த மக்கள்தொகைச் சுமை உடைய அந் நாட்டில் பொருளாதார வளர்ச்சி தோன்றுகையில் இவ்விரண்டு சக்திகளும் முன்னேற்றத்திற்கு தடையாக அமைய வில்லையே !

ஆகவே, தமது வசதிக் கேற்ப மேற்கூறிய இரு சக்திகளையும் அகற்றிவிட்டால், எஞ்சியவற்றைப் பொருளாதார வளர்ச்சி குன்றிய நிலைக்குக் காரணங்களாகச் சுட்டிக் காட்டலாம். அவை யாவன :

(i) வறுமையின் 'கொடிய வட்டம்' அல்லது 'நச்சுச் சுழல்'

(ii) மூலதனப் பற்றுக்குறை

(iii) சந்தை நிறை குறைகள்

(iv) பண்பாட்டுச் சக்திகள்

(v) அயல் நாட்டார் ஆட்சி

(i) வறுமையின் நச்சுச் சுழல் (Viscious circle of poverty)

கடந்த காலங்களில் பின்தங்கிய நிலையில் இருந்த நாடுகள் நிகழ் காலத்திலும் அந்த நிலையிலேயே உள்ளன. புரட்சிகரமான மாறுதல்கள் மூலமே மேற் கூறிய நிலையினை மாற்றி அமைக்க முடியும். பின்தங்கிய நாடுகளில் உள்ள சில சிறப்பியல்புகள் மாறி மாறி வந்து ஒரு வித நச்சுச் சுழலை ஏற்படுத்துகின்றன. இதனை நர்க்ஸின் முன் மொழிவுரையான 'ஒரு நாடு ஏழ்மையாக இருப்பதற்குக் காரணம் அது ஏழ்மையாக இருப்பதுவே'[1] என்பதன் மூலம் அறியலாம். மேலும் அவரது கூற்றுப்படி 'ஒரு நாட்டில் நிலவும் பாதக சக்திகள் ஒன்றுக் கொன்று மாறி மாறி செயல்பட்டு அந்த ஏழ்மையான நாட்டைத் தொடர்ந்து வறுமை நிலையிலேயே வைத்து விடுகின்றன.......' உதாரணமாக, ஓர் ஏழை மனிதனுக்குப் போதுமான உணவு கிடைக்காது. போதிய உணவு கிடைக்கப் பெருததால் உடல் வலுவில் பலவீனமாக இருக்கின்றான்; பலவீனமாக இருப்பதால் அவனது உற்பத்தித்திறன் குறைவாக இருக்கிறது. உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதால் அவனது வருமானம் குறைவாக இருக்கிறது. இதனால் அவன் ஏழையாக இருக்கின்றான். ஏழையாக இருப்பதால் போதுமான உணவு கிடைப்பதில்லை. இவ்வாறாக மேற்கூறிய சுழற்சியானது ஒன்றைத்தொட்டு ஒன்றாக தொடர்ந்து நடைபெறுகிறது.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் உண்மை வருமானம் குறைவாக இருப்பதால் சேமிப்பு குறைவாக இருக்கும். அத்துடன் மக்களின் வாங்கும் சக்தியும் குறைவாக இருக்கும். சேமிப்பும், வாங்கும் சக்தியும் குறைவாக இருப்பதால் முதலீடு குறைவாக இருக்கும். முதலீடு குறைவாக இருப்பதால் வருமானம் குறைவாக இருக்கும். இவ்வாறு 'நச்சுச் சுழல்' சுழல்கின்றது.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் காணப்படுகின்ற மேற்கூறிய சிறப்பியல்புகள் ஒரு நாடு பின்தங்கிய நிலைக்குக் காரணங்களாக இருப்பதோடு மட்டுமல்லாமல், அக்காரணங்களால் ஏற்படக்கூடிய விளைவுகளாகவும் விளங்குகின்றன. இவ்வாறு ஒரு நாட்டினை முன்னேற விடாமல் கீழ் நோக்கி அழுத்துகின்ற சக்திகள் மென்மேலும் அந் நாட்டினை கீழ் நோக்கியே செல்லும்படியான பல்வேறு பாதக சக்திகளை உருவாக்குகின்றன. இதனைச் சுருங்கக் கூறின் 'தோல்வியைப் போல் வேறு எதுவும் தொடர்ந்து தோல்வி அடைவதில்லை.'[2]

1 Ragner Nurkse in Problems of Capital Formation in Under Developed Countries—Page—4.

*2 Dr. D. I. Nag 'Problems of Under Developed Economy.' P. 94.

(ii) **மூலதனப் பற்றுக்குறை :**

ஒரு நாட்டின் உயிர்த்துடிப்பு அதன் மூலதன அளவைப் பொறுத்துள்ளது எனக் கூறினால் அது மிகையாகாது. வளர்ச்சி யுறும் நாடுகளில் இதன் அளவு மிகக் குறைந்து காணப்படுகின்றது. இதற்குரிய பல காரணங்களை இங்கு விளக்கலாம். பண வருவாய் மட்டங்களைக் கொண்டு சமுதாயக் கட்டுமானத்தை ஆராய்ந்து பார்த்தால் அதனை (சமுதாயத்தை) மூன்று நிலைகளாகப் பிரித் திடலாம். அவையாவன: ஏழைகள், நடுத்தர வகுப்பினர், செல் வந்தர். வளர்ச்சி குன்றிய நாடுகளில் மக்களின் கல்வியறிவு மற்றும் தொழில் திறன் மிகக் குறைந்த தரமுடையதாக மட்டுமல்லாமல் தலா வருமானமும் குறைந்தே இருக்கும். பெரும்பான்மையோர் சம்பிரதாய உற்பத்தி முறைகளைக் கையாண்ட நிலையில் வேளாண் மையை நம்பி யிருப்பர். தங்களுக்குப் போதுமான அளவிற்கு மட்டுமே இவர்கள் உற்பத்தி செய்வதில் நாட்டம் காண்பிப்பார் கள். இவர்கள் வசம் உபரிப் பொருள்கள் பெரும்பாலும் இரா. அது தவிர இவர்களுக்குத் தொழில் பண்டங்கள் (Industrial goods) தேவைப் படுவதுமில்லை ஆகவே இவர்களுடைய செயல்பாடு களின் காரணமாக தொழில்களில் முதலீடு செய்ய ஊக்கம் பிறப்ப தில்லை.

இவ் வேளாண்மைத் துறையில் தேவைக்கு அதிகமான அளவில் உழைப்பானது தேங்கியுள்ள காரணத்தினால் மறைமுக வேலையின்மை தோன்றுகிறது. இச் சூழ்நிலையில் உழைப்பின் உற்பத்தித்திறன் மிகவும் குறைந்து விடுகிறது; இறுதிநிலை உற்பத்தி பூச்சியமாகி விடக்கூடும். சராசரி உற்பத்தித்திறன் மிகக் குறை வாக அமைவதற்குச் சாத்தியக் கூறுகள் உள்ளன. போதிய ஊதி யம் கிடைக்கப்பெறாத நிலையில் இவர்களுடைய சுமார் 70 சதவீதத் திற்கும் அதிகமான நபர்களின் வருமானம் மிகக் குறைந்து அவர் களைச் சேமிக்கவொட்டாமல் செய்துவிடுகிறது. ஆக இவர்களால் மூலதனத் திரட்சியில் பங்கு பெற இயலுவதில்லை. பொருளாதார வளர்ச்சியானது இதன் காரணமாகத் தடைபடுகின்றது.

அடுத்த இரண்டாவது பிரிவினராகிய நடுத்தரக் குடும்பத்தின ரைக் காண்போம். வளர்ச்சியுறும் நாடுகளில் இவர்கள் சிறுபான் மையினராக இருப்பர். முன்னவர்களைக் காட்டிலும் இவர்களிடம் சேமிக்கும் சக்தி சற்று அதிகமாக யிருக்கும். சேமிக்கப்படுபவை அனைத்தும் முதலீடு செய்யப்படும். பெரும்பாலும் சிறு சேமிப்பாக இருக்கின்ற காரணத்தினால் சிறு தொழில்களில் முதலீடு செய்யத் தான் இவர்கள் நாட்டம் கொள்வார்கள். இடர்கள் (Risks) மலிந் துள்ள தொழில்களில் இவர்கள் முதலீடு செய்ய மாட்டார்கள்.

மேலும், முதலுக்குக் கொடுக்க வேண்டிய வட்டி அதிகமாக உள்ள காரணத்தினுல் இப்பிரிவினரால் மூலதனத் திரட்சியில் சாதனைகள் புரிய முடிவதில்லை. சுருங்கக் கூறின் இவர்களுடைய சேமிப்பு மற்றும் முதலீடு சிற்றளவில்தானிருக்க முடியும்.

மூன்ருவதாக மிகச் சிறுபான்மையோராக விளங்கும் செல்வந்தரிடம் கணிசமான மூலதனத்தை எதிர்பார்த்தால் அங்கும் ஏமாற்றம் தான் தலைதூக்கும். இதற்குக் காரணங்கள் உண்டு. அயல் நாட்டுப் பொருள்கள் மீது மோகம் கொண்ட நிலையில் உள் நாட்டு உற்பத்தி நிலையைப் பற்றி இவர்கள் சிந்திப்பது கூட இல்லை. இவர்களுடைய செலவினங்கள் யாவுமே சமுதாயக் கண்ணேட்டத்தில் காணின் பயனற்றவையாகவே தோன்றும். இத்தகைய மரபு அவர்களே தோற்றுவித்துக் கொண்டதாகும். இதனை மீறிச் சிலர் முதலீடு செய்ய முன் வருவதாக இருந்தால் கூட, தொழில் இடர்கள் பல இருக்கின்ற காரணத்தினுலும், மிகக் குறைந்த இலாபமே கிடைக்கும் என்ற எண்ணம் ஏற்படுவதாலும் முதலீட்டின் அளவு சிறுத்து வருகிறது. இவர்கள் அயல் நாடுகளில் குறிப்பாக மேம்பாடடைந்த நாடுகளில், முதலீடு செய்ய விருப்பம் கொண்டிருப்பர்.

பல முட்டுக்கட்டைகளை அகற்றி இச் செல்வந்தர்கள் முதலீட்டில் ஈடுபடுவதாக இருந்தாலும், நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்கின்ற தொழில்களைத்தான் தோற்றுவித்து வளர்த்திட எண்ணுவார்கள். இத் தொழில்களிலிருந்து விரைவிலேயே போட்ட முதலுக்குரிய இலாபத்தைப் பெற்றிட முடியும். ஆனுல் பின்தங்கிய பொருளாதாரங்களில் முதன்மை கொடுத்து ஊக்கப்படுத்த வேண்டியது சில ஆதாரத் தொழில்களைத்தான். ஆனுல் இவற்றை உருவாக்குவதற்குக் கணிசமான மூலதனம் தேவைப்படும். அவ்வாறே தனியார் சேமிப்பைத் திரட்டிவிட்டாலும் முதலீடு செய்ய மலைப்பார்கள். ஏனெனில் இத் தொழில்கள் இலாபம் தருவதற்கு நீண்டகாலம் காத்திருக்க வேண்டிய திருக்கும். அதாவது 'திரும்பத் தரவல்ல காலம்' (Pay back period) சற்று நீண்டதாக இருக்கும்.

மேற் கூறிய சில குறிப்புகளிலிருந்து தனியார் துறையில் போதிய அளவு சேமிக்கும் நாட்டம் இல்லையெனக் கூற முடியும். சேமிப்பு மற்றும் முதலீட்டுச் செயல்களில் ஈடுபடுவதாக இருந்தால் கூட அவற்றின் விளைவாகச் சமுதாயத்திற்குப் போற்றத்தக்க விதத்தில் நன்மைகள் வராமல் போய்விடுகின்றன.

(iii) சந்தையின் நிறை குறைந்த தன்மைகள்

மிகவும் உத்தம நிலையில் வளங்கள் யாவும் பயன்படுத்தப்பட வேண்டும். (Optimum utilisation of resources) என்பது பொருளாதார வளர்ச்சியின் அடிப்படை நோக்கம் நிறைவு சந்தையாக (Perfect Market) இருந்தால்தான் இந் நோக்கம் கை கூடுகின்றது. ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் இயங்குகின்ற சந்தைகள் நிறைவுத் தன்மை பெற்றவையாக இரா. அசைவற்ற உற்பத்திக் காரணிகள் (Immobile factors), விலை உறுதிப்பாடு (Price regidity), சந்தை நிலைகளைப் பற்றி அறியாமை, உறுதிப்பாடு மிக்க சமுதாயக் கட்டுமானம், சிறப்புத் தேர்ச்சியின்மை (Lack of specialisation) இத்தகைய நிறை குறைந்த தன்மைகளைக் கொண்ட சந்தையுடைய வளர்ச்சியுறும் நாடுகளில் பொருளாதார வளர்ச்சி தடைபடுகின்றது. தொழில் திறன் குறைந்த தோடல்லாமல், இம் மாதிரிச் சூழ்நிலைகளில் வளங்கள் சரிவர பயன்படுத்த இயலாமல் போய்விடுகின்றன.

மேலும் விற்பனை முற்றுரிமைத் (monopoly) தன்மைகள் வேரூன்றிவிடுகின்றன. விலைக் குறைவின் பொருட்டு அதிக உற்பத்தி செய்து பண்டங்களை வழங்க வேண்டும் என்ற எண்ணத்திற்கு மாறாக உற்பத்தி அளவைக் குறைத்து, சர்வாதீனத்தைப் பெற்றுள்ள தொழில் அதிபர்கள் விலைகளைக் கூட்டி அதிக இலாபத்தை அடைகின்றனர். ஆனால் இதிலிருந்து மூவகைத் தீய விளைவுகள் தோன்றுகின்றன. இயல்பாக இருக்க வேண்டிய (அதாவது, நிறைவுச் சந்தை இருந்தால் எவ்வாறு இருக்குமோ அந்நிலை) உற்பத்தி அளவானது, செயற்கையாக குறைக்கப்படுகின்றது. இரண்டாவதாக, குறைக்கப்பட்ட உற்பத்தியானது அதிக விலையில் விற்கப்படுகின்றது. அவ்வாறு விற்றால்தான் இலாபத்தின் அளவு குறையாமல் இருக்கும் என்ற கொள்கையை தொழில் அதிபர்கள் கடைப்பிடிக்கின்றனர். இதன் விளைவாக நுகர்வோர் இயல்பாக உள்ள விலையைவிட அதிகமாக வழங்க வேண்டிய வருந்தத்தக்க நிலை உருவாகின்றது. மூன்றாவதாக, வளங்கள் சரிவரப் பயன்படுத்தப்படாத நிலையில் இருக்கின்றன. சில மூலப் பொருள்கள் அதிகமான அளவிலும், மற்றவை குறைந்த அளவிலும் பயன்படுத்தப்படும் நிலை ஏற்படுகின்றது. நீண்ட காலத்திற்கு இச் சமமின்மை நீடிப்பதாக யிருந்தால் பல கொடிய விளைவுகள் தோன்ற ஆரம்பிக்கும்.

(iv) பன்னாட்டுச் சக்திகள் :

பல மேலை நாடுகள் குடியேற்றக் கொள்கையைக் (Colonial policy) கடைப்பிடித்த காரணத்தால், அப் பேரரசுகளின் அதிகா

ரத்திற்கும், ஆட்சிக்கும் உட்பட்டுத்தான் பின்தங்கிய குடியேற்ற நாடுகள் செயல்படத் துவங்கின. இந்த ஏழை நாடுகள் மூலப் பொருள்களை பேரரசுகள் தங்களது நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யுமாறு பணித்தன. பொதுவாக ஏற்றுமதி அதிகரிப்புக் கொள்கை, வரவேற்கப்பட வேண்டிய தொன்றாகும். ஆனால் இம் மாதிரியான ஒரு சூழ்நிலையில் தாதுப் பொருள்களை மட்டும் வளர்ச்சி குன்றிய நாடுகள் தொடர்ந்து ஏற்றுமதி செய்வதாக இருந்தால் நீண்ட காலத்தில் அத்தகையப் பொருளாதாரங்கள் சீர்குலையலாம். பல காரணங்களை இக் கூற்றுக்கு ஆதாரமாக விளக்கலாம். முதலாவதாக இம்மாதிரியான ஏற்றுமதிக்கொள்கை கடைப்பிடிக்கப்படுவதாக இருந்தால், இந்நாடுகள் அந்நியச் செலாவணியை நிரம்பப்பெறுகின்ற தென்பதென்னவோ உண்மை தான். ஆனால், இவ் வருவாயைக் கொண்டு உற்பத்திப் பண்டங் களையோ உயர்ரகத் தொழில் நுட்பத்தையோ தருவிக்காமல், அதற்குப் பதிலாக ஆடம்பரம் மிகுதியான நுகர்வுப் பண்டங்கள் இறக்குமதி செய்கின்றன. இங்கு இரண்டு தீமைகள் புலனாகின் றன. அவை:

(1) உள் நாட்டுத் தொழில்களுக்கு ஆதரவு கிடைப்ப தில்லை.

(2) மேலை நாட்டுப் பண்டங்களுக்கு உறுதிப்படுத்தப்பட்ட சந்தை தோன்றிவிடுகின்றது.

இதன் விளைவாக மாற்றானின் தொழில் வளம் பெருகுவதற்கு வளர்ச்சியுறும் நாடுகள் மறைமுகமாக உதவுகின்றன.

மேலும் பன்னாட்டு ஊதியத்திலிருந்து வரும் ஊதியத்தை வளர்ச்சியுறும் நாடுகள் தங்களது எல்லைகளுக்குள் தொழில் பெருக வேண்டுமென எண்ணாது உற்பத்திக் கருவிகளை உருவாக்குகின்ற நடவடிக்கைகள் (capital project) முதலீடு செய்யாமல், அயல் நாடுகளில் கணிசமான இலாபத்தைத் தரவல்ல திட்டங்கள் செலுத்திவிடுகிறார்கள். இதன் விளைவாகவும் உள் நாட்டில் இழப்பு நேரிட்டு வெளிநாடுகளில் இலாபம் கிடைக்கும் சூழ்நிலை தோன்று கின்றது.

பொருளாதாரத்தில் மந்த நிலை (Depression) காணப்படுகை யில் மூலப் பொருட்களின் விலை அதிவேகமாக வீழ்ச்சி பெற்று அவற்றை நம்பியுள்ள வளர்ச்சியுறும் நாடுகள் பெரிதும் அவதிக் குள்ளாகின்றன. மாறாக செழிப்புக் காலங்களில் விலைவாசியேற்றம் இத்தகைய பொருளாதாரங்களில் மிக விரைவாக மேல் நோக்கிச்

செல்வதால் பண வீக்கத்தினுல் (Inflation) விளைகின்ற தீமைகள் தோன்றவாரம்பிக்கின்றன. இவ்வாறு வணிகச் சுழல்களின் இரு முக்கிய கட்டங்களிலும் மூலப் பொருள்களின் ஏற்றுமதியை மட்டும் நம்பியுள்ள வளர்ச்சியுறும் நாடுகள் அல்லலபடுகின்றன. பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாகவே இத்தகைய ஏற்றுமதிக் கொள்கை விளங்குகின்றது.

பிற்பட்ட நுட்பங்களைக் கொண்ட தோட்டப் பண்ணைத் தொழில்கள் வளர்ச்சி குன்றிய நாடுகளில் வேளாண்மைத் துறையைப் பெருமளவிற்கு ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும். இங்குத் திறன் குறைந்த உழைப்பைத்தான் பெரிதும் பயன்படுத்துவார்கள். கணிசமான அயல் நாட்டு முதலீடுகளைக் கொண்டு இத் தொழில் விரிவு கண்டபோதிலும், உற்பத்தித் திறன் உயருவதில்லை. கிடைக்கும் இலாபமும் உள்நாட்டில் முதலீடு செய்யாமல் அயல் நாடுகளில் பயன்படுத்தப்படுகின்றது.

### (v) அயல் நாட்டார் ஆட்சி

பேரரசுகள் தங்களது அரசியல் மற்றும் பொருள் பலத்தைக் கொண்டு நலிவுற்ற பல நாடுகளைக் கைப்பற்றினர். இவ்வாறு குடியேற்றக் கொள்கை பிறந்தது. இப் பேரரசுகள் விரும்பிய கொள்கைகளைத்தான் குடியேற்ற நாடுகளும் கடைப்பிடிக்க வேண்டுமென கட்டாயம் ஏற்பட்டது. குறிப்பாக 'தாய் நாடு' களாகிய இப் பேரரசுகளின் பொருளாதார வளர்ச்சியை உய்விக்க குடியேற்ற நாடுகள் சிரம் தாழ்ந்து பணிபுரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏற்கெனவே பின்தங்கிய நாடுகள் மேலும் பின்னேக்கிச் செல்ல ஆரம்பித்தன. இதன்புற விளைவுகளாக ஒற்றைத் தொழில் அல்லது பயிர் சிறப்புப் பெறுதல், தீவிரப் பண்படுத்தல் காரணமாக வடியப் பெற்ற நிலையிலுள்ள இயற்கை வளங்கள், வெளிநாட்டுத் தொழிலுக்கு ஆதரவு தரத்தக்க விதத்தில் அமையப் பெற்ற சாலை, மற்றும் இருப்புப்பாதைப் போக்குவரத்து, மின்சாரம், அணைக்கட்டுகள் கொண்ட "உள்ளமைப்பு" (Infra structure) முதலியன தோன்றலாயின.

விலை மதிப்பற்ற மூலப் பொருள்கள் பேரளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்த காரணத்தினுல், பேரரசுகள் வசம் இருந்த தொழில்கள் அமோகமான உற்பத்தியுடன் வளர்ச்சியுற ஆரம்பித்தன.

அங்கு பெருகி வந்த உற்பத்தியோ குடியேற்ற நாடுகளால் இறக்குமதி செய்யப்பட்டு விற்பனையாயின. இந் நாடுகளில் இயல்

பாகத் தோன்ற வேண்டிய தொழில் அமைப்பிற்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டு பொள்ளலுடைய செய்கைக் கட்டுமானமொன்று உருவாகியது. இதனுல் விளைந்த சீர்கேடுகள் பல. அரசியல் சுய உரிமை பெற்ற பின்னும் கூட இவற்றை முறியடிப்பதற்குள் பல சிக்கல்கள் தோன்றலாயின.

## பொருளாதார வளர்ச்சியை எவ்வாறு சாதிப்பது

வளர்ச்சியுறும் நாடுகளில் வறுமை நிரந்தரமாக நிலைபெற்றிருப் பதற்குரிய காரணங்களை இவ்வாறு ஆராய்ந்தபின், என்னென்ன நிவாரணங்களை மேற்கொண்டு பொருளாதார வளர்ச்சியை அடைய இயலும் என்பதை இப்பகுதியில் காணலாம். அத்தகைய வழிவகைகளைக் குறிப்பிடுவதற்கு முன்பாக வளர்ச்சிக்குரிய ஓர் உகந்த சூழ்நிலை அந் நாடுகளில் இருக்க வேண்டியது இன்றியமை யாததாகக் கருதப்படுகின்றது. அவ்வாறு அமைந்தால்தான் சமூக, பொருளாதார, அரசியல் மரபுகளில் சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்டு நாட்டினை முன்னேற்றப் பாதையில் செலுத்த முடியும். ஏழ்மை நிலையிலிருந்து நாட்டிற்கு என்றுமே விடிவு கிடையாது என எண்ணுகின்ற மக்கள் இருப்பாரேயென்றுல் அந்நாடு நிரந்தர மாகவே பின்தங்கிய அமைப்புக் கொண்டதாகிவிடும். மாருக எவ் வாருயினும் தங்களது நாட்டின் பொருளாதாரத்தை வளர்ச்சி யுறச் செய்ய வேண்டும் என்ற உறுதிப்பாட்டுடன் கூடிய உணர் விருந்தால் பல வியத்தகும் சாதனைகளைச் செய்ய முடியும். பார்க்கப் போனுல் இத்தகைய உணர்விஞல்தான் இன்று அமோக வளர்ச்சி கண்ட நாடுகளாக ஜப்பான், ஜெர்மனி போன்றவை விளங்குகின் றன. ஆகவே, பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாத வழி மக்கள் பாலுள்ள எழுச்சியில்தான் தொற்றி நிற்கின்றது எனக் கூறினுல் அது மிகையாகாது.

### (1) கல்வியும் முன்னேற்றமும்

தரமுடைய கல்வியறிவு பரவலாக்கப்பட்ட நிலையில் நாட்டி லுள்ள அனைவருமே பயனடைவார்கள் என்ருல், அதுவே அந் நாட்டின் வளர்ச்சிக்கு கார்மேகங்களுடே ஒளிக் கீற்றுப் போன்று விளங்குகின்றது. இக் கல்விதாம் முன்னேற்றத்திற்கு அடித்தள மாக அமைகின்றது. கம்யூனிசக் கொள்கை புகுத்தப்பட்ட ஒரு நாட்டில் மக்களுக்கு கல்வியறிவு புகட்ட அரசு மிகத் தீவிரமாக செயல்பட்டிருப்பதை, வரலாற்று வாயிலாகக் காணலாம். பின்னுல் திட்டமிடப்பட்ட பொருளாதாரம் வெற்றிகரமாகச் செயல்படு வதற்கு இது பெரிதும் உதவுகின்றது.

வளர்ச்சி குன்றிய நாடுகளில் கல்வித்துறையில் உள்ள சாதனை களுக்கும், பொருளாதார நிலைக்கு மிடையே நெருங்கிய உடன் தொடர்பு இருப்பதைக் காண முடிகின்றது. இதில் சமூக சக்தி களும் பின்னப்பட்டிருப்பதைக் காணலாம். நில உரிமையை ஏக போக உரிமையாக்கிக் கொண்ட மிகச் சிறுபான்மையினர் கல்வி யையும் அதுபோல் தாங்களே வசப்படுத்திக்கொள்ள விழைவது ஏழை நாடுகளில் இயல்பாகவே அமையும், ஒரு தன்மையாகும். குறிப்பாக உயர்கல்வி கற்றிட போதிய பண வசதி கீழ்த்தளத்தி லுள்ள மக்களிடம் இல்லாத காரணத்தினுல் அந்நிலையை அவர்கள் அடைய முடியாமல் போய்விடுகின்றது. செல்வந்தர்களின் குழந் தைகள் தரமான கல்வி புகட்டப்பட்ட நிலையில் கணிசமான ஊதியம் தரவல்ல பதவிகளில் அமர்ந்து தங்களது செல்வாக்கினை உயர்த்திக் கொள்வார்கள். இவர்களுடைய அதிகாரம் பாது காக்கப்பட்டு பலப்படுத்தப்படுகின்றது. இத்தகைய கல்வி முறை யினுல் பயன் அடைவது பெரும்பாலும் நகர்ப்புறங்களில் வசிக் கின்ற சிலரும், உயர்தர வகுப்பினரு மாவார். இவர்களது எண் ணிக்கை மிக நுட்பமாகவே இருக்கும். ஆக "உள்ளோருக்கு"க் கிடைக்கின்ற பயன், இல்லாருக்குக் கிடைக்காமல் போக, ஏற் கெனவே சமுதாயத்தில் நிலவியிருந்த சம மின்மை மேலும் கடுமை யாகின்றது.

திட்டமிடப்பட்ட கல்விக் கொள்கை யொன்றினை வகுத்தால் தான் வளர்ச்சியுறும் நாடுகளில் காணப்படும் சமுதாய ஏற்றத் தாழ்வுகளைச் சமச்சீர் செய்ய முடியும். பல முனைகளில் சீர்திருத் தங்கள் புகுத்தப்பட வேண்டும். முதலாவதாகக் கல்வியின் தரம் குன்ருமல் பாதுகாக்கப்பட்டு அதே வேளையில் எழுத்தறிவில்லா தாருக்கு அடிப்படைக் கல்வியேனும் கிடைக்கும் வகையில் வழி செய்ய வேண்டும். ஒரு கட்டத்திற்குப் பிறகு தரத்தை மட்டுமே சிறப்பாகக் கொண்டு அதில் முன்னேற்றத்தை தோற்றுவிக்க வேண்டும்.

இரண்டாவதாக, கல்வியின் மூன்று நிலைகளாகிய முதல்நிலை, இரண்டாம் நிலை, மூன்ரும் நிலை, துவக்கப் பள்ளி, உயர்தரப் பள்ளி, கல்லூரிகள் இவற்றின் வளர்ச்சியின்போது சம நிலையுடைய அணுகு முறையைப் பயன்படுத்த வேண்டும். குறிப்பாக உயர் கல்விக் கட்டடங்களில் சேருவதற்கு மாணவர்களை ஊக்குவிக்கா மல், துவக்க நிலையில் அதிக அளவில் சிருர்களை ஈர்க்கும் முயற்சி யில் ஈடுபட வேண்டும். இந் நிலையில் கல்வியின் தரம் உயர்த் தப்பட வேண்டும்.

இவ்வாறு கல்வியின் கட்டுமானம், செயல்பாடு மற்றும் அதன் உள்ளடக்கம் இவற்றை மாற்றி அமைப்பதனுல் ஏற்படும் செலவை

வளர்ச்சியுறும் நாடுகளே முன்வந்து வழங்க வேண்டுமே யன்றி வெளி நாடுகளிலிருந்து அளிக்கப்படுகின்ற நிதியை நம்பி இச் சீர்திருத்தங்கள் இருக்கலாகாது. வெளி நாடுகளில் வழங்கப்படும் கல்வியானது பெரும்பாலும் ஏழை நாடுகளுக்கு உகந்தவையாக அமையாது. அவ்வாறு கற்ற கல்வி குறுகிய காலத்தில் பயனற்றுப் போய்விடலாம். அல்லது செல்வாக்குப் படைத்த சில செல்வந் தர்கள் தங்கள் பணம், பதவி கொண்டு மேலை நாடுகளுடன் தொடர்பு கொண்டு தங்கள் பிள்ளைகளை அக் கல்வி கற்று வர அனுப்பக் கூடும். இதனால் கீழ்த்தளத்திலுள்ள பெரும்பாலோருக்கு எவ்விதப் பயனும் இருக்காது. அல்லது ஒரு சிலர் வெளிநாடு களில் கல்வி கற்கச் சென்று நிரந்தரமாக அங்கு தங்கிவிடுவதாக இருந்தால் வளர்ச்சியுறும் நாடுகளில் 'அறிவு வடிமானம்' (Brain Drain) மெதுவே தோன்றி காலப்போக்கில் சில தீமைகளுக்குக் காரணமாகலாம்.

### (2) அறிவுறுத்தும் தலைமை

எழுத்தறிவற்ற இருள்சூழ்ந்த நிலையில் வளர்ச்சியுறும் நாடு களில் வசிக்கும் மக்கள் அறியாமையினால் பீடிக்கப்பட்டிருப்பர். இவர்கள் தங்கள் உளநிலையை மாற்றினாலொழிய பொருளாதார வளர்ச்சி நிகழ்ந்தேறாமலேயே போய்விடும். தேசிய ஒருமைப் பாடு, உழைப்பின் மேன்மை, செல்வம், உழைப்பு மற்றும் காலம் இவற்றைச் சிக்கனமாகப் பயன்படுத்துவதற்குரிய பக்குவம், நாட்டுச் செயல் நோக்கம் (National motivation) போன்ற நல் லுணர்வுகள் தோன்றி அவற்றின் விளைவாகத் துணிந்து செய லாற்றத் தொடங்குவதில் ஆர்வம் காட்டும் மனப்பான்மையை எல்லோரும் பெற்றிருக்க வேண்டும். இவ் வுணர்வுகள் மக்களின் அறியாமை எனும் இருளை அகற்றுவதற்குமட்டு மல்லாமல் மக்களைத் தட்டி எழுப்பி முன்னேற்றப் பாதையிலுள்ள இடர்களை யும் முறியடிக்கப் பெரிதும் பயன்படுகின்றன.

சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சியொன்றிற்குத் தம்மையே அர்ப்பணஞ் செய்த நிலை, நாட்டின் முக்கிய பொருளாதார நடவடிக்கைகளில் பங்கு பெறுவதற்குரிய துடிப்பு, ஆகியவை மக்களிடையே பரவி இருந்தால் அதுவே வளர்ச்சிக் குரிய மாபெரும் அறிகுறியாகும். ஏனெனில் புத்தறிவினைப் புகுத்தி எழுச்சிக் குரல் எழுப்பும் மக்கள்தாம் சமுதாயத்தின் தலைவர்களாகத் திகழ வல்லவ ராவார். பல நிலைகளில்—அரசியல்வாதிகள், ஆசிரியர்கள், விஞ்ஞானிகள், வணிகர்கள், தொழில் சங்கத் தலைவர்கள், பத்திரிகை எழுத்தாளர் கள்—இத்தலைமை சிறப்புற்று விளங்கினால்தான் பொருளாதார முன்னேற்றத்தை அடைய இயலும். பெரும்பாலான மக்கள்

தன்னலம் கருதாத ஆர்வம் மிகுந்த இத் தலைவர்கள், பிறப்பிக் கின்ற ஆணைகளைச் சிரமேற் கொண்டு செய்யக் காத்திருக்கும் நிலை யொன்று வருமானல் வளர்ச்சி குன்றிய பொருளாதாரங் களுக்கு அதுவே விடிவு காலமாக இருக்குமென்பதில் ஐயமேது மில்லை. குறிப்பிட்ட பிரிவினர் அடைந்துவந்த சலுகைகள் யாவும் நீக்கப்பட்டு சமுதாய ஏற்றத் தாழ்வும், செப்பனிடப்பட்டு முன் னேற்றப் பாதையில் பின்தங்கிய நாடுகள் பீடுநடை போட்டுச் செல்ல இச் சூழ்நிலை உதவி புரிகின்றது. அறிவுறுத்தும் தலைமை அச்சுறுத்தும் தலைமையாக மாறிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

3. சமூக, கலாச்சார, அரசியல் சூழ்நிலைகள்

பழமையில் ஊறி புதுமைகளைப் புகுத்த தயக்கம் காட்டுகின்ற சூழ்நிலை உருவானல் பொருளாதாரத் தேக்கம் இன்னும் மிகுதி யாகவே யிருக்கும். மக்களின் மனப்பான்மை காலத்திற் கேற்ப மாறுபட்டு மாற்றங்களை ஏற்கும் பக்குவம் அடைந்திருக்க வேண்டும். இதற்காக வாழ்க்கையில் இதுகாறும் கடைப்பிடித் திருந்த ஆத்மீகத் தத்துவத்திற்கு இரண்டாம் நிலை தந்து பொருள் சார்ந்த தத்துவத்துக்கு (materialistic philosophy) முதலிடம் வழங்கப் பட வேண்டும். பிளவுச் சக்திகள் கொண்ட, சமூக, பழக்க வழக்க மரபுகள் முறியடிக்கப்பட வேண்டும். சாதி, இனப் பாகு பாடுகள் முற்றிலும் அகற்றப் பட்டால் தான் பொருளாதார வளர்ச்சி தடையுருமல் நடைபெறும். அறியாமை நீக்கப்பட்டு, அக உணர்வுகள் எழுச்சியுடையவனவாக அமைந்து, வளர்ச்சி நடவடிக்கைகளில் தானும் பங்கு கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அனைத்து மக்களிடையே உதித்தாலொழிய மேம் பாடு காணுவது கடினமாகி விடும்.

ஒப்பிட்டுப் பார்த்தால் சமூகப் பிரச்சினைகளுக்கு பொருளா தாரச் சிக்கல்களை விடச் சுலபமாகத் தீர்வுகளைக் கண்டு விடலாம். புதியவற்றைப் புகுத்துகையில் முன்னேற்றத்திற்கு இடையூருக உள்ள, சமூக, கலாச்சார மரபுகளைத்தான் மாற்றவோ, சீர் திருத்தவோ செய்ய வேண்டுமே தவிர பாகுபாடேது மின்றி எல்லா வற்றையும் ஒழித்துக் கட்ட வேண்டும் என்ற மனப்பான்மை இருக்க லாகாது. மேம்பாடு கண்ட நாடுகளில் கண்ட அனைத்தையும் வளர்ச்சியுறும் நாடுகளில் அங்ஙனமே செயல் படுத்த வேண்டுமென்று எண்ணக் கூடாது. இந்நிலையில் இவ்விரு நாடு களில் காணப்படும் பல்வேறு நிலைகளை ஆராய்ந்து இவற்றைக் கொண்டு கலவை ஒன்றினைத் தோற்றுவித்து வளர்ச்சியுறும் நாடுகளில் அது கடைப் பிடிக்கப்பட்டால் அச் செயலே சிறப்புடையதாக விளங்கும்.

பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி புரியக் கூடிய அரசாங்கத்தின் அமைப்பு எத்தகையதாக இருந்தால் பயன் தரும் என்பதைத் திட்டவட்டமாகக் கூற முடியாது. சிலர் மக்களாட்சியை விரும்புவர். ஒருமுக மைய ஆட்சியோடு செயல் படுகின்ற இவ் வமைப்பின் முடிவுகளை நிர்ணயிப்பதில் அளவிலாக் கால தாமதம் ஏற்படுகின்றது. பல கட்டங்களில் இம் முடிவுகள் இசைவு பெற வேண்டு மாதலால் மக்களாட்சியில் இதனைத் தவிர்க்க இயலாது. தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சியாதலால் பல முனைகளிலிருந்து பல பிரச்சினைகளுக்கு ஈடு கொடுத்து சமாளிக்க வேண்டிய நெருக்கடி நிலைமை உருவாகின்றது. பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிக்கும் முக்கிய காரணியாகிய பற்றுக்குறை, இயற்கை வளங்கள் பற்றிய பொதுவாக மக்களாட்சி நாடுகளில் முக்கியத்துவம் கொடுத்து ஆராய்வதில்லை. மாறுக பொருளாதார வளர்ச்சியுடன் எவ்விதத் தொடர்பு மற்ற சாதி, சமய, மொழிப் பிரச்சினைகளுள் தீவிரமாக உழன்று அவைகளிலேயே அதிக அக்கறை காட்டுவர். இதன் விளைவாக இவ்வியற்கை வளங்கள் சரிவரப் பயன் படுத்தப்படாமல் விரயமாக்கப்பட்டு சமுதாயம் பெரும் இழப்பிற்கு ஆளாவது முண்டு. ஆகவே மக்களாட்சியில் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ள நாடுகளில் பொருளாதார வளர்ச்சி மிக மெதுவாகவே நடந்தேறும்.

மாறுக அரசியலமைப்பு, சர்வாதிகார ஆட்சியாக இருந்தால் பொருளாதார வளர்ச்சி வீதம் அதிகமாகவே இருக்கும். இங்கு அனைத்து உற்பத்திக் காரணிகளும் அரசின் உடைமைகளாக்கப்படுகின்றன. ஆதலால் திட்டமிடுவதும் அதன் இலக்குகளை அடைவதும் சுலபமாகி விடுகின்றன. இதற்கு ஏற்ற வகையில் சட்டங்களை அவ்வப் பொழுது மாற்றி அமைத்திட இவ் வரசியலமைப்பில் இடமுண்டு. சம தர்மத்தின் எல்லையை எட்டிப் பிடித்துள்ள கம்யூனிசக் கொள்கையுடைய நாடுகள் இவ்வாட்சி முறையினுல் பல சாதனைகளைப் புரிந்துள்ளனர். இதைக் கொண்டுதான் திட்டமிடப்பட்ட பொருளாதாரமும், மக்களாட்சியும் முரண்பட்ட கருத்துக்களெனச் சிலர் கூறுகின்றனர்.

இவ்விரண்டிற்குமிடையில் மக்களாட்சி முறையே வகுத்துக் கொண்டு சம தர்ம பாணியுடைய சமுதாயத்தை உருவாக்கலாம் என இந்தியா போன்ற நாடுகள் புதிய தொரு அமைப்பினைத் தேர்ந்தெடுத்துள்ளன. இது தவிர இதைத் தழுவிய நிலையில் எண்ணற்ற அரசியல் அமைப்புகள் அந்தந்த நாட்டின் வரலாறு, புவியமைப்பு, சமூகக் கலாச்சார மரபுகள், பாரம்பர்யம் — இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆங்காங்கு நிறுவப்

பட்டுள்ளன. இவற்றில் சிறப்புமிக்க ஏதேனும் ஓர் ஆட்சி முறையைச் சுட்டிக் காட்ட முடியுமா வென வினு வொன்று தொடுக்கப்பட்டால் அதற்குத் திட்டவட்டமான விடை அளிக்க முடியாது எனத் தான் கூற வேண்டும்.

## 4. சந்தைகளைச் செம்மைப்படுத்தல் (Perfection of Markets)

இயல்பாக இருக்க வேண்டிய உற்பத்தி அளவைக் காட்டிலும் குறைந்த நிலையிலும் அதன் விளைவாகச் செயற்கையாக விலை உயர்த்தப் படுமாயின் மூலப் பொருள்களும், உற்பத்தி காரணங் களும், அவற்றின் உத்தம அளவிற்குப் பயன் படுத்தப்படவில்லை என்று தான் கூற வேண்டும். இதனை ஊக்குவிக்கும் வகையாகச் சந்தைகள் நிறைவு பெற்ற நிலைக்கு அப்பாற்பட்டவையாக வளர்ச்சி யுறும் நாடுகளில் இருப்பதைத் தொழில் அதிபர்கள் தெரிந்து வைத்துக் கொள்கிறார்கள். குறைந்த அளவு உற்பத்தி செய்து சந்தையில் விலை முற்றுரிமை பெற்றவர்களாதலால் விலையைக் கூட்டி அதிக இலாபத்தை அடைந்து விடுகின்றனர். போட்டியைப் புகுத்த விடாமல் இச்சிறுபான்மையினர் பிற்போக் குடைய தொழில் முறையைக் கையாண்டு பொருளாதாரத்தில் தேக்க நிலை யொன்றை உருவாக்கி விடுகின்றனர். நாட்டிலுள்ள வளங்கள் சரிவரப் பயன்படுத்தாமல் விட்டுவிடப் படுகின்றன. மேலும் அதிக விலை கொடுத்து நுகர்வோர் பொருள்களை வாங்கித்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயம் தோன்றுகிறது.

இத் தீய விளைவுகளை அகற்ற வேண்டு மெனில் சந்தைகள் செம்மைப் படுத்தப்பட வேண்டும். இதனைச் சாதிப்பதற்கு உற்பத்தி மட்டத்தில் கணிசமான அதிகரிப்பினைத் தோற்றுவிக்க வேண்டும். அவ்வாறு ஒரு சூழ் நிலையை உருவாக்க மூன்று வழிகளைப் பின்பற்ற லாம். முதலாவதாக, உற்பத்திக் கொள் ளளவினை (Productive capacity) உயர்த்தும் பொருட்டு மூலதனப் பண்டங்களின் அளவை அதிகரித்திட வேண்டும். வேறொரு வகையில் இக் கருத்தைக் கூறுவதென்றால் மூலதனத் திரட்சி வீதம் அதி விரைவாகப் பெருக வேண்டும் என்றுதான் சொல்ல வேண்டும். இரண்டாவதாக மக்கள் வசம் இருக்கும் உற்பத்தித் திறனை வெளிக் கொணர்ந்து, அதன் வாயிலாக ஆக்க அளவினை உயர்த்திட வேண்டும். இதற்குத் தொழிலாளர்களுக்கு உகந்த எண்ணற்ற சூழ்நிலைகள் சாதகமான வகையில் அமையப் பெற வேண்டு மென்பது இன்றி யமையாத தாகும். இறுதியாக புதுமைகள் பல புகுத்த தொழில் சீரமைப்புக் கொள்கை (Policy of Rationalisation) அதற்கேற்ற வாறு வகுக்கப் பட வேண்டும். குறிப்பாக பழமையான தொழில் முறைகளுக்குப் பதிலாக வியத்தகு புதிய கண்டுபிடிப்புகளைக்

கடைப்பிடிக்குமே யானுல் உற்பத்தியின் அளவு வெகுவாக உயர்ந்து, அது சந்தையில் மலிந்துள்ள சீர்கேடுகளை அகற்ற உதவும்.

மிக நுட்பமாக வரையறுக்கப்பட்ட பல துறைகளுக் கிடையில் குறுக்கீடாக விளங்கும் திரையைக் கிழித் தெறிவதன் மூலம், குறைந்த உற்பத்தியைத் தரவல்ல தொழில்களில் இருந்து சேமிப்பு மற்றும் முதலீடு, அதிக உற்பத்தியையும் இலாபத்தையும் நாடிச் செல்வதைப் பார்க்கலாம். செயற்கையான தடைகள் நீக்கப்பட்டு சந்தையின் பரப்பு விரிவு பெற்று விளங்கினுல்தான் உறுதித் தேவை உயர்வால் உற்பத்திப் பெருக்கை ஏற்றுக் கொள்ள இயலும். மொத்தத்தில் சந்தையின் நிறை குறைகள் எந்த அளவிற்கு குறைக்கப் படுமோ அந்த அளவிற்கு நாட்டிலுள்ள அனைத்து வளங்கள் பயன் படுத்தப்படுவது உயரு மென்பதாகச் சொல்லலாம். வளர்ச்சியுறும் நாடுகளைக் கீழ் நிலையிலிருந்து உயர்த்துவதற்கு இச் செயல் மிகவும் உதவுகின்றது என்று கூறத்தான் வேண்டும்.

**5. வேளாண்மையில் சீர்திருத்தங்கள்**

பின் தங்கிய பொருளாதாரங்களில் தேசியத் தொழிலாக விளங்கும் வேளாண்மையில் 70 சத வீதத்திற்கு மேல் மக்கள் நேரடியாக ஈடுபட்டிருப்பர். இத் தொழிலின் உற்பத்தி முறை யிலும் விளைவிக்கும் பொருள்களிலும், பெரிய புரட்சிகரமான எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. ஆதலால் தேங்கிய நிலையில் இவ் வேளாண்மை இருக்கிறது. எண்ணற்ற மக்கள் இதில் ஈடுபடுவதும் குறைந்த உற்பத்தியும் பல வகைச் சிக்கல்களில் சிலவாகும். பொருளாதார வளர்ச்சி குன்றிய நிலைக்கு இது முக்கிய காரணமாக அமைந்து விடுகிறது. வேறு பல தீமைகளைக் குறிப்பிடுகையில் நிலவுடைமை முறை, துண்டாடப் பெற்றுச் சிதறுண்ட நில அமைப்புகள், உழவர்களை அழுத்தும் கடன் பளு போன்றவற்றில் உள்ள சீர் கேடுகளைச் சுட்டிக் காட்டலாம்.

குறிப்பாக சொந்த நிலமற்ற விவசாயிகளும், விவசாயக் கூலி களும் செலவை ஈடுகட்ட முடியாமல் எப்பொழுதும் கடனிலே அமிழ்ந்து கிடக்கின்றனர். இருந்த துணைத் தொழில்கள் சீர் குலைய, வேளாண்மையிலிருந்து மட்டும் வருகின்ற ஊதியத்தை நம்பியிருக்கின்ற விவசாயி ஆற்றல் மிகக் குறைந்த தனது கால் நடைகளின் துணையோடு விளைச்சலை உயர்த்தப் பாடுபடும் விவசாயி. உரிய விலை கிடைக்காமல் அல்லல் படுகின்ற நிலை பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகளில் தெள்ளத் தெளிவாக காணப்படுகின்றன. இவற்றை யெல்லாம் பார்க்கும் பொழுது

டாக்டர். க்ளவ்ஸ்டன் ( Dr. Clouston ) கூறுவது போல் வேளாண்மை ஒரு வாட்ட முற்ற தொழில் என்பதில் ஐயமில்லை.

வேளாண்மைத் துறையில் சீர்திருத்தங்கள் புகுத்தப்படுகையில், ஏனைய துறைகளிலும் அதற்குத் தகுந்த விதத்தில் சிறு மாறுதல்களைத் தோற்றுவிக்க வேண்டும். உதாரணமாக கடன் வழங்குதல், விதை உற்பத்திக் கருவிகள், இரசாயன உரங்கள் வழங்குதல், நீர்ப்பாசன வசதி செய்தல், சந்தையின் பரப்பை விரிவு செய்தல் போன்றவற்றைக் குறிப்பிடலாம். முழு மொத்தமாக இவை யாவும் ஒருங்கிணைந்த வகையில் புகுத்தப்படுமாயின், கிராமங்களில் நிலவுகின்ற சமமின்மை முற்றிலும் அகற்றப்பட்டிருக்கும். ஆனால் பல சீர்திருத்தச் சட்டங்கள் அமுல் செய்த விடங்களிலெல்லாம் சிறு பான்மையாக விளங்கும் பெரும் நிலக்கிழார்தாம் பயனுறுகின்றனரே யன்றி பரவலான வகையில் இச் சட்டங்களிலுள்ள நன்மைகள் எல்லோரும் துய்க்கும் வகையில் அமையவில்லை என்றே கூறலாம். தற்காலிகமான முறையில் சட்டங்கள் இயற்றப்பட்டு அவை சரிவர செயல்படுத்தப்படுகின்றனவா என கவனிக்காமையும், தொடர் செயல் வலியுறுத்தப்படாமையும்தான் இந்நிலைக்குரிய முக்கிய காரணங்களாகும். இதன் விளைவாக சமுதாயத்தில் ஏற்கெனவே உள்ள ஏழைகள் இவர்களுக்கிடையில் சமமின்மை மேலும் அச்சுறுத்தும் வகையில் உருவாகின்றது.

நிரந்தரமான, உறுதியாகச் செயல்படுத்தும் முறையில் அமையப்பெறுகின்ற வேளாண்மைச் சீர்திருத்தங்கள்தாம் எதிர் பார்க்கும் பயனைத் தோற்றுவிக்க வல்லவையாக அமையும். இச் சீர்திருத்தங்கள் நிலவுடைமை விளைச்சல் பெருக்கத்திற்குரிய சாதகமான சூழ்நிலைகள், கடன் வசதிகள் முதலியவற்றைத் தழுவிய கொள்கைகளுடன் மட்டும் நின்றுவிடக் கூடாது. இக் கொள்கைகள் சரிவரச் செயல் படுத்தப்பட வேண்டுமென்றால் உழவனின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகின்ற வேளாண்மை சார்ந்த (agro-based) சில சிற்றளவு துணைத் தொழில்களை ஊக்குவித்து அவற்றில் முன்னேற்றம் காண வேண்டியது இன்றியமையாத ஓர் அம்சமாகும்.

இவ் வம்சங்கள் பொருந்திய சட்டங்கள் இயற்றப்படுகையில், கிராம சமுதாய அரசியல் பொருளாதார அமைப்புக்களால் ஒன்றுக்கொன்று பின்னப்பட்ட நிலையில் தோன்றும் பல்வேறு சிறப்பியல்புகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். அத்தகைய சட்டங்கள் செயல்பட மக்களும் முழு மூச்சுடன் இயங்குவதாக இருந்தால் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் விவசாயிகளின்

வருவாயும், வாழ்க்கைத் தரமும், கீழ் நிலையிலிருந்து உயர்த்தப் பட்ட நிலையில் மேம்பாட்டினைத் தோற்றுவிக்க முடியும்.

### (6) மூலதனத் திரட்சி

பொருளாதார வளர்ச்சியை அதிகரிப்பதில் மூலதனத் திரட்சியின் பங்கானது, இன்றியமையாததாகும் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையாகும். மேம்பாடு கொண்டுள்ள நாடுகளில் இருந்து இதற்குச் சான்றுகள் வழங்க முடியும். மூலதனத் திரட்சியினால் உற்பத்தி அதிகரித்த நிலையில் உபரி தோன்றுகிறது. இதனை மறு முதலீடு செய்வதன் மூலம் மேலும் உற்பத்தி அதிகரிக்கின்றது. மேல்நோக்கிச் செல்கின்ற திருகு சுருள் (Upward Spiral) ஒன்று உருவாவதற்குரிய சாதக நிலைகள் தோன்றுகின்றன. ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் இதனை எவ்வாறு ஆரம்பித்து வைப்பது என்பதில்தான் பல சிக்கல்கள் அடங்கி உள்ளன. ஏனெனில் இந்நாடுகளில் சமூக, சமய, கலாச்சார மரபுகள் பொருளாதாரப் பிரச்சினைகளுடன் பின்னப்பட்ட நிலையில் அமைந்திருக்கும்.

நடைமுறையில் செலுத்தப்படும் மூலதனத் திரட்சிக் கொள்கையில் இரண்டு முக்கிய அம்சங்கள் இருக்க வேண்டும். (1) மூலதன அளவைக் கணிப்பது (2) மூலதனத் திரட்சியைப் பாதிக்கின்ற சேமிப்பு மற்றும் முதலீட்டு நிலைகளை ஆராய்தல்.

பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகளில் பயன்படுத்தப்படும் மூலதனத் திரட்சியைப் பின்வருமாறு அளவிடலாம். முதலாவதாக மக்கள் தொகை வளர்ச்சி வீதத்தைக் கணிக்க வேண்டும். ஏனென்றால் பொருளாதாரமானது நிகழ் காலத்திற்கு ஆற்ற வேண்டிய பணியுடன் எதிர்காலப் பணிகள் மீதும் ஒரு கண் வைத்திருக்க வேண்டியது அவசியம். மக்கள் தொகையைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் இதனால் எழுகின்றது. இரண்டாவதாக தலா உண்மை வருமான வளர்ச்சி வீதத்திற்கு (Rate of growth of per capita real income) ஓர் இலக்கு நிர்ணயிக்கப்பட வேண்டும். இறுதியாக இவ் விரண்டையும் மனதில் கொண்டு நாட்டின் சக்திக்குத் தகுந்தவாறு எதிர்காலத்திற்குரிய தோராயமான தொரு மூலதன உற்பத்தி விகிதம்[1] (Marginal Capital output ratio) ஒன்றினை ஊகித்தறிதல் வேண்டும். இத் தோராய விகிதத்தை அடைவதற்கு நடப்பி

1. கடை நிலை, இறுதி நிலை எனும் சொற்கள் (marginal) என்ற ஆங்கிலக் கலைச் சொல்லின் தமிழாக்கமாக வருகின்றது; எனின் இவ்விடத்தில் பயன் பெறு, எனவே எதிர்காலத்திற்குரிய எனும் சொல் ஆளப்பட்டுள்ளது,

லுள்ள விகிதத்தை மக்கள் தொகை வளர்ச்சி வீதத்துடன் பெருக்க வேண்டும். மேலெழுந்த வாரியாகப் பார்க்கையில் இது சுலபமாகத் தோன்றினாலும், எதிர்காலத்திற்குரிய மூலதன உற்பத்தி விகிதத்தை மதிப்பிடுவது எளிதன்று; உதாரணமாக மக்கள் தொகை பெருக்க வீதம் 2·5 சதவீதம் இருப்பதாகவும் எதிர்காலத்தில் தலா உண்மை வருமானமானது 5 சதவீதம் உயர்வதாக இருந்தால், எதிர்கால மூலதன உற்பத்தி விகிதமானது 12·5 சதவீதமாக இருக்கும். அதாவது நடப்பிலுள்ள தலா உண்மை வருமானத்தை நிலைநாட்டுவதற்கு 12·5 சதவீதம் சேமிப்பின் அளவு இருந்தாக வேண்டுமென்பது பொருள் முன்பிருந்த நிலையி லிருந்து மாறிவிடாமல் இருப்பதற்கு உரிய யுக்தி தான் இது. ஆனால் இந்நிலையைத் தாண்டி பொருளாதாரத்தைத் துரித நடையில் முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்ல வேண்டுமென்றால் இவ் வீதம் பன்மடங்காக உயர்த்தப்பட வேண்டும்.

மூலதனத் தேவை அளவு கணிக்கப்பட்ட நிலையில் அவ்விலக்கினை அடைவதற்குச் சேமிப்புத் திரட்சிக்குரிய சாத்தியக் கூறுகளை ஆராய வேண்டும். சேமிப்பினால்தான் மூலதனம் உருவாகிறது என்ற உண்மையின் அடிப்படையில் இது ஆராயப்படுகின்றது. ஏழை நாடுகளில் குறிப்பிட்ட ஒரு தோற்றுவாயிலிருந்து சேமிப்பைத் திரட்டிட இயலாது. மாறாக பின்வரும் பல முனைகளிலிருந்து சேமிப்பைப் பெற வேண்டும்.

(i) வரி ஏய்ப்பிற்கு இடம் தராமல் நேரடி மற்றும் மறைமுக வரிகளைச் சுமத்தி நுகர்வு அளவைக் குறைத்திடத்தக்க மாறுதல்களைப் புகுத்திட வேண்டும். இது கட்டாயச் சேமிப்பைப் பெறச் சிறப்பு மிக்க ஒரு வழியாம்.

(ii) அரசாங்கமே நேரடியாக கடனீட்டுப் பத்திரங்களைப் (Securities) புழக்கத்தில் விட்டு மக்களைக் கொண்டு பணத்தைச் செலுத்தச் செய்யலாம். தன்னிச்சையான சேமிப்புகளை (Voluntary Savings) இவ்வாறு பயன்படுத்தலாம்.

(iii) பொதுச் செலவினங்கள் குறைக்கப்பட வேண்டும். சில பண்டங்களின் நுகர்வு தடை செய்யப்பட வேண்டும். எடுத்துக்காட்டாக ஆடம்பரப் பண்டங்களின் (Luxury goods) இறக்குமதி நிறுத்தப்பட்டு இன்றியமையாப் பொருள்கள் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யப்படுவதாக இருந்தால் அதிகச் சேமிப்பிற்கு வழிகோலுவதாகும்.

(iv) வேலைக் குறைவு, மற்றும் மறைமுக வேலையின்மையில் ஈடுபட்டுள்ள மக்களை அதனின்று மீட்டு, பல பொருளாதாரத்

திட்டங்களை அவர்கள் நன்மை கருதிச் செயல்படுத்தினுல் மூல தனத் திரட்சி வீதம் வெகுவாக அதிகரிக்கும்.

(v) பற்ருக் குறை நிதியாக்கம் (Dificit financing) ஏற்றுமதி அதிகரிப்புக் கொள்கை (Export promotion policy) வெளி நாடு களிடமிருந்து கடன் வாங்குதல் போன்ற வழிமுறைகள் வாயிலாக வும் சேமிப்பின் அளவை அதிகரித்திடலாம்.

இவ்வாறு பல வழிகளாலும் சேமிப்பைத் திரட்டி வெற்றி காணப் பொருளாதாரம் சாராத காரணிகளுக்கும் சிறப்பு வழங்கினுல் தான் முடியும். அவற்றை உதாசீனப் படுத்திவிட்டு பொருளாதாரச் சக்திகளுக்கு மட்டும் இடம் கொடுப்பதாக இருந்தால், சேமிப்பின் இலக்கை நிச்சயமாக அடைய முடியாது. முக்கியமாக அரசாட்சி முறை சமுதாயத்தின் கட்டுமானம், சமூக கலாச்சார பாணி போன்றவற்றை மனதில் கொள்ள வேண்டும்.

### 7. முதலீட்டுத் தேர்வு முறைகளைத் தேர்ந்தெடுத்தல்

நாட்டின் உற்பத்தியை பெருக்க வல்ல மூலதனம் திரட்டப் படுவதுடன், அதனை முதலீடு செய்வதற்குரிய முதலீடுகளையும் ஆராய்ந்தாக வேண்டும். அதற்காக பல முதலீட்டுத் தேர்வு முறைகளைச் ஆய்ந்து அதன்பின் மிகவும் உற்றதாக விளங்குகின்ற சிலவற்றை மட்டும் தேர்ந்தெடுக்க வேண்டும். பற்ருக்குறை யுடைய இயற்கை வளங்கள், முதல் போன்றவற்றைச் சரிவர பயன் படுத்தும் பொருட்டு, முதலீட்டுத் தேர்வு முறைகள் செம்மையான வையாக அமைய வேண்டியது இன்றியமையாத ஒன்ருகும். குறிப்பிட்ட தொழில்களைத் தெளிந்தெடுத்தல் அவற்றிற்குரிய தொழில் நுட்பங்களைத் தேர்ந்தெடுத்தல், காலக்கெடு நிர் ணயித்தல் போன்றவற்றைக் கொண்டு உற்பத்தி அளவை அதிக பட்சத்திற்கு உயர்த்த முற்படும் கொள்கையை முதலீட்டுத் தேர்வு முறை யெனக் கொள்ளலாம். இதனை நடை முறையில் செயல் படுத்தும் பொழுது பல இன்னல்களை மேற் கொள்ள வேண்டியது இருக்கும். இயக்க நிலைப் பொருளாதாரத்தில் தென்படும் மாறி களின் தன்மைகள் பலவற்றை சரிவர முன் கூட்டி ஊகிக்க இயலாத காரணத்தினுல் பல குழப்ப நிலைகள் உருவாகின்றன. மேலும் ஒவ்வொரு முதலீட்டு இடுமானமும் (Investment dose) மாறுபட்ட காலங்களில் வெவ்வேறு விளைவுகளைத் தோற்றுவிப்பதனுல் அவற்றை அனுமானித்து எதிர் காலத்தில் திட்டவட்டமான சில முடிவுகளை நிர்ணயிக்க முடியாமல் போய் மொத்த உற்பத்தி அளவு, விஞ்ஞான வளர்ச்சி, உழைப்பின் அளிப்பு மற்றும் பகிர்வு, சமூக கலாச்சார நிலைகள், மக்கள் தொகைப் பெருக்கம், அதனைச் சார்ந்த திறன், விருப்பு வெறுப்புகள் முதலிய பல அம்சங்களைத் தழுவி

அமைவனவாக இருக்கும். சங்கிலித் தொடர்பு போல விளையும் மாறுதல்கள் பலவற்றை நன்கு ஆராய்ந்த நிலையில்தான் பொருளாதார உணர்ச்சியூட்டுகின்ற முதலீட்டுக் கொள்கையைப் பின் தங்கிய நாடுகள் தேர்ந் தெடுக்க வேண்டும்.

'சமுதாய இறுதி நிலை உற்பத்தித் திறன்'(Social marginal Productivity) உயருவதற்குரிய வழி வகைகள் உட்படுத்தப்பட்ட முதலீட்டுத் தேர்வு முறைதான் எல்லா வகையிலும் உகந்ததாக இருக்க முடியும் பொருளாதாரம் வளர்ச்சி காணும் பொருட்டு திட்ட மிடப்பட்ட முதலீட்டுக் கொள்கை மேற் கொள்ளப்பட வேண்டும். அவ்வாறு அமையப் பெறுகின்ற கொள்கைக்கு அடிப் படையாகச் சில அம்சங்கள் பொருந்தி யிருக்க வேண்டும். அவையாவன :

(i) மூலதனத்தின் உற்பத்தித் திறன் உயர்த்தப்பட்ட நிலையில் நடப்பு உற்பத்தி அளவும்உயர வேண்டும் என்ற கொள்கைகளுக்கு ஆதாரமாக அமையும் வண்ணம் முதலீடுகள் செய்யப்பட வேண்டும்.

(ii) தொழில் நுட்பத் திறனின் மட்டத்திற்கு (Technological efficiency level) எவ்விதச் சீர்குலைவும் விளைவிக்காமல் உழைப்பின் வேலை வாய்ப்பைப் பெறுமாறு முதலீட்டு நடவடிக்கைகள் அமைந் திருக்க வேண்டும்.

(iii) சாதகமான அயல் நாட்டுக் கொடுக்கல் நிலையை (Balance of payments) அடையும் பொருட்டு ஏற்றுமதிப் பண்டங் களின் அளவினை உயர்த்த வல்ல வகையில் முதலீடுகள் விளங்க வேண்டும்.

(iv) மக்களனைவருக்கும் பயன் படும் முறையில் சாலை போக்குவரத்துத் தொடர்பு வசதிகள், மின்சாரம் போன்ற துறைகளில் முன்னேற்றம் காணும் வகையில் முதலீட்டுக் கொள்கை அமைய வேண்டும்.

(v) பேரளவுத் தொழிலைச் சார்ந்த புறச் சிக்கன நலன்களாகிய, திறன் மிக்க உழைப்பு, சிறப்புத் தேர்ச்சி நவீன உற்பத்தி முறைகள் போன்ற தொழில் சீரமைப்பு இனங்கள் பலவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு முதலீடு செய்யப்பட வேண்டும்.

இவற்றை அடிப்படையாகக் கொண்டு முதலீட்டுத் தேர்வு முறை நிர்ணயிக்கப்பட்ட வுடன் அடுத்து தொழில் நுட்ப முறைகளில் அதிக பயன் தருகின்ற ஏதேனும் ஒன்றைத் தேர்ந் தெடுக்க வேண்டும். பெரும்பாலும் உழைப்புத் தீவிரமுடைய

கொள்கையாகவோ (Labour incentive policy) மூலதனத் தீவிர முடைய கொள்கையாகவோ (Capital intensive policy) தானிருக்கும். வேளாண்மையை ஆதாரமாகக் கொண்டு விளங்கு வளர்ச்சியுறும் நாடுகளில் அமித உழைப்பும், பற்றுக் குறைவுடைய மூலதனமும் இணைந்தே காணப்படுகையில் 'உழைப்புத் தீவிரக் கொள்கைதான்' மிக உகந்ததாக விளங்கும். வேளாண்மை மற்றும் நுகர்வுப் பண்டங்கள் உற்பத்தி செய்கின்ற தொழில் துறை களில் உழைப்புத் தீவிர முறையும், ஆதார கனரக தொழில்களுக்கு 'மூலதனத் தீவிர' முறையும் மேற் கொள்ளுவது சிறந்ததாக இருக்கும். இவ்வாறு இவ்விரண்டு நுட்ப முறைகளையும் இரண்டறக் கலந்த நிலையில் முதலீட்டுக் கொள்கையானது அமைந்திருக்க வேண்டும்,

காலக் கெடுவை முடிவு செய்வதும் சற்றுக் கடினமே. நுகர்வுப் பண்டங்களின் தொழில்களில் முதலீடு செய்வதனால், செலுத்தப் பட்ட குறைந்த அளவு மூலதனம் உடனடியாகத் திரும்பி கிடைத்து விடுகின்றது. ஆனால் நுகர்வின் அளவைக் கணிசமாகக் குறைத்து, ஆக்கத்தைப் பெருக்க உதவி புரிகின்ற மூலதனப் பண்டங்களைத் தாம் (Capital or producer's goods) அதிக அளவில் உற்பத்தி செய்ய வேண்டு மென்பது பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகள் அறிந்து கொள்ள வேண்டிய அடிப்படை உண்மையாகும். உற்பத்திப் பண்டங்களின் அளவினைப் பெருக்க முயலுகையில் அத்துறையில் செலுத்தப்படுகின்ற முதலானது காலந்தாழ்ந்த நிலையில்தான் திரும்பக் கிடைக்கின்றது. மேலும் அத்தகைய மூலதனம் கணிசமானச் தொகையைக் கொண்டதாகவும், அம் முதலீட்டினால் இலாபம் மிகக் குறைந்த மட்டத்தில் இருப்பதாகவும் தான் அமைகின்றது.

துரிதமான முன்னேற்றத்தைப் பொருளாதாரம் கண்டிட வேண்டு மென்ற தீவீர முயற்சியில் மிகக் குறைந்த காலக் கெடுவினுள் கணிசமான முதலீட்டைக் கொண்ட கனரகத் தொழில்களைத் தோற்றுவித்து உற்பத்திப் பண்டங்களின் அளவினைப் பெருக்கிட வேண்டும். ஆயினும் இதனைச் சாதிப்பது அவ்வளவு விரைவில் முடியாது என்பதனையும் சுட்டிக் காட்டித் தான் ஆக வேண்டும். ஆகவே முதலீட்டின் பருமம் மற்றும் காலக் கெடு ஆகிய இவ்விரண்டும் ஒருங்கிணைந்த முறையில் கொள்கை யொன்று வகுக்கப்படுமே யானால் அதுவே மிகப் பொருத்தமான தாக யிருக்கும்.

# 2. பொருளாதார வளர்ச்சியின் சில மாதிரிப் படிவங்கள்

## (A FEW ECONOMIC GROWTH MODELS)

முந்திய அத்தியாயத்தில் நாம் முன்னேற்றமடையாத நாடுகளின் சில சிறப்பியல்புகளைப் பற்றி அறிந்துகொண்டோம். பொருளாதார முன்னேற்றம் என்பது ஒரு தாழ்ந்த நிலையிலிருந்து நாம் விரும்பிய ஓர் உயர்தர நிலையை அடைவதாகும். வளர்ச்சியுறும் நாடுகள், உற்பத்தித் திறன், வருமானம், சேமிப்பு, முதலாக்கம் போன்றவற்றுள் போதாநிலை கொண்டு நச்சுச் சுழலில் சிக்கித் தவிக்கின்றன. இத்தகைய நிலையிலிருந்து விடுபடுவதற்காக சில 'மாதிரிப் படிவங்கள்' (Models) அவ்வக் காலப் பொருளாதார நிபுணர்களால், அவ்வக் காலச் சூழ்நிலைக்குத் தகுந்தபடி வகுக்கப்பட்டன. மேலும், இன்றையப் பொருளாதாரத்தின் முக்கியப் பிரச்சினை யாதெனில் வளர்ச்சியுறும் நாட்டினை எவ்வாறு முன்னேற்றமடையச் செய்வது என்பதாகும். எனவே, நாம் இந்த அத்தியாயத்தில் ஒரு நாடு முன்னேற்றமடைவதற்கு இன்றியமையாதவை எவை என்பதைச் சில பொருளாதார நிபுணர்களின் மாதிரிப் படிவங்களைக் கொண்டு ஆராய்வோம்.

### மாதிரிப் படிவங்கள், இலக்கண விளக்கங்கள்

பொருளாதார வளர்ச்சிக்கு மாதிரிப் படிவங்கள் என்பவை, ஒரு வளர்ச்சி பெற்றுவரும் நாடு எவ்வாறு முன்னேற்றப் பாதையில் செல்ல வேண்டும் என்பதைத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. அம் முன்னேற்றப் பாதைக்கு எவ்வாறு செல்ல வேண்டும் என்பதையும், எவ்வெத் தொழிலை முதலில் ஊக்குவிக்க வேண்டும் என்பதையும், எவ்வெத் துறையை முன்னேற்ற மடையச் செய்யவேண்டும் என்பதையும் அதனால் ஏற்படும் பின்விளைவுகளையும் நமக்குக் கண்கூடாகக் காட்டி நிற்கின்றன. இவை ஒரு

வளர்ச்சியுறும் நாடு எவ்வாறு தன்னைச் சூழ்ந்துள்ள நச்சுச் சுழலி லிருந்து விடுபட வேண்டும் என்பதை விளக்குகின்றன.

இந்தப் பொருளாதார மாதிரிப் படிவங்களை, அவ்வக் காலச் சூழ்நிலைக்கு ஏற்ப பற்பல நிபுணர்கள், சில மாறுதல்களைச் செய்து வெளியிட்டுள்ளனர். இந்த மாதிரிப் படிவங்களை அடிப் படையாகக் கொண்டு ஒரு நாடு முன்னேற்ற மடைந்துள்ளதா இல்லையா என்பதை நாம் தீர்மானிக்கலாம். அவ்வாறு முன் னேற்றமடையாமல் பின்தங்கி யிருப்பின் அம் முன்னேற்றத்தைத் தடை செய்கின்ற முக்கியமான இடையூறுகள் யாவை என்பதை அவை எடுத்துக் கூறுகின்றன. சுருங்கக்கூறின், இம் மாதிரிப் படிவமானது ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள முக்கியமான மாறுதல்களை எடுத்துக் கூறுகின்றன. அதுபோன்று முன்னேற்றத்திற்குச் சாதகமான, பாதகமான நிலைகளையும் விளக்கு கின்றன. அத்துடன் ஒரு நாடு முன்னேற்றப் பாதையில் அடி எடுத்து வைத்ததும் அது மேலும் எடுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளையும் சிறப்பாக இயம்புகின்றன.

### முக்கியமான சில மாதிரிப் படிவங்கள்

பொருளாதார வளர்ச்சிக் குரிய மாதிரிப் படிவமானது ஆடம் ஸ்மித் (Adam Smith) காலத்திலேயே தோன்றியுள்ளது. ஆடம் ஸ்மித், ரிக்கார்டோ (Ricardo), மால்தஸ் (Malthus) போன்ற தொன்மைப் பொருளாதாரக் கருத்தினர் (Classical economists) அக் காலத்தே இங்கிலாந்தில் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சி யினால் ஈர்க்கப்பட்டு, தங்களுக்கே உரிய முறையில் மாதிரிப் படிவ மொன்றைத் தந்துள்ளனர். அதன் அடிப்படையில்தான் கார்ல் மார்க்ஸ் (Karl marx) முதலாளித்துவத்தின் அழிவுப் பாதையைத் தன் மாதிரிப் படிவத்தில் விளக்கி யுள்ளார். கார்ல்மார்க்ஸின் மாதிரிப் படிவத்திற்கு எதிராகத் தோன்றியதுதான் ஷும்பீட்டரின் (Schumpeter) மாதிரிப் படிவம். பின்னர் ஹெராட்-டோமார், (Harrod-Domar) ஜோன் ராபின்சன் (Joan Robinson), கால்டர் (Kaldor) போன்ற புதுச் சம்பிரதாயக் கருத்துடையோர் (Neo classical economists) தத்தம் மாதிரிப் படிவங்களைத் தந்துள்ளனர்.

இம் மாதிரிப் படிவங்களின் முக்கியமான கருத்துக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

(i) சேமிப்பும், முதல் திரட்சியும்;

(ii) தொழில் நுணுக்கத்தின் முன்னேற்றம்;

(iii) தொழில் முயல்வோரின் (Entrepreneur) முக்கிய பங்கு ;

(iv) தேவையும், விரிவான அங்காடியும்;

(v) பொருளாதார, சமூக, மத அமைப்புக்களில் மாறுதல்கள்.

இனி நாம் ஒவ்வொரு மாதிரிப் படிவங்களின் அமைப்பினையும் விவரமாகப் படிப்போம்.

**(அ) தொன்மைப் பொருளாதாரக் கருத்தினரின் மாதிரிப் படிவம். (Classical model)**

தொன்மைப் பொருளாதாரக் கருத்தினரில் சிறந்தவராகக் கருதப் படுபவர் ஆடம் ஸ்மித் ஆவார். அதன் பின், அவருடைய கருத்தில் மால்தஸ், ரிக்கார்டோ முதலியோர் ஒரு சில மாறுதல்கள் செய்தனர்.

தொன்மைப் பொருளாதாரத் துறையினரின் முக்கியமான கருத்துக்களாவன :

(i) உழைப்பளவை மதிப்புக் கோட்பாடு
(Labour Theory of Value)

(ii) குறைந்து செல் விளைவு விதி
(Law of Diminishing returns)

(iii) மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாடு
(Malthusian Theory of Population)

(iv) ரிக்கார்டோவின் வாரக் கோட்பாடு
(Ricardian Theory of Rent)

இவை நான்கும் தொன்மைப் பொருளாதாரத் துறையினரின் கருத்துக்களில் நான்கு முக்கிய தூண்களாகக் கொள்ளப் படுகின்றன. இக் கருத்துக்களை ஆடம் ஸ்மித், ரிக்கார்டோ முதலியோரின் கருத்துக்கள் மூலம் ஆய்வோம்.

**ஆடம் ஸ்மித்தின் கருத்து**

'பொருளாதாரத்தின் தந்தை' எனக் கருதப்படும் ஆடம் ஸ்மித் நான்குமுக்கியமான கருத்துக்களைக் கூறுகின்றார். அவை வருமாறு :

(i) உழைப்பளவை மதிப்பு

(ii) 'வேலைப்பகுப்பும்,' (Division of Labour), செல்வப் பெருக்கமும்.

(iii) மூலதனத் திரட்சி (Capital Formation)

(iv) இலாப வீதமும், 'பன்னெடுங்காலத் தேக்கமும்' (Secular stagnation)

இவைகள் பற்றி இங்கு தெளிவாக ஆராயலாம்.

### (i) உழைப் பளவை மதிப்பு

'செல்வத்தின் தோற்றுவாய் உழைப்பு,' எனக் கருதுகின்றார் ஆடம் ஸ்மித். எனவே, உழைப்பினை அடிப்படையாகக் கொண்டு மட்டுமே பொருளை மதிப்பீடு செய்ய வேண்டும். ஒரு பொருளின் மதிப்புக்கு உழைப்பு என்ற உற்பத்திக் காரணி மட்டுமே அதிக முக்கியத்துவம் பெறுகின்றது. இதனை ஒட்டி அமைந்ததுதான் அவரது உழைப் பளவை மதிப்புக் கோட்பாடு. இதனை ஒரு சான்றால் விளக்கலாம். 'A' என்ற பொருளைச் செய்வதற்கு ஒரு நாள் உழைப்பும், 'B' என்ற மற்றொரு பொருளைச் செய்வதற்கு இரண்டு நாள் உழைப்பும் தேவைப்படுகின்றது. அவ்விரு பொருள் களிலும் ஆளப்பட்ட உழைப்பளவைக் கொண்டு, பொருள்களின் பரிவர்த்தனை மதிப்பைக் (Exchange value) கணித்தால், அந்த விகிதமானது 2A : B என்றாகிறது. இவ்வாறாக பொருள்களின் மதிப்பைக் கணக்கிட உழைப்பளவை மட்டுமே இன்றியமையாதது எனக் கூறித் தம் கோட்பாட்டை நிலைநிறுத்துகின்றார்.

### (ii) வேலைப் பகுப்பும், செல்வப் பெருக்கமும்

ஆடம் ஸ்மித்தின் கருத்தெல்லாம் செல்வத்தைப் பெருக்குவது பற்றியே சார்ந்திருந்தது என்பதைப் பொருளாதாரம் கற்றோர் அனைவரும் அறிவர். இதற்கு அவரது நூலின் தலைப்பே தக்க சான்று. அவரது கூற்றுப்படி நாட்டில் செல்வம் பெருக வேண்டுமானால் உற்பத்தி பெருக வேண்டும். அவ் வுற்பத்திக்குத் துணையாக இருப்பது வேலைப் பகுப்பு. எனவேதான் வேலைப் பகுப்பின் பல்வேறு சிறப் பியல்புகளைச் சிறப்பாகக் கூறி, அவ்வகை வேலைப் பகுப்பால் உழைப்பாளியின் திறனும், நாட்டின் மொத்த உற்பத்தி அளவும் அதிகரிக்கின்றன என்று குறிப்பிடுகின்றார்.

### (iii) மூலதனத் திரட்சி

ஒரு நாட்டின் செல்வம் அந் நாட்டின் உற்பத்தியைப் பொருத்து அமைகின்றது உற்பத்தியோ வேலைப் பகுப்பையும், விரிவான அங்காடியையும் சார்ந்திருக்கின்றது. ஆனால் வணிகக் காப்பும், போதா முதல் பெருக்கமும் அங்காடியின் அளவைக் கட்டுப்படுத்துகின்றன. ஒவ்வொரு நாடும் வணிகக் காப்பைக் கடைப்பிடித்தால் ஒரு பொருளுக்கான அங்காடி அளவு

விரிவாகாது. அதுவே போன்று மூலதனத் திரட்சி குறைவாகக் காணப்பட்டாலும் அங்காடி விரிவாகாது. எனவே மூலதனத் திரட்சிப் பெருக்கம் இருந்தால்தான் தொழில் நுட்ப அறிவு முன் னேற்ற மடையும். ஆனுல் தொழில் மூலதனத் திரட்சியோ முதலீட்டைச் சார்ந்துள்ளது; முதலீடோ இலாபத்தின் எதிர்பார்ப் பைச் சார்ந் துள்ளது. இலாப வாய்ப்பு இல்லையேல் மூலதன முடையோர் முதலீடு செய்ய முன்வரரார்.

**(iv) இலாபவீதமும், பன்னெடுங்காலத் தேக்கமும்**

முதலீடு பெருகி, உற்பத்தியும் செல்வமும் பெருக வேண்டு மெனில் இலாபம் அவசியம் என்பதை முன் பகுதியில் கண்டோம். ஆனுல் காலப்போக்கில் இலாப வீதமானது குறைந்து வரும் எனக் கூறுகின்ருர். இதற்குக் காரணம் உற்பத்தியாளர்க ளிடையே காணப்படும் சந்தை பிடிக்கும் போட்டி மனப்பான்மையே ஆகும். உற்பத்தியாளரின் இலாபம் குறைந்தால் அவர்கள் மூலதனம் திரட்ட முன்வர மாட்டார்கள். இதனுல் மூலதனப் பற்ருக்குறை ஏற்பட்டு விடுகிறது. மூலதனப் பற்ருக்குறை யால் உழைப்பாளர்களுக்குக் கூலி கிட்டாது; தொழில்நுட்பத் துறையிலோ எவ்வித முன்னேற்றமும் காணப்பட மாட்டாது. இந் நிலை ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் ஏற்படும்பொழுது, அப் பொருளாதாரமானது 'பன்னெடுங்காலத் தேக்கத்தை' அடை கின்றது. அத்தேக்க நிலையில் மூலதனத் திரட்சியோ, தொழில் நுட்ப வளர்ச்சியோ காணப்படாது. இதன் நிகர விளைவு பொரு ளாதார வளாச்சியின் மொத்தத்தில் பொருளாதார வளர்ச்சி வீதம் (Growth rate of the Economy) பூஜ்யமாக இருக்கும்.

எனவே, ஆடம் ஸ்மித்தின் கருத்துப்படி ஒரு நாட்டின் பொரு ளாதார வளர்ச்சிக்கு மூலதனத் திரட்சியும், தொழில்நுட்ப வளர்ச்சியும் இன்றியமையாதன என்பதை உணரலாம்.

**ரிக்கார்டோவின் கருத்து :**

இலாபம் குறைவதற்கான காரணம் போட்டி மனப்பான்மை என்று ஆடம் ஸ்மித் கூறியதை இதுகாறும் அறிந்தோம். ஆனுல் ரிக்கார்டோவோ, இலாபம் குறைவதற்கான காரணம் போட்டி மனப்பான்மை அல்ல; ஆனுல் கூலி வீதமும் வாரமும் அதிகரிப் பதே என்று கூறுகின்ருர். கூலியும் வாரமும் அதிகரித்தால் இலாப வீதம் எவ்வாறு குறையும் என்பதை ரிக்கார்டோ கீழ்வருமாறு விளக்குகின்ருர்.

**கூலி வீதம்**

தொன்மைப் பொருளாதாரக் கருத்தினரின் கூலிக் கோட்பாடு 'பிழைப்பு மட்டக் கூலிக் கோட்பாடு' (Subsistence level of

wages) அல்லது 'கூலி நிர்ணய இரும்பு விதி' (Iron law of wages) என்று கூறப்படும். அக்கோட்பாட்டின்படி தொழிலாளர்களுக்கு வழங்கப்படும் கூலியானது பொதுவாக அவர்களுடைய 'பிழைப்பு மட்டத்திற்கு'ச் (Subsistence level) சமமாகவே இருக்கும். இப் பிழைப்பு மட்டத்திற்கு மேல் கூலி உயரும்பொழுது மக்கள்தொகை பெருகி, 'உழைப்பின் அளிப்பு' (Labour Supply) அதிகரிக்கின்றது. உழைப்பின் அளிப்பு அதிகரிக்கின்றபடியால் தொழிலாளர்களுக்கிடையே போட்டி ஏற்பட்டு கூலியானது பிழைப்பு மட்டத்திற்குக் கீழே சென்றால் போதாக் கூலியால் மக்கள் வறுமையில் உழன்று பலர் மடிகின்றனர். மக்கள் எண்ணிக்கை குறைவதால் அளிப்போ குறைகின்றது உழைப்பின் தேவையோ கூடுகின்றது. எனவே, கூலியானது மீண்டும் பிழைப்பு மட்டத்தை அடைகின்றது.

**வாரம் (Rent) அதிகரித்தல்**

வாரம் அதிகரிப்பதைப் பற்றி விளக்க மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாடும் பிரிதொரு பொருளாதார விதியாகிய குறைந்து செல் விளைவு விதியும், ரிக்கார்டோவின் வாரக் கோட்பாட்டிற்குத் துணை நிற்கின்றன. மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாட்டின்படி மக்கள் தொகை மதிப்பெண் விகிதத்தில் (Geometric ratio) பெருகிச் செல்கின்றது. மக்கள் தொகை மேன் மேலும் பெருக வளம் குன்றிய நிலங்களும் சாகுபடியில் ஆளப்படுகின்றன. இதனால் வேளாண்மையின் உற்பத்திச் செலவை அதிகரித்து, வேளாண்மைப் பொருள்களின் விலை அதிகரிக்கின்றது. இவ் விலை உயர்வால் உழைப்பாளிகளின் பிழைப்பு மட்டமும் அதற் கொப்ப உயருகின்றது. பிழைப்புமட்ட உயர்வால் கூலி உயர்வு கேட்பது இயல்பே! இதனால் கூலி அதிகரித்தால் உற்பத்தியாளரின் இலாபம் குறையும். இவ்வாறாக, ரிக்கார்டோ கருத்துப்படி வாரம் அதிகரிப்பதாலும் இலாபம் குறைகிறது என்பதை உணரலாம். இலாபம் குறைவதற்கு இவைகளே காரணங்கள்; ஆடம் ஸ்மித் கூறுவதுபடி போட்டி மனப்பான்மை அல்ல என்கிறார் ரிக்கார்டோ.

மேலும், ரிக்கார்டோவின் கருத்துப்படி நிலக்கிழாருக்கும், தொழில் அதிபருக்கு மிடையே வகுப்பு மோதல் ஏற்படுகின்றது. இதற்குக் காரணம் வருமாறு :

உழைப்பாளிகளின் கூலி உயர்ந்தாலும்கூட அவர்களால் சேமிக்க இயலாது. அதிகரித்த கூலியானது பிழைப்பு மட்ட

உயர்வால் ஈடுசெய்யப்பட்டுவிடுகின்றது. ஒருபுறம் வேளாண்மைப் பொருள்களின் விலை உயர்வால் நிழக்கிழார்களின் வாரம் உயர்ந்துகொண்டே செல்கின்றது; மற்றொருபுறம் அதிகரித்த கூலி வீதத்தால் தொழிலதிபர்களின் இலாப வீதம் குறைந்துகொண்டே செல்கின்றது. இதன் காரணமாக அவ்விருவரிடையே வகுப்பு மோதல் எழுகின்றது.

தொழிலதிபர்களின் இலாபம் குறைவதால் மேற்கொண்டு முதலீடு செய்ய அவர்கள் தயங்குவார்கள். இதனால் முதலீடு வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது. இப்பாதிப்பால் மேலும் சில விளைவுகள் பொருளாதாரத்தில் ஏற்படும். சான்றாக முதலீடு போதாமையால் கூலி நிலை உயராது; தொழில் நுட்ப ஆற்றல் வளர்ச்சி அடையாது; இவற்றின் காரணமாக அப் பொருளாதாரமானது 'பன்னெடுங் காலத் தேக்கத்தை,' அடைகின்றது.

### உற்பத்திச் சார்பு (Production function)

காலப்போக்கில் உழைப்பு, மூலதனத் திரட்சி, இலாப வீதம் ஆகியவற்றுள் ஏற்படும் மாறுதல்களையும், அவை சார்ந்துள்ள காரணிகளையும் மேலே கண்டோம். அத்தகைய மாறுதல்களையும், காரணிகளையுமே உற்பத்திச் சார்பு என்பர். அவ்வுற்பத்திச் சார்பினை ஒரு சில சமன்பாடுகளால் விளக்கலாம்.

202855

$O = f(LKQT)$.........I

இங்கு,

O என்பது = மொத்த உற்பத்தியையும்

L என்பது = உழைப்பின் அளவையும்

K என்பது = நிலமும் (தெரிந்த) வளப் பொருள்களையும்

Q என்பது = முதல் இருப்பின் அளவையும்

T என்பது=தொழில் நுணுக்க அறிவையும்

f என்பது=சார்பையும் குறிக்கும்.

எனவே, மொத்த உற்பத்தியானது L,K,Q,T ஆகிய காரணிகளைச் சார்ந்திருக்கும். இக்காரணிகள் அதிகமானால் உற்பத்தியும் அதிகமாகும்.

T என்ற தொழில் நுணுக்கமானது, முதலீடாகிய I–ஐச் சார்ந்துள்ளது. அதாவது, முதலீடு மிகுதியானுல் தொழில் நுணுக்கமும் வளரும்.

$I = t\ (I) \ldots\ldots (ii)$

முதலீடு இலாப விகிதத்தைச் சார்ந்திருக்கும்.

$i = l\ (R) \ldots\ldots (iii)$

R=இலாப விகிதம்

இலாப வீதம் மக்கள் தொகையையும், தொழில் நுணுக்கத்தையும் சார்ந்துள்ளது.

$R = r\ (L, T) \ldots\ldots (iv)$

மக்கள் பெருக்கம் கூலியை அனுசரித்து பின்வருமாறு அமையும்:

$L = \ (W) \ldots\ldots\ldots (v)$

W= கூலி

கூலி மூலதனத்தைச் சார்ந்துள்ளது.

$W = w\ (I) \ldots\ldots\ldots (vi)$

ஆகையால் மொத்த உற்பத்தி இலாபத்திற்கும் கூலிக்கும் சமமாகும்.

$\therefore O = R + W \ldots\ldots\ldots (vii)$

திறனாய்வு

முதலாவதாக பொருளின் மதிப்பு உழைப்பளவை மட்டும் கொண்டு மதிப்பிடப்படுவதில்லை. வேறு சில உற்பத்திக் காரணிகளான நிலம், முதல், அமைப்பு முதலியவற்றையும் சார்ந்துள்ளது.

இரண்டாவதாக தொழில் நுணுக்க அறிவில் ஏற்பட்டுள்ள அற்புத சாதனை குறைந்து செல்விளைவு விதியின் சக்தியை இழக்கச் செய்கிறது.

மூன்றாவதாக மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாடு ஒரு சில வளர்ச்சியுறும் நாடுகளுக்குப் பொருந்தினாலும் நன்கு வளர்ச்சி பெற்ற நாடுகளுக்குப் பொருந்தாது.

நான்காவதாக தொழிலாளர்களின் கூலி பிழைப்பு மட்டத்தை விட அதிகமாக உள்ளது. அவர்களின் வாழ்க்கைத்தரமும் முன்னேறி யுள்ளது.

**தொன்மைப் பொருளாதாரக் கருத்தினரின் மாதிரிப் படிவமும் இந்தியாவும்**

தொன்மைப் பொருளாதாரக் கருத்தினர், சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் இங்கிலாந்திலும், மேற்கு ஐரோப்பாவிலும் இருந்த சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தனர். இன்று அவர்களது கருத்துக்கள் பல பொய்யாகி விட்டன.

இந்தியாவை எடுத்துக் கொண்டால் மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாட்டினைத் தவிர, வேறு எந்தக் கோட்பாடும் பொருத்தமானதல்ல. குறைந்து செல்விளைவு விதிக்குப் பதில் விவசாயத்தில் பசுமைப் புரட்சியினைக் கண்கூடாகக் காண்கின்றோம். தொழில் நுணுக்கத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் நமது நாட்டினை முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்கின்றது.

தவிர அவர்கள் கூறிய பன்னெடுங்காலத் தேக்கம் என்ற சூழ்நிலையோ முன்னேறிய நாடுகளில் ஏற்படவில்லை. தொழிலாளர்களின் கூலி வீதம் பிழைப்பு மட்டத்திற்கு மேல் இருந்து வருகின்றது. தொழிலாளர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும் சுமுகமான உறவு இருப்பது மட்டும் அல்லாமல் தொழிலாளர்களுடைய வாழ்க்கைத் தரமும் முன்னேறி யுள்ளது.

ஆனால், அவர்களது மாதிரிப் படிவங்களிலிருந்து நாம் முக்கியமாக அறிய வேண்டுவது என்னவென்றால், முதல் பெருக்கமும் தொழில் துறையில் முன்னேற்றம் அடைதலும் முக்கியம் என்பது ஆகும். ஒரு நாடு வெகு விரைவில் முன்னேற்றம் அடைவதற்கு இவை இரண்டும் இன்றியமையாதன என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன.

**(ஆ) கார்ல் மார்க்ஸின் மாதிரிப் படிவம்**

கார்ல் மார்க்ஸின் சீடர்கள் இன்று அவரை ஒரு பெரிய மதகுரு போலவும், அவரது கருத்துக்களை ஒரு மதமாகவும் கருதுகின்றனர்கள். அவரது கருத்துக்களைப் பல கோடிக்கணக்கான மக்கள் போற்றுகின்றனர், பல கோடிக்கணக்கான மக்கள் தூற்றவும் செய்கின்றனர். அவரது முக்கிய படைப்பான "தாஸ் காபிடல்" **(Das Kapital)** இன்றும் அவரது ஞாபகச் சின்னமாக விளங்கி வருகின்றது. அவருடைய கருத்துக்கள் ருஷியா, சீனா போன்ற பல கம்யூனிச நாடுகளில் பெரிதும் போற்றப்படுகின்றன. முதலாளித்துவ தத்துவத்தில் ஊறியுள்ள அமெரிக்கா, இங்கிலாந்து

போன்ற நாடுகள் மார்க்ஸீய சிந்தனையைக் கண்டிக்கின்றன. இவ்வாறு போற்றுதலுக்கும், தூற்றுதலுக்கும் உட்பட்ட அன்னரது கருத்துக்களை நாம் இவண் காண்போம்.

மார்க்ஸ் தன்னுடைய மாதிரிப் படிவத்தின் அடிப்படைக் கருத்துக்களைத் தொன்மைப் பொருளாதாரத் துறையினரிடமிருந்து பெற்றுக் கொள்கிறார். "இதுகாறும் உள்ள சமுதாயத்தின் வரலாறு வகுப்பு மோதலின் வரலாறே,' என்று கூறுகின்றார். அவரது கூற்றின்படி இவ்வுலகில் பண்டைக் காலம் தொட்டு இருப்போர், இல்லாதோரென (Haves and Have nots) இரண்டு வகுப்புகளே உள்ளன. இவ்விரு வகுப்பினருக்கிடையே தொன்று காலந் தொட்டு மோதல்கள் இருந்த வண்ணம் உள்ளன.

நவீன கருத்துக்கள் அல்லது புதுமைகள் புகும்பொழுது பழமைக்கும் புதுமைக்கும் போராட்டம் ஏற்படுகின்றது இவ்வாறு பண்டைக் காலந்தொட்டே பொது உடமைக் கருத்தானது கொஞ்சம் கொஞ்சமாக நிலப்பண்ணை முறையிலும் (Feudalism) பின்பு முதலாளித்துவ முறையிலுமாக மாறி மாறி வந்துள்ளது,

மார்க்ஸின் மாதிரிப் படிவத்தை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

(i) உபரி மதிப்பு (Surplus Value)
(ii) முதல் பெருக்கம் (Accumulation of Capital)
(iii) முதலாளித்துவத்தின் அழிவு (Decay of Capitalism)

(i) உபரி மதிப்பு

பண்டைப் பொருளாதாரத் துறையினரின் கருத்துகளான உழைப்பளவை மதிப்புக் கோட்பாடு, பிழைப்பு மட்டக் கூலிக் கோட்பாடு இவைகளின் உதவி கொண்டு தனது உபரி மதிப்புக் கோட்பாட்டினை விளக்குகின்றார். ஒரு பொருளின் மதிப்பை நிர்ணயிக்கும் பொழுது, அதனை ஆக்குவதற்கு உண்டான உழைப்பின் மதிப்பே ஈண்டும் எடுத்துக் கொள்ளப்படுகின்றது. ஆனல் அப் பொருளைச் செய்த தொழிலாளிக்கு அப் பொருளைச் செய்வதற்குண்டான உழைப்பின் மதிப்பை கூலியாகக் கொடுக்காமல் பிழைப்பு மட்டத்திற்கே கூலி கொடுக்கப் படுகின்றது. எனவே உபரி மதிப்பு என்பது உழைப்பளவை மதிப்புக்கும் பிழைப்பு மட்டக் கூலிக்கும் உள்ள வேறுபாடாகும்

உதாரணமாக 'A' என்ற பொருளைச் செய்வதற்கு எட்டுமணி நேரம் ஆகின்றது. அப்பொருளின் மதிப்பு எட்டுமணி நேர

உழைப்பைக் கொண்டு கணக்கிடப்படுகின்றது. ஆனல் அதே சமயம் தொழிலாளிக்கு ஆறுமணி நேர உழைப்பிற்கு மட்டுமே கூலி கிடைக்கின்றது. இந்த ஆறுமணி நேரக் கூலி பிழைப்பு மட்டக் கூலிக்குச் சமமாக இருக்குர். மீதி உள்ள இரண்டுமணி நேர உழைப்பே உபரி மதிப்பாகும். இது இலாபம் என்ற பெயரில் முதலாளியைச் சென் றடைகின்றது.

இந்த உபரி மதிப்பைத் தொழிலதிபர்கள் கீழ்க் கண்ட வழி களில் அதிகரிக்கலாம்,

(1) வேலை நேரத்தை அதிகரிக்கலாம்.

(2) பிழைப்பு மட்டக் கூலியைக் குறைக்கலாம்.

(3) இயந்திரங்களை உட்புகுத்தித் தொழிலாளியின் உற் பத்தித் திறனை அதிகரிக்கலாம். அல்லது மேற்பார்வையினைத் தீவிரப்படுத்தி உற்பத்தியைப் பெருக்கலாம்.

மார்க்ஸ் முதலை மாருத முதல் (Constant Capital) என்றும், மாறும் முதல் (Valrable Capital) என்றும் பிரிக்கின்ருர். மாருத முதல் என்பது தொழிற்சாலை, மூலப்பொருள்கள் ஆகியவற்றுள் ஆளப்பட்ட முதலினைக் குறிக்கும். மாறும் முதல் என்பது தொழி லாளர்களுக்குக் கொடுக்கும் கூலியைக் குறிக்கும். முதலில் கூறிய உபரி மதிப்புக்கும், மாறும் முதலுக்கும் உள்ள விகிதமே சுரண்டல் விகிதம் (Ratio of Exploitation) எனக் கூறப்படும். இதை உருவக வடிவில் கூறும் போது,

சுரண்டல் விகிதம் $= \frac{S}{V}$

S = உபரி மதிப்பு

V = மாறும் முதல்

இலாப வீதம் என்பது உபரி மதிப்பிற்கும் மொத்த முதலுக்கும் உள்ள வீதமாகும். இதை உருவக வடிவில் கூறும் பொழுது,

$$r = \frac{S}{C+V}$$

r = இலாப வீதம் (Rate of Profit)

C = மாருத முதல்

மேற்கூறிய சமன்பாட்டிலிருந்து, இலாப வீதத்திற்கும் உபரி மதிப்பிற்கும் நேரடித் தொடர்பு இருப்பதும் (Direct relationship) இலாப வீதற்திற்கும் மொத்த முதலுக்கும் தலைகீழ் தொடர்பு

(Inverse relationship) இருப்பதும் விளங்கும். அதாவது உபரி மதிப்பு உயர உயர இலாப வீதமும் உயருகின்றது. ஆனால் மொத்த முதல் கூடினால் இலாப வீதம் குறைகின்றது.

(ii) முதல் பெருக்கம்

முதலாளிகளின் முக்கிய நோக்கம் இலாபத்தைப் பெருக்க வேண்டும் என்பதே. ஆகவே, உபரி மதிப்பை உயர்த்துவதற்கு பல வழிகளைக் கடைப்பிடிக்கின்றார்கள். தொழில் நுணுக்கத்தைப் புகுத்தி மேலும் மேலும் பல இயந்திரங்களை உருவாக்குகின்றனர். இதனால் இரு விளைவுகள் ஏற்படுகின்றன.

(1) தொழிலாளிக்கு வேலை இல்லாமல் போய்விடுகின்றது.

(2) போட்டி மனப்பான்மை பெருகுவதால் சிறிய தொழிலதிபர்கள் பெரிய தொழிலதிபர்கள் முன் போட்டியில் எதிர்த்து நிற்க முடியாமல் தங்கள் தொழிற்சாலைகளை மூடுகின்றார்கள்.

(iii) முதலாளித்துவத்தின் அழிவு

இயந்திரங்களைப் புகுத்துவதால் தொழிலதிபர்களுக்கு முதலில் இலாபம் கிடைத்தாலும் பின்னர் குறைந்துவிடுகின்றது. ஏனென்றால் இயந்திரங்களைப் புகுத்தியதால் ஏராளமான தொழிலாளிகள் வேலையிலிருந்து நீக்கப் படுகிறார்கள். இவர்களை மார்க்ஸ் தொழில் துறை கையிருப்புப் படை (Industrial reserve army) என்று கூறுகின்றார். மேலும் சிறு தொழிலதிபர்கள் தங்கள் தொழிற்சாலைகளை மூடிவிடுவதால் அவர்களும் தொழில் துறை கையிருப்புப்படையில் சேருகின்றனர். இவ்வாறு உழைப்பின் அளிப்பு அதிகரிப்பதால் கூலி வீதம் குறைகின்றது; அதனால் மக்களிடையே வாங்கும் திறன் (Purchasing power) குறைகின்றது. மேலும், பெரிய தொழிலதிபர்கள் பொருள்களை அங்காடியில் அதிகமாகக் குவிக்கின்றார்கள். இவ்வாறு ஒரு புறம் வாங்கும் சக்தி குறைந்து மற்றொரு புறம் உற்பத்திப் பொருள்களின் அளிப்பு கூடுவதால் விலை வீழ்ச்சியடைகின்றது. விலை வீழ்ச்சியால் தொழிலதிபர்கள் உற்பத்தி அளவைக் குறைக்கின்றார்கள். இதனால் மேற்கொண்டு பல தொழிலாளிகள் வேலை இழக்கின்றனர். வேலை வாய்ப்பு குறைவதால் வாங்கும் சக்தி குன்றி விலை மீண்டும் வீழ்ச்சியடைகின்றது இறுதியில் பொருளாதார மந்தம் (Economic Depression) ஏற்படுகின்றது. மார்க்ஸ் கூற்றுப்படி முதலாளித்துவத்தில் பொருளாதார வீக்கமும், பொருளாதார மந்தமும் மாறி மாறி ஏற்படும். இம் மாற்றங்களால் பாதிக்கப் படுபவர்கள் தொழிலாளிகளே. ஆகவே, அவர்கள் இறுதியில் ஒன்றுசேர்ந்து புரட்சி மூலமாக முதலாளித்துவத்தை

முறியடித்து ஒரு வகுப்புப் பிரிவினையற்ற சமுதாயத்தை (Ciassless society) உருவாக்குகின்றனர், 'சுரண்டியவர்கள் சுரண்டப் படுவார்கள்,' என மார்க்ஸ் கூறுகின்றார்.

**திறனாய்வு**

மார்க்ஸின் மாதிரிப் படிவம் அவரது சீடர்களால் மறைமொழி யாகக் கருதப்படுகின்றது. ஆனால் அவரது எதிரிகளாலோ கடுமை யாகக் கண்டிக்கப்படுகின்றது.

இன்றையப் பொதுவுடைமை நாடுகள் மார்க்ஸ் கூறிய வழி யில் அமையவில்லை. மேலும் முதலாளித்துவ அமைப்பில் தொழில் நுணுக்க முன்னேற்றம் தொழிலாளர்களது கூலியைக் குறைக்கும் என்ற அவரது கருத்தைப் பொய்யாக்கிவிட்டது. இன்று நன்கு முன்னேறிய நாடுகளில் தொழிலாளிகளின் நிலை பன்மடங்கு முன்னேறியுள்ளது.

மேலும் தொழில் நுணுக்க முன்னேற்றம் தொழில் துறை கையிருப்புப் படையினை அதிகரிக்கும் என்ற அவரது கருத்தும் மறுக்கப்பட்டுவிட்டது. தொழில் நுணுக்கத்தில் முன்னேற்றம் கண்டுள்ளதால் வேலை வாய்ப்பு இன்று பெருகியுள்ளது.

மார்க்ஸின் உபரி மதிப்பு விதி கடுமையான தாக்குதலுக் குள்ளாகியுள்ளது. உழைக்காமல் பெற்ற பகுதியைச் சுரண்டல் என்று எங்ஙனம் கூற இயலும்? அது முதலாளி போட்ட பணத் திற்குப் பரிசு; நிலத்திற்கு வாரம்; எனவே, உபரி மதிப்பைச் சுரண்டல் எனக் கொள்ள முடியாது.

**மார்க்ஸின் மாதிரிப் படிவமும் இந்தியாவும்**

சோசலிச சமுதாயத்தை அடைய வேண்டுமென்பது நமது ஒரே குறிக்கோளாக இருந்தாலுங் கூட, மார்க்ஸ் கூறிய வழியில் அதைப் புரட்சி மூலமாக அடைய வேண்டும் என்று நாம் என்றுமே எண்ணியதில்லை. இன்று தொழிலாளர் நலம் பேண பல்வேறு வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. சுரண்டலைத் தவிர்ப்பதற்காக அரசு சட்ட திட்டங்கள் இயற்றுவதோடல்லாமல், அவ்வப் பொழுது முக்கியமான தொழில்களைத் தேசிய மயமாக்கி வருவது குறிப்பிடத் தக்கது. ஆகவே மார்க்ஸ் கூறிய வழியில் சோசலிச சமுதாயம் அமைக்கவேண்டிய அவசியமில்லை; அதனை ஜனநாயக ரீதியில் அடையலாம்.

(இ) ஷீம்பீட்டரின் மாதிரிப் படிவம் (Schumpeter's Model)

ஷீம்பீட்டர் தனது மாதிரிப் படிவத்தைத் தனது புத்தகமான 'பொருளாதார முன்னேற்றத்தின் கோட்பாட்'டில் (Theory of Economic Development 1911) தந்துள்ளார். மார்க்ஸின் கருத்துகளால் ஈர்க்கப்பட்டு அதற்கு எதிராகத் தன் மாதிரிப் படிவத்தை உருவாக்கினார். மார்க்ஸின் கூற்றுப்படி 'முதலாளித்துவத்தின் தோல்வியே சோசலிச சமுதாயம் அமைய வழிகோலும்' என்றார். மாறாக, ஷீம்பீட்டர் முதலாளித்துவத்தின் வெற்றியே சோசலிச சமுதாயத்தை நோக்கி இட்டுச் செல்லும் என்றார்.

ஷீம்பீட்டர் தனது மாதிரிப் படிவத்தில் தொழில் முயல்வோருக்கு முக்கிய பங்கு அளித்துள்ளார். இத்தொழில் முயல்வோரின் முக்கியமான கடமை உற்பத்திக் காரணிகளைக் கடனாகப் பெற்று உற்பத்தியை ஆரம்பிப்பதாகும். அத்தொழிலைப் பொருத்த மட்டில் முக்கியமான முடிவு எடுக்கின்ற உரிமை தொழில் முயல்வோருக்கே உண்டு. புதுமைகளைப் புகுத்தல் அவரது முக்கிய கடமையாகும்.

ஷீம்பீட்டர் முதலில் அசலன சமநிலைப் பொருளாதாரத்தை எடுத்துக் கொள்கின்றார். இந்நிலையில் இலாபமோ, முதலீடோ, வேலையின்மையோ இருப்பதில்லை. அவரது கூற்றுப்படி பொருளாதார முன்னேற்றம் என்பது தன்னிச்சையாக ஓர் ஒழுங்கான தொடர்பில்லாமல் (Automatic and discontinuons process) ஏற்படுவதாகும். ஏற்கெனவே உள்ள சமநிலையைக் கலைத்துப் புதியதொரு முன்னேற்றமான சமநிலையை ஏற்ப்டுத்துவதாகும்.

இத்தகைய தன்னிச்சையான, தொடர்ச்சியற்ற பொருளாதார முன்னேற்றத்தைக்கொண்டு வருபவர்கள் தொழில் முயல்வோர்கள். இவர்களின் முக்கிய பணி யாதெனில் வாய்ப்பு எப்பொழுது கிட்டும் என்று எதிர் நோக்கி இருந்து அது கிட்டும் பொழுது கைப்பற்றுவதாகும். அதற்காக அவர்கள் புதிய முறைகளைக் கண்டு பிடித்து அதனைக் கையாளுகின்றனர்.

புதிய முறைகள் கீழ்க்கண்ட வழிகளில் இருக்கலாம்:

(1) புதிய பொருளைப் புகுத்துதல்

(2) புதிய சிக்கனமான உற்பத்தி முறையைக் கையாளுதல்

(3) புதிய அங்காடியை ஏற்படுத்துதல்

(4) மூலப் பொருள்களைப் புதிய இடத்திலிருந்து பெறுதல்

தேக்கச் சமநிலையில் (Stationary equilibrium) உள்ள பொருளாதாரத்தைத் தொழில் முயல்வோர்கள் புதிய முறைகளைப் புகுத்தி இயக்குவிக்கின்றனர். இந்தப் புதிய முறை இலாபகரமாக இருந்தால் மற்ற தொழில் முயல்வோர்களும் இம் முறையைக் கையாளுகின்றனர். இப்புதிய முறையில் முதலீடு செய்வதற்கு அவர்கள் வங்கியிலிருந்து பணம் கடனாகப் பெறுகின்றனர். இதனால் பணவருமானமும் விலையும் அதிகமாகிறது. மேலும் மக்களிடையே வாங்கும் சக்தி அதிகமாகிறது. இவ்வாறு பணவீக்கம் ஏற்படுகின்றது. இனிய நம்பிக்கையும் (Optimism), ஊக வாணிபமும் நாட்டினைப் பொருளாதார வீக்கத்திற்கு இட்டுச் செல்கின்றன. புதிய பொருள்கள் அங்காடியில் நுழைந்துள்ளதால் பழைய பொருள்களுக்கு மதிப்புக் குறைந்து அவற்றின் விலை வீழ்ச்சியடைகின்றது. மேலும், தொழில் முயல்வோர் தங்களுக்குக் கிடைத்த இலாபத்திலிருந்து, வங்கியிலிருந்து பெற்ற கடனை அடைக்கின்றனர். இதனால் மக்களிடையே புழங்கும் பணம் குறைகின்றது. பணப் புழக்கம் குறைவதால் விலை வீழ்ச்சியடைகின்றது; இலாபம் குறைகின்றது. ஆதலால் புதிய முதலீடு இருக்காது. இவ்வாறு பொருளாதாரத் தேக்கம் ஏற்படுகின்றது.

இந்நிலையிலுள்ள பொருளாதாரத்தில் மீண்டும் ஒரு புதிய முறையினைப் புகுத்தும்பொழுது மீண்டும் ஒரு பொருளாதார வீக்கமும் பின் ஒரு தேக்கமும் தொடர்ந்து ஏற்படுகின்றன. இவ்வாறு பொருளாதார முன்னேற்றம் என்பது தன்னிச்சையாக ஓர் ஒழுங்கான தொடர்பு இல்லாமல் ஏற்படுவதே யாகும்.

ஏற்றத் தாழ்வுகளையுடைய முதலாளித்துவம் நிலைத்து நிற்க இயலுமா என ஷீம்பீட்டர் ஐயுறுகின்றார். ஏனென்றால் இத்தகைய ஏற்றத்தாழ்வுகளைக் கண்டு அறிவுத் திறனுடையவர்கள் வெறுப்படைந்து கொதித் தெழுகின்றனர். பின்னர் புரட்சியின் மூலம் சோசலிச சமுதாயத்தை ஏற்படுத்துகின்றனர். ஆகவே ஷீம்பீட்டரின் கூற்றுப்படி முதலாளித்துவத்தின் வெற்றியே பொன் முட்டை இடுகின்ற வாத்தாகிய முதலாளித்துவத்தைக் கொல்லக்கூடிய நிலைக்கு இழுத்து செல்லும்.

**ஷீம்பீட்டரின் மாதிரிப் படிவமும் வளர்ச்சியுறும் நாடுகளும்**

ஒரு நாடு வெகு விரைவில் முன்னேற்றமடைவதற்கு ஷீம்பீட்டரின் மாதிரிப் படிவத்தில் கூறப்பட்டது போன்ற தொழில் முயல்வோர் இருத்தல் வேண்டும். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக வளர்ச்சியுறும் நாடுகளில் அத்தகைய தொழில் முயல்வோர்கள் கிடைப்பது அரிது. மேலும் அரசாங்கமே முக்கிய தொழில்களை

ஏற்று நடத்திவருகின்றது. தனியார் துறையும் சிறப்புற்றிருக்காது. இத்தகைய ஒரு நிலையில் ஷீம்பீட்டர் மாதிரிப் படிவத்தில் அறிவித்ததுபோல் தொழில் முயல்வோர் தொழில் துறையில் தமக்கென ஒரு தனிப்பட்ட இராச்சியத்தை ஏற்படுத்த முடியாது. ஏனென்றால் வளர்ச்சியுறும் நாட்டில் ஏற்கெனவே பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இருக்கும். ஷீம்பீட்டர் கூறியது போன்ற நிலை ஏற்பட்டால் பொருளாதார ஏற்றத்தாழ்வு மேலும் மேலும் விரிவடையும். இது ஒரு வளர்ச்சியுறும் நாட்டிற்கு அபாயத்தை ஏற்படுத்தும்.

மேலும் ஷீம்பீட்டர் தனது மாதிரிப் படிவத்தில் தொழில் முயல்வோர் புதிய வழிமுறையினைக் கண்டு பிடித்து அதனைப் புகுத்துவதனைப் பற்றி குறிப்பிடுகின்றார். ஆனால் வளர்ச்சி குன்றிய நாடுகள், வளர்ச்சியுற்ற நாடுகள் முன்னரே கண்டு பிடிக்கப்பட்டு, நடைமுறையில் உள்ள வழிமுறைகளைத்தான் கடைப்பிடிக்கின்றன. தவிர வளர்ச்சியுறும் நாடுகளில், சமூகப் பொருளாதார ஆக்க நிலைகளைச் சிறந்த முறையில் பெற இயலாது. மேற்கூறிய சமூக ஆக்கநிலை முதல் சரியாகக் கிடைக்காததால் புறச்சிக் கனங்கள் கிடைக்கா. இது தவிர உற்பத்திச் செலவும் அதிகரிக்கும். இவை இரண்டும் தொழில் முயல்வோர்க்கு ஊக்கத்தை அளிக்கா. எனவே, வளர்ச்சி குன்றிய நாடுகளில் போதா சமூக ஆக்க நிலை முதல் தொழில் முயல்வோர்க்கு இடையூறாக அமையும். ஷீம்பீட்டரின் மாதிரிப் படிவத்தில் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவியாக இருப்பது பணவீக்கமே. ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் பணவீக்கம் விரும்பத் தக்கதல்ல.

எனவே, ஷீம்பீட்டரின் மாதிரிப் படிவம் வளர்ச்சியுறும் நாடுகளுக்கு ஏற்றதல்ல.

### ஷீம்பீட்டரின் மாதிரிப்படிவமும், இந்தியாவும்

ஷீம்பீட்டர் தனது மாதிரிப் படிவத்தில் தொழில் முயல்வோர்க்கு முக்கிய பங்கு அளிக்கின்றார். நாட்டின் பொருளாதார வளர்ச்சியே அவர்கள் கையில்தான் உள்ளது எனக் கூறியுள்ளார். ஆனால் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் அரசுத் துறைக்கும் சிறப்பான பங்கு உண்டு. அதுவும் இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளில் ஷீம்பீட்டர் குறிப்பிடுவது போன்ற தொழில் முயல்வோர் இருப்பது அரிதாகையால் அரசுத் துறை முக்கிய பங்கு ஏற்கவேண்டியுள்ளது. கலப்புப் பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்ட நாம் அரசுத் துறைக்கே முக்கிய பங்களிக்கின்றோம்.

இங்குள்ள தொழிலதிபர்கள் புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்துவதில்லை. ஏற்கெனவே முன்னேறியுள்ள நாடுகளில் உள்ள தொழில் நுணுக்கத்தையே பின்பற்றுகின்றனர்.

அவரது மாதிரிப் படிவம் இந்தியா போன்ற சோசலிச சமுதாயத்தை விரும்பும் நாடுகளுக்குப் பொருந்தாது. ஏனென்றால் அதிகமான வளர் வீதவரி (High progressive taxation) தொழிலதிபர்களுக்குப் போதிய ஊக்கம் அளிக்காது.

**(ஈ) புதுச் சம்பிரதாயக் கருத்துடையோரின் மாதிரிப் படிவம்**

தொன்மைப் பொருளாதாரத்துறையினரைப்போல் அல்லாமல், புதுச் சம்பிரதாயக் கருத்தினர் மக்கள் தொகை வளர்ச்சிக்கும், உழைப்பாளிப் படைக்கும் முக்கிய இடம் தந்துள்ளனர். புதுச் சம்பிரதாயக் கருத்துடையோரில் ஜே. எம். கெயின்ஸ் ஜே.இ.மீட். திருமதி ஜோன் இராபின்சன் போன்றவர்கள் முக்கியமானவர்கள், அவர்களில் திருமதி ஜோன் இராபின்சனின் மாதிரிப் படிவத்தை இங்கு காண்போம்.

**ஜோன் இராபின்சனின் மாதிரிப் படிவம்**

எடுகோள்கள்

(1) முதலும் உழைப்பும் மட்டுமே பயன்தரும் உற்பத்திக் காரணிகள் (Productive factors)

(2) இவைகள் இரண்டும் ஒரு குறிப்பிட்ட மாறுத விகிதாசாரத்தில் உபயோகிக்கப்படுகின்றன.

(3) நாட்டின் மொத்த வருமானம் தொழிலாளர், தொழில் முயல்வோர் ஆகிய இவ்விருவர்களிடையே பிரிக்கப்படுகின்றது.

(4) தொழிலாளர்கள் தங்களுக்குக் கிடைத்த ஊதியம் முழுவதையும் செலவழித்து விடுகிறார்கள். அவர்கள் சேமிப்பதில்லை.

(5) இலாபம் அடைபவர்கள் அதனைச் சேமித்து வைத்து மறுபடியும் முதலீடு செய்கிறார்கள்.

நாம் முன்பே கூறியபடி நாட்டின் வருமானம் என்பது தொழிலாளர்களுக்குக் கொடுத்த கூலியும் முதலீடு செய்தவர்களுக்குக் கிடைக்கும் இலாபமும் ஆகும். இதனை உருவக வடிவில் கூறும் பொழுது,

$$Y = wN + pK \quad \ldots\ldots (I)$$

Y = நிகர தேசிய வருமானம் (Net National Income)

w=கூலி வீதம்
(wage rate)
N=மொத்தத் தொழிலாளர்கள்
(Number of workers)
p=இலாப வீதம்
(Profit rate)
K=மொத்த முதல்
(Amount of Capital)

மேற் கூறிய சமன்பாட்டிலிருந்து நாம் இலாப வீதத்தை கீழ் கண்டவாறு கண்டு பிடிக்கலாம்.

$$p=\frac{y-wN}{K} \text{.........II}$$

ஆகையால் இலாப வீதம் என்பது நாட்டு வருமானத்தில் கூலி போக மீதி உள்ள தொகைக்கும் மொத்த மூலதனத்திற்கும் உள்ள விகிதமாகும்.

இதுவரை நாம் வருமானப் பகுதியைப் பார்த்தோம். இனி செலவுப் பகுதியை காண்போம். மொத்த நிகர தேசிய வருமானம் நுகர்வுச் செலவுக்கும் (Consumption Expenditure) முதலீட்டுச் செலவுக்கும் (Investment Expenditure) சமமாகும்.

$\therefore Y=C+I$......III
C=நுகர்வுச் செலவு
I=முதலீட்டுச் செலவு

நாம் ஏற்கெனவே எடுகோளில் கூறியபடி முதலீடு செய்பவர்கள் தங்களுக்குக் கிடைக்கும் இலாபத்தைச் சேமித்து மறுபடியும் முதலீடு செய்கிறார்கள்.

$\therefore S=pK$.........IV
இங்கு S என்பது சேமிப்பு (Savings)

முதலீடு செய்பவர்கள் pK ஐ (இலாபத்தை) சேமித்து மறுபடியும் முதலீடு செய்வதால்,

$I=\triangle K$.........V
$\triangle K$=மறுபடியும் முதலீடு செய்வதால், அதிகரித்த முதல் (Increase in Capital)
$pK=I$.........VI
$\therefore pK=\triangle$.........VII

எனவே $P=\frac{\triangle K}{K}$.........VIII

**பொற்காலம்**

முதல் வளர்ச்சி வீதம் (Rate of growth of Capital) மட்டு மல்லாது மக்கள் தொகை வளர்ச்சி வீதமும் ஒரு நாட்டின் முன் னேற்றத்தைக் கட்டுப்படுத்துகிறது. மக்கள் தொகை வளர்ச்சி வீதத்தை (Rate of growth of Population) உருவக வடிவில் கூறும் பொழுது,

$$P = \frac{\Delta N}{N}$$

$\Delta N$ = ஒரு குறிப்பிட்ட வருடத்தில் அதிகரித்த மக்கள் தொகை (Increase in the number of Population).

$N$ = மொத்த மக்கள் தொகை.

$P$ = மக்கள் தொகை வளர்ச்சி வீதம்.

முதல் வளர்ச்சி வீதமும் $\Delta K/K$ (Rate of growth of Capital) மக்கள் தொகை வளர்ச்சி வீதமும் சமமாக இருக்கும்பொழுது பொருளாதாரம் வேலை நிறைவுச் சமநிலையில் இருக்கும். (Full Employment equilibrium) இதனையே ஜோன் இராபின்சன் பொற்காலம் எனக் கூறுகின்றார். பொருளாதாரம் இப் பொற் காலத்தை விட்டு விலகிச் செல்லும்பொழுது தானாகவே பழைய சமநிலைக்குக் கொண்டு வரப்படும்.

சான்றாக, மக்கள் தொகை வளர்ச்சி வீதம் முதல் வளர்ச்சி வீதத்தைவிட அதிகமாக இருக்கும்பொழுது, அதாவது $\Delta N/N > \Delta K/K$, உழைப்பு அளிப்பு அதிகமாக இருக்கும். அதனால் கூலி குறைந்து முதலீடு செய்பவர்களுக்கு அதிக இலாபம் கிடைக் கின்றது. இலாபம் அதிகமாகக் கிடைப்பதால் அதனை மீண்டும் முதலீடு செய்யும்பொழுது முதலின் வளர்ச்சி வீதம் கூடுகின்றது. இவ்வாறு பொருளாதாரம் பொற்காலத்தின் பாதைக்கே மீண்டும் கொண்டுவரப்பட்டு விடுகிறது.

அதுபோல், முதல் வளர்ச்சி வீதம் மக்கள் தொகை வளர்ச்சி வீதத்தைவிட அதிகமாகும்பொழுது உழைப்பின் அளவு குறை வாக இருப்பதால் கூலி அதிகமாகின்றது. கூலி அதிகமாக இருப்ப தால் முதலீடு செய்பவர்களுக்கு இலாபம் குறைகின்றது; இலாபம் குறைவதால் மறு முதலீடு குறைகின்றது. இவ்வாறு முதல் வளர்ச்சி வீதம் மக்கள் தொகை வளர்ச்சி வீதத்திற்குச் சமமாகக் கொண்டுவரப்பட்டுவிடும்.

**ஜோன் இராபின்சனின் மாதிரிப் படிவமும் வளர்ச்சியுறும் நாடுகளும்**

ஜோன் இராபின்சன் தனியார் துறையில் முதலீடு செய்பவர் களுக்கு அதிக முக்கியத்துவம் அளித்துள்ளார் ஆனால் வளர்ச்சி

யுறும் நாடுகளில் தொழில் முயல்வோர் தங்கள் இலாபம் முழுவதையும் மறுபடியும் முதலீடு செய்வதில்லை. இலாபத்தில் பெரும் பகுதி தேவையற்ற நுகர்வுப் பொருள்களில் செலவழிக்கப்படுகின்றது. ஆகவே வளர்ச்சியுறும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தொழில் முயல்வோரையே முக்கியமாகக் கருதிவிட முடியாது.

மேலும், வளர்ச்சியுறும் நாடுகளில் மக்கள் தொகை வளர்ச்சி முதல் வளர்ச்சி வீதத்தைவிட அதிகமாக உள்ளது. உழைப்பின் அளிப்பு அதிகமாக இருந்தாலும் தொழிலாளர்களின் கூலி நாளுக்கு நாள் அதிகரித்துவிடுகிறது. எனவே ஜோன் இராபின்சனின் கூற்றுப்படி உழைப்பின் அளிப்பு அதிகமாக இருப்பதால் கூலி குறைந்து இலாபம் பெருகி முதல் வளர்ச்சி வீதம் அதிகரிக்கும் என்க் கூறுவது தவறாகும். ஆகவே வளர்ச்சியுறும் நாடுகளுக்கு அவரது தானே இயங்குகின்ற சமநிலைத் தன்மைக் கோட்பாடு பொருந்தவில்லை.

**ஜோன் இராபின்சனின் மாதிரிப் படிவமும், இந்தியாவும்**

மக்கள் தொகை வளர்ச்சி வீதமும் முதலின் வளர்ச்சி வீதமும் சமமாகவே இருந்தால்தான் நாம் ஜோன் இராபின்சன் கூறிய பொற்காலத்தை அடைய முடியும். நமது நாட்டில் மக்கள்தொகை வளர்ச்சி மூலதன வளர்ச்சியைவிட அதிகமாக இருப்பதால் நம்மிடையே வேலையில்லாத் திண்டாட்டம் உள்ளது.

தவிர ஜோன் இராபின்சன் கூறிய தானே இயங்குகின்ற சமநிலைத் தன்மை இங்கு வேலை செய்யவில்லை. ஜோன் இராபின்சன் கூற்றுப்படி உழைப்பின் அளிப்பு கூடும்பொழுது கூலி குறைய வேண்டும். அப்படிக் குறைந்தால்தான், அவர் கூறிய சமநிலையை அடைய முடியும். ஆனால் உண்மையில் இங்கு கூலி நாளுக்கு நாள் கூடி வருகின்றது. எனவே அவரது தானே இயங்குகின்ற சமநிலைத் தன்மையும் பொருந்தவில்லை.

**(2) ஹெராட்—டோமார் மாதிரிப் படிவங்கள்**

ஹெராடும், டோமாரும் முதலீட்டிற்கு முக்கிய இடம் தந்துள்ளனர். முதலீடு ஒரு நாட்டின் உற்பத்தியைப் பெருக்குவதோடு மட்டுமல்லாமல் வருமானத்தையும் கொடுக்கிறது எனவே, முதலீட்டால் பொருள்களின் தேவையும் அளிப்பும் அதிகமாகின்றன. ஒரு நாட்டில் சமநிலைப் பொருளாதாரம் நிலவுவதற்கு முதலீட்டால் உண்டாக்கப்பட்ட பொருள் தேவையும் அளிப்பும் சமமாக இருக்க வேண்டும். இவை ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டால் பொருளாதார முன்னேற்றத்தில் சமநிலை ஏற்படாது.

**டோமார் மாதிரிப் படிவம்**

முதலீடு செய்வதால் ஒரு நாட்டில் உற்பத்தியும், வருமானமும் பெருகுகின்றன எனக் கண்டோம். உற்பத்தி கூடுவதால் பொருள்களின் அளிப்பு பெருகுகின்றது. அதுபோல வருமானம் கூடுவதால் தேவை கூடுகின்றது. எனவே புதிய முதலீட்டால் ஏற்பட்ட தேவையும் அளிப்பும் ஒன்றுக்கொன்று நேர்விகிதத்தில் இருந்தால்தான் பொருளாதாரத்தில் சமநிலை ஏற்படும். இவ்வாறு டோமார் தனது மாதிரிப் படிவத்தை இரு பகுதிகளாகப் பிரித்து விளக்குகின்ருர்.

முதலில் நாம் பொருள்களின் அளிப்புப் பகுதியைப் பார்ப்போம். முதலீட்டை அதனின் சராசரி உற்பத்தித்திறனைக் கொண்டு பெருக்கினுல் கிட்டுவதே முதலீட்டால் ஏற்பட்ட உற்பத்தியாகும். உருவக வடிவில் கூறும்பொழுது,

$$O = I\sigma$$

O = உற்பத்தி

$\sigma$ (Sigma) = முதலீட்டின் சராசரி உற்பத்தித் திறன் (Average Productivity of Investment)

டோமார் தனது மாதிரிப் படிவத்தின் மற்ருெரு பகுதியான தேவைப் பகுதியை கெயின்சின் முதலீட்டுப்பெருக்கி (Investment Multiplier) மூலம் விளக்குகின்ருர். 'முதலீட்டால் ஏற்படும் மாறுதல் நுகர்வில் மாற்றங்களை ஏற்படுத்தும். நுகர்வில் ஏற்படும் மாற்றங்கள் வருவாயில் மாற்றத்தை ஏற்படுத்தும். மூல முதலீடு எத்தனை மடங்கு பெருகுமென்பதையே முதலீட்டுப் பெருக்கி எனக் குறிப்பிடுகின்ருேம். முதலீட்டுப் பெருக்கிக்குக் கீழ்க்கண்ட சமன்பாட்டினைப் பயன்படுத்த வேண்டும்.

$$K = I/\alpha$$

K = முதலீட்டுப் பெருக்கி

$\alpha$ (alpha) = இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் (Marginal propensity to save)

ஆகையால் அதிகமாகியுள்ள வருவாயைக் கண்டு பிடிப்பதற்குப் புதிதாகச் செய்யப்பட்டுள்ள முதலீட்டை முதலீட்டுப் பெருக்கியுடன் பெருக்க வேண்டும்.

$$\Delta y = \Delta I \frac{1}{\alpha}$$

பொருளாதாரம் ஒரு சம நிலை முன்னேற்றம் அடைவதற்குப் பொருள்களின் தேவையும் அளிப்பும் சமமாக இருக்க வேண்டும்

$$\therefore \Delta I \frac{1}{\alpha} = I\sigma$$

மேற்கூறிய சமன்பாட்டினைச் சுருக்குவதற்கு இரு பகுதிகளையும் I ஆல் வகுத்துப் பின் L ஆல் பெருக்க வேண்டும். இறுதியில் நாம் பெறுவது,

$$\frac{\Delta I \times 1}{I \times \alpha} \times \alpha = \frac{\sigma \times \alpha}{I}$$

$$\therefore \frac{\Delta I}{I} = \sigma \alpha$$

$\frac{\Delta I}{I}$ = முதலீட்டின் வளர்ச்சி வீதம்

ஒரு நிலையான பொருளாதார வளர்ச்சி வேண்டும் என்றால், முதலீட்டின் வளர்ச்சி வீதமானது முதலீட்டின் சராசரி உற்பத்தித் திறன், இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் ஆகிய இரண்டினுடைய பெருக்குத் தொகைக்குச் சமமாக இருக்க வேண்டும்.

**ஹெராட் மாதிரிப் படிவம்**

ஹெராட் தனது மாதிரிப் படிவத்தில் மூன்று கருத்துக்களைத் தந்துள்ளார்.

(i) **உண்மையான வளர்ச்சி வீதம்** (Actual growth rate)

உண்மையான முதலீட்டால் ஏற்பட்ட வளர்ச்சி வீதமே உண்மையான வளர்ச்சி வீதமாகும்.

(ii) **உத்தரவாத வளர்ச்சி வீதம்** (Warranted growth rate)

இதனை முழுக் கொள்ளளவு வளர்ச்சி வீதம் எனவும் கொள்ளலாம். (Full capacity growth rate)) உத்தரவாத வளர்ச்சி வீதம் என்பது ஒரு முதலீட்டிலிருந்து எதிர்பார்க்கப்படுகின்ற உச்சநிலை வளர்ச்சி வீதமாகும்.

(iii) **இயல்பான வளர்ச்சி வீதம்** (Natural growth rate)

இயல்பான வளர்ச்சி வீதம் என்பது ஒரு நாட்டில் உள்ள வளங்களை யெல்லாம் முழுமையாக உற்பத்தியில் ஈடுபடுத்தும்

பொழுது கிடைக்கின்ற வளர்ச்சி வீதமாகும். இவ் வளர்ச்சி வீத மானது மக்கள் தொகை, தொழில் நுணுக்க அறிவு, இயற்கை வளங்கள் முதலியவற்றைச் சார்ந்துள்ளது. இவைகளில் ஏதாவ தொன்றில் மாறுதல் ஏற்பட்டாலும் இவ் வளர்ச்சி வீதமும் மாறுதல் அடையும்.

நிலையான பொருளாதார வளர்ச்சிக்கு உண்மையான வளர்ச்சி வீதமும் உத்தரவாத வளர்ச்சி வீதமும் சமமாக இருக்க வேண்டும். உண்மையான வளர்ச்சி வீதமானது உத்தரவாத வளர்ச்சி வீதத்தைவிட அதிகமாகும்பொழுது முதலீடு பெருகி பொருளாதாரச் செழிப்பு ஏற்படும். அதுபோல் உண்மையான வளர்ச்சி வீதமானது, உத்தரவாத வளர்ச்சி வீதத்தைவிடக் குறைவாக இருந்தால் முதலீடு குறைந்து பொருளாதாரத் தேக்கம் ஏற்படும்.

மேற்கூறிய மூன்று வளர்ச்சி வீதங்களும் சமமாக இருக்கும் பொழுது பொருளாதாரமானது வேலை நிறைவுச் சமநிலையில் (Full employment equilibrium) இருக்கும்.

**ஹெராட்–டோமார் மாதிரிப் படிவமும், வளர்ச்சியுறும் நாடுகளும்**

ஹெராட்–டோமாரின் மாதிரிப் படிவங்கள் வளர்ச்சியுறும் நாடுகளுக்கு ஏற்றவையல்ல. ஏனென்றால், அவற்றின் மாதிரிப் படிவங்கள் முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளில் ஏற் படும் நிலையற்ற வளர்ச்சியினைத் தடுப்பதற்கு உரிய வழி வகைகளை மட்டுமே கூறுகின்றன. வளர்ச்சியுறும் நாடுகளிலும், முன்னேறிய நாடுகளிலும் வேலையின்மைச் சிக்கல் இரு வேறு கோணங்களில் ஏற்படுகின்றன. வளர்ச்சியுறும் நாடுகளில் முதல் இல்லாததால் வேலையின்மை ஏற்படுகின்றது. ஆனால் முன்னேற்றமடைந்த நாடு களில் முதல் அதிகமாக இருந்தாலும் பயனுள்ள தேவை (Eff:ctive demand) இல்லாததால் வேலையின்மைச் சிக்கல் ஏற்படுகின்றது.

மேலும், ஹெராட்–டோமார் தங்கள் மாதிரிப் படிவங்களில் மிக அதிகமான சேமிப்பு விகிதத்தை (higher savnig ratio) எதிர் நோக்குகின்றனர். ஆனால் வளர்ச்சி குன்றிய நாடுகளில் அதிக சேமிப்பை எதிர்பார்க்க முடியாது. தவிர வளர்ச்சியுறும் நாடுகளில் முதல்–உற்பத்தி விகிதத்தைச் (capital output ratio) சரியாகக் கணக்கிட முடியாது. ஏனென்றால் நம்பகமான புள்ளி விவரங்களை அறிய வியலாது. எனவே வளர்ச்சியுறும் நாடுகளுக்கு மாதிரிப் படிவங்கள் உகந்தவை யல்ல.

**ஹெராட்-டோமார் மாதிரிப் படிவமும், இந்தியாவும்**

ஹெராட்-டோமார் மாதிரிப் படிவம் வேலை நிறைவைத் தொடர்ந்து காத்து வருவதற்குரிய வழிவகையினைத்தான் கூறுகிறதே ஒழிய வளர்ச்சியுறும் நாடுகளில் வேலை நிறைவை எவ்வாறு உண்டாக்க வேண்டும் என்று கூறவில்லை. இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளில் முதலீடு இல்லாததால்தான் பொருளாதாரத்தில் ஒரு நிலையில்லாத் தன்மை நிலவி வருகின்றது. ஆனால் அதேசமயம் ஹெராட்-டோமார் மாதிரிப் படிவம், முதலீட்டால் ஏற்படும் தேவைப் பகுதியும் அளிப்புப் பகுதியும் சமமாக இல்லாவிட்டால் பொருளாதாரத்தில் நிலையில்லாத் தன்மை ஏற்படும் என்று கூறுகின்றது. எனவே, ஹெராட்-டோமார் மாதிரிப் படிவம் இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளுக்கு ஏற்றதல்ல.

**(ஊ) லீவிஸ் அளவற்ற உழைப்பு அளிப்பு மாதிரிப் படிவம் (Lewis' model of unlimited supply of labour)**

பொதுவாக, வளர்ச்சியுறும் நாடுகளில் இருவிதமான துறைகள் உள்ளன. ஒன்று பிழைப்புத்துறை (subsistence sector) இதில் சிறு தொழில்கள் விவசாயம் முதலியன அடங்கும். இத்துறையில் பிழைப்பிற்குப் போதிய அளவு மட்டுமே உற்பத்தி செய்யப்படும்.

மற்றொன்று முதலாளித்துவத் துறை (capitalist sector) இதில் பேரளவுத் தொழில்கள் பெருமளவில் செயல்படும். இது ஒரு முன்னேற்றமடைந்த துறையாக உள்ளது. அங்காடியில் விற்பதற்காக பெருமளவில் உற்பத்திப் பொருள்கள் செய்யப்படும்.

வளர்ச்சியுறும் நாடுகளில் பிழைப்புத் துறையில் கூலி வீதம் பிழைப்பு மட்டத்திற்குச் சமமாகவே இருக்கும். அத்துடன் உழைப்பின் அளிப்பு அதிகமாக இருக்கும். இவ்வாறு அதிகமாக உள்ள உழைப்பின் அளிப்பினை முதலாளித்துத் துறையில் பயன்படுத்தலாம். உழைப்பின் அளிப்பு அதிகமாக இருப்பதால் கூலியும் அதிகம் கொடுக்க வேண்டியதில்லை. இந்நிலையில் பிழைப்புத் துறையில் உள்ளவர்களை முதலாளித்துவத் துறைக்குக் கவர்வதற்கு பிழைப்பு மட்டத்திற்கு மேல் அதிகமான கூலி கொடுக்கலாம் இத்தகைய மலிவான உழைப்பினைப் பயன்படுத்தி முதலாளித்துவத் துறை அதிக இலாபம் அடையலாம். அவ் விலாபத்தினை மறுபடியும் முதலீடு செய்து உற்பத்தியினையும் வேலை வாய்ப்பினையும் மேலும் பெருக்கலாம். ஆக அளவற்ற உழைப்பின் அளிப்பினை சிறப்பாகப் பயன்படுத்திப் பொருளாதார முன்னேற்றம் காணலாம்.

முதலாளித்துவ துறையில் மூலதனத்தை வங்கிகளிடம் இருந்து கடனாகவும் பெற்று உற்பத்தியைப் பெருக்கலாம். ஆனால் இம்முறை நாளடைவில் பண வீக்கத்தை ஏற்படுத்தும். ஆனால் உற்பத்தி முழுக் கொள்ளளவில் இயங்கும்பொழுது, இப் பண வீக்கம் குறைந்து விலைகள் குறைந்துவிடும்.

திறனாய்வு

பிழைப்புத் துறையிலிருந்து முதலாளித்துவத் துறைக்கு உழைப்பாளிகளை மாற்றும்பொழுது, பிழைப்புத் துறையின் இறுதி நிலை உற்பத்தித்திறன் அதிகமாகின்றது. இதனால் அங்கு கூலியும் அதிகமாகும், இக்கூலி உயர்வினால் முதலாளித்துவத் துறையிலும் கூலியைக் கூட்ட வேண்டியுள்ளது. எனவே, முதலாளித்துவத் துறையில் இலாபம் குறைகின்றது.

மேலும் ஒரு நாடு வளர்ச்சி குன்றிய நிலையில் இருப்பதற்கான இன்னொரு காரணம் போதா மூலதனத்தால் அதிக அளவு மக்களை வேலையில் ஈடுபடுத்த இயலாமையேயாகும். ஆனால் லீவிஸ், பொருளாதார முன்னேற்றத்திற்கு இன்றியமையாததான முதல் பெருக்கத்தைப் பற்றி தனது மாதிரிப் படிவத்தில் எதுவுமே குறிப் பிடவில்லை. தவிர, வளர்ச்சியுறும் நாடுகளில் வங்கிகளும் வளர்ச்சி யுறுநிலையில் இருப்பதால் அவைகள் முதலீட்டிற்காகக் கடன்கள் வழங்குவதில்லை; முதலீடு செய்வதற்குப் போதிய தூண்டுதலும் இருக்காது.

பேரளவுத் தொழிற்சாலைகளை நிறுவுவதற்குத் தேவையான தொழில் நுட்ப உழைப்பானது வளர்ச்சியுறும் நாடுகளில் எளிதில் கிடைக்காது. லீவிஸ் அதனைத் 'தற்காலிக இடையூறு' என்று கருதி ஒதுக்கிவிடுகின்றார்.

லீவிஸின் அளவற்ற உழைப்பின் அளிப்பு மாதிரிப் படிவமும் இந்தியாவும்

இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளில் உழைப்பின் அளிப்பு அதிகமாக இருந்தாலும் அவ்வுழைப்பினைப் பயன்படுத்து வதற்காக முதலீடும், முதலீடு செய்வதற்குத் தயாராக உள்ள தொழில் முயல்வோரும் இல்லாததால்தான் அவை பொருளாதாரத் தில் பின்தங்கிய நிலையில் இருக்கின்றன. மேலும் பிழைப்புத் துறையிலிருந்து முதலாளித்துவத் துறைக்குத் தொழிலாளர்களைக் கொண்டு வருவது என்பது எளிதான செயலன்று. ஏனென்றால், கூட்டுக் குடும்ப முறை நிலவி வருவதால் அவர்கள் குடும்பத்தை விட்டு எளிதில் பிரிந்து தனியே வர மாட்டார்கள். பிழைப்பு

மட்டத்திற்கு மேல் கூலி கொடுத்தாலும் போதிய ஊக்கம் அளிக்காது.

(எ) சரிசமநிலை வளர்ச்சி-சரிசமமில்லா வளர்ச்சி (Balanced-unbalanced growth)

பல்வேறு பொருளாதார நிபுணர்கள் சரிசமநிலைப் பொருளாதார வளர்ச்சியைப் பற்றிப் பல்வேறு விளக்கங்களுடன் கூறியுள்ளனர். சரிசமநிலை வளர்ச்சி என்பது ஒரே நேரத்தில் பல்வேறு துறைகளில் முதலீடு செய்வதாகும் என்று சிலரும், தொழில்துறையிலும், விவசாயத் துறையிலும் சமமாக முதலீடு செய்வதாகும் என்று வேறு சிலரும் கூறியுள்ளனர்.

ரொசன்டீன் ரோடான், நர்க்ஸ், ஆர்தர் லீவிஸ், ரோஸ்டோ லெபின்ஸ்டீன் போன்றவர்கள் சரிசமநிலை வளர்ச்சியைப் பற்றித் தத்தம் கருத்துக்களைக் கூறியுள்ளனர். இவர்களில் முக்கியமானவர் நர்க்ஸ்.

வளர்ச்சியுறும் நாடுகள் தேவைப் பகுதியிலும், அளிப்புப் பகுதியிலும் நச்சுச் சுழலில் சிக்கியுள்ளன. இச்சுழலிலிருந்து விடுபடுவதற்கு ஒரே வழி ஒரே சமயத்தில் பல்வேறு துறைகளில் முதலீடு செய்வதாகும். ஒருவர் உற்பத்தி செய்கின்ற ஒரு பொருள், பிற உற்பத்தியாளர்களுக்குப் பெரிதும் பயன்படும். இதனால் அகச் சிக்கனங்களும் (Internal Economics) புறச்சிக்கனங்களும் (External Economics) ஏற்படுகின்றன.

ஒரே நேரத்தில் அதிக அளவில் முதலீடு செய்வதால் வருவாய் பெருகி அங்காடி விரிவடைகின்றது. சரிசமநிலை வளர்ச்சியின் தேவைக்கு உதாரணமாக சரி விகித உணவின் (Balanced diet) அவசியத்தைக் கூறலாம்.

திறனாய்வு

ஒரே சமயத்தில் பல்வேறு துறைகளில் முதலீடு செய்வது என்பது வளர்ச்சியுறும் நாடுகளால் இயலாத செயலாகும். முதலீடு செய்வதற்குப் போதிய முதலும், நுட்பமும் திறமையும், திறமையான தொழில் முயல்வோரும் இருந்தால், அது வளர்ச்சி குன்றிய நாடாக இருக்க முடியாது. இவை போதிய அளவில் கிடைக்காததால்தான் வளர்ச்சி குன்றிய நாடுகள் வளர்ச்சி குன்றிய நிலையிலேயே உள்ளன. மேற்கூறிய உற்பத்திக் காரணிகள் வளர்ச்சி குன்றிய நாடுகளில் போதிய அளவில் கிடைக்காததால் அவை உற்பத்தி செலவினை அதிகரிக்கும்.

## சரிசமநிலையில்லா வளர்ச்சி

ஹர்ச்மன் (Hirschman) சரிசம நிலையில்லா வளர்ச்சியைப் பற்றி விளக்குகின்றார், அவரது கூற்றுப்படி முன்னேற்றம் என்பது ஒவ்வொரு துறையாகப் படிப்படியாக முன்னேறுவது ஆகும். முன்னேற்றம் என்பது 'சமநிலையற்ற சங்கிலி' (Chain of Disequilibrium) என்று கூறுகின்றார்.

இருவகையான முதலீட்டினைப் பற்றி நாம் இங்கு அறிகின்றோம்.

(1) நேரடியாக ஆக்க வளமுடைய செயல்கள்
(Directly productive activitv) D.P.A.

(2) சமூக ஆக்கநிலை முதல்
(Social over lead Capital) S.O.C.

கல்வி, மருத்துவம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சாரம், தண்ணீர் வசதி, கால்வாய் வசதிகள், நீர்ப்பாசனம் முதலியன S.O.C-ல் அடங்கும்.

S.O.C-ல் அரசு முதலீடு செய்யும் பொழுது புறச்சிக்கனங்கள் ஏற்படுகின்றன. கல்வி வளர்ச்சியால் தொழிலாளர்கள் திறமையுடையவர்களாகின்றனர். போக்குவரத்து, செய்தித் தொடர்பு முதலியன தொழில்துறைக்குப் பெரிதும் உதவி புரிகின்றன. இவ்வாறு S. O. C-ல் முதலீடு செய்வதால் தனியார் துறையில் முதலீடு செய்வது ஊக்குவிக்கப்படுகின்றது. இதனால் நேரடி ஆக்க வளச் செயல்கள் பெருகுகின்றது.

அதுபோல் அரசாங்கம் S. O. C.-ல் முதலீடு செய்யாமல் D. P. A.-ல் முதலீடு செய்யும் பொழுது S. O. C.-ல் போதுமான அளவில் கிடைக்காததால் உற்பத்திச் செலவு அதிகரிக்கும். இதனால் நாட்டில் அரசியல் நெருக்கடி ஏற்பட்டு, S. O. C.-ல் முதலீடு செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் அரசாங்கத்துக்கு உண்டாகும்.

இவ்வாறு ஒன்றில் முதலீடு செய்து மற்றொன்றை நாளடைவில் முன்னேற்றமடையச் செய்யலாம். முதலில் கூறியதில் முன்னேற்றப் பாதை எளிதாகவும், பயனுள்ளதாகவும் இருக்கும். ஆனால் இரண்டாவது கூறியதில் குழப்பமும், நெருக்கடியும், அதிகமாக இருக்கும்.

**திறனாய்வு**

ஹார்ச்மன் சரிசமநிலையில்லா வளர்ச்சி பற்றிக் கூறியிருந்தாலும் எங்ஙனம் சரிசம நிலையில்லா வளர்ச்சியை ஏற்படுத்துவது என்பது பற்றிக் கூறவில்லை. மேலும் அதற்குரிய உத்தம நிலை எது என்பதனையும் கூறவில்லை. மேலும் ஒருசில துறைகளில் மட்டும் முதலீடு செய்வதால், நாட்டில் எல்லா நுகர்வுப் பொருள்களும் கிடைக்காமையால் விலைகள் ஏற்றமடையும்.

**சரிசமநிலை வளர்ச்சி-சரிசமநிலை யில்லா வளர்ச்சியும், இந்தியாவும்**

நமது ஐந்தாண்டுத் திட்டங்களை ஆராய்ந்தால் நாம் ஒரு வகையில் சரிசமநிலை யில்லா வளர்ச்சியினைப் பின்பற்றி வருவது விளங்கும். ஆனால் இம் முயற்சியிலும் நாம் வெற்றி பெறவில்லை, ஏனெனில் ஒரு துறையை முன்னேற்றும் பொழுது, மற்றொரு துறை பின்தங்கி விடுகின்றது. பின்னதைச் சீர்படுத்துகையில் முன்னது தேக்க நிலை அடைகின்றது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்திற்கும், போக்குவரத்து ~~போக்குவரத்துச்~~ செய்தித் தொடர்புக்கும் அதிக முக்கியத்துவம் அளித்தார்கள். ஆனால் தொழில்துறை வளர்ச்சி யடையவில்லை. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில்துறைக்கு முக்கியத்துவம் அளித்தார்கள். ஆனால் விவசாயம் பின்தங்கி விட்டது. அதன்பின் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரண்டு துறைகளுமே சீரான வளர்ச்சி அடையவில்லை.

ஹார்ச்மன் கூற்றுப்படி S.O.C.ல் அரசு அதிக முதலீடு செய்திருந்தாலும் அது D P.A.ஐ ஊக்குவிக்கவில்லை இயந்திரங்களை உருவாக்கும் தொழிற்சாலைகளுக்கு (Machine making Industries) அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. நுகர்வோர் பண்ட உற்பத்தி தானாகப் பெருகும் எனக் கருதினர்; ஆனால் அவர்கள் கருத்துப்படி நடைபெறவில்லை. இன்றைய விலைவாசி ஏற்றத்திற்கு இதுவும் ஒரு முக்கிய காரணமாக அமைந்து விட்டது.

புதிய தொழில் முயல்வோர் தோன்றவில்லை. அத்தகையோரை ஊக்குவிப்பதற்கு போதிய ஊக்கமும் அளிக்கப்படுவதில்லை.

**(ஏ) ரோஸ்டோவின் பொருளாதார வளர்ச்சிப்படி நிலைகள்**

ரோஸ்டோவின் கூற்றுப்படி பொருளாதார வளர்ச்சியில் ஐந்து படி நிலைகள் உள்ளன. அவை:

(1) மரபார்ந்த சமுதாயக் காலம்
(Age of Traditional Society)

முன்னேற்றப் பாதையில் கிளம்புவதற்கு முன் நிபந்தனைகள்
(ii) Pre-conditions for Take-off)
(iii) கிளம்புதல் (Take-off)
(iv) நிறைவு அடை வதற்குத் தூண்டுதல்
(Drive to Maturity)
(v) உயர் அளவில் நுகரும் காலம்
(Age of High Mass Consumption)

**(i) மரபார்ந்த சமுதாயக் காலம்**

மரபார்ந்த சமுதாய காலமென்பது விஞ்ஞானமும் தொழில் நுணுக்கமும் முன்னேற்றமடையாத காலமாகும். பௌதிக மேதை நியூட்டன் வாழ்ந்த காலத்திற்கு முந்திய காலமாகும். கூட்டுக் குடும்பமுறை அச்சமுதாயத்தில் நிலவி இருக்கும். நிலப் பிரபுக்களிடம் அதிகாரம் குவிந்து கிடக்கும். விவசாயந்தான் முக்கியத் தொழில். மக்கள் தொகையில் 75 சதவீதம் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பார்கள். நாட்டு வருமானம் கோயில் கட்டுவதிலும், நினைவுச் சின்னங்கள் எழுப்புவதிலும், திருமணம் மற்றும் சடங்குகளுக்குச் செலவிடுவதிலும் ஈடுபடுத்தப்படும்.

**(ii) கிளம்புவதற்கு முன் நிபந்தனைகள்**

இவ்வளர்ச்சி நிலையில் மக்களிடையே கல்வி பரவிப் பொருளாதார முன்னேற்றம் அடைய முடியும் என்ற எண்ணம் நிலவுகின்றது. தொழில் துவங்குவதற்குத் தனியார் துறையில் பலர் முன்வருகின்றனர். வங்கிகள் சிறிது சிறிதாக ஆரம்பிக்கப்படுகின்றன. மக்களிடையே தேசிய மனப்பான்மை ஏற்படுவதால் தங்கள் நாட்டினை முன்னேற்றமடையச் செய்யவேண்டும் எனக் கருதுகின்றனர்.

அவரது கூற்றுப்படி இத்தகைய நிலையை அடைவதற்கு முன் நிபந்தனைகள்,

(1) போக்கு வரத்து வசதியைப் பெருக்குதல்

(2) விவசாயத்தில் புரட்சி ஏற்படுத்துதல்

(3) இறக்குமதி பெருகுதல்-முக்கியமாக வெளிநாட்டிலிருந்து மூலதனம் இறக்குமதி செய்தல் என்பனவாம்.

**(iii) கிளம்புதல்**

இந்நிலை இருபது ஆண்டுகளுக்கு நீடிக்கும். இந்நிலையை எந்தெந்த நாடுகள் எவ்வெப்பொழுது அடைந்தன என்பது கீழே தரப்பட்டுள்ளது.

| நாடு | ஆண்டு |
|---|---|
| இங்கிலாந்து | 1783–1802 |
| பிரான்ஸ் | 1830–1860 |
| பெல்ஜியம் | 1833–1860 |
| அமெரிக்கா | 1843–1860 |
| ஜெர்மனி | 1850–1873 |
| ஸ்வீடன் | 1868–1890 |
| ஜப்பான் | 1878–1900 |
| இரஷ்யா | 1890–1914 |
| கனடா | 1893–1914 |
| அர்ஜென்டினு | 1935– |
| துருக்கி | 1937– |
| இந்தியா } சீனு } | 1952– |

கிளம்புவதற்கு முக்கிய தேவைகள்

(1) தேசிய வருமானத்தில் முதலீடு 5 சதவீதத்திலிருந்து 10 சதவீதமும் அதற்கு மேலும் கூடுதல்.

(2) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட முக்கியமான தொழில் துறைகள் முன்னேற்றமடைதல்.

(3) அரசியல், சமுதாய அமைப்புகள் மாறுதலடைந்து புதிய சூழ்நிலையைப் பயன்படுத்தத் தொடங்குதல்.

(iv) நிறைவு அடைவதற்குத் தூண்டுதல்

இந்நிலை நாற்பது ஆண்டுகளுக்கு நீடிக்கும். இந்தப் படி நிலையில் பொருளாதாரம் தன்னிச்சையாக முன்னேற்ற மடையும். எதிர்பாராத தாக்குதல்கள் வந்தாலும் அதனைச் சமாளிக்கின்ற தகுதியை அடையும். சில நாடுகள் இந்நிலையை எப்பொழுது அடைந்தன என்பது கீழே தரப்பட்டுள்ளது.

| நாடு | ஆண்டு |
|---|---|
| இங்கிலாந்து | 1850 |
| அமெரிக்கா | 1900 |
| ஜெர்மனி | 1910 |
| பிரான்ஸ் | 1910 |
| ஸ்வீடன் | 1930 |
| ஜப்பான் | 1940 |
| இரஷ்யா | 1950 |
| கனடா | 1950 |

இந்த நிலையிலே தொழிலாளர்கள் திறமையுடையவர்களா கின்றனர். அவர்கள் நாட்டுப்புறத்தில் வந்து குடியேறுகின்றனர். தொழில் முயல்வோருக்குப் பதில் வணிகக் குழு மேலாளர் எனும் (Manager) புதிய வகுப்பு உருவாகின்றது. மக்கள் புதிது புதிதாக நுகர விரும்புகின்றனர்.

### (v) அதிக அளவில் நுகரும் காலம்

இக்காலத்தில், மக்கள் நிலையான நுகர்வுப் பொருள்களாகிய மகிழ் உந்து, தொலைக்காட்சி சாதனம் போன்ற பொருள்களைப் பேரளவில் உபயோகிக்கின்றனர். புதிதாக வணிக மையங்கள் உருவாகின்றன. அமெரிக்கா இந்நிலையை 1920-லும், இங்கிலாந்து 1930-லும், ஜப்பான் 1950-லும் அடைந்தன. ருஷ்யா, ஸ்டாலின் மறைவுக்கு இந்நிலையடைவதைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

### ரோஸ்டாவின் பொருளாதார வளர்ச்சிப் படிநிலைகளும், இந்தியாவும்

ரோஸ்டாவின் வளர்ச்சிப் படிநிலைகளில் முக்கியமாகக் கருதப் படுவது முன்னேற்றப் பாதையில் கிளம்புதல் எனும் படிநிலை யாகும். அவரது கூற்றுப்படி, இந்தியா இந்நிலையினை 1952ல் அடைந்து விட்டது. தேசிய வருமானம் 1950-51-ல் 5·5 சத வீதத்திலிருந்து 1964-65ல் 14·4 சதவீதத்திற்கு அதிகரித் துள்ளது. சேமிப்பு வீதமும் 5·5 சதவீதத்திலிருந்து 10·5 சத வீதத்துக்கு அதிகரித்துள்ளது. விவசாயத்துறையும் தலைமைத் துறையாக (Leading Sector) விளங்குகின்றது. மேலும் மக்க ளிடையே சமூக பொருளாதாரத்தில் மாறுதல் ஏற்பட்டு 'நாமும் முன்னேற முடியும்.' என்ற நம்பிக்கை பரவியுள்ளது.

மேற்கூறியவற்றை ஆராயும் பொழுது இந்தியா முன்னேற்றப் பாதையில் கிளம்பும் படிநிலையைத் தாண்டி விட்டது என்று நாம் கருதத் தோன்றும். ஆனால் இந்தியா அந்நிலையில் இல்லை. இந் நிலையில், பொருளாதாரத்திற்கு எத்தகைய தாக்குதல் ஏற்பட்டா லும் அதனைச் சமாளிக்கும் திறன் வேண்டும் 1966-68ல் ஏற்பட்ட பொருளாவாரத் தேக்கம் அதனைப் பின்னடையச் செய்து விட்டது.

1965-66ல் தேசிய வருமானத்தில் 5.7 சதவீதம் குறைந்தது. 1965-66ல் தனிநபர் வருமானம் 1960-61ல் இருந்த நிலை யிலேயே உள்ளது. மேலும் சேமிப்பு 10·5 சதவீதத்திலிருந்து 1966-67ல் 8·2 சதவீதத்திற்கும், 1967-68ல் 8 சதவீதத்திற்கும் குறைந்து விட்டது. இவ்வாறு இந்தியா கிளம்பு நிலையிலிருந்து நழுவிப் பின்னடைவதுபோல் மூன்று ஓராண்டுத் திட்டங்களிலும் உள்ளது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் அந்த நிலையை வெற்றிகரமாகத் தாண்டி விடலாம் என்ற நம்பிக்கை உள்ளது. விவசாயத்தில் மாறுதல்கள் ஏற்பட்டு பசுமைப் புரட்சியினைக் கண் கூடாகக் காண்கிறோம். மேலும் சேமிப்பை 9 சதவீதத்திலிருந்து, 12·6 சதவீதத்திற்கும், முதலீட்டை 11·8 சதவீதத்திலிருந்து 13·8 சதவீதத்திற்கும் கூட்டவேண்டும் எனத் திட்டமிடப்பட்டுள்ளது. ஏழாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவுறும் பொழுது (1985-86ல்) இந்தியா தன்னிச்சையாக முன்னேற்றமடைகின்ற நான்காவது படி நிலையை அடையும் என எதிர் பார்க்கப்படுகின்றது.

இதுவரை நாம் சில முக்கிய மாதிரிப் படிவங்களைப் பற்றி அறிந்து கொண்டோம். இம்மாதிரிப் படிவங்களில் முக்கியமாகக் கூறப்படுபவை மூலதனத் திரட்சியும், முதல் ஆக்கமும் ஆகும்.

ஆனால் இன்று வளர்ந்து வரும் நாடுகளில் தோன்றியுள்ள பொருளாதார முன்னேற்றப் பிரச்சினைகள் ஏற்கெனவே ஏற்றுக் கொள்ளப்பட்ட கோட்பாடுகளுக்கு அறை கூவல் விடுத்துள்ளன. எனவே, பொருளாதார வளர்ச்சிக்குரிய பிரச்சினைகளுக்கு மறு பரிசீலனை தேவைப் படுகின்றது.

முதலினைப் பெருக்குவதற்கு வளர்ந்துவரும் நாடுகளில் பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டாலும், இந்த நடவடிக்கைகள் ஒழுங்காக வேலை செய்யவில்லை. இதற்கு முக்கிய காரணம் மனிதனின் இயல்புகள் என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்.

அவர்களின் கூற்றுப்படி மனிதனின் இயல்பு முன்னேற வேண்டியதன் அவசியத்தை எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. மனிதத் தன்மையை எளிதில் மாற்ற முடியாது. பாயரின் கூற்றுப் படி 'மக்கள் மனதில் முதலில் முன்னேற்றம் ஏற்பட வேண்டும்,' ('Development must take place in the minds of the people') வளர்ச்சியுறும் நாடுகளில் மக்களின் பழக்க வழக்கங்களும், விருப்பு களும். பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் இடையூறாக உள்ளவை. இவை தவிர சமூக, மத அமைப்புக்களும் பொருளா தார அமைப்பிற்கு இடையூறாக உள்ளன. யூஜின் ஆர். பிளாக் (Eugene R. Black) கூற்றுப்படி 'பொருளாதார முன்னேற்றம் என்பது முடிவு; சமூக, மனோநிலை, ஒழுக்கம், அரசியல் மாறுதல்கள் அதனை அடைவதற்குரிய வழிமுறைகளாகும்'. ('Economic development' is the end; Social, Psychological, Moral and Politi-

cal Change are means.')[1] பொருளாதார முன்னேற்றம் அடைவதற்கு முதலில் மக்கள் ஊக்குவிக்கப் படவேண்டும்.

எம். டி. ஜோவ்னில் (M. de Jouvenel) கூற்றுப்படி 'பொருளாதார முன்னேற்றத்திற்கு மூலதனத் திரட்சியும் தொழில் நுட்ப அறிவும் அவசியம்தான். ஆனால் அதனை ஏற்றுக் கொள்ளக் கூடிய மனநிலை மக்களுக்கு வேண்டும்.'[2]

பாயர், இயூஜின் பிளாக், எம். டி. ஜோவ்னில் முதலியோரின் கூற்றுப்படி பொருளாதார முன்னேற்றம் அடைவதற்குரிய வழிமுறைகள் செய்வதற்கு முன்னால், மக்கள் தயாராக்கப்பட வேண்டும்.

ஆனால் இன்றைய வளர்ச்சியடைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சி ஆரம்பக் கட்டங்களில் மக்களைத் தயாராக்கப்பட வேண்டிய கட்டாயம் ஏற்படவில்லை. அங்கெல்லாம் பொருளாதார வளர்ச்சி என்பது படிப்படியாக தொழில் நுட்ப, இயந்திரத் துறைகளில் மாற்றங்களை உருவாக்கிக் கொணர்ந்தது ஒன்றாகும். இத்தகைய வளர்ச்சியை வளர்ச்சியுறும் நாடுகள், உடனடியாக அடையும் நோக்கத்துடன் முன்னேறிய நாடுகளின் தொழில் நுட்ப அறிவையும், இயந்திரங்களையும் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகின்றனர். ஆனால் மக்கள் அதனை உடனே ஏற்றுக் கொள்ளக் கூடிய நிலையில் இல்லை. ஏனென்றால் நவீன இயந்திரங்கள் கொண்டு உற்பத்தியைப் பெருக்க வேண்டிய அளவுக்கு அங்காடி விரிந்திருப்பதில்லை. தவிர இவ் வியந்திரங்கள் அவர்களுக்குப் புதுமையாக இருப்பதால், அதனை இயக்குவிக்கக் கூடிய தொழில் நுட்ப அறிவும், திறனும், அவர்களுக்கு இருக்காது. மேல் நாட்டினரைப் பின்பற்றி அமைக்கப்பட்ட தொழில்துறை, வளர்ச்சியுறும் நாடுகளில் இலாபகரமாக அமையாதது மட்டுமல்ல; பொருளாதாரத்தில் பணவீக்கத்தையும் ஏற்படுத்துகின்றது. புதிய முறையில் தொழில் துறையை ஆரம்பிப்பதால் ஏற்கென்வே உள்ள சிறு தொழில்கள் நலிவுற்று வேலையின்மைப் பிரச்சினையைத் தோற்றுவிக்கின்றது. புதிதாக அமைக்கப்பட்ட தொழில்துறை முன்னேறாமல் இருந்தாலும், ஏற்கெனவே உள்ள சிறு தொழில்கள் நசிவதாலும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகுவதோடு மட்டுமல்லாமல் புதிதாக உழைப்பு மார்க்கெட்டுக்கு (Labour Market)

1. 'The Age of Development by E. R. Black, 'The Economic Journal' June 1960.

2. M. de Jouvenel's 'Paths to Economic Growth'

வரும் மக்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்க முடிவதில்லை. இதனால்தான் வளர்ச்சியுறும் நாடுகளில் பிரச்சினை மேலும் கடுமையாகின்றது.

இதிலிருந்து பெறப்படுவது யாதெனில் முன்னேறியுள்ள நாடுகளின் தொழில் நுட்ப அறிவினைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றக் கூடாது என்பதாம் அவ்வறிவு வழிகாட்டியாக இருக்கவேண்டுமே யன்றி பொருளாதார முன்னேற்றத்திற்கு வழியாக அமையக் கூடாது. நவீன தொழில் நுட்ப அறிவுக்குத் துணையாக (Supplement) இருக்க வேண்டுமே அன்றி அதனை ஒழித்துவிடக் கூடியதாக (Supplant) இருக்கக் கூடாது. ஆகவே ஏற்கெனவே உள்ள சிற்றளவுத் தொழிற்துறையினை அந்த நாட்டின் சூழ்நிலைக்கு ஏற்பச் சிறிது சிறிது சிறிதாக மாற்றத்தை ஏற்படுத்தித் தொழில் முன்னேற்றம் காணவேண்டும். இதை எவ்வாறு செய்வது, எவ்வாறு செய்வதற்கு மக்கள் ஆயத்தமாயிருக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். பின் அதைச் செம்மையாக முடிப்பதற்கு உதவிபுரிய வேண்டும்.

இந்தியாவிலும் திட்டக்குழு ஏராளமான முதலினைப் பயன்படுத்தி, மேல்நாட்டுத் தொழில் நுட்ப அறிவினைப் பயன்படுத்தி தொழில் துறை முன்னேற்றம் அடைந்துவிடலாம் எனக் கருதித் திட்டங்கள் இயற்றியது. ஆனால் இது ஏற்கெனவே உள்ள சிற்றளவுத் தொழில் துறையை மேலும் அழியச் செய்ததோடு மட்டுமல்லாமல் புதிதாக ஏற்பட்ட தொழில் துறையும் முன்னேறவில்லை. இன்றும் கூட பல்வேறு துறைகள் தங்கள் கொள்ளளவிற்கும் (Below capacity) குறைவாக வேலை செய்கின்றன. இதனால் இத்துறைகளில் போதிய வேலை வாய்ப்பு ஏற்படவில்லை. அத்துடன் சிற்றளவுத் தொழில்துறை நசிந்தாலும் வேலையில்லாப் பிரச்சினை பன்மடங்கு பெருகியுள்ளது. நவீன தொழில்துறை இந் நாட்டிற்குப் புதிதாகையால் இத்தொழில் துறையில் புதிய தொழில் முயல்வோர் தோன்றவில்லை.

ஆகவே இந்தியாவில் தொழில் துறையில் முன்னேற்றம் காண்பதற்குக் கிராமப் புறங்களில் சிற்றளவுத் தொழில்துறைக்கு நன்கு ஊக்கம் அளித்து வேலை வாய்ப்பினைப் பெருக்க வேண்டும். பின் சிறிது சிறிதாக இச்சிற்றளவுத் தொழில் துறையை வளர்ச்சி அடையச் செய்து, அதன் தொழில் நுட்பத்தில் மாறுதல்கள் செய்து பேரளவில் அதனைக் காலப் போக்கில் மாற்றி அமைக்க வேண்டும்.

# 3. தொழில் மயமாக்கல் — தக்க நிவாரணமாகுமா?

முதலாம் இரண்டாம் அதிகாரங்களிலுள்ள குறிப்புக்களைச் சற்றே ஊன்றிப்பார்ப்போமாயின், அவையாவும் பின் தங்கிய நாடுகளில் மூலதனத் திரட்சியின் அவசியத்தை வலியுறுத்துகின்றன. முந்தைய அதிகாரத்தில் விளக்கப் பட்டுள்ள அனைத்து மாதிரிப் படிவங்களும் இக் கருத்தின் சிறப்பை நன்கு வலியுறுத்துவனவாக அமைந்திருப்பது நோக்கிய உடனே புலனாகும். மூலதனப் பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்கி நாட்டின் ஆக்க சக்தியை அதிகரிக்க, சேமிப்பு - முதலீடு உள்ளிட்ட மூலதனத் திரட்சியை உயர்த்தி விடலாமென்பது பொருளாதாரத்தில் அடிப்படை நியதி. இவ் வுயர்வை தொழில் துறையிலிருந்து அதிவிரைவில் அடைந்திடலாமெனக் கருதுகின்றோர் தொழில் முன்னேற்றத்திற்கு வேண்டிய வழி வகைகளை எடுத்துக் கூறுகின்றனர். இவர்கள் ஒரு நாட்டில், தொழில் போதா வளர்ச்சி பெற்றுள்ள நிலையைப் பொருளாதார வளர்ச்சி குன்றியதாக இணை பொருள் படுத்திக் கூறுகின்றனர். இதற்குக் காரணம் இவ்விரு சூழ்நிலைகளிலும் அமையப்பெற்ற சிறப்பியல்புகள் பண்பொத்தவையாக இருக்கின்றன. மேலும், தொழில்களை மிகத் துரிதமான வேகத்தில் வளர்ச்சி பெறச் செய்வதின் வாயிலாக பொருளாதார மேம்பாட்டை விரைவில் அடைந்திடலாம். ஏனெனில், தொழில் மயக் கொள்கையைப் (Policy of Industrialisation) பொருளாதார வளர்ச்சியின் உயிர்த் துடிப்புள்ள இடம் என இவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

ஆலைத் தொழில்களை வளர்ச்சி பெறச் செய்யத் துடிப்பவர்கள் அவர்களுடைய கருத்தை வலியுறுத்தும் வகையில் பல காரணங்களைக் கூறுகின்றனர். முக்கியமாக மூன்று வழிகளை அமைத்துக் கொண்டு பின் தங்கிய நாடுகள், தொழில் முன்னேற்றத்தை இலக்காகக் கொண்டிருக்கின்றன. அதாவது தொழிற் கொள்கைக் குரிய

நோக்கங்களை கூறுகையில் அவற்றை மூன்று பிரிவுகளாக காணலாம். அவையாவன (1) பெருகிவரும் மக்கள் தொகைக்கு வேலை வாய்ப்பினை வழங்க வேண்டியது. (சில சந்தர்ப்பங்களில் ஏற்கெனவே வேலைக்குறைவினால் அவதி யுறுகின்ற வேளாண்மையைச் சார்ந்த மக்கள் தொகையையும் இது குறிப்பிடும்). (2) தலா வருமானத்தை அதிகரிப்பதின் வாயிலாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது. (3) பன்னாட்டு வணிகத்தில் செலுத்தல் நிலையில் சமன் பாட்டை (Balance of Payments) அடைய வேண்டியது.

மேம்பாடு பெற்றுள்ள மேலை நாடுகள் மேற் கூறப்பட்டுள்ள நோக்கங்களை அடைந்திட்ட காரணத்தினால், பின் தங்கிய நாடுகள் அப்பாதையில் அடிவைத்துத் துரித நடைபோட்டுச் செல்லத் தங்களை ஆயத்தம் செய்து கொள்ள விரும்பி, முனைந்து நிற்பதில் வியப்பேது மில்லை. இக் கட்டத்தில் தான் இக் கருத்தினர் மேற் கொள்ள விருக்கும் கொள்கையைச் செயல் படுத்துவதில் சிறிது தயங்கி நிற்க வேண்டியுள்ளது. ஏனெனில், தொழில் முன்னேற்றத்தைக் காட்டிலும், வேளாண்மைக்கு முதலிடம் அளிக்கப் பட்டால், பொருளாதார வளர்ச்சியை அடைந்திடலா மென வேறு ஒரு பிரிவினர் கருத்துத் தெரிவித்துள்ளனர். இவ்விரண்டு துறைகளுள், வேளாண்மை அல்லது ஆலைத் தொழில், முதன்மை பெற வல்ல தென்று ஒன்றினைத் தெளிவு செய்வதற்கு முன்பாக, இரண்டிற்கு முள்ள சில நன்மை தீமைகளைக் கூறி, இரு தொழில்களிடையே உள்ள தொடர்பினையும் விளக்கினால் தான், ஒன்றுபட்ட நிலையில் திட்ட வட்டமான முடிவை எடுக்க இயலும்.

பொருளாதாரம் வளர்ச்சியுறும் நிலையில் தீட்டப்படும் திட்டங்கள், பல துறைகளுள் தோன்றவிருக்கும் சம நிலையை மனதில் கொண்டு அமைய வேண்டும். பெரும்பாலும், அவை, இயற்கை மற்றும் நிதி வளங்கள் தொடர்பாக உள்ள வேறுபாடுகளைத் தெளிவாக்கிச் சித்திரித்தாலும் பின்வரும் மூன்று அணுகு முறைகளில் ஏதேனும் ஒன்றினை அனுசரித்துத் தான் இருக்க வேண்டும். முதலாவதாக, எதிர் காலத்தில் தொழில் மயமாக்கப் படவிருக்கும் பொருளாதாரத்தில் தற்பொழுதுள்ள வேளாண்மைத் துறையானது மிக்க உறுதி படைத்த கட்டுமானமாக அமைக்கப் பட வேண்டியது இன்றியமையாத தாகும். இரண்டாவதாக, அதி விரைவில் துரித வேகத்துடன் இத் தொழில் மயக் கொள்கை செயலாற்றப் பட்டாலன்றி, நலிந்து நச்சுச் சுழலில் சிக்கிக் கொண்டுள்ள பொருளாதாரங்களுக்கு வேறு மீட்சி வழிகள் கிடையா. இறுதியாக, வேளாண்மை மற்றும் தொழில் கொள்கைகளைத்

தனித்தனியாகப் பிரித்து வைத்து விவாதிக்காமல், அவை பின்னப் பட்ட வகையில் அமைந்துள்ள இருதுறைகள் என்றே எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்வுண்மையை ஏற்றுக் கொண்ட பிறகு தான் வளர்ச்சித் திட்டங்கள் உருப் பெற வேண்டும். இம் மூன்று அணுகு முறைகளும் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருக்கின்ற காரணத்தினுல் அவற்றை இன்னும் சற்று அண்மை யிலிருந்து ஆராய வேண்டியுள்ளது.

பின்தங்கிய நாடுகளில் ஏறத்தாழ 50 சதவீதத்திற்கு அதிகமான அளவில், நாட்டு வளமானது தொன்று தொட்டு மக்கள் செய்து வருகின்ற உழவுத்தொழிலிலிருந்து கிடைக்கின்றது என்று கூறலாம். மேலும் மக்கள் தொகையில் 70 சதவீதத்திற்கும் அதிகமாகவே விவசாயிகள் தங்கள் உழைப்பினை வழங்குகின்றனர். இவ்விரண்டு கருத்துகளும், வரலாற்று நிகழ்ச்சிகள் காட்டும் தத்துவங்களை யொட்டி நடைமுறைக்கு உகந்தன (Pragmatic) வாகும். இவற்றைக் கொண்டு பார்க்கும் பொழுது வேளாண்மைத் துறையில் வளர்ச்சி நிகழ்ந்தேறினுல்தான் பொருளாதாரமும் மேம் பாடையும் எனக் கூற முடியும்.

இதனைத் தழுவிய நிலையிலுள்ள மற்றொரு வாதத்தையும் பார்ப் போம். விவசாயத்தை நம்பியுள்ள நாடுகளில் தோட்டப்பண்ணைப் பயிர்களுக்குத்தாம் சிறப்பளிக்கப்பட்டிருக்கும். அது தவிர, அதிக இலாபத்தைத் தரத்தக்க வாணிகப் பயிர்களை மட்டும் பேரளவில் சாகுபடி செய்து ஏற்றுமதி செய்வதுமுண்டு. சுருங்கக் கூறின், அத்தியாவசியமாகக் கருதப்படுகின்ற உணவுப் பொருள்களை அதிக அளவில் பயிர் செய்ய மாட்டார்கள். போதிய அளவு ஊட்டச் சத்தில்லாத வகையில் பற்றுக்குறையாக உள்ள உணவுப் பண்டங்கள் மக்களிடையே பகிர்ந்தளிக்கப்படுகின்றன. இவற்றை யெல்லாம் பார்க்கையில், வேளாண்மைத் துறையின் கட்டுமானம் உண்மையாக வலுப்பெற்றுள்ளதா என்பதில் ஐயம் ஏற்படு கின்றது. இதற்குப் பரிகாரம், அத்துறையை வளர்ச்சியடையச் செய்வதில்தான் உள்ளது.

மேலும், வேளாண்மையானது இயந்திர மயமாக்கப் பட்ட (Mechanisation of agriculture) பிறகு தான் தொழில் மயக் கொள்கைகளைச் செயல் படுத்த முடியும். மற்றொரு வகையில் கூறினுல், தொழில் நுட்ப மாற்றங்களைத் (Technological changes) தம்முட் கொண்ட தொழிற் புரட்சி (Industrial Revolution) தோன்ற வேண்டுமென்ருல் முதலில் வேளாண்மைத் துறையில் அத்தகைய மாறுதல்கள் புகுத்தப்பட வேண்டும். அதாவது,

வேளாண்மையாகிய அடித்தளம் வலுப் பெற்றிருந்தால்தான் அதன் மேல் எழுப்பப்படுகின்ற ஆலைத்தொழில் எனும் கட்டடமும் உறுதியுடையதாக இருக்கும்.

சேமிப்பு – முதலீடு மிகக் குறைவாக உள்ள நிலையில், மூல தனச் செறிவுடைய (மூலதனத் தீவிரமுடைய – Capital-intensive) ஆலைத் தொழில்களை மேற்கொள்ளுவது உகந்ததோர் கொள்கை யாக அமையாது; அடிப்படைத் தேவைகளும் நிறைவு செய்யப் பெரு; இத்தகைய நாடுகளில் மக்கள் தொகையும் பெருகி இருக்கும். அவ்வமயம் தொழில் மயமாக்கப்படும் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டால், வேலையின்மைப் பளு மேலும் தீவிரப் படும். இறுதியாக, சமுதாய அமைப்புக்களில் பல மாறுதல்கள் ஏற்படுத்துவதின் விளைவாக நகர்ப்புற வளர்ச்சி (Urbanisation or Urban Development) தோன்றுவதற்கு இவை வழி வகுக்கின்றன. கிராமப்புறங்களிலிருந்து இடம் பெயர்ந்து நகர்ப்புறங்களுக்கு வரும் மக்கள் இதுகாறும் செய்து வந்த தொழிலை (வேளாண்மையை) விட்டு விடவேண்டிய சூழ்நிலை உருவாகின்றது. இவர்களுடைய உணவுத் தேவையை உழவுத்தொழில் மேலும் ஊக்குவிப்பதின் மூலம்தான் நிறைவு செய்ய முடியும் என்ற மற்றொரு காரணத்தை யும் காட்டி விவசாயத் துறை திண்மையுடையதாக விருந்தால்தான் தொழில் கட்டுமானமும் அதன் மீது வலுப் பெற்று அமையும் எனச் சிலர் கூறுவர்.

இரண்டாவது கருத்துத் தொகுதியினர் (School of thought) தொழில்மயக் கொள்கையைக் கடைப்பிடித்தால்தான் பின்தங்கிய நாடுகள் செழிப்பினை அடைய முடியும் எனக் கூறுகின்றனர். வறுமையுற்ற பொருளாதாரத்தைப் பற்பல சீர்குலைவுகளிலிருந்து மீட்டுத் தருவதற்கு இது ஒன்றுதான் மிகச் சிறந்த வழியென அவர் கள் அறுதியிட்டுக் கூறுவர். தொழில் முன்னேற்றத்தையும் பொருளாதார வளர்ச்சியையும் ஒரே பொருள் தருகின்ற வெவ்வேறு சொற்கள்தாம் என அவர்கள் கருதியுள்ளார்கள்.

இக்கருத்திற்குப் பல ஆதாரங்களையும் இச் சிந்தனையாளர்கள் எடுத்துரைத்தனர். மேம்பாடு பெற்று விளங்குகின்ற மேலை நாடு களில் வாழ்க்கைத்தரம் அபரிமிதமாக உயர்ந்திருப்பதற்குக் காரணம், அந்நாடுகள் மேற்கொண்ட தொழில் மயக் கொள்கை யாகும். தனிநபர் உற்பத்தியின் மதிப்பு (Per head value of out put) வேளாண்மையைக் காட்டிலும் தொழில் துறையில்தான் உயர்ந்து காணப்பட்டும் விரைவாக அதிகரிக்கவும் செய்கின்றது. செல்வம் மிகுந்த இந்நாடுகளில் மக்களில் பெரும்பான்மையினர்

விவசாயத் துறையை விடத் தொழில் துறைகளில் தாம் பணிபுரி கின்றனர். எடுத்துக் காட்டாக ருஷியா, ஜப்பான், மற்றும் ஜெர்மனியைக் குறிப்பிடலாம்.

இரண்டாவதாகக் குறிப்பிட்ட பருப்பொருள் சார்ந்த முறையில் இயங்குகின்ற பின்தங்கிய பொருளாதாரங்கள் மூலப் பொருள்களை மட்டும் ஏற்றுமதி செய்து பன்னாட்டு வணிகத்தில் செயல்படு கின்றன. (இதன் தீய விளைவுகள் ஏற்கெனவே முதலாம் அதிகா ரத்தில் விளக்கப்பட்டுள்ளன.) தொழில் மயமாக்கப் படுவதன் மூலம், பொருளாதாரப் பரவலைத் (Economic diversification) தோற்றுவிப்பதுடன் முன்பு நிலவிய பொருளாதார நிலையின்மை யைத் (Economic instability) தவிர்க்கலாம். தாதுப் பொருள்கள் போன்றவை ஏற்றுமதி செய்யப்படுவதற்கு முன்பு அவற்றைப் பக்குவப்படுத்தி அனுப்பி வைப்பதன் மூலம் அதிக விலையைப் பெற்று, சாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையை அடைய முடியும். அவ்வாறு பண்படுத்த உதவுவது தொழில்களாலன்றோ! மூன்றாவதாக, வளர்ந்து வரும் பொருளாதாரங்களிலுள்ள பொறி யியல், போக்குவரத்து எரிபொருள், மின்சாரம் போன்ற துறை களில் முன்னேற்றத்தை விரைவாகக் காண தொழில் வளர்ச்சியின் குவிவுதான் பெரிதும் உதவுகின்றது.

மேலும், வேளாண்மை மற்றும் சில்லறை வியாபாரங்களில் ஈடுபட்ட நிலையில் பின்தங்கிய நாடுகளில் பலர் போதிய வேலை வாய்ப்பின்றி அவதியுறுகின்றனர். சமுதாயத்திற்கு இவர்கள் வழங்கவல்ல உற்பத்தித் திறன் மிகக் குறைந்து, அநேகமாக பூச்சிய மாகக் கூட முற்றுப் பெறலாம். தொழில்கள் நிறுவப் படுமாயின், உபரியாக விளங்குகின்ற உழைப்பைத் தங்கள்பால் அமர்த்திக் கொள்ளலாம்.

அடுத்தாற்போல், குறைந்து செல் விளைவு விதி அல்லது உயர்ந்து செல் செலவு விதியை (Law of Diminishing Returns or the Law of Increasing costs) இயற்கை சார்ந்த விவசாயத்தில் வெகு விரைவில் எதிர் கொள்ள வேண்டியிருக்கும். விளைபொருள் களின் தேவை நெகிழ்ச்சி மிகக் குறைந்த (less elastic demand) நிலையில் இருப்பது இதற்குரிய ஒரு காரணமாகும். ஆகவே நெகிழ்வுத்திறன் அதிகமாகவும், பண்டங்களின் தேவை நெகிழ்ச்சி கூடுதலாகவும் அமையப் பெற்ற தொழில்களை வரவேற்கலாம்.

தொழில் வளர்ச்சியானது, அதன் ஆரம்பக் கட்டங்களில், சந்தை, உழைப்பு, மற்றும் பல பொதுப்பணி வசதிகள் தொடர்பு கொண்ட நகர்ப் பகுதி முன்னேற்றத்தைத் தோற்றுவிக்கின்றது;

காலப்போக்கில், அதாவது மக்கள் நகர்ப்புறங்களில் குடிபுகுந்த பின்பு மக்கள் தொகை பெருக்க வீதம், பெருவாரியாகக் குறைந்திருக்கும். இவ்வாறு தொழில்மயக் கொள்கை, மக்கள் தொகைப் பிரச்சினையை மறைமுகமாகத் தீர்க்க உதவுகின்றது. உற்பத்தி அதிகரிப்பைக் கொண்டு பெருகிவரும் மக்கள் தொகைக்குத் தொழில்கள் ஈடுகொடுத்து அப்பிரச்சினைக்குத் தீர்வு காணுகின்றது. இது நேரடித் தீர்வாகும்.

இறுதியாக, தொழில் மயக் கொள்கையைப் பற்றிக் கற்பனை செய்யும் ஒருவர் தனது நெஞ்சத்தைத் தன்னை அறியாமலேயே அதன்பால் பறிகொடுத்து விடுகிறார். அந்த அளவிற்கு அதன் மீது மட்டற்ற மோகம் கொண்டிருப்பார். பொருளாதார வளர்ச்சி குன்றிய நாடுகளில் நாகரிகத்தையும், தொழில் முன்னேற்றத்தையும் சமன் படுத்திக் கூறுவது இயல்பாகி விட்ட இக்காலத்தில், தொழில் துறைதான் விவசாயத்தைக் காட்டிலும் மேம்பாட்டைத் தோற்றுவிக்க வல்லதாகும். என்ற கருத்தை இவ்விரண்டாம் தொகுதியினர் வாதிடுகின்றனர்.

இனி, மூன்றாவதாக எழுந்துள்ள கருத்தானது வேளாண்மை, தொழில் துறைகளுக்கிடையில் நெருங்கிய தொடர்பு இருக்கின்றபடியால் ஒன்றின் சிறப்பைக் குறைத்து மற்றொன்றின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்தலாகாது என்பதுதான். இரு துறைகள் சமச் சிறப்புப் பெற்று விளங்குபவை என்பது இக் கருத்தினரின் ஒருமித்த முடிவாகும். இக் கண்ணோட்டத்தின்படி, ஆலைத்தொழிலில் விளையும் நன்மைகளினால் வேளாண்மையைக் குறைத்துக்கூறுவது மாறாக வேளாண்மையில் தோன்றுகிற நன்மைகளைக் கொண்டு தொழில்களைப் பழித்துக் கூறுவது—இவ்விரண்டும் முறையாகாது எனக்கூறி அதற்குச் சில ஆதாரங்களும் வழங்கியது. எடுத்துக் காட்டாக இந்தியப் பொருளாதாரத்தை ஆராய ஏற்பட்டால் விவசாயத்துறையிலிருந்து எழுகின்ற வருமானத்தின் அளவைப் பெருக்கினாலன்றி, தொழில்கள் முன்னேறுவது தடைபட்டுக் கொண்டிருக்கும். பின்தங்கிய நாடுகளிலுள்ள வேளாண்மைத் துறையிலோ பல பிற்போக்குச் சக்திகள் செயல்பட்டுக் கொண்டேயிருக்கும். குறிப்பாக பொருளாதாரத்தின் பரப்பு விரிவு பெற்றதாக இருந்தாலும் அதற்கேற்ப உறுதித் தேவை அமையப் பெறாக் காரணத்தினால் தொழில் வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது. கிராமப் புறங்களிலுள்ளோரின் வருமானம் அதிகரிக்கப் படவேண்டுமெனில் தீவிர சாகுபடி முறை (Intensive method of Cultivation) புகுத்தப் பட்டு விவசாய விளைபொருளின் உற்பத்தியைப்பெருக்கவேண்டும். இத் தீவிரச் சாகுபடி முறையை வெற்றிகரமாகச் செயல்படுத்த

இரசாயன உரங்கள், பூச்சிக் கொல்லிகள், சுலபமாக இயக்க வல்ல சிறு இயந்திரங்கள் போன்றவை உடனடியாக உற்பத்தி செய்யப் பட்டு வழங்கப் படவேண்டும். தொழில்கள் நிறுவப்படுவதனுல் தான் இது சாத்தியமாகின்றது. இந்தியா போன்ற நாடுகளில் இத்தகைய தொழில்களின் 'மறுஊட்டு' (Feed Back) வளர்ச்சி ஆரம்பக் கட்டங்களில் அவசியமாகின்றது. சுருங்கக் கூறின், விளை நிலமும் தொழிற்சாலையும் இணைந்து இயங்கக் கூடியவை எனலாம்.

வேளாண்மை அபிவிருத்தியை நம்பித்தான் தொழில் முன்னேற்றம் உள்ளது. அவ்வுற்பத்தி அதிகரிக்கப் படாத நிலையில், தொழில் வாயிற் பண்டங்கள் பேரளவில் பெருக்கப் படுவது இலாபகரமாக அமையாது. தொழில் மற்றும் வேளாண் மைப் புரட்சிகள் அடுத்தடுத்துப் பல நாடுகளில் நிகழ்ந்தேறுவதற்கு இதுதான் முக்கிய காரணமாக உள்ளது. ஏறத்தாழ நிரந்தரமான தேக்க நிலையை அடைந்துள்ள வேளாண்மையுடைய நாடுகளில் தொழில் வளர்ச்சி குன்றி இருப்பதற்கு இக்காரணத்தை ஆதார மாகக் கூறலாம்.

இது தவிர, வேளாண்மை-தொழில், இவ்விரண்டும் சமநிலை வளர்ச்சி பெறுவதற்குரிய மூன்று காரணங்களையும் சுட்டிக் காட்டுவர். முதலாவதாக, நகர்ப்புற அபிவிருத்திகளைத் தோற்று விக்கும் தொழில்மயக் கொள்கை, இதுகாறும் வேளாண்மையை நம்பியிருந்தோரைக் கிராமங்களிலிருந்து இடம் பெயரச் செய்யும். அதன் விளைவாக உணவுப்பண்டங்களின் உற்பத்தி அளவு குறை யும். இதனை விவசாயம் ஈடு செய்யாவிடில் ஏற்கெனவே பற்றாக் குறையாக உள்ள மூலதனத்தைக் கொண்டு வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்யவேண்டிய நெருக்கடி நிலைமை தோன்றலாம். அந்த அளவிற்குத் தொழில் வளர்ச்சி பாதிக்கப்படலாம். நுகர்வு நாட்டம் அதிகமாக உள்ள பின்தங்கிய நாடுகளில் வளர்ச்சி காரணமாக வருமானம் சிறிதளவு உயர்வு பெற்றால் கூட உணவு போன்ற நுகர்வுப் பொருள்களைதான் மக்கள் அதிகமாக துய்க்க விரும்புவார்கள். ஆதலால், வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களில் உணவுப் பொருள்களின் அளிப்பு அதிகமாக இருத்தல் வேண்டும்.

இரண்டாவதாக, தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்களைக் குறைந்த செலவில் வேளாண்மைத்துறையிலிருந்து உற்பத்தி செய்ய ஏதேனும் வழி இருந்தால்தான், இத்துறையி லிருந்து தொழில்துறைக்கு இடம்மாறுகின்ற உற்பத்திக் காரணி

களால் பொருளாதாரத்திற்கு நன்மை கிடைக்கின்றது. இது சரிவர நடந்தேருவிட்டால், தொழில்கள் வாட்ட நிலையை வெகுவிரைவி லேயே அடைந்து விடலாம்.

இறுதியாகத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாததாக விளங் கும் மூலதனத்தை, விவசாயத்தை விரிவு படுத்தி, உற்பத்தியைப் பெருக்கி, உபரியை ஏற்றுமதி செய்து, அந்நியச் செலாவணியை (Foreign Exchange) உபரியாக அடையலாம். வேளாண்மை நலிவுற்றிருந்தால் இந் நன்மையை அடைய முடியாது.

வேளாண்மையின் முன்னேற்றம் தொழில் வளர்ச்சியுடன் இணைக்கப்பட்டுள்ள உண்மை நிலவரமானது நாடுகளிடையே பல்வேறு வகைகளாக உள்ளன. உதாரணமாக இலங்கையில் ஏற்றுமதியாகின்ற விளை பொருள்கள் அந் நாட்டிற்கு மிகுதியான வருவாயை இன்றும் வழங்கி வருகின்றது. மாருக பர்மா, தாய்லாந்து போன்ற நாடுகள் இதுகாறும் அரிசியை ஏற்றுமதி செய்திருந்தாலும் தற்சமயம் வாட்டமுற்றுள்ளன.

உள நிலையையும், அரசியல் அமைப்பையும் அடிப்படையாகக் கொண்டு பின் தங்கிய நாடுகள் சில தொழில்களை நிறுவுவது முண்டு. அந்நிலையிலும் வே ள ா ண் மை வளர்ச்சியுறத்தான் வேண்டும். விளை பொருள் உற்பத்திப் பெருக்கத்தால் முளைத்து வரும் தொழில்களுக்கு மூலதனம் மற்றும் விரிவான சந்தையை விவசாயத்துறை வழங்கும். அதற்கு இணையாக, எஞ்சியுள்ள உழைப்பினைத் தொழில்கள் இரு கரங்கள் நீட்டித் தங்கள்பால் ஏற்றுக் கொள்கின்றன. இவ்வாறு தொழில் மற்றும் வேளாண்மைத் துறைகள் ஒ ன் றி ணை ந் து முழுமையாக—வல்லவையாகத்— திகழ்கின்றன.

எனவே, தொழில் வளர்ச்சி காண வேண்டுமெனில் வேளாண் மையில் முன்னேற்றமிருக்க வேண்டியது அவசியமாகின்றது. ஒன்றையொன்று தழுவிய முறையில் கொள்கைகள் செயல்படுத்தப் பட்டால்தான் இருதுறைகளுக்கும் உரிய நன்மைகள் அவற்றிற்குக் கிடைக்கப் பெறுகின்றன. 'காமென்வெல்த்' கொழும்புத் திட்டம் (Commonwealth Colombo Plan), மற்றும் சில கம்யூனிச நா டு களில் வகுக்கப்பட்டு வெற்றி கண்டுள்ள சில பொருளாதாரத் திட்டங்கள் இக் கோட்பாட்டின் அடிப்படையில் உருவானதென்ற உண்மையைக் கொண்டு, இக் கண்ணோட்டத்தின் சிறப்பினை உணர்ந்து கொள்ளலாம். பின் தங்கிய நாடுகள் இக் கோட்பாட் டைத் தங்கு தடை ஏதுமின்றி மேற் கொண்டு வெற்றியை அடைய முடியுமென்பதில் ஐயமேதுமில்லை.

**தொழில் மயமாக்குவதிலுள்ள இடையூறுகள்**

**சாதக நிலை**

பத்தொன்பதாம் நூற்றுண்டில் இங்கிலாந்து போன்ற நாடுகளின் தொழில் வளர்ச்சியைக் நோக்கினுல், அது திட்டமிடப்படா வகையில் எழுந்த தொன்ருகும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். சுமார் எண்பது ஆண்டுகளுக்குப் பின் தான் அரசு தலையீட்டினுல் சில ஒழுங்கு முறைகள் இத்துறையில் புகுத்தப்பட்டன. ஏறத்தாழ இதே பாதையை பெல்ஜியம், ஃபிரான்ஸ், ஜெர்மனி போன்ற அண்டை நாடுகள் வகுத்துக் கொண்டன. இதற்கு முற்றிலும் மாறுபட்ட விதத்தில், இன்றைய பின் தங்கிய நர்டுகள் தத்தம் நாடுகளில் தொழில் வளர்ச்சியினை விரைவிலேயே பெறுவதற்கு எண்ணற்ற சாத்தியக் கூறுகள் உள்ளன. இன்று இப் பொருளாதாரங்களுக்குரிய சில நன்மைகள், அன்று இங்கிலாந்து போன்ற நாடுகளிடம் இல்லாமலிருந்தன. பல ஆண்டுகளின் கடும் உழைப்பின் பயனுகப் புதிய கண்டு பிடிப்புகளை மேம்பாடு கண்ட நாட்டு விஞ்ஞானிகள் தொழில் துறையில் புகுத்தினர்; அவற்றின் படிவங்களைப் பின் தங்கிய நாடுகள் தங்கள் அமைப்புக்கேற்றவாறு பயன்படுத்தி நன்மை பெறலாம்.

இன்று, பல பன்னுட்டு நிறுவனங்கள் வளர்ச்சியுறும் நாடுகளுக்கு மனமுவந்து நிதி வசதி அளிக்க முன் வருவதால் மூலதனப் பிரச்சினை ஓரளவாக மட்டுப்படுத்தப்பட்ட நிலையில் உள்ளது. அவற்றில் தனியார் வங்கிகளையும், தொழிற்சாலைகளையும் குறிப்பிடலாம். அவற்றிற்குத் தேவையானதெல்லாம் எடுத்துக் கொண்டுள்ள தொழில் திட்டங்கள் செவ்வனே நிறைவு செய்யப்பட்டுத் தங்களது சக்தியினை நிலை நாட்ட வேண்டுமென்பது தான். அதாவது கடன் பெற்ற நிறுவனங்கள் தங்களது கடன் தீர்வுத் திறனை (Solvency) உறுதிப்படுத்தி விட்டால் போதுமானது. ஆரம்ப நிலைகளில் அயல் நாட்டினரது தரத்தை அடைந்திட முடியாது. எனினும் காலப் போக்கில் இக் குறையையும் நிவர்த்தி செய்து மேலும் கடனுதவியைப் பெற்று மூலதனப் பற்ருக் குறையைப் போக்கிக் கொள்ளலாம்.

போதுமான மூலதனம் மட்டும் இருந்தால் அதிலிருந்து வியத்தகு சாதனைகளை அடைந்திட முடியாது. தொழில் நுட்ப அறிவு மற்றும் நிர்வாகத்தின் உள்ளீட்ட சரியான வகை முறை நுண்ணறிவாற்றலையும் (Know-how) சரிவரப் பயன் படுத்தினுல் தான் எதிர் பார்க்கும் பலனை அடைய இயலும். இது பெரிய தொரு முட்டுக் கட்டையாக விளங்காது என்பது திண்ணம். ஏனெனில் மூலதனத்துடன் அயல் நாட்டு நிறுவனங்கள் இவ்வாற்றலையும் கூடவே ஒப்பந்தப்படி அனுப்பி வைக்கின்றன.

மேலும் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான இன்னெரு சூழ் நிலையும் வளர்ச்சியுறும் நாடுகளில் காண இயலுகின்றது. புதிய சூழ்நிலைகளை எதிர் கொள்ளவல்ல மக்கள் வாழக்கூடிய நிலை, அத்தகைய நாடுகளில் இன்று காணப்படுகின்றன. பொதுக்கல்வி வசதி அநேகமாக அனைவருக்கும் கிடைக்கப் பெற்ற நிலையில், தொழில் நுட்பம் மற்றும் நிர்வாக தொடர்பாக உள்ள கல்வியை கற்பதற்கு மக்கள் விழைகின்றனர். இவ்வறிவினைப் பெருக்கிக் கொள்ள அயல் நாடுகளுக்குச் சிலர் செல்கின்றனர். எங்கும் புதுமை காண வேண்டுமென்ற புத்துணர்ச்சி யொன்று கிளைத் தெழுந்த நிலையினைக் காண முடிகின்றது.

கடந்த சில ஆண்டுகளாக வளர்ச்சியுறும் நாடுகளில், தொழில் முன்னேற்றத்திற்குகந்த உள்ளமைப்புத் திட்டங்களில் அரசாங்கம் கணிசமான முதலீடுகளைச் செய்து வந்ததினுல், இவ்வடித்தளத்தில் தொழில் கட்டுமானத்தைச் சுலபமாக அமைக்க முடிகின்றது.

தொழில் வளர்ச்சிக் கொள்கையைப் பரப்பும் வகையில் அதற்கு உற்றதோர் சூழலை அரசாங்கம் அமைத்துக் கொடுக்க முன் வரும். தொழிற்பேட்டைகளை ஆரம்பித்தல், புதிய தொழில்களுக்கு வரிச்சலுகை அளித்தல், கடன் வசதிகள் வழங்குதல் போன்ற உதவிகளை அது தனது தலையாய பொறுப்பாகக் கருதிப் பெரு மளவில் செய்து வருகின்றது. தொழில் துறையிலிருந்து கவர்ச்சி கரமான இலாபம் இனி தனக்கு கிடைக்கலாம் என்ற எண்ணத்தில் இதுகாறும் முதலீடு செய்யாதிருந்த தொழில் அதிபர்கள் ஆலைகளை நிறுவி, இயக்குவதற்கென பணத்தை ஒதுக்க லாம். கலப்புப் பொருளாதாரத்தின் (Mixed Economy) சீரிய நன்மைகளை அவர்கள் உணரவாரம்பிக்கின்றனர்.

சந்தை விரிவு படைத்ததாக இருந்தால்தான் தொழில் வளர்ச்சி மென்மேலும் சிறப்புற்று விளங்க இயலும். பின் தங்கிய நாடுகள் தங்களது பொருளாதாரங்களை வளர்ச்சியுறச் செய்கையில், கல்வி, நகர்ப்புற வளர்ச்சி வாழ்க்கைத்தரம் போன்ற துறைகளில் முன்னேற்றம் காணும் தருவாயில், சந்தையும் வளர்ச்சி பெறு வதைப் பார்க்கலாம். முன்பு விற்பனையாகாத பண்டங்களுக்கு உறுதித் தேவை ஏற்பட்டு அவை தேங்கிக் கிடக்காமல் விற்று விடக்கூடும். புதுமையான பண்டங்களுக்குத் தேவையைப் பிறப் பிக்கும் பொருட்டு விளம்பரங்களின் பங்கினை இங்கு மிகைப் படுத்திக் கூறுவது உகந்ததன்று. இச்சக்திகள் யாவும் பின் னணியில் இயங்கிய வண்ணம், தொழில் வாய்ப்புகள் பெருகப் பொருளாதார வளர்ச்சிக்கு அடிகோலுகின்றன.

**பாதக நிலை**

சாதகமான சக்திகள் பின் தங்கிய நாடுகளுடைய பொருளா தார வளர்ச்சிக்கு உறுதுணையாக விளக்குவதாகக் கொண்டாலும், அந்நிலையில் சில குறைகள் இல்லாமல் இல்லை. உதாரணமாக என்னதான் மூலதனமும், விஞ்ஞான அறிவாற்றலும் மேல் நாடு களிலிருந்து 'இறக்குமதி' செய்யப்பட்டாலும், அந்நாடுகளின் மொத்தத் தொழில் வளர்ச்சியின் மிக நுட்பமான வீதாச் சாரத்தை யுடைய தொழில் வளர்ச்சிதான் பின் தங்கிய நாடுகள் கண்ட சாதனையாக இருக்கும். வளர்ச்சியுற்ற நாடுகளின் நிலையை வளர்ச்சியுறுகின்ற நாடுகள் கனவிலும் அடைய முடியாது என்பது மறுக்க முடியாத ஓர் உண்மையாகும். பின் தங்கிய நாடுகளின் சக்தியைக் குறை கூறும் பொருட்டு இதனைக் கூறவில்லை.

கடந்த நூற்றாண்டிலிருந்ததைக் காட்டிலும், அதிக அளவு மூல தனத்தைத் தற்போது பெற்றிடலாமெனப் பின் தங்கிய நாடுகள் கருதினாலும், அதனை அடைவதற்குரிய கடும் போட்டியை சமாளித்து வெற்றி காண வேண்டும். ஆனால் இன்றைய உலகச் சூழ்நிலையில் அந்நிய மூலதனத்தைப் பேரளவில் பெற வேண்டு மானால், அதற்கு அந்நாட்டில் நிலையான பொருளாதாரக் கொள் கைகள், அரசியல் நிலைகள் சாதகமாக அமைய வேண்டும்.

அயல் நாட்டுத் தொழில் அதிபர்களில் மிகச் சிறுபான்மை யினர்தாம் பின் தங்கிய நாடுகளில் துணிந்து முதலீடு செய்ய ஆயத்தமாக இருப்பார்கள். அவ்வாறு வழங்கப்பட்ட மூலதனம் பெரும்பாலும் உள்ளமைப்பினை உருவாக்கி அபிவிருத்தி செய் வதற்கெனப் பயன் படுத்தப்படும். மேலும் தங்களது இயந்திரங் களை விற்றுவிட மார்க்கெட் கிடைக்கும் என்ற நிலையில் குறைந்த காலக் கடன்களை அயல் நாட்டினர் உதவி புரிய முன்வருகின்றனர் என்பதை இங்கு குறிப்பிட வேண்டும்.

விஞ்ஞான வளர்ச்சி கண்டுள்ள மேலை நாடுகளில், தொழில் நுண்ணறிவு மிகவும் ஆற்றல் படைத்ததாக இருக்கும். உயரிய விலையுடைய பூதாகாரமான இயந்திரங்களைக் கண்டு பிடித்து இயக்குவதில் வல்லமை பெற்றவர்களாகப் பொறியியல் நிபுணர்கள் விளங்கும் காரணத்தினால், மிகப் பரந்த சந்தைகளின் தேவைகளை நிறைவாக்கும் வகையில் அவ் வியந்திரங்கள் உற்பத்தி அளவினைப் பெருக்கி விடுகின்றன. ஆனால், போதிய மூலதனம் இல்லாத காரணத்தினாலும், வளர்ச்சி குன்றிய நாடுகளில் சந்தை மிகக் குறு கலாக அமைந்துள்ளதாலும், மேம்பாடு கொண்ட தொழில் நுட்பங் களைப் பயன் படுத்த இயலாமல் போய் விடுகிறது. இவ்விரு குறை

களையும் நிவாரணம் செய்யும் வகையில் அத்தகைய இயந்திரங்கள் இறக்குமதி செய்யப் படுமாயின், அவற்றைக் கட்டுப்படுத்தத் தகுதியுடையவர்கள் அநேகமாக விலை முற்றுரிமை பெறக் கூடிய (பெற்றுள்ள) விற்பனையாளர்களாகத்தான் இருப்பார்கள். பின் தங்கிய நாடுகளில் விற்பனைச் சர்வாதிகாரம் நிலைபெறுமாயின் அதனின்று தோன்றும் தீய விளைவுகளைக் கற்பனை செய்து காண விட்டு விடுவோமாக.

கொக்கோ கோலா, ஃபோர்டு மோட்டார் கார், சிங்கர் தையல் இயந்திரங்கள் போன்ற பொருள்கள் பன்னாட்டு மேடையில், தரத்தில் தலைசிறந்து விளங்குகின்றன. நற் பெயரினைப் பெற்றுள்ள இப்பண்டங்களிடம் இருந்து வெளிப்படுகின்ற போட்டியைப் பின் தங்கிய நாடுகளில் புதிதாகத் தோன்றுகின்ற தொழில்களால் சமாளிக்க முடியாமல் போகலாம். இப் போட்டியைத் தவிர்க்கும் பொருட்டு நுகர்வோர் கைகளில் அவர்கள் விரும்பாத பொருள்களைத் திணிக்க அரசாங்கம் விரும்பி செயல்படின் குழந்தைப் பருவத்திலுள்ள தொழிலை ஊக்குவிக்கலாம். ஆனால் அதே வேளையில் தரமுடைய பண்டங்களின் உற்பத்தியைக் கட்டுப்படுத்தாமல் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும்.

புதிய பண்டங்களை நுகர்ந்து அனுபவங்கொண்ட நுகர்வோர் மட்டுமன்றி பின்தங்கிய நாடுகளில் செயல்பட்டுக்கொண்டிருக்கும் தொழிலதிபர்களும், வணிகர்களும் தயக்கத்தைக் காட்டுவார்கள். நுகர்வோர்க்கும், ஏற்கெனவே சுழற்சியில் இருக்கும் பண்டங்களுக்குமிடையே பலகாலமாக உருவாகியுள்ள தொழில் நற்பெயரினை (goodwill) முறிப்பதால் அதிக இலாபத்தைப் பெற்றுவிட முடியாது என இவர்கள் எண்ணுவார்கள்.

பன்னாட்டு மட்டத்தில், போட்டி தொடர்பாக எழும் மற்றொரு பிரச்சினையையும், புத்துயிர் பெறுகின்ற தொழில்கள் எதிர்த்து நிற்க வேண்டியுள்ளது. ஜப்பான் போன்ற நாடுகள் உற்பத்தி செய்கின்ற பலதரப்பட்ட மிக நேர்த்தியான பண்டங்களுடன் போட்டி போட்டுச் சமாளிப்பது, வளர்ச்சியுற்ற நாடுகளுக்கே சிரமமாக உள்ளது. மேம்பாடு அமைந்த நாடுகளின் நிலைமையே அவ்வாறு இருக்கும் பொழுது பின்தங்கிய நாடுகளின் நிலையை எண்ணிப் பார்க்கலாம்.

இரண்டாம் உலகப் போருக்குப்பின் தொழில் துறையில் மாபெரும் முன்னேற்றம் கண்டுள்ளதால், பல மேலை நாடுகளில் உபரிக்கொள்ளவுடைய (Excess capacity) தொழில்கள் இயங்கலாயின, உற்பத்தி அளவு அபரிமிதமான நிலைக்கு உயர்த்தப்

பட்டு, பண்டங்களின் இருப்பில் தேக்க நிலை ஒன்று உருவாகின்றது. ஏனெனில் எச்சமாகக் கருதப்பட்ட பொருள்களை வளர்ச்சியுற்ற நாடுகள், பின்தங்கிய நாடுகளுக்கு மிகக் குறைந்த விலையில் 'குவித்தல்' [டம்ப்பிங் (Dumping)] கொள்கைவாயிலாக வழங்க முன்வந்தனர். இந்நிலையில் உலகச் சந்தையில் வளர்ச்சி குன்றிய நாடுகள் புகுவதற்கு அவ்வகைச் சூழ்நிலை ஒரு முட்டுக்கட்டையாகவே விளங்கியது.

பன்னாட்டுக் கண்ணோட்டத்தில் இத்துணை இடர்ப்பாடுகளை எதிர்ப்பட வேண்டிய, ஒரு பின்தங்கிய நாடானது, தனது எல்லைக்குள் முற்றிலும் மாறுபட்ட வேறு பல பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண வேண்டியதாக உள்ளது. சிலவற்றிற்குப் பரிகாரம் தேட இயலும், ஆனால் வேறு சில சிக்கல்கள் ஏறத்தாழ நிரந்தரமாக அமைந்துவிடும் தன்மை பெற்றவையாக உள்ளன.

வளர்ச்சிபெற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் பெரும்பாலான பின்தங்கிய நாடுகளில் சந்தையின் பரப்பு மிகக் குறுகலாகவே இருக்கும். இயற்கை வளங்கள் போன்ற பொருளாதார அடிப்படையில் பகுக்கப்படாமல் அரசியல் மற்றும் மொழி போன்ற இதர மட்டங்களை ஆதாரமாகக் கொண்டு நாட்டிலுள்ள மக்கள் தொகை பிரிக்கப்பட்டு துண்டாக்கப்படுவதால் இத்தகைய நெருக்கடியான நிலை தோன்றுகிறது. மேலும் இந்நாடுகளில் தலா வருமானம் மிக குறைந்து காணப்படுகின்றது. சந்தை குறுகியதாக உள்ளதனால் தொழில் வாய்ப்புக்கள் இச்சூழ்நிலையில் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. இணைப்புக் கொள்கை (Integration policy) வாயிலாக பொதுச் சந்தைகள் தோற்றுவிக்கப்படுமாயின், இதுகாறும் சிற்றளவுச் சந்தைகளாக விளங்கி வந்தவை இனி பரப்பில் அகன்ற தன்மை கொண்டவையாகத் திகழும். இதற்கு பொருளாதாரக் கூட்டிணைவுகள் இன்றியமையாதெனவாம்.

எங்கும், எதிலும் உறுதியின்மை சூழ்ந்துள்ள காரணத்தினால் பின்தங்கிய நாடுகளில் தொழில் முன்னேற்றம் தடைபடுகின்றது. வருகிற பத்து ஆண்டுகளுள் என்னென்ன மாறுதல்கள் தோன்ற முடியும் என ஊகித்துணர்வது அரிதானதொரு செயலாகிவிடுகின்றபடியால், வெளி நாட்டினர் தங்களது மூலதனம், பொறியியல் நிபுணத்துவம் இவற்றைத் துணிந்து முதலீடு செய்யத் தயங்குகின்றனர். ஏற்றுமதி செய்து புகழ்பெற்ற சில பின்தங்கிய நாடுகளைக் காணின், அவை குறிப்பிட்ட ஒன்றிரண்டு முக்கிய மூலப் பொருட்களை மட்டுமே ஏற்றுமதி செய்கின்றன. இச்செயலால் எதிர்காலத்தில் நேரும் பயங்கர விளைவுகளை ஏற்கெனவே

குறிப்பிட்டுவிட்டோம். இவ்விரு நிலைகளிலும் போற்றத்தக்க மாறுதல்கள் தோன்றுவதாக இருந்தால்தான் தொழில் வாய்ப்புக்கள் பெருக்கம் காண இயலும்.

பின்தங்கிய நாடுகளில் மூலதனம் பற்றுக்குறையாக உள்ளது. ஆகவே தொழில் முன்னேற்றம் தடைபடுகின்றது, எனக் கூறினாலும் இப்பிரச்சினையை சற்று ஊன்றி ஆராய்கையில் போதிய அளவு மூலதனம் இல்லாமலில்லை—ஆனால் அவற்றை வெளிக்கொணரத் தகுதிபடைத்த தொழில் முயல்வோர் (Entrepreneurs) மிகக் குறைவாக இருப்பதனாலேயே மூலதனப் பற்றுக்குறை மிகுதியாக உணரப்படுகின்றது. இடர்களைக் (Risks) துணிவுடன் மேற்கொண்டு தொழிலை முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்லும் தொழில் முயல்வோர் பெருமளவில் தோன்றுவதன் வாயிலாகத்தான் இதற்குப் பரிகாரம் தேட முடியும். பல நாடுகளின் வரலாற்றைக் கொண்டு பார்த்தால் இதற்குள்ள ஆதாரங்களைச் சுட்டிக்காட்ட முடியும்.

உற்றதொரு சூழல் உருவாக, பின்தங்கிய நாடுகளில் எதிர்காலத்தில் வெற்றிபெறக் கூடிய தொழிலதிபர்களுக்கு வரிச் சலுகைகள், சுங்கக் கொள்கைகள் (Tariff policies), இசைவு வழங்கும் கொள்கைகள் (Permission and licensing policies) போன்றவற்றைத் தளர்த்தப்பட்ட நிலையில் அரசாங்கம் வழங்க முன்வரவேண்டும். இதற்கு மாற்றாக அயல் நாடுகளிலிருந்து தொழிலதிபர்களைப் பின்தங்கிய நாடுகளுக்கு வரச்செய்வதுதான் இவர்களைக் கொள்ளைக்காரர்கள் என்று எண்ணாமல் பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கவல்லவர்கள் என்று எண்ணி வரவேற்க வேண்டும். இவர்களால்தான் தூங்கிக் கொண்டிருந்த பொருளாதாரத்திற்கு வேண்டிய துடிப்பைத்தர இயலும். இயக்க நிலையினை (dynamism) உண்டு பண்ணத் திறமை கொண்ட இவர்களை ஆற்றல் படைத்த சில உள் நாட்டினர் பின்பற்றி, வருங் காலத்தில் தொழிலதிபர்களாகத் திகழ முடியும்.

குடியேற்றக் கொள்கையினைப் பல தலைமுறைகளாகப் பின்பற்றி செயல்பட்டு வந்த சில பின்தங்கிய நாடுகள் தன்னுரிமை பெற்ற பின்னரும் தொழில் துறையில் துரித முன்னேற்றம் காண இயலாமல் உள்ளது. இதற்கு அடிப்படைக் காரணமானது வளர்ச்சியுற்ற நாடுகள் சில இவற்றுக்கு உதவி புரியும் பொருட்டு முன்வருவதாக இருந்தாலும் அவற்றைத் தன்னலம் கொண்ட எதேச்சதிகாரம் படைத்த நாடுகளென அஞ்சி இதுகாறும் வரலாறு கண்ட காழ்ப்புத்தரும் நிகழ்ச்சிகள் எங்கே மீண்டும் நிகழ்ந்து

அவற்றை அனுபவித்துத் துயர்ப்பட வேண்டியிருக்குமோ என்று எண்ணி நடுங்குகின்ற மனப்பான்மை தோன்றுகிறது. இதனை குடியேற்றக் கொள்கையின் புதுமைக் கருத்து (Neocolonialism) எனச் சிலப் பொருளாதார வல்லுநர்கள் கூறுகின்றனர். எனவே இதன் விளைவாக துணைபுரிய விரும்பும் நாடுகளை ஏதோ சதித் திட்டத்துடன் வருகின்றனவோ எனும் சந்தேகக் கண்கள் கொண்டு வளர்ச்சி குன்றிய நாடுகள் பார்க்கின்றன. இவ்வுள நிலை அகற்றப் பட்டாலொழிய அயல் நாடுகளிலிருந்து உதவி பெற்று பொருளாதார வளர்ச்சியினை அடைந்திட முடியாது.

தொழில்களை ஏற்று நடத்திவிட்டால் மட்டுமே செல்வத்தை எளிதாக, விரைவாக, உறுதியாக அடைந்துவிடலாமென்ற தவறான கருத்து பின்தங்கிய நாடுகளில் நிலவுகின்றது. குடியேற்றக் கொள்கையை கடைப்பிடிக்கும் பேரரசுகள், குறுக்கு வழியில் இலாபத்தை அடைவார்கள் என்ற நம்பிற்கையை இதற்கு உவமையாகக் காட்டலாம். தொழில் இயக்கத்திற்கு வரன் முறைகள் இல்லாமலில்லை. குறுகிய சந்தை, பற்றுக் குறையான இயற்கை வளங்கள் குடி கொண்டுள்ள பின்தங்கிய நாடுகளில் இவ்வரம்பு தெளிவாகக் காணப்படுகின்றன. ஆராயப்புகின் தொழில் துறையிலிருந்து கிடைக்கக் கூடிய இலாபத்தைக் காட்டிலும் வேளாண்மைத் துறையில் புதிய முறைகள் புகுத்தப்படுவதின் விளைவாக அடையும் இலாபம் அதிகமாகக் கூட இருக்கலாம். தொழிலைக் கொண்டு குறுக்கு வழியில் செல்வந்தராகிவிட முடியாது என்பதற்குச் சான்றாக இதனைக் கூறலாம்.

இக் கருத்துடன் இணைந்த மற்றுமொரு கருத்தைப் பார்ப்போம். தொடக்க நிலையிலேயே தொழில்களிலிருந்து அதிக இலாபத்தைப் பெற வேண்டும் எனும் மனப்பான்மை தீவிரமாக உள்ளதனால் இத் தொழில்களின் முன்னேற்றம் பல முனைகளில் தடைப்படுகின்றது. ஐயத்திற்குரிய பல சூழ்நிலைகளில் துவக்கப்படுகின்ற தொழில்கள் 'உறக்கும் துணைய தோர் ஆலம்வித்து ஈண்டி, இறப்ப நிழற் பயந்தாற்' போன்று உறுதியுடன் நிலை பெற்று முன்னேறிப் பயனளிக்க வேண்டும். துளிர்த்து வளர்வதற்குள் அதிலுள்ள அனைத்துப் பலன்களையும் துய்க்க வேண்டுமென குறுகிய காலக் கண்ணோட்டமுடைய தொழிலதிபரை பொன் முட்டையிடும் வாத்தைக் கொன்ற குடியானவனுடன் ஒப்பிடுவதே சாலச் சிறந்ததாம்.

தொழில்துறை முன்னேற்றம் அடைய வேண்டும் என்ற குறிக்கோள், திடமற்ற தொழிற் கொள்கையாலும், முடிவுகளாலும் தோல்வியில் முடிகின்றது. தங்கள் நாடு பிற பொருள்களுக்காக

மற்ற நாடுகளைச் சார்ந்திருக்கக் கூடாது என்றும், தங்கள் நாடு ஒரு நவீன மயமான நாடு என்று உலகுக்கு காட்ட வேண்டும் என்ற தேசீய உணர்ச்சியால் உந்தப்பட்டும் தொழில்துறை முன்னேற்றம் வேண்டும் என்று கூறுகின்றனர். இந்த மன நிலை திடமற்றத் திட்டங்களான மாபெரும் அலுமினிய ஆலை போன்றவற்றை அமைப்பதில் முடிகின்றது. இதனால் பற்றுக் குறையான முதல் வீணாக விரயமாக்கப்படுகின்றது. குடியேற்ற நாடாக இருந்த அனுபவத்தை மனதில் கொண்டு அயல் நாட்டு மூலதனம் வருவதற்குத் தடை விதிக்கின்றனர்.

தொழில் நுட்ப அறிவினை அடையவேண்டும் என்ற எண்ணம் பல பின் தங்கிய நாடுகளுக்கு இருப்பதில்லை. தொழில் மயமாவது செல்வம் அடைவதற்கு எளிதான பாதை என்று நினைக்கின்றனர். ஆனால் அதில் அனுபவப்பட்டவர்களுக்கே அதில் உள்ள நெளிவு சுளிவுகள் தெரியும். தொழில் மயமாவது எளிதான காரியம் என நினைத்துத் தொழில் நுட்ப அறிவினைப் பெறவேண்டிய இன்றியமையாமையை புறக்கணிக்கின்றன. ஆனால் இயந்திரச் சாதனங்களைப் போல் தொழில் நுட்ப அறிவினைப் பின்தங்கிய நாடுகளுக்கு வழங்குவதற்கு முன்னேறிய நாடுகள் எப்பொழுதும் தயாராக உள்ளனவா என்றும் சிந்திக்க வேண்டும்.

இது தவிர, பின் தங்கிய நாட்டில் நிலவிவரும் பழக்க வழக்கங்களும் மக்களின் விருப்புகளும் அந்த நாடு தொழில் துறையில் முன்னேற்றமடைவதற்கு இடையூறாக இருக்கின்றன. மேலும் அவற்றை எளிதில் மாற்றவும் முடியாது. தவிர அவர்கள் கடினமாக உழைப்பதற்கும் விரும்பமாட்டார்கள். தொழிற்சாலையில் வேலை செய்வது என்பது ஒரு மாறுபட்ட சூழ்நிலையாகும். பல்வேறு ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டியது மட்டுமல்லாமல் இயந்திரங்களின் வேகத்தோடு இயந்திரகதியில் இயங்க அவர்களால் முடிவதில்லை. மேலும் சமூகப் பழக்க வழக்கங்களும் இடையூறுக்குக் காரணமாக அமையும். ஒரு தொழிலாளியின் வீட்டில் அவனைச் சார்ந்திருப்பவர்கள் பலர் இருந்தால் கடினமாக உழைப்பதற்கு ஊக்கம் இராது. பின்தங்கிய நாடுகளில் கூட்டுக் குடும்ப முறை இருப்பதால் ஒரு சிலர் உழைக்கப் பலர் அதனைப் பகிர்ந்து கொள்ளும் நிலைமை உள்ளது. வேலை செய்பவர்கள் நன்கு பாடுபட்டு முன்னேற வேண்டும் என்று நினைப்பதில்லை. இதனாலேயே பின்தங்கிய நாடுகளில் அதிக ஊதியம் கொடுத்தாலும் வேலை செய்ய முன்வரமாட்டார்கள். இது தவிர அங்கு நிலவும் மதக் கொள்கையும் இடையூறாக அமையும். பின்தங்கிய நாடுகளில் பெரும்பாலோர் விதி, கருமம் போன்றவைகளில் மிகவும் நம்பிக்கை வைத்து தாங்கள்

பின்தங்கிய நிலையில் இருப்பதற்கு தங்கள் விதியே காரணம் என்று எண்ணுகின்றனர். பொருளாதார முன்னேற்றம் என்பது தங்கள் கையில்தான் இருக்கிறது என்பதை அறியாதது மட்டுமல்ல, அதனை ஒத்துக்கொள்ளவும் மாட்டார்கள்.

இவை தவிர, தொழில் முன்னேற்றத்திற்கு வாய்ப்புக்கள் இருந்தும் மனிதனால் உண்டாக்கப்பட்ட இடையூறுகளும் பின் தங்கிய நாடுகளில் உள்ளன. ஏற்கெனவே தொழில் முறையில் முன்னேற்றம் இருந்தும், ஏற்கனவே ஆரம்பிக்கப்பட்ட தொழில் துறை, தற்சமயம் ஏற்படும் தொழில் துறை முன்னேற்றத்திற்கு இடையூறாக அமையும். ஏற்கெனவே உள்ள தொழில் துறை உள் நாட்டில் நல்ல பாதுகாப்பு பெற்றிருப்பது மட்டுமல்லாமல் ஒரு முற்றுரிமை நிலைமையினையும் அனுபவித்து வந்துள்ளதால் தனக்கு ஏற்படப்போகும் போட்டியினைத் தடுப்பதற்கும் தொழில் துறைக் கொள்கையில் பல்வேறு இடையூறுகளை ஏற்படுத்தும்.

பொருளாதார முன்னேற்றத்திற்குச் சட்ட திட்டங்கள், விருப்பங்கள், உற்பத்தி முறை முதலியவற்றில் மாறுதல்கள் அவசியம். இவற்றின் மேல் கட்டுப்பாடு இருந்தால் எளிதில் முன்னேற்றம் அடைய இயலாது. நிலச் சீர்திருத்தம் விவசாய முன்னேற்றத் திற்கு உதவுவதுபோல, பொருளாதார வளர்ச்சி என்பது தொழில் துறைக்குப் புதிய வாய்ப்புகளைத் தோற்றுவிப்பதில்தான் உள்ளது.

## தொழில் மயமாக்குதல் (Industrialisation)

தொழில் துறையில் முன்னேற்றம் அடைய வேண்டும் என்பது ஒரு நாட்டின் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டும். ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்கும் பொழுது உற்பத்திச் செலவையும் அத் தொழிற்சாலையால் உண்டாகின்ற நன்மையினையும் மனதிற் கொள்ளல் வேண்டும்: தொழில் துறையில் முன்னேற்றமடைவ தற்காக அந்நியச் செலாவணியை முக்கியமான இயந்திரங்கள் இறக்குமதி செய்வதற்காகப் பயன்படுத்தப்பட வேண்டும்.

தொழில் துறையில் முன்னேற்றம் அடைவது என்பது வளரு கின்ற மக்கள் தொகைக்கு வாழ்வு அளிப்பதற்கே ஆகும். எனவே மூலதனத்தை ஆடம்பரப் பொருள்கள் தயாரிப்பதில் ஈடுபடுத்தக் கூடாது. ஒரு போருக்கு எவ்வாறு நாட்டு மக்கள் அனைவரும் ஒன்று கூடி ஆயத்தமாகின்றோமோ, அதுபோல் தொழில் முன் னேற்றத்திற்கும் அனைவரும் ஆதரவு தந்து முழுமூச்சுடன் செய லாற்ற வேண்டும்.

**தொழில் மயமாக்குதல் என்பது ஒரு 'இடமாற்றச் செய்முறை' (Industrialisation is a transfer process)**

இன்றைய தொழில் துறை சுமார் இரு நூற்றாண்டுகளாகப் பல தொழில் வல்லுநர்களாலும், விஞ்ஞானிகளாலும், தொழிலாளர்களாலும், தொழில் முயல்வோராலும் தலைமுறை தலைமுறையாக மாற்றி அமைக்கப்பட்டு வந்துள்ளது. இவ்வண்ணமாக ஆரம்ப நிலையில் எளிய நிலையில் இருந்த தொழில் துறை, இன்று மின்சார சாதனங்கள், கணக்கிடும் பொறி (Computer), தானே இயங்கும் இயந்திரம் என வியக்கத்தக்க வகையில் முன்னேறியுள்ளது.

'இடமாற்றச் செயல் முறை' என்பது தொழில் அறிவு, தொழில் அனுபவம், தொழில் துறைக்குரிய பொருள்கள் முதலியன அவை உள்ள இடத்திலிருந்து இல்லாத இடத்திற்கு மாறுகின்றன. அதாவது தொழில் துறையில் முன்னேறிய நாடுகளிலிருந்து தொழில் துறை தொடர்பான நுணுக்கங்கள் பின்தங்கிய நாடுகளுக்கு இறக்குமதி செய்யப்படுவதாகும்.

சில நாடுகள் உள் நாட்டு அறிவையே துணையாகக் கொண்டு தொழில் துறையில் முன்னேற்றம் காணத் திட்டமிடுகின்றன. ஆனால் அது உடனடித் தேவையைப் பொறுத்து இருக்கின்றது. தொழில் துறையில் முன்னேற்றமடைந்தபொழுது ஐரோப்பா தனது சொந்த அறிவினைக் கொண்டும், உள் நாட்டு வளங்களை வைத்தும் முன்னேறியது. உண்மையில் அந்தச் சமயத்தில் தொழில் துறை அறிவினைப் பிற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யுமளவிற்கு வேறெந்த நாடும் முன்னேறியிருக்கவில்லை. எனவே அது தன் காலிலேயே நின்று வெற்றி கண்டது. பின் அமெரிக்கா ஒரு சில தொழில் நுட்பங்களை ஐரோப்பாவிலிருந்து பெற்றுக்கொண்டு பெரும் பகுதியை உள் நாட்டினிலேயே வளர்த்து முன்னேற்றமடைந்தது. அதுபோல் சோவியத் யூனியனும் வியக்கத்தக்க முறையில் சிறிய அளவிலே தொழில் நுட்ப அறிவினை இறக்குமதி செய்து முன்னேற்ற மடைந்தது. சீனாவும் அந்த வழியையே பின்பற்றுகின்றது.

ஆனால் இவ்வுதாரணங்களைக் கொண்டு தொழில்துறை முன்னேற்றத்திற்கு இடமாற்றச் செயல்முறை அவசியமில்லை எனக் கருதக் கூடாது. மேற்கூறிய நாடுகள் அம்முன்னேற்றத்தைக் காணக் குறைந்தது நூறு வருடங்களாவது எடுத்துக் கொண்டன, சோவியத் யூனியன் வெகு விரைவில் முன்னேற்றமடைந்தாலும். அம் முன்னேற்றம் மக்களை வற்புறுத்தியமையாலும், மக்களது

தியாகங்களாலும் ஏற்பட்டது. அதே வழியையே சீனாவும் பின் பற்றுகின்றது. ஆனால் ஜனநாயக அரசியலமைப்பைக் கொண்ட நாடுகள் இம் முறையினை ஏற்றுக்கொள்வதில்லை.

இவ்வாறு 100 ஆண்டுகளில் மற்றவர்களுடைய உதவியின்றி அடைந்த முன்னேற்றத்தைப் பின்தங்கிய நாடுகள் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்குள் அடைய விரும்புகின்றன. அவ்வாறாயின் முன்னேறிய நாடுகளிலிருந்து தொழில் திறமை, மூலதனம் முதலியவற்றை இறக்குமதி செய்வது தவிர வேறு வழியில்லை.

தொழில் துறையில் விரைவாக முன்னேற்றம் காணவேண்டுமென்றால், தொழில் அறிவையும், தொழில் துறையில் திறமையுள்ளவர்களையும், வெளிநாட்டு மூலதனத்தையும் பெருமளவில் இறக்குமதி செய்ய வேண்டும். அதே வேளையில் அதனை ஏற்றுமதி செய்யும் நாட்டிற்கு இலாபம் பயக்கக் கூடியதாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் அவற்றை எளிதில் இறக்குமதி செய்ய இயலும். இதன்மூலமாக நிர்மாணிக்கப்பட்ட தொழிற்சாலை நன்கு இயங்க ஆரம்பித்ததும், வெளிநாட்டுத் தொழில் நுட்ப வல்லுநர்களை அவர்தம் நாட்டிற்குத் திருப்பி அனுப்பி விடலாம்.

### தொழில் மயமாவதைத் தடுக்கும் காரணிகள்

இவ்வாறு வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் தொழில் அறிவினைத் தடுக்கும் சில காரணங்களும் உண்டு. அவை :

1. ஒரு நாட்டினில் தொழில் வளர்வதற்குப் போதிய வாய்ப்பு இல்லாமலிருக்கலாம். அங்கு அங்காடிகள் சீரான முன்னேற்றம் அடையாமலிருப்பதும் இடையூறாக இருக்கலாம்.

2. ஒரு நாட்டில் நிலையான ஆட்சி ஏற்படாவிட்டால் வெளிநாட்டினர் அங்கு முதலீடு செய்ய விரும்ப மாட்டார்கள்.

3. அரசாங்க அதிகாரிகளிடம் நன்மதிப்புப் பெறுவிடினும் அவர்களுக்குக் கையூட்டு முதலியன கொடுக்க நேரிட்டாலும் வெளிநாட்டு மூலதனம் கிடைக்காது.

4. அரசாங்கம் தொழில்களைச் சிறிது சிறிதாகத் தேசிய மயமாக்கி வந்தாலும் வெளிநாட்டினர் அங்கு முதலீடு செய்ய மாட்டார்கள். அதுபோல் வேறுபடுத்திப் பார்க்கின்ற பிளவு மனப்பான்மை இருந்தாலும் முதலீடு செய்ய விரும்பமாட்டார்கள்.

5. அந்நாட்டு மக்களும், அரசும் அயல்நாட்டு நிறுவனங்களை விரும்பாவிட்டாலும் வெளிநாட்டு முதலீடு கிட்டாது.

வெளிநாட்டிலுள்ள தொழிலதிபர்களைக் கவர்வதற்குப் போதிய ஊக்கமும், சலுகைகளும் அளிக்கப்பட வேண்டும்.

**தொழில்துறை முன்னேற்றத்திற்குத் துணைபுரியும் காரணிகள்**

(1) **குறைந்த கூலியுடைய உழைப்பு** (Low-Cost labour) :- தொழில் உற்பத்தி செலவில் முக்கிய அங்கம் வகிப்பது தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய கூலியாகும். இக்கூலி குறைந்த அளவில் இருந்தால் தொழில் தொடங்குவதற்குச் சிறந்த ஊக்கமளிக்கும். ஜப்பான், ஹாங்காங் போன்ற நாடுகள் குறைந்த கூலியினை ஏற்றுக் கொண்ட தொழிலாளர்களைக்கொண்டு தான் தொழில் துறையில் வெகு விரைவில் முன்னேற்றமடைந்தன,

(2) **திறமையான உழைப்பு** (Labour Skill) தொழிலாளியின் கூலி மட்டுமல்லாது அவர்களது உற்பத்தித் திறனும் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவுகின்றன. மக்கள் நல்ல திறமையுடையவர்களாக இருந்தால் தொழிற் பயிற்சி போன்றவற்றில் அதிகம் செலவிடப்பட வேண்டியதில்லை.

(3) **தொழில் செய்ய முனைவோர்களும் நிர்வாகத்திறமையும்** (Enterpreneurial and Managerial Skills) ஒரு நாட்டிற்கு ஷும்பீட்டர் மாதிரிப் படிவத்தில் வருவதைப் போன்ற தொழில் செய்ய முனைவோர்கள் மிகவும் அவசியம். அதுபோல் நிர்வாகத்திறன் உடையவர்களும், ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் அவசியம். ஆனல் துரதிர்ஷ்ட வசமாக பின்தங்கிய நாடுகளில் இவர்கள் வியாபாரத்தில்தான் ஈடுபட்டுள்ளார்கள். இவர்கள் பெரும்பாலும் தொழிற்சாலை துவங்குவதற்கு விரும்பமாட்டார்கள்.

(4) **சக்தி, எரிபொருள், தாதுப் பொருள்கள்** (Power, Fuel and Minerals) ஒரு நாட்டின் தொழில் துறை முன்னேற்றத்திற்கு எண்ணெய், வாயு, தாதுப் பொருள்கள், நீர்மின்சக்தி முதலியன பெரிதும் அவசியமாகும். இவை பெருமளவில் கிடைத்தால் தொழில்துறை விரைவில் அபிவிருத்தி அடையும்.

(5) **மூலப் பொருள்கள்** (Raw materials) பொதுவாக பின்தங்கிய நாடுகளில் அயல்நாட்டுச் செலாவணி பெறுவதற்காக மூலப் பொருள்கள் பெரும்பாலும் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு விடுகின்றன. ஆனல் அவ்வாறு ஏற்றுமதி செய்யப் படாமல் அவற்றை தொழில் துறை முன்னேற்றத்திற்குப் பெரிதும் பயன்படுத்த வேண்டும்.

(6) **இருப்பிடம்** (Location) ஒரு நாட்டின் இருப்பிடமும் தொழில் துறை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றது. இது மூலப்

பொருள்கள் கிடைக்கும் வழிமுறையினையும், கப்பல் மார்க்கத்தினையும், போக்குவரத்துச் செலவையும் சார்ந்துள்ளது.

(7) **முன்னேற்றமடைந்துள்ள அங்காடி** (Developed Markets) தொழில் துறை வளர்ச்சிக்கு விரிவான முன்னேற்றமடைந்த அங்காடிகள் மிகவும் அவசியம். பின்தங்கிய நாடுகளில் குறைந்த வருமானம் இருப்பதால் அங்காடி சிறிய அளவில் இருக்கும். இது ஒரு நாடு முன்னேற்றமடைவதற்குப் பெருந்தடையாக இருக்கும். இந்தியா, பிரேசில் போன்ற நாடுகளில் அங்காடி பெரிதளவில் இருப்பதால் அந்த நாடுகள் முன்னேற்றமடைய முடிந்துள்ளது.

(8) **தட்பவெப்பநிலை** (Climate) ஒரு நாட்டின் தட்பவெப்ப நிலையும் அந்நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணமாக அமையும். வெப்பமான பகுதிகளில் கடின உழைப்பை எதிர்பார்க்க முடியாது. குளிர் சாதனங்கள் ((Air-Conditioning) முதலியவற்றின் மூலம் தொழிற்சாலைகள் அமைத்தாலும் அதனால் உற்பத்திச் செலவு கூடுகின்றது.

(9 **தொழிற்சாலை அமைவதற்குண்டான இடங்கள்** (Industrial Sites) தொழிற்சாலை அமைப்பதற்குண்டான இடங்கள் போக்குவரத்து வசதி, தண்ணீர்வசதி, மின்சக்தி போன்ற வசதிகளுடன் இருந்தால் தொழில் துறை வெகு விரைவில் முன்னேற்றமடையும்

(10) **உள் அமைப்புத் தொழில்கள்** (Infra structure) போக்குவரத்து வசதியும், செய்தித் தொடர்பு வசதியும் ஒரு நாட்டில் விவசாய, தொழில் துறை முன்னேற்றத்திற்கு அவசியம். எனவே ஓர் அரசு முதலில் இவற்றை முன்னேற்றமடையச் செய்வதில் ஈடுபடவேண்டும். ஏனென்றால் இவை புறச்சிக்கனங்களை ஏற்படுத்தும் தன்மையுடையவை. இதனால் தொழில் செய்ய முனைவோர் ஊக்குவிக்கப்படுவார்கள்.

(11) **அங்காடி அருகில் அமைதல்** உலகச்சந்தை வெகு அருகில் அமைந்திருந்தால் தொழில் துறை வெகு விரைவில் முன்னேற்றமடையும். ஐரோப்பிய பொதுச் சந்தையில் (European Common Market) ஐரோப்பிய நாடுகள் உறுப்பினர்களாக இருப்பதால் அந்நாடுகளில் தொழிற்சாலைகள் பெரிய அளவில் கட்டப்படுகின்றன. இவ்வாறு உலகச் சந்தைக்கு அருகில் இருந்தால் தொழில் துறை விரைவில் முன்னேற்றமடையும்.

(12) **தூண்டுதல்கள்** (Incentives) தொழில் துறை முன்னேறுவதற்குத் தூண்டுதல்களும் அரசாங்கத்திலிருந்து உதவித் தொகையும் அளிக்கப்படல் வேண்டும்.

(13) **உள்நாட்டு மூலதனம் (Local Capital)** தொழில் துறை வளர்ச்சிக்கு உள்நாட்டு மூலதனம் பெருமளவில் கிடைத்தால் வெளிநாட்டு மூலதனத்தை நாம் நம்பியிருக்க வேண்டிய அவசியமில்லை.

**தொழில்துறை முன்னேற்றத்திற்கான வழிமுறைகள் (Elements of Industrial development Strategy)** தொழில் துறை முன்னேற்றத்திற்கு அமைப்புத் திட்டங்கள் மூலம் செயலாற்றினால் விரைவாகவும் வெற்றியுடனும் தொழில் முன்னேற்றம் காணலாம்.

தொழில் துறையில் முன்னேற்றத்திற்கு அரசுடன் மக்களும் ஒன்றுபட்டு ஆக்கத்துறையில் ஈடுபடவேண்டும். மக்கள் கடினமாக உழைக்க வேண்டும், ஆரம்பத்தில் புதிதாக ஏற்பட்ட தொழிற்சாலைக்கு உதவிப்பணம் கொடுத்தும், அதிக லாபம் நிர்ணயித்தும் ஊக்கப்படுத்த வேண்டும். இத்தகைய மக்கள் ஒத்துழைப்பு நாடு முழுவதும் ஏற்பட வேண்டும்.

தொழில் துறை முன்னேற்றத்திற்குத் திட்டங்கள் நன்கு ஆராய்ந்து அமைக்கப்பட வேண்டும். எத்தகைய தொழில் இலாபத்தையும், அதிகப்பயனையும் கொடுக்கும் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். அதுபோல் எந்தத் தொழில் விரைவில் முன்னேற்றமடையும் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். அரசு முதலீடு செய்வது என்றால், எந்தெந்தத் துறையில், முதலீடு செய்வது, எவ்வெவ்வகையில் முதலீடு செய்வது, எவ்வளவு முதலீடு செய்வது என்பதையும் நன்கு முடிவு செய்து கொள்ள வேண்டும். பெரிய தொழிற்சாலை வேண்டுமா, சிறிய தொழிற்சாலை வேண்டுமா என்பது பற்றியும் முடிவெடுத்துக் கொள்ள வேண்டும்.

அரசாங்கம் தொழில் துறை முன்னேற்றத்திற்கு முதலில் அடிகோல வேண்டும். இது சிறந்த தலைமை, ஒழுங்கான அமைப்பு, தொழில் முன்னேறுவதற்கு நிதியளித்தல் போன்ற வழிவகைகளாக இருக்க வேண்டும். இவ்வகையில் அரசு ஒரு முக்கிய அங்கம் வகிக்க வேண்டும். தொழில் துறை வாய்ப்புகள் பற்றி எடுத்துரைக்க வேண்டும். நன்கு திறமையாக நிர்வாகஞ் செய்பவர்களைக் கண்டுபிடித்து அவர்களை மேலும் மேலும் ஊக்குவிக்க வேண்டும். முதலீடு செய்பவர்களுக்கு அரசு அதிக உதவிபுரிய வேண்டும்.

இவ்வாறு பல்வேறு வசதிகளுடன் ஆரம்பிக்கப்பட்ட தொழில், ஆரம்பத்திலிருந்தே இலாபகரமாக இருக்க வேண்டும். இதற்காகத் தாராள மனப்பான்மையுடன் ஊக்கங்கள் அளிக்கப்பட

வேண்டும். உள்நாட்டு அங்காடிக்காகத் தயாரிக்கும் தொழிற் சாலைகளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும். வெளிநாட்டு அங்காடிக்காகத் தயாரிக்கும் தொழிற்சாலைகளுக்கு வரி விதி விலக்கும், மறைமுகமான உதவியும் செய்து தரவேண்டும்.

வெளிநாட்டு மூலதனம் ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் இன்றியமையாதது; விரும்பத்தக்கது; பயனுள்ளது. வெளி நாட்டு மூலதனம் பெறுவதற்கு அரசாங்கம் ஆதரவு தந்தால்தான் வெளிநாட்டோர் அங்கு முதலீடு செய்ய விரும்புவார்கள். எனவே வெளிநாட்டு மூலதனத்தை மக்களும் அரசும் ஆதரிக்கவேண்டும்.

சில நாடுகள் வெளிநாட்டு மூலதனத்தை எதிர்க்கலாம், இதற்குச் சான்றாக பர்மாவை எடுத்துக் கொள்ளலாம். பர்மா உலக நாடுகளிலிருந்து தனித்து நின்று பொருளாதார முன்னேற்ற மடைய விரும்புகிறது.

ஆனால் அதே சமயத்தில் கனடா வெளிநாட்டு மூலதனத்தைக் கொண்டு வெகு விரைவில் முன்னேற்ற மடைந்தது. எனினும் வெளி நாட்டில் முதலீடு செய்பவர்கள் அந்த நாட்டின் நலனைக் கருத்தில் கொள்வார்களா என்ற ஐயம் ஏற்படும். இதே நிலைமை கனடாவிலும் ஏற்பட்டது. கனடாவில் உள்ள அமெரிக்கர்களின் வாணிகச் சங்கங்கள் கனடாவின் நலனுக்கு ஒத்துழைக்கவில்லை யாதலால் அரசியல் பிரச்சினைகள் தோன்றின. ஆதலால் தற்போது கனடாவில் வெளிநாட்டு மூலதனத்திற்கு போதிய ஊக்கம் அளிப்ப தில்லை.

ஆனால் வெளிநாட்டு மூலதனத்தை கண்மூடித்தனமாக ஏற்றுக் கொள்ளக் கூடாது. வெளிநாட்டுக்கம்பெனி ஒன்று அந்நாட்டின் அரசியலிலோ, வரி ஏய்த்தலிலோ, தொழிலாளர்களுக்கு எதிரான வழி முறைகளில் இறங்கினாலோ அதனை அனுமதிக்கக் கூடாது.

மேலும் அரசானது தொழிற்சாலையில் எடுக்கப்படும் முடிவு களுக்கு இடையூறாக இருக்கக் கூடாது. வழங்குரிமைகள், (licenses), கட்டுப்பாடுகள் (Controls) முதலியன தொழில் துறை முன்னேற்றத்தைத் தாமதப்படுத்தும். அதுபோல் ஊக்கம் அளிப் பதிலும் எவ்விதத் தாமதமும் ஏற்படக் கூடாது. மேலும் தவறான செயல்களும், ஊழல்களும் தொழில் முன்னேற்றத்தைப் பாதிக்கும்.

அடுத்தபடியாக மக்கட் செல்வத்தின் மேல் முதலீடு (Investment in human Capital) செய்வது மிகவும் முக்கியமாகும். மக்க ளுக்குக் கல்வியும், தொழிற்பயிற்சியும் முக்கியமாக வழங்கப்பட

வேண்டும். வியாபாரம் தொழிற்சாலைகள் முதலியவற்றின் நிர்வாகத்தினைப் பற்றி மக்களுக்குக் கற்பிக்க வேண்டும். கல்லூரிகள் ஆரம்பித்துப் படிப்பிற்காக உதவிப் பணம் அளிக்க வேண்டும்.

தொழில் துறையினை முன்னேற்றமடையச் செய்யும் பொழுது, மற்ற துறைகளைப் புறக்கணிக்கக் கூடாது. நாட்டின் ஒவ்வொரு துறையும் ஒன்றுக்கொன்று மிகவும் தொடர்புடையது. எனவே ஒரு துறையைக் கவனிக்கும் பொழுது மற்றொரு துறையைப் புறக்கணிக்கக் கூடாது. எனவே பொருளாதார வளர்ச்சி சரிசம நிலையில் (Balanced Growth) இருக்க வேண்டும்.

## தொழில்துறை முன்னேற்றத்தில் அரசாங்கத்தின் பங்கு

பின் தங்கிய நாடுகளில் கிடைக்கும் இயற்கை வளங்களும், மூலதனமும் மிகச் சிறந்த முறையில் பயன்படுத்தப்பட வேண்டும். இவ்வளங்களைத் திரட்டுவதற்கும்,வெவ்வேறு துறைகளுக்கு ஒதுக்குவதற்கும் நன்கு தயாரிக்கப்பட்ட திட்டம் அவசியம். அரசாங்கத்தின் முக்கிய பங்கானது இத் திட்டத்தை தயாரித்து அளித்தலாகும்.

நாட்டின் முன்னேற்றத்திற்கு வேண்டிய மூலதன முழுவதும் வெளி நாடுகளிலிருந்து கிடைக்காது. எனவே உள் நாட்டிற்குள்ளேயே சேமிப்பையும் முதலீட்டையும் ஊக்குவிக்க வேண்டும். மேலும் பொருளாதார முன்னேற்றத்தால் ஏற்படும் அதிக வருமானத்தை மக்கள் நுகர்வுப் பொருள்களில் செலவிடுவார்கள். உள் நாட்டுச் சேமிப்பு அதிகரிப்பதற்காக, இத்தகைய செலவினைத் தடுக்க வேண்டும். இதற்கு வரி போன்றவை விதித்து அதிகரித்துள்ள வருமானத்தைப் பிடுங்கி விடலாம். இதனால் உற்பத்திப் பண்டங்கள் செய்யும் தொழில் துறைக்கு மூலதனம் கிடைக்கின்றது. மேலும் வருமானம் அதிகரித்துள்ளதால் வெளி நாட்டுப் பொருள்களுக்குத் தேவை அதிகமாகலாம். இதனால் அந்நியச் செலாவணி வீணாக்கப்படும். இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் இறக்குமதியைத் தடை செய்யலாம். இதனால் உள் நாட்டுத் தொழிற்சாலைகளும் பாதுகாக்கப் படுகின்றன.

புதிதாக அமைக்கப்பட்ட தொழிற்சாலைகள் சில காலத்திற்கு இலாபகரமாக நடைபெறா. ஆயினும் அவை மற்ற தொழிற்சாலைகளுக்குப் புறச் சிக்கனத்தை ஏற்படுத்தக் கூடியனவாக இருக்கும். எனவே அப்புறச் சிக்கனத்தைக் காக்கும் பொருட்டு அத் தொழிற்சாலைகளுக்குப் பாதுகாப்பும், ஊக்கமும் அளிப்பது அவசியம். தொடக்க காலங்களில் புதிய தொழிற்சாலைகளுக்குத் திறமையான

தொழிலாளர்கள் கிடைக்கமாட்டார்கள். இதனால் உற்பத்தியும் தரமும் பாதிக்கப்படும். ஆரம்ப காலத்தில் அங்காடியைப் பிடிப்ப தற்குச் சிரமமாக இருக்கும். மேலும் அதனுடைய முழு உற்பத்தித் திறனுக்கு அங்கு வேலை நிகழாது. உற்பத்திச் செலவும் அதிகமாக இருக்கும். ஆனால் நாளடைவில் இத் தகைய குறைபாடுகள் நீங்கப்பெற்று அவை இலாபகரமாக ஓடத் தொடங்கும். அதுவரை அவைகளுக்குப் பாதுகாப்பும், அரசாங்க உதவியும் அளிக்கப்பட வேண்டும்.

இறக்குமதியாகும் பொருள்களில் சிலவற்றைக் குறிப்பாகத் தேர்ந்தெடுத்து, அவற்றின் மீது சுங்க வரிகள் விதிக்கப்பட வேண்டும். இயந்திரங்கள் மீது எந்த வரியும் விதிக்கக் கூடாது. மூலப் பொருள்களின் மீது சிறிதளவும், பாதி முடிக்கப்பட்ட பொருள்களின் மேல் மிதமாகவும் ஆடம்பரப் பொருகளின் மேல் அதிகமாகவும், விரி விதிக்க வேண்டும்.

இது தவிர குறைந்த வட்டி வீதத்தில் கடன் கொடுக்க வேண்டும். உலகச் சந்தைக்குப் பொருள்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைக்கு உதவிப்பணமும் அளித்திடல் வேண்டும். குறிப் பிட்ட சில காலத்திற்கு வரி விதிப்பிலிருந்து விதி விலக்குத் தரப்பட வேண்டும்.

மொத்தத்தில் தொழில் துறை வளர்ச்சிக்கு வேண்டிய எல்லாச் செயல் வகைகளையும் அரசு மேற்கொள்ள வேண்டும்.

**உள்ளமைப்புத் தொழில்கள்**

பல பொது வசதிகளை உள்ளிட்ட உள்ளமைப்பு உறுதி படைத் ததாக இருந்தால்தான் அதனை அடிப்படையாகக் கொண்டு தொழில்களைத் தோற்றுவிக்கலாம். உள்ளமைப்புத் தொழில்கள் எனப்படுவன, போக்குவரத்து – அதனைச் சார்ந்த பண்டங்களும் பணிகளும் – சாலைகள், அவற்றுடன் தொடர்பு கொண்டுள்ள பாலங்கள், தண்ணீர். ஆகாயப் போக்குவரத்து வசதிகள், துறை முகங்கள், மின்சக்தி அமைப்பு, தண்ணீரைத் தேக்கி சுத்திகரித்து விநியோகிப்பது, கழிவு நீரை அப்புறப் படுத்துதல் இவற்றோடு அஞ்சல், தந்தி மற்றும் தொலை பேசியைக் கொண்ட தொடர்பு வசதிகளையும் சேர்த்துக் கொள்ளலாம்.

பெரும்பாலும் புறநகர்ப் பகுதிகளில் தொழில்களை நிறுவிய தொழிலதிபர்கள்தாம், உள்ளமைப்பு வசதிகளை தாங்களாகவே பெருக்கிக் கொள்ள எண்ணுவர். சில தொழிலதிபர்கள் இவ் வுள்ளமைப்புத் துறைகளை ஏற்கெனவே தோற்றுவித்திருப்பார்கள்.

தொழில்கள் செறிந்துள்ள மாநகரமாக இருந்தாலும்கூட சில ஆலை களில் மின்விசை இயந்திரங்களை நிறுவியிருப்பர். மலிவானதும், தொடர்ச்சியான வகையில் இயங்கிப் பணிபுரிய வல்லவைகளாக வும் அவை இருக்கின்ற காரணத்தினுல் இவற்றை நிறுவியிருப்பர்.

சாலைப் போக்குவரத்துச் சாதனங்களைத் தங்கள் உடைமை களாகக் கொண்டு நன்மை அடைவது பல தொழில்களின் வழக்க மாகிவிட்டது. இரயில் துறையினருடன் ஒப்பந்தம் செய்து கொண்டு தங்களுக்குரிய மூலப் பொருள்கள் அல்லது உற்பத்தி யான முழுமைப் பண்டங்களைச் சரக்கு வண்டிகளில் கொணரவோ அனுப்பவோ வசதியாக இருக்கும் பொருட்டு ஒதுங்கு பாட்டை (Siding) ஒன்றினை ஏற்படுத்திக்கொண்டு அதனின்று எழுகின்ற வசதிகளைப் பெறுவர். மிகச் சிறுபான்மையான தொழில்கள் ஆகாய வழிப் போக்குவரத்துச் சாதனங்களைப் பயன்படுத்தும்.

தொழில் மற்றும் வணிக நுட்பத்திற்கு இன்றியமையாதனவாக விளங்கும் சில வசதிகளுக்கு வேறிடங்களை நம்பியிராமல் தாங் களாகவே அமைத்துக் கொள்ளும் உள்ளமைப்புத் தொழில்கள் பற்றி மேலே சில உதாரணங்களில் குறிப்பிட்டுள்ளோம். இவற்றை வழங்கவேண்டிய தலையாய கடமை அரசாங்கத்தைச் சார்ந்ததாக இருக்கும்; சில நாடுகளில் தனியாரால் இயக்கப்பட்டு, அரசின் சீரிய கண்காணிப்புடன் இவ்வசதிகள் கிடைக்கும் வகையில் வழி செய்யப்படுகின்றது. பின்தங்கிய நாடுகளில் அரசாங்கமே இப் பொறுப்பை ஏறத்தாழ முழுவதுமாக ஏற்றுக் கொள்கின்றது.

பார்க்கப்போனுல், தொழில்கள் சீரான முறையில் நிறுவப்பட்டு இயங்க வேண்டுமெனில், அரசாங்கம்தான் அதற்கு வேண்டிய உகந்ததோர் சூழ்நிலையை உள்ளமைப்பின் மூலம் வழங்க முன்வர வேண்டும், உலக வங்கி (World bank) வழங்கும் கடன் வசதி களில் பெரும் பகுதி உள்ளமைப்பினை உருவாக்கவோ, ஏற்கெனவே தோன்றியுள்ளவற்றை வலுப்படுத்தவோ பயன்படுத்தப்படு கின்றன. அரசாங்கம் இத்துறையில் கடமை உணர்வுடன் பணி புரிந்தாலன்றி, உள்ளமைப்புச் சாதனங்கள் நிரந்தரமாக அமையப் பெருமலேயே போய்விடலாமென உலக வங்கி கருத்துத் தெரி வித்துள்ளது. மேலும், தொழில்களில் முதலீடு செய்வதைக் காட்டிலும் உள்ளமைப்பில் கவனம் செலுத்துவதன் வாயிலாக அரசாங்கமும் தனது திறமையை வெளிப்படுத்த இயலுகின்றது.

கணிசமான முதலீடுகள், மிக நீண்டகால நிர்மாணங்கள், மெதுவாக வளர்ச்சியுறுகின்ற சந்தைகள் இக்காரணங்களினுல்

தனியார் துறையினரை அரசாங்கம் ஊக்குவித்தாலும் உள்ள மைப்புத் தொழில்களைத் துவக்க அவர்கள் தயக்கம் காண்பிப்பதில் வியப்பேதுமில்லை. பல நாடுகளில் தனியார் துறையில் விற்பனைச் சர்வாதீனம் தோன்ற வழியுண்டு என்ற காரணத்தினுல் உள் ளமைப்புத் தொழில்களைச் சார்ந்த அனைத்துப் பொறுப்புக்களையும் அரசாங்கத்திடமே விட்டுவிடுவார்கள். விலை முற்றுரிமை தோன்றி அது நிலைபெற்றுவிடுமானுல் சாதகமான சூழ்நிலைகளைப் பயன் படுத்தி விற்பனையாளர் நுகர்வோரைச் (பிற தொழில்களாக இருக் கலாம்) சுரண்ட ஆரம்பித்துவிடுவார்கள். இதன் பயங்கர விளைவுகள், துளிர்த்து வருகின்ற தொழில்களில் எதிரொலிக்கத் துவங்கிவிடுகின்றன. அதனுல் அவற்றின் வளர்ச்சிக்கு இன்றி யமையாததாக விளங்கும் சில அடிப்படை வசதிகள் பறிக்கப்பட்டு விடுகின்றன. இவ்வாறு விலை முற்றுரிமை பொருளாதார வளர்ச் சிக்கே குந்தகமாக விளங்குவதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

போதிய இயற்கை வளங்கள் கிடைக்கப் பெருத நிலையில் நன்கு சிந்தித்துத் திட்டமிடப்பட்டால்தான் உள்ளமைப்பிற்குத் தேவையான மூலதனம் கிடைக்கும். அதனுல் எதிர்பார்க்கப்படும் பலன்களும் கிடைக்கலாம். பொருளாதாரக் கண்ணேட்டத்தையும் மீறி மரபுகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, உள்ளமைப்பு களை உதாசீனப் படுத்துவதோ, மிகைப்படுத்தி வளர்ச்சியுறச் செய் வதோ தீய விளைவுகளைத் தோற்றுவிக்கலாம். எடுத்துக்காட்டாக இந்தியாவின் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும், பிற துறை களுக்கு முதன்மை கொடுக்கும் பொருட்டு உள்ளமைப்புத் துறை யைச் சார்ந்த சாலைப் போக்குவரத்தில் சிறப்பான முன்னேற்றம் காணவில்லை எனத்தான் கூறவேண்டும். மாருக, பர்மாவில் போக்குவரத்துத் துறைகளில் தேவைக்கு மிஞ்சிய அளவில் முத லீடு செய்யப்பட்டதனுல், பிற தொழில்கள் பற்ருக்குறை மூலதனத் தினுல் ஓரளவு பாதிக்கப்பட்டன. ஆகவே, சமநிலையுடைய அணுகுமுறை ஒன்றினைக் கொண்டுதான் உள்ளமைப்புத் தொழிற் கொள்கை உருவாக்கப்பட வேண்டும்.

மக்கள் பெருக்கம் மிகுதியாக உள்ள பின் தங்கிய நாடுகளில் வேலைவாய்ப்பின்மை தலைதூக்குவது இயல்பு. உழைப்புத் தீவிர முடைய உள்ளமைப்புத் தொழில்களில் அரசாங்கம் முதலீடு செய் வதன் வாயிலாக வேலையின்மைப் பிரச்சனையை ஓரளவிற்குச் சமாளிக்க முடியும். ஏனெனில் போக்குவரத்துத் தொழில்கள், அணை கட்டி மின்விசையை உருவாக்குதல் போன்ற துறைகளில் உழைப்பானது பெருமளவிற்கு ஆளப்படும். எதிர்காலத்தில்

தோன்றவிருக்கும் பிற தொழில்களில் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள இதனை பயிற்சிக் களமாக உழைப்பாளர்கள் எண்ண இங்கு வாய்ப் புண்டு. மேலும், இதுகாறும் வேலையின்றி இருந்த காரணத்தினால் உள்ளமைப்புத் தொழில்களில் அமர்த்தப்படுகின்ற வேளையில், பிழைப்பு மட்டத்திற்குச் சமமான குறைந்த கூலி கொடுத்தாலும் தொழிலாளர்கள் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள வாய்ப்பினை நன்கு பயன்படுத்த ஆயத்தமாகவே இருப்பார்கள். ஏழை நாடுகளுக்கு இன்றியமையாததாக விளங்கும் மூலதனப் பண்டங்களை இவ் வாற்றல் மிக்க தொழிலாளர்கள் உற்பத்திச் செய்கின்றனர் என்பதை மறுக்க முடியாது.

போதிய அடிப்படை வசதிகள் இல்லாமலிருந்தால், தொழில் கள் தோன்றுவதற்கு இச் சூழ்நிலை முட்டுக்கட்டையாக விளங்கும். ஆனால் உள்ளமைப்பு வசதிகள் யாவும் நிறுவப்பட்டவுடன், தொழி லானது தன்னியல்பாகக் கவரப்பட்டு, துவக்கப்பெற வேண்டும் என்ற கட்டாயம் கிடையாது.

### உழைப்புச் செறிவுசார் தொழில்நுட்பம்

இரும்பு, எஃகு, எண்ணெய் சுத்திகரிப்புப் போன்ற கனரகத் தொழிற்சாலைகள் ஆரம்பிப்பதற்கு அதிக முதலீடு தேவை. அங்கு வேலைவாய்ப்பு குறைவாக இருந்தாலும் உற்பத்தி அதிகமாக இருக் கும். ஆனால் உற்பத்தியைத் தொடங்குவதற்கு நாலைந்து ஆண்டு கள் ஆவதோடு ஆரம்ப நிலையில் உற்பத்தி குறைவாகவே இருக் கும். ஆனால் அதே முதலீட்டைப் பல்வேறு 'உழைப்பு தீவிரப் படுத்தப்பட்ட தொழில் துறையில்' முதலீடு செய்தால் உற்பத்தியும் விரைவில் ஏற்படும். வேலை வாய்ப்பும் அதிகரிக்கும். உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில்துறை என்பது, சிறிய அல்லது நடுத் தர அளவில் நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்வதற்காக ஏற் பட்டதாகும்.

பின்தங்கிய நாடுகளில் உழைப்பின் அளிப்பு அதிகமாக இருக்கும்; ஆனால் முதல் குறைவாக இருக்கும். அதே சமயத்தில் முன்னேறிய நாடுகளில் உழைப்பின் அளிப்பு குறைவாக இருக்கும். ஆனால் மூலதனம் அதிகமாக இருக்கும். ஆதலால் உழைப்புக்குப் பதில் மூலதனம் அதிகமாக பயன்படுத்தப்படுகின்றன. எனவே அங்கு பின்பற்றப்படும் தொழில் நுட்பத்தைக் கண்மூடித்தனமாக, வளர்ச்சியுறும் நாடுகளில் கையாளக் கூடாது.

எனவே முதல் குறைவாக உள்ள இடங்களில் உழைப்புச் செறிவுள்ள தொழிற் சாலையை ஆரம்பிப்பது நல்லது. வேலை

வாய்ப்பை அதிகரிப்பதால் மக்களிடையே வாங்கும் சக்தி அதிகரிக்கின்றது. இதனுல் நுகர்வோர் பொருள்களுக்குத் தேவை கூடுகின்றது. அங்காடியும் விரிவடைகின்றது. அங்காடி விரிவடைவதால் தொழில் துறை முன்னேறுவதற்கு ஊக்கம் கிடைக்கிறது. இதன் விளைவாக மறுபடியும் முதலீடு பெருகி வேலை வாய்ப்பு கூடுகின்றது.

ஆரம்பத்தில் வளர்ச்சியுறும் நாடுகளில் அங்காடியின் அளவு சிறிதளவாக இருப்பதால் அதன் தேவையை நிவர்த்தி செய்வதற்குச் சிறு தொழில்களால்தான் முடியும். பேரளவுத் தொழில்கள் ஆரம்பத்தில் ஓராண்டுத் தேவையை ஒரு சில நாட்களில் உற்பத்தி செய்து விடலாம். ஆகையால் வளர்ச்சியுறும் நாடுகளில் பேரளவுத் தொழில்கள் ஆரம்பித்தால் அவை தம் முழுத்திறமைக்கு வேலை செய்யா.

வளர்ச்சியுறும் நாடுகளில் பேரளவுத் தொழில்கள் ஆரம்பித்தால் அவை நகரங்களை உருவாக்கும். நகரங்கள் உருவாகும் பொழுது அதிக செலவில் குடியிருப்பு வசதிகளும், சுகாதார வசதிகளும் செய்து தரப்பட வேண்டும். இவ்வாறு மூலதனம் வேண்டாத துறைகளில் செலவிடப்படுகின்றது. இவ்வாறு மூலதனத்தை வேண்டாத துறைகளில் இட்டு வீணுக்குவதை விட சிற்றளவுத் தொழில்களில் முதலீடு செய்து வளர்க்க வேண்டும். எனவே. தொடக்க காலங்களில் சிறு தொழில்களையே ஆரம்பிக்க வேண்டும். காலப் போக்கில் அங்காடிகள் விரிவடைந்து தொழில் திறனும் கூடினுல், பேரளவுத் தொழில்கள் அமைப்பதற்கு அவையே அடிப்படையாக அமையக்கூடும். ஷும்பீட்டரும் இதே கருத்தினைத்தான் கூறுகின்ருர்.

## முதல் செறிவுசார் தொழில் நுட்பம்

நன்கு முன்னேற்றமடைந்த, தொழில் நுட்பத்தையும், புதுமையான இயந்திரங்களையும் கையாண்டு பேரளவுத் தொழில்களைத் தொடங்கினுல் தொழிலாளர்களின் உற்பத்தித் திறன் வெகு விரைவில் அதிகரிக்கும். உற்பத்தித் திறன் கூடுவதால் தொழில் உற்பத்தி அதிகரிப்பதோடு உற்பத்திச் செலவும் குறைகின்றது. இதனுல் இலாபம் அதிகமாகி அவ்விலாபத்தினை மறு முதலீடு செய்யும் பொழுது வேலை வாய்ப்பும் பெருகுகின்றது; உற்பத்தியும் உயர்கின்றது. எனவே, முதல் செறிவுசார் தொழில் துறைகளில், தொடக்க காலத்தில் வேலைவாய்ப்பு குறைவாக இருந்தாலும் காலப் போக்கில் வேலை வாய்ப்பு அதிகரிக்கும்.

முதலீடானது உற்பத்தித் திறனைப் பெருக்குவதற்காக மட்டுமே ஆளப்பெற வேண்டுமே யொழிய, வேலை வாய்ப்பினைக் கூட்டு வதற்காக இடப்படக் கூடாது. உற்பத்தித் திறன் கூடும்பொழுது தானாகவே வேலை வாய்ப்பும் அதிகரிக்கும். எனவே, முதல் தீவிரப் படுத்தப்பட்ட தொழில் துறையில் முதலீடு செய்வது, பொருளா தார முன்னேற்றத்தை விரைவு படுத்தும்.

மேற்கூறிய இரு நுட்பங்களும் அவற்றிற்கே உரிய நன்மை தீமை களைக் கொண்டிருந்தாலும், வளரும் நாடுகளில் உழைப்புச் செறிவு சார் தொழில் துறையினை முதலில் பின்பற்ற வேண்டும் என்ற கருத்து பல்வேறு தூதுக் குழுக்களால் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

சிற்றளவில் ஆரம்பிக்கப்பட்ட தொழில் துறையே சிற்றளவில் உள்ள அங்காடியின் தேவையினைப் பூர்த்தி செய்ய முடியும். மேலும், அவை முழுத்திறமையுடன் வேலை செய்யும். நாளடைவில் விரிவடையும் பொழுது சிறு தொழில்களை முன்னேற்றி, பெரிய தொழில்களாக்கலாம். இதே கருத்தினைக் கிழக்கு நாடுகளுக்குச் சென்று வந்த ஒரு தூதுக்குழு பரிந்துரைத்துள்ளது.

### குடிசைத் தொழில்களும் சிறுதொழில்களும்

தொழில்துறை முன்னேற்றத்திற்குச் சிறு தொழில்கள் தாம் முக்கியமானவை என்று இன்று உணர்ச்சி மயமாக எழுதவும், பேசவும் பட்டு வருகின்றது. இவற்றை உற்று நோக்கும் பொழுது, தொழில்துறை முன்னேற்றத்தில் சிறு தொழில்களின் நன்மையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். சிறு தொழில் என்றால் என்ன என்பதை நன்கறிந்து அதனை உண்மையான முறையில் அணுகினால் (Realistic approach) சிறு தொழில் துறை முக்கிய மானது மட்டுமல்லாமல்,தொழில் மயமாவதற்குச் சிறந்த துணையாக வும் இருக்கும் என்பது புலனாகும். உணர்ச்சி வேகத்தில் அதனைத் தவறாக புரிந்து கொண்டால், சிறு தொழில் முன்னேற்றம் என்பது தோல்வியில் முடியும். இவ்வாறு தோல்வியில் முடிவது மட்டு மல்லாமல் கிடைப்பதற்கரிய வளங்கள் வேண்டாத வழிகளில் உபயோகிக்கப்பட்டு விரயமாக்கப்படும்.

ஆப்பிரிக்கா கண்டத்தில் உள்ள சில பின் தங்கிய நாடுகளில் சிற்றளவு தொழில் துறை என்பது பிழைப்பிற்காக நடத்தப்படும் பழைமையானதொரு தொழில் முறையாகும். அவை அந்த இடத்தி லுள்ள தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. ஆனால் இவை எந்த விதமான உற்பத்தியும் செய்வதில்லை. அவர்கள் செருப்புகள், துணிகள், கட்டிடங்கள், வாகனங்கள் முதலியவற்றைச் செப்ப

னிடும் வேலையில் ஈடுபட்டுள்ளனர். அவை முக்கியமானவையன்று என்று கூறிவிட முடியாது. ஆனால் இதனால் தொழில் துறை அபிவிருத்தி அடைந்திட முடியாது.

இது தவிர மற்ற சிறு தொழில் துறைகள் குறைந்த செலவில் குறைந்த தரமுள்ள பொருள்களை உற்பத்தி செய்கின்றன. இவை பாத்திரங்கள் மண்பாண்டங்கள், கைத்தறித்துணிகள், நாற்காலிகள், சட்டைகள் முதலியவற்றை அந்த இடத்திலுள்ள அங்காடியின் தேவைக்கு ஏற்றபடி தயாரிக்கின்றன. இவை ஏழை மக்களுக்குப் பேரளவு உற்பத்திப் பொருள்களின் விலையை விடக் குறைவான விலையில் விற்கப்படுகின்றன.

தொழில்துறை முன்னேற்றத்தில் இத்துறையின் பங்கு சிறியது இத்துறைகளில் பொதுச் செலவு (Over lead Cost) குறைவாகவே இருக்கும். வேறு வழியில்லாமல் தொழிலாளிகள் பிழைப்பு மட்டக் கூலியை மட்டும் பெற்றுக் கொண்டு வேலை செய்யத் தயாராக உள்ளனர். நவீன தொழில்துறை முன்னேற்றம் ஏற்படும் பொழுது இவ்வகைச் சிறு தொழில்கள் நசிந்து விடும்.

மேலும் தொழில் துறையின் உரிமையாளர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் எவ்விதக் குறிக்கோளும் இராது. தவிர கல்வியறிவில்லாத அவர்கள் தொழில் துறை சம்பந்தமாக உதவி அளித்தாலும் அதனை ஏற்றுக் கொள்ளக் கூடியு மனநிலையில் இருக்க மாட்டார்கள். எனவே இவர்களை நம்பி தொழில்துறை முன்னேற்றம் காண்பது என்பது மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கிய கதையாகவே அமையும்.

இவ்வகைச் சிறு தொழில்கள் அதிக வேலை வாய்ப்பு அளிக்கின்றன. எனவே அவைகள் நசிகின்ற பொழுது வேலையில்லாப் பிரச்னை அதிகமாகின்றது. தொழில் துறையில் முன்னேற்றம் அடைவதற்கு முன்பு கிராமங்களில் ஏற்பட்டுள்ள வேலையில்லாப் பிரச்னைக்குத் தீர்வு காண சிறு தொழில் துறை முன்னேற்றம்தான் வேண்டும். என்று அரசியல்வாதிகள் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது தவறான வழியில் இட்டுச் செல்லும்.

சிறு தொழில் துறையில் இருக்கும் தொழிலாளர்களையும், தொழிலதிபர்களையும் பெரிய தொழில் துறையில் ஈடுபடும்படி செய்வது என்பது ஒரு கடினமான செயலாகும். இவர்களைப் புறக்கணித்து, இளைஞர்களுக்குத் தொழிற் பயிற்சியும் தொழிற் கல்வியும் அளித்தல் பயனுடையதாக இருக்கும்.

சிறு தொழில் துறையில் மேற்கூறிய குறைபாடுகள் இருந்தாலும் கீழ்க்கண்ட விலை மதிப்பற்ற நன்மைகளும் உண்டு. தொழில் திறமை, தொழிற் கல்வி, தொழில் செய்முனைவோர், மூலதனம், பெரிய அளவில் அங்காடி முதலியன, முன்னேறும் நாடுகளில் இருப்பதில்லை. இத்தகைய இடையூறுகளையும் கடந்து தொழில் துறை முன்னேற்றத்தை கொண்டு வருவன சிறு தொழில்களாகும்.

ஏனென்றால் சிறு தொழில் ஆரம்பிப்பதற்கு உற்பத்தித் திறமை அதிகம் வேண்டியதில்லை. அதுபோல் கல்வியறிவும் அதிகம் வேண்டியதில்லை. சிறிய அளவில் உள்ள அங்காடியின் தேவைகளை அவற்றால்தான் நிவர்த்தி செய்ய முடியும். மேலும் அதிக மூலதனமும் தேவையில்லை. எனவே கிடைக்கின்ற மூலதனத்தைக் கொண்டு சிறிதளவு உற்பத்தி திறனுடைய சிறு தொழில்களை ஆரம்பித்து விடலாம்.

நாளடைவில் இச்சிறு தொழில்கள் விருத்தி அடைகின்றன. தொழில் திறமை தானாகவே ஏற்படுகின்றது. அங்காடி விரிவடைகின்றது. கிடைக்கின்ற இலாபத்தை மறு முதலீடு செய்யும் பொழுது தொழில்துறை அபிவிருத்தி அடைகின்றது. இவ்வாறு சிறு தொழிலாக ஆரம்பிக்கப்பட்ட தொழில்துறை காலப் போக்கில் பெரிய தொழில் துறையாக மாறுகின்றது. தொழில்துறை முன்னேறும் பொழுது தன்னிச்சையாக ஏராளமான தொழில் செய் முனைவோர்கள் தோன்றுவார்கள். இவர்கள் சிறு தொழில் துறையில் கிடைத்த அனுபவத்தைக் கொண்டு பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்துவார்கள்.

பின்தங்கிய நாடுகளில், இரும்பு, எஃகு விசை வண்டிகள் போன்ற மூலப் பொருள்கள் போதிய அளவில் கிடையா. ஆனால் சிறு தொழில்களுக்கு இவை அதிக அளவில் வேண்டியதில்லை எனவே கிடைக்கின்ற கச்சாப் பொருள்களைக் கொண்டே இவை சிறிது சிறிதாக முன்னேற்றமடையும்.

சிறு தொழில்களை படிப்படியாக முன்னேற்றுவதில் ஜப்பான் வெற்றி கண்டுள்ளது. ஜப்பானின் அனுபவம் மற்ற நாடுகளுக்கு முன்மாதிரியாக இருக்கும். இந்தியாவில் சிறு தொழில்கள் பஞ்சாப் மாநிலத்தில் பெரிதும் முன்னேறியுள்ளன. இந்தியாவில் சிறு தொழில்கள் என்பவை பத்து முதல் நூறு தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துகின்றன. மேலும் அவை குறிப்பிடத்தக்க இயந்திரங்களுடன் விளங்குகின்றன. நவீன காலத் தொழிற்சாலையைப் போலும் தோற்றமளிக்கின்றன. இவற்றை நாளடைவில் முன்னேற்றமடையச் செய்து விடலாம்.

சிறு தொழில்கள் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு கீழ்க் கண்ட நிபந்தனைகள் அவசியம்.

(1) தொழில் செய்ய முன் வருபவர்கள் அத்தொழில் ஆர்வமும் தலைமை தாங்குகின்ற திறமையும் பெற்றிருக்க வேண்டும். அவர் கள் தங்கள் தொழிலை மேலும் மேலும் பெருக்கி நவீன மயமாக்க வேண்டும் என்ற குறிக்கோளை உடையவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் போதிய கல்வியும், தொழில் திறமையும் பெற்றிருக்க வேண்டும்.

(2) நல்ல விலையைத்தரக்கூடிய அங்காடி இருக்கவேண்டும், அங்காடியால் நிர்ணயிக்கப்படுகின்ற விலை உற்பத்திச் செலவுக்கு மேல் இருந்தால்தான் இலாபகரமாக இருக்கும். இலாபகரமாக இருந்தால்தான் முதலீடு செய்பவர்கள். முதலீடு செய்ய முன்வருவார்கள். எனவே நல்ல விலையைக் கொடுக்கக் கூடிய அங்காடி இருத்தல் அவசியம்,

(3) இத்தகைய அங்காடி நன்கு பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும். இல்லையேல் குறைந்த விலையில் வெளிநாட்டிலிருந்து பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டு சிறு தொழில்களை அழித்து விடும்.

இச்சிறு தொழில்களை முன்னேற்றுவதற்கும், புதிய நவீன இயந் திரங்களை வாங்குவதற்கும் அரசு குறைந்த வட்டி வீதத்தில் கடனுதவி அளிக்க வேண்டும். மேலும் தொழில்துறை தொடர் பான செயல்களுக்கு உதவி புரிய வேண்டும். அங்காடி பற்றிய ஆய்வு (Market Suivey) எடுத்து சிறு தொழில் துறையின் பொருள்களை எங்கெங்கு விற்பதற்கு வாய்ப்பு இருக்கின்றது. என் பதை எடுத்துக்கூற வேண்டும். வெளி உலக அங்காடி வாய்ப்புக் களையும் எடுத்துக்கூற வேண்டும். இத்துறையில் இந்தியா கைவினைப் பொருள்களுக்கு வெளி உலக அங்காடி வாய்ப்பினை எடுத்துக் கூறி அத்தொழிலுக்கு ஊக்கம் தந்துள்ளது.

சிறு தொழில்கள் இன்று ஐரோப்பாவின் குடியேற்றக் (Colonialism) கொள்கையால் சிதைந்து விட்டது. 19ம் நூற்ருண்டின் தாய் நாடுகள் தாங்கள் பிடித்த நாடுகளை தங்கள் நாடுகளின் பொருள்களுக்கு சிறந்த அங்காடிகளாகப் பயன் படுத்தின. தங்கள் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களைத் தாங்கள் குடியேறிய நாடுகளில் மிகக் குறைந்த விலைக்கு விற்றன. இதனுல் அங்கு நிலைத்திருந்த சிறு தொழில்கள் போட்டியிட முடியாமல் நசிந்து போயின. இந்தியாவை இதற்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். இந்தியாவில் சிறு தொழில்கள் சிறந்து விளங்கிய தோடல்லாமல் அவை தொழில் மயமாவதற்கு சிறந்த வளரும் முனைகள் (Growing Points) ஆகவும் விளங்கின.

# 4. பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில்களின் இன்றியமையாமை

[A] சிற்றளவுத் தொழில்கள் : இலக்கணங்கள், வகைப்படுத்தல், அமைப்பு :

ஒரு நாட்டின் தொழில் அமைப்பினை 5 பிரிவுகளாக பிரிக்க இயலும். அவை பின் வருமாறு :

(i) பேரளவுத் தொழில்கள்
(ii) நடுத்தரத் தொழில்கள்
(iii) சிற்றளவுத் தொழில்கள்
(iv) கிராமத் தொழில்கள்
(v) குடிசைத் தொழில்கள் அல்லது இல்லத் தொழில்கள்

மேற் கூறியவைகளுள், நமது ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டியவைகள், கடைசி 3 பிரிவுகள் மட்டுமாதலின், அவைகளைப் பற்றிய இலக்கணங்கள் அறிந்து கொள்வது நலம் பயக்கும்.

'சிற்றளவுத் தொழில்கள்' 'குடிசைத் தொழில்கள்' என்பன இரு வேறுபட்ட பகுதிகளாகும்; வேறுபட்ட தன்மைகளைக் கொண்டவைகளாகும். இவ்வேறுபாடுகளைத் தெளிவாக்கும் பொருட்டு பல விளக்கங்களும், இலக்கணங்களும் தரப்பட்டுள்ளன. பல்வேறு இலக்கணங்கள் வழக்கில் பயின்று வரினும், மேற்கூறிய இரு தொழில்களின் வேறுபாடுகளை பூரணமாக இனங்காட்ட வல்ல இலக்கணங்கள் இல்லை எனலாம். இத்தகையதோர் சூழலில்தான் மூன்றாவது வகையான 'கிராமப் புறத் தொழில்கள்' (Rural Industries) எனும் கிராமத் தொழில்கள் பற்றிய விளக்கமும் உள்ளே புகுத்தப்படுகிறது. இவ்வாறாக இம் மூவகைத் தொழில்கள் பற்றிப் பற்பல இலக்கணங்கள் பேசப்படுவதால், அவைகளை

ஒன்றன்பின் ஒன்றாக ஆய்ந்து, இறுதியில் இந்தியச் சூழ்நிலையில் ஒப்புக் கொள்ளப்பட்ட இலக்கணங்களைக் காணலாம்.

**(1) குடிசைத் தொழில்கள் :**

கிராமப் புறக்கண்ணோட்டத்தோடு நோக்கும் பொழுது, 'குடிசைத் தொழில்கள்' என்பன பெரும்பாலும் பண்ணை சார்ந்த—வேளாண்மைத் துறை தழுவிய—தொழில்களையே குறிக்கின்றன. நகர்ப்புறக் கண்ணோட்டத்தில் அணுகும்போதுதான் அவை ஆலை முறைத் தொழில்கள், (Factory type of Industries) போல் அமைந்துள்ளன.

'குடிசைத் தொழில்,' என்பதற்கு இப்படி ஓர் இலக்கணமும் தருவதுண்டு. எவ்வெத் தொழில்களெல்லாம் மனித சக்தியை இன்றியமையாது சார்ந்துள்ளனவோ, நவீனத் தொழில் நுட்பங்களை ஆளுகின்றனவோ, பொருள்களை வினைமுற்றிய பண்டங்களாக மாற்றுகின்றனவோ, அவைகளே குடிசைத் தொழில் என்பர். இவ் விளக்கமானது 'உணவு மற்றும் வேளாண்மை அமைப்பு' (F.A.O) என்ற ஐ. நா. சபை அமைப்பு வெளியிட்ட அறிக்கை ஒன்றில் தரப்பட்டுள்ளது. இவ் விளக்கமானது, பண்ணை சார்ந்த தொழிலுக்குத் தரப்பட்டதாகும். அதனுள் மூன்று முக்கிய இயல்புகள் காணப்படுகின்றன. அவை :

(i) அதிக அளவு மனித சக்தியைப் பயன்படுத்தல்,

(ii) நவீன தொழில் நுட்ப முறைகளையும் நுட்ப அறிவினையும் கையாளல்,

(iii) பொருள்களை முழுவடிவம் பெற்ற வினைமுற்றிய பண்டங்களாக மாற்றுதல்.

ஆயினும் இவ் விலக்கணத்தை ஒரு முழுமையான அல்லது சமநிலையான இலக்கணம் என்று ஏற்றுக் கொள்ள இயலாது. ஏனெனில் இவ்விலக்கணத்தில் குறிப்பிடப்படும் சில இயல்புகள் பிறவகைத் தொழில்களுக்கும் பொருந்தக் கூடியன. சான்றாக, முதலாவதாகக் கூறப்பட்ட இயல்பான 'மனித சக்தியை அதிகம் பயன்படுத்தல்,' என்பது பேரளவுத் தொழில்களுக்கும் பொருந்துமன்றோ? தவிர, குடிசைத் தொழில்கள் பல்கியுள்ள வளருகின்ற பொருளாதார அமைப்புக் கொண்ட ஒரு நாட்டில் நவீனத் தொழில் நுட்ப முறையும், அறிவும் இருத்தல் அரிதாகும். மூன்றாவது கூறப்பட்ட இயல்பும் கூடச் சில வகை குடிசை தொழில்களில் காண இயலாது. சான்றாக, பண்டங்களைப் பதப்படுத்தல் போன்ற சிறப்புத் தொழிலில் அவ்வியல்பைக் காணவியலாது.

ஆகவேதான் இவ்விலக்கணமானது முழுமையற்ற அல்லது சம நிலையற்ற இலக்கணம் என்று ஒதுக்கப்படுகிறது.

தொழிலுக்கான கச்சாப் பொருள் பெறுதல், தயாரிக்கப்பட்ட பொருள்களை விற்பனை செய்யும் சந்தைப் பகுதி, மேற்கொள்ளப் படும் உற்பத்தி முறை ஆகியவற்றின் அடிப்படையில் ஓர் இலக் கணத்தை ஆசிரியர்கள் பி. என். தார், ஹெச். எஃப். லிடால் (P.N. Dhar & H.F. Lydall) ஆகியோர் தமது நூலாகிய "இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில் அமைப்பின் பங்கு," (1961) என்ற நூலில் தருகின்றனர். அது வருமாறு : 'குடிசைத் தொழில்கள் என்பன பெரும்பாலும் குடும்பத் தொழில் அமைப்பு ஆகும். (கூலிபெறும் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தாமலோ அல்லது மிகக் குறைந்த அளவு அமர்த்தியோ நடைபெறும்); அவைகளில் பெரும்பாலானவை தமக்குரிய கச்சாப் பொருள்களை அல்லது மூலப் பொருள்களை உள்ளூருக்குள்ளேயே பெற்றுக் கொள்கின்றன; தங்களின் பெரும்பாலான உற்பத்திப் பொருள்களை உள்ளூர் சந்தையிலேயே விற்று விடுகின்றன. மொத்தத்தில் அவை, மிகச் சிற்றளவு, கிராமப்புற, உள்ளூரைச் சார்ந்த தொழில் நுட்பத்தில் பின்தங்கிய தொழில்களாகும்.' இவ் விலக்கணம் ஓரளவிற்கு பொருந்தக்கூடியதாகவும் ஏற்கக்கூடிய தாகவும் உள்ளது.

குடிசைத் தொழில் பற்றி விளக்க வந்த நிதிக்குழு அறிக்கை யானது (Fiscal Commission Report), 'முழு நேரத் தொழிலா கவோ அல்லது பகுதி நேரத் தொழிலாகவோ, குடும்ப அங்கத் தினர்களின் உதவியால் நடத்தப்படுகின்ற தொழிலே குடிசைத் தொழில் ஆகும்,' எனக் குறிப்பிடுகிறது. எனவே, குறிப்பிட்ட நேரங்களிலோ அல்லது குறிப்பிட்ட நாட்களிலோ வேலையைச் செய்யாமல் குடும்பத்தில் உள்ளோர் தங்களுக்கு வசதியான நேரங்களில் பணிபுரிகின்ற இயல்பினைக் கொண்டவைகளையே குடிசைத் தொழில் எனலாம். குடிசைத் தொழில்களில் குடும்பத் திலிருப்பவர்களிடையே வேலையானது பகிர்ந்தளிக்கப் பட்டாலும், வெளியிலிருந்து கூலிக்காக வேலைதேடி வருகின்ற சிலருக்கு வேலை தருவது என்பதும் முழுவதுமாக மறுக்கப்படுவதில்லை. இதனை ஆசிரியர்கள், தார், லிடால் கூறியவற்றிலிருந்து உணர்ந்து கொள்ளலாம்.

நடைமுறையில் காணும்பொழுது கிராமப்புறக் குடிசைத் தொழில்களில் பகுதி நேர வேலை முறையையும், நகர்ப்புறக் குடிசைத் தொழில்களில் முழுநேர வேலை முறையையும் காணமுடி

றது என்பதையும் இங்கு சுட்டிக் காட்ட வேண்டியுள்ளது பொதுவாகச் சிற்றளவுத் தொழில்களில்தான் முழுநேர வேலை வாய்ப்பளிப்பானது, அத்தொழில்களில் பணி புரிகின்ற தொழில் கட்குக் கிட்டுகின்றது.

குடிசைத் தொழில்கள் அல்லது இல்லத் தொழில்கள் என்பதற்கு 1961-ம் ஆண்டுக்கணிப்பு (1961 Census) கூறுகின்ற விளக்கமே ஏற்றுக் கொள்ளக் கூடியதாக உள்ளது அது வருமாறு : 'குடிசைத் தொழில் என்பது, ஒரு குடும்பத்தின் தலைவனால் அல்லது அக்குடும்பத்தின் உறுப்பினர்களால் நடத்தப் படுவது. கிராமப் புறமானால் அத்தொழில் அவனது இல்லத்தில் அல்லது கிராமத்தினுள்ளும், நகர்ப்புறமானால் அவனது இல்லத்தில் மட்டுமே நடத்தப்படும்.' இவ்வாருக, கிராமப் பொருளாதாரத் தோடு இணைக்கப்பட்டு, வேளாண்மைத் தொழிலுக்குத் துணை நிறுவனங்களாகத் திகழ்பவைகளே குடிசைத் தொழில்கள் ஆகும்.

## (2) கிராமத் தொழில்கள்

'கிராமத் தொழில்கள் என்பன பொதுவாகக் கிராம கைவினைப் பொருள் உற்பத்தியாளர்களைக் கொண்ட தொழில்களைக் குறிப்பிடு வனவாம். பழமையான உற்பத்தி முறைகளைக் கையாண்டு, தொன்மை வழிப் பொருள்களை (Traditional Goods) உற்பத்தி செய்யும் கைவினைத் தொழில்களையே கிராமத் தொழில்கள் எனலாம்.

இக் கைவினைத் தொழில்கள் திறமையின் அடிப்படையில் அமைந்தவை எனலாம். எனவே. தனிப்பட்ட நபர்களின் திறமையைச் சார்ந்து அவை விளங்குகின்றன. ஆகவேதான் அவைகள் தனிநபர் சார்புடையவை எனக் கூறப்படுகின்றன. இவ்வகைத் தொழில்கள் ஒரு நாட்டின் மரபு, பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம் போன்ற தன்மைகளைப் பிரதிபலிக்கின்றன. திறம்பட்ட தொழில் நுட்பத்தைப் புலப்படுத்தும் தொழில்கள் அவை. அத் தொழிலின் அடிப்படைத் தத்துவமே அழகுபடுத்தல் என்பதாம். யானைத் தந்தம், மற்றும் பற்பல உலோகங்களினால் தயாரிக்கப்படும் கைவினைப் பொருள்கள், சித்திர வேலைகளமைந்த பாய் முடைதல் என்பன இதற்குச் சான்றுகளாகும்.

## (3) சிற்றளவுத் தொழில்கள்

'சிற்றளவுத் தொழில்கள்' என்ற சொற்றொடருக்கு தரப்படு கின்ற இலக்கணங்களும், விளக்கங்களும் நாட்டுக்கு நாடு வேறு படுகின்றன; காலத்திற்குக் காலம் மாறுபடுகின்றன. வளர்ந்து

வரும் ஒரு பொருளாதார அமைப்புக் கொண்ட நாட்டில் மாறிவரும் பொருளாதாரச் சூழ்நிலைகளுக்கேற்ப, சிற்றளவுத் தொழில்கள் பற்றிய இலக்கண விளக்கங்களும் மாறுதலுக்கு உட்படுகின்றன. கீழே தரப்பட்டுள்ள பலதரப்பட்ட இலக்கணங்கள் இக்கூற்றினை நிருபிக்கும். எனவே, சிற்றளவுத்தொழில்கள் பற்றிய சிற்சில இலக்கணங்களையும், விளக்கங்களையும் முதலில் காணலாம்.

பேராசிரியர் எவர்ட். இ. ஹேகன் (Porf. Evert. E. Hagen) என்பார் கருத்துப்படி, 'குடிசைத் தொழில்' என்பது சில நிறுவனங்கள் அடங்கியதும், இயந்திர முறைகளை விட கைவினைத் தொழில் முறைகளைப் பயன்படுத்துவதுமான தொழில் ஆகும். 'சிற்றளவுத் தொழில்' என்பது, படி முறைத் தொழில் அல்லது மூலப் பொருள் மாற்றி அமைக்கின்ற சிறு நிறுவனங்களை அடக்கிய தொழிலாகும். அன்னாரின் கருத்துப்படி குடிசைகளில் அல்லது இல்லங்களில் தொழில் ஆரம்பிக்கப்பட்டமையால்தான் 'குடிசை' என்ற சிறப்புப் பெயர் இணைக்கப்பட்டதாம். ஆனால் சிற்றளவுத் தொழில்கள் என்பன இயந்திரங்கள் பொருத்தப்பட்ட சிறு நிறுவனங்கள் ஆகும்.

யூஜின் ஸ்டேலி (Eugene Staley) என்பார், சிற்றளவுத் தொழில் என்றால் என்ன என்பதை விளக்க, அதன் இயல்புகள் சிலவற்றை இவ்வாறு வகைப்படுத்துகிறார் :

(i) சிற்றளவுத் தொழிலில் குறைந்த அளவு நிர்வாகம் இருக்கும் அல்லது அதனுடைய நிர்வாகத்தில் சிறப்புத் தேர்ச்சியின்மை இருக்கும். அது மட்டுமின்றி அதனுடைய தொழில் அமைப்பு நன்கு ஒழுங்குபடுத்தப் பெறாமல் (not well organised) இருக்கும்.

(ii) பணி புரிகின்ற வேலையாட்கள், வணிகர்கள், வாடிக்கையாளர்கள், மூலப் பொருள்கள் அளிப்போர், நிதியளிப்போர் போன்ற சிற்றளவுத் தொழிலில் தொடர்பு கொண்ட பலரிடையேயும் நெருங்கிய தொடர்பு நிலவும்.

(iii) சிற்றளவுத் தொழிலுக்குரிய மூலதனம் சீரமைந்த பத்திரச் சந்தை (Organised Securities Market) வாயிலாகக் கிடைக்காமல் இருக்கும்.

(iv) முக்கிய பொருள்களுக்கான சந்தையில் சிற்றளவுத் தொழிலுக்கு தலைமையிடம் இல்லாதிருக்கக் கூடும்.

(v) சிற்றளவுத் தொழில்கள் உள்நாட்டுச் சமுதாயத்துடன் நெருங்கிய பிணைப்பும் இணைப்பும் கொண்டிருக்கும். அப்பிணைப்பே அத்தொழிலின் வளர்ச்சிக்கு நெம்புகோல் (Leverage) போன்று அமைகிறது.

மேற்கூறிய இயல்புகளை வகுத்த ஸ்டேலி அவர்கள், புள்ளியல் நோக்கங்களுக்காக சிறு தொழில் பற்றி இன்னொரு கருத்தும் சொன்னார். அதன்படி 100-க்கும் குறைவான தொழிலாளர்களைக் கொண்டு செயல்படுகின்ற உற்பத்தி நிறுவனங்களைச் சிறு தொழில்கள் என்று குறிப்பிடுகிறார்.

யூஜின் ஸ்டேலியின் கருத்தினைப் போன்று, ஒரு தொழிலில் ஈடுபடவல்ல தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் கொண்டும், அத்தொழிலில் முடக்கப்படும் மூலதனத்தைக் கொண்டும், சிறு தொழிலுக்கான விளக்கங்கள் இந்தியாவில் பல்வேறு காலக்கட்டங்களில் தரப்பட்டுள்ளன. சூழ்நிலை மாற்றத்திற்கேற்பவும், பொருளாதார வளர்ச்சிக் கொப்பவும், சிறு தொழிலில் முடக்கப்படும் மூலதனம், ஈடுபடுத்தப்படும் தொழிலாளர்கள் எண்ணிக்கை ஆகியன படிப்படியாக மாற்றம் அடைவதைத் தெளிவாக உணரலாம்.

சான்றாக, நிதிக்குழு அறிக்கை (1949–50) சிற்றளவுத் தொழிலுக்கு இலக்கணம் தர முயலுகின்றபோது பத்திலிருந்து ஐம்பது (10 முதல் 50வரை) கூலியாட்களைக் கொண்டு செயல்படுகின்ற தொழிலே ‘சிற்றளவுத் தொழில்’ என்று கூறுகிறது.

மின்சக்தியைப் பயன்படுத்துவதை அடிப்படையாகக் கொண்டு முதன் முதலில் ஓர் இலக்கணம் தரப்பட்டுதுண்டு. அதன்படி, மின்சக்தியைப் பயன்படுத்தினால், 20 அல்லது அதற்குக் குறைவான தொழிலாளர்களைக் கொண்ட தொழில்களும் மின்சக்தியைப் பயன்படுத்தவில்லை எனில் 50 தொழிலாளர்களைக் கொண்ட தொழில்களும் சிற்றளவுத் தொழில்கள் என்றே கூறப்படும்.

1951ம் ஆண்டில் நம் நாட்டில் ‘தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்கு படுத்தல்) சட்டமானது (The Industries Development and Regulation Act 1951) இயற்றப்பட்டது. இச்சட்டமானது 1953, 1957 ஆகிய ஆண்டுகளில் திருத்தப்பட்டது. அச்சட்டத்தில் சிற்றளவுத் தொழிலுக்கு விளக்கம் தரப்படுகையில் தொழிலில் ஆளப்படும் வேலையாட்களின் எண்ணிக்கைக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. அதன்படி, மின்சக்தி பயன்படுத்தினால் 50 தொழிலாளர்களும், மின்சக்தி பயன்படுத்தப் படவில்லை எனில் 100 தொழிலாளர்களும் பணிபுரிகின்ற தொழிலே ‘சிற்றளவுத் தொழில்’ என்று கூறப்பட்டது.

சிற்றளவுத் தொழில்கள் பற்றி ஆய்ந்தறிவதற்காக, இரண்டாம் திட்ட காலத்தில் திரு. கார்வே தலைமையில் அமைக்கப்பட்ட

குழுவானது தனது அறிக்கையில் சிற்றளவு உற்பத்தித் தொழிலுக் குரிய இலக்கணத்தை வகுத்து வெளியிட்டது. அவ்வறிக்கையின் படி, மூலதன முதலீட்டின் அளவு ரூ 5 இலட்சத்திற்குக் குறை வாகவும், மின்சக்தியுடன் செயல்படுகின்ற பொழுது 50 நபர் களுக்குக் குறைவான தொழிலாளர்களின் எண்ணிக்கை கொண் டதும், மின்சக்தி இல்லாது செயல்படுகின்றபொழுது 100 பேர் களுக்குக் குறைவான தொழிலாளர்களின் எண்ணிக்கையினைக் கொண்டதுமான எல்லாத் தொழில்களும் சிற்றளவு உற்பத்தித் தொழில்களாகும்.

இந்திய அரசானது, பத்தும் அதற்கு மேலும் வேலைக்கமர்த்தி யுள்ள சிற்றளவுத் தொழில்கள் பற்றி விவரங்கள் சேகரிக்கும்படி 1959-ம் ஆண்டு, மாநில அரசுகளைக் கேட்டுக் கொண்டது. அவ்வேளையில் 'சிற்றளவுத் தொழில்' என்றால் என்ன என்பது பற்றி அரசு விளக்கம் தந்தது. அதன்படி, மின்சக்தியுடன் செயல் படுகின்ற பொழுது, இயல்பாகவே 50 நபர்களுக்குக் குறைவான தொழிலாளர்களை உடையதும், ரூ 5 இலட்சம் மூலதனச் சொத்துக் களுடையதும் சிற்றளவுத் தொழில் என்று வரையறை செய்யப் பட்டது.

இவ்வாறாக சிற்றளவுத் தொழிலுக்கு இலக்கணம் வகுக்கும் பொழுது, ஆரம்ப காலங்களில் பணிக்கமர்த்தப்படும் தொழிலாளர் கள் எண்ணிக்கை கொண்டும் பின்னர் அவ்வகைத் தொழிலாளர் கள் எண்ணிக்கையுடன் தொழிலில் முடக்கப்படும் முதலீட்டு மூல தனம் பற்றியும் கூறப்பட்டது.

இந்தியச் சிற்றளவுத் தொழில்கள் பற்றி ஆய்வு மேற்கொண்டு அறிக்கை சமர்பித்த ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவும் (Ford foundation team) ஓர் இலக்கணத்தை வரையறை செய்தது. அக்குழுவின் கருத்துப்படி, 'ரூ 5 இலட்சத்திற்கு குறைவான நிலை முதல் (Fixed Capital) உடைய உற்பத்தித் தொழில்கள் சிற்றளவுத் தொழில்கள் ஆகும். அத்தொழில்களை எல்லாம் சிறிய ஆலைகள் என்றோ அல்லது சிறிய நிறுவனங்கள் என்றோ கூறலாம்.' அக் குழுவின் எண்ணப்படி, இந்தியாவில், ஓர் ஆலை (Factory) என்பது, இந்திய ஆலைகள் சட்டத்தின்படி (Indian factory Act) சட்ட பூர்வமான பொருள் கொண்டது. மின் சக்தியுடன் செயல் படும் பொழுது 10 அல்லது அதற்கு மேல் வேலையாட்களைக் கொண்டதும், மின் சக்தியில்லாது செயல்படுகின்றபோது 20 அல்லது அதற்கு மேல் வேலையாட்களைக் கொண்டதும், ஓர் 'ஆலை' எனப்படும். 'கிராமத் தொழில்கள்' என்பதோ பொதுவாக கிராமக்

கைவினைத் தொழில் உற்பத்தியாளர்கள் அல்லது கலைஞர்களைக் கொண்டு மரபு முறைப் பொருள்களை மரபு முறை வழியில் தயாரிக்கும் பணிமனைகளைக் குறிப்பிடும் என்று அக்குழு கருத்துக் கொண்டது.

நாம் முன்னரே கண்டபடி, அரசானது சிற்றளவுத் தொழில் என்றால் என்ன என்பதைத் தெளிவாக்கிட முதன் முதலில் கீழ்க் கண்ட விளக்கத்தைத் தந்தது. 'சிற்றளவுத் தொழில் என்பது மின்சக்தி பயன்படுத்தினால் 50க்குக் குறைவான தொழிலாளர்களைக் கொண்டதும், மின்சக்தியைப் பயன்படுத்தவில்லை எனில் 100க்குக் குறைவான தொழிலாளர்களைக் கொண்டதும் ரூ 5 இலட்சத்திற்கு மிகைப்படாத வகையில் நிலை முதலில் முதலீடு செய்துள்ளதுமான ஒரு தொழில்', என்று குறிப்பிட்டது. ஆனால், இவ்விளக்கம் பின்னர் திருத்தியமைக்கப்பட்டது. அதன்படி, முதலீட்டு உச்ச வரம்பாகிய ரூ 5 இலட்சம் என்பதை மாற்றம் செய்யாமல், தொழிலாளர்கள் பற்றிய உச்ச வரம்பினை 'ஒரு வேலை நேர அளவிற்கு' (per shift) மேற் கூறிய விகிதத்தில் தொழிலாளர் களைப் பயன்படுத்தும் தொழில்கள் என்ற விளக்கத்தைத் தந்தது. அதன் பின்னர் 1960-ல் இவ்விலக்கணம் மீண்டும் திருத்தப்பட்டு, தொழிலாளர்கள் பற்றிய உச்ச வரம்பு அடியோடு நீக்கப்பட்டு, முதலீட்டுத் தொகை அளவு மட்டுமே அளவு கோலாக வைத்துக் கொள்ளப்பட்டது. 1966-ம் ஆண்டு ஜூன் மாதம் இவ் விலக்கணம் மறு பரிசீலனை செய்யப்பட்டு புதிய விளக்கம் தரப் பட்டது. இப் புதிய இலக்கணத்துள்ளும், வேலைக்கமர்த்தப்படும் பணியாட்கள் பற்றிய விவரம் கூறப்படவில்லை: மாறாக, ரூ7.50 இலட்சத்திற்கு மிகைபடாத மூலதன முதலீடு (அதாவது இயந்திரங்கள், இயந்திரத் தொகுப்புக்களின் மேல் முதலீடு) பண்ணிய தொழில்களே சிற்றளவுத் தொழில்கள் என்று கூறப் பட்டது. 1966-ம் ஆண்டு வகுக்கப்பட்ட இவ்விலக்கணமே தற் சமயம் அமுலில்—நடை முறையில்—உள்ளது என்பதை ஈண்டு தெளிவாக நினைவிற் கொள்ள வேண்டும்.

இதுகாறும் நாம் "சிற்றளவுத் தொழில்' என்ற சொற்றொட ருக்குத் தரப்பட்ட பலவகை விளக்கங்களைக் கண்டோம். இவைகள் பலவகை குழுக்களால் அல்லது இந்திய அரசால் பல்வேறு காலக் கட்டங்களில் கொள்ளப்பட்ட இலக்கணங்களாகும். இந்த நூலானது சிற்றளவுத் தொழில்கள் பற்றி ஆராயப் புகுந்த ஒரு நூலாதலினால், இத்துணை விரிவாக பலதரப்பட்ட விளக்கங்களையும், இலக்கணங்களையும் தொகுத்தளிக்க வேண்டியதாயிற்று. பல்வேறு காலங்களில் மேற்கொள்ளப்பட்ட இவ்விளக்கங்கள் அனைத்தையும்

படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்த அடிப்படையில் வகைப் படுத்தி, சுருக்கி மீண்டும் கீழே காணலாம்.

(அ) மின் சக்தியுடன் 50க்குக் குறைவான வேலையாட்களை உடையதும், அல்லது மின் சக்தியைப் பயன்படுத்தாமல் 100க்குக் குறைவான வேலையாட்களையுடையதும், ரூ 5 இலட்சத்திற்கு குறைவான மூலதனத்தை உடையதுமான ஒரு சிறு தொழில் நிறுவனமே சிற்றளவுத் தொழில் ஆகும். இது ஆரம்பக் காலங் களில் கூறப்பட்ட விளக்கம். இதில், ஒரு நிறுவனம் பயன்படுத்தும் தொழிலாளர்களின் எண்ணிக்கையளவு, முதலீடு ஆகிய இரு அம்சங்களையும் கொண்டது.

(ஆ) 'ஒரு வேலை நேர அளவிற்கு 50 நபர்களுக்குக் குறை வான வேலையாட்களைக் கொண்டு மின்சக்தியைப் பயன் படுத்தியோ அல்லது மின்சக்தியில்லாமல் 100க்குக் குறைவான வேலையாட்களைப் பயன்படுத்தியோ செயல்பட்டு, ரூ 5 இலட்சத் திற்குக் குறைவான மூலதனம் உடைய ஒரு தொழிலே சிற்றளவுத் தொழிலாகும். இது இரண்டாவதாகத் தரப்பட்ட இலக்கணம். இவ் விலக்கணத்தில் மூலதன முதலீட்டு அளவு மாறவில்லை; தொழிலாளர் எண்ணிக்கை மாறவில்லை. ஆனால் ஒரு வேலை நேர காலத்திற்கு மட்டும் பயன்படுத்தவல்ல தொழிலாளர்கள் எண்ணிக்கையைப் பற்றி மட்டும் குறிப்பிடுகிறது. அவ்வாறன்றி சிறு தொழிற்சாலை நிறுவனத்தில் மொத்தம் பயன்படுத்த வேண்டிய மொத்தத் தொழிலாளர்கள் எண்ணிக்கையைக் கூற வில்லை 'ஒரு வேலை நேர கால அளவு' என்பது மட்டுமே புதிய திருத்தமாகிறது.

(இ) பணி புரிகின்ற தொழிலாளர்கள் எண்ணிக்கை எவ்வளவு இருப்பினும், மூலதன முதலீடு மட்டும் ரூ 5 இலட்சத்திற்கு மிகைப் படாத தொழில்கள் சிற்றளவுத் தொழில்களாகும். இவ்விளக்கம் மூன்றாவதாக, 1960–ல் கொண்டு வரப்பட்டது. ஈண்டு, தொழிலாளர்கள் பற்றிய எண்ணிக்கை வரம்பு நீக்கப்பட்டு, முத லீட்டு அளவு மட்டுமே நிலை நிறுத்தப்படுகிறது.

(ஈ) இயந்திரங்கள், இயந்திரத் தொகுப்புகள் போன்ற மூல தன முதலீட்டில் ரூ 7.50 இலட்சத்திற்குக் குறைவான முதலீடு செய்யும் தொழில்கள் எல்லாம் சிற்றளவுத் தொழில்கள் ஆகும். இவ்விலக்கணம் 1966-ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் இன்று வரை நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. இவ் விலக்கணத்திலும் பணிபுரியும் தொழிலாளர்கள் பற்றிக் குறிப்பிட

வில்லை. ஆனால் முதலீட்டுத் தொகை அளவு ரூ 5 இலட்சத்தி லிருந்து ரூ 7.50 இலட்சத்திற்கு உயர்த்தப்பட்டது காண்க.

இவ்வாறாக 'சிற்றளவுத் தொழில்' என்பதற்குக் கொடுக்கப் பட்ட விளக்கமானது நிலையற்ற தன்மை பெற்று அடிக்கடி மாற்றப் பட்டுள்ளது மாறுபடுகின்ற சூழ்நிலைகளுக்கேற்ப இயற்றப்பட்ட சட்டங்களிலும் இலக்கண விளக்கங்கள் மாறுபடலாயின. இத்தகைய மாற்றங்கள் நமக்கு எதனைத் தெளிவாக்குகின்றன? நாம் இத்துணைப் பிரிவின் முதல் பகுதியில் கண்டபடி, வளர்ச்சி பெறும் ஒரு பொருளாதார அமைப்புடைய நாட்டில், மாறி வரும் சூழ் நிலைகளுக்கேற்ப இலக்கண விளக்கங்களும் மாற்றத்திற்குள் ளாகும் என்பதேயாம். பொருளாதாரம் மேலும் மேலும் வளர்ச்சி யடையும் பொழுது, சிற்றளவுத் தொழிலில் ஆளப் பெறும் தொழிலாளர்கள் எண்ணிக்கையும், முதலீடு செய்யப்படும் மூல தனத்தின் அளவும் அதிகரித்துச் செல்லுதல் இயல்பே. அவ்வகை மாற்றங்களுக்கேற்ப நாட்டின் சட்டங்களும் தக்க முறையில் திருத்தப்படுதலும் முறைமையே.

ஒரு நாட்டின் பொருளாதார வளத்திற்கேற்ப காலப்போக்கில் சிற்றளவுத் தொழிலுக்கான இலக்கணம் மாற்றம் அடைவது போலவே, பல்வேறு நாடுகளின் பொருளாதார வள வேறுபாடு களுக்கேற்ப அந்தந்த நாடுகளில் சிற்றளவுத் தொழிலுக்கு வகுத்துக் கொண்ட இலக்கணங்களும் மாறுபடும். சுருங்கச் சொன்னால், நாட்டுக்கு நாடு இவ் விலக்கண விளக்கமும் மாறுபடுகிறது. இக் கருத்தினையும் நாம் சான்றுகளுடன் நிரூபிக்க முடியும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வணிகத்துறை (The U. S. Department of Commerce) சிற்றளவுத் தொழிலுக்குப் பின்வரும் இலக்கணத்தை ஏற்றுக் கொண்டது. 'உற்பத்தியாளர்கள் 100 பேர்களுக்குக் குறைவான நபர்களை வேலைக்கமர்த்தியிருந்தால்' அவர்களது நிறுவனமானது சிற்றளவு வணிக அமைப்பு என்ற பாகுபாட்டுக் கணிப்பினுள் அடங்கும், உழைப்பின் பயனை மொத்த மதிப்பின் சதவீத அடிப்படையில் அவர்களது தொண்டு கால விற்பனை அளவு அரைமில்லியன் டாலர்களிலிருந்து ஒரு மில்லியன் டாலர்கள் வரை இருக்கும். அந்நிறுவனங்களின் மொத்தச்சொத்துககளின் மதிப்பு சராசரியாக 250,000 டாலர்கள். நிகர மதிப்பு சுமாராக 10,000 டாலர்கள்.' இங்கு சிற்றளவு வணிக நிறுவனத்திற்கான விளக்கம் தரப்பட்டுள்ளது. இதனையே சிற்றளவுத் தொழிலுக்கான விளக்கமாகக் கொண்டால், நம் போன்ற வளர்ச்சியுறும் நாடுகளுக்கு ஏற்புடை விளக்கமாக இருக்

காது. ஏனெனில் நியூயார்க் நகரில் எத்தொழில் உத்தம அளவில் (Optimum Size) உள்ளதோ, அதுவே, அங்காரா (Ankara) அல்லது இரங்கூன் அல்லது சென்னை போன்ற நகர்களுக்கு ஏற்புடையதாக இருக்காது என்பதை நினைவிற் கொள்வோம்.

ஜப்பானில் சிற்றளவுத் தொழில்கள் குடும்ப அடிப்படையில் நடத்தப்படுகின்றன. குறைந்த அளவு மூலதன முதலீடு செய்யப் பட்டுள்ளதும், உற்சத்தி அளவு குறைவாக உள்ளதுமான தொழில் களே சிற்றளவுத் தொழில்களாகக் கருதப்படுகிறது. ஆயினும் அங்கு இறுதியில், ஒரு தொழிலில் பணிபுரியும் தொழிலாளர்களின் எண்ணிக்கையே தொழிலின் தன்மை பற்றி நிர்ணயிக்கிறது. அதன்படி பொதுவாக 200 தொழிலாளர்கள் என்ற எண்ணிக்கை யளவே சிறு தொழில்களை வரையறை செய்வதற்கான வழக்கமான அளவாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. இங்கு ஒரு விஷயத்தை நினைவிற் கொள்ள வேண்டும். அமெரிக்காவில் 'சிற்றளவு வணிகம்.' (Small Scale business) என்று எது கருதப்படுகிறதோ, அதுவே ஜப்பானில் 'சிற்றளவுத் தொழிலகங்கள்,' (Small Scale Enterprises) என்று கருதப்படுகிறது. அத்தகைய சிற்றளவுத் தொழிலகங்கள், ஜப்பானில் 1960-ஆம் ஆண்டில் அந்நாட்டின் மொத்த நிறுவனங்களின் எண்ணிக்கையில் 99.4% எனும் விகிதத் தில் அமைந்திருந்தன. மிகச்சிறிய தொழிற்கூடங்கள் 30க்குக் குறைவான நபர்களைக் கொண்டிருந்தன. நடுத்தர மற்றும் சிறு நிறுவனங்கள் 100 பேர்களுக்குக் குறைவான நபர்களைக் கொண் டிருந்தன. மரபு வழிப்படி ஜப்பானிய சிற்றளவு நிறுவனங்களில் 200க்கும் மேல் நபர்களை வேலைகமர்த்தக் கூடாது என்று இருப் பினும், வழக்கில் பல நிறுவனங்களில் 300 நபர்களுக்கும் அதிக மாகவே அமர்த்தப்பட்டிருப்பர். மேற்கூறிய வகைச் சிற்றளவு நிறுவனங்களில் மட்டும் பணிபுரியக் கூடிய தொழிலாளர்களின் மொத்த சதவீதமானது, அந்நாட்டின் பலவகைப்பட்ட தொழில் களில (அதாவது மிகச் சிறிய தொழில் நிறுவனங்கள், நடுத்தர சிற்றளவு, மற்றும் பேரளவுத் தொழில் நிறுவனங்கள் ஆகிய பல துறைத் தொழில் அமைப்புக்களில்) பணிபுரியும் மொத்தத் தொழி லாளர்களில் 78% ஆகும்.

அடுத்து, பிரான்ஸ் நாட்டை எடுத்துக் கொள்வோம். அங்கு 5க்கு மேற்பட்ட வேலையாட்களைப் பணிக்கமர்த்தியுள்ள நிறுவனங் களை சிற்றளவுத் தொழில் என்று கூறுவார்கள். ஆனால் ஜெர்மனி நாட்டில் தரப்படும் விளக்கம் வேறு வகையானது அதன்படி அந்நாட்டில் எந்த ஒரு தொழில் முயல்வோன் தனது தொழிலில் அல்லது வணிகத்தில் வல்லுநனாக அல்லது தலையாய திறமை

கொண்டவனுகை இலங்குகின்றுனே அவனது தொழில் சிற்றளவுத் தொழில் எனப்படும். நெதர்லாந்தில் சிற்றளவுத் தொழிலுக்கான அரசின் அதிகார பூர்வமான விளக்கம் எதுவும் வழக்கில் இல்லை யாயினும், நடைமுறையில் சிறுதொழில் நிறுவனம் என்பது தனி ஒரு மனிதனின் தொழில் சார் செயல் முறைகளைப் பொறுத்தே நிர்ணயிக்கப் படுகிறது—அதாவது ஜெர்மனி நாட்டு நிலையை ஒட்டி என்று கருதலாம். எனினும், சிற்றளவுத் தொழிலில் உள்ள வேலை யாட்களின் எண்ணிக்கை 26லிருந்து 100 வரைதான் இருக்கும். அமெரிக்காவில் வணிக நிறுவனங்களைப் பொறுத்து சிற்றளவுத் தொழிலுக்கான விளக்கம் முன்பே தரப்பட்டுள்ளது. ஆயினும் தொழில் தொழில்முறை என்ற அளவில், 500க்குக் குறைவான தொழிலாளர்களைக் கொண்டதும், தொழில் முயல்வோரின் செயல் முறைத்திறன் கொண்டதுமான தொழில் சிற்றளவுத் தொழில் ஆகும்.

இவ்வாருகப் பல்வேறு நாடுகளில் சிற்றளவுத் தொழிலுக்கான விளக்கங்கள் மாறுபடுகின்றன. இக்கருத்தானது நாம் ஏற்கெனவே கூறியுள்ள கருத்தாகியபொருளாதாரச்சூழ்நிலை மாற்றத்திற்கொப்பப் பணி புரியும் வேலையாட்களின் எண்ணிக்கையும், முதலீட்டு மூல தனமும் மாறுபடும் என்பதனையே நிலை நிறுத்துகின்றன. அதே போலத் தான் நமது நாட்டிலும் பொருளாதாரச் செழிப்பு மேம் பாடடைய இலக்கண விளக்கங்களும் மாறுபடும்; அதற்கொப்பவே சட்டங்களும் அவ்வப்பொழுது திருத்தப்படும்.

### (4) குடிசைத் தொழில்கள், கிராமத் தொழில்கள், மரபுத்தொழில்கள் ஆகியவைகளுடன் சிற்றளவுத் தொழில்கள் பற்றிய ஓர் ஒப்புமை

குடிசைத் தொழில்களையும், சிற்றளவுத் தொழில்களையும் இரண்டு வேறுபட்ட தனிப் பிரிவுகளாகப் பிரிப்பது எளிய செய லாகத் தோன்றினும், ஒரு குறிப்பிட்ட தொழில் எப்பிரிவில் அடங்கும் என்பதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறுதல் அரிய தொரு செயலேயாகும். கூறப்போனுல் ஒரு குறிப்பிட்ட தொழிலே குடிசைத் தொழிலாகவும் இருக்கலாம்; அதே வேளையில் சிற்றளவுத் தொழிலாகவும் இருக்கலாம்.

சான்றுக, ஆசிரியாகள் தார், விடால் என்போர் இருவகைத் தொழில்களை வேறுபடுத்திக் காட்ட முனைகிருர்கள். முதலாவது வகையானது, தீவிர உழைப்பினைக் கொண்டுள்ள பழமையான மரபு வழித் தொழில் (Labour intensive traditional industry) இரண்டாவது, தற்கால, நவீன சிற்றளவுத் தொழில்கள், முதலாம் வகைத் தொழிலானது பழமையான பொருள்களை உற்பத்தி செய்

கின்றது. கிராமப் புறங்களிலுள்ள நிறுவனங்கள், குடும்ப நிறுவனங்கள், இயந்திரமில்லா நிறுவனங்கள், மற்றும் கைவினைத் தொழில் நிறுவனங்கள் என்பன போன்ற நிறுவனங்கள் அனைத்தும் இதில் அடங்குகின்றன. இரண்டாவது வகைத் தொழிலாகிய நவீனச் சிற்றளவுத் தொழில்களோ பண்பட்ட பொருள்களை (Sophisticated Products) உற்பத்தி செய்கின்றன. (அவை பேரளவு உற்பத்தித் துறைப் பொருள்களைப் போன்றவை). மேலும் இத்தொழில்கள் கூலியாட்களைக் கொண்டுள்ளதாக இருக்கின்றன. நகர்ப் புறங்களிலுள்ள தொழில்கள், இயந்திரங்களைப் பயன்படுத்துகின்ற தொழில்கள் போன்றவை, இவ்விரண்டாம் பிரிவில் அடங்குகின்றன.

மேற்கூறிய ஆசிரியர்களது கருத்துப்படி, பழமையான தொழில்களுக்கும், தற்கால, நவீனத் தொழில்களுக்கும் இடைபட்ட-நடுத்தரமான-ஒரு வகையான தொழில் இருக்கின்றது. அத் தொழிலானது, உழைப்புச் செறிந்த ஆனால் மூலதனத்தை சேமிக்க வல்ல உற்பத்தி முறைகள் கொண்டு, நாகரிகப் பொருள்களான மரச்சாமான்கள், சோப்புகள், தீப்பெட்டிகள், காலணிகள் போன்ற பொருள்களை உற்பத்தி செய்கின்றது என்று குறிப்பிடுகிறார்கள்.

ஆகவே, குடிசைத் தொழில், சிற்றளவுத் தொழில், பேரளவுத் தொழில் என்கின்ற பாகுபாடுகளை வேறுபடுத்திக் காட்டவல்ல காரணிகள் கீழ்வருமாறு அமைந்துள்ளன என்று கூறலாம்.

தனி மனிதனின் திறமை அதிகம் தேவைப்படுகின்ற தொழில்கள் எல்லாம் கைவினைத் தொழில்களாகச் செயல்படுகின்றன. இத் துறையில் பேரளவுத் தொழில் துறை நுழைய முடியாது. இரண்டாவது வகையாக வேறு சில தொழில்கள் ஆலை முறைத் தொழில் அடிப்படையில் (Factory basis) பேரளவு உற்பத்தி முறையினை அனுமதிப்பதில்லை. அவை எல்லாம் பித்தான்கள் தொப்பிகள் போன்ற பொருள்களை உற்பத்தி செய்ய வல்ல தரமான இயந்திரங்களை மட்டுமே வைத்துள்ளன. மூன்றாவது வகையாக, இன்னும் சில தொழில்கள், சிற்றளவு, பேரளவு மற்றும் குடிசைத் தொழில் முறைகளைக் கையாண்டு, சோப்பு, இரும்புச் சாமான்கள் (Cutlery) போன்ற வகைப் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. நான்காவது வகையாக சில வகைத் தொழில்கள் ஆலை முறைத் தொழில் அடிப்படையிலோ அல்லது குடிசைத் தொழில் முறை அடிப்படையிலோ அல்லது இரண்டும் கலந்தோ செயல்படுகின்றன. இங்கு அவ்வகைத் தொழில் முறைகள் ஒன்றுக்கொன்று உதவிக் கொள்கின்றன

இவை 'இணைப்பு முறை' (Link system) என்ற முறையில் செயல்படுகின்றன. இது போன்ற வகைத் தொழில்களை ஜப்பான், சுவிட்சர்லாந்து போன்ற நாடுகளில் காணலாம்.

பேணிக்காத்தல் (maintenance), பழுது பார்த்தல் (repairing) போன்ற பணிகளை ஆற்றும் துறையில் பேரளவுத் தொழிலுக்குப் போட்டியே இல்லை எனலாம். இறுதியாக, சில வகைத் தொழில்கள் ஆலை முறைத் தொழில் அமைப்பில் பணி புரிகின்றன.

எனவே, ஒரு தொழிலைப் பாகுபடுத்தி, இன்ன வகைத் தொழிலை அது சார்ந்தது என்று கூறுவதற்கு மேற்கூறிய காரணிகள் உதவுகின்றன.

## சிற்றளவுத் தொழில்களின் இன்றியமையாமை

சிற்றளவுத் தொழில்களுக்கும், பேரளவுத் தொழில்களுக்கும் உள்ள கருத்து வேறுபாடுகளைப் பற்றிக் கூறுமிடத்து, சிற்றளவுத் தொழில்களின் முக்கியத்துவத்தை நாம் உணர முடிகிறது.

### (அ) முதல்

பொருளாதார வளர்ச்சிக்கு முதலும், முதல் திரட்சியும் இன்றியமையாதன என்பதை நாம் முதல் அத்தியாயத்தில் கண்டோம். பேரளவுத் தொழில்கள் மூலம் நாடு விரைவில் தொழில் மயம் அடைவதற்கு அதிகமான மூலதனம் தேவைப்படும். ஏனென்றால், தற்கால பேரளவுத் தொழில்கள் 'முதல் தீவிரப்படுத்தப்பட்டவைகள்' (Capital-intensive) ஆகும். இதனால் ஆரம்ப காலத்தில், 'முதல் உற்பத்தி அளவு விகிகமானது' (Capital output Ratio) பேரளவுத் தொழில்களில் அதிகமாக இருக்கும். அது பற்றி விரிவாகக் காணுமுன் முதலில் முதல் உற்பத்தி அளவு விகிதம் பற்றி இங்கு சிறிது அறிதல் அவசியமாகிறது.

## முதல் உற்பத்தி அளவு விகிதம் (Capital output Ratio)

குறிப்பிட்ட அளவு முதலீட்டிற்கும், அம்முதலீட்டால் கிட்டும் உற்பத்தியின் அளவுக்கும் உள்ள தொடர்பினையே 'முதல் உற்பத்தி அளவு விகிதம் விளக்குகின்றது'. ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் அல்லது தொழிற்சாலையில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்ட முதலீட்டிற்கும் அதனால் ஏற்பட்ட உற்பத்திக்கும் இடையே உள்ள விகிதமே 'முதல் உற்பத்தி அளவு விகிதம்' எனப்படும்.[1] பொதுவாக இவ்விகிதமானது ஒரு அலகு பொருள்

1 Rosen, George, 'Industrial Change in India' P-37

**குடிசைத் தொழில் மற்றும் சிற்றளவு உற்பத்தித் தொழில்களின் பாகுபாடு பற்றிய விவரங்கள், தெளிவான வகையில் கீழ்க்காணும் அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது.**



உற்பத்தி செய்வதற்குத் தேவையான முதலைக் குறிக்கும். சான்ருக, முதல்-உற்பத்தி அளவு விகிதம் 5:1 என்று கூறினுல் ரூபாய் 1 கோடி மதிப்புள்ள பொருள்கள் உற்பத்தி செய்வதற்கு, ரூ 5 கோடி மதிப்புள்ள முதலீடு தேவை என்பதாகும். முதல்-உற்பத்தி அளவு விகிதம் என்பது முதலின் இறுதி நிலை உற்பத்தித் திறனிலிருந்து (Marginal Productivity) வேறுபட்டது என்பதை இங்கு மனதில் கொள்ள வேண்டும். முதலில் இறுதி நிலை உற்பத்தித் திறனை அறிவதற்கு, முதலைத் தவிர ஏனைய உற்பத்திக் காரணிகளை நிலையாக வைத்துக் கொள்ளுகின்ருேம். ஆனுல் முதல்-உற்பத்தி அளவு விகிதத்தில் எல்லா உற்பத்திக் காரணிகளும் மாறுதலுக்குட்பட்டவை.

வளர்ச்சியுறு நாடுகளில் காணப்படும் முதல் உற்பத்தி அளவு விகிதம் பற்றி பல பொருளாதார நிபுணர்களின் மதிப்பீட்டை ஈண்டு அறிதல் நன்ருகும். ஐக்கிய நாடுகள் சபையினுல் அமைக்கப்பட்ட வல்லுநர்கள் குழு ஒன்று இவ்விகிதமானது 2:1 லிருந்து 5:1 வரை வேறுபடுகின்றது என மதிப்பிட்டுள்ளது. குரிஹரா (Kurihara) என்பவர். அவ்விகிதத்தை 5:1 என்றும், ஸிங்கர் (Singer) தனது மாதிரிப் படிவத்தில் வேளாண்மை அல்லாத துறைக்கு 5:1 என்றும் வேளாண்மைத் துறைக்கு 4:1 என்றும் சராசரியாக 6:1 என்றும் கூறுகின்ருர். ரெஸென்டின் ரோடான் என்பார் அவ் விகிதத்தை 3:1 அல்லது 4:1 என்றும் லூயிஸ் 3:1 அல்லது 4:1 என்றும் மதிப்பிடுகிருர்கள்.

மேற்கூறிய இலக்கணங்களிலிருந்தும், சான்றுகளிலிருந்தும், முதல் உற்பத்தி அளவு விகிதத்தை பாதிக்கக் கூடியகாரணிகளுள் முக்கியமானது முதலீடு என்பதை நாம் உணரலாம். எனவே, முதலீடு அதிகமாக இருக்குமானுல் 'முதல் உற்பத்தி அளவு விகிதமும் அதிகமாகவே இருக்கும். பேரளவுத் தொழில்களில் முதல் தீவிரப் படுத்தப்பட்டுள்ளதால் முதல்-உற்பத்தி அளவு விகிதம் அங்கு அதிகமாக இருக்கும்.

இனி பின்வரும் பகுதியில் வளர்ச்சியுறும் நாடுகளின் மூலதனத்திரட்சி எந்நிலையில் உள்ளது என்பதைக் காண்போம். வளர்ச்சியுறும் நாடுகளில் பேரளவுத் தொழில்கள் ஆரம்பிப்பதற்குத் தோவையான மூலதனம் கிடைக்காது. ஏனென்ருல்

(i) வளர்ச்சியுறும் நாடுகளில் உண்மை வருமானம் குறைவாக இருக்கும். ஆதலால் சேமிப்பும் குறைவாக இருக்கும்.

(ii) ஒரு சில செல்வந்தர்களே சேமிக்கக் கூடிய சக்தி படைத்திருப்பார். மேலும் இச்சேமிப்புத் தொழில்துறையில் முதலீடு

செய்வதற்குக் கிடைக்காது. மேலும் இச்சேமிப்பினை விலை மதிப் பற்ற ஆபரணங்களையும், சொத்துக்களையும் வாங்குவதிலும், பகட்டான–வெளிப்படையான நுகர்வுச் செலவு இனங்களிலுமே பயன்படுத்துவர்.

(iii) வளர்ச்சியுறும் நாடுகளிலுள்ள நடுத்தர வகுப்பினர் ஊக வாணிபத்தில்தான் முதலீடு செய்திருப்பர் இவர்களும் செல்வந்தர்களைப் போலவே தொழில்துறையில் முதலீடு செய் வதற்கு விரும்பமாட்டார்கள். இந்நிலையினர் உடனடியாக பயன் தரக்கூடிய தொழில்களில் முதலீடு செய்ய விரும்புவரேயன்றி நீண்ட காலங்கழித்து பயன் தரவல்ல தொழில்களில் முதலீடு செய்யவிரும்பார்.

(iv) சமூக மற்றும் சமய சடங்குகள், விழாக்களில் அதிகம் செலவிடுதல் மற்றும் கூட்டுக்குடும்ப முறை போன்ற அமைப்புகள் வளர்ச்சியுறும் நாடுகளில் நிலவுவதாலும் இங்கு போதிய அளவு சேமிப்பு கிடையாது.

மேற்கூறிய காரணங்களால் தொழில்துறையில் முதலீடு செய்வதற்குப் போதிய மூலதனம் கிடைக்காது. ஒருக்கால் கிடைத் தாலோ, தொழில்துறையில் முதலீடு செய்வதற்குப் போதிய ஊக்கம் அங்கு இருக்காது. இதற்குக் காரணங்கள் வருமாறு :–

(i) அங்காடி குறுகியிருத்தல்

(ii) சமூக மற்றும் பொருளாதார பணிகள் சரிவரக் கிடைக் காமை

(iii) குறைந்த வருமானம் நிலவுவதால் தேவை குறுகி யிருத்தல்

(iv) திறமையான உழைப்புக் கிடைக்காமை

(v) வளர்ச்சி குன்றிய நாடுகளில் பொதுவாக நிலவிவரும் பண்ட மாற்று முறை

(vi) உடனடியாகப் பயன்தரக் கூடிய தொழில்களில் முதலீடு செய்ய விரும்புதல் முதலியனவாகும்.

எனவே, வளர்ச்சி குன்றிய நாடுகளில் தொழில்துறையில் முதலீடு செய்வதற்குப் போதிய அளவு மூலதனம் கிடைப்பது

அரிதாக இருப்பதோடு மட்டுமல்லாமல், தொழில்துறையில் முதலீடு செய்வதற்குப் போதிய ஊக்கமும் இல்லாததைக் கண்டோம். இப்படிப்பட்ட நிலைமையில் பேரளவுத் தொழில்கள் ஆரம்பிக்க வேண்டுமென்றால் மூலதனம் அதிக அளவில் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கும். இவ்வாறு செய்வது வளர்ச்சியுறும் நாடுகளில் ஏற்கனவே பாதக நிலையில் உள்ள அயல் நாட்டுச் செலுத்து நிலையினை மேலும் பாதிக்கின்றது. ஆகவே வளர்ச்சி குன்றிய நாடுகள் வெளிநாடுகளிலிருந்து அதிக மூலதனத்தை இறக்குமதி செய்ய முடியாது.

இந்நிலையில் மிகவும் கை கொடுத்து உதவுவது சிற்றளவுத் தொழில்களேயாகும் சிற்றளவுத் தொழில்கள் தொடங்குவதற்கு அதிக மூலதனம் தேவையில்லை. கிடைக்கின்ற சிறிதளவு மூல தனத்தை வைத்தே சிற்றளவுத் தொழில்களை வெகு எளிதில் வளர்க்கலாம். வளர்ச்சியுறும் நாடுகளில் குறைவான அளவு மூலதனமே, முதல் திரட்சியினை உண்டாக்கக் கூடிய நிலையில் உள்ளது என்பதனை முன்பே கண்டோம். இக்குறைந்த அளவு மூலதனத்தைச் சிற்றளவுத் தொழிலில் ஈடுபடுத்தி மூலதனத் திரட்சியைச் சிறிது சிறிதாக அதிகரிக்கச் செய்யலாம். ஏனென்றால் சிற்றளவுத் தொழில்துறையில் மூலதன முதலீட்டின் அலகு ஒன்றிற்கு வருமானம் தரக்கூடிய திறமை அதிகமாக இருக்கும். இத்திறமை அதிகமாக இருப்பதால் இடப்பட்ட முதலீட்டிலிருந்து கிட்டுகின்ற வருமானமும் அதிகமாகின்றது. வருமானம் அதிகரிப்ப தால் சேமிப்பும், பின் முதலீடும் அதிகரிக்கின்றது. குறைவான மூலதன அளவு தேவைப்படுகின்ற தொழில் நுட்ப அறிவின் முன் னேற்றங்கள் உடனடி விளைவுகளை அதிக அளவிற்கு உண்டு பண்ணக்கூடியவை. இங்கு ஜப்பானிய நாட்டுப் பொருளாதார வளர்ச்சியினை ஓர் அரிய படிப்பினையாகக் கொள்ளலாம்.

சிற்றளவுத் தொழில்கள் மூலம் பொருளாதார முன்னேற்றத்தை அடையலாம். ஆனால் நடைமுறையில் வளர்ச்சியுறாத நாடுகளில் அநேகச் சிற்றளவுத் தொழில்களின் தொழில் நுட்ப அறிவு பின் தங்கிய நிலையில் உள்ளன. இந்நிலையில் அவைகளை நவீனமய மாக்குவதற்குப் புதுமைகள் மற்றும் தொழில் நுட்ப அறிவு வளர்ச்சி யினால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியது மிக மிக அவசியமான தொன்றாகும்.

பொதுவாக, புதிய தொழில்களின் வளர்ச்சியானது, திறமை யின் திரட்சியுடன் தொடர்பு கொண்டதாகும். திறமையின் திரட்சி தான் தொழில் நுட்ப அறிவு வளர்ச்சிக்கும், புதுமைகளுக்கும்

அடிப்படையாகும். உயர்ந்த வருமான அளவு, முதலீட்டுப் பொருள்களுக்கு அதிகத் தேவை, இவை ஏற்பட்டால் இவைகளுடன், புது மாதிரியான நுகர்வுப் பொருள்களும், மூலப்பொருள்களும் முன்னேற்றமடைய வாய்ப்புண்டு. சந்தை நிலைகளில் இலாபகரமான வகைகளில் தொழில் நுட்ப அறிவினைப் புகுத்துதல். புதுமை ஆகும். வருமான உயர்வு அத்துடன் புதிய சீரான தேவை போன்றவை புதுமைகளுக்குரிய புதிய வாய்ப்புக்களை உண்டு பண்ணுகின்றன.

முன்னேறிய நாடுகளில், முறையான தொழில் முன்னேற்றம் தொழில் நுட்ப அறிவினால் ஏற்பட்டது என்றால், அதற்கு உறுதுணையாக இருந்தது சேமிப்பு வேண்டுமளவு கிடைத்தமையே ஆகும். ஆகவே அந்த நாடுகளில் தொழில் நுட்ப அறிவானது, அதிக அளவு சேமிக்கும் திறனுடனும் தொடர்பு கொண்டதாகும். ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் அத்தொழில் நுட்ப அறிவு கிடையாது. ஏனெனில் வருமானமும், உள்நாட்டுச் சேமிப்பும் மிகக் குறைந்த அளவே உள்ளன. எனவே அக்குறைந்த சேமிப்பைச் செறிந்த உழைப்பு மற்றும் முதல்-சேமிப்பு முறைகளில் ஆளப்பட வேண்டும்.

மேலும், முன்னேறிய நாடுகளில் காணப்படும் தொழில் நுட்ப அறிவினை அப்படியே ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஏனென்றால் இத் தொழில் நுட்பமானது பொருள்களைப் பேரளவில் உற்பத்தி செய்வதற்காக அமைக்கப்பட்டவையேயாகும். இத்தொழில் நுட்பத்தினை உடனடியாக ஏற்றுக் கொள்ளக் கூடிய மன நிலையிலும் அதன் நெளிவு சுளிவுகளை அறிந்து கொள்ளும் அறிவாற்றலும் வளர்ச்சியுறும் நாடுகளில் உள்ள மக்களிடையே இருக்காது. வளர்ச்சியுறும் நாடுகளில் அங்காடி குறுகிக் காணப் படுவதால் இத் தொழில் நுட்பத்தினால் அமைக்கப்பட்ட பேரளவுத் தொழில்கள் கொள்ளளவுக்கும் குறைவாகவே இயங்கும் இதனால் உற்பத்திச்செலவு அதிகமாவதோடுமட்டுமல்லாமல் அரிய மூல தனம் விரயமாக்கப் படுகின்றது. எனவே, சுதேசிப் புதுமைப் படைப்பும், (Indigeneous Creative Innovation) குறுகிய அங்காடியினை நிறைவு செய்யும் திறமையுடைய சிற்றளவுத் தொழில்களையே ஆதரித்து அதனை ஊக்குவித்து மேன் மேலும் வளரச் செய்ய வேண்டும்.

**(ஆ) உழைப்பின் தீவிரத் தன்மை**

சிற்றளவுத் தொழில்களிலும், பேரளவுத் தொழில்களிலும் இருந்து கிடைக்கக் கூடிய வேலை வாய்ப்பினைப் பற்றி அறிவதற்கு

முன்னல் உழைப்புத் தீவிரப் படுத்தப்பட்டவை என்ருல் என்ன என்பதுபற்றி முதலில் காண்போம். குறைந்தஅளவு மூலதனத்தைக் கொண்டு அதிக உழைப்பினை ஈர்த்துக் கொள்ளக் கூடிய தொழில்களே உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில்களாகும். இத் தொழில்களில் நிலை முதல் குறைவாக இருந்தாலும், அவை அதிக வேலை வாய்ப்பினை ஏற்படுத்தக் கூடியவை ஆகும். சான்ருக குடிசைத் தொழில்கள் மற்றும் கிராமத் தொழில்களில் மூலதனம் குறைவாக இருந்தாலும் அதிக வேலை வாய்ப்பினை அளிக்கக் கூடியவை ஆகும். ஆனல் அதே நேரத்தில் கனரகத் தொழில்கள் போன்றவற்றில் மூலதனம் அதிகமாக ஆளப்பட்டாலும் இவற்றிலிருந்து கிட்டும் வேலை வாய்ப்பானது குறைவாக இருக்கும்.

இனி வளர்ச்சியுறும் நாடுகளில் உழைப்பின் அளிப்பு எவ்வாறு உள்ளது என்பதைக் காண்போம். வளர்ச்சியுறும் நாடுகளில் மக்கள் பெருக்கம் அதிகமாக இருக்கும் என்பது ஒத்துக் கொள்ளப் பட்ட உண்மையாகும்.

பொருளாதார வளர்ச்சியில் நன்கு முன்னேறியுள்ள நாடுகளில் உண்மை வருமானம் அதிகமாக இருப்பதால் அங்கு மூலதனம் அதிகமாகக் கிடைக்கும். மேலும் அந்நாடுகளில் உழைப்பின் அளிப்பு குறைவாகவே இருக்கும் இவ்வாறு குறைவான உழைப்பினை ஈடுகட்டுவதற்கு முதல் அதிக அளவில் கையாளப் படுகின்றது. எனவே இந்நாடுகளில் உழைப்பு சேமிப்பினை உடைய பேரளவுத் தொழில்களுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப் படுகின்றது.

வளர்ச்சியுறும் நாடுகளில் முதல் திரட்சியினை தீவிரப் படுத்துதல் மற்றும் உழைப்பின் வேலை வாய்ப்பினை அதிகரித்தல் ஆகிய இவ்விரண்டும் முன்னேற்றக் கொள்கையின் இரு குறிக் கோள்களாகக்கொண்டுள்ளன. இக்குறிக்கோள்களை விரைவில் அடையும் நோக்கத்தோடு வளர்ச்சி பெற்ற நாடுகளைப் பின்பற்றி பேரளவுத் தொழில்களை ஊக்குவிக்கின்றன. ஆனல் இவ்வாறு செய்வது மேற்கூறிய இரு குறிக்கோள்களை அடைய முடியாமல் செய்து விடுகின்றது. பேரளவுத் தொழில்களை வளர்ச்சியுறும் நாடுகளில் பின்பற்றுவதால் ஏற்படும் பின்விளைவுகளை இங்குக் காண்போம்.

**பேரளவுத் தொழில்கள் உழைப்பு-சேமிப்புக் கருவிகளைக் கொண்டவை மட்டுமின்றி, பொருள்களைப் பேரளவில் உற்பத்தி செய்யும் திறன் படைத்தவை எனவும், அவைகளின் தொழில்**

நுட்பமானது வளர்ச்சியுறும் நாடுகளில் உள்ள மக்களின் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டது என்பதையும் முதலில் கண்டோம். இவ்விரண்டும் வேலை வாய்ப்பினை எவ்வாறு பாதிக்கின்றன என்பதை இங்கு ஆராய்வோம்.

முதலாவதாக நாம் ஏற்கெனவே கூறியபடி வளர்ச்சியுறும் நாடுகளில் அங்காடி குறுகியிருப்பதால் பேரளவில் உற்பத்தி செய்யும் திறனுடைய பேரளவுத் தொழில்கள் கொள்ளளவுக்கும் குறைவாகவே இயங்குகின்றன. இதனால் இவைகளில் உற்பத்தி செலவு அதிகரித்தும் இலாபம் குறைவாகவும் இருப்பதால் மென்மேலும் வளர்ச்சியுறாமல் தேக்க நிலையை அடைகின்றன. இத்தேக்க நிலையானது தொழில் துறையில் வேலைவாய்ப்பினை மங்கச் செய்து விடுகின்றது.

இரண்டாவதாக பேரளவுத் தொழில்களின் தொழில் நுட்பம் வளர்ச்சியுறும் நாட்டு மக்களின் அறிவுக்கு அப்பாற்பட்டதாக இருப்பதால் அதன் நெளிவு சுளிவுகளை அவர்கள் அறியமாட்டார்கள். இதனால் புதிதாக தொழில் செய் முனைவோர்கள் தோன்ற மாட்டார்கள். இவ்வாறு ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்ட பேரளவுத் தொழில்கள் தேக்க நிலையில் இருப்பதோடு மட்டுமல்லாமல் புதிதாகத் தொழில்கள் தொடங்குவதற்கு இடையூறாகவும் உள்ளன இதனால் வேலை வர்ய்ப்பு பெரிதும் குறைந்து வேலையின்மைப் பிரச்சினை கடுமையாகிறது.

இங்கு நாம் மற்றொரு உண்மையையும் அறிதல் வேண்டும். பேரளவுத் தொழில்களானது வளர்ச்சியுறும் நாடுகளில் ஏற்கெனவே உள்ள குடிசைத் தொழில்களையும் கிராமத் தொழில்களையும் நசிவடையச் செய்துவிடுகின்றது. ஏனெனில் ஆலைப் பொருள்களில் மோகம் கொண்ட மக்கள் கைவினைப் பொருள்களை நிராகரிக்கின்றனர். குடிசைத் தொழில்களும், கிராமத் தொழில்களும் உழைப்பு தீவிரப் படுத்தப்பட்டவையாகும். எனவே அவை நசிவுறும் பொழுது ஏராளமான மக்கள் வேலையினை இழக்கின்றனர். இதனால் மக்களின் வருமானம் குறைந்து, அங்காடி மேன் மேலும் குறுகுகின்றது.

இவ்வாறு பேரளவுத் தொழில்கள் தானும் வளர்ச்சி பெறாமலும், புதிதாகத் தொழில்கள் தோன்றுவதற்கு இடையூறாகவும் இருப்பதோடுமட்டுமல்லாமல்,ஏற்கெனவேஉள்ள தொழில்களை நசிவடையச்செய்து வேலையின்மைப் பிரச்சினையை மேன்மேலும் கடுமையாக்குகின்றன. இங்கு இந்தியாவில் உள்ள இன்றைய நிலையினை

நல்ல படிப்பினையாகக் கொள்ளலாம். இந்தியாவில் பேரளவுத் தொழில்கள் மேன்மேலும் வளர்ச்சி பெருமல் இருப்பதோடு மட்டு மல்லாமல், புதிதாகத் தொழில் செய்முனைவோர்கள் தோன்றுவதற்கு வாய்ப்பில்லாமல் இருக்கின்றது. அத்துடன் சிறப்புப் பெற்றிருந்த குடிசைத் தொழில்களும், கிராம, கைத்தொழில்களும் நசிவுற்றதால் இன்று இந்தியாவில், வேலையின்மைப் பிரச்சனை தீவிரமாகக் காணப்படுகின்றது.

வளர்ச்சியுறும் நாடுகளில் உள்ள குறுகிய அங்காடியினை சிற்ற ளவுத் தொழில்கள் பூர்த்தி செய்கின்றன. எனவே கொள்ளவுக்கும் குறைவாக இயங்குதல் என்ற பிரச்சினை ஏற்படுவது தவிர்க்கப்படு கின்றது. தொழில் துறை வளர்ச்சி அடைவதால் மக்களின் உண்மை வருமானம் பெருகிப் பொருள்களின் தேவையினை அதிகரிக்கின்றது. அங்காடி விரிவடைவதால் தொழில் துறையில் முதலீடு செய்வதற்கு ஊக்கம் கிடைக்கின்றது. விரிவடையும் அங்காடிக்கேற்ப சிற்றளவுத் தொழில்கள் வளர்ச்சி பெறுகின்றன. இவ்வாறு ஏற்கெனவே உள்ள சிற்றளவுத் தொழில்கள் வளர்ச்சி பெறுவதோடு மட்டுமல்லாமல், புதிதாகத் தொழில் செய்ய முனை வோர் தோன்றி தொழில் துறையினை மேன்மேலும் வளர்ச்சி யடையச் செய்கின்றனர். இதனால் வேலை வாய்ப்பு அதிகரித்து மக்களின் வருமானமும், வாழ்க்கைத்தரமும் அதிகரிக்கின்றன.

பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களிலும், அதன் தொடர்பான கட்டங்களிலும், வேலைவாய்ப்பினை அதிகரிக்க வேண் டியது அவசியமாகும். இவ்வாறு தொடர்ந்து வேலைவாய்ப்பினை ஏற்படுத்துகின்றதும், உழைப்பு தீவிரப்படுத்தப்பட்டதுமான தொழில்களை வளர்ச்சியுறும் நாடுகள் தேர்ந்தெடுக்க வேண்டும். இதற்கு மிகவும் உறுதுணையாக இருப்பது சிற்றளவுத் தொழில்களே யாகும்.

சிற்றளவுத் தொழில்கள் குறைந்த அளவு மூலதனத்தைக் கொண்டு அதிக அளவு வேலைவாய்ப்பினை ஏற்படுத்தக் கூடியவை யாகும். மேலும் சிற்றளவுத் தொழில்களுக்கு தொழில் நுட்ப அறிவினை இறக்குமதி செய்யவேண்டியதில்லை. சிற்றளவுத் தொழில்களுக்கு மிக எளிதான உள்நாட்டுத் தொழில்நுட்ப அறிவே போதுமானது. இவ்வறிவு எவரும் எளிதில் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகும். எனவே இத்துறையினில் புதிதாக தொழில் செய்ய முனைபவர்கள் தோன்றுவார்கள். இதனால் வேலை வாய்ப்புப் பெருகு கின்றது. மற்றும் வாழ்க்கை நிலைகளின் உயர்வுடன் செல்லுகின்ற தாக அமைந்துள்ளது. உண்மையில் அத்தொழிலின் உற்பத்திப்

பொருள்களின் அதிக அளவானது, ஓர் உயர்வான வாழ்க்கைத் தரத்தின் சின்னமாக இருக்கின்றது. முன்னேற்றமில்லாத நாடுகளில் தொழிலிலுள்ள மனிதச் சக்தியின் உற்பத்தித் திறனானது வழக்கமான வேளாண்மைத் தொழிலில் உள்ளதைவிட அதிக அளவில் இருக்கிறது.

எனவே, வளர்ந்துவரும் பொருளாதாரத்தில் தேசிய வருமானம் மற்றும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் தொழில் வளர்ச்சியானது ஒரு முக்கியப் பங்கினை வகிக்கின்றது. ஆனால் பிற துறைகளில் முதலீட்டு வாய்ப்புகள் பாதிக்கின்ற வகையில் தொழில் முன்னேற்றம் இருக்கக்கூடாது. இவ்வாறு தொழில்துறை வளர்ச்சியின் மூலம் முன்னேறுகின்ற பொருளாதாரத்தில் வேளாண்மைத் துறையும் வளர்ச்சி பெற்று அத்துறையில் அதிகமாக உள்ள உழைப்பினை வெளியேற்றுகின்றது. இவ்வாறு வெளியேறும் உழைப்பிற்கு வேளாண்மை அல்லாத மற்ற துறைகளில் வேலை வாய்ப்பினை ஏற்படுத்துவது அவசியமாகின்றது.

வளர்ச்சியுறும் நாடுகளில் மூலதனம் மிக அரிதாகவும், உழைப்பின் அளிப்பு அதிகமாகவும் இருக்கும். தொழில் துறை வளர்ச்சியடையாமல் இருப்பதால் மக்கள் வேளாண்மைத் துறையையே நம்பியுள்ளனர். எனவே வேளாண்மைத் துறையில் தேவைக்கும் அதிகமான உழைப்பு அளிப்பு காணப்படுகின்றது. தேவைக்கும் அதிகமாக உள்ள இவ்வுபரி உழைப்பானது வேளாண்மைத்துறையின் உற்பத்தித் திறனைப் பெரிதும் பாதிக்கின்றது. எனவே இந்த அதிகப்படியான உபரி உழைப்பிற்கு வேளாண்மைத் துறையல்லாத மற்ற துறைகளில் வேலை வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டியுள்ளது. எனவே வளர்ச்சியுறும் நாடுகளில் தொழில் வளர்ச்சி காண்பது அவசியமாகின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்கும், தொழில் மயமாக்குதலுக்கும் உள்ள தொடர்பை மிர்தால் (Myrdal) என்பார் பின்வரும் வகையில் விளக்குகின்றார். 'ஒரு வகையில் உற்பத்தி செய்கின்ற தொழில் என்பது ஓர் உயர்ந்த நிலையினைச் சுட்டிக் காட்டுகின்றது. முன்னேற்றமடைந்த நாடுகளில் காணப்படும் தொழில் முன்னேற்றமானது அந்நாடுகளின் பொருளாதார வளர்ச்சி.

பேராசிரியர் A. K. சென் (Prof. A. K Sen) அவர்கள் தமது 'கால வெளியீட்டுத் தொகுதிக் கோட்பாட்டின்' (Time - series criterion) மூலம் வளர்ச்சியுறும் நாடுகளில், தொழில் வளர்ச்சியின் ஆரம்பக் காலங்களில் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில்களில் கவனம் செலுத்த வேண்டும் என்பதை விளக்குகின்றார்.

அவரது கோட்பாட்டின்படி உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில்கள், முதல் தீவிரப்படுத்தப்பட்ட தொழில்கள் ஆகிய இரண்டும் ஒரு குறிப்பிட்ட காலம் செயல்படுகின்றன எனலாம். அவை செயல்படும் ஆரம்பக் காலங்களில் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில்களிலிருந்து கிடைக்கக் கூடிய உற்பத்தியானது முதல் தீவிரப் படுத்தப்பட்ட தொழில்களிலிருந்து கிட்டும் உற்பத்தியை விட அதிகமாக இருக்கும் என்பதே ஆகும். எனவே வளர்ச்சியுறும் நாடுகள் ஆரம்பக் காலங்களில் உழைப்பு தீவிரப் படுத்தப்பட்ட சிற்றளவுத் தொழில்களை தொடங்கிடலாம். பின்பு காலப்போக்கில் வளர்ச்சி அடைய வல்ல தொழில் நுட்ப அறிவு மற்றும் அதிகரித்த மூலதனத் திரட்சியினால், சிற்றளவுத் தொழில்களை விரித்துக் கொள்ளலாம். இந்நிலையில் திரு. K. L. நஞ்சப்பா (இந்திய சிறுதொழில்களின் வளர்ச்சி ஆணையர்) அவர்களின் கூற்றினையும் நினைவில் கொள்ளலாம். அன்னாரின் கூற்றுப்படி, ஒரு மில்லியன் ரூபாய் அளவிற்குத் தேசிய வருமானத்தினை அதிகரிக்கச் செய்வதற்கு சிற்றளவுத் தொழில்களில் 0·8 மில்லியன் மதிப்புள்ள நிலை முதல் முதலீடு செய்ய வேண்டியுள்ளது; இம் முதலீடானது ஏறத்தாழ 480 பேர்களுக்கு வேலை வாய்ப்பினை அளிக்கின்றது. ஆனால் அதே வேளையில் ஒரு மில்லியன் ரூபாய் அளவிற்குத் தேசிய வருமானத்தினை அதிகரிக்கச் செய்வதற்கு நடுத்தரத் தொழிலிலும், பேரளவுத் தொழில்களிலும் முறையே ரூ 1·1 மில்லியனும், ரூ. 2·9 மில்லியனும் தேவைப்படுகின்றது. இதனால் கிட்டும் வேலை வாய்ப்பானது இருதுறைகளிலும் முறையே 300-ம் 210-ம் என்பதாக உள்ளது. இவ்வாறு குறைந்த அளவு மூலதனத்தைக் கொண்டு சிற்றளவுத் தொழில்கள் அதிக வேலை வாய்ப்பினை அளிக்கின்றன.

### (இ) பரவல் கொள்கை-வட்டாரத் திட்டம்
### (Dispersal Policy–Regional Planning)

எல்லாத் தொழில்களும் சேர்ந்தாற்போல் வளர்ச்சி பெற வேண்டுமென்பதைத்தான் இன்றைய நாடுகள் விரும்புகின்றன. இத்தகைய சூழ்நிலையில் ஏதாவதொரு வகை தொழில் வட்டாரத் திட்டம் இன்றியமையாத தொன்றாகும். இன்றைய பொருளாதாரத் திட்டத்திலும், அறிஞர்களின் சிந்தனையிலும் தொழில் பரவல் அல்லது மையப்படுத்தப்படாத வகையில் தொழில் வளர்ச்சி என்ற கருத்து சிறந்த முக்கியத்துவத்தைப் பெற்றிருக்கின்றது. மிகப் பரந்த அளவு இடப்பரப்பை உடைய நாடுகளில் இக் கருத்து குறிப்பிடத் தகுந்த முக்கியத்துவத்தை கொண்டிருக்கிறது. தொழில் வளர்ச்சிப் பரவலாக்கும் முறை பொருளாதாரத்தின் ஒரு வலுவான அடிப்படையாகும். குறிப்பிட்ட பகுதியில் தொழில் மய

மாக்குதல் என்பது தேசியத் திட்டத்தின் இலகுவான நடவடிக்கை யினைத் தடை செய்கின்ற ஒன்றுகும். உள்நாட்டுப் பகுதியில் பேரளவில் வேலையின்மை இருக்கின்ற காரணத்தால் ஒவ்வொரு பகுதியிலும் தொழில் பரவலாக்கும் திட்டம் என்பது அவசியமா கிறது. தொழில் பரவல் திட்டமென்பது தேசிய திட்டத்தின் ஒரு பகுதியாக உள்ளது.

பரந்த அளவில் பொருளாதார, சமூக மற்றும் நடைமுறைத் திறன் அடிப்படையில் ஓர் உத்தம அளவில் தொழில் நடவடிக் கையினை பரவலான வளர்ச்சி ஏற்படுத்துகிறது. சான்ருக கிராமப் புற மற்றும் நகர்ப்புற வளர்ச்சிக் கிடையே சமநிலை ஏற்பட பல இடங்களில் முயற்சி செய்தால் அது பரவலாக்கும் வளர்ச்சி மூலம் நிறைவேற்றப் படமுடியும். பேரளவில் தொழில் மயமாக்குதலும், நகர்ப்புற ஒரு முகப்படுத்தலும் இணைந்து செல்லக் கூடியவை. இம்முறையானது கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்கு ஒரு நிலையான மக்கள் தொகைப் பெயர்ச்சியினை ஏற்படுத்துகின்றது. இந்நிலை கிராமத்திலேயே தங்கிய மக்களிடையே, பண்பாட்டுத் தரத்தில் ஒரு முறையினை உண்டு பண்ணுகிறது.

குறைந்த விலையுள்ள பொருள்கள் அதிக அளவில் உற்பத்தி செய்யப்பட்டு, கிராமப்புறங்களில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள் களை சந்தையிலிருந்து வெளியேற்றினுல் கிராம மக்களின் வருமா னமும், தன்னம்பிக்கையும் நீங்கிவிடும். மக்களில் பெரும்பாலோர் வேளாண்மைத் துறையினை நோக்கியே செல்ல வேண்டியுள்ளது ஆனுல் நிலப் பரப்போ அது தாங்கக் கூடிய அளவிற்கும் மேலான பெரும் சுமையினை தாங்கிக் கொண்டிருக்கிறது. இதற்கிடையில் நகர்ப்புற நாகரிகமும், வசதிகளும் கிராம மக்களிடையே 'தாங்களும் நல்வாழ்வு வாழவேண்டும் என்ற ஆசையினை உண்டாக்கியிருக்கின்றன.' ஆனுல் சந்தையில், கிராமப் பொருள் களுக்குரிய தேவையின் அளவு குறைந்து விட்ட காரணத்தால் கிராம மக்களின் உண்மை வருமானமும் குறைந்து விட்டன. மேலும் மக்கள் கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்கு பெயர்ந்து செல்லுகின்ற நிலையானது, கிராமப்புறங்களில் ஒரு வெற்றிடத்தை உண்டாக்குகிறது. இதன் பொருள் என்னவெனில் பொருளாதார, கல்வி மற்றும் பண்பாட்டு நடவடிக்கைகளை மேற் கொள்ளுகின்ற தலைவர்கள் ஒருவரும் இல்லாத நிலைமையினை கிராமங்களில் ஏற்படுத்தி வருகிறது. மேலும் ஓர் இயக்க நிலை இல்லாத நிலைமையினையும் ஏற்படுத்துகிறது. போக்குவரத்து, செய்தித் தொடர்பு, பொதுநலம், பொழுதுபோக்கு போன்ற துறை களில் முன்னேற்றமில்லா நிலைமையில் கிராமங்கள் உள்ளன.

இறுதியாக இந்த இடப் பெயர்ச்சியானது கிராம மக்கள் நகர மக்கள் இவர்களுக்கிடையே ஒரு வகுப்பு உணர்வினை உண்டாக்கு கிறது.

மக்களுக்கும், பகுதியின் மரபுரிமைக்கும் இடையே ஒரு சம நிலை ஏற்படுவதுதான் நாட்டிற்குத் தேவைப்படுகின்ற ஒன்றாகும். இதனை மாநிலப் பண்பின்மையோடு குழப்பிவிடக் கூடாது உண்மையில் எந்தப் பகுதியும் தன்னிறைவு நிலையினை அடைய முடியாது. மாநிலங்களுக்கிடையே ஏற்படுகின்ற தொடர்பும், பன்னாட்டு வேலைப் பகுப்பு மற்றும் வாணிபமும் இயற்கையாகவே ஏற்படக் கூடியது. தேசிய வளர்ச்சிக்காக பகுதிகளுக்கிடையே ஏற்படுகின்ற தகராறுகள் தீர்க்கப்பட வேண்டியது அவசியமான தாகும். ஆகவே பரவலான வளர்ச்சியின் நோக்கம் என்ன வென்றால் பல்வேறு பகுதிகள், அவைகளின் சொந்த நோக்கங்கள் விருப்பங்களை நிறைவேற்ற வேண்டுமென்ற எண்ணத்தால் ஏற்படு கின்ற போட்டி, பூசல்களுக்குத் தீர்வு காண்பதைவிட, கிடைக்கக் கூடிய சாதனங்களைப் பயன்படுத்துவதில் மிகுந்த திறமையினைப் பெறவேண்டுமென்பதாகும்.

தொழில் பரவலாக்கல், பின்வரும் குறிக்கோள்களையும், நோக் கங்களையும் கொண்டுள்ளது.

(i) நாட்டின் பகுதியிலுள்ள சாதனங்கள் அனைத்திலும் இயன்ற வரை சமமான பகிர்வைப் பெறுவதைக் குறிக்கோளாகக் கொண்டது தொழில் பரவலாக்கல். தொழில் பரவலாக்கல் என்பது தன்னிறைவு பெறுவதை வற்புறுத்தாது. எந்த ஒரு பகுதியும் செல்வம் கொழிக்கின்ற வட்டாரமாக இருப்பது கிடையாது. மாறாக இக்கொள்கை மூலம் ஒரு வட்டாரத்தின் உபரியான பொருள் கள் பிற வட்டாரங்களுக்குச் செல்லும். வட்டாரங்களுக்கிடையே யுள்ள வாணிபத்தின் தன்மையானது வட்டாரங்களில் மாற்றத் தினைக் கொண்டு வரலாம்.

(ii) தொழில் பரவலாக்குதல் என்பது, பரந்த அளவில் பொருளாதார, சமூக மற்றும் நடைமுறைத்திறன் அடிப்படையில் ஓர் உத்தம அளவு தொழில் நடவடிக்கைகளை உண்டுபண்ணு கிறது.

(iii) தொழில் பரவலாக்குதல் செழிப்பான நிலையைப் பெறுவ தற்காக நாட்டில் குறைவாக உள்ள சாதனங்களைப் பாதுகாக் கின்றது. காடுகள், நிலக்கரி, பெட்ரோலியம் போன்ற இயற்கைச்

சாதனங்களை அழிவான வகையில் பயன்படுத்துகின்ற செயலைத் தவிர்க்கிறது.

(iv) தொழில் பரவலாக்குதல், வேலைவாய்ப்புக்களைச் சம அளவில் பகிர்ந்து அளிக்கின்றது. வேலை வாய்ப்பு வட்டாரங்களுக்கு வட்டாரங்கள் மாறுபட்டால் அவ்வட்டாரங்களின் தலா வருமானத்தில் சமநிலையில்லாத் தன்மை உண்டாகும். ஆகையால் இக் கொள்கையின் மூலம் கூடுமான வரையில் ஒரே சீரான வகையில் வாங்கு திறனை அதிகப்படுத்த முடியும்.

(v) உழைப்பாளர் வெளியேற்றத்தைத் தவிர்த்தல், மந்த நிலை உள்ள வட்டாரங்கள் ஏற்படுவதைத் தடுத்தல், நாட்டின் பல வட்டாரங்களின் தலா வருமானத்தைச் சமப்படுத்தல் போன்ற சில சமூக நோக்கங்களை நிறைவேற்றுவதில் தொழில் பரவலாக்குதல் உதவி புரிகின்றது. மேலும் ஒரு சில தொழிற் செறிவுள்ள பெரிய இடங்களில் மக்கள் தொகையும், தொழிற்சாலைகளும், மேன்மேலும் அதிகமாகின்ற நிலையினைத் தடை செய்கிறது.

வட்டார அடிப்படையில், தொழில் முன்னேற்றம் பெற பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படவேண்டும். முதலாவதாக பெரிய அளவில் பொருளாதாரப் பகுதிகளாக அல்லது மண்டலங்களாகப் பிரிப்பதற்கு நாட்டிலுள்ள அரசியல் பிரிவுகள் அப்படியே எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஒவ்வொரு வட்டார அடிப்படையில், வட்டாரத்திட்டக் குழுக்கள் அமைக்கப்பட வேண்டும். ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒரு மண்டல அவை அமைக்கப்பட வேண்டும். இக் குழுக்கள் திட்டக் குழுவோடு இணைந்து புதிய தொழில்கள் ஏற்படுவதற்கு வேண்டிய காரணிகளைப் பற்றிய படிப்பினைப் பணிகளாகச் செய்கின்றன. இவ் வட்டாரக் குழுக்கள் அரசியல் தலையீடுகளைத் தவிர்க்க வேண்டும்.

இரண்டாவதாக, தொழிலின் நாட்டத்தை மிகுதியாக ஏற்படுவதற்கான காரணத்தை ஆராய்வதற்கு தொழில்களின் இருப்பிட அமைப்புத் தன்மையைப் பற்றிய வட்டார வாரியான ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட வேண்டும்.

மூன்றுவதாக வட்டாரங்களுக்கிடையே சரிக்கட்ட வேண்டிய நிலைகளில் பேரளவுத் தொழில்களுக்கு உதவுகின்ற வகையில் சிற்றளவு மற்றும் நடுத்தர அளவுத் தொழில்கள் சம அளவில் முக்கியப் பங்கினை வகிக்க வேண்டும். இயற்கையிலேயே, சிற்றளவுத் தொழில்கள், பேரளவுத் தொழில்களை விட அதிக அளவில் பரந்து அமைந்திருக்கின்றன. மேலும் பேரளவுத் தொழில்களை விட சிற்றளவுத் தொழில்களே பரவலுக்கு ஏற்றவை ஆகும்.

நான்காவதாக, தொழில்களின் இருப்பிடத்தை நிர்ணயிக்கின்ற முக்கிய காரணி போக்கு வரத்து தொடர்புகளாகும். ஆகையால் தொழில்களின் இருப்பிடப் போக்குகளில் தேவையான மாற்றங்களை ஏற்படுத்த வேண்டுமென்றால், தற்பொழுதுள்ள போக்கு வரத்து முறையிலும், கட்டணக் கொள்கைகளிலும் தகுந்த மாற்றங்களைச் செய்ய வேண்டும். வட்டார அடிப்படையில் சம அளவான தொழில் வளர்ச்சியினைத் துரிதப்படுத்த நவீன சாலைப் போக்கு வரத்து வசதிகளைப் பயன்படுத்தலாம்.

இறுதியாக, ஒரு நல்ல முறையில் தொழில்களின் வட்டாரப் பகிர்வினை அடைய பல்வேறு தொழில்களினால் ஏற்பட்டுள்ள பரவல் போக்குகள் கவனமாக ஆராயப்பட வேண்டும்.

தேசிய அளவில் இணைக்கப்பட்ட மற்றும் சம அளவான தொழில் வளர்ச்சி பெறுவதற்கு தொழில் பரவலாக்குதல் அல்லது தொழில்களின் வட்டார வளர்ச்சிதான் அடிப்படையாக அமைந் திருக்கிறது. நாடு முழுவதிலும் ஊக்கத்தை உண்டாக்குகின்ற செயலையும் வட்டாரக் குழுக்கள் செய்ய வேண்டும். இதன் மூலம் எல்லா மக்களின் திறமைகளும் நன்கு பயன் படுத்தப்பட வேண்டும். இந்நிலைமை முழுமையான பொருளாதார முன்னேற் றத்தையும், ஒழுங்கான தொழில் பகிர்வையும் பெற வழி செய் கின்றது.

ஆகவே வட்டார அடிப்படையில் திட்டமிடலானது கிடைப் பதற்கு மிக அரிதான சாதனங்கள் அழிக்கப்படுவதை தடுப்பதன் மூலம் செல்வத்தைப் பாதுகாப்பதைக் குறிக்கோளாகக் கொண் டுள்ளது. சிற்றளவுத் தொழில்கள் பரவலாக்கப்படுவது தனித் தனியாக அமைந்துள்ள தொழில்களில் சக்தியானது குவிந்து காணப்படுகின்ற தன்மையைத் தவிர்க்கின்றது. பல முக்கிய காரணங்களால், தொழில் நடவடிக்கைகள் பெருமளவில் பரவலாக் கப்பட வேண்டியது நல்லது. ஏனென்றால் நாட்டில், சில குறிப் பிட்ட இடங்களில் தொழில் நிறுவனங்கள் குவிந்து காணப்படுவது நாட்டின் பாதுகாப்பினை மனதில் கொண்டு காண்கின்றபோது ஆபத்து நிறைந்ததாகும்.

வட்டாரச் செழிப்பில் ஏற்றத்தாழ்வு இருப்பது நாட்டின் ஒற்றுமைக்குத் தீங்கிழைப்பதாகும். இந் நிலையினை வட்டார வாரி யான தொழில் முன்னேற்றம் நீக்குகின்றது. சில பகுதிகளில் நீக்க முடியாத அளவிற்கு வேலையின்மை இருக்கிறது. தொழில்கள் பரவலாக்கப்படும்போது வேலை வாய்ப்புகளில் ஒரு சமப் பகிர்வு

நிலை ஏற்படுகிறது. எல்லா வட்டாரங்களிலும் ஒரே சீரான அளவில் வேலை வாய்ப்பு நிலையிருந்தால் வருமானத்திலும் ஏற்றத்தாழ்வு பேரளவில் இருக்காது.

எப்படியிருப்பினும், 'தொழில் பரவலாக்குதலும்' 'சிற்றளவுத் தொழிலும்' ஒன்று என்று எண்ணி விடக்கூடாது. தொழில் பரவலாக்கும் கொள்கைக்கு ஏற்ற முக்கிய கருவியாகச் சிற்றளவுத் தொழில்கள் பணியாற்றுகின்றன. இக் கொள்கை வெற்றி பெற வேண்டுமென்றால் பொளாதாரச் சமுதாய வளர்ச்சி, தொழில் வளர்ச்சி ஆகியவற்றை இயக்குவதற்குப் பயன்படும் மற்ற வழி வகைகளோடு, தொழில் பரவல் கொள்கையினால் ஏற்படும் தொழில் முன்னேற்றம் மாநகர்களிலோ அல்லது கிராமங்களிலோ இருக்க வேண்டுமென்பதில்லை. ஆனால் இவ்விரண்டு நிலைகளுக்கும் இடையே, தகுதியுடைய, கவரக்கூடிய நிலையில் உள்ள மாநகரங்களிலும், நகரங்களிலும் மிகுதியாக இருக்க வேண்டும். தொழில் பரவல் கொள்கையிற் கிராம நகர்ப்புற இணைப்புகளுக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டியது அவசியம். அவ்வாறு தரப்பட்டால், அதன் மூலம் வளர்ந்து வரும் தொழில்களுடன் கூடிய நகரங்களுக்கும், கிராமங்களுக்குமிடையே நன்மை விளைவிக்கக் கூடிய பரிமாற்றங்கள் ஏற்பட வழியுண்டு.

சிற்றளவுத் தொழில்களின் முக்கியத்துவத்தைப் பற்றி நாம் தெளிவாக அறிந்து கொண்டோம். இந்தியா போன்ற மக்கள் தொகை அதிகமாக உள்ள வளர்ச்சியுறும் நாடுகள் சிற்றளவுத் தொழில்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டியதின் அவசியம் நன்கு புலனாகும். மக்கள் தொகை அதிகமாக உள்ள வளர்ச்சியுறும் நாடுகளில் மக்கள் வேளாண்மைத் துறையையே நம்பியிருப்பர். மேலும், அங்கு வேலையின்மைப் பிரச்சினையும், வருமான ஏற்றத்தாழ்வும் ஏற்படும். ஏற்கெனவே வேலை இன்றி இருப்பவர்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்துவதற்கும், பொருளாதார வளர்ச்சியினால் வேளாண்மைத் துறையிலிருந்து அகற்றப்படுபவர்களுக்கு வேலை வாய்ப்பினை அளிக்கவும் சிற்றளவுத் தொழில்கள் நல்ல உறுதுணையாக விளங்கும். வளர்ச்சியுறும் நாடுகளில் கிட்டக்கூடிய சிறிதளவு மூலதனத்தைக் கொண்டே அதிக அளவில் வேலை வாய்ப்பினை ஏற்படுத்தக் கூடியவை சிற்றளவுத் தொழில்களே. பொருளாதாரம் வளர்ச்சி அடையும் பொழுதே, தொழில் நுட்ப அறிவும் வளர்ச்சி பெறுகின்றது. தொழில் நுட்ப அறிவு வளர்ச்சியின் மூலம் சிற்றளவுத் தொழில்களும் வளர்ச்சி அடைந்து அவைகளில் பல்வேறு

புதுமைகள் புகுத்தப்படலாம். இவ்வாறு மக்கள் பெருக்கம் அதிகமுள்ள வளர்ச்சியுறும் நாடுகளில் பொருளாதார வளர்ச்சி விரைவு படுத்தப்படுன்றது. இவ்வகைப் பொருளாதார வளர்ச்சியே நிலைத்து நிற்கக் கூடியதாகும். ஜப்பானில் அதன் பொருள்ாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களில் சிற்றளவுத் தொழில் துறையினை ஊக்குவித்துப் பின் நவீன தொழில்நுட்பத்திற்கேற்ப மாற்றி அமைந்ததால் தான் இன்று பொருளாதார வளர்ச்சியிலும், தொழில் துறை வளர்ச்சியிலும் முன்னணியில் நிற்கின்றது. இது வளர்ச்சியுறும் நாடுகளுக்கு அரிய படிப்பினையாக விளங்குகின்றது.

# 5. இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி

'பொருளாதார வளர்ச்சி' என்ருல் என்ன என்பது பற்றியும், அதனை நிர்ணயிக்க வல்ல முக்கிய காரணிகள், வளர்ச்சியுற்ற பொருளாதாரம், வளர்ச்சி பெற்றுவரும் பொருளாதாரம், ஆகியவைகளின் தோற்றக் கூறுகள் என்பன போன்றவைகளைத் தெளிவாகவும், விரிவாகவும் நூலின் முதற்பகுதியில் கண்டுள்ளோம். எனவே 'பொருளாதார வளர்ச்சி' என்ற சொற்ருெடருக்கு இலக்கணம் வகுக்க முயலுவது அரைத்த மாவையே அரைப்பதற் கொப்பாகும். எனினும், ஆசிரியர்கள் ஜெரால்ட் எம். மேயர், இராபர்ட் இ. பால்ட்வின் ஆகியோர், தமது 'பொருளாதார வளர்ச்சி' என்னும் நூலில் தந்துள்ள ஒரு சிறு விளக்கத்தை இங்கு கூறுவது பொருத்தமாகும். 'பொருளாதார வளர்ச்சி என்பது ஒரு படிமுறையாகும்; எவ்வாறெனில், நீண்ட காலத்தில் ஒரு பொருளாதாரத்தின் உண்மைத் தேசீய வருமானம் அதிகரிப்பதாகும். மக்கள் தொகைப் பெருக்க வீதத்தைவிட, வளர்ச்சி வீதம் அதிகமாக இருக்குமானுல், உண்மைத் தலா வருமானம் உயரும்.'[1] ஆகவே, உண்மைத் தேசீய வருமானமும், உண்மைத் தலா வருமானமும், மக்கள் தொகைப் பெருக்க விகிதத்தைவிட உயர்ந்து செல்ல வேண்டும் என்பது வற்புறுத்தப்படுகிறது.

ஒரு கட்டத்தை எட்டியவுடன் நின்று விடுவதன்று பொருளாதார வளர்ச்சி; தொடர்ந்து செல்ல வேண்டிய நீண்ட பாதை அது. அந்த நீண்ட காலப் பயணத்தில் - நெடுங்காலப் படிமுறையில் எதிர்ப்படும் வறுமைச் சூழலைத் தகர்த்தெறிந்து, தற்சார்பான நிலையில் வலிமை பெற்று, தன் வளர்ச்சிக்கு தானே ஆதாரமாகவுள்ள நிலையைப் பொருளாதாரத்தில் பெற வேண்டும். அதனையே தன் முனைப்பு உற்பத்திநிலைப் பொருளாதாரம் (Self generating Economy) எனலாம்.

1. "Economic Development - Theory, History, Policy" By Meier and Baldwin.

மேலும் பொருளாதார வளர்ச்சி என்பது ஒன்றிரண்டு துறை களோடு நின்று விடுவதல்ல. வேளாண்மைத் துறையாயினும், தொழில் துறையாயினும், வணிக, போக்குவரத்துத்துறையாயினும், எத்துறையாயினும் – அனைத்துத் துறைகளிலும் சமச்சீரான வளர்ச்சி காணவேண்டுவது அவசியம். அதனைத்தான், டபிள்யூ. ஏ. லூயிஸ் இவ்வாறு சுட்டிக்காட்டுவார்: 'வளர்ச்சித் திட்டங் களில், பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் ஒரே சமயத் தில் வளர்ச்சி இருக்கவேண்டும்; அதன் காரணமாகத் தொழில் துறைக்கும், விவசாயத் துறைக்கும், உள்நாட்டு நுகர்வுக்கான உற்பத்திக்கும் சீரான சமநிலை இருக்கவேண்டும். உண்மை யாதெனில் எல்லாத் துறைகளிலும் ஒரே நேரத்தில் வளர்ச்சி காண வேண்டும்.[1]

இக்கருத்துக்களின் அடிப்படையில் இந்தியாவின் பொருளா தார வளர்ச்சியை வரலாற்று விவரங்கள் கிடைக்கும் காலத்தி லிருந்து ஆராயலாம்.

### அந்நிய ஆட்சியில் நமது பொருளாதாரச் சீர்குலைவு

அந்நிய ஆட்சியினின்று நாடு விடுதலை பெற்ற பின்பே இத் தகைய முறையான பொருளாதார வளர்ச்சிக்கான திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் 20-ம் நூற்றாண்டுக்கு முன்பு ஆண்ட ஆங்கிலேயர் காலத்திலோ அல்லது முகலாய மன்னர்கள் காலத்திலோ எல்லாப் பொருளாதாரத் துறைகளின் சீரமைந்த வளர்ச்சிக்கான திட்டங்கள் எதுவும் கைக்கொள்ளப் படவில்லை. உலக நாகரிகத்திற்கே அச்சாணியாக விளங்கிய ஒரு நாடு அந்நியத் தாக்குதல்களாலும் ஆட்சி முறைகளாலும் சின்னபின்ன மாகியது. புகழ்மிக்க வரலாற்று ஆசிரியர்களின் மேற்கோள்களைக் கொண்டு இதனைத் தெளிவாக்க இயலும். சான்றாக R. C. மஜும்தார் H. C. ராய்சௌதிரி, K. தத்தா ஆகிய ஆசிரியர்கள் எழுதிய 'இந்தியாவின் சிறப்பு வரலாறு-II' என்ற நூலில் இவ்வாறு கூறப் பட்டுள்ளது[2].

'1757-ம் ஆண்டுக்கு நெடுங்காலத்திற்கு முன்பே நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவு தொடங்கிவிட்டது. ஆனால் பல கார ணங்கள் அச்சீர்குலைவை விரைவு படுத்தின. இந்தியப் பொருளா தார வரலாற்றின் 'மிக இருண்ட காலம்' என்று உண்மையில் கூறு

1. W. Lewis "The Theory of Ecomonic Growth" P. 283

2. 'இந்தியாவின் சிறப்பு வரலாறு II' By R. C. மஜும்தார், H. C. ராய் சௌதிரி, K. தத்தா

வதற்குரிய பதினெட்டாம் நூற்ருண்டில், குறிப்பாக வங்காளத்தில் சீர்குலைவுக்குப் பல காரணங்கள் இருந்தன. மத்திய அரசாங்கத்தின் பலவீனமும், அரசவையில் தோன்றிய கிளர்ச்சிகளும் சதிகளுமாகும்' 1738-39-ல் உண்டான பயங்கரமான பாரசீக இடையீடும், மராட்டியர்களும், இமயமலை மக்களும், மக்குகளும், போர்சுக்கீசியக் கடற்கொள்ளையர்களும் செய்த சீரழிவுகளும், தஸ்தக்கைத் தவருகப் பயன்படுத்தலும், ஊழியர்களால் மற்ற வணிக உரிமைகள் தவருகப் பயன்படுத்தப் பட்டமையும், ஆங்கிலக் கம்பெனியின் குமாஸ்தாக்களும், முகவர்களும், அவர்களுடைய தனிப்பட்ட வாணிகத்தில், வாணிகச் சிறப்புரிமைகளைத் தவருகப் பயன்படுத்தியும், ........, கம்பெனியின் முதலீட்டிற்காகப் பெருந்தொகை இலவசமாகக் கிடைக்க வேண்டுமென்று வணிகர்களும், நெசவாளர்களும் செய்த ஒடுக்கமும், 1757 லிருந்து நாட்டின் பெருஞ்செல்வம் நாட்டை விட்டு இறைத்துச் செல்லப்பட்டமையுமாகிய இவையெல்லாஞ் சேர்ந்து நாட்டின் பொருளாதார அழிவை ஏற்படுத்திவிட்டன.'[3] 18-ம் நூற்ருண்டின் மத்தியில் நமது பொருளாதாரச் சீர்குலைவுக்கான காரணங்களை இதைவிடத் தெளிவாகவும், சுருக்கமாகவும் வெளிக்கொணர இயலாது.

கி. பி. 1757 - ம் ஆண்டிலிருந்து ஆங்கிலேயர் ஆட்சி இந்த மண்ணில் வேரூன்ற ஆரம்பித்தது. கிழக்கிந்தியக் கம்பெனியின் நிர்வாகத்தின் கீழ் ஒரு நூற்ருண்டுக் காலமும், அதன்பின் பேரரசின் கீழ் நாடு உட்பட்டிருந்த பொழுதும், நாட்டின் வளம் படிப்படியாகக் குன்ற ஆரம்பித்தது. வறுமையின் கொடும் பிடியில் சிக்குண்ட பொருளாதாரம் அடிக்கடி கொடிய பஞ்சங்களைச் சந்திக்க நேரிட்டது. 1793-ல் தமிழகத்தில் ஏற்பட்ட பஞ்சம், 1877, 1878, 1889, 1892, 1897, 1900 ஆகிய ஆண்டுகளில் நாடு முழுவதும் பரவலாகக் காணப்பட்ட பஞ்சமெனும் கொடிய அரக்கனின் கோரத் தாண்டவத்தால் 15-மில்லியன் (150-லட்சம்) மக்கள் தம் இன்னுயிரை இழந்தனர். ஏறத்தாழ 25 ஆண்டு காலத்திற்குள், இங்கிலாந்து நாட்டின் மக்கள் தொகையில் பாதி அளவிற்கு சராசரியான ஓர் ஐரோப்பிய நாடு மக்கள் தொகை அளவிற்கு பஞ்சங்கள் உயிர்கொலை புரிந்துவிட்டன. இப்பஞ்சங்களுக்கு மூலகாரணம் என்ன? இந்தியப் பொருளாதாரம் கொஞ்சம் கொஞ்சமாக வரிகளாலும், வணிகத்தாலும் – சுரண்டப்பட்டு நாடு சீர்குலைந்தது. F. J. ஷோர் (F. J. Shore) 1837-ல் இவ்வாறு குறிப்பிடுகின்ருர்; 'இந்தியாவின் இன்ப அமைதியுடைய நாட்கள் நிறைவுற்றன; தான் முன்பொரு காலத்தில் பெற்றிருந்த செல்வத்தின் பெரும்பகுதி அதனிடமிருந்து உறிஞ்சப்பட்டுவிட்டது;

இழிந்த தவருன ஆட்சி முறைகளால் அதனுடைய சக்திகளெல்லாம் முடக்கப்பட்டு விட்டன. ஒரு சிலரின் நன்மைக்காக லட்சக் கணக்கான மக்களின் நலன்கள் புறக்கணிக்கப்பட்டுவிட்டன.'[1]

மக்களிடம் நிலவரியாகப் பெற்ற தொகையோ மிக அதிகம். அத்தொகை ஆண்டுக்காண்டு அதிகரித்துக்கொண்டே சென்றது. சான்ருக, இங்கிலாந்தில் 1798 முதல் 1898 வரை, நிலவரி வாரத் தொகையில் 1898 வரை 5 முதல் 20 சதவீதம் வரை வசூலிக்கப் பட்டது. ஆனல் இந்த வீதமானது இந்தியாவின் பெரும் பகுதி களில் 80 சதவீதமாகவும், வங்கத்தில் 90 சதவீதமாகவும் 1793 முதல் 1882 வரையான காலத்தில் நிர்ணயிக்கப்பட்டு இருந்தது. வரலாற்று வழியாக இதற்கு ஆதாரங்கள் காட்டி, ஆண்டுக்காண்டு நிலவரி வருவாய் உயர்ந்து சென்றதையும் நிரூபிக்கலாம். 1764-ல் வங்கத்தை ஆண்ட கடைசி முகலாய மன்னர் பெற்ற நிலவரி வருவாய் 8,17,553 பவுன். ஆனல் அவருக்குப் பின் 30 ஆண்டு காலத்தில், கம்பெனி ஆட்சியில் அதே மாநிலத்தில் இவ்வருவா யானது பவுன் 26,80,000க்கு உயர்ந்தது. மராத்தியர் வெற்றிக் குப் பின் 1817- ல் பம்பாய் மாநில நிலவரி வருவாய் 8,00,000 பவுன்; ஆனல் மூன்றே ஆண்டுகட்குள் இத்தொகை (பவுன்) 15,00,000 என்ற அளவிற்கு ஆங்கிலேயர்களால் உயர்த்தப்பட் டது. சென்னை மாநிலத்திலோ, நிலத்தின் மொத்த உற்பத்தியில் பாதி மதிப்புத் தொகையானது நிலவரியாகச் செலுத்தப்படவேண்டு மென்று கட்டாயப்படுத்தப்பட்டது. எனவே தான் 1830 ம் ஆண்டில் கர்னல் பிரிக்ஸ் (Colonel Briggs) இவ்வாறு குறிப்பிட் டார். 'தற்சமயம் இந்தியாவில் உள்ள நிலவரி முறையானது, நிலக் கிழார்களின் வார வருவாய் முழுவதையுமே உறிஞ்சக் கூடியது; மற்ற ஐரோப்பிய அல்லது ஆசிய அரசுகளில் எப்பொழுதுமே காண முடியாத ஒன்று'. (A Land - Tax like that which exists in India, professing to absorb the whole of the land lord's rent, was never known under any Government in Europe or Asia'' - Colonel Briggs - 1830) அதுபோல இந்தியாவின் பல சுதேசி இராஜ்யங்களையும், பிரிட்டிஷ் ராஜ்யப் பகுதிகளையும் சுற்றி வந்த பிஷப் ஹீபர் (Bishop Heber) கூட 'நாம் கேட்பது போல எந்த சுதேசி அரசனும்கூட வாரம் கேட்பதில்லை' என்ருர். (No Native Prince demands the rent which we do). வரிவருவாயைக் கூட்டிக்கொண்டே சென்ருலும் கூட வழிகள் பெருகவில்லை. மாருக இந்திய அரசின் பொதுக்கடன் சுமைதாம் ஆண்டுக்காண்டு அதிகரித்துச் சென்றது. இந்தியக் கவிஞர் ஒருவர் கூறினர்.

[1] Hon'ble F. J. Shore's Notes on Indian Affairs-London, 1873, 11, Vol. p. 516;

'சூரியனானது நிலப்பகுதியிலிருந்து உறிஞ்சிக்கொண்ட நீர்க்கசிவை மீண்டும் மழைவடிவாக பூமிக்களித்து வளப்படுத்துவது போல், மன்னன் வசூலித்த வரிவருவாய் மீண்டும் அதே மக்களுக்குப் பயன்படவேண்டும்.' ஆனால் ஆங்கிலேயர் ஆட்சியில் நடந்த தென்ன? இந்திய மண்ணிலிருந்து உறிஞ்சப்பட்ட ஈரப்பசையானது, இந்திய மண்ணுக்கே மழையாகப் பயன்படாமல், வேறு நாடுகளில் வாழ்ந்த மக்களுக்கே வளந்தரும் மழையாகப் பயன் பட்டது. இந்தியாவில் சுரண்டப்பட்ட செல்வம்தான் இங்கிலாந்தின் தொழிற்புரட்சிக்கு வித்திட்டது என்று கூறுவர்.

ஒரு புறம் வருவாய் அதிகரித்து வந்தாலும் கூட, நாட்டின் பொதுக்கடன் சுமையும் உயர்ந்து கொண்டே வந்தது. 1792-ல், வட்டி செலுத்த வல்ல நமது கடன் மதிப்பு பவுன் 7 மில்லியனுக்கு அடுத்து இருந்தது. 1799-ல் இது £ 10 மில்லியனாகவும், 1805-ல் £ 21 மில்லியனாகவும், 1807-ல் £ 27 மில்லியனாகவும், 1829-ல் £ 39 மில்லியனாகவும் அதிகரித்தது. படிப்படியாக இந்தியாவின் பொதுக்கடன் வளர்ந்து வந்துள்ளதை இப்பட்டியல் விளக்கும்.

(கடன்தொகை £ல்)

| ஆண்டு | மொத்தக் கடன் |
|---|---|
| 1857 | 51,000,000 |
| 1858-59 | 81,171,308 |
| 1861-62 | 107,514,159 |
| 1870-71 | 119,000,476 |
| 1871-72 | 121,767,458 |
| 1875-76 | 134,556,809 |
| 1876-77 | 138,935,025 |
| 1890-91 | 182,825,009 |
| 1891-92 | 186,633,389 |
| 1895-96 | 197,979,781 |
| 1896-97 | 200,042.073 |
| 1899-1900 | 212,168,066 |
| 1900-01 | 223,843,244 |
| 1901-02 | 226,232,105 |

Sowrce: The Economic History of India-Vol-I & II by Romesh Dutt

Collected from page 272 and 438-439 of Vol. II

இக்கடன் அதிகரித்தமைக்குக் காரணம், இங்கிலாந்து அரசு, நாட்டு நிர்வாகச் செலவுக் கட்டணம் (Home charges) என்ற தலைப்பின் கீழ் ஆண்டுக்கு £ 16 மில்லியனை எடுத்துச் சென்றது. மேலும் இந்திய அரசின் உயர்பதவிகள் பலவற்றை ஆங்கிலேயர் களுக்கே அளித்து, அவர்களின் ஊதியத்தைத் தாய்நாட்டுக்கு அனுப்பும் முகமாக £ 10 மில்லியனை ஆண்டொன்றுக்கு எடுத்துச் சென்றது. ஆக, இந்தியத் துணைக் கண்டத்தின் நிகர வருவாயில் பாதித்தொகையானது இங்கிலாந்துக்கு எடுத்துச் செல்லப்பட்டது. இவ்வாறு, £42 தலா வருமானமுடைய இங்கிலாந்து நாடானது £ 2 தலா வருமானமுடைய இந்தியர்களின் தலா வருமானத்தில் 10 ஷில்லிங் தொகையை எடுத்துக் கொண்டது. இதனால் நமது நிலை வறுமையை நோக்கிச்சொன்றது. நாடு வறுமையுற, வறுமையுற, பிரிட்டிஷாரின் வாணிகமும் பாதிக்கப்படும் என்பதை அறிய மறந்தனர்.

நமது பொருளாதார நிலை எவ்வளவு மோசமாக இருந்தது என்பதைக் கீழ்வரும் தலாவருமான விவரங்கள் தெளிவாக்கும்.

(ஆண்டு 1903)

| | |
|---|---|
| கனடா, மற்றும் இதர குடியேற்ற நாடுகளில் தலாவருமானம் | £ 48 |
| இங்கிலாந்து | £ 42 |
| இந்தியா | £ 2 |

தீமையிலும் நன்மை உண்டென்பர் பெரியர். தமது பொருளாதார வணிக, அரசியல், பாதுகாப்பு நோக்கங்களுக்காகக் கொண்டு வரப்பட்ட இரயில் போக்குவரத்து, எதிர்காலத்தில் இந்தியாவின் வணிக வளர்ச்சிக்கும், தொழில் முன்னேற்றத் திற்கும் பொதுவான பொருளாதார மேன்மைக்கும் உதவியது எனலாம். 1853ஆம் ஆண்டு பம்பாயிலிருந்து தாணு (Thana) எனும் இடம் வரையில் 20 மைல் நீளத்திற்கு முதல் முதலாக இரயில் ஓடியது. 1900ஆம் ஆண்டிற்குள் சுமார் 25,000 மைல் நீளமான இருப்புப் பாதை போடப்பட்டது. அடுத்த பக்கத்தில் வரும் அட்டவணை இருப்புத் துறையின் வளர்ச்சியைக் காட்டும்.

1901ஆம் ஆண்டு முடிய இந்திய இரயில் துறையில் மூலதன முதலீடு ரூ. 340, 15,98,000 (£ 226,773,200) என்ற அளவில் அமைந்தது.

இரயில் பாதை நீளம் (மைல்களில்)

| ஆண்டு | போடப்பட்ட இரயில் பாதை நீளம் | |
|---|---|---|
| 1853 | 20 | மைல்கள் |
| 1856 | 273 | ,, |
| 1857 | 288 | ,, |
| 1861 | 1,588 | ,, |
| 1862 | 2,336 | ,, |
| 1865 | 3,373 | ,, |
| 1867 | 3,936 | ,, |
| 1871 | 5,077 | ,, |
| 1875 | 6,518 | ,, |
| 1877 | 7,322 | ,, |
| 1881 | 9,891 | ,, |
| 1882 | 10,144 | ,, |
| 1885-86 | 12,375 | ,, |
| 1886-87 | 13,387 | ,, |
| 1887-88 | 14,376 | ,, |
| 1888- 9 | 15,241 | ,, |
| 1889-90 | 16,096 | ,, |
| 1890-91 | 16,977 | ,, |
| 1891-92 | 17,564 | ,, |
| 1893 | 18,510 | ,, |
| 1895 | 19,555 | ,, |
| 1896 | 20,262 | ,, |
| 1897 | 21,133 | ,, |
| 1898 | 22,048 | ,, |
| 1899 | 23,528 | ,, |
| 1900 | 24,760 | ,, |
| 1901 | 25,373 | ,, |

**Source:** The Economic History of India-Vol. II, 1837-1900 by Romesh Dutt, p. 401.

அடுத்தபடியாக வேளாண்மைத் துறைக்கு உதவிடும் வண்ணம், நீர்பாசனக் கால்வாய் வசதிகளும் பெருக்கப்பட்டன. சான்றாக, 1901-1902-ல் இந்தியாவில் நீர்ப்பாசனக் கால்வாய்

அளவினையும். நீர்ப்பாசனம் பெற்ற நிலப்பரப்பும் கீழ்வருமாறு இருந்தது. (சிந்து நதி நீர்ப்பாசனக் கால்வாய்தவிர)

| மாநிலம் | கால்வாய் | நீர்ப்பாசனம் உள்ள ஏக்கர்கள் |
|---|---|---|
| வங்காளம் | ஒரிஸ்ஸா கால்வாய் | 2,01,498 |
| | மித்னூர் கால்வாய் | 82,134 |
| | சோன் கால்வாய் | 5,57,494 |
| ஆக்ரா & அயோத்தி | கிழக்கு ஜமுனாவும் இரண்டு கங்கை கால்வாய்களும் மற்றவையும் | 27,41,400 |
| பஞ்சாப் | மேற்கு ஜமுனா கால்வாய் | 5,89,955 |
| | பாரி தோப் கால்வாய் | 8,56,041 |
| | சிர்ஹிந்து பிரிட்டிஷ் கால்வாய் | 7,28,908 |
| | சிர்ஹிந்து சுதேசி ராஜ்ய கால்வாய் | 3,41,553 |
| | சீனுப் கால்வாய் | 17,48,129 |
| | ஜீலம் கால்வாய் | 65,367 |
| | ஷோக் (Sohag), பாரா (Para), சித்னுய் கால்வாய் | 1,61,885 |
| பம்பாய் | நிரா, முத்தா மற்றும் இதர கால்வாய்கள் | 1,39,040 |
| சென்னை | காவிரி, கிருஷ்ணு, கோதாவரி மற்றும் இதர கால்வாய் திட்டங்கள் (சுமார்) | 25,00,000 |
| | பெரியார் திட்டம் | 1,54,000 |
| | ருஷிகுல்யா திட்டம் | 8,43,000 |
| | பெண்ணுறு மற்றும் இதர கால்வாய்கள் | (விவரம் இல்லை) |

**Source:** The Economic History of India-Vol. II (1837–1900) by Romesh Dutt, p. 403.

அடிக்கடி ஏற்பட்ட பஞ்சங்களின் விளைவாக, இத்தகைய நீர்ப்பாசனக் கால்வாய்களின் பெருக்கத்திற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1870 முதல் 1880 முடிய மொத்தம் 11,851,198 ஸ்டெர்லிங்குகள் நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு செலவிடப்பட்டன.

1878 முதல் 1901 முடிய நமது ஏற்றுமதி இறக்குமதியிலும் சாதக நிலையே நிலவியது.

| ஆண்டு | மொத்த இறக்குமதி | | | மொத்த ஏற்றுமதி | | |
|---|---|---|---|---|---|---|
| 1878 | ரூ. | 58·81 | கோடி | ரூ. | 67·43 | கோடி |
| 1880 | ரூ. | 52·82 | ,, | ரூ. | 69·24 | ,, |
| 1885 | ரூ. | 69·89 | ,, | ரூ. | 85·22 | ,, |
| 1890 | ரூ. | 86·65 | ,, | ரூ. | 105·36 | ,, |
| 1895 | ரூ. | 83·11 | ,, | ரூ. | 117·13 | ,, |
| 1900 | ரூ. | 96·27 | ,, | ரூ. | 117·03 | ,, |
| 1901 | ரூ. | 105·47 | ,, | ரூ. | 121·95 | ,, |

ஆனால் இதில் குறிப்பிடவேண்டியதொன்று என்னவென்றால் இந்தியாவின் வெளிநாட்டு வணிகம், வெளிநாட்டு மூலதனத்தால் வெளிநாட்டு வணிகர்கள் மூலம் நடத்தப்பட்டது. எனவே பன்னாட்டு வணிகத்தால் கிட்டிய இலாபம் ஐரோப்பிய நாடு களுக்குச் சென்றதேயொழிய உள்நாட்டவருக்கு எதுவும் கிட்ட வில்லை. 1878-ல் இறக்குமதி, ஏற்றுமதி அளவு ரூ 58·81 கோடி ஆகவும், 67·43 கோடியாகவும் இருந்த நிலையிலிருந்து 1901-ல் ரூ 105·47 கோடி எனவும் ரூ 121·95 கோடி எனவும் அதிகரித் துள்ளது. அவ்வாறெனில் நாடுவளம் அடைந்தது என்றோ, மக்களுக்கு நன்றாக உணவுப் பொருள்கள் கிட்டியது என்றோதான் நாம் கருத வேண்டும். ஆனால் நடந்ததோ வேறு. 1901 ஆண்டில் நாடு முழுவதும் சூழ்ந்த கொடிய பஞ்சம் மக்களை வாட்டி வதைத்தது. இதே போன்று காப்புக் கொள்கை எதுவும் நமக்குச் சாதகமாக அமையவில்லை. இலங்காஷியர் பஞ்சாலைகளின் நலன் கருதி புதிதாகத் தோன்றிய இந்தியப் பஞ்சாலைகளுக்கு அதிக ஆயத்தீர்வை விதிக்கப்பட்டது. ஆக தொழில் வணிகத் துறைகளிலும் சீரான நாட்டுக்கு அனுசரணையான போக்கு இல்லை.

இவ்வாறு இந்தியப் பொருளாதாரத்தின் ஒவ்வொரு வளர்ச் சிக்கும் எதிர்மறையான நடவடிக்கைகள் தாம் எடுக்கப்பட்டனவே யன்றி ஆதரவான போக்குக் காணப்படவில்லை. இந்த மாற்றாந் தாய்ப் போக்கு இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்குப் பின்பு தான் ஓரளவு மாறியது எனலாம். இந்த ஒரு நூற்றாண்டுக் காலத்தில் அந்நிய ஆட்சி மேற்கொண்ட இதே நடவடிக்கைகளை வேறு ஒரு செழிப்பான, அமைதியான, ஆர்வமிக்க உழைப்புத் திறன் கொண்ட நாட்டில் செயல்படுத்தினாலும், இன்று இந்தியா

உள்ள நிலையை அது அடைந்திருக்கும். ரோமேஷ் தத் தனது நூலில் குறிப்பிட்டார். 'தற்காலத்தின் மிகச்சிறந்த சமுதாய நிறுவனங்கள் என்று இந்திய சாம்ராஜ்யம் வரலாற்றில் மதிக்கப் படலாம். ஆனால் இச்சாம்ராஜ்யமானது இந்திய மக்களுக்கு அமைதியைத் தந்தது; ஆனால் செழிப்பைத் தரவில்லை என்றும்; உற்பத்தியாளர்கள் தங்கள் தொழில்களை இழந்தனர் என்றும்; பலதிறப்பட்ட அதிக வரிகளால் இந்திய விவசாயிகள் தரை மட்ட மாக்கப்பட்டனர் என்றும்; ஆனால் சேமிப்பு இல்லாது போனது என்றும்; நாட்டின் பெரும்பகுதி வருவாய் இங்கிலாந்துக்குத் திசை திருப்பி விடப்பட்டது என்றும்; இலட்சக்கணக்கான மக்களை அழித்து விடும் பஞ்சங்கள் மீண்டும் மீண்டும் தோன்றின என்றும் எதிர்கால வரலாற்று அறிஞர்கள் துயர்பொதிந்த கதைகளைச் சொல்வார்கள்.[1] ஆயினும் இங்கிலாந்து நாட்டார் தமது கடந்த காலத் தவறுகளுக்கு ஈடுகட்டும் வகையில் இருபதாம் நூற்றாண்டு முதல், நிலவரியைக் குறைத்து, தொழில்களை மீட்சி செய்து, மக்களுக்கு நலன் தரும் பல அரசியல் திருத்தங்களைச் செயல் படுத்தினர்.

இவ்வாறு ஒரு நூற்றாண்டுக் காலத்தில் செலவங்களைச் சுரண்டி, பொருளாதாரச் சிக்கல்களை ஏற்படுத்தி, உலகில் சிறப்பு மிக்க வளமார்ந்த நாடாக இருந்த ஒரு நாட்டை வறுமையின் உறைவிடமாக்கி, பஞ்சங்கள் படை எடுக்கும் பரிதாப நிலைக்கு உள்ளாக்கி, உலகில் வேறு எந்தப்பகுதியிலும் காணாத ஒரு நிலையை இந்தியாவில் ஆங்கிலேயர்களிள் ஏற்படுத்திவிட்டனர்.

### (iii) அண்மைக் காலங்களில் பொருளாதார வளர்ச்சி

பொருளாதார வளர்ச்சி என்றால் என்ன என்பதற்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்களின் அடிப்படையில், நாட்டின் எல்லாப் பொருளாதாரத் துறைகளும் வளர்ச்சி பெற விடுதலைக்குப் பின் ஆக்க பூர்வமான விரிவான முயற்சிகள் எடுக்கப்பட்டன. முதல் முயற்சியாக நமது அரசியல் சாசனம் இதனைப் பற்றித் தெளிவாக எடுத்துக் கூறியது.

நாட்டில் சீரான பொருளாதார வளர்ச்சியினைப் பெறுவதற்காக நமது அரசியல் சாசனம் தக்க வழி வகுத்துத் தந்தது. அதில் கண்டுள்ள நெறிசெய் நியதிகள் (Directive Principles) இவ்வாறு கூறுகின்றன.

[1] Romesh Dutt, 'Economic History of India', Vol, II, p, XIV

'அரசானது, நீதி, சமூகம், பொருளாதாரம், அரசியல் ஆகியவை பொருந்திய ஒரு சமூக அமைப்பை எந்த அளவுக்கு இயலுமோ அந்த அளவுக்குச் சிறப்பாகப் பெற்று, காத்து அதன் வழி மக்களின் நல்வாழ்வைப் பெருக்கிட முயல வேண்டும். தேசிய வாழ்க்கையின் எல்லா அமைப்புக்களும் அதனை உணர வேண்டும்.

'அரசானது, குறிப்பாக கீழ்வருவனவற்றைப் பெறுவதற்கு தனது கொள்கையை அமைத்து வழிகாட்ட வேண்டும்.'

(அ) எல்லாக் குடிமக்கட்கும்–ஆண், பெண் இரு பாலருக்கும் சமமாகவே–வாழ்க்கைக்குப் போதுமான அளவு வருவாய் பெற்றுக் கொள்ள உரிமை உள்ளது;

(ஆ) சமூகத்தின் உருப்பொருள் செல்வமனைத்தின் உரிமையும், கட்டுப்பாடும், நாட்டின் பொதுவான நலனுக்கு, உதவிடும் வகையில் பகிரப்பட வேண்டும்.

(இ) பொருளாதார அமைப்பு முறையின் செயல்பாட்டின் விளைவாக நாட்டின் உற்பத்திக் காரணிகளும் செல்வமும் குவிந்து விடாமல்–சமூக நலனுக்கு எதிராகாமல் இருக்க வேண்டும்.

அரசியல் சாசனம் தந்தருளிய உறுதி மொழிகளுடன், மக்களாட்சி முறை வழி நின்று, அமைதியாக, மகத்தான பொருளாதார மாற்றத்தை இந்தியாவில் கொண்டு வந்திடத் திட்ட காலங்களில் பெருமுயற்சி மேற்கொள்ளப்படுகின்றன. நாடு விடுதலை பெற எத்தகைய விழுமிய வழி முறைகள் கைக்கொள்ளப் பட்டனவோ, அந்த அளவிற்கு அத்தகைய வழி முறைகளும், ஆர்வமும் பொருளாதார மாற்றத்திற்கும் கையாள முயற்சி எடுக்கப் படுகிறது.

### இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் சில முக்கிய தோற்றக் கூறுகள் (சிறப்பியல்புகள்) (Some Important Features of Indian Economic Development)

விடுதலைக்குப் பின் இந்திய அரசு மேற்கொண்ட பல திறப் பட்ட பொருளாதார நடவடிக்கைகளின் காரணமாக நாட்டின் பொருளாதார வளர்ச்சி, மக்களின் தேவைக்கேற்ற அளவு பெருக வில்லை எனினும், போற்றத்தக்க வகையில் பல துறைகளில் அமைந்துள்ளது. பல்வேறு வகைப் பொருளாதாரக் கூறுகளை ஆராய்வதன் மூலம் இதனை நாம் தெரிந்து கொள்ளலாம்.

(1) தேசீய வருமானம்

ஒரு நாட்டின் தேசீய வருமானத்தை ஆராய்ந்தால் அந் நாட்டின் பொருளாதார நிலையையும், மக்களின் தலா வருமான நிலையையும் மக்களின் தலா வருமானத்தை அறிவதன் மூலமாக, நாட்டு மக்களின் பொருளாதார நிலையையும், வாழ்க்கைத் தரத்தை யும் உணர இயலும். நாட்டின் பல வகைத் துறைகளின் வளர்ச்சி பற்றி அறிந்து கொண்டு, எதிர்காலத்தில் அத்துறைகளின் சீரான வளர்ச்சிக்கு திட்டமிட இயலும். பொருளாதார திட்டமிடலை அடிப் படையாகக் கொண்ட நாடுகளுக்கு தேசீய வருமான ஆய்வு மிக இன்றியமையாதது என்பதனை இதன் மூலம் அறியலாம். மேலும், மற்ற நாடுகளின் வாழ்க்கைத் தரத்தையும், தேசீய வருமானத்தை யும் கண்டறிந்து, நம் நிலையோடு ஒப்பீடு செய்து, நமது பொருளா தார நிலையறிந்து, நம்மை உயர்த்திக் கொள்ள ஆக்க ரீதியான முயற்சிகள் மேற்கொள்ளலாம். எனவே தேசீய வருமானக் கணிப்பு மிக இன்றியமையாததாகிறது.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தின் போதுகூட பல தேசீய வருமானக் கணிப்புகள் மேற் கொள்ளப்பட்டன. ஆனால் அவை தனி நபர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள். அம்முயற்சிகளில் சில வருமாறு:

| எண் | | ஆண்டு | தலா வருமானம் ரூ. |
|---|---|---|---|
| i | தாதாபாய் நௌரோஜி | 1868 | 20 |
| ii | கர்சான் பிரபு | 1897–98 | 30 |
| iii | வில்லியம் டிக்பி (William Digby) | 1899 | 18 |
| iv | ஃபிண்ட்லே சிர்ராஸ் (Findlay Shirras) | 1911 | 49 |
| v | ஃபிண்ட்லே சிர்ராஸ் | 1921 | 107 |
| vi | ஃபிண்ட்லே சிர்ராஸ் | 1922 | 116 |
| vii | ஃபிண்ட்லே சிர்ராஸ் | 1931 | 163 |
| viii | சைமன் குழு அறிக்கை | | 116 |
| ix | V. K. R. V. ராவ் மதிப்பீடு | 1931–32 | 65 |
| x | V. K. R. V. ராவ் மதிப்பீடு | 1942–43 | 114 |

இதுவும் அடுத்த பக்கத்திலுள்ள மதிப்பீடுகளும் பல்வேறு காலங்களில் நடத்தப் பட்டாலும் அவற்றில் குறைகள் பல இருந் தமையால் அவற்றை முற்றும் நம்பகமானவையாக ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

| ஆண்டு | எம். முகர்ஜி மதிப்பீடு | அரோரா மற்றும் அய்யங்கார் மதிப்பீடு | கே. முகர்ஜி மதிப்பீடு | எஸ். ஜே. படேல் மதிப்பீடு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 1857 | 169 | ... | ... | ... |
| 1882 | 227 | ... | ... | ... |
| 1900 | 188 | 207 | 211 | 305 |
| 1945 | 255 | 209 | 259 | 274 |

நாடு விடுதலை பெற்ற பின்பே முறையான மதிப்பீடுகள் எடுக்கப்பட்டன. 1949ஆம் ஆண்டு ஆகஸ்டு 4ஆம் நாள் இந்திய அரசானது, பேராசிரியர் பி. ஸி. மகலனோபிஸ் (P.C. Mahalanobis), பேராசிரியர் டி.ஆர். காட்கில்(D.R. Gadgil), டாக்டர் வி.கே.ஆர்.வி. ராவ் ஆகியோர் உள்ள தேசீய வருமானக் குழுவை (National Income Committee) அமைத்தது. அக்குழு தனது முதல் அறிக்கையை 1951லும் இறுதி அறிக்கையை 1954லும் சமர்ப்பித்தது. அதன் பின்பு தேசீய வருமானத்தைக் கணிக்கும் பொறுப்பு 'மத்திய புள்ளி விவர அமைப்பிடத்திற்கு' (Central Statistical Orgnisation) ஒப்படைக்கப்பட்டது.

நமது தேசீய வருமானத்தைக் கணிக்கும்பொழுது (i) 1948-49ஆம் ஆண்டு விலைவாசிகளை அடிப்படையாகக் கொண்டும், (ii) 1960-61ஆம் ஆண்டு விலைவாசிகளை அடிப்படையாகக் கொண்டும், (iii) நடப்பு விலைவாசிகளை (Current Price) அடிப்படையாகக் கொண்டும் கணிப்பது வழக்கம்.

1948-49ஆம் ஆண்டு விலைவாசியை அடிப்படையாகக் கொண்டு கணிப்பதை 'நிலையான (1948-49) விலைவாசிகளின் படி' யான தேசீய வருமானம் என்பர் (National Income at constant, 1948-49 Price). அதனடிப்படையில் அமைந்த தேசீய வருமானம், தலா வருமானக் கணக்கினை அடுத்த பக்கத்தில் காணலாம்.

நமது தேசீய வருமானம் நடப்பு விலைப்படி கணிக்கப்பட்டதை பார்த்தோமானால், 1948-49 முதல் 1955-66 முடிய ரூ 8650 கோடியிலிருந்து ரூ 9980 கோடி வரை உயர்ந்துள்ளது. அதாவது, 15 சதவீதம்; ஆண்டொன்றுக்கு 8 சதவிகிதம். அதே போல இரண்டாம் திட்ட கால இறுதியில் ரூ 13294 கோடியாக

அதிகரித்தது. 3ஆம் திட்ட இறுதியில் ரூ 20,061 கோடியாக உயர்ந்தது; அதாவது, 1948-49 முதல் 1967-68 முடிய 219 சதவீதம் அதிகரித்துள்ளது ஆனால் 1948-49 ஆண்டு நிலையான விலைவாசிக் கணக்குப்படி பார்த்தால் 91 சதவீதம் மட்டுமே

| ஆண்டு | நிகர தேசீய ஆக்கம் (தேசீய வருமானம்) 1948–49 விலைப்படி (ரூ. கோடியில்) | தலா நிகர தேசீய ஆக்கம்–தலா வருமானம் (1948–49) விலைப்படி (ரூபாயில்) |
|---|---|---|
| 1948–49 | 8,650 | 249·6 |
| 1949–50 | 8,820 | 250·6 |
| 1950–51 | 8,850 | 247·5 |
| 1951–52 | 9,100 | 250·3 |
| 1952–53 | 9,460 | 255·7 |
| 1953–54 | 10,030 | 266·2 |
| 1954–55 | 10,280 | 267·8 |
| 1955–56 | 10,480 | 267·8 |
| 1956–57 | 11,000 | 275·6 |
| 1957–58 | 10,890 | 267·3 |
| 1958–59 | 11,650 | 280·1 |
| 1959–60 | 11,860 | 279·2 |
| 1960–61 | 12,730 | 293·3 |
| 1961–62 | 13,060 | 294·0 |
| 1962–63 | 13,310 | 291·9 |
| 1963–64 | 13,970 | 299·2 |
| 1964–65† | 15,000 | 313·7 |
| 1965–66† | 14,660 | 299·4 |
| 1966–67* | 14,950 | 298·8 |

† முதல் கணிப்பு (Preliminary)

* விரைவான மதிப்பீடு (Quick Estimate)

**Source:** Economic Survey. 1967-68, Government of India.

அதிகரித்துள்ளது. இவ்வாறு நடப்பு விலைவாசிக் கணக்குப்படி நோக்கினால் 219 சதவீதமும் நிலையான விலைவாசிக் கணக்குப்படி (at constant 1948–49) பார்த்தால் 91 சதவீதமுமே அதிகரித்துள்ளது. இரண்டு வகை விலைவாசிகளின் அடிப்படையில் அமைந்த இக் கணிப்புகளில் ஏன் இவ்வளவு வேறுபாடு என்ற வினா எழக் கூடும். இதற்கு ஒரே காரணம் நடப்புக் கணக்கின்

## 1960–61 முதல் தேசீய வருமானமும் தலா வருமானமும்

உற்பத்திச் செலவில் நிகர தேசீய உற்பத்தி (Net National Product at Factor Cost) (ரூபாய் கோடியில்)

| | 1960–61 | 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 | 1966-67 | 1967-68 | 1968-69 | 1969-70 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நடப்பு விலையில் | 13,294 | 14,050 | 14,873 | 17,094 | 20,061 | 20,621 | 23,903 | 28,374 | 28,678 | 31,174 |
| 1960–61 விலையில் | 13,294 | 13,763 | 14,045 | 14,845 | 15,917 | 15,021 | 15,243 | 16,660 | 17,057 | 17,955 |

தலா நிகர உற்பத்தி (ரூபாயில்) (Per Capita Net Product)

| | 1960-61 | 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 | 1966-67 | 1967-68 | 1968-69 | 1969-70 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நடப்பு விலையில் | 306·3 | 316·4 | 327·6 | 368·4 | 426·1 | 482·9 | 560·8 | 554·7 | 554·7 | 589·3 |
| 1960–61 விலையில் | 306·3 | 310·0 | 309·4 | 319·4 | 335·8 | 310·4 | 307·9 | 329·2 | 329·2 | 339·4 |

1990–61ஆம் ஆண்டு அடிப்படையாகக் கொண்ட நிகர தேசிய உற்பத்திக் குறியீட்டெண் :
(Index Number of NNP with 1960–61 as base)

| | 1960-61 | 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 | 1966-67 | 1967-68 | 1968-69 | 1969-70 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நடப்பு விலையில் | 100·0 | 105·7 | 111·9 | 128.6 | 150·9 | 155·1 | 179·8 | 213·4 | 215·7 | 234·5 |
| 1960-61 விலையில் | 100·0 | 103·5 | 105·6 | 111.7 | 119·7 | 113·0 | 114·7 | 125·3 | 128·3 | 135·1 |

1960-61ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்ட தலாநிகர தேசிய உற்பத்திக் குறியீட்டெண் :
(Index Number of per Capita NNP with 1960–61 as base)

| | 1960-61 | 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 | 1966-67 | 1967-68 | 1968-69 | 1969-70 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நடப்பு விலையில். | 100·0 | 103·3 | 107·0 | 120·3 | 138·2 | 139·1 | 157·7 | 157·7 | 181·1 | 192·4 |
| 1960-61 விலையில் | 100·0 | 101·2 | 101·0 | 104·4 | 109·6 | 101·3 | 100·5 | 107·5 | 107·7 | 110·8 |

நிகர தேசிய உற்பத்தி = தேசிய வருமானம்.

Source :– "Eastern Economist", Annual 1972–Statistical Profile Page: 1225.

தேசீய வருமானம் அதிக அளவு உயர்ந்துள்ளதாக தோன்றுவதற்கு விலைவாசிகள் உயர்ந்து செல்லும் போக்கேயாகும். விலைவாசிகளின் உயர்வுக்கு பண வீக்க நிலையே முழுக்காரணம் ஆகும். எனவே நமது தேசீய வருமானம் அதிகரித்துள்ளதாகத் தோன்றுவதற்குக் காரணம் விலைவாசிகளின் உயர்வும், பண வீக்க நிலையுமேயன்றி, பேரளவில் உண்மையாக பொருள்கள் மற்றும் பணிகளின் உற்பத்திப் பெருக்கம் அன்று.

**தலா வருமானத்தின் போக்கு**

| ஆண்டு | 1967–68ஆம் ஆண்டு விலைவாசி அடிப்படையில் | | நிரந்தர (1948-49) விலைவாசி அடிப்படையில் | |
|---|---|---|---|---|
| | ரூபாய் | குறியீட்டெண் | ரூபாய் | குறியீட்டெண் |
| 1948–49 | 249·6 | 100 | 249·6 | 100 |
| 1950–51 | 266·5 | 107 | 247·5 | 99 |
| 1955-56 | 255·0 | 100 | 267·8 | 107 |
| 1960–61 | 327·7 | 131 | 293·3 | 117 |
| 1965–66 | 423·9 | 170 | 301·4 | 121 |
| 1967–68 | 541·8 | 217 | 324·4 | 130 |

**Source : India -A Reference Annual, 1970, p. 170**

மேற்கண்ட பட்டியலை நோக்கும்பொழுது 1967-68ஆம் ஆண்டு விலைவாசிகள் அடிப்படையில் நாட்டின் தலா வருமான மானது ரூ. 249·6லிருந்து ரூ. 541·8க்கு, 1948–49லிருந்து 1967–68ஆம் ஆண்டில் உயர்ந்துள்ளது. ஏறத்தாழ 30 சதவீதம் மட்டுமே உயர்ந்துள்ளது. அதாவது மக்களின் வாழ்க்கைத்தரம் ஏறத்தாழ 19 ஆண்டுக் காலத்தில் 30 சதவீதம் மட்டுமே உயர்ந் துள்ளது. மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிட்டும் நாம் எய்தி யுள்ள நிலை சிறப்பானதல்ல.

பின் கண்ட விவரங்களை நோக்கும் பொழுது 1950-51 முதல் 1967–68 முடிய 16 ஆண்டு காலத்தில் தேசீய வருமானத்தில் வேளாண்மைத் துறையின் பங்கு 49 சதவீதத்திலிருந்து 41·1 சத வீதத்துக்குக் குறைந்துள்ளது. தொழில் துறையிலும் (இனம்-2) சற்று குறைந்துள்ளது. ஆனால் இக்கருத்தினை வைத்துக்கொண்டு நாட்டில் தொழில், வேளாண்மைத் துறைகளின் உற்பத்தி

குறைந்து விட்டதாக மதிப்பிடக் கூடாது. மொத்தத்தில் உற்பத்தி பெருகியிருப்பினும், இவற்றின் உற்பத்தி வேகம் ஒப்பு நோக்கில் குறைவானது.

துறை வாரியான பகுப்பு :-

அடிப்படை: 1948–49ஆம் ஆண்டு விலைவாசி

| எண் | துறைகள் | 1950–51 | 1960–61 | 1967–68 |
|---|---|---|---|---|
| 1 | வேளாண்மை | 49 0 | 46·3 | 41·1 |
| 2 | சுரங்க உற்பத்தி, சிற்றளவு உற்பத்தி | 16·7 | 16·5 | 16·4 |
| 3 | வணிகம், போக்குவரத்து செய்தித் தொடர்பு | 18·7 | 19·2 | 19·0 |
| 4 | பிறபணிகள் | 15·6 | 18·0 | 23·5 |
| | மொத்தம் | **100·0** | **100·0** | **100·0** |

**Source:** Central Statistical Organsation. Estimates of National Product (1960-61, 1969-70) as Quoted by Ruddar, Dutt & K. P. M. Sundharam in "Indian Economy" Ed 8. p. 55.

இனங்கள் எண் 3, 4ம் 'பணிகள் துறை'யைக் (Service Sector) குறிப்பிடுவன. அத்துறைகளில் நல்ல வளர்ச்சி வீதம் காணப்படுகிறது.

இந்தியாவில் நவீன வரலாற்றில் இந்த வளர்ச்சி வீதம் போற்றுதற்குரியதே ஆகும். டாக்டர் கே. என். ராஜ் அவர்கள் கூற்றுப்படி; 1950-51 முதல் இந்தியாவில் எய்தியுள்ள பொருளாதார வளர்ச்சி வீதம், பிரிட்டிஷ் நிர்வாகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ள வளர்ச்சி வீதத்தைவிட 2 முதல் 3 மடங்கு அதிகமாகும். இதன் விளைவாக கடந்த 13 ஆண்டுகளில் தேசிய வருமானத்தின் உயர்வு சதவீதம் இதற்கு முன்பு அரை நூற்றுண்டுக் காலத்தில் இந்தியாவில் ஏற்பட்ட வருமான சதவீதத்தை விட அதிகம். ஜப்பான் நாடு 19-ம் நூற்றுண்டிலும், 20ம் நூற்றுண்டின் முதல் கால் நூற்றுண்டிலும் மிகவும் விரைவாக வளர்ச்சி பெற்ற நாடு என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனாலும் அங்கு 1893 முதல் 1912 வரையுள்ள இடைக்காலத்தில் ஓராண்டு தேசிய வருமான வளர்ச்சி வீதம் 3 சதவீதமே. அதனைத் தொடர்ந்த 10 ஆண்டுகளில் கூட 4 சதவீதத்திற்குமேல் சென்றதில்லை. இதனை அடிப்படையாகக் கொண்டு ஆய்ந்தால் இந்தியாவில் கடந்த 15

ஆண்டுகளில் அடைந்துள்ள வளர்ச்சி வீதம் நிச்சயமாகச் சற்று திருப்தியளிக்கும் ஒரு விஷயமாகும்.'[1]

(2) **வேளாண்மைத்துறை உற்பத்தி**

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி வீதத்தை நிர்ணயிப்பதில் அந்நாட்டின் வேளாண்மைத் துறையின் வளர்ச்சி வீதம் பெரும் பங்கு வகிக்கிறது. பெருகிவரும் மக்கள் தொகையின் உணவுத் தேவைகளை ஈடுகட்டுவதிலும், பலதிறப்பட்ட நுகர்வோர், உற்பத்தியாளர் பொருட்களுக்கான கச்சாப் பொருட்களை வழங்குவதிலும் எண்ணற்ற தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு வழங்குவதிலும், வேளாண்மை வருமானத்தைப் பெருக்கி அதன் வழி தொழிற்சாலை பொருள்களுக்கான தேவையைப் பெருக்குவதிலும், சிலவகைப் பொருள்களை ஏற்றுமதி செய்து அன்னியச் செலாவணி பெறுவதிலும், வேளாண்மைத்துறை மிக முக்கிய பங்கு வகிக்கிறது. ஆகவே ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் அடிப்படை அந்நாட்டின் வேளாண்மைத் துறையின் வளர்ச்சியிலும், மறுமலர்ச்சியிலும் தான் உள்ளது.

ஆனல் நமது நாட்டில் வேளாண்மைத்துறையின் உற்பத்தி அளவோ மன நிறைவு தரத்தக்கதாக அமையவில்லை. இதனை கீழ்வரும் சில புள்ளி விவரங்கள் தெளிவாக்கும்.

**சராசரி விளைவு**

(ஒரு ஹெக்டேருக்கு 100 கிலோ கிராம் என்ற அளவில்)

| **நெல்** | | 100 கிலோ கிராம் |
|---|---|---|
| இந்தியா | ... | 12·8 |
| பாக்கிஸ்தான் | ... | 15·7 |
| தாய்லாந்து | ... | 17·2 |
| ஜப்பான் | ... | 50·9 |
| ஸ்பெய்ன் | ... | 63·6 |
| **கோதுமை** | | 100 கிலோ கிராம் |
| இந்தியா | ... | 8·2 |
| சோவியத் ரஷ்யா | ... | 14·4 |
| அமெரிக்கா | ... | 17·7 |
| கனடா | ... | 18·7 |
| பிரான்ஸ் | ... | 28·3 |
| டென்மார்க் | ... | 41·6 |

[1] 'Indian Economic Growth Performance and Prospects, Dr. K. N. Raj, P. 2.

| பருத்தி | | 100 கிலோ கிராம் |
|---|---|---|
| இந்தியா | ... | 1·1 |
| பாக்கிஸ்தான் | ... | 2·8 |
| அமெரிக்கா | ... | 5·4 |
| எகிப்து | ... | 5·9 |
| மெக்ஸிகோ | ... | 7·2 |
| சோவியத் ரஷ்யா | ... | 8·3 |
| இஸ்ரேல் | ... | 11·4 |

Source: "Planning in Agricultural Backwardness"—G.P. Mishra's essay—"Eastern Economist" Annual Number 1971.

சில முக்கிய பொருள்களின் விளைவு விவரங்கள் கீழே தரப் பட்டுள்ளன. பிற நாடுகளுடன் ஒப்பிடுகையில் நமது நாட்டின் நில உற்பத்தித்திறன் எவ்வளவு குறைவாக உள்ளது என்பதை அதிலிருந்து நாம் அறியலாம்.

சராசரி விளைவு

(ஒரு ஹெக்டேருக்கு கிலோ கிராமில்)

| நெல் | 1966 | 1968 |
|---|---|---|
| இந்தியா | 1290 | 1610 |
| ஜப்பான் | 5090 | 5720 |
| அமெரிக்கா | 4850 | 4960 |

| கோதுமை | 1966 | 1968 |
|---|---|---|
| இந்தியா | 890 | 1100 |
| இங்கிலாந்து | 3840 | 3550 |
| பிரான்ஸ் | 2830 | — |

| சோளம் | 1966 | 1968 |
|---|---|---|
| இந்தியா | 960 | 1000 |
| அமெரிக்கா | 4540 | 4980 |
| பிரான்ஸ் | 4000 | 5260 |

**பருத்தி**

| | 1966 | 1968 |
|---|---|---|
| இந்தியா | 110 | 120 |
| சோவியத் ரஷ்யா | 830 | 830 |
| மெக்ஸிகோ | 790 | 730 |

**வேர்க்கடலை**

| | 1966 | 1968 |
|---|---|---|
| இந்தியா | 600 | 650 |
| ஜப்பான் | 2140 | 2070 |
| அமெரிக்கா | 1900 | 1980 |

**Source :** "Indian Agriculture in Brief" 1968 & 1971.

நாடு விடுதலை பெற்ற பின்பு கூட நமது வேளாண்மையின் நிலை மிகவும் பின்னடைந்துள்ளது. விடுதலைக்கு முன்போ இதைவிட மோசமான நிலையில் வேளாண்மைத்துறை இருந்தது. இந் நிலைக்கு காரணங்கள் என்ன?

(i) 72 சதவீத மக்கள் விவசாயத் துறையைச் சார்ந்துள்ளனர். பெருகிவரும் மக்கள் தொகையால் இந்நிலை மேலும் சிக்கலாகிக் கொண்டே வருகிறது.

(ii) உட்பிரிவும் சிதற விடுதலும் (Sub division and fragmentation) இந்தியாவில் மிக அதிகம். மக்கள் தொகைப் பெருக்கத்தால், விவசாயத்தை நம்பி நிற்போர் எண்ணிக்கை பெருகுவதும், நாட்டில் நிலவும் வாரீசுரிமைச்சட்டங்களும் (Laws of Inheritance இதற்கு மூல காரணங்களாக அமைகின்றன.

(iii) நில உரிமை முறை ஒரு முக்கிய காரணியாக இருந்தது. ஜமீன்தாரி முறையால் நிலத்தில் உரிமை யில்லா மக்கள் உழைக்கும் உற்சாகத்தை இழந்தனர். உற்சாகமும், நம்பிக்கையும், குன்றிய மக்களிடம், உற்பத்தியையோ, திறனையோ, எதிர் பார்க்க இயலுமா?

(iv) பழமையான உற்பத்தி முறையால் கிட்டுகின்ற விளைவு குறைவாகவே இருக்கிறது. தேய்ந்துபோன மரக்கலப்பை, ஒடிந்துபோன சாட்டைக் குச்சி, இற்றுப் போன கவலை ஏற்றம், எலும்பும் தோலுமான இரு காளைகள் இவைகள் தாம் சராசரி இந்திய விவசாயிகளின் மூலதனம் சொத்து. நவீன உழு கலன்களை அவன் அறியான். அல்லது வாங்குவதற்கு சக்தியில்லாதவன். வீரிய

வித்துக்களையோ, இரசாயன உரங்களையோ அவன் பயன்படுத்துவ தில்லை. ஆக, நவீன விவசாய முறை அறிவு இன்மையோ அல்லது அவைகளைப் பெற வசதியின்மையோ உள்ள சூழ்நிலையில் அவன் நடத்தும் வேளாண்மையில் உற்பத்தி பெருக வாய்ப்பில்லை.

(v) நீர்ப்பாசன வசதியின்மையையும் இங்கு குறிப்பிட வேண்டும். வேளாண்மைக்குத் தகுதி வாய்ந்த நிலப் பரப்பில் இன்றும் கூட 20 சதவீதப் பகுதிக்கே நீர்ப்பாசன வசதி கிட்டி யுள்ளது. பிற பகுதிகள் பருவ மழையை நம்பியுள்ளன. 'இந்திய விவசாயம் பருவமழையோடு நடத்தப்படும் ஒரு சூதாட்டம்' (Indian Agriculture is a gamble in the monsoons)' என்று அருமையாகச் சொன்னார்கள்.

(vi) நிதி வசதியின்மை அடுத்த ஒரு காரணியாகும். 'இந்திய விவசாயிகள் கடனிலே பிறந்து, கடனிலே வாழ்ந்து, உழன்று, கடனிலே மடிந்து, கடனையே தம் வாரிசுகட்கும் விட்டுச் செல் கின்றனர்' (The Indian farmer is born in debt, lives in debt, dies in debt and bequeaths the debt') எனப்படும் கூற்று அனைவரும் அறிந்த பழமொழியாகவே மாறிவிட்டது.

(vii) இத்தகைய விவசாயிகள் பழமை விரும்பிகள், அறியாமை, கல்வியின்மை, மூடநம்பிக்கை என்ற சேற்றிலே புதைந்து, புரை யோடிப் போன வாழ்க்கையை நடத்துகின்றனர். இத்தகைய இடையூறுகள் அவர்களின் வாழ்க்கையையும், பொருளாதார முன்னேற்றத்தையும் தடுக்கின்றன. நவீன உலகத்தின் விஞ்ஞான முன்னேற்றத்திற்கு ஈடு கொடுக்க முடியாத நிலையில் விவசாயத்தை நவீன மயமாக்க முடியாது தவிக்கின்றனர்.

இத்தகைய காரணங்கள் பலவற்றால் நமது வேளாண்மை மிகவும் பின் தங்கிய நிலையில் இருந்தது. நாடு விடுதலை பெற்ற பின்பு, ஐந்தாண்டுத் திட்டங்களின் வழியாக, வேளாண்மைத் துறையின் குறைகள் பல களையப்பட்டு, தனது உணவுத் தேவைக்கு கூட வெளி நாட்டாரை நம்பி நின்ற நிலைமாறி, உணவில் தன்னிறைவு பெற்ற நிலை இப்பொழுது தோன்றியுள்ளது. வேளாண்மைத் துறையின் அத்தகைய வளர்ச்சி வரலாற்றை இங்கே காணலாம்.

### முதல் ஐந்தாண்டுத் திட்ட காலம்

முதல் ஐந்தாண்டுத் திட்டம் முழுக்க, முழுக்க வேளாண்மை திட்டமாக உருவாக்கப்பட்டது என்பது அனைவரும் அறிந்த ஓர் உண்மை. பொதுத் துறையின் மொத்த முதலீட்டுத் தொகை

யாகிய ரூ 1960 கோடியில் ரூ 601 கோடி விவசாயத்திற்கு அதனைச் சார்ந்த துறைகளின் வளர்ச்சிக்கும் ஒதுக்கப்பட்டது. இதில் நீர்ப்பாசன வசதிக்காக ரூ 310 கோடி (அல்லது மொத்த முதலீட்டில் 16 சதவீதம்) செலவிடப்பட்டது. எஞ்சிய ரூ 291 கோடியானது (அதாவது மொத்தச் செலவீட்டில் 15 சதவிதம்) விவசாய வளர்ச்சி மற்றும் சமுதாய வளர்ச்சித் திட்டங்களுக்கு செலவிடப்பட்டது.

இத் திட்ட காலத்தில் வேளாண்மைத்துறை வளர்ச்சிக்கான இலக்குகள் கீழ் வருமாறு நிர்ணயிக்கப்பட்டன.

| | | |
|---|---|---|
| (i) | உணவு உற்பத்திப் பெருக்கம் | 14 சதவீதம் |
| (ii) | எண்ணெய் வித்துக்கள் பெருக்கம் | 8 சதவீதம் |
| (iii) | கரும்பு உற்பத்திப் பெருக்கம் | 12 சதவீதம் |
| (iv) | பருத்தி உற்பத்திப் பெருக்கம் | 43 சதவீதம் |
| (v) | சணல் உற்பத்திப் பெருக்கம் | 61 சதவீதம் |

இவ்விலக்குகளை எய்துதற்காக நிலச் சீர்திருத்தங்கள் கூட்டுறவு இயக்க நிறுவனங்கள் அமைப்பு, சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், நீர்ப்பாசன வளர்ச்சி, உரங்கள், விதைகள் வழங்கல் வகுக்கப்பட்டன.

சில இலக்குகளும் சாதனைகளும்

| வ. எண். | வினைபொருள் | 1950–51ல் உற்பத்தி | அதிகரிக்க திட்டமிடப் பட்ட அளவு | உற்பத்தி இலக்கு 1955-56ல் | உண்மை உற்பத்தி அளவு 1955–56ல் | இலக்கினை விட அதிக உற்பத்தி (+) அல்லது குறைந்த உற்பத்தி (—) |
|---|---|---|---|---|---|---|
| | | | (மில்லியன் டன்களில்) | | | |
| 1. | உணவுப் பொருள்கள் | 54.0 | 7.6 | 61.6 | 65.80 | + 4. 2 |
| 2. | முக்கிய எண்ணெய் வித்துக்கள் | 5.1 | 0.4 | 5.5 | 5.64 | +0. 1 |
| 3. | கரும்பு | 5.6 | 0.7 | 6.3 | 5.98 | – 0.32 |
| | | | (மில்லியன் பேல்கள்) | | | |
| 4. | பருத்தி | 2 9 | i.3 | 4.2 | 4.00 | – 0. 2 |
| 5. | கச்சாச் சணல் | 3.3 | 2.1 | 5.4 | 4.20 | – 1. 2 |

மேற்குறிப்பிட்ட சாதனைகளை விட, கீழ்க்கண்ட வேறுசில, முக்கிய சாதனைகளும் எய்தப்பட்டன.

(i) நிலத்தைப் பண்படுத்தி வேளாண்மைக்கு கொண்டு வந்தது (Land Reclamation) – 12 லட்சம் ஏக்கர்கள்

(ii) புதிதாக நீர்ப்பாசன வசதி பெற்ற நிலங்கள்-14 மில்லியன் ஏக்கர்கள்.

இதில் 10 மில்லியன் ஏக்கர்கள் சிற்றளவு நீர்ப்பாசனக் திட்டத்திலும் 4 மில்லியன் ஏக்கர்கள் பேரளவு நீர்ப்பாசனத் திட்டத்திலும் அடங்கும்.

(iii) **உரங்கள் பயன்படுத்தல்**

நைட்ரஜன் வகை உரங்கள் - 100 சதவீதம் அதிகரிப்பு

பாஸ்பேட் வகை உரங்கள் - 80 சதவீதம் அதிகரிப்பு

(iv) சமுதாய வளர்ச்சித்திட்டம் :-

மொத்த இந்தியக்கிராமங்களில் 40 சதவீதம் கிராமக்களுக்கு விஸ்தரிப்பு.

(v) புதிய உற்பத்தி முறை

நெல் உற்பத்தியில் சப்பானிய சாகுபடி முறை புகுத்தப் பட்டது.

உணவுத்துறையில் ஏற்பட்டசாதனை மிகவும் போற்றுதற் குரியது ஏனெனில் 1951-ல் 4·73 மில்லியன் டன்கள் உணவு இறக்குமதி செய்த நாம், 1955-ல் 0·59 மில்லியன் டன்களுக்கு உணவு இறக்குமதி அளவினைக்குறைத்துவிட்டோம். இதன் காரணமாக நாட்டில் பணவீக்க நிலை மட்டுப்படுத்தப்பட்டு நிலையான பொருளாதார வளர்ச்சிக்கான அடிப்படை வகுக்கப் பட்டது எனலாம். இத்தகைய சாதனைக்கு அடிப்படையாக அமைந்தது, சிற்றளவு நீர்ப்பாசன வசதிகள் பெருக்கமா, உரங்களை அதிகமாக பயன் படுத்தியமையா, நிலங்களை பண்படுத்தியமையா, நிலச்சீர்திருத்தங்களா என்பதை திட்டவட்டமாக கூற இயலாது. மேற்கூறிய மனித முயற்சிகளின் ஒட்டு மொத்தமான உழைப்பும், உறுதுணையாக நின்ற சாதகமான இயற்கைச் சூழ்நிலையும் மொத்தத்தில் நமக்கு நல்ல பயனைத்தந்தன.

**இரண்டாம் ஐந்தாண்டுத்திட்ட காலம்**

முதல் திட்டகாலத்தில் வேளாண்மைத்துறைக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டு நாட்டின் விவசாயத்துறை வலுப் படுத்தப்பட்டது இதனல் நமது திட்டக்குழுவின் சிந்தனை இரண்டாம் திட்ட காலத்தில் தொழில்துறையின் வளர்ச்சியிலும், 'அனைவருக்கும் சமமான வாய்ப்பினை வழங்குதல்' என்ற கருத்திலும் திரும்பியது என்று கூறலாம். இருப்பினும் நாட்டின் ஜீவநாடியான வேளாண்மைத்துறை அடியோடு புறக்கணிக்கப் பட்டுவிடவில்லை. குறைந்த அளவு சதவீத முதலீட்டுத்தொகை கொண்டு நிறைந்த அளவு எய்திட முயற்சிக்கப்பட்டது எனலாம்.

பொதுத்துறையின் மொத்தத் தொகையான ரூ 4600 கோடி யில் ரூ 950 கோடியானது 'இத்திட்ட காலத்தில் வேளாண்மைத் துறைக்கு ஒதுக்கப்பட்டது எனலாம். மொத்த முதலீட்டில் இது 20 சதவீதமாகும் (முதல் திட்ட காலத்தில் இச்சதவீதம் 31 என்பது நினைவிருக்கலாம்). ஆரம்பத்தில் விவசாயத்துறைக்கு, மொத்த முதலீட்டுத் தொகையாகிய ரூ 4800 கோடியில் ரூ 1054 கோடி (அதாவது 22 சதவீதம், ஒதுக்குவதாக தீர்மானம் இருந்தது. எனினும் பின்பு மாற்றியமைக்கப்பட்ட தொகை ரூ 950 கோடியில், நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு ரூ 420 கோடியும் வேளாண்மை மற்றும் சமுதாய வளர்ச்சித் திட்டங்களுக்கு ரூ 530 கோடியும் செலவிட்டது.

**சில இலக்குகள்**

(i) உணவு உற்பத்திப் பெருக்கம் 24 சதவீதம்

(ii) எண்ணெய் வித்துகள் உற்பத்திப் பெருக்கம் 33 சதவீதம்

(iii) கரும்பு உற்பத்திப் பெருக்கம் 30 சதவீதம்

(iv) பருத்தி உற்பத்திப் பெருக்கம் 63 சதவீதம்

(v) கச்சாச்சணல் உற்பத்திப் பெருக்கம் 31 சதவீதம்

(vi) நீர்ப்பாசன வசதிகள் அதிகரிப்பு 21 மில்லியன் ஏக்கர் கள்

பேரளவு நீர்ப்பாசனத் திட்டங்கள் 12 மில்லியன் ஏக்கர்கள்

சிற்றளவு நீர்பாசன திட்டங்கள் 9 மில்லியன் ஏக்கர்கள்

ஆக, 1960-61ல் 88 மில்லியன் ஏக்கர்கட்கு நாட்டில் நீர்ப் பாசன வசதி கிட்டச் செய்தல்.

(vii) சமுதாய வளர்ச்சி, தேசிய விஸ்தரிப்புத் திட்டங்கள் 1120 திட்டங்களிலிருந்து 4920க்கு உயர்த்தல்

**சில இலக்குகளும், சாதனைகளும்**

| வ. எண் | விளை பொருள்கள் | 1955-56ல் உற்பத்தி நிலை | 1960-61க்கு இலக்கு | 1960-61ல் உண்மை உற்பத்தி நிலை | இலக்கினை விட அதிக உற்பத்தி (+) அல்லது குறைந்த உற்பத்தி (—) |
|---|---|---|---|---|---|
| | | (மில்லியன் டன்கள்) | | | |
| 1 | உணவுப் பொருள்கள் | 65·8 | 80·5 | 79·7 | − 0·8 |
| 2 | எண்ணெய் வித்துக்கள் | 5·6 | 7·6 | 6·5 | − 1·1 |
| 3 | கரும்பு | 59·8 | 7·8 | 10·4 | + 2·6 |
| | | (மில்லியன் பேல்கள்) | | | |
| 4 | பருத்தி | 4·0 | 6·5 | 5·4 | − 1·1 |
| 5 | கச்சாச் சணல் | 4·2 | 5·5 | 4·0 | − 1.5 |

வேறு சில முக்கிய சாதனைகள் வருமாறு :

(i) நீர்ப்பாசன வசதிகள்

திட்ட இலக்கான 21 மில்லியன் ஏக்கர்களுக்குப்பதில், 15·9 மில்லியன் ஏக்கர்கள் தாம் நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றன. இதன் விளைவாக 1960-61ல் நாட்டில் 88 மில்லியன் ஏக்கர்களுக்குப்பதிலாக, 70 மில்லியன் ஏக்கர்கள் மட்டுமே நீர்ப்பாசன வசதி பெற்றன.

(ii) நிலங்களைப் பண்படுத்தல் 15 மில்லியன் ஏக்கர்கள்

(iii) இயந்திரங்களை பயன் படுத்தி வேளாண்மை செய்யப் பட்ட நிலங்கள் 5 லட்சம் ஏக்கர்கள்

(iv) விதைப் பண்ணைகள்:- 4000

(v) உரங்களைப் பயன் படுத்தல்—2,30,000 டன்கள்.

இவைகட்கு எல்லாம் மேலாக நீண்ட காலத்தில் இந்திய வேளாண்மைத்துறைக்கு பயன்படவல்ல நில உச்சவரம்புச் சட்டங்கள், பண்ணையாள் உரிமைச் சட்டங்கள், நில இணைப்புச் சட்டங்கள் (Consolidation of Holdings) போன்ற முக்கியமான

நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டு வரப்பட்டன. மேலும் கூட்டுறவுப் பண்ணைகள் வளர்ச்சிக்காக, 'தேசீய கூட்டுறவுப் பண்ணை வாரியம்' (National Co-operative Farming Board) ஒன்றும் அமைக்கப்பட்டது.

சில முக்கியமான விளை பொருள்களின் சாதனைப்பட்டியலை நோக்கிடும் பொழுது, கரும்பு உற்பத்தி தவிர, பிற வகை வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி திட்ட இலக்கினைவிட குறைவாக உள்ளதை அறிய இயலும். வேளாண்மை வளர்ச்சித் திட்டங்கட்கு முதலிடம் அளிக்காமல், கனரகத் தொழில்களின் வளர்ச்சிக்கு முதலிடம் அளித்தமையே இதற்கு காரணம் என்ற குற்றச்சாட்டு எழுந்ததுண்டு. ஆனால் திட்டக்குழு கூறியது போல, தொழில்துறையின் வளர்ச்சி, மக்களின் வருமான உயர்வு ஆகிய காரணங்களினால்தான், உணவுப் பொருள்கள் மற்றும் கச்சாப் பொருள்களின் தேவை உயர்ந்தது எனலாம்; இதன் காரணமாகவே இரண்டாம் திட்டத்தில் உண்மையாகவே வேளாண்மைத்துறை வளர்ச்சி ஏற்பட்டும், அதனை உணர இயலாமற் போனது.

திட்ட இலக்குகளை வேளாண்மைத்துறையில் நிறைவேற்ற இயலாமற் போனதால் சில பின் விளைவுகளும் ஏற்பட்டன.

முதலாவதாக, நாட்டில் விலைவாசிகள் உயர்ந்து கொண்டே சென்றன. அனைத்துவகையான, பொருள்களின் விளைவுகளும் 35 சதவீதம் அதிகரித்தன. தானியங்கள், பருப்பு வகைப்பொருள் களின் விலைகள் முறையே 37 சதவீதமும் 50 சதவீதமும் உயர்ந்தன. எண்ணெய் வித்துக்களின் விலை 76 சதவீதமும், சர்க்கரை விலை 61 சதவீதமும் உயர்ந்தன. இத்தகைய விலைவாசி உயர்வினால் பணத்தின் மதிப்புக் குறைந்தது, ஊதிய உயர்வுக் கோரிக்கை பல பகுதிகளில் எழுந்தது.

இரண்டாவதாக மிக மிகக் குறைந்த அளவிற்குக் குறைக்கப் பட்டிருந்த உணவுப் பொருள்களின் இறக்குமதி, இரண்டாம் திட்ட காலத்தில் அதிகரித்தது. இத்தகைய உணவு இறக்குமதி காரணமாக, பற்பல இன்னல்களுக்கிடையே சேகரிக்கப்பட்ட அன்னியச் செலாவணி மிகவும் குறைந்து விட்டது.

### மூன்றும் திட்டகாலம்

இரண்டாம் திட்டகால இலக்குகள் அனைத்தும் பூரணமாக அடைய இயலாத காரணத்தால் மூன்றும் திட்டக் காலத்தில் வேளாண்மைத்துறை வளர்ச்சிக்கு முதல் முக்கியத்துவமும்,

தொழில்துறை வளர்ச்சிக்கு இரண்டாம் முக்கியத்துவமும் நல்கப் பட்டது.

பொதுத்துறையில் மொத்த மூலதனம் ரூ 7,500 கோடியில் உண்மையில் செலவிட தீர்மானிக்கப்பட்ட தொகை ரூ 6,300 கோடி ஆகும். அதில் வேளாண்மைதுறைக்கு ரூ 1,310 கோடி செலவிடத் தீர்மானமாயிற்று ஆனால் நடைமுறையில் செலவிடப்பட்ட மொத்த தொகை ரூ 8577 கோடியாகவும் விவசாயத்துறைக்குச் செலவிடப்பட்டது ரூ 1,754 கோடியாகவும் அமைந்தது. அதன் விவரங்களை இப்பட்டியல் விளக்கும்.

மூன்றும் திட்ட காலத்தில் பொதுத்துறை மூலமாக வேளாண்மைத்துறையில் செலவிடப்பட்ட தொகை

ரூபாய் கோடியில்

| | செலவிட தீர் மானிக்கப்பட்ட தொகை | உண்மையில் செலவிட்ட தொகை |
|---|---|---|
| மொத்த முதலீடு | 6,300 | 8,577 |
| வேளாண்மை, மற்றும் சமுதாய வளர்ச்சி திட்டங்கள் | 660 | 1,089 |
| நீர்ப்பாசனம் | 650 | 665 |
| வேளாண்மைக்கு மொத்தம் | 1,310 | 1,754 |

**Source:** Fourth Five year Plan (1969-74) pp.65-66

மூன்றும் திட்ட காலத்தில் உணவுப் பொருள்கள் உற்பத்தியை 30 சதவீதமும், இதரவகை வேளாண்மை பொருள்கள் உற்பத்தியை 31 சதவீதமும் அதிகரிப்பதென்று தீர்மானிக்கப் பட்டது. இதனை நிறைவேற்றுவதற்காக நிலத்தைப் பண்படுத்தும் திட்டங்கள், மண்வளக்காப்புத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள், உரம், விதை, கருவிகள் வழங்கும் திட்டங்கள், பயிர் பாதுகாப்புத் திட்டங்கள், விஞ்ஞான பூர்வமான சாகுபடித் திட்டங்கள் செயல் படுத்துவதெனவும் முடிவாயிற்று. வேளாண்மைத்துறை நிறுவனங்களை ஒருங்கிணைத்து விவசாயக் கூட்டுறவு, சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் நீர்ப்பாசனம் ஆகிய துறைகளை ஒருங்கிணைந்த முறையில் செயல்படச் செய்து சிறந்த சாதனைகளை எட்டுவதென்று தீர்மானித்தது. மற்றும் சில முக்கியமான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப் பட்டன.

(i) விவசாயக் கருவிகளின் தேவைக்கான இரும்பு எஃகினைப் போதுமான அளவு அளித்தல்.

(ii) விவசாயக்கருவிகள் வளர்ச்சிக்கு ஒவ்வொரு மாநிலத்திலும், ஆய்வுக் கூடங்கள், பணிமனைகள், பயிற்சி நிலையங்களை நிறுவுதல்.

(iii) நவீன விவசாயக் கருவிகளைப்பரப்பும் மூகமாக மாவட்ட சமூதாய வளர்ச்சித் திட்டங்கள் மூலமாக மாநில, அரசுகள் செயல்முறை விளக்க நடவடிக்கைகளை விஸ்தரித்தல்.

(iv) மாநில வேளாண்மைத்துறையின், வேளாண்மைப் பொறியியல் துறையை வலுவாக்குதல்.

(v) ஒவ்வொரு பயிற்சி நிலையத்திலும், விவசாயப் பணி மனைகள், திருத்திய நவீனக் கருவிகள், அளிப்பினைப் பெருக்க. கடன் வசதிகளை வழங்க உறுதி அளித்தல்.

**சில இலக்குகள்**

| | |
|---|---|
| (i) நெல் உற்பத்திப் பெருக்கம் | 27.5 சதவீதம் |
| (ii) கோதுமை உற்பத்திப் பெருக்கம் | 20 சதவீதம் |
| (iii) எண்ணெய் வித்துக்கள் பெருக்கம் | 11 சதவீதம் |
| (iv) பருத்தி உற்பத்திப் பெருக்கம் | 14 சதவீதம் |
| (v) கச்சாச் சணல் உற்பத்திப் பெருக்கம் | 16 சதவீதம் |
| (vi) கரும்பு உற்பத்திப் பெருக்கம் | 18 சதவீதம் |
| (vii) நீர்ப்பாசன வசதி அதிகரிப்பு | 25.6 மில்லியன் ஏக்கர்கள் |
| பேரளவு நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலமாக | 12.8 மில்லியன் ஏக்கர்கள் |
| சிற்றளவு நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலமாக | 12.8 மில்லியன் ஏக்கர்கள் |
| (viii) மண்வளப் பாதுகாப்பு (Soil conservation) | 3.3 மில்லியன் ஏக்கர்கள் |
| (xi) நிலத்தைப் பண்படுத்தல் | 3.8 மில்லியன் ஏக்கர்கள் |
| (x) திருத்திய வித்துக்களை பயன்படுத்தல் | 148 மில்லியன் ஏக்கர்கள் |

(xi) உரங்கள் பயன்படுத்தல்

| | |
|---|---|
| (1) நைட்ரஜன் வகை உரங்கள் | 1 மில்லியன் டன் |
| (2) பாஸ்பேட் வகை உரங்கள் | 0.4 மில்லியன் டன் |
| (3) பொட்டாசியம் வகை உரங்கள் | 0.2 மில்லியன் டன் |
| மொத்தம் | 1.6 மில்லியன் டன் |

(xii) பசுந்தழை உரங்கள் பயன்படுத்தல் 39 மில்லியன் ஏக்கர்கள்

(xiii) பயிர் பாதுகாப்புத் திட்டங்கள் 50 மில்லியன் ஏக்கர்கள்

(xiv) கூட்டுறவுக் கடன் வசதிகளை அதிகரித்தல் ரூ 680 கோடி

(1) குறுகிய காலக் கடன் ரூ 530 கோடி

(2) நீண்ட காலக் கடன் ரூ 150 கோடி

(xv) சமுதாய வளர்ச்சித் திட்டத்தினை அக்டோபர் 1963க்குள் நாடு முழுவதும் விரிவு படுத்தல்

(xvi) சேவைக் கூட்டுறவுகளை (Service Co-operation) அதிகரித்தல்

**Source:** Third Five year Plan; Summary, pp. 69-71

இத்திட்டங்களைப் பூரணமாக நிறைவேற்றிவிட்டால் நமது நாடு உணவில் தன்னிறைவையும் சுய வளர்ச்சிப் பொருளாதார நிலையையும் அடைந்து விடும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் எதிர்பாராத விதமாக 1962, 1965 ஆகிய இரு ஆண்டு களில் நமது நாடு இரு முறை அந்நியத் தாக்குதல்களுக்கு உட் பட்டது. இதன் விளைவாக வேளாண்மைத் துறையின் திட்டமிட்ட இலக்குகளை எட்ட இயலவில்லை.

ஆரம்ப ஈராண்டுகளில் உற்பத்தியின் போக்கு நன்கு அமைந்திருந்தாலும், 1965-66ல் நாட்டில் ஏற்பட்ட பஞ்சம், வறட்சி நிலைமையாலும், சீனு, பாக்கிஸ்தான் யுத்தங்களினுலும், 1965-66 ல் உற்பத்தி அளவு குறைந்தது. எனவே மூன்றும் திட்டம், வேளாண்மைத் துறையில் மிகப் பெரிய தோல்வியைத் தழுவிக் கொண்டது எனலாம். உணவுப் பொருள்கள் பற்றுக் குறையால் விலைவாசிகள் உயர்ந்தன. எனவே ரூ 1,100 கோடி பெறுமான உணவுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. எனவே நமது அன்னியச் செலாவணி பிரச்சினை மிகவும் சிக்க லானதாக மாறியது.

**சாதனைகள்**

| வ. எண் | விளை பொருள்கள் | 1965–66 இலக்கு | 1965–66 சாதனை |
|---|---|---|---|
| | | (மில்லியன் டன்கள்) | |
| 1 | உணவுப் பொருள்கள் | 100·0 | 72·3 |
| 2 | எண்ணெய் வித்துகள் | 9·8 | 6·1 |
| 3 | கரும்பு | 10·0 | 11·8 |
| | | (மில்லியன் பேல்கள்) | |
| 4 | பருத்தி | 7·0 | 4·7 |
| 5 | கச்சாச் சணல் | 6·2 | 4·5 |

Source: Economic Survey 1966-67

**ஓராண்டுத் திட்டங்கள்** (1966-67, 1967-68, 1968-69)

மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை செயல்படுத்திய பின்பு உடனடியாக நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தை எடுத்துக் கொள்ளும் பணி நிறுத்தி வைக்கப்பட்டது. மாறாக மூன்று ஓராண்டுத் திட்டங்கள் மேற் கொள்ளப்பட்டன.

இம் மூன்று ஓராண்டுத் திட்டங்களிலும் மொத்தம் ரூ 6,757 கோடி செலவிடப்பட்டது. அதில் வேளாண்மைத் துறை வளர்ச்சித் திட்டங்களுக்கு ரூ 1,624 கோடி செலவிடப்பட்டது. அதாவது மொத்தச் செலவுத் தொகையில் 24 சதவீதம். இதில்

**ஓராண்டுத் திட்ட காலங்களில் வேளாண்மைத் துறை உற்பத்தி**

| வ. எண். | விளை பொருள்கள் | 1965–66–ல் உண்மை உற்பத்தி | 1967–68–ல் உண்மை உற்பத்தி | 1968–69–ல் மதிப்பிடப் பட்ட உற்பத்தி |
|---|---|---|---|---|
| | | (மில்லியன் டன்கள்) | | |
| 1 | உணவுப் பொருள் | 72.3 | 95.0 | 94.0 |
| 2 | எண்ணெய் வித்துக்கள் | 6.4 | 8.3 | 6.8 |
| 3 | கரும்பு | 12.1 | 10.0 | 12.8 |
| | | (மில்லியன் பேல்கள்) | | |
| 4 | பருத்தி | 4.8 | 5.5 | 5.1 |
| 5 | கச்சாச் சணல் | 4.5 | 6.3 | 2.9 |

**Source: Indian Agriculture in Brief 1971.**

ரூ 1,167 கோடியானது விவசாயம் மற்றும் சமுதாய வளர்ச்சித் திட்டங்களுக்கும், ரூ 457 கோடியானது நீர்ப்பாசனத் திட்டங் களுக்குமாகச் செலவிடப்பட்டது.

இத்திட்ட காலங்களில் சிற்றளவு நீர்ப்பாசனத் திட்டங்களுக் கும், இராயன உரம், உயர் விளைச்சல் தரும் வீரிய விதைகள் போன்ற திட்டங்களுக்கும் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. இத்தோடு சாதகமான பருவ மழை வசதியும் கிட்டியமையால், நமது உணவு உற்பத்தியானது 1967–68ல் 95.6 மில்லியன் டன்கள் என்ற அளவை எட்டியது.

**நான்காம் ஐந்தாண்டுத் திட்ட காலம்**

புதிய நான்காம் ஐந்தாண்டுத் திட்ட நகல்படி பொதுத் துறை யின் மொத்தச் செலவான ரூ 15,092 கோடியில் 24 சதவிகித மான ரூ 3817 கோடி செலவிடத் தீர்மானம் ஆயிற்று. இதில் வேளாண்மை மற்றும் அது சார்பான திட்டங்களுக்காக ரூ 2720 கோடியும், வெள்ளக்கட்டுப்பாடு மற்றும் நீர்ப்பாசனத் திட்டங் கட்கு ரூ 1,097 கோடியும் செலவிட திட்டமிடப்பட்டுள்ளது.

**சில இலக்குகள்**

| வ. எண் | விளை பொருள்கள் | 1968–69 அடிப்படை உற்பத்தி நிலை | நான்காம் திட்ட இலக்கு | அதிகரிப் பின் சதவீதம் |
|---|---|---|---|---|
| | | (மில்லியன் டன்கள்) | | |
| 1 | உணவுப் பொருள்கள் | 98 | 129 | 31 |
| 2 | எண்ணெய் வித்துக்கள் | 8.5 | 10·5 | 24 |
| 3 | கரும்பு | 12 | 15 | 25 |
| | | (மில்லியன் பேல்கள்) | | |
| 4 | பருத்தி | 6 | 8 | 33 |
| 5 | கச்சாச் சணல் | 6.2 | 7·4 | 19 |

**Source :** Fourth Five year Plan 1969–74, p. 211

மற்றும், கீழ்க்கண்ட இலக்குகளும் நிர்ணயிக்கப்பட்டன. (அதிகப்படியான அளவு)

(i) பலபோகப் பயிர்ச்சாகுபடி (Multiple Cropping) — 9 மில்லியன் ஹெக்டேர்கள்

(ii) மண்வளப் பாதுகாப்பு — 5.6 ,,

(iii) நிலத்தைப் பண்படுத்தல் 1 மில்லியன் ஹெக்டேர்கள்

(iv) பேரளவு நடுத்தர நீர்ப்பாசன வசதி 4.2 ,,

(v) சிற்றளவு நீர்ப்பாசன வசதி 7.2 ,,

**Source:** Fourth Five year Plan (1969-74), p 122

(vi) திருத்திய வித்துகள் பயன்படுத்தல் 72 ,,

(vii) உரங்கள் பயன்படுத்தல்

(1) நைட்ரஜன் உரங்கள் 3.2 மில்லியன் டன்கள்

(2) பொட்டாசியம் உரங்கள் 0.9 ,,

(3) பாஸ்பேட் உரங்கள் 1.4 ,,

(viii) பயிர்ப் பாதுகாப்புத்திட்டம் 80 மில்லியன் ஹெக்டேர்கள்

(Plant Protection Programmes)

இத்திட்ட இலக்குகளை எய்திட பல முயற்சிகள் மேற்கொள்ளப்படும். அவையாவன.

(அ) எல்லா வகை முக்கியமான விளை பொருள்களைப் பற்றி ஒருங்கிணைந்த ஆராய்ச்சி

(ஆ) நீர்ப்பாசன வசதிகளைத் தொடர்ந்து அளிப்பதும், இருக்கின்ற வசதிகளை பெருக்குவதும்

(இ) நிதி வசதி, பண்ணை இயந்திரங்கள், பயிர் பாதுகாப்புப் பொருள்கள் உரங்கள் அளிப்பு ஆகிய துறைகளை விரிவாக்குதல்

(ஈ) பருப்பு வகைகளில் உயர் விளைச்சல் இரகங்களைப் பயன்படுத்த எல்லாத் துறைகளையும் பயன்படுத்தல்

ஆனால் 1971ல் இவ்விலக்குகள் மறு பரிசீலனை செய்யப்பட்டன. அதன் பின்பு டிசம்பர் 1971ல் புதிய இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டன.

இத்தகைய சாதனைகளின் விளைவாக நாம் வேளாண்மைத் துறையில் நல்ல முறையில் முன்னேறியுள்ளோம். உணவுத் தேவைக்காக P. L. 480 உதவியை நாடிய நாம் 1971-72 முதல் அவ்வுதவியை நிறுத்தி விடக் கூடிய அளவிற்கு உயர்ந்துள்ளோம். சான்றாக உணவுப் பொருள்கள் உற்பத்தி 1970-71ல் 107. 8 மில்லியன் டன்களாகவும், 1971-72ல் 112 மில்லியன் டன்

களாகவும் உயர்ந்துள்ளது. இதே வகையான சாதனையின் வரலாறு பிற விளை பொருள்களிலும் காணக் கிடைக்கிறது. இவற்றிற் கெல்லாம் அடிப்படைக் காரணம், நாமும், நமது அரசும் முனைந்து செயல்படுத்தும், 'பசுமைப் புரட்சி'த் திட்டங்களே ஆகும்.

| வ. எண். | இனம் | முதலில் திட்டமிடப்பட்ட இலக்கு | 1973-74ல் அடையக் கூடிய அளவு |
|---|---|---|---|
| | | (மில்லியன் டன்கள்) | |
| 1 | உணவுப் பொருள்கள் | 129 | 122 முதல் 125 வரை |
| 2 | கரும்பு | 15 | 13·5 முதல் 14 வரை |
| | | (மில்லியன் பேல்கள்) | |
| 3 | பருத்தி | 8 | 6.2 முதல் 6.6 வரை |
| 4 | கச்சாச் சணல் | 7.4 | 6.2 முதல் 6.6 வரை |
| | | (மில்லியன் டன்கள்) | |
| 5 | நைட்ரசன் உரங்கள் | 3.2 | 2. 6 |
| 6 | பாஸ்பேட் உரங்கள் | 1.4 | 0.81 |
| 7 | பொட்டாசியம் உரங்கள் | 0.9 | 0.52 |

3 ) இந்தியாவில் தொழில் துறை உற்பத்தி

நவீனத் தொழில்களின் பிறப்பிடமாகக் கருதப்படும் மேற்கு ஐரோப்பியக் கண்டத்தில் நாகரிகமற்ற நாடோடி வகுப்பினர் வாழ்ந்து வந்த இடைக்காலத்தில் இந்திய நாடானது மன்னர்களின் செல்வத்திற்கும், மிகத் திறமை படைத்த கைவினைக் கலைஞர்களுக் கும் புகழ் பெற்றிருந்தது என 1918-ஆம் ஆண்டில் சர்தாமஸ் ஹாலந்து தலைமையில் அமைக்கப்பட்ட இந்தியத் தொழிலக ஆணைக் குழு குறிப்பிடுகின்றது.

கி. மு. 2000 ஆண்டுகட்கு முன்பே இந்திய நாகரிகமும், வாணிபமும் சிறந்து விளங்கின என்பதற்கு இன்று பல சான்றுகள் உள்ளன. இந்திய நாட்டின் பருத்தி, பட்டுத்துணிகள், வேலைப் பாடு மிக்க உலோகப் பொருள்கள், மரவேலை, தந்தச் சிற்பங்கள், சர்க்கரை, வெடியுப்பு, சணல், உப்பு போன்றவைக்கு உலகு

முழுவதும் நல்ல மதிப்புக் கிடைத்து வந்தது. எனினும், 18 ஆம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்திலிருந்தும், 19 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தும் ஆங்கிலேயரின் வரவினால் இந் நாட்டின் தொழில்கள் நசிவுற்றன.

## (A) கி.பி. 1800க்கு முன்பு தொழில் வளர்ச்சி

நறுமணப் பொருட்கள், சாயப் பொருட்கள், சர்க்கரை, அபின்) பட்டாடை முதலியன பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன. இறக்குமதி குறைவாகவே இருந்தது. இதனால் மிகுந்த தங்கம் இந் நாட்டிற்குள் கொண்டு வரப்பட்டது. பருத்தி, பட்டு, கம்பளி நூலினால் வண்ணத்துணிகள் செய்வது தங்கம் வெள்ளியில் சரிகைச் சித்திர வேலைகள் செய்வது, நகை செய்வது போன்றவை குடிசைத் தொழில்களாகவும், சிறு தொழிலாகவும் சிறந்து விளங்கின. சொந்தக் கப்பல்கள் வைத்து இந்தியர்கள் வணிகம் செய்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். சேர, சோழ மண்டல மக்கள், தென்கிழக்கு ஆசியா, பிலிப்பைன்ஸ், இலங்கை போன்ற நாடுகளுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர்.

முகலாயர் காலத்தில் அமைந்திருந்த தொழில்களைக் (1) கிராமத் தொழில்கள் (2) நகர்ப்புறத் தொழில்கள் என இரண்டாகப் பிரிக்கலாம். முன்னது கிராமப் புறங்களில் தேவையைப் பூர்த்தி செய்தது. பின்னது ஏற்றுமதிக்கு உற்பத்தி செய்தது.

## (B) கி.பி. 1800 முதல் 1850 வரையுள்ள காலம்

முகலாயர்களுக்குப் பின் ஆங்கிலேயர்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்குமிடையே நடந்த வாணிபத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி முற்றுரிமை பெற்றிருந்தது. 1830, 1831, 1832 ஆகிய ஆண்டுகளில் சமர்பிக்கப்பட்ட பல்வேறு அறிக்கைகளிலிருந்து அக்காலத் தொழில் நிலையினை நன்கு அறியலாம்.

### பருத்தித் தொழில்

சூரத் பருத்திவகை நல்ல தரமுள்ளதாக இருந்தது. நீண்ட இழைப் பருத்தி வகை குறைவாகவே பயிரிடப்பட்டது. இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குப் பருத்தி துணி ஏற்றுமதி செய்யப்பட்டது.

### பட்டுத் தொழில்

சீனப்பட்டே சிறந்ததாகக் கருதப்பட்டாலும் இக்காலத்தில் பட்டு வளர்ப்பதில் முன்னேற்றம் ஏற்பட்டதால் இந்தியப் பட்டு உலகம் முழுவதும் ஏற்றுமதி செய்யப்பட்டது.

**சர்க்கரைத் தொழில்**

தக்காணப் பீடபூமியில் விளையும் கரும்பினைக் கொண்டு பழைய முறைப்படி அமைந்த சர்க்கரை ஆலைகள் இருந்தன. பின்னர் இக்காலத்தில் இயந்திரங்கள் புகுத்தப்பட்டன.

**சாயப் பொருட்கள், வெடியுப்பு**

இந்திய சாயப் பொருள்களுக்கு உலகில் பெரு மதிப்பு இருந்து வந்தது. இதனால் சாயப பொருள்கள் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன. அத்துடன் வெடியுப்பும் அதிக அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**இரும்பு, செம்பு**

இந்தியாவில் இரும்பு தாதுப் பொருள்கள் பல இடங்களில் கிடைத்தன. எனினும் பழைய முறையைப் பின் பற்றியதால் உற்பத்திச் செலவு அதிகமாக இருந்தது. இந்தியாவின் வடமேற்கு மாகாணங்களில் செம்பு கிடைத்தது.

**நிலக்கரி**

வங்காளத்தில் பர்த்வான் மாவட்டத்தில் அதிகமான நிலக்கரிச் சுரங்கங்கள் இருந்தன. 1814 முதல் நிலக்கரிச் சுரங்கங்கள் அமைக்கும் பணி துவங்கினும் 1825-ம் ஆண்டிலிருந்துதான் விரிவான முயற்சிகள் எடுக்கப்பட்டன.

**(C) கி.பி. 1850 முதல் 1900 வரையிலான காலம்**

இக்காலத்தினை நவீனத் தொழில்துறை முன்னேற்றத்தின் ஆரம்ப காலம் எனக் கூறலாம். நவீன முறையில் சணல் ஆலைகளும், பஞ்சாலைகளும் நிலக்கரிச் சுரங்கங்களும் அமைக்கப்பட்டன, 19-ம் நூற்றுண்டின் இறுதிக் காலத்தில் 51 பஞ்சாலைகளும் 18 சணல் ஆலைகளும் செயல்பட்டன. இக்காலத்தில்தான் புதிதாக இருப்புப் பாதைப் போக்குவரத்து அமைக்கப்பட்டது. இராணிக்கஞ்சில் நிலக்கரி உற்பத்தி செய்யப்பட்டது. 1901ல் காகிதம் 67 மில்லியன் பவுண்ட் உற்பத்தி செய்யப்பட்டது. தங்க உற்பத்தி அதே ஆண்டில் 5, 29,782 அவுன்சாக இருந்தது. இரும்பு உற்பத்தி 57,000 டன்களாக இருந்தது அஸ்ஸாம் பகுதியில் பெட்ரோல் கண்டுபிடிக்கப்பட்டது. வேலை வாய்ப்பு மேலும் மேலும் பெருகி வந்தன.

பெரும்பாலான ஆலைகளை ஆங்கிலேயர்களே துவக்கி நடத்தினார்கள். குஜராத்திகள், மார்வாரிகள், பார்சிகள் இத்துறையில்

இறங்கினர். இக்காலத்தில் தான் 'நிர்வாக முகவர் முறை' (Managing Agency System) ஏற்பட்டது.

(D) இந்தியாவில் சிறு தொழில்களின் நசிவு

இந்தியப் பொருள்கள் இங்கிலாந்திற்குப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டதால் இந்தியப் பொருள்களுக்கு அங்கு பல்வேறு வகைகளில் தடை விதிக்கப்பட்டது 1769ஆம் ஆண்டில் இந்தியப் பட்டு, பருத்தி ஆடைகள் தயாரிப்பவர்கள் கிழக்கிந்தியக் கம்பெனிகளில்தான் வேலை செய்யவேண்டுமென்று கூறப்பட்டதால் காலப் போக்கில் உற்பத்தியும் ஏற்றுமதியும் குறைந்தது. இதனால் இறக்குமதி செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது.

வேறு சில பொருளாதார அரசியல் தொழில் நுட்ப காரணங்கள் இந்தியத் தொழில்துறை நசிந்து போவதற்குத் தூண்டுகோலாக அமைந்தன. அவையாவன :

(i) தொழிற் புரட்சியின் விளைவு : 'இங்கிலாந்தினது தொழிற் புரட்சி இந்தியாவின் செல்வத்தைக் கொள்ளை கொண்டதால் எழுந்தது' என்பர் வரலாற்றறிஞர். இங்கிலாந்தில் நவீன இயந்திரங்கள் கண்டு பிடிப்பாலும், நீராவிப் பொறி கண்டுபிடிப்பாலும் தொழில்துறை வெகு வேகமாக வளர்ந்தது. இங்கு உற்பத்தியாகும் பொருள்கள் விலை மலிவாகவும், தரங்கூடியதாகவும் இருந்தன. மேலும் இப்பொருள்களை இந்திய அங்காடியில் குவிந்த பொழுது அதனுடன் நம் நாட்டுப் பொருள்கள் போட்டியிட முடியவில்லை.

(2) இந்தியாவில் உள்நாட்டு மன்னராட்சி மறைவு : இந்தியாவில் பல பகுதிகளை ஆண்டுவந்த பல்வேறு மன்னர்களும் கைவினைப் பொருள்களுக்கு தாராளமாக ஆதரவு அளித்து வந்தனர். ஆனால் இவர்கள் ஆட்சி மறைந்தபின் இந்தியாவில் சிறு தொழில்கள் ஆதரவும், அரவணைப்புமின்றி நசிந்து போகத் துவங்கின.

(3) இந்தியா குடியேற்ற நாடாகக் கருதியமை ; ஆங்கிலேய அரசு இந்தியாவைத் தம்மைச் சார்ந்து நிற்கவல்ல ஒரு குடியேற்ற நாடாக மாற்றுவதற்குப் பெரிதும் முயன்று அதில் வெற்றியும் பெற்றது. நமது சுதந்தரமான தொழில் மற்றும் பொருளாதார அமைப்பைச் சீர்குலைத்துத் தனது முதலாளித்துவ ஆதிக்க பொருளாதாரத்தைப் புகுத்தியது.

(4) இந்தியப் பொருள்களின் மேல் விதிக்கப்பட்ட வரிகளும் புதிய வாணிகக் கொள்கையும் : இந்தியப் பொருள்கள் இங்கிலாந்தில்

இறக்குமதி செய்வதற்கு அதிக வரி விதித்தும் தடை செய்தும் இந்திய ஏற்றுமதியைச் சீர்குலையச் செய்தனர் ஆனால் தங்கள் பொருள்களை இந்தியச் சந்தையில் மலைபோல் குவித்து இந்தியத் தொழில் துறையைப் பின்னடையச் செய்தனர்.

(5) கிழக்கிந்தியக் கம்பெனியின் முகவர்களின் (Agents) தான் தோன்றித் தனமான போக்கு : கிழக்கிந்தியக் கம்பெனியின் முகவர்கள் தங்கள் அதிகாரத்தைத் தவறாக பயன்படுத்தினர். தங்கள் கீழ் உள்ள கைவினைஞர்களை அடக்கி, ஒடுக்கி வந்தனர். அவர்களுக்குப் போதாத கூலியினைக் கொடுத்தும், அவர்தம் பொருள்களுக்குக் குறைவான விலைகள் கொடுத்தும் வந்தனர். இதனால் இந்தியக் கைவினைஞர்கள் தங்கள் தொழிலையே துறந்தனர்.

(6) கிழக்கிந்தியக்கம்பெனியின் முற்றுரிமையின் முடிவு : கம்பெனி தன் உரிமையை இழந்ததால் இங்கிலாந்திலிருந்து பலர் இங்கு வந்து வாணிபம் நடத்தினர். அவர்தம் திறமையால் இந்தியச் சந்தைகளைக் கைப்பற்றினர். இவர்கள் பொருள்களை விற்க வந்தவர்களேயன்றி வாங்க வந்தவர்களன்று. ஆதலால் நமது தொழில் வளம் மங்கியது.

(7) இந்தியப் பொருளாதாரத்தில் சிறப்புத் தன்மையைப் புகுத்தினர் இங்கிலாந்தில் பஞ்சாலைகள் முன்னேற்றமடைந்ததால் இங்கு கச்சாப் பொருட்களை உற்பத்தி செய்து அங்கு கொண்டு சென்று பின் வினை முற்றிய பொருள்களாக நம் நாட்டுச் சந்தையில் குவித்தனர். இவ்வாறாக நமது கச்சாப் பொருள்கள் உற்பத்தியாளர் சுரண்டப்பட்டனர்.

(8) மேல் நாட்டுத் தொடர்பால் நம் நாட்டில் எழுந்த தேவையின் மாற்றங்கள் மேல் நாட்டுக் கல்வியும், நாகரிகமும் நம் நாட்டில் பரவியதால் நம் நாட்டினர் மேல் நாட்டினரைப் போல வாழ ஆசைப்பட்டனர். இதனால் மேல் நாட்டவரின் பொருள்களுக்கு தேவை கூடி அவை அதிக அளவில் இறக்குமதி செய்யப்பட்டன. நம் நாட்டில் செய்யப்பட்ட பொருள்களுக்கு தேவை குறைந்தது.

இதனால் நம் நாட்டுச் சிறு தொழில்கள் நசிந்து வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியது நிலத்தை நம்பியிருப்போர் எண்ணிக்கை அதிகரித்தது. இதனால் நிலங்கள் துண்டாக்கப்பட்டு விவசாயத்துறையும் சீரழிந்தது.

(E) முதல் யுத்த காலத்துக்குப் பின்

இரண்டு யுத்த காலங்களுக்கும் இடையில் கீழ்க்கண்ட முக்கியமான நிகழ்ச்சிகள் நடந்தன.

இக்காலத்தில் செழிப்பு நிலை ஏற்பட்டு விலைகள் ஏற்றம் அடைந்தன. இதனால் 1921–ல் சிக்கல் நிலை ஏற்பட்டது. அந்நியச் செலாவணி மாற்று விகிதங்களில் ஏற்ற இறக்கங்கள் ஏற்பட்டன. 1921–ல் நியமிக்கப்பட்ட முதலாவது நிதிக்குழு பேதங்காட்டும் காப்புச் சலுகையினைப் (Discriminating Protection) பரிந்துரை செய்து ஆறு முக்கிய தொழில்களுக்கு காப்பு வழங்கியது. 1934—1937ல் நாடு பொருளாதாரப் பெரு மந்தத்திலிருந்து மீட்சியுற்றது. 1935ல் புதிய அரசியல் அமைப்புச் சட்டம் அமைக்கப்பட்டுச் செயல் படுத்தப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு 1937–39 ஆண்டுகளில் பல மாநிலங்களில் ஆட்சிப் பொறுப்பேற்றது.

யுத்தத் தேவையினால் நமது தொழில் துறைகளின் உற்பத்தி பெருகியது. போர்க்காலங்களில் இடைவிடாது வேலை செய்ததால் இயந்திரங்கள் தேய்ந்து பழுதாயின. ஆனால் பஞ்சு, சர்க்கரை, சணல், ஆலைகள், இரும்பு, எஃகு, காகிதம், தீப்பெட்டி போன்ற தொழில்களுக்கு காப்பு அளித்ததால் அத்துறைகள் வெகுவாக முன்னேறின. மின்சார சாதனங்கள் தயாரிக்கும் தொழில் இக்காலத்தில் தான் ஏற்பட்டது. வேலைவாய்ப்பு பெருகியது. 1914-ல் நமது மொத்தத் தொழில்துறை சொத்து மதிப்பில் 43% சதவீதம் வெளிநாட்டு நிறுவனங்களின் கட்டுப்பாட்டில் இருந்தது 1935-ல் இது 10 சதவீதம் என்றும், 1945-ல் இது 3·6% சதவீதம் எனவும் குறைந்தது.

## F. இரண்டாம் யுத்த காலம்

பொதுத்துறை முதலீடு பெருகியது. யுத்தகாலத் தேவையால் பல்வேறு தொழில்கள் தங்கள் உற்பத்திக் கொள்ளளவை அதிகமாக்கின. இக்காலத்தில் பல்வேறு தொழில்கள் புதிதாக ஆரம்பிக்கப்பட்டன. ஏற்கெனவே உள்ள தொழில்கள் நன்கு முன்னேற்றமடைந்தன.

தொழில் உற்பத்தி சிறிது சிறிதாக முன்னேறியது. இதனைப் பின் கண்ட பொதுக் குறியீட்டெண் (General Index Number) விளக்கும்.

### யுத்தத்தால் விளைந்த தீய விளைவுகள்

(1) யுத்த காலத்தில் இயந்திரங்கள் இரவு பகலாக ஓடியதால் தேய்மானம் அடைந்தும், பழுதடைந்தும் உள்ளன. இக்குறைபாடுகள் பல்வேறு துறைகளில் இன்னும் நிவர்த்தி செய்யப்படவில்லை.

(2) யுத்த காலத்தில் நுகர்வுப் பொருள்களின் உற்பத்தி புறக் கணிக்கப்பட்டதால், யுத்தத்திற்குப் பின் இவை பற்றாக்குறை யாயின. இதனால் யுத்தத்துக்குப் பின் கட்டுப்பாடுகளும், பங்கீட்டு முறைகளும் பின்பற்றப்பட்டன.

தொழில் உற்பத்தி (1937 = 100)

| ஆண்டு | குறியீட்டு எண் |
|---|---|
| 1938 | 105.4 |
| 1939 | 102.7 |
| 1940 | 109.9 |
| 1941 | 117.8 |
| 1942 | 111.2 |
| 1943 | 117.0 |
| 1944 | 117.0 |
| 1945 | 120.0 |

இக்காலத்தில் பதிவு செய்த நிறுவனங்களின் எண்ணிக்கையும், செலுத்திய மூலதனமும் அதிகரித்துள்ளது.

| ஆண்டு | நிறுவனங்களின் எண்ணிக்கை | செலுத்திய மூலதனம் |
|---|---|---|
| | | ரூ. |
| 1939 | 11,114 | 290 கோடி. |
| 1945 | 14,859 | 387 கோடி. |

(3) பஞ்சாலைப் பொருள்கள், சணல், காகிதம், சர்க்கரை போன்ற பொருள்கள் கொழுத்த இலாபத்தைத் தந்ததால் நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டது.

(4) வட்டாரச் சரிசம நிலையில்லா (Regional unbalanced Growth) வளர்ச்சி ஏற்பட்டது.

(5) தொழிலாளர்களுக்கு ஊதியத்தில் சரியான பங்கு கிடைக்கவில்லை.

(G) 1945 முதல் 1947 வரையான காலம்

இரண்டாம் யுத்தம் முடிந்த பின்னும் பணவீக்கநிலை மேலும் தீவிரமாகியது. 1946-ல் முதலாவதாக 'உற்பத்தித் தொழில்களின் கணிப்பு' (Census of Manufacturing Industries) மேற் கொள்ளப்

பட்டது. இக்கணிப்பின்படி சர்க்கரை, தாவர எண்ணெய், பஞ்சாலைகள், சணல், இரும்பு, எஃகு, பொதுவான பொறியியல் துறை போன்ற சில துறைகள் மட்டுமே தொழில் துறையில் முன்னணியில் நின்றன.

## I. ஐந்தாண்டுத் திட்ட காலங்களில் தொழில் வளர்ச்சி

முதல் ஐந்தாண்டுத்திட்டம் ஆரம்பித்த காலத்தில் நாட்டில் பெரும்பாலான தொழில் துறைகள் நுகர்வுப் பொருள்களை மட்டுமே தயாரித்தன. தொழில் வளர்ச்சிக்கு உதவிடவில்லை. அடிப்படை ஆதாரத் தொழில்களோ, கனரகப் பொறியியல் துறையோ வளர்ச்சி பெறவில்லை. மேலும் நாட்டில் சமமான வட்டார வளர்ச்சி (Balanced Regional Development) நிலவவில்லை.

### (அ) முதல் ஐந்தாண்டுத் திட்டம்

#### நோக்கங்கள்

வேளாண்மைத் துறைக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டாலும், தொழில்துறை சம்பந்தமாக சில முக்கிய முடிவுகள் எடுக்கப்பட்டன. 1948-ல் இந்தியாவின் தொழில் கொள்கைத் தீர்மானம் அறிவிக்கப்பட்டது. இதன்படி நாட்டில் தொழில் வளர்ச்சிக்கும், நாட்டின் எதிர்காலத் தேவைக்கான ஆக்க பூர்வ நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. கலப்புப் பொருளாதாரக் கொள்கை மேற்கொள்ளப்பட்டது.

முக்கியத்துவம் அளிக்கப்பட்ட தொழில்கள்.

(1) இரும்பு, எஃகு போன்ற உற்பத்திக் கருவிப் பொருள்களின் தொழிற்சாலைகளின் நடப்பு உற்பத்திக் கொள்ளளவையும், பருத்தித்துணி, சணல், சர்க்கரை, வர்ணங்கள், சோப், வனஸ்பதி போன்ற நுகர்வுப் பொருள்களின் தொழிற்சாலைகளின் நடப்பு உற்பத்திக் கொள்ளளவை முழுமையாகப் பயன்படுத்துதல்.

(2) இரும்பு, எஃகு, சிமெண்ட், இயந்திரக்கருவிகள், உரங்கள் முதலிய தொழிற்சாலைகளில் கொள்ளளவை அதிகரித்தல்.

(3) ஏற்கெனவே அரைகுறை முதலீடு செய்யப்பட்டு முற்றுப் பெருமலிருக்கும் நிறுவனங்களை முற்றுப்பெறச் செய்தல்.

#### நிதி முதலீடு

தனியார் துறை, பொதுத்துறை ஆகிய இரு துறைகளின் வளர்ச்சியை நவீனமயமாக்கல், பழுதுபட்ட இயந்திரங்களைப் புதுப்பித்தல் போன்ற நடவடிக்கைகளுக்காக ரூ. 707 கோடி ஒதுக்கப்

பட்டது தனியார் துறையில் மேற் கூறியவற்றிற்காக ரூ. 463 கோடியும், நடைமுறை மூலதனத்திற்காக ரூ. 150 கோடியும் ஒதுக்கப்பட்டது. பொதுத்துறையில் ரூ. 94 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால் உண்மையில் திட்ட காலத்தில் பொதுத்துறையில் ரூ. 57 கோடி மட்டுமே செலவிடப்பட்டது. தனியார் துறையில் ரூ. 340 கோடி மட்டுமே செலவிடப்பட்டது.

**சாதனைகள்**

முதல் திட்டத்தில் எல்லாத் துறைகளுமே சிறந்து விளங்கின. 1950-ல் 105 ஆக இருந்த தொழில் உற்பத்திக் குறியீட்டெண் 1955-ல் 161·5 ஆக உயர்ந்தது. 1956 முடிய தொழில் வளர்ச்சிக் குறியீட்டெண் 38 சதவீதம் அதிகரித்தது. பொதுத்துறையில் மூன்று இரும்பு, எஃகு ஆலைகள் நிறுவுவதற்கான ஆயுத்தவேலைகள் மேற் கொள்ளப்பட்டன.

**(ஆ) இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்**

1956-ல் இரண்டாவது தொழிற் கொள்கைத் தீர்மானத்தின்படி பொதுத்துறைக்கு முக்கியத்தும் அளிக்கப்பட்டது.

(1) கனரக, இரசாயனப் பொருள்களின் உற்பத்தியை அதிகரித்தல்

(2) வளர்ச்சிக்கான சாதனங்களைத் தயாரிக்கும் தொழில்களின் உற்பத்திக் கொள்ளளவை அதிகரித்தல்

(3) சணல், பஞ்சு, சர்க்கரை ஆலைகளை நவீனமயமாக்கல்

(4) உற்பத்திக் கொள்ளளவை முழுமையாகப் பயன்படுத்துதல்.

**நிதி முதலீடு**

பேரளவுத் தொழில்களுக்காக ரூ. 1,260 கோடி செலவிடப்பட்டது இதில் ரூ 770 கோடி பொதுத்துறையிலும் ரூ. 850 கோடி தனியார் துறையிலும் செலவிடப்பட்டது. ஆனால் ஒதுக்கப்பட்ட தொகையோ முறையே பொதுத்துறையில் ரூ. 560 கோடியும், தனியார் துறையில் ரூ. 685 கோடியுமாகும். சிற்றளவுக் கிராமத் தொழில்களின் வளர்ச்சிக்காக முறையே பொதுத்துறையில் ரூ. 90 கோடியும், தனியார் துறையில் ரூ. 175 கோடியும் செலவிடத் தீர்மானமாயிற்று.

**சாதனைகள்**

1960—61ல் தொழில் துறை உற்பத்திக் குறியீட்டெண் 194 ஆக அதிகரித்தது. பொதுத்துறையில் முப்பெரும் இரும்பு, எஃகாலைகள் அமைக்கப்பட்டன. ஆயிரம் தொழிற்சாலைகள் உள்ளடக்கிய 60 தொழிற்பேட்டைகள் அமைக்கப்பட்டன. பல்வேறு துறைகளும், இலக்குகளையும் தாண்டி வளர்ச்சி பெற்று விளங்கின.

**(இ) மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்**

**நோக்கங்கள்**

(1) 1957-58-ல் அந்நியச் செலாவணி நெருக்கடி காரணமாக முற்றுப் பெறுத தொழில்களையும், இரண்டாந் திட்டத்தில் தொடங்கப் பெற்று நிறைவுருதிருக்கும் தொழில்களையும் விரைவில் முடித்தல்

(2) கனரகப் பொறியியல், இரும்புச் சாமான்கள், உலோகக் கலவைகள், உரம், பெட்ரோலியம் முதலியவற்றில் உற்பத்திக் கொள்ளளவை விரிவாக்குதல்

(3) அடிப்படைக் கச்சாப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குதல்

(4) அடிப்படைத் தேவைப் பொருட்களை உள்நாட்டுத் தொழில்கள் மூலமாக உற்பத்தியை அதிகரித்தல்

**நிதி முதலீடு**

பொதுத்துறையில் தொழில் வளர்ச்சிக்காக ரூ. 1330 கோடி ஒதுக்கப்பட்டது. இதில் அந்நியச் செலாவணிரூ. 660 கோடியாகும். தனியார் துறையில் ரூ. 1,125 கோடியாகும். பொதுத் துறையில் தாதுப் பொருள் வளர்ச்சிக்காகரூ. 478 கோடி ஒதுக்கப்பட்டது.

ஆனால் பொதுத்துறையில் ரூ. 1,520 கோடியும், தனியார் துறையில் ரூ. 1200, கோடியும் செலவிடப்பட்டன.

**சாதனைகள்**

தொழில் உற்பத்தித்துறை குறியீட்டெண், 1965-66-ல் 192·6 ஆக உயர்ந்தது ஆண்டுக்கு சராசரி 11 சதவீதம் வளர்ச்சி பெற திட்டமிடப்பட்டது. ஆனால் 6·8 சதவிதவளர்ச்சி

வீதமே கிட்டியதாக சுட்டிக்காட்டப்பட்டது. பல்வேறு துறைகளில் நாம் குறிப்பிட்ட இலக்கினை அடைய முடியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் தொழில்துறை பின் தங்கியது. இதற்குக் காரணங்கள் என்னவெனில்

(1) அந்நியச் செலாவணிச் சிக்கல்

(2) தக்க வேளையில் கிட்டாத தொழில் தொடங்க அனுமதிகள்

(3) செஞ்சீனா, பாக்கிஸ்தான் ஆக்கிரமிப்புகள்

(4) நாட்டில் ஏற்பட்ட பஞ்சமும், வறட்சியும், வேளாண்மைத் துறை வீழ்ச்சியும் ஆகும்.

(ஈ) **நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் (1969–74)**

மூன்றாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும், அதனைத் தொடர்ந்து 3 ஓராண்டுத் திட்ட காலங்களிலும் தொழில் வளர்ச்சி சீராக அமையவில்லை. ஆனால் 1968–69-ல் மீண்டும் பொருளாதாரம் மீட்சியுற்றது. மேலும் 1966–68-ல் வேளாண்மைத் துறையின் உற்பத்திப் பெருக்கம், தொழில் துறைக்கு ஊக்கம் அளித்தது.

**அணுகுமுறை**

நாட்டிற்கு வேண்டிய தேவைகளில் தன்னிறைவு அடைய வேண்டும் என்பது உணரப்பட்டது. தொழில் வளர்ச்சியை பரவலாக்குவதின் அவசியம் குறிப்பிடப்பட்டது. வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க மரபு வழித் தொழில்களின் மூலமாக முயற்சி செய்வது எனத் தீர்மானிக்கப்பட்டது.

**நோக்கங்கள்**

(1) ஏற்கெனவே முதலீடு தொடங்கிய அல்லது முதலீடு செய்வதற்கு ஒத்துக்கொண்ட திட்டங்களில் முதலீட்டைச் செய்து நிறைவேற்றல்

(2) பல்வேறு துறைகளில் உற்பத்திக் கொள்ளளவை அதிகரித்தல்

(3) பரவிக்கிடக்கும் தொழில் செய்ய முனைவோர்களை ஊக்குவித்தல்

(4) இவையனைத்தையும் குறைந்த பட்ச கட்டுப்பாடுடன் அடைதல்

**முதலீடு**

பொதுத் துறையில் முதலீடு ரூ. 3,298 கோடியாகும். தனியார் துறையில் ரூ. 2,000 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இத் திட்ட காலத்தில் ரூ 17·5 கோடியில் அமைக்கப்படும் 'பஞ்சாலை இணைக்கடிகமும்' ரூ. 60 கோடியில் அமைக்கப்படும் 'காகித இணைக் கடிகமும்' மிக முக்கியமானவையாகும்.

1971-ம் ஆண்டு பொதுத்தேர்தலுக்குப்பின் நான்காம் திட்ட இலக்குகள் மீண்டும் பரிசீலிக்கப்பட்டன. அதனால் 1971 டிசம்பரில் உற்பத்தி இலக்கங்களில் சில மாறுதல்கள் கொண்டுவரப் பட்டன.

(4) **உள்ளமைப்புத் துறைகள் மற்றும் சமூக நலப்பணிகள்**
(Infra-structure and social services)

திட்ட காலங்களில் தேசீய வருமானம், வேளாண்மை, தொழில் ஆகிய துறைகளின் வளர்ச்சிக்கு ஒப்பாகவே உள் ளமைப்புத்துறையிலடங்கிய போக்கு வரத்து மின்சார உற்பத்தி ஆகிய இனங்களிலும் நல்ல வளர்ச்சி காணப்பட்டுள்ளது. அது போல கல்வி, மருத்துவ வசதி போன்ற சமூக நலப்பணிகளிலும் அரசின் ஆழ்ந்த ஈடுபாட்டையும் வளர்ச்சியையும் காண முடிகிறது.

A. **இருப்புப்பாதைத் துறை**

முதன் முதலாக 1853ல் பம்பாய்க்கும் தானாவிற்கு மிடையே யுள்ள 22 மைல் தூரத்திற்கு இருப்புப் பாதை அமைக்கப் பட்டது என்பதை முன்பே கண்டோம். கி பி. 1900-ம் ஆண்டு 25,000 மைல் நீள இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டு விட்டன. இரயில்துறையின் வளர்ச்சினால் பம்பாய்ப் பகுதிகளில் பஞ்சாலைத் தொழிலும், கல்கத்தாப் பகுதியில் சணல் தொழிலும், அஸ்ஸாம், வங்கம் ஆகிய மாநிலங்களில் தேயிலைத் தோட்டத் தொழிலும், அஸ்ஸாமில் எண்ணெய் உற்பத்தித் தொழில்களும் வளர்ச்சியுற லாயின. எனவே இருப்புப் பாதை வளர்ச்சி நாட்டின் பொருளா தார வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்று உணரப்பட்டு இரயில் துறை வளர்ச்சியில் அரசு அக்கறை கொண்டது. 1950-ம் ஆண்டில் ஏறத்தாழ 34 000 மைல்கள் நீளமுடைய இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டிருந்தன. ஏறத்தாழ ரூ 3,797 2 கோடி முதலீட்டுடன், 13 5 லட்சம் மக்கட்கு வேலை வாய்ப்பளித்து, 11,650 நீராவி முறை இரயில்களையும் 34,602 பயணிகள் வண்டி களையும், 3,83,279 சரக்கு வாகனங்களையும் கொண்டு

நாளொன்றுக்கு 10,000 இரயில்களை ஓடவிட்டுச் செயலாற்று கிறது. 7,032 இரயில் நிலையங்களைக் கட்டுப்படுத்தியும் நாளொன்றுக்கு 61 லட்சம் பயணிகளையும், 5·59 லட்சம் டன்கள் எடையுள்ள பொருள்களையும் ஏற்றிக் கொண்டு செல்கிறது. ஆண்டொன்றுக்கு ரூ 900 90 கோடி வருவாயை அரசுக்கு அளித்து விளங்குகிறது இத்துறை.

மூன்று ஐந்தாண்டு திட்டங்களிலும் சேர்த்து ஏறத்தாழ ரூ 3,152 கோடி இரயில்துறை வளர்ச்சிக்காக செலவிடப்பட்டது. இதில் ரூ 1,290 கோடி இரயில் துறையின் காணிக்கையே யாகும்.

| | முதல் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் |
|---|---|---|---|
| | (ரூபாய் கோடியில்) | | |
| இரயில் துறையில் முதலீடு | 423 23 | 1043·69 | 1685·8 |
| திட்ட நடவடிக்கைகட்கு இரயில் துறையின் பங்கு | 280 00 | 465 00 | 541 1 |
| இரயில் துறைத் திட்டத்தில் அன்னியச் செலாவணி | — | 319 45 | 242·0 |

**Source :** 'India-A reference Annual'–1970 p. 397

நான்காம் திட்டத்தில் ரூ 1,525 கோடி செலவிட தீர் மானிக்கப்பட்டது. இதில் இரயில் துறை நிதியினின்று ரூ. 525 கோடி பெறப்படும்

**Source :** 'India- A reference Annual,' 1970 p. 397
Figures relate to 1963-69

இரயில் துறை வளர்ச்சி

அடுத்த பக்கத்திலுள்ள அட்டவணையானது இந்தியாவில் இரயில்துறை வளர்ச்சியைக் காட்டும்.

நான்காம் திட்டகாலத்தில்

(i) 1,020 கிலோ மீட்டர் நீளமுடைய புதிய இருப்புப் பாதைகள் அமைத்தல்

(ii) 1,700 கிலோ மீட்டர் நீள இருப்புப்பாதையை மின்சார மயமாக்குதலும், 2,800 கிலோ மீட்டர் நீள இருப்புப்பதையை டீசல் மயமாக்குதலும்

இரயில் துறை வளர்ச்சி

| வ. எண் | விவரம் | முதல் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் | ஓராண்டுத் திட்டம் 1966-67 | ஓராண்டுத் திட்டம் 1967-68 | ஓராண்டுத் திட்டம் 1968-69 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | புதிதாகத் தொடங்கப்பட்ட இருப்புபபாதைகள் (கிலோ மீட்டரில்) | 1,304 | 1,311 | 1,801 | 52 | 269 | 740 |
| 2 | இரண்டு பாதைகள் அமைப்பு (Double iines) (கிலோ மீட்டரில்) | 370 | 1,512 | 3,228 | 476 | 532 | 260 |
| 3 | இருப்புப் பாதைகளை மின் சார மயமாக்குதல் (கிலோ மீட்டரில்) | — | 361·5 | 1,746 | 404 | 150 | 351 |
| 4 | நீராவி எஞ்சின்கள் உற்பத்தி | 1,586 | 2,216 | 1,864 | 294 | 308 | 275 |
| 5 | பயணிகள் பெட்டி | 4,758 | 7,718 | 8,019 | 1,264 | 1,258 | 1,273 |
| 6 | சரக்குப் பெட்டிகள் | 61,254 | 97,959 | 1,44,789 | 21.207 | 17.634 | 16,476 |

**Source: 'India—A Reference Annual' 1970. p. 397.**

(iii) 1,260 நீராவி எஞ்சின்கள் தயாரித்தல்

(iv) புதிதாக 1,01,000 சரக்குப் பெட்டிகள் தயாரித்தல் போன்ற பணிகள் மேற்கொள்ளப்படும்,

(v) 6,500 பயணிகள் பெட்டிகளை அதிகப்படியாக சேர்த்தல் போன்ற பணிகள் மேற்கொள்ளப்படும்.

இரயில்துறை மூலமாக 1968-69-ல் 223 கோடி பயணிகள் பயணம் செய்தனர்; அதன் மூலமாக ரூ 266 11 கோடி இரயில் கட்டணமும் வசூலிக்கப்பட்டது. அதே ஆண்டில் சரக்கு இரயில்கள் வழியாக 205 மில்லியன் டன்கள் பெறுமான பொருள்கள் ஏற்றிச் செல்லப்பட்டன. (அடுத்த பக்கம் பார்க்க)

ஆயினும் இரயில்துறையில் இவ்வளர்ச்சி வீதம் போதாது என்றே கூறலாம். ஏனெனில் ஒரு லட்சம் மக்கட்கு இந்தியாவில் 9·6 மைல் நீள இருப்புப்பாதை வசதிதான் கிட்டுகிறது. ஆனால் இவ்வசதியோ கனடாவில் 485 மைலாகவும் அமெரிக்காவில் 224 மைலாகவும், இங்கிலாந்தில் 46 மைலாகவும் உள்ளது.

B. சாலைப் போக்கு வரத்து

இரயில் போக்குவரத்தானது நாடு முழுவதையும் பரவலாக இணைக்கிறது. ஆனால் நாட்டின் பல்வேறு பகுதிகளையும் நெருக்கமாக இணைப்பது சாலைப் போக்குவரத்தேயாகும். 1947-ஆம் ஆண்டு நாட்டில் நல்ல மேற்பரப்புடைய சாலைகளின் (Surfaced Roads) நீளம் 1,45,855 கிலோ மீட்டராகவும், சீரற்ற சாலைகள் (Unsurfaced) நீளம் 2,42,371 கிலோ மீட்டராகவும் இருந்தது. இந்தச் சூழ்நிலையில் முதல் திட்டத்தில் ரூ 135 கோடி ஒதுக்கப்பட்டு முழுவதும் செலவழிக்கப்பட்டது. இரண்டாம் திட்ட காலத்தில் ரூ 228 கோடி செலவிடப்பட்டது. இது போல மூன்றும் திட்டத்தில் சாலை வளர்ச்சிக்காக செலவிட்ட தொகை ரூ 324 கோடியாகும். மூன்று ஓராண்டுத் திட்டங்களில் (1966-69) ரூ 308 கோடி செலவானது. நான்காம் திட்டத்திலோ ரூ 880 கோடி செலவிடவும் புதிதாக 60,000 கிலோ மீட்டர் சாலை அமைக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது. அடுத்த பக்கத்தில் காணும் பட்டியல் சாலை வளர்ச்சி விவரங்களை அளிக்கும்.

1947ம் ஆண்டு மார்ச் இறுதியுல் 2·12 லட்சம் சாலை வாகனங்கள் இந்தியாவிலிருந்தன. ஆனால் 1969 மார்ச் இறுதியில் இவை 14·4 லட்சமாக உயர்ந்திருப்பது இந்தியாவில் சாலை போக்குவரத்து வளர்ச்சியை உள்ளங்கை நெல்லிக்

இரயில் சரக்கு வருவாய்ப் பட்டியல்

| வ. எண் | | 1950–51 | 1955–56 | 1960–61 | 1965–66 | 1967–68 | 1968–69 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | சரக்குகள் ஏற்றுமதி (மில்லியன் டன்களில்) | 93 | 117·1 | 157·6 | 204·1 | 197·6 | 205·0 |
| 2 | சரக்கு ஏற்றுமதி மூலம் பெற்ற வருவாய் (ரூபாய் லட்சத்தில்) | — | 17,792 | 28,125 | 45,306 | 48,970 | 54,964 |

**Source :–** 'India–A Reference Annual' 1970 p. 400.

சாலை அமைப்பு வளர்ச்சிப் பட்டியல் (கிலோ மீட்டரில்)

| வ. எண் | இனம் | 1947 | 1951 | 1956 | 1961 | 1966 | 1969 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | சீராற்ற மேற்பரப்புடைய சாலைகள் | 1,45,855 | 1,57,019 | 1,83,023 | 2,30,883 | 2,83,385 | 3,24,940 |
| 2 | சீரற்ற சாலைகள் | 2,42,371 | 2,40,923 | 3,15,321 | 4,47,929 | 5,51,380 | 6,47,390 |
| | மொத்தம் | 3,88,226 | 3,99,940 | 4,98,344 | 6,78,812 | 8,34,765 | 9.72,330 |

**Source:–** 'India 1970' p. 402.

கனியாகத் தெளிவாக்குகிறது. நான்காம் திட்ட இறுதியில் 4,70,000 வாகனங்கள உற்பத்தி செய்யப்படும். பயணிகள் பேருந்துகளின் எண்ணிக்கை 1,15,000க்கு உயர்த்தப்படும். சரக்கு உந்துகள் எண்ணிக்கை 85,000க்கு உயர்த்தப்படும்,

இந்தியாவில் 1,000 சதுர கிலோ மீட்டர் பரப்புக்கு 27 கிலோ மீட்டர் பரப்புக்கு மட்டுமே சாலைப் போக்குவரத்து வசதி கிட்டியுள்ளது. ஆனல் இவ்வீதமானது ஜப்பானில் 268 ஆகவும், பிரான்ஸில் 261 ஆகவும், இங்கிலாந்தில் 142 ஆகவும் அமெரிக்காவில் 64 ஆகவும் உள்ளது. எனவே சாலைப்போக்குவரத்தில் நாம் அதிகம் முன்னேற வேண்டியுள்ளது.

## (C) உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து (Inland water ways) :

இரயில், மற்றும் சாலை போக்குவரத்து வளர்ச்சியால் உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து தனது முக்கியத்துவத்தை இழந்தது. ஆயினும் இன்று கூட கேரளா, அஸ்ஸாம், மேற்கு வங்கம், பீஹார் ஆகிய மாநிலங்களில் நீர்ந்துறைப் போக்குவரத்து மிக முக்கியத்துவம் பெற்றே விளங்குகிறது. கங்கை, பிரம்மபுத்திரா அவற்றின் கிளை நதிகள் கோதாவரி கிருஷ்ணு, மற்றும் அவற்றின் கால்வாய்கள், கேரளத்தில் மேற்கு கடற்கரைக் கால்வாய்கள், ஆந்திரா மற்றும் தமிழகத்தில் பக்கிங்ஹாம் கால்வாய், ஒரிஸ்ஸா, கோவா கால்வாய்கள் சிறப்பாகப் பயன்படுகின்றன தற்சமயம் இந்தியாவில் 14,000 கிலோ மீட்டர் நீளமுள்ள உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து நடைபெறுகிறது. இதில் 3,500 கிலோ மீட்டர்களில் நீராவிக் கப்பல்கள் செல்ல முடியும்.

இத்துறை வளர்ச்சிக்கு முதல் இரு திட்டத்தில் ரூ 1 கோடியும், மூன்ரும் திட்டத்தில் ரூ 75 கோடியும் செலவிடப்பட்டது. நான்காம் திட்டகாலத்தில் ரூ 9 கோடி உள்நாட்டு நீர்வழிப்போக்குவரத்துக்குச் செலவிடப்படும்.

## (D) கப்பல் போக்குவரத்து (Shipping)

இந்தியக் கப்பல்துறை இன்னும் குழந்தைப் பருவத்திலேயே உள்ளது. இந்தியா விடுதலை அடைந்த போது 42 கப்பல்கள் மட்டுமே இருந்தன. அவற்றின் மொத்தப் பதிவு செய்த எடை 1,00,000 டன்கள் (G.R.T.=Gross Registered Tonnage)ஆனல் 1-3-1970 அன்று நம்மிடம் 258 கப்பல்கள் இருந்தன. அவற்றின் G.R.T. 23·29 லட்சம் டன்களாகும்; இதில் 81 கப்பல்கள் (3·07 லட்சம் டன்கள் (GRT) நமது நாட்டின் கடற்கரைப் போக்குவரத்தில் ஈடுபடுத்தப்பட்டிருந்தன. எஞ்சிய 20·22 லட்சம்

டன்கள் (GRT) உடைய 177 கப்பல்கள் பன்னாட்டு வணிகத்திற்கு பயன்படுத்தப்படுகின்றன. இரண்டாம் திட்டத்தில் 8·57 லட்சம் டன்கள் GRTயும், மூன்றும் திட்டத்தில் ரூ 15·4 லட்சம் டன்கள் GRTயும் அதிகரிக்கப்பட்டன. நான்காம் திட்டத்தில் 40 லட்சம் டன்கள் GRT என்ற அளவினை எட்டிட இலக்கு உள்ளது.

முதல் திட்டகாலத்தில் ரூ 26 கோடியும் இரண்டாம் திட்டத்தில் ரூ 45 கோடியும் மூன்றும் திட்டத்தில் ரூ 55 கோடியும் செலவிடப்பட்டன. நான்காம் திட்டத்தில் ரூ, 135 கோடி செலவிடப்படும்.

## E. விமானப் போக்குவரத்து (Civil Aviation)

இந்தியாவில் 1920-ம்ஆண்டு முதல்தான் விமானப் போக்குவரத்து தொடங்கியது. இப்போக்கு வரத்துக்கு ஓர் அரசு இலாகா 1937ல் நிறுவப்பட்டது.

ஐந்தாண்டுத் திட்டகாலங்களில் முதல் திட்டகாலத்தில் ரூ 7·2 கோடியும், இரண்டாம் திட்ட காலத்தில் ரூ 15·9 கோடியும் மூன்றும் திட்ட காலத்தில் 25·5 கோடியும் மூன்றும் பொது ஜன விமானப் போக்குவரத்து வளர்ச்சிக்குச் செலவிடப் பட்டது. நான்காம் திட்டத்தில் ரூ 202 கோடி ஒதுக்கப்பட்டது. 1951ல் 4·5 லட்சம் பயணிகளையும் 398 லட்சம் கிலோ கிராம் எடை பொருள்களையும் ஏற்றிச் சென்றது. அவ்வாண்டில் மொத்தம்பறந்த தூரம் 314 லட்சம் கிலோ மீட்டர்கள் ஆகும். ஆனால் 1970ல் இந்திய விமானப் போக்கு வரத்து விமானங்கள் 677 லட்சம் கிலோ மீட்டர் தூரம் பறந்துள்ளன 27·5 லட்சம் பயணிகளை ஏற்றிச் சென்றது. 333 கிலோ கிராம் எடைப் பொருள்களை தூக்கிச் சென்றது.

## F. செய்தித் தொடர்புத்துறை (Communications)

இப்பிரிவில் அடங்குவன அரசின் அஞ்சல், தந்தி, தொலை பேசித் துறைகளாகும். அத்துறைகளின் வளர்ச்சியும் படிப்படியாக பெருகியுள்ளது என்பதனை அடுத்த பக்க அட்டவணை காட்டுகிறது.

## (G) மின்சக்தி

1925ம் ஆண்டு வரை மின்சார உற்பத்தியில் வளர்ச்சி வீதம் மிகவும் குறைவாக இருந்தது. அந்த ஆண்டில் மின் உற்பத்திக்குப் பொருத்தப்பட்ட கொள்ளளவு (Installed capacity) 1,62,341

India-1971-72 p 445 Publications Division-

## செய்தி தொடர்புத் துறையின் வளர்ச்சி

| வ. எண் | இனம் | 1950-51 | 1955-56 | 1960-61 | 1965-66 | 1967-68 | 1968-69 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அஞ்சல் அலுவலகங்கள் | 36,094 | 55,042 | 77,273 | 96,936 | 99,833 | 1,02,477 |
| 2 | கையாளப்பட்ட அஞ்சல் பொருள்கள் எண்ணிக்கை (கோடியில்) | 277 0 | 299·0 | 402·9 | 589·00 | 618·80 | 605·60 |
| 3 | காப்பீடு செய்த பொருள்கள் எண்ணிக்கை (லட்சம்) | 37·23 | 40 00 | 41·0 | 55·00 | 61·48 | 60·38 |
| 4 | பண விடைத்தாள் எண்ணிக்கை (கோடியில்) | 5·1 | 6·5 | 7·6 | 9·15 | 9·67 | 9·58 |
| 5 | அஞ்சல் துறை வருவாய் (ரூபாய் கோடியில்) | — | 29·43 | 40·78 | 66·00 | 74·24 | 93·98 |
| 6 | தந்தி அலுவலகங்கள் எண்ணிக்கை | 8,205 | 9,893 | 11,896 | 12,612 | 13,359 | 14,594 |
| 7 | தந்திகள் எண்ணிக்கை (லட்சத்தில்) | 279 | 335 | 407 | 443 | 459 | 485 |
| 8 | தந்தி வருவாய் (ரூபாய் கோடியில்) | 5·9 | 6·7 | 11·1 | 14·14 | 19·95 | 22·52 |
| 9 | தொலை பேசிகள் எண்ணிக்கை (ஆயிரத்தில்) | 168 | 278 | 521 | 933 | 1,017 | 1,119 |
| 10 | தொலை பேசி நிலையங்கள் எண்ணிக்கை | 3,700 | 5,817 | 8,805 | 2,895 | 3,161 | 3,432 |
| 11 | தொலை பேசி மூலம் வருவாய் (ரூபாய் கோடியில்) | 9·0 | 14·4 | 31·1 | 71·9 | 79·76 | 92·26 |

Source :—India—A Reference Annual, 1970, Pages 416–418

K.W ஆகும். இக் கொள்ளளவு 1945ல் 9,00,402 K.W ஆகவும், 1966ல் 90,27,019 K.W ஆகவும் அதிகரித்தது. ஆக, ஐந் தாண்டு திட்ட காலத்தில் மட்டும் நான்கு மடங்கு அதிகரிக்கப் பட்டது. அது போல மின் உற்பத்தியளவானது 1951ல் 585.8 கோடி Kwh லிருந்து 1966ல் அது 3,290 கோடி Kwh ஆக உயர்ந்தது. இந்தியாவில் மின்சக்தி அளிப்பு விவரங்களை அடுத்த பக்க அட்டவணையில் காணலாம்.

இந்தியாவின் பொருளாதாரம் கிராமங்களில் இருக்கிறது என்பதை உணர்ந்து கிராமப்புறங்களுக்கு மின் வசதி செய்து, வேளாண்மைத் துறைக்கு உதவுவது மின்சக்தி வளர்ச்சியின் ஒரு சிறப்பு அம்சமாகும்.

## (H) கல்வி

நமது மக்களில் பெரும்பான்மையோர் கல்வி அறிவற்றோர். சான்றாக, 1961ம் ஆண்டு மக்கள் தொகை கணிப்புப்படி நமது மக்களுள் 24 சதவீத மக்களே கல்வியறிவு பெற்றிருந்தனர். மொத்த ஆண்களில் 34.5 சதவீதமும், பெண்களில் 13 சதவீதமும் கல்வி அறிவு பெற்றவர்கள். எனவே அறியாமை எனும் இருளை அகற்றிக் கல்வி ஒளி பரப்பி, உண்மைக் கண்களை திறந்து விட ஐந்தாண்டுத் திட்ட காலங்களில் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. பொதுவாக கல்வி வளர்ச்சிக்கு முக்கிய பொறுப்பேற்க வேண்டியவர்கள் மாநில அரசுகளே. எனினும் மத்திய அரசு கல்வியின் தரத்தை நிர்ணயித்தல் உயர் கல்வியைப் பேணுதல் ஆகியவற்றில் அக்கறை காட்டுகிறது. 196–199ஆம் பக்கப் பட்டியல்கள் கல்வித் துறையில் நாம் பெற்ற முன்னேற்றத்தைக் காட்டுகின்றன.

## (I) மருத்துவம்

இந்தியாவில் மக்களின் சராசரி ஆயுட்காலம் மிகவும் குறைவாக இருந்தது. சான்றாக 1941–50ல் ஆண்களின் சராசரி ஆயுட் காலம் 32.5 ஆண்டுகளாகவும் பெண்களின் சராசரி ஆயுட்காலம் 31.7 ஆண்டுகளாகவும் இருந்தன. மருத்துவம்–சுகாதாரத் துறையில் அரசு திட்டமிட்டுப் பல நடவடிக்கைகளை மேற் கொண்டமையால் இன்று நம் மக்களின் சராசரி ஆயுட்காலம் உயர்ந்துள்ளது. 1966-70ல் (உத்தேச மதிப்பீட்டின்படி) ஆண்களின் சராசரி வயது எதிர்பார்ப்பு 53.9 ஆண்டுகளாகவும், பெண்களின் சராசரி வயது எதிர்பார்ப்பு 51.9 ஆண்டுகளாகவும் உயர்ந்துள்ளன. இதற்குக் காரணம், மருத்துவ, சுகாதார வசதிகளைப் பெருக்கியதே ஆகும். இது சார்பான வளர்ச்சிக் காரணிகளை 200-ம் பக்க அட்டவணையில் காண்க.

## மின்சக்தி அளிப்பின் வளர்ச்சி

| ஆண்டு | மின் உற்பத்தி இயந்திரத் தொகுப்புகளின் நிறுவப்பட்ட உற்பத்திக் கொள்ளளவு Installed capacity of generating plants | | | | ஓராண்டில் உயர்ந்த பட்சத் தேவையின் மொத்த அளவு Mw | உற்பத்தி செய்த மின்சக்தி அளவு (கோடி Kwhல்) | விற்பனை செய்யப்பட்ட அளவு (கோடி Kwhல்) |
|---|---|---|---|---|---|---|---|
| | நீராவி | டீசல் | நீர் மின்சக்தி | மொத்தம் | | | |
| 1939 | 541 | 87 | 442 | 1,070 | 576 | 244 | 203 |
| 1947 | 757 | 98 | 508 | 1,363 | 883 | 407 | 336 |
| 1951 | 1,097 | 163 | 575 | 1,835 | 1,205 | 586 | 479 |
| 1956 | 1,597 | 228 | 1,061 | 2,886 | 1,990 | 966 | 796 |
| 1960–61 | 2,436 | 300 | 1,917 | 4,653 | 3,546 | 1,694 | 1,395 |
| 1965–66 | 4,417 | 486 | 4,124 | 9,027 | 7,306 | 3,299 | 2,673 |
| 1966–67 | 4,887 | 448 | 4,757 | 10,092 | 8,292 | 3,638 | 2,913 |
| 1967–68 | 5,975 | 421 | 5,487 | 11,883 | 9,703 | 4,119 | 3,274 |

**Source :- India—A Reference Annual, 1970. p. 295.**

**மின்சாரம் அளிக்கப்பட்ட நகரங்களும் கிராமங்களும்**

| வ. எண் | மக்கள் தொகை பிரிவு (Population Range) | 1961-ம் ஆண்டு மக்கள் தொகை கணக்குப் படி மொத்தம் | மின்சாரம் அளிக்கப்பட்ட மொத்த நகரங்கள், கிராமங்கள் எண்ணிக்கை (மார்ச் இறுதியில்) 1951 | 1956 | 1961 | 1968 | 1969 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 9999 வரை | 5,67,217 | 3,580 | 9,886 | 25,358 | 60,937 | 71,824 |
| 2 | 10,000 முதல் 49,999 வரை | 2,114 | 600 | 1,140 | 1,590 | 2,017 | 2,017 |
| 3 | 50,000—1 லட்சம் வரை | 139 | 115 | 136 | 138 | 139 | 139 |
| 4 | 1 லட்சத்திற்கு மேல் | 107 | 102 | 104 | 106 | 107 | 107 |
| | மொத்தம் | 5,69,577 | 4,397 | 11,266 | 27,192 | 63,200 | 74,087 |

Source: India–A reference Annual 1970 p. 299

**மாணவர்கள், ஆசிரியர்கள், நிறுவனங்கள் வளர்ச்சி**

| வ. எண் | விவரம் | 1950–51 | 1955–56 | 1960–61 | 1964–65 | 1965-66 உத்தேச மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|
| 1 | மொத்த நிறுவனங்கள் | 2,86,860 | 3,66,641 | 4,72,655 | 7,53,416 | 7,27,263 |
| 2 | மொத்த மாணவர்கள் (லட்சத்தில்) | 255·43 | 339·24 | 479·63 | 674·17 | 691·63 |
| 3 | மொத்த ஆசிரியர்கள் (லட்சத்தில்) | 8·04 | 11·07 | 15·08 | 20·13 | 21·24 |

Source: India 1970–p. 61

**கல்விக்கான செலவின் வளர்ச்சி**

(ரூபாய் கோடியில்)

| வ. எண் | செலவினம் | 1950–51 | 1955–56 | 1960–61 | 1964–65 | 1965–66 உத்தேச மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|
| 1 | நேரடிச் செலவு | 91·05 | 144·81 | 257·36 | 421·78 | 467·31 |
| 2 | மறைமுகச் செலவு | 23 33 | 44·85 | 87·02 | 121·73 | 119·02 |
| | மொத்தம் | 114·38 | 189·66 | 344·38 | 534·51 | 586·33 |

Source :—India 1970 p. 61.

**திட்டக் காலங்களில் செலவு**
(ரூபாய் கோடியில்)

| வ. எண் | முக்கிய இனம் | முதல் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் | நான்காம் திட்டம் (1969–74) |
|---|---|---|---|---|---|
| 1 | ஆரம்பக் கல்வி | 85 | 95 | 179 | 234·74 |
| 2 | உயர்நிலைப் பள்ளிக் கல்வி | 20 | 51 | 103 | 118·32 |
| 3 | பல்கலைக் கழகக் கல்வி | 14 | 48 | 87 | 183·52 |
| 4 | இதர கல்வித் திட்டங்கள் | 34 | 79 | 227 | 286·08 |
| | மொத்தம் | 153 | 273 | 596 | 822·66 |

**Source :—India 1970 p. 61.**

சாதனைகளும் இலக்குகளும்

| வ. எண் | விவரம் | 1950–51 | 1955–56 | 1960–61 | 1965–66 | 1968–69 | நான்காம் திட்ட இலக்கு |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | மாணவர்கள் எண்ணிக்கை, இலட்சத்தில் (I to V) வகுப்புகள் | 9·5 | 25·7 | 349·9 | 492·7 | 559·3 | 683·4 |
| | 6 முதல் 11 வயது வரையான மக்கள் தொகையில் சதவீதம் | 43·6 | 50·0 | 62·4 | 74·9 | 77·9 | 85·0 |
| 2 | மாணவர்கள் எண்ணிக்கை இலட்சத்தில் (VI to VIII) வகுப்புகள் | 31.2 | 42·9 | 67·0 | 103·3 | 127·2 | 184·6 |
| | 11 முதல் 14 வயது வரையான மக்கள் தொகையில் சதவீதம் | 12·9 | 15·9 | 22·5 | 30·3 | 33·5 | 42·1 |
| 3 | மாணவர்கள் எண்ணிக்கை இலட்சத்தில் (IX to XI) வகுப்புகள் | 12 6 | 19·8 | 30·3 | 51·9 | 65·9 | 104·0 |
| | 14 முதல் 17 வயது வரையான மக்கள் தொகையில் சதவீதம் | 5·6 | 7·9 | 11·1 | 16·7 | 19·4 | 26·0 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 4 | பல்கலைக்கழக மட்டத்தில் (கலை, அறிவியல், வணிகவியல்...) மாணவர்கள் எண்ணிக்கை | 3·1 | 5·5 | 7·4 | 12·3 | 16·9 | 26·6 |
| | 17 முதல் 23 வயது வரையான மக்கள் தொகையில் சதவீதம் | 0·8 | 1·2 | 1·5 | 2·3 | 2·9 | 3·8 |
| 5 | ஆரம்பப் பள்ளிகள் எண்ணிக்கை | 2,09,671 | 2,78,135 | 3,30,339 | 3,91,064 | 3,99,109 | — |
| 6 | நடுத்தரப் பள்ளிகள் எண்ணிக்கை | 13,596 | 21,730 | 49,663 | 75,798 | 83,943 | — |
| 7 | உயர்நிலைப் பள்ளிகள் எண்ணிக்கை | 7,288 | 10,838 | 17,257 | 25,090 | 32,433 | — |
| 8 | பயிற்சிப் பள்ளிகள் எண்ணிக்கை | 782 | 930 | 1,138 | 601 | — | — |
| 9 | பயிற்சிக் கல்லூரிகள் எண்ணிக்கை | 53 | 107 | 478 | 1,272 | — | — |
| 10 | கலை, அறிவியல், வணிகவியல் கல்லூரிகள் எண்ணிக்கை | 542 | 772 | 1,122 | 1,891 | 2,163 | — |
| 11 | பல்கலைக்கழகங்களின் எண்ணிக்கை | 27 | 32 | 45 | 64 | 75 | — |

**Source :- India—1970, p. 63**

| | | 1950–51 | 1960–61 | 1965–66 | 1968–69-ல் எதிர் பார்த்தது | நான்காம் திட்ட இலக்கு |
|---|---|---|---|---|---|---|
| 1 | மருத்துவபணியில் உள்ள படுக்கைகள் | 1,13,000 | 1,85,600 | 2,40,100 | 2,55,700 | 2,81,600 |
| 2 | மருத்துவர்கள் (பணிபுரிவோர்) | 56,000 | 70,000 | 86,000 | 1,02,520 | 1,37,930 |
| 3 | நர்ஸ்கள் (பணிபுரிவோர்) | 15,000 | 27,000 | 45,000 | 61,000 | 88,000 |
| 4 | ஆரம்ப மருத்துவ வசதி நிலையங்கள் (Preliminary Health Centres) | — | 2,800 | 4,631 | 4,919 | 5,427 |
| 5 | மருத்துவக் கல்லூரிகள் | — | 57 | 87 | 93 | 103 |
| 6 | அதில் சேர்க்கப்படுவோர் | — | 5,800 | 10,520 | 11,500 | 13,000 |

**Source: Third Plan (p.210) & Fourth Five year Plan p. 396.**

(5) மூலதனத் திரட்சி (Capital Formation)

ஒரு நாடு பொருளாதார வளர்ச்சியில் மிகவும் பின் தங்கியிருப்பதற்கான காரணங்களுள் மிக முக்கியமான—தலையாய—காரணமாக கருதப்படுவது மூலதனத் திரட்சி போதுமான அளவு இல்லாமையே ஆகும். எனவே இந்தியப் பொருளாதார வளர்ச்சி பற்றிப் படிக்கும் பொழுது இந்தியாவில் மூலதனத் திரட்சியின் நிலை, போக்கு பற்றி அறிதல் அவசியம்.

'மூலதனத் திரட்சி' என்பதற்கு பேராசிரியர் நர்க்ஸ் கூறும் பொருள் வருமாறு: 'ஒரு சமுதாயமானது தனது நடப்பு உற்பத்தி முழுமையையும் உடனடி நுகர்வுத் தேவைக்கோ, விருப்பங்களுக்கோ பயன்படுத்தி விடுவதில்லை. ஆனால் அதில் ஒரு பகுதியை, மூலதனப் பொருள்கள், கைக்கருவிகள், துணைக் கருவிகள், இயந்திரங்கள், இயந்திரத் தொகுப்புகள், சாதனங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் உற்பத்தி முயற்சிக்கு ஊக்க மூட்ட வல்ல பல வகை உண்மை மூலதனத்தை—மேல் உற்பத்திக்குப் பயன்படுத்தும். இம்முறையின் இன்றியமையாதது என்னவென்றால், சமுதாயத்தின் நடப்புச் செல்வத்தின் ஒரு பகுதியை மூலதனப் பொருள்களின் வளர்ச்சிக்குப் பயன்படுத்துதல் ஆகும். இதன் மூலம் எதிர்கால நுகர்வுப் பொருள்கள் உற்பத்தியைப் பெருக்க இயலும்'[1]. இவ்வாறாகச் சமுதாயத்தின் எதிர்கால உற்பத்தி ஆற்றலுக்கு வழி வகுக்க, நிகழ்கால நுகர்வை கட்டுப் படுத்த வேண்டும்.

மூலதனத் திரட்சி பற்றி மதிப்பிடும் பொழுது நாட்டின் பொருளாதார அமைப்பை 3 பிரிவுகளாக பிரிப்பது வழக்கம். அவையாவன:

(i) குடும்பத் துறை (House hold Sector) குடும்பங்கள் அனைத்துடன், தனி நபர் தொழில், பங்காளித் தொழில் போன்ற உற்பத்தி துறைகள் இதில் அடங்கும்.

(ii) கூட்டமைப்புத் துறை (Corporate Sector) கூட்டுப் பங்கு நிறுவனங்கள் இதில் அடங்கும்.

(iii) அரசுத் துறை (Government Sector)

பொதுத் துறை நிறுவனங்கள், மற்றும் அரசின் மூலதனச் சொத்துக்கள் இதில் கொள்ளப்படும். ஒரு குறிப்பிட்ட ஆண்டுக்

1. Nurkse R, 'Problems of Capital, Formation in under developed Countries' p. 2

காலத்தில் இம்மூன்று துறைகளின் சொத்து மதிப்புக்களில் ஏற்படும் நிகர மாற்றங்களின் கூட்டு மதிப்பே அந்நாட்டின் 'நிகர உள் நாட்டு மூலதனத் திரட்சி' (Net Domestic Capital Formation) எனப் படும். இதோடு அந்நாட்டுக்கு கிடைக்கும் அயல் நாட்டு மூல தனத்தையும் சேர்த்துக் கொண்டால் அந்நாட்டின் நிகர மூலதனத் திரட்சி அல்லது நிகர முதலாக்கத்தை அறியலாம்.

1947க்குப் பின்பு நமது நாட்டின் மூலதனத் திரட்சியினைப் பற்றி 3 மதிப்பீடுகள் செய்யப்பட்டுள்ளன. இதில் ஒன்றினை ரிசர்வ் பேங்கும், 1961, 1969 ஆகிய ஆண்டுகளில் 'மத்திய புள்ளி விவர அமைப்பு' (Central Statistical Organisation) இரண் டினையும் மேற் கொண்டன. மத்திய புள்ளி விவர அமைப்பானது 1948-49 முதல் 1960-61 வரையான காலத்திற்கும் 1960-61 முதல் 1965-66 வரையான காலத்திற்கும் இரு மதிப்பீடுகளைச் செய்தது. முதலில் மத்திய புள்ளி விவர அமைப்பு (C.S.O.) மேற் கொண்ட மதிப்பீட்டின்படி சில விவரங்களை இங்கு ஆராயலாம்.

இந்தியாவில் திட்ட காலங்களில் மூலதனத்திரட்சி நடப்பு விலையில்
(மொத்த உள்நாட்டு உற்பத்தியில் சதவீதம் சராசரி ஓர் ஆண்டுக்கு)

| வ. எண் | இனங்கள் | முதல் திட்ட காலத்தில் | இரண்டாம் திட்ட காலத்தில் | மூன்றும் திட்ட காலத்தில் |
|---|---|---|---|---|
| (i) | மொத்த உள் நாட்டு மூல தனத் திரட்சி | 10·0 | 14·2 | 16·7 |
| (ii) | தேய்மான மதிப்பு (Depreciation) | 3·6 | 4·6 | 5·0 |
| (iii) | நிகர உள்நாட்டு மூல தனத் திரட்சி (i—ii) | 6·4 | 9·6 | 11·7 |
| (iv) | நாட்டினுள் வந்த நிகர அயல் நாட்டு மூல தனம் (Net Capital inflow) | 0·4 | 2·9 | 2·4 |
| (v) | சேமிப்பு | 6·0 | 6·7 | 9·3 |
| (vi) | மொத்த உள் நாட்டு உற் பத்தி மதிப்பு (சந்தை விலை அடிப் படையில்) | 100·0 | 100·0 | 100·0 |

Source: Estimates of capital formation C. S. O.

மொத்த உள் நாட்டு மூலதனத் திரட்சியும் நிகர உள் நாட்டு மூலதனத் திரட்சியும் முறையே 10 சதவீதம் 6.4 சதவீதம் ஆக முதல் திட்டத்தில் இருந்தன. இவை முறையே 16.7 சதவீதம், 11.7 சதவீதம் ஆக மூன்றும் திட்டத்தில் உயர்ந்துள்ளன. இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், தேய்மான மதிப்பானது படிப்படியாக உயர்ந்துள்ளது. ஆனால் மொத்த உட்நாட்டு மூலதனத் திரட்சியுடன் ஒப்பிடுகையில் முதல் திட்டத்தில் 36.2 சதவீதம் எனவும் மூன்றும் திட்டத்தில் 30.2 சதவீதம் எனவும் அமைந்துள்ளது. வெளி நாடுகளிலிருந்து கிடைத்த அந்நிய மூலதனத்தின் சதவீதமோ 0.4 சதவீதத்திலிருந்து 2 4 சதவீதத்திற்கு அதிகரித்துள்ளது அதன் காரணமாக உள் நாட்டு சேமிப்பும் 6 சதவீதத்திலிருந்து 9-3 சதவீதத்திற்கு மூன்றும் திட்டத்தில் உயர்ந்துள்ளது.

அடுத்து முதல்—உற்பத்தி விகிதம் எனும் கருத்தை (Capital-Output Ratio) அறிய வேண்டும். ஓர் அலகு உற்பத்தி பண்ண எத்தனை அலகு மூலதனம் தேவை என்று கூறும் விகிதமே 'முதல் உற்பத்தி விகிதம்' எனப்படும். சான்றாக ஓர் ஆண்டில் ரூ 2,000 மதிப்புடைய ஒரு இயந்திரத்தைக் கொண்டு, ரூ 1,000 மதிப்புடைய பொருள்களை உற்பத்தி செய்வதாகக் கொள்வோம். அவ்வாறெனில் ரூ 1000 மதிப்புடைய அலகு உற்பத்திக்கு ரூ 2000 அலகு மதிப்புடைய முதல் அல்லது மூலதனம் தேவைப்படுகிறது. எனவே இங்கு முதல் உற்பத்தி விகிதமானது 2 ஆகும். இந்த விகிதமானது முதல் ஆளப்படும் தொழிலுக்குத் தொழில் மாறுபடக் கூடும். காலத்திற்குக் காலம் மாறுபடக்கூடும். பின் தங்கிய பொருளாதார நாடுகளில் ஆரம்பக் காலங்களில் முதலீடு அதிகமாக இருக்கும். உற்பத்தி குறைவாக இருக்கும். இதற்குக் காரணம் நாட்டின் பொருளாதார அமைப்பின் பல துறைகளில் முதலீடு அதிகரிக்கலாம். சான்றாக, உள்ளமைப்புத் துறைகளான கல்வி, போக்குவரத்து, மின், நீர்ப்பாசன வசதிகளில் அதிக முதலீடு செய்ய நேரிடலாம். அதே போன்று கனரக அடிப்படைத் தொழில்களாகிய இரும்பு, எஃகு, பொறியியல், உலோகத் தொழில், இயந்திரக் கருவிகள் தொழில் போன்ற துறைகளிலும் முதலீடு அதிகம் இருக்கலாம். ஆனால் அத்துறைகளின் முதலீட்டுக்கு ஏற்ற அளவு உற்பத்தி அளவு இருக்காது. இதனால் முதல் உற்பத்தி விகிதம் அதிகமாகத் தோன்றலாம். ஆனால் காலப்போக்கில் குறையலாம். ஏனெனில் பேரளவு கனரகத் தொழில்களின் முதலீடு உற்பத்தியில் பூரணமாகச் செயல்பட நேரிட்டுவிட்டால் பின்பு அதில் கிட்டும் வருவாய் கொண்டு நுகர்வுப் பொருள்கள் தொழிற்

சாலையைக் கவனிக்கலாம். அவ் வேலைகளில் குறைந்த முதலீடு கொண்டு அதிக உற்பத்தி பெற வாய்ப்புண்டு.

இனி இந்தியாவில் .1960-61 விலைகளின் அடிப்படையில் முதல்-உற்பத்தி வளர்ச்சி வீதத்தைக் காணலாம்.

முதல்-உற்பத்தி விகிதம்

| | | |
|---|---|---|
| முதல் திட்டம் | ... | 3·3 |
| இரண்டாம் திட்டம் | ... | 3·8 |
| மூன்றும் திட்டம் | ... | 7·1 |

நமது இரண்டாம் திட்ட காலத்தில் கனரகப் பேரளவு தொழில் களிலும், இயந்திரத் தொழில்களிலும், மூலதனப் பொருள்கள் தொழில்களிலும், செய்யப்பட்ட முதலீடானது அதிகரித்துவிட்டமை யால் அத்திட்ட காலத்தில் முதல் உற்பத்தி விகிதமானது 3·8க்கு உயர்ந்து விட்டது. ஆனால் மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட காலத் தில் இது 7·1 என்ற அளவிற்கு உயர்ந்தமைக்குக் காரணம் என்ன? இதற்கு விடையாக 3 காரணிகளைக் கூறலாம்.

(i) கனரக, அடிப்படைத் தொழில்களின் முதலீட்டுச் செலவு வீதம் கணிசமாக அதிகரித்து விட்டது.

(ii) 1962ல் சீனத் தாக்குதல் காரணமாக நமது இராணுவ அமைப்பும், படைக் கலன் துறையும் வலுவாக்கப் பட்டதால் பாது காப்புத் துறையில் முதலீட்டுச் செலவு அதிகரித்தது.

(iii) இயற்கைச் சூழ்நிலையில் ஏற்பட்ட மாற்றங்களினுல் நாடு முழுதும் ஏற்பட்ட வறட்சியும் அதன் காரணமாக 1965-66ல் வேளாண்மை உற்பத்தியின் அளவு குறைந்தமையும்.

இனி அடுத்ததாக சேமிப்பு, முதலீடு பற்றிய ரிசர்வ் பேங்கின் மதிப்பீடுகளைக் காணலாம், இந்திய பொருளாதாரத்தின் சேமிப்பு, முதலீடு பற்றிய மதிப்பீடுகளை அவ்வப்பொழுது இந்திய ரிசர்வ் பேங்க் வெளியிடுகிறது. மார்ச் 1960, ஆகஸ்ட் 1961, மார்ச் 1965, மார்ச் 1967, செப்டம்பர் 1969 ஆகிய காலங்களில் வெளி யிட்ட மதிப்பீடுகள் கொண்டு துறைவாரியான சேமிப்பு-முதலீட்டு அளவினைக் காண்போம்,

1954-55ல் அயல்நாட்டு மூலதனத்தின் அளவு மொத்த தேசிய வருமானத்தில் 0.5 சதவீதம் மட்டுமே ஆனுல் இரண்டாம் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டகாலங்களில் நமது முதலீடு பேரளவு

அடிப்படைத் தொழில்களில் அதிகரித்தமையாலும், பாதுகாப்புத் துறையை வலுப்படுத்தியமையாலும் நாம் பெற்றுக் கொண்ட அயல்நாட்டு மூலதனமும் அதிகரித்து வந்திருக்கிறது. 1968-69, 1969-70 ஆண்டுகளில் சற்று குறைந்து காணப்படுகிறது. அது

இந்தியப் பொருளாதாரத்தில் நிகர உள்நாட்டுச் சேமிப்பும் முதலீடும்

(தேசிய வருமானத்தில் சதவீதம்)

| ஆண்டு | நிகர உள் நாட்டுச் சேமிப்பு (1) | அயல் நாட்டு மூலதன அளிப்பு (2) | நிகர முதலீடு (1+2)=(3) | நிகர முதலீட்டின் பங்கீட்டுச் சதவீதம் நிகர உள் நாட்டு சேமிப்பில் | அயல் நாட்டு மூல தனத்தில் |
|---|---|---|---|---|---|
| 1954–55 | 8·0 | 0·5 | 8·5 | 93·4 | 6·6 |
| 1963–64 | 12·0 | 2·9 | 14·9 | 80·6 | 19·4 |
| 1964–65 | 10·7 | 3·3 | 14·0 | 76·4 | 23·6 |
| 1965–66 | 10·8 | 2·9 | 13.7 | 78·9 | 21·1 |
| 1966–67 | 8·0 | 3·6 | 11·6 | 69·0 | 31·0 |
| 1967–68 | 8·0 | 3·1 | 11·1 | 72·1 | 27·9 |
| 1968–69 | 9·1 | 1·7 | 10·8 | 84·3 | 15·4 |
| 1969–70 | 8·5 | 0·8 | 9·3 | 91·4 | 8·6 |

**Source :** Reserve Bank of India Bulletins

போல நிகர உள்நாட்டு சேமிப்பு 1963-64ல் அதிகரித்துள்ளது. ஆனால் 1964-65 முதல் குறைந்து காணப்படுகிறது. இதற்குக் காரணங்களாக விலைவாசி உயர்வினையும், 1964-65ல் ஏற்பட்ட வறட்சி, வேளாண்மைத்துறை உற்பத்தியில் ஏமாற்றம் போன்றவை களைக் கூறலாம்.

206-ம் பக்கத்தில் உள்ள அட்டவணையை நோக்கும்பொழுது நிகர உள்நாட்டுச் சேமிப்பில், கூட்டமைப்புத் துறையின் பங்கு மிகக் குறைவாக உள்ளது. முதல் இரு திட்ட காலங்களில் சேமிப்பு வருமான விகிதமானது தேசிய வருமானத்தில் 6·5

**உள்நாட்டுச் சேமிப்பில் ஒவ்வொரு துறையின் பங்கு**

| காலம் | தேசிய வருமானத்தில் சதவீதம் | | | | மொத்தச் சேமிப்பில் சதவீதம் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | அரசுத் துறை | கூட்டமைப் புத் துறை | குடும்பத் துறை | நிகர உள் நாட்டுச் சேமிப்பு | அரசுத் துறை | கூட்டமைப் புத் துறை | குடும்பத் துறை |
| முதல் திட்ட காலம் | 1·2 | 0·5 | 4·9 | 6·5 | 18 | 8 | 74 |
| 2–ம் திட்ட காலம் | 1·6 | 0·4 | 6·5 | 8·4 | 18 | 5 | 77 |
| 1961–62 & 1962–63 | 2·5 | 0·7 | 6·3 | 9·5 | 26·3 | 7·4 | 66·3 |
| 1965–66 | 3·2 | 0·4 | 7·2 | 10·8 | 29·5 | 4·0 | 66·5 |
| 1966–67 | 1·8 | 0·5 | 5·7 | 8·0 | 21·8 | 6·5 | 71·7 |
| 1967–68 | 1·0 | 0·2 | 6·8 | 8·0 | 12·7 | 3·1 | 84·2 |
| 1968–69 | 1·9 | 0·3 | 6·9 | 9·1 | 20·6 | 3·4 | 75·9 |
| 1969–70 | 1·2 | 0·4 | 6·8 | 8·5 | 14·0 | 5·0 | 81·0 |

**Source : Reserve Bank of India Bulletins.**

சதவீதத்திலிருந்து 8·4 சதவீதத்திற்கு உயர்ந்துள்ளது. இதற்கு முக்கிய காரணம் நகர்ப்புற குடும்பத் துறையின் சேமிப்பு 48 சதவீதத்திலிருந்து 58 சதவீதத்திற்கு உயர்ந்ததுவே. ஆனால் கிராமப்புறக் குடும்பத் துறைச் சேமிப்போ குறைந்து விட்டது. 1966-67லிருந்து அரசுத்துறைச் சேமிப்பு குறைந்தமைக்கு காரணங்கள், விலைவாசி உயர்வால் ஊழியர்களுக்கு அதிக ஊழியம் வழங்கியதால் பொதுச் செலவு அதிகரித்தமை, பொதுத் துறை நஷ்டம் போன்றவைகளாகும்.

நான்காம் திட்டத்தின் நடுப்பருவ மதிப்பீட்டின்படி, இத்திட்ட காலத்தில் சராசரி ஓராண்டு முதலீடு குறைவாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. சராசரி ஓராண்டு முதலீடானது நிகர உள் நாட்டு உற்பத்தியில் 10 சதவீதமாக இருக்கலாம். உள் நாட்டுச் சேமிப்பில் சராசரி ஓராண்டு தனியார் துறை சேமிப்பு 7·3 சதவீதமாகவும் பொதுத்துறை சேமிப்பு 1·6 சதவீதமாகவும் அமையக் கூடும். அவ்வாறானால் மொத்தச் சேமிப்பு 7·3+1·6= 8·9 சதவீதமாக அமையும். சராசரி ஓராண்டு முதலீடோ 10 சத வீதம் என்று காணப்படுகிறது. எனவே எஞ்சிய 1·1 சதவீதத் தொகையானது வெளிநாட்டுச் சேமிப்பிலிருந்து அயல்நாட்டு மூல தனமாகப் பெறப்படும்.

6. வேலைப் பகுப்பு அமைப்பு (Occupational Structure)

ஒரு நாட்டின் மக்கள் அந்நாட்டின் பலதிறப்பட்ட வேலைகளில் எவ்வாறு பகிர்ந்து, பொருளாதார உற்பத்தியில் ஈடுபடுகின்றனர் என்பதை விளக்குவதே 'வேலைப்பகுப்பு அமைப்பு' எனலாம்.

பொதுவாக ஒரு நாட்டின் வேலை வாய்ப்புகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

(i) முதல்நிலைத் தொழில்கள்: வேளாண்மை, கால்நடைக் கண் காணிப்பு, மீன்துறை, காடுகள், சுரங்கம் போன்ற இயற்கையோடு தொடர்புடைய துறைத் தொழில்களில் ஈடுபடுவோர்.

(ii) இரண்டாம்-நிலைத் தொழில்கள், சிற்றளவு, பேரளவுத் தொழில்கள் சில வேளைகளில் சுரங்கத் தொழிலையும் சேர்ப்பதுண்டு.

(iii) மூன்றாம் நிலைத் தொழில்கள்: போக்குவரத்து, செய்தித் தொடர்பு, வங்கி நிதி நிறுவனங்கள், பல்வகைப்பணிகள் (Service) துறைகளில் ஈடுபடுவோர் (அதாவது உள்ளமைப்புத் துறைகளில் ஈடுபடுவோர்)

ஒரு நாட்டின் உண்மைத்தலா வருமானத்திற்கும், அந்நாட் டின் வேலைப் பகுப்பு அமைப்புக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

இதனைத்தான் காலின் கிளார்க் (Colin Clark) தனது பொருளாதார வளர்ச்சியின் வரையறைகள் என்ற நூலில் இவ்வாறு கூறுகிறார். 'மூன்றும் நிலைத் தொழில்களில் ஈடுபட்டிருக்கும் உழைக்கும் மக்கட் தொகை அதிக வீதமாக இருக்குமானால் அந்நாட்டின் சராசரி உண்மைத்தலா வருமானம் அதிகமாக இருக்கும்; குறைந்த அளவு மக்கள்மூன்றும் நிலைத் தொழிலிலும், அதிக வீத மக்கள் முதல்நிலைத் தொழிலிலும் ஈடுபட்டிருந்தால் உண்மைத் தலா வருமானம் மிகக் குறைவாக இருக்கும்.'[1] இவ்வாறு உண்மைத் தலாவருமானத்திற் கும், வேலைப் பகுப்பு அமைப்புக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக கூறுகிறார். இம்முடிவையே ஆசிரியர் ஏ.ஜி.பி. ஃபிஷரும் (A.G.B. Fisher) ஏற்றுக் கொள்கிறார்.

இக்கூற்றினை நாம் திட்டவட்டமாக நிருபிக்க இயலும்.

| நாடு | அமெரிக்க டாலரில் தலா வருமானம் 1969ஆம் ஆண்டு கணிப்புப்படி | வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் மக்கள்தொகை சதவீதம் |
|---|---|---|
| அமெரிக்கா | $ 4,240 | 6 |
| இங்கிலாந்து | $ 1,890 | 4 |
| மேற்கு ஜெர்மனி | $ 2,190 | 11 |
| ஆஸ்திரேலியா | $ 2,300 | 10 |
| ஜப்பான் | $ 1,430 | 24 |
| இந்தியா | $ 110 | 70 |
| பாகிஸ்தான் | $ 110 | 68 |

**Source: Eastern Economist Annual-1972,** Statistics Profile (pp. 1299-1301)

இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் அதிக மக்கட் தொகை முதல் நிலைத் தொழிலாகிய விவசாயத்தை நம்பியிருப்பதால் தான் உண்மைத் தலா வருமானம் குறைவாக உள்ளது என்பதைத் தெளிவாக்குகிறது. எனவேதான், விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு, வேளாண்மைத் துறையில் ஈடுபட்டிருக்கும்

1—"The Conditions of Economic Progress" By Colin Clark—P. 182 (1940 Edition)

மக்களை இரண்டாவது, மூன்ருவது நிலைத் தொழில்கட்கு மாற்றுவது இன்றியமையாதது என்பது புலனுகிறது.

ஆனல் இந்தியாவில் முதல் நிலைத்தொழிலில் ஈடுபட்டிருப்போர் எண்ணிக்கை 1901 முதல் இன்னும் மாருமல் இருந்து வருகிறது. இதனுல்தான் மக்களின் உண்மைத் தலா வருமானத்தில் குறிப்பிடத் தக்க மாறுதல்கள் ஏற்படவில்லை.

இந்தியாவில் 1901 முதல் 1967 முடிய வேலைப் பகுப்பு அமைப்பு

| வ. எண் | இனம் | 1901 | 1931 | 1951 | 1961 | 1967 |
|---|---|---|---|---|---|---|
| 1 | முதல் நிலைத் தொழில் | 73·2 | 72·3 | 72·1 | 74·6 | 71.8 |
| 2 | இரண்டாம் நிலைத்தொழில் | 10·9 | 11·7 | 10·6 | 10·2 | 12·6 |
| 3 | மூன்ரும் நிலைத் தொழில் | 15·9 | 16·0 | 17·3 | 15·0 | 15·6 |

**Source :** Census of India, 1961 Commerce Annual (1968).

1901 முதல் 1967 வரை ஏறத்தாழ மாற்றம் அதிகம் இல்லாமல் வேலைப் பகுப்பு அமைப்பு காணப்படுகிறது. இரண்டாம் நிலைத் தொழிலும், மூன்ரும் நிலைத் தொழிலும், 1 அல்லது 2 சதவீதத்திற்குள் சிறு மாற்றம் மட்டுமே காட்டுகிறது. 1950க்குப் பின்பு தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டும் கூட முதல் நிலைத் தொழிலை நம்பியிருப்போர் எண்ணிக்கை குறையாமல் இருப்பது வருந்துதற்குரியது. எனவே இந்தியாவின் வறுமையை ஒழிக்கவும், வேலையின்மை நிலையைப் போக்கவும் வேண்டுமானல் நமது வேலைப் பகுப்பு அமைப்பில் சீரிய மாற்றங்களை விளைவித்து, மூன்ரும் நிலை, இரண்டாம் நிலைத் தொழிலை நம்பியிருப்போர் எண்ணிக்கையைக் கூட்ட வேண்டும்.

210-ம் பக்கத்திலுள்ள அட்டவணை இந்தியாவில் உழைக்கும் மக்கள் தொகை (Labour force) பல துறைத் தொழில்களில் பங்கிடப்பட்டிருக்கும் சதவீதத்தைக் காட்டுகிறது.

1951 முதல் 1967 வரையான 16 ஆண்டுக்காலத்தில் ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாக கோடிக்கணக்கான ரூபாயை இரண்டாம்நிலை, மூன்ரும்நிலைத் தொழில்களில் முதலீடு செய்தும்

கூட, முதல்நிலைத் தொழிலை நம்பியிருப்போர் சதவீதம்தான் கூடியிருக்கிறதே தவிர பின்னிரண்டு நிலைத் தொழிலைச் சார்ந்தோர் சதவீதம் குறைவாகவே உள்ளது. கூறப்போனால் மூன்றும் நிலைத் தொழிலைச் சார்ந்தோர் சதவீதம் 1961-ம் ஆண்டைவிட 1967-ல் 0·4 சதவீதம் குறைந்துள்ளது. எனவே தக்க முயற்சிகளை அரசும்,

**உழைக்கும் மக்களின் சதவீதம்**

| வ. எண் | துறை இனம் | 1961 | 1961 | 1967 |
|---|---|---|---|---|
| 1 | வேளாண்மை (காடுகள், கால்நடை, மீன் துறை உள்பட) | 72·1 | 72·3 | 73·2 |
| 2 | உற்பத்தி, சுரங்கம், ஆக்கல் துறைத் தொழில்கள் | 10·6 | 11·7 | 10·9 |
| 3 | போக்குவரத்து, செய்தித் தொடர்பு, வணிகம் முதலியன | 6·8 | 5·6 | 5·9 |
| 4 | பிறபணித் துறைகள் | 10·5 | 10·4 | 10·0 |
| 5 | வேளாண்மை சார்பற்ற நடவடிக்கைத் தொழில்கள் (2 + 3 + 4) | 27·9 | 27·7 | 26·8 |
| | மொத்தம் | 100·0 | 100·0 | 100·0 |

**Source :- Census of India 1961 and Commerce Annual 1968**

திட்டக்குழுவும் மேற்கொண்டு, மக்கள் தொகைப் பெருக்கத்தைக் குறைத்து, வேளாண்மையைச் சார்ந்தோர் சதவீதத்தைக் குறைத்து, மூன்றும் நிலைத் தொழில்களைச் சார்ந்தோர் சதவீதத்தை அதிகரிக்கவில்லை என்றால் நம் மக்களின் உண்மைத் தலா வருமானம் (Real per capita income) பெருகிட வாய்ப்பு இல்லை.

**(7) விலைவாசிப் போக்கு (Price behaviour)**

ஒருநாட்டின் பொருளாதார வளர்ச்சியைப் பற்றி படிக்கும் பொழுது அந்நாட்டின் விலைவாசிகளின் போக்கைப்பற்றி அறிவது அவசியமாகும். ஏனென்றால் நிலவுகின்ற விலைவாசி மூலமாகத்தான் அந்நாட்டின் பொருளாதாரநிலை, நாணயத்தின் மதிப்பு போன்றவற்றை அறிய முடியும். விலைவாசி உயர்வு எந்தெந்த மக்களை எவ்வெவ்வாறு பாதிக்கின்றது என்பதையும் அறிய இயலும். அடுத்து, விலைகளின் போக்கை அறிந்து, எந்தெந்தத் துறைகளில்

எவ்விதமான கட்டுப்பாடு நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்பதை அரசு அறிய முடியும். சான்ருக, உணவுப் பொருள்களின் விலை உயர்ந்து கொண்டே சென்ருல், உணவுப் பங்கீட்டுமுறை, நியாயவிலைக் கடைகள் திறத்தல்பற்றி அரசு ஆய்ந்து முடிவெடுக்க இயலும். மேலும் இந்தியா போன்ற வேளாண்மைத் துறையைச் சார்ந்த நாடுகளில், ஐந்தாண்டுத் திட்டங்களை சிறப்பாக நிறைவேற்ற வேண்டுமெனில், விலைகளைத் தக்க நிலையில் வைத்திருக்க வேண்டியது அரசின் கடமையாகும்.

மொத்தவிலைக் குறியீட்டெண் 1952-53 = 100

| ஆண்டு | வேளாண்மைப் பொருள்கள் | உணவுப் பொருள்கள் | மொத்த உற்பத்தி பொருள்கள் | எல்லாப் பொருள்களுக்கும் |
|---|---|---|---|---|
| 1955-56 | 88 | 73 | 100 | 92·5 |
| 1956-57 | 104 | 94 | 106 | 105·3 |
| 1957-58 | 107 | 98 | 108 | 108·4 |
| 1958-59 | 114 | 106 | 108 | 112·9 |
| 1959-60 | 116 | 102 | 112 | 117·1 |
| 1960-61 | 124 | 102 | 124 | 125·9 |
| 1961-62 | 123 | 100 | 127 | 125·1 |
| 1962-63 | 123 | 106 | 129 | 127·9 |
| 1963-64 | 132 | 116 | 131 | 135·3 |
| 1964-65 | 156 | 144 | 137 | 152·7 |
| 1965-66 | 169 | 150 | 149 | 165·1 |
| 1966-67 | 199 | 178 | 163 | 191.3 |

Source :- Economic Survey, 1967-68 P. 42

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பணவீக்க நிலையை கட்டுப்படுத்தி விலைவாசிகளையும், கட்டுப்படுத்த வேண்டுமென்பது ஒரு குறிக்கோளாக அமைந்தது. நாட்டின் வேளாண்மைத் துறையில் இத்திட்ட காலத்தில் கிட்டிய சாதனையும், மொத்தத்தில் திட்டமி

வெற்றிகரமாக அமைந்து விட்டமையாலும் விலைவாசிகள் கட்டுப்பாட்டுக்குள்ளே தாம் இருந்தன. சான்றாக, 1952-53 விலைவாசியை அடிப்படையாகக் கொண்ட கணிப்புப்படி எல்லாப் பொருள்களுக்குமென மொத்த விலைக் குறியீட்டெண் (Whole sale Index) 92·5 என்று அமைந்தது. அதுபோல வேளாண்மை பொருள்களுக்கு 88 ஆகவும், உற்பத்திப் பொருள்களுக்கு 73 ஆகவும், தொழில் துறை உற்பத்திப் பொருள்களுக்கு 100 ஆகவும் அமைந்தது. எனவே விலைகளைப் பொறுத்த வரை முதல் திட்டத்தில் நமக்குச் சாதகமான நிலையே நிலவியது எனலாம்.

முதல் திட்டத்தில் பெற்ற வெற்றியும், சாதனையும், இரண்டாம் திட்டத்தை விரிவாகத் தயாரிக்கும்படி திட்டக்குழுவினைத் தூண்டியது. பொதுத்துறையில் முதலீடு ரூ. 4,300 கோடியாக நிர்ணயிக்கப்பட்டது. ஏறத்தாழ ரூ 948 கோடிக்கு பற்றாக்குறை நிதி ஆக்கம் கடைப்பிடிக்கப்பட்டது. இதனால் விலைகள் படிப்படியாக அதிகரிக்கலாயின. சான்றாக எல்லாப் பொருள்களின் மொத்த விலைக்குறியீட்டெண் 105·3 புள்ளிகளிலிருந்து 125·9 க்கு உயர்ந்தது. (1952-53 விலைவாசிப்படி) ஏறத்தாழ 20·6 புள்ளிகள் உயர்ந்தது; தொழில்துறை உற்பத்திப் பொருள்களின் குறியீட்டெண் 18 புள்ளிகளும் உணவுப் பொருள்களின் மொத்த விலைக் குறியீட்டெண் 8 புள்ளிகளும் அதிகரித்தது. இதற்குக் காரணங்கள் என்ன?

(i) முதலீட்டுக்கு ஏற்றாற்போல் உற்பத்தி பெருகாமை-குறிப்பாக வேளாண்மைத் துறையில் பெருகாமை

(ii) பொதுத்துறை, தனியார் துறைகளில் அதிகமாக முதலீடு செய்ததனால் மக்கள் கைவசம் அதிகரித்துவிட்ட பண வருமானம்

(iii) நமது அயல்நாட்டுச் செலுத்து நிலையில் ஏற்பட்ட சிக்கல்களும் அதன் விளைவாக மூலதனப் பொருள்களின் இறக்குமதி தடைபட்டமையும்.

எனினும் முதல் இரு திட்ட காலங்களில் நிலைமை அவ்வளவு மோசமாக அமைந்திடவில்லை.

மூன்றாம் திட்டத்திலோ நிலைமை மிகவும் மோசமாகியது. மூன்றாம் திட்டமோ தோல்வி அடைந்ததோடு, முதல் இரு திட்டங்களின் நன்மைகளையும் பலன்களையும் கூட அழித்துவிட்டது எனலாம். சான்றாக, 1963-64 வரை விலைவாசி உயர்வு சராசரி

யாக ஓராண்டுக்கு 2 சதவீதம் மட்டுமே. அதனையடுத்து 1964-65 முதல் 1966-67 வரையான மூன்றாண்டு காலத்தில் 12 சதவீதம் – அதாவது ஆண்டுக்கு 4 சதவீதம் அதிகரித்துவிட்டது. மூன்றாம் திட்ட காலத்தில் அனைத்துப் பொருள்களின் மொத்த விலைக்குறியீட்டெண் 40 புள்ளிகளும் உணவுப் பொருள்களில் 50 புள்ளிகளும் மொத்த உற்பத்தி பொருள்களில் 22 புள்ளிகளும் அதிகரித்து விட்டன. சீனாவின் தாக்குதலாலும், பாக்கிஸ்தான் தாக்குதலாலும் மூன்றாம் திட்ட காலத்தில் இராணுவத்துறைக்கான செலவு அதிகரித்தது. மேலும் நாடு முழுவதும் நிலவிய வறட்சி நிலையும் பொருளாதாரத்தை சீர்குலைத்து விட்டது. 1966-67, 1967-68 ஆகிய ஆண்டுகளில் விலைவாசி மிக அதிகம். சான்றாக 1965-66-ல் அனைத்துப் பொருள்களின் மொத்தவிலைக் குறியீட்டெண் (1961-62=100) 137·5; இது 1966-67-ல் 158·9 ஆகவும், 1967-68-ல் 160·3 எனவும், உயர்ந்தது. அதனைத் தொடர்ந்து விலைவாசிகள் உயர்ந்து கொண்டே சென்றன.

மொத்தவிலைக் குறியீட்டெண் (1961-62 = 100)

| ஆண்டு | உணவுப் பொருள்கள் | எல்லாப் பொருள்களும் |
|---|---|---|
| 1965-66 | 159·2 | 137·5 |
| 1966-67 | 207·7 | 158·9 |
| 1967-68 | 206·7 | 160·3 |
| 1968-69 | 192·9 | 165·1 |
| 1969-70 | 214·4 | 175·7 |
| 1970-71 | 200·3 | 180·6 |

**Source :** Office of the Economic Adviser to the Government of India – Eastern Economists Annul 1972 – Statistics Profile p. 1285.

விலைவாசி உயர்வினால் மக்களின் சேமிப்பு குன்றுகிறது. இது இறுதியில் மூலதனத் திரட்சி அல்லது முதலாக்கத்தைப் பாதிக்கிறது.

### (8) பொதுக் கடன் (Public Debt)

நாளுக்கு நாள் அரசுகளின் செலவினங்கள் அதிகரித்து வருவதால் அவை தங்கள் செலவினங்களுக்குத் தேவையான வருவாயை வரி வருமானம் மூலம் மட்டுமே பெற இயலவில்லை. ஆதலால் தான் பொதுக்கடன் வாங்குவது இன்றைய அரசுகளின் நடைமுறை வழியாக அமைந்துவிட்டது. அண்மைக் காலங்களில் நாம் ஐந்தாண்டுத் திட்டங்களையும் பொருளாதார மேம்பாட்டு நடவடிக்கைகளையும் மேற் கொண்டிருப்பதால் நமது பொதுக்கடன் சுமையும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. இது தவிர அண்டை நாடுகளான சீனவும், பாகிஸ்தானும், நட்புறவு கொள்ளாது பகைமை பாராட்டிக் கொண்டிருப்பதால் இராணுவ மற்றும் போர்ச் செலவுகள் அதிகரித்து விட்டன. இதன் விளைவாகவும் அண்மைக் காலப் பொதுக்கடன் அதிகரித்துள்ளது. ஆயினும் நமது பொதுக் கடனில் பெரும்பகுதி நீர்பாசனத் திட்டங்கள், இரயில், சாலைப் போக்குவரத்து வசதிகள் போன்ற ஆக்க ரீதியான இனங்களில் செலவிடப்படுவதால், இக்கடன் உற்பத்தி சார்ந்த கடனே ஆகும்.

1939-ல் நமது மொத்தக் கடன் ரூ. 1206 கோடி ஆகும். இதில் ரூ. 464·94 கோடி அயல் நாட்டுக்கடனகும். மொத்தம் ரூ. 1206 கோடியில் ரூ. 925 கோடி பெறுமான கடன் உற்பத்தி சார்ந்த கடனக அதாவது வட்டி அல்லது வருவாய் தரத்தக்கக் கடனக விளங்கியது. இரண்டாம் யுத்தத்தின் காரணமாக நமது அயல் நாட்டு வணிகத்தில் சாதகநிலை ஏற்படலாயிற்று. இதனல் 1946 – ம் ஆண்டு நமது கடன் ரூ. 41 கோடியாகக் குறைந்தது. மேலும் நாம் ரூ. 2300 கோடிக்கு சமமான ஸ்டெர்லிங் நிதியைச் சேர்த்து வைத்திருந்தோம். ஆனல் யுத்த காலத்தில் உள் நாட்டுக் கடன் ரூ. 736 கோடியிலிருந்து ரூ 1937 கோடிக்கு-சுமார் ரூபாய் 1200 கோடி அதிகரிப்பு – உயர்ந்துவிட்டது. நாடு விடுதலை பெற்றுத் துண்டாடப்பட்ட பொழுது, பாகிஸ்தான் நமக்கு ரூ. 300 கோடி தருவதாக ஏற்பாடு இருந்தது. அதனை 1952 முதல் சமமான 50 தவணைகளில் செலுத்துவதாகவும் ஒப்பந்தம் ஏற்பட்டது. ஆனல் நமது நட்பு சரியாக இல்லாத படியினல் நாளது தேதி வரை அத்தொகையில் நாம் ஒன்றும் பெற இயலவில்லை. அதன் பின்பு ஐந்தாண்டுத் திட்டங்கள் செயல்படுத்தினோம். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மூலதன முதலீட்டுச் செலவுக்கு நமது ஸ்டெர்லிங் இருப்பு நிதியைப் பூரணமாக பயன்படுத்தி விட்டோம். அதுதொடங்கி நமது உள் நாட்டுக் கடனும், வெளி நாட்டுக் கடனும் உயர்ந்து வந்துள்ளன. இதனை, பக்கத்திலுள்ள அட்டவணை தெளிவாக்கும்.

இந்திய அரசின் பொதுக் கடன் (ரூபாய் கோடியில்)

| | 1950-51 | 1955-56 | 1960-61 | 1965-66 | 1968-69 | 1970-71 | 1971-72 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 மொத்த உள்நாட்டுக் கடன் | 2,022 | 2,329 | 3,975 | 5,415 | 6,800 | 7,464 | 8,026 |
| 2 வெளிநாட்டுக் கடன் | 32 | 113 | 751 | 2,590 | 5,927 | 6,577 | 7,027 |
| 3 மொத்தம் (1 + 2) | 2,054 | 2,442 | 4,736 | 8,005 | 12,727 | 14,041 | 15,053 |
| 4 இதர பொறுப்புக்கள் (Other Liabilities) | 811 | 1,069 | 1,808 | 3,324 | 4,122 | 4,795 | 5,193 |
| 5 மொத்தக் கடன் (1 + 2 + 3) | 2,865 | 3,511 | 6,544 | 11,329 | 16,849 | 18,836 | 20,246 |

Source : 'Facts and Figures' Journal, February, 1972.

பொதுவாக பொதுக் கடனின் சுமையை இரண்டு வகையாக பிரிப்பார்கள்.

(i) உள் நாட்டுக் கடன் சுமை
(ii) வெளிநாட்டுக் கடன் சுமை

உள் நாட்டில் புரட்டப்பட்ட கடன் உற்பத்தித்துறை செல வினங்கட்கு பயன்படுமானால் தவறல்ல. ஏனெனில் இவ்வகை முதலீட்டின் வழி பெறப்படும் வருவாய் கொண்டே அச்சுமையைக் குறைத்து விடலாம். மாறாக உற்பத்தி சார்பற்ற காரியங்களுக்கு பெறப்படும் கடன், அரசின் வரிப்பணம் கொண்டு தீர்க்கப்படுவதால், நாட்டின் பொருளாதாரத்தில் பிரச்னைகள் எழும். அரசு வரி விதிக்கின்ற பொழுது அவ்வரியைச் சமுதாயத்தில் இருப்போர் அனைவரும் செலுத்துகின்றனர். அரசுக்குக் கடன் ஈந்தோர் பெரும்பாலும் செல்வந்தர்களாகவே இருப்பர். எனவே மீண்டும் அவர்களே பணத்தைப் பெறுவதால், வரி செலுத்திய அவர்களை விட, வரி செலுத்திய ஏழைகளே அதிகம் பாதிக்கப்படுகின்றனர். இதனால் அவர்களின் பொருளாதார நலம் பாதிக்கப்படுகிறது. சமமான செல்வப்பங்கீடு என்பது வெறும் வாய் வேதாந்தமாகவே போய்விடுகிறது.

வெளிநாட்டுக் கடனைப் பொறுத்தவரை, மக்களின் சுமை இன்னும் அதிகரிக்கிறது. கடனையும் அதற்கான வட்டியையும் செலுத்த நேரிடுகிறது. இதன் பொருட்டு, நாம் ஏற்றுமதியைப் பெருக்கி நம் கடனைத்தீர்க்க நேரிடலாம். ஏற்றுமதியால் அதிகப் பொருள்கள் சென்று விடும்பொழுது, உள்நாட்டு நுகர்வுக்கான பொருள்கள் குறைந்து விடுகின்றன. இது நமக்கு இழப்பாகிறது.

நம்மைப் பொறுத்தவரை இவ்விரண்டு வகையிலும் சுமை அதிகமே. 1951-ல் ஒவ்வொரு இந்தியனின் சராசரிக் கடன் ரூ 87; 1966ல் இது ரூ 245 ஆக உயர்ந்துள்ளது. நான்காம் திட்ட கால மதிப்பீட்டுப்படி, கடனுக்காகவும் வட்டிக்காகவும் ஒவ்வொரு நாளும் நாம் செலுத்த வேண்டிய தொகை ரூ 62 இலட்சம் என்பர் இந்த நிலை வளர்ந்துவரும் இந்திய பொருளாதாரத்தை எந்த அளவு பாதிக்கக்கூடும் என்பதையும், இந்திய முதலாக்கத் துறையை எந்த அதிவு பாதிக்கும் என்பதையும் உய்த்துணர வேண்டும்.

இதுவரை இந்தியாவின் பல்வேறு துறைகளின்—குறிப்பாக ஐந்தாண்டுத்திட்ட காலங்களில்—பொருளாதார வளர்ச்சியைக் கண்டோம். வளர்ச்சிக்குக் குந்தகமாக உள்ள தடைகளை நீக்கி இன்னும் அதிகரித்த வீதத்தில் வளர்ச்சி காணல் அவசியமாகும். விரைவான ஆனால் சமமான பொருளாதார வளர்ச்சிக்கு அக்கறை காட்டல் இன்றியமையாததாகும்.

# 6. இந்தியாவில் தொழில் வளர்ச்சி

'நவீன தொழில்களின் பிறப்பிடமாகக் கருதப்படும் மேற்கு ஐரோப்பாக் கண்டத்தில் நாகரீகமற்ற நாடோடி வகுப்பார் வாழ்ந்து வந்த ஒரு காலத்தில், இந்திய நாடானது மன்னர்களின் செல்வத் திற்கும், மிகத் திறமை படைத்த கைவினைக் கலைஞர்களுக்கும் புகழ் பெற்றிருந்தது' என்று, 1918-ம் ஆண்டில் சர். தாமஸ் ஹாலந்து தலைமையில் அமைக்கப்பட்ட இந்தியத் தொழிலக ஆணைக்குழு குறிப்பிடுகிறது. அவ்வறிக்கை தொடர்ந்து இவ்வாறு கூறுகிறது 'மேற்கு நாடுகளிலிருந்து துணிவு மிக்க வணிகர்கள் இந்தியாவிற்கு முதன் முதலாகப் பிற்காலத்தில் வந்த வேளையில் கூட இந்நாட்டிலிருந்து தொழில் வளர்ச்சி, மிக முன்னேற்றமடைந்த ஐரோப்பிய நாடுகளுக்குத் தாழ்ந்ததாக இல்லை' வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதுபோல, இயேசு பெரு மான் பிறப்பதற்கு 2000 ஆண்டுகட்கு முன்பு எகிப்து நாட்டின் பிரமிடுகளில் (Pyramids) வைக்கப்பட்ட பாதுகாக்கப்பட்ட சடலங் கள் (Mummies) இந்திய நாட்டின் தரமிக்க மஸ்லின் துணிகளால் போர்த்தப்பட்டன. வரலாற்று நாயகன் ஜூலியத் சீசரின் அவை யினை அலங்கரித்த ஆரணங்குகள் தில்லியில் தயாரான பொன் சரிகைப் பட்டுக்களை அணிந்திருந்தனராம். இந்திய நாட்டின் பருத்தி, பட்டுத்துணிகள், வேலைப்பாடு மிக்க உலோகப் பொருள் கள், மரவேலைகள், தந்தச் சிற்பங்கள், சர்க்கரை, உப்பு, சணல், வெடியுப்பு போன்றவைகள் பாரெல்லாம் புகழ் பெற்றிருக்கின்றன. இத்தனை புகழாரம் சூட்டிக் கொண்ட இந்தியத் தொழில்கள் அனைத்தும் கைவினைக் கலைஞர்கள் தம் இல்லங்களில் தாம் நடை பெற்றனவாம். ஆயினும் 18-ம் நூற்றுண்டின் இறுதிக் கட்டத்தி லிருந்தும், 19-நூற்றுண்டின் ஆரம்பத்திலிருந்தும் இந்நாட்டின் தொழில்கள் நசிவுறலாயின. ஆளவந்த ஆங்கிலேயரின் ஆதிக்கம் பொருளாதாரத்திற்கு இந்தியப் பொருளாதாரம் அடிமைப்பட்ட மையால் இந்தியப் பழம்பெருந் தொழில்கள் மங்கலாயின.

### A. கி.பி. 1800-க்கு முன்பு தொழில் வளர்ச்சி

இந்தியாவின் தொழில்வளம் தொன்மைக் காலத்திலிருந்தே சிறப்புப் பெற்று விளங்கியது. நறுமணப் பொருள்கள், சாயப் பொருள்கள், சர்க்கரை, அபின், பட்டாடை போன்ற பொருள்கள் பெருந் தொலைவிலுள்ள நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பொதுவாக ஏற்றுமதியை விட இறக்குமதி அளவு குறைவாகவே இருந்தது. இதனால் மிகுந்த அளவு தங்கம் இந்நாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது. இந்தியாவின் ஆடம்பரப் பொருள்களைப் பயன்படுத்தியமையால் உரோமானியப் பேரரசின் தங்கம் விரய மானதாக, பிளினி (Pliny) என்பார் முதல் நூற்றாண்டில் குறை பட்டுக் கொண்டாராம். பருத்தி. பட்டு, கம்பளி கொண்டு வண்ணத்துணிகள் நெய்வது இந்தியாவின் முக்கிய தொழில். வங்காளம், லக்னோ, ஆமதாபாத், நாகபுரி, மதுரை ஆகிய நகரங் களில் பருத்தித் தொழில் சிறப்பாய் விளங்கின. காசி, தஞ்சை, பூனா, நாசிக், ஆமதாபாத் நகரங்களில் உலோகங்களினால் ஆன பண்டங்கள் தயாரிக்கப்பட்டன. தங்கம், வெள்ளியில் சரிகைச் சித்திர வேலை, நகைத்தொழில், சிற்பம் செதுக்கல், சந்தனக் கட்டை, தந்தத்தில் கலைநுட்ப வேலைகள் செய்தல், தோல் பத னிடல், காகிதம் தயாரித்தல் சிறப்புற்று விளங்கின. 'இந்துஸ் தானம் அல்லது மாபெரும் முகலாயப் பேரரசுக்கு மட்டுமன்றி எல்லா அண்டை நாடுகளுக்கும், ஐரோப்பாவுக்கும்கூடப் பொது வான பருத்தி, பட்டு இவற்றின் அரசாங்கக் களஞ்சியமாகக் (கிடங்காக) கருதும் அளவிற்குப் பேரளவில் பருத்தியும், பட்டும் வங்கத்தில் இருந்தன' என்று பெல்சாபெர்ட் என்ற வரலாற்று ஆசிரியர் கூறுகிறார். கி.பி. 17-ம் நூற்றாண்டிலேயே இந்தியாவின் பல்வேறு பாகங்களில் பரவலாக வெடியுப்பு உற்பத்தி செய்யப் பட்டது. ஐரோப்பியர்கள் தங்கள் நாடுகளில் நடக்கும் போர் களுக்கு அதனை மிகுதியாக வாங்கிச் சென்றனர்.

பேராசிரியர் இராய் சௌத்திரி குறிப்பிடுவது போல, 17,18-ம் நூற்றாண்டுகளில் ஆசிய நாடுகளிடையே இந்தியாவும் சீனாவும் தான் சொந்தக் கப்பல்களுடைய செழுமையான வணிகர்களைத் தம் மகத்தே கொண்டிருந்தன. இந்தியாவைப் பொருத்த வரை 17-ம் நூற்றாண்டில் உலகின் வணிக அச்சாணியாகவும், உலகின் விலை யுயர்ந்த உலோகங்களைக் கவர்ந்திழுக்கும் காந்த சக்தி மிக்க நாடா கவும் விளங்கியது. இந்தியாவின் சேர, சோழ, பாண்டிய மண்டல மக்கள் தென்கிழக்கு ஆசியா, பிலிப்பைன்ஸ், இரான், அரபு நாடு கள், ஆப்பிரிக்க நாடுகள், ஜப்பான், இலங்கை ஆகிய நாடுக ளோடு வணிக உறவு கொண்டனர்.

முகலாய மன்னர்கள் காலத்தை ஒட்டி இந்நாட்டில் அமைந்திருந்த தொழில்களை இருவகையாகப் பகுக்கலாம்: (i) கிராமப்புறத் தொழில்கள் (ii) நகர்ப்புறத் தொழில்கள். கிராமப்புறத் தொழில்கள் பெரும்பாலானவை வேளாண்மைத் தொழிலோடு இணைந்தவை. அவைகள் சிறப்புமிகு குடிசைத் தொழில்களாக விளங்கி உள்ளூர் மக்களின் தேவைகளை ஈடுகட்டுதற்கேற்ப அமைந்தது; முரட்டுத்துணி, மட்பாண்டம், கூடைகள் போன்ற பயன்பாடு மிக்க பொருள்களை மரபு வழிகளில் தயாரித்தனர். அங்கு ஆளப்பட்ட முறைகள் பழமையானவை; சீரற்ற கட்டுக்கோப்புடன் செயல்பட்டவையாகும். ஆனால் நகர்ப்புறத் தொழில்களோ ஒழுங்கமைந்த சீருடன் இலங்கி, வெளிநாட்டுச் சந்தைகட்கான பொருள்களைத் தயாரித்தன. பட்டு, கம்பளி உடைகள், மஸ்லின் துணிகள் தங்க வெள்ளி நகைகள், கலைப் பொருள்கள் ஆகியன தயாரிக்கப்பட்டன. அரசின் சலுகைகளும் அரவணைப்பும் அவைகளின் வளர்ச்சிக்கு உதவின. தம் வாடிக்கையாளர் தரும் மூலப் பொருள்களைப் பெற்று பொருள்கள் தயாரிக்கும் நிலையிலேயே இக்கைவினைக் கலைஞர்கள் விளங்கினார்களேயன்றி, தாமே முதலாளிகளாக விளங்கவில்லை.

B. கி.பி. 1800 முதல் 1850 வரையான காலம்

முகலாயர் காலத்திற்குப்பின், நாட்டின் பல பகுதிகளில் இங்கிலாந்து நாட்டின் கிழக்கிந்திய கம்பெனியின் ஆட்சி வலுத்தது. இந்தியாவிற்கும், இங்கிலாந்திற்குமிடையே நடைபெற்ற வணிகத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி முற்றுரிமைத் தன்மை பெற்று விளங்கியது. இவ்வணிகத்திற்கான 'உரிமை உடன்பாடானது' (Charter) 1833ல் முடிவுற்ற வேளையில், கிழக்கிந்தியக் கம்பெனிக்கு முற்றுரிமை கொடுக்கப்பட்டதை இங்கிலாந்தில் பலர் எதிர்த்தனர். எனவே 1833ல் அக்கம்பெனி தன் வணிக நடவடிக்கைகளை முடித்துக் கொண்டு இந்தியப் பகுதிகளின் நிர்வாகத் துறைக்கு மட்டும் பொறுப்பேற்றார்கள். அது சமயம், 1830, 1831, 1832 ஆகிய ஆண்டுகளில் நம் நாட்டின் பல துறைகள் பற்றி ஆய்ந்தறிந்த அறிக்கைகள் பிரிட்டிஷ் நாடாளுமன்றக் குழுக்களிடம் சமர்ப்பிக்கப்பட்டன. அவ்வறிக்கைகளிலிருந்து, அது சமய இந்தியாவின் தொழில்நிலை பற்றிய பல விவரங்களை அறிய முடிகிறது. ரோமேஷ் தத் ((Romesh Dutt) என்பார் எழுதிய 'இந்தியப் பொருளாதார வரலாறு-பாகம்-1' எனும் நூலிலிருந்து இதனைத் தெளியலாம்.

பருத்தித் தொழில்: இந்தியப் பருத்திகளில் சூரத் பகுதியில் சாகுபடியானவைத் தவிர பிற பருத்தி மிக மோசமாகவே இருந்தது.

நீண்ட இழைப் பருத்தி வகை மிக அரிதாகவே பயிரிடப்பட்டது. எனினும் பிரான்ஸ் தீவிலிருந்து (Isle of France) கொணரப்பட்ட புதுவகைப் பருத்தி விதை மூலம் சிறந்த பருத்தி விளைவிக்க திருநெல்வேலி வட்டத்தில் முயற்சி செய்யப்பட்டது. கையினுல் நூற்கப்பட்ட நூலிழைகளையே நெசவுத் தொழிலுக்குப் பயன்படுத்தினர். இருப்பினும் இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்கு மட்டும் ஏற்றுமதியான துணிப் பொருள்கள் மிக அதிகமாகவே இருந்தன. ஆயினும் ஆங்கிலேய அரசு கடைப் பிடித்த பாதகமான வணிகக் கொள்கையினுல், இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான அளவானது காலப் போக்கில் படிப்படியாகக் குறையலாயிற்று. எடுத்துக் காட்டாக, 1802ல் 14,817 பேல்களாக இருந்த ஏற்றுமதி அளவானது, 1829ல் 433 பேல்களாக குறைந்து விட்டது.

பட்டு : மிகச் சிறந்த இந்திய பட்டானது இத்தாலியப் பட்டின் விலைக்குச் சமமாக விற்பனை ஆயிற்று. எனினும் சீனப்பட்டே பெரிதும் போற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. கிழக்கிந்தியக் கம்பெனியின் முயற்சியால் பட்டு உற்பத்தியில் நவீன இத்தாலிய முறை புகுத்தப்பட்டதால் கச்சாப்பட்டு உற்பத்தி 1815 முதல் 1830 வரை அதிகரித்தது. வங்கப்பட்டு உற்பத்தியில் கம்பெனி அதிக கவனம் செலுத்தி உலகச் சந்தையில் அதிக விலைக்கு விற்றது. இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு ஏற்றுமதியான பட்டு மற்றும் பட்டாலான பொருள்கள் அளவு (அடுத்த பக்கத்தில்).

சர்க்கரை : தக்கணப் பிரதேசத்தின் மலைப்பகுதிகளில் கரும்பு பயிரிடப்பட்டது. ஆயினும் சர்க்கரை உற்பத்தி முறை எளிதாகவும், பழைய முறைப்படியும் அமைந்து இருந்தது. மேற்கிந்தியத் தீவுகளின் இயந்திர முறைகள் பின்பு பரவலாகப் பயன்படுத்தப் பட்டன. இதனுல் சர்க்கரையின் தரம் கூடினுலும் செலவு மிக அதிகமாயிற்று. வங்காளத்துக் கரும்பின் தரம் சிறப்பாக இருந்ததால், கம்பெனியானது காசியில் ஒரு சர்க்கரை ஆலையை அமைத்தது.

சாயப் பொருள்கள், வெடியுப்பு : இந்தியச் சாயப் பொருள்களுக்கு இங்கிலாந்தில் பெருமதிப்பு இருந்தது. சான்றாக 1823-ல் 14,190 மணங்கு அரக்குச் சாயம் இங்கிருந்து இங்கிலாந்திற்கு ஏற்றுமதியாயிற்று. 1828-ல் இது 15,379 மணங்காக அதிகரித்தது. இது போல வெடியுப்பு ஏற்றுமதியும் இருந்து வந்தது. 1814-ல் 1,46,000 அந்தர் வெடியுப்பு ஏற்றுமதியாயிற்று.

| ஆண்டு | பட்டு (பேல்களில்) | பட்டாலான பொருள்கள் (பேல்களில்) |
|---|---|---|
| 1800 | 213 | புள்ளி விவரம் தரப்படவில்லை |
| 1801 | 238 | |
| 1802 | 400 | |
| 1803 | 1,232 | |
| 1804 | 1,926 | |
| 1805 | 1,327 | |
| 1810 | 949 | |
| 1815 | 2,796 | |
| 1820 | 6,805 | 522 |
| 1825 | 8,061 | 1,558 |
| 1828 | 10,431 | 5 50 |

**Source :** Romesh Dutt–Economic History of India-Vol 1, p. 204.

**இரும்பு, செம்பு :** இந்தியாவின் பெரும் பகுதிகளில் இரும்புத் தாது கிடைத்தது. இரும்பு உற்பத்தி முறைகள் பழைய நாட்டு முறையினைக் கையாண்டதால் நமது இரும்புவிலை அதிகமாக இருந்தது. வங்காளத்தின் சில பகுதிகள் (குறிப்பாக பர்த்வான் பகுதி) சென்னையின் கடற்கரைப் பகுதிகள், மலபார் பகுதிகளில் உயர்ரக இரும்புத்தாது கிடைத்தது. திரு. ஹீத் என்பார் சென்னை அருகே ஓர் இரும்புவார்ப்புத் தொழிற்சாலை அமைத்து தரமான இரும்பினை உருவாக்கினார். கோயம்புத்தூர், கட்ச் (Kutch) பகுதிகளில் கிடைத்த இரும்பில் சிறந்த எஃகு தயாரிக்க முடிந்தது. இந்தியாவின் வடமேற்கு மாகாணங்களில் செம்பு கிடைத்தது.

**நிலக்கரி :** வங்காளத்தில் பர்த்வான் மாவட்டத்தில் அதிகமான நிலக்கரிச் சுரங்கங்கள் இருந்தன. அவைகள் 1832-ல் 14,000 முதல் 15,000 டன்கள் வரை ஆண்டொன்றுக்கு நிலக்கரி உற்பத்தி செய்தன. 1814 முதற்கொண்டு நிலக்கரிச் சுரங்கங்கள்

அமைக்கும் பணி தொடங்கியது. ஆயினும் 1825-ம் ஆண்டி லிருந்துதான் விரிவான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன கட்ச். பகுதிகளில் உயர்ந்த ரக நிலக்கரி கிட்டியது.

பிரிட்டிஷ் நாடாளுமன்றக் குழுக்களிடம் தரப்பட்டுள்ள தகவல்களின் அடிப்படையில் கூறப்பட்டுள்ள மேற்கண்ட விவரங் கள் நமது அக்காலத் தொழில் நிலைமையைக் காட்டுகின்றன.

**C. கி.பி. 1850 முதல் 1900 வரையான காலம் :**

1850-ம் ஆண்டு முதல் 1855-ம் ஆண்டு வரையான காலத் தில் இந்தியாவின் நவீன முதல் பஞ்சாலை, முதல் சணல் ஆலை, முதல் நிலக்கரிச் சுரங்கம் என்பன போன்ற பல ஆலைகள் தொடங் கப்பட்டன. 19-ம் நூற்றாண்டின் இறுதிக் காலாண்டில் 51 பஞ்சாலைகளும், 18 சணல் ஆலைகளும் செயல்பட்டன. ஏறத்தாழ 15,000 தறிகள் சணல் தொழில் துறையில் 1900 ம் ஆண்டில் இருந்தன. அவ்வமயம் ஆண்டொன்றுக்கு ஒரு மில்லியன் டன் நிலக்கரி உற்பத்தியாயிற்று. அவ்வேளையில் புதிதாக இருப்புப் பாதைப் போக்குவரத்து ஏறத்தாழ 8,000 மைல்களுக்குப் போடப் பட்டது. இராணிகஞ்ச் நிலக்கரிச் சுரங்கப் பகுதிகளுக்கும் கல்கத் தாவிற்கும் இருப்புப் பாதைப் போக்குவரத்து ஏற்பட்டமையால் இராணிகஞ்சில் நிலக்கரி உற்பத்தி பெருகிற்று.

சணல் துறையைப் பொருத்த அளவில் 1901-ம் ஆண்டில் 85 ஆலைகள் இயங்கின. அவைகளில் 8,218 தறிகளும், 1,71,148 இழைகளும் இருந்தன. அவ்வாலைகள் சுமார் 64,700 பேருக்கு வேலைவாய்ப்பை நல்கின. உற்பத்தியில் பாதி ஐரோப்பிய நாடு களுக்கு ஏற்றுமதியாயிற்று. இதே காலக் கட்டத்தில் 194 பஞ்சாலை கள் இயங்கின; அவைகளில் 2,37,000 மக்கள் பணியாற்றினர். கம்பளி ஆலைகளில் 594 தறிகளும் 22,986 இழைகளும் இருந்தன. காஷ்மீர், பஞ்சாப் சால்வைகள் புகழ் பெற்று விளங்கின, 1901-ம் ஆண்டில் 47 மில்லியன் பவுண்ட் காகிதம் உற்பத்தி செய்யப் பட்டது. 1892-ல் 25,37,696 டன்கள் நிலக்கரி உற்பத்தி செய்த நிலை மாறி 1901-ல் 68,49,249 டன் உருவாக்கும் நிலை ஏற்பட் டது. தங்க உற்பத்தி 1901-ல் 5,29,782 அவுன்ஸாக இருந்தது; இரும்பு உற்பத்தியோ 57,000 டன்களாக இருந்தது. அஸ்ஸாம் பகுதியில் பெட்ரோல் கண்டுபிடிக்கப்பட்டு பெட்ரோல் தயாரிக்கப் பட்டது. 1892-ல் 5,000 காலன்கள் பெட்ரோல் உற்பத்தி செய்த நிலையினின்று உயர்ந்து 6,33,000 காலன்கள் உற்பத்தி பண்ணும் நிலைமை 1901-ல் உருவானது. மைகா, மாங்கனீஸ், தகரப்பொருள் கள் உற்பத்தி அதிகரித்தது. 1901-02-ல் 1,00,000 ஸ்டர்லிங்

பெறுமான மாங்கனீஸ் தாதுப் பொருளும், £ 70,000 பெறுமான மைகாவும் ஏற்றுமதியாயின. 1895-96-ல் 893 சாய ஆலைகள் இயங்கின. அவைகள் மூலம் 35,69,700 பெறுமான சாயப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன.

**வேலை வாய்ப்புக்கள் :** தொழிலக வேலைவாய்ப்பு பெருகி வருவதைக் காட்டும் இப்புள்ளி விவரங்கள் மூலமாக, இக்காலத்திய தொழில் வளர்ச்சியை ஓரளவு உணரலாம்.

(தொழிலாளர் எண்ணிக்கை ஆயிரத்தில்)

| எண் | | 1892 | 1899 |
|---|---|---|---|
| 1 | இருப்புப் பாதைத் துறை | 259 | 309 |
| 2 | நிலக்கரிச்சுரங்கம் | 33 | 83 |
| 3 | பஞ்சாலைகள் | 121 | 163 |
| 4 | சணலாலைகள் | 66 | 102 |
| 5 | இருப்புப்பாதைத் துறைப் பணிமனைகள் | ... | 52 |
| 6 | படைக்கலன் தொழில் | ... | 13 |
| 7 | இரும்பு, எஃகு | 12 | 17 |
| | மொத்தம் | 491 | 739 |

**Source :** 'India Planning For Industrialisation' p. 31 Jagdish, N. Bhagwati & Padma Desai

பெரும்பாலான ஆலைகளை ஆங்கிலேய வணிகர்களே தொடங்கி நடத்தினர். தம் தாய்நாட்டில் பெற்ற அனுபவம் கொண்டு அவர்கள் சிறப்புற தொழில்களைத் தொடங்கி நடத்தினர். வணிகம் பொருட்டு வந்த அமெரிக்கர்கள் பலரும் பின்னர் இச்சமயத்தில் தொழில்கள் தொடங்கினர். நம்நாட்டு குஜராத்தி, மார்வாரி, பார்சி, யூத இன மக்களும் இம்முயற்சிகளில் முன்னின்றனர். ஏறத்தாழ இவ்வேளையில் தான் 'நிர்வாக முகவர் முறை' ஆங்கிலேய வணிகர்களால் உருவாக்கப்பட்டது. அவ்வமைப்பு பல தொழில் நிறுவனங்களைத் தொடங்கவும் நிதி உதவி நிர்வாகம் புரிந்திடவும் உதவியது எனலாம். பிரிட்டிஷாரைத் தொடர்ந்து உள்நாட்டு மக்களும் நிர்வாக முகவர் முறையை அமைக்கத் தொடங்கினர்.

மார்வாரிகள், குஜராத்திகள் பார்சிகள் போன்றோர் இத்துறையில் முன்னின்றனர்.

D. இந்தியச் சிறுதொழில்களின் சீர்குலைவு :

17-ம் நூற்றாண்டின் மத்தியில் இந்தியத் துணைப் பொருள்கள் இங்கிலாந்தின் சந்தைகளில் மலைபோல் குவிந்து கிடந்தன. இந்திய மஸ்லின் துணிகளும், பருத்தித் துணிகளும் 'பெண்களைப் போல் பளுவற்று எளிதாகவும், சிலந்தி வலைகளின் இழைகள்போல் நுண்ணியதாகவும்' இருந்ததாகப் போற்றப்பட்டது. எனவே இந்திய வண்ணத்துணிகளை அணியக்கூடாது என்று 1701, 1720 ஆகிய ஆண்டுகளில் தடைச் சட்டங்கள் பிறப்பிக்கப் பட்டன. இதனால் இந்தியத் துணி ஏற்றுமதி பாதிக்கப்பட்டது. 1769-ம் ஆண்டில், இந்திய பட்டு, பருத்தி ஆடைகள் தயாரிப் போர் கிழக்கிந்திய கம்பெனிகளில் மட்டுமே பணிபுரிய வேண்டு மென்றும், மீறுவோர் கடினமாகத் தண்டிக்கப்படுவர் என்றும் கூறப்பட்டது. இதனால் காலப்போக்கில் நமது உற்பத்தி அளவு குறைந்து ஏற்றுமதி குறைந்தது. மாறாக இங்கிலாந்திலிருந்து நாம் இறக்குமதி செய்ய நேரிட்டது. இதனைப் பக்கத்திலுள்ள அட்ட வணை தெளிவாக்கும்.

செழிப்புற்றுச் சிறந்திருந்த நம் பழந் தொழில்கள் நசிவுற்ற மைக்குப் பல காரணங்கள் உள்ளன. அதில் ஒன்று தான் இங்கு முதலில் கூறப்பட்டது. வேறு சில பொருளாதார அரசியல், தொழில் நுட்பக் காரணங்களை ஈண்டு காணலாம்.

(1) தொழிற் புரட்சியின் விளைவு : இங்கிலாந்தின் தொழிற் புரட்சி இந்தியாவின் செல்வத்தைக் கொள்ளை கொண்டதால் எழுந்தது' என்பர் வரலாற்றறிஞர். 1750 முதல் 1850 வரை இங்கிலாந்தில் ஏற்பட்ட அப்புரட்சியே நம் தொழில் வளத்தை சீர் குலைத்தது எனலாம். நூற்பு இயந்திரமும், நீராவிப் பொறியும் கண்டு பிடிக்கப்பட்டதும் பற்பல இயந்திரப் பொறிகள் இங்கிலாந் தின் தொழில் துறையில் ஆளப்படலாயின. முதலில் பஞ்சாலைத் துறையில் நிகழ்ந்த பெரும் மாற்றம், நமது பருத்தித் துணிப் பொருள்களுக்குப் பெருஞ் சவாலாக அமைந்தது. தரத்தால் உயர்ந்து, விலையால் குறைந்து நின்ற அவ்வாலைப் பொருள்களுடன் இந்தியக் கைவினைப் பொருள்கள் போட்டியிடவியலாது தவித்தன. தொடர்கதை போல, பஞ்சாலைத் தொழிலினின்று இயந்திரங் களின் ஆட்சி, இரும்பு, எஃகு, கண்ணாடி, காகிதம், கப்பல்கட்டு தல் எனப் பல துறைகளுக்கும் பரவியபோது, நமது தொழில்கள் ஒவ்வொன்றும் அதன் பாதாளத்திற்குச் செல்லத் தொடங்கின.

இதோடு போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட பெரும் புரட்சியால், விலை மலிவான அப்பொருள்கள் இந்தியச் சந்தைகளில் கொண்டு வந்து குவிக்கப்பட்டன. புதிதாகத் திறக்கப்பட்ட சூயஸ் கால்வாய் இதற்குப் பேருதவியாய் இருந்தது.

**இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குப் பருத்தித் துணிகள் ஏற்றுமதி**

(ஒவ்வோர் ஆண்டின் ஜனவரி 5ம் தேதியில்)

(ஏற்றுமதி மதிப்பு £ ல்)

| ஆண்டு | ஏற்றுமதி | ஆண்டு | ஏற்றுமதி |
|---|---|---|---|
| 1794 | 156 | 1804 | 5,396 |
| 1795 | 717 | 1805 | 31,943 |
| 1796 | 112 | 1806 | 48,525 |
| 1797 | 2,501 | 1807 | 46,540 |
| 1798 | 4,436 | 1808 | 69,841 |
| 1799 | 7,317 | 1809 | 1,18,408 |
| 1800 | 19,575 | 1810 | 74,695 |
| 1801 | 21,200 | 1811 | 1,14,649 |
| 1802 | 16,191 | 1812 | 1,07,306 |
| 1803 | 27,876 | 1813 | 1,08,824 |

**Source:** Romesh Dutt–Economic History of India Vol p.176.

**(2) இந்தியாவில் உள்நாட்டு மன்னராட்சி மறைவு :** இந்தியத் தொழில்களுக்கு ஊக்கமும், ஆக்கமும் தந்ததே மன்னராட்சி முறையின் மனமுவந்த ஒத்துழைப்பேயாகும். நவாப்களும், இராஜாக்களும், சிற்றரசர்களும், குறுநிலக் கிழார்களும் இந்நாட்டின் தொழில்களுக்கு ஆதரவாய் நின்று போற்றியமையால் நம் தொழில்கள் சிறந்து விளங்கின. அத்தகைய மன்னராட்சி முறை ஒழிந்து பிரிட்டிஷ் ஆட்சி முறை தோன்றியதும் திறன் மிகுந்த வேலைப்பாடு கொண்ட பொருள்களைத் தயாரிக்க வல்ல இந்தியக் கைவினைத் தொழிலாளர்களைப் போற்றுவார் யாருமில்லை. எனவே நம் தொழில்கள் நசிவுறலாயின.

(3) இந்தியாவின் குடியேற்ற நாட்டுத் தன்மை (Colony) தொழிற் புரட்சியால் வளம் பெற்ற இங்கிலாந்து நாடு நம் நாட்டின் தொழில் வளர்ச்சியைத் தடுத்தது அல்லது வளர்ச்சி விகிதத்தை வேண்டுமென்றே கட்டுப்படுத்தி வைத்தது. தம்மைச் சார்ந்து நிற்கவல்ல ஒரு குடியேற்ற நாடாக இந்தியாவை மாற்றுவதற்கு இங்கிலாந்து அரசு பெரிதும் முயன்றது. அதில் வெற்றியும் பெற்றது; நமது சுதந்திரமான தொழில் மற்றும் பொருளாதார அமைப்பைக் குலைத்து, தனது முதலாளித்துவ ஆதிக்கப் பொருளாதாரத்தைப் புகுத்தியது. இதன் விளைவாக மக்கள் எண்ணத்திலும் செயலிலும் கவலையுறத் தக்க மாற்றங்கள் தோன்றி அவர்களைச் சீர்குலைத்தது. இதன் விளைவாக நம் மக்கள் புதிய முறை உற்பத்தி முறைகளை அறியாதவர்களாகவும், அறிந்தால் அதனைச் செயல்படுத்த முதல் அற்றவர்களாகவும் ஆயினர்.

(4) இந்தியப் பொருள்களின் மேல் விதிக்கப்பட்ட வரிகளும் புதிய வணிகக் கொள்கையும்: இந்தியத் தொழில்களைக் காக்க வேண்டும் என்கின்ற நினைப்பே ஆள வந்த ஆங்கிலேயர்களிடம் இல்லை எனலாம். தொழிற் புரட்சியால் உருவான உற்பத்தியாளர்கள் எனும் புது வகுப்பார், அரசியலில் செல்வாக்குப் பெற்று விளங்கினர். தம் அரசியல் செல்வாக்கால் இந்தியப் பொருள்கள் இங்கிலாந்தினுள் வருவதைத் தடை செய்தனர்; அதிக வரி விதிக்கவும் தூண்டினர் இந்தியப் பருத்தித் துணிப் பொருள்கள் இங்கிலாந்தினுள் வர வொட்டாமல் தடுத்து, ஐரோப்பா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா மேற்கு இந்தியத் தீவுகள் போன்ற பிற நாடுகளுக்கு கொண்டு செல்லும்படி மாற்றியமைத்தனர். இவ்வாறு ஒரு புறம் அதிக இறக்குமதி, வரி விதிப்பு, இறக்குமதித் தடைகள் மூலம் நம் ஏற்றுமதிக்குப் பாதகம் விளைவித்த அவர்கள், நம் நாட்டில் 'தடையிலா வர்த்தகக் கொள்கை'யை (Free-Trade Policy) 1882 முதல் 1894 வரைக் கையாண்டு, இந்நாட்டை அவர்களின் உற்பத்தி பொருள்களின் சந்தையாக்கினர்.

(5) கிழக்கிந்தியக் கம்பெனியின் முகவர்களின் (agents) தான் தோன்றித் தனமான நடவடிக்கைகள்: கிழக்கிந்தியக் கம்பெனியாவது தனது வணிக, உற்பத்தி நிறுவனங்களைக் கவனிக்க நியமித்த முகவர்கள் தான் தோன்றித் தனமாக நடந்து கொண்டு தங்கள் அதிகாரங்களைத் தவறுகப் பயன்படுத்தினர். தம் கட்டுப்பாட்டினுள் வந்த இந்திய கைவினைக் கலைஞர்களை அடக்கி, ஒடுக்கி வந்தனர். போதாக் கூலியீந்தும், முன் பணத்தைக் கட்டாயமாகக் கொடுத்து அதற்கு ஈடாக கைவினைத் தொழிற் பொருள்களை குறைந்த விலையில் அபகரித்துக் கொண்டும் அட்டூழியம் செய்தனர்.

இந்த அடக்கு முறைக்கு ஈடு கொடுக்க முடியாத நமது சமுதாயம் காலப் போக்கில் ஒட்டு மொத்தமாகத் தனது தொழிலையே துறந்து விட்டது.

(6) **கிழக்கிந்தியக் கம்பெனியின் வணிக முற்றுரிமையை (Trade-Monopoly) நீக்கியது:** முன்பே நாம் கண்டபடி, இந்தியாவுடன் வணிகம் செய்வதற்குக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அளிக்கப் பட்ட வணிக உடன்பாடு 1833-ல் காலாவதியடைந்தது. அதன் பின் எந்தப் பிரிட்டிஷ் குடிமகனும் இந்நாட்டோடு வணிகம் செய்யும் உரிமை பெற்றான். இதனால் 1833 முதல் கம்பெனி தனது வணிக முற்றுரிமையை இழந்தது. இதனால் பலருக்கு இந்தியா வுடன் வணிகம் புரிந்திடும் வாய்ப்புக் கிட்டியது. தொழிற்புரட்சி யால் உற்பத்தியாளராக விளங்கிய பல இங்கிலாந்து நாட்டவர்கள் அதிக அளவில் இங்கே வணிகத் தொடர்பு கொண்டு பொருள் களைக் குவித்தனர். தங்களின் புதிய வணிக ஆற்றல் கொண்டு பற்பல சந்தைகளை இந்தியாவில் கைப்பற்றினர் இப் புதிய வணிக வகுப்பார், தம் முன்னோர்களைப் போன்று இங்கே பொருள்கள் வாங்க வந்தவர்கள் அல்லர்; விற்க வந்தோர். எனவே நமது தொழில் வளம் மங்கியது.

(7) **இந்தியப் பொருளாதாரத்தில் தனித்தன்மையை புகுத்தியமை:** இங்கிலாந்தில் பஞ்சாலைகள் வளர்ச்சியடைந்தமையால், கிழக் கிந்தியக் கம்பெனி இந்தியாவில் பருத்தி வேளாண்மையைப் பெருக்குவதற்கான முயற்சியில் ஈடுபட்டது. பருத்தியின் தரத்தை யும், விளைச்சல் பரப்பையும் அதிகரிக்க முயன்றது. சணல், பருத்தி போன்ற வேளாண்மைத் துறைக் கச்சாப் பொருள்களைப் பெருக்கு வதிலேயே கவனம் செலுத்தியது. ஆக, நமது கச்சாப் பொருள்களை எடுத்துச் சென்று, அதனையே வினை முற்றிய பொருளாக்கி நம் தலையில் கட்டினர். இதன் விளைவால் நமது நாடு தொழில் துறை நாடாக விளங்குவதக்குப் பதில் வேளாண்மை சார்ந்த நாடாக மாறியது.

(8) **வெளிநாட்டுத் தொடர்பால் நம் நாட்டில் எழுந்த தேவையின் மாற்றங்கள்:** மேலை நாட்டுக் கல்வியும், நாகரீகமும் பரவிடப் பரவிட, நம் மக்கள் மேலை நாட்டாரைப் போல் நடையுடை பாவனைகளில் ஒழுகத் தலைப்பட்டனர். இதனால் எழுந்த தேவை மாற்றத்தால் வெளி நாட்டுப் பொருள்கள் மிகுந்த அளவில் தேவைப்பட்டமையால், அவ்வகைப் பொருள்களின் இறக்குமதி அதிகரித்தது. இந்திய மன்னராட்சி மறைவால் ஆதரவிழந்த நம் பழம் பெருந் தொழில்கள், நமது மக்களின் தேவை மாற்றத்தால் பூரண ஆதரவிழந்தன. இவ்வாறு ஆங்கிலேயர்கள் உறுதியான

ஆலை அமைதியான ஒரு புரட்சியை நம் மக்களின் சிந்தனையில் எழுப்பி, நாகரீக, பண்பாட்டு வழக்கங்களை மாற்றி அமைத்து நம் கைவிரல் கொண்டே நம் கண்ணைக் குத்தி விட்டனர்.

இந்தியாவில் இருப்புப் பாதைத் துறையின் வளர்ச்சி, சூயஸ் கால்வாய்த் திறப்பு, தம் இயந்திர சாதனங்களை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய பிரிட்டிஷ் அரசு இங்கிலாந்தில் விதித்த தடை இந்தியக் கைத் தொழில்களை மேற்பார்வையிட்டோரைக் கட்டுப் படுத்தியமை போன்ற பிற காரணங்களினாலும் நம் தொழிலை நசுக்கி விட்டனர் ஆங்கிலேயர்.

எனவே 1880-ம் ஆண்டு வாக்கில் நமது கைவினைத் தொழில்களின் சீர்குலைவும், நசிவும் நிறைவெய்தின. இதன் விளைவாகப் பல பொருளாதார விளைவுகள் ஏற்பட்டன. நாடெங்கும் வேலையின்மைப் பிரச்சினை பூதாகாரமாக உருவெடுத்தது. நிலத்தை நம்புவோர் எண்ணிக்கை பெருகி நிலங்கள் துண்டாடப்பட்டு, பகுக்கப்பட்டு, விவசாய உற்பத்தியும் பாதிக்கப்பட்டது. சான்றாக, நிலத்தை நம்பியோர் எண்ணிக்கை விகிதம் 19-ம் நூற்றாண்டின் மத்தியில் மொத்த ஜனத் தொகையில் 55 சதவீதமாக இருந்தது. இந்த விகிதம் 1901ல் 68 சதவீதமாகவும், 1931ல் 72 சதவீத மாகவும் அதிகரித்தது. பொதுவில் வில்லியம் பெண்டிங் பிரபு கூறியது போல, 'இந்திய சமவெளி முழுவதும் நெசவுத் தொழிலாளிகளின் எலும்புகளால் வெண்மையாக்கப்பட்டுக் கிடந்தன, (The bones of cotton weavers are bleaching the plains of India).

(E) **முதல் யுத்த காலம் :** முதல் உலக யுத்த காலத்திற்கும் இரண்டாம் உலக யுத்த காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் கீழ்க்கண்ட முக்கியமான நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன.

(i) சர். தாமஸ் ஹாலந்து (Sir Thoms Holland) தலைமையில் 'இந்திய தொழிலக ஆணைக்குழு' (Indian Industrial Commission) 1916-ல் நியமிக்கப்பட்டு 1918-ல் அறிக்கை சமர்ப்பித்தது. இந்தியத் தொழில்களை முறைப்படி ஆய்வு செய்தது.

(ii) முதல் உலக யுத்தத்தை ஒட்டி நாட்டில் 1919-20-ம் ஆண்டுகளில் செழிப்பு நிலை நிலவியது. விலைகள் சுழன்றேறிச் சென்று கொண்டிருந்தன.

(iii) இதனையொட்டி 1921-ல் சிக்கல்நிலை உருவானது.

(iv) 1921 முதல் 1927 முடிய அந்நியச்செலாவணி மாற்று விகிதங்களில் பெரும் ஏற்ற இறக்கங்கள் இருந்தன.

(v) சர். இப்ராகிம் இரகீம் தூலா (Sir Ibrahim Rahim toola) தலைமையில் முதலாவது அரசிறைக் குழுவானது அக்டோபர் 1921-ல் நியமிக்கப்பட்டது. அக்குழு 'பேதங்காட்டும் காப்புச் சலுகையினை' (Discriminating Protection) 1923-ல் பரிந்துரை செய்து, 6 முக்கிய தொழில்களுக்கு காப்பு வழங்கியது.

(vi) தொழிலாளர் பிரச்சினைகளை ஆய்வதற்காக 1929-31-ல் தொழிலாளர் பற்றிய ஒயிட்லி (Whitely) ஆணைக்குழு அமைக்கப் பட்டது.

(vii) 1929-33-ல் உலகமெங்கும் 'பொருளாதாரப் பெரு மந்தம்' தோன்றி உலகப் பொருளாதாரத்தையே சீர் குலைத்தது.

(viii) இந்தியாவிற்கு மைய வங்கி நிறுவுதல் பற்றி ஆய்வதற் காக 'மையவங்கி விசாரணைக் குழுவானது' 1930-ல் நிறுவப் பட்டது.

(ix) 1934-37-ல் பொருளாதாரம் பெருமந்தத்திலிருந்து நாடு மீட்சியுற்றது.

(x) 1935-ல் புதிய அரசியல் அமைப்புச் சட்டம் அமைக்கப் பட்டு செயல்படுத்தப்பட்டது.

(xi) நாட்டின் பல மாநிலங்களில், மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட அரசு 1937-39-ம் ஆண்டுகளில் ஆட்சி பொறுப் பேற்றது.

இத்தகைய பல்வகை நிகழ்ச்சிகளும் நமது இந்தியத் தொழில் துறை வளர்ச்சியை 1919 முதல் 1944 வரையான காலத்தில் இயக்கிக் கொண்டிருந்தன.

முதல் யுத்தத்தினால் ஆலைப் பொருள்களுக்கு இந்தியாவில் தேவை பெருகியது. இத்துடன் யுத்த நோக்கங்களுக்காக அரசின் தேவைகளும் பல்கிப் பெருகின. யுத்தத்தின் விளைவாக, இங்கிலாந்து மற்றும் ஐரோப்பிய நாடுகளிலிருந்து பொருள்களின் இறக்குமதி கணிசமாகக் குறைந்தது. இத்தகையதோர் சூழ் நிலையில் இந்திய ஆலைகள் வளர்ச்சி நிலை நோக்கி விரைவாகச் சென்று கொண்டிருந்தன. தொடர்ச்சியாக உற்பத்தியில் ஈடு பட்டமையால் பேரளவுத் தொழில்கள் பலவற்றின் இயந்திரங்கள் தேய்ந்து பழுதுபட்டன. இரும்பு, எஃகு, சணல், பஞ்சாலை பொருள் கள், தோல் பொருள்கள், கம்பளிப் பொருள்களின் தேவை பெருகியமையால் உற்பத்தியளவும் பெருகியது.

அதிர்ஷ்ட வசமாக அரசின் கருணைப் போக்கும் தொழில் வளர்ச்சிக்கு உதவியது எனலாம். 1921ல் அமைக்கப்பட்டு

1923ல் அறிக்கை சமர்ப்பித்த சர். இப்ராகிம் இரகீம் தூலா குழுவின் பரிந்துரைகளால், தேந்தெடுக்கப்பட்ட சில ஆலைகளுக்குக் காப்புச் சலுகை பெறும் வாய்ப்புக் கிட்டியது. இரும்பு, எஃகு ஆலைகள், பஞ்சாலைகள், சணல் ஆலைகள், சர்க்கரை ஆலைகள், காகிதம் மற்றும் காகிதக் கூழ் ஆலைகள், தீப்பெட்டித் தொழில் போன்ற துறைகள் இக்காப்புச் சலுகையினைப் பெற்றன. காப்புச் சலுகை பெற்ற இத்தொழில்கள் கிடைத்த வாய்ப்பினைச் செவ்வனே பயன்படுத்தி நிரந்தரமானதொரு நிலையில் தம்மை நிலைநிறுத்திக் கொண்டன. சில முக்கிய துறைகளில் அந்நியத் துறைகளின் போட்டியைத் தவிர்க்க இயன்றது. கீழ்வரும் அட்டவணை நமது வளர்ச்சி விகிதத்தைப் படம் பிடித்துக் காட்டும்.

| வ. எண் | தொழில்கள் | 1922ல் உற்பத்தி | 1939ல் உற்பத்தி | அதிகரித்த சதவீதம் |
|---|---|---|---|---|
| | | (ஆயிரம் டன்கள்) | | |
| 1 | எஃகுப் பாளங்கள் | 131 | 1,042 | 800 |
| 2 | சர்க்கரை | 24 | 931 | 3,880 |
| 3 | காகிதம், காகித அட்டைகள் | 24 | 67 | 180 |
| | | (மில்லியன் கெஜங்கள்) | | |
| 4 | பருத்தித் துணிப் பொருள்கள் | 1,714 | 4,116 | 250 |
| | | (மில்லியன் குரோஸ்கள்) | | |
| 5 | தீப்பெட்டி | 16 | 22 | 83 |

இவ்விடைப்பட்ட காலத்தில்தான் பல புதிய தொழில்கள் தோன்றின. சான்றாக மின்சார சாதனங்களைத் தயாரிக்கும் தொழில் இச்சமயத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டது. இதன் விளைவாக 1914ல் 2,136 ஆக இருந்த மொத்த ஆலைத் தொழில்கள் 1939ல் 11,613 ஆக உயர்ந்தன. அதே போல் தொழிலாளர்களின் எண்ணிக்கையும் 9,50,000 இலட்சத்திலிருந்து 17,50,000 இலட்சமாக உயர்ந்தது. இக்காலத்தில் காணப்பட்ட இன்னொரு முக்கிய மாற்றம் என்னவென்றால், இந்தியத் தொழிலமைப்பில் அந்நிய அமைப்புகள் கட்டுப்படுத்திய சொத்து மதிப்பு படிப்படியாகக் குறைந்து வந்ததேயாம். சான்றாக, 1914ல் நமது மொத்த

தொழில் துறை சொத்து மதிப்பில் 43 சதவீதம் வெளிநாட்டு நிறுவனங்களின் கட்டுப்பாட்டில் இருந்தது. 1935ல் இது 10 சதவீதம் எனவும், 1348ல் 3·6 சதவீதம் எனவும் குறைந்தது.

## F. இரண்டாம் உலக யுத்த காலம்

முதல் உலக யுத்தத்தைப் போலவே இரண்டாம் உலக யுத்தமும் நமது தொழில்களின் வளர்ச்சிக்கு ஊக்கத்தை அளித்தது எனலாம். யுத்த நோக்கங்களுக்காக, அப்போதைய இந்திய அரசும், இங்கிலாந்து நாட்டு அரசும், ஏனைய நேச நாடுகளும் நமது ஆலைப் பொருள்கள் பலவற்றிற்கு ஆணைகள் வழங்கின. இதற்குச் சான்றாக இந்திய அரசின் பொதுத்துறை முதலீட்டைக் குறிப்பிடலாம். தாதர், படேல் என்ற ஆசிரியர்கள் கூறியபடி, 1939-40 முதல் 1944-45 வரையான காலத்தில் பொதுத்துறை முதலீடானது 400 சதவீதம் அதிகரித்தது. யுத்தகால விலைவாசி உயர்வினைக் கருத்திற் கொண்டு அதற்கொப்ப முதலீட்டு அளவைக் குறைத்து மதிப்பிட்டாலும் கூட, மொத்த முதலீட்டு அளவுப் பெருக்கமானது 200 சதவீதமாவது இருக்கலாம்.

யுத்தச் சூழ்நிலையையொட்டி பெருந் தொழில்கள் பல தம் உற்பத்திக் கொள்ளளவைப் பெருக்கிக் கொண்ட போதும் கூட, வேறு பல நிறுவனங்கள் அவ்வாறு பெருக்கிக் கொள்ள இயலாது போயிற்று. வெளிநாடுகளிலிருந்து இயந்திரங்கள், கருவிகள் இறக்குமதி செய்வது யுத்தகாலத்தில் தவிர்க்கப்பட்டமையால், பல நிறுவனங்கள் புதிதாகத் தோன்றிடவோ அல்லது கொள்ளளவை அதிகம் பெருக்கிடவோ வாய்ப்பு இல்லாது போயிற்று. பொதுவாக 1938 முதல் 1945 வரையான காலத்தில் தொழில்துறை உற்பத்திப் பொருள்களின் பொதுக் குறியீட்டெண் (General Index) அடுத்த பக்கத்லுள்ளவாறு அமைந்தது.

யுத்தகாலத்தில் தொழில்துறை உற்பத்தியின் போக்கினை பின்னுள்ள புள்ளி விவரங்கள் தெளிவாக்குகின்றன.

ஏற்கனவே இருந்த தொழில்கள் ஆக்கமும் ஊக்கமும் பெற்று விரிவு பெற்றது. முதன் முதலாக பாரதத்திலேயே பல புதிய தொழில்களும் இரண்டாம் திட்ட காலத்தில் தாம் நிறுவப்பட்டன. இரும்புசார் மங்கனீஷ் (Ferro-manganese) இரும்புசார் 'மணலம்' என்ற மூலகம் (Ferro-Selicon) போன்ற இரும்பு உலோகக் கலவைகளும், செம்பு, செம்புத் தகடுகள், தந்திக் கம்பிகள், மின்னிணைப்புக் கம்பிகள் போன்ற இரும்பு சார்பற்ற பொருள்களும்,

சைக்கிள்கள், தையல் இயந்திரங்கள், நீர் இறைக்கும் விசைக் குழாய்கள், டீசல் இயந்திரங்கள், இயந்திரக் கருவிகள் போன்ற பொறியியல் துறைப் பொருள்களும், தேயிலை, எண்ணெய்ப் பொருள்களின் படிமுறை இயந்திரங்களும் (Processing Machinery), குளோரின், கார சோடா உப்பு, பாஸ்பேட்டுகள், போட்டோத் தொழிலிலுள்ள இரசாயனங்கள் போன்ற இரசாயனப் பொருள்கள் செய்யும் தொழில்களும் புதிதாக இரண்டாம் யுத்த காலத்தில் தொடங்கப்பட்டன.[1]

பொதுத்துறை உற்பத்திப் பொருள்களின் குறியீட்டு எண்

அடிப்படை 1937 = 100

| ஆண்டு | குறியீட்டெண் |
|---|---|
| 1938 | 105·4 |
| 1939 | 102·7 |
| 1940 | 109·9 |
| 1941 | 117·8 |
| 1942 | 111·2 |
| 1943 | 117·0 |
| 1944 | 117·0 |
| 1945 | 120 0 |

ஏற்கனவே நிறுவப்பட்ட பழைய தொழில்களில் சில நல்ல முன்னேற்றம் கண்டன. சிமெண்ட், காகிதம் பஞ்சாலைகள் இரும்பு எஃகு, சர்க்கரை போன்ற ஆலைகள் அவற்றுள் சிலவாம். 1937 முதல் 1946 வரை சிமெண்ட் ஆலைகள் தம் உற்பத்திக் கொள்ளளவை 1.5லிருந்து 2·6 மில்லியன் டன்களுக்கும், உண்மையான உற்பத்தி அளவை 2 மில்லியன் டன்களுக்கும் (இரு மடங்கு பெருக்கம்) உயர்த்திக் கொண்டன. அவைகள் 28,800 தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு அளித்தன. கட்டுமான வேலைகளுக்குச் சிமெண்ட் மிக இன்றியமையாததாதலால் சிமெண்ட் தேவை மிகவும் அதிகரித்தது; எனவே உற்பத்தியும் இருமடங்காகப் பெருகியது. 1937–1946 வரையிலுள்ள காலத்தில்

1. Report of the Indian Fiscal Commission 1949-57. vol. I Government of India P 20-21.

காகித ஆலைகளும் தமது உற்பத்தி அளவை 1,06,000 டன்கள் என்று இரட்டிப்பாகப் பெருக்கின 18,800 மக்களுக்கு வேலை வாய்ப்பை நல்கியது. இரும்பு, எஃகுத் தொழிலிலும் சிறப்பாக முன்னேறியது. டாடா இரும்பு எஃகுத் தொழிற்சாலை தனது எஃகு பாளங்கள் உற்பத்திக் கொள்ளளவை ஒரு மில்லியன் டன்களுக்கும், 'வங்காள எஃகு இணைக்கழகமானது' (Steel corporation of Bengal) பின்பு இந்தியன் இரும்பு எஃகு நிறுவனத்துடன் (Indian Iron & Steel company) இணைக்கப்பட்டது. தனது எஃகு உற்பத்திக் கொள்ளளவை 2,70,000 டன்களுக்கு (1942ல்) உயர்த்திக் கொண்டது. பற்பல சிக்கல்களுக்கும், தேக்க நிலைக்கும் இடையே சிக்குண்டு தடுமாறிய பஞ்சாலைகளும் தம் சிக்கல்களினின்று விடுபட்டு செழிப்பு நிலை நோக்கி வீறுநடை போட்டன. தமது உற்பத்திக் கொள்ளளவை 20 சதவீதமும், வேலைவாய்ப்பு அளவினை 30 சதவீதமும் யுத்தகாலத்தில் அதிகரித்தன. அச்சமயம் பஞ்சாலைகள் உற்பத்தி செய்த பருத்திப் பொருள்களில் நான்கில் ஒரு பங்கினை அரசே 1943ல் வாங்கிக் கொண்டதை இங்கு நினைவு கூற வேண்டும். சர்க்கரை ஆலைகளும் இச்சூழ்நிலையை நன்கு பயன்படுத்திக் கொண்டு முன்னேறின. 1938-39ல் நம்நாட்டில் ஓராண்டுச் சர்க்கரை உற்பத்தியின் அளவு ஒரு மில்லியன் டன்னுகப் பெருகிறது. 75,0,000 தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்புக் கிட்டியது. 1943-44ல் சர்க்கரை உற்பத்தி அளவானது 1·2 மில்லியன் டன்களுக்கு உயர்ந்த தோடன்றி இறக்குமதி அளவும் கணிசமாகக் குறைக்கப்பட்டது. இத்தகைய பூரிக்கத்தக்க வளர்ச்சிக்கு இரண்டாம் உலக யுத்தம் மட்டுமே காரணமன்று. 1923 ம், ஆண்டில் வழங்கப்பட்ட 'பேதங் காட்டும் காப்புக் கொள்கையும் ஒரு காரணியாக அமையும்.

இக்காலக் கட்டத்தில் பதிவு செய்து கொண்ட நிறுவனங் களின் எண்ணிக்கையும் செலுத்திய மூலதனமும் அதிகரித் துள்ளது.

| ஆண்டு | நிறுவனங்கள் எண்ணிக்கை | செலுத்திய மூலதனம் (ரூபாய் கோடியில்) |
|---|---|---|
| 1939 | 11,114 | 290 |
| 1945 | 14,859 | 389 |

இரண்டாம் யுத்தகாலத்தில் மட்டும் செலுத்திய மூலதனம் ரூ 100 கோடியும் நிறுவனங்கள் எண்ணிக்கை 3,475-ம் அதிகரித் துள்ளதை கண்டு காணலாம்.

நாணயத்தின் ஒரு பக்கத்தை மட்டும் பார்த்தால் போதுமா? யுத்தத்தால் விளைந்த தீய விளைவுகளையும் காணத்தான் வேண்டும்.

முதலாவதாக, யுத்தத்திற்கு முன்பு செயல்பட்டுக் கொண்டிருந்த பல தொழிற்சாலைகளின் மூலதனப் பொருள்களும் கருவிகளும் இரவு பகலெனத் தொடர்ந்து இடைவிடாது பயன் படுத்தப்பட்டமையால் அவைகள் தேய்ந்து பழுதுற்றன. அப் பழுதுகளைச் செம்மை செய்திட இன்றுவரை முயற்சி செய்ய இயலவில்லை. இதனால் தற்சமய உற்பத்தி பாதிக்கப்படுகிறது.

இரண்டாவதாக, நாட்டின் இயற்கைக் கனிச் செல்வங்கள் பல யுத்த முயற்சிகளுக்காக, திசை திருப்பப்பட்டு இராணுவ காரியங் களுக்கு மட்டுமே பயன் படுத்தப்பட்டமையால், பற்பல நுகர்வுப் பொருள்கள் உற்பத்தி தடைப்பட்டு, அவைகளின் அளிப்பில் தீவிரப் பற்றுக்குறைத்தன்மை நிலவியது. பேரளவுத் தொழில்கள் மேலும் மேலும் யுத்த வேலையில் அதிகரித்த போது இச்சிக்கல் மேலும் தீவிரமாகியது. இதனால் ஏழை எளிய நுகர்வினர் மிக அதிகம் பாதிக்கப்பட்டனர். இதன் விளைவாக அரசு தலையிட்டு கட்டுப்பாடுகளையும் பங்கீட்டு முறைகளையும் செயல்படுத்த வேண்டியதாயிற்று. ஆனால் இத்தகைய அரசு நடவடிக் கைகளோ செம்மையாக செயல்படுத்தப்படவில்லை.

மூன்றாவதாக, சிலதுறைகளில் சில வேலைகளில் உற்பத்தி அளவு குறைந்தும் கூட விலைகள் மட்டும் விஷம் போல் சுழன்றேறிச் சென்றன. இதற்குக் காரணம் அரசின் கட்டுப்பாடு களும், பங்கீட்டு முறைக் கட்டுப்பாடுகளுமேயாம். யுத்ததேவை களைச் சமாளிக்கவும் உள்நாட்டுத் தேவைகளைக் கட்டுப்படுத்தவும் இம்முறைகளைக் கொண்டு வந்தாலும் கூட, அது சில தொழில் களுக்கு கொழுத்த லாபம் தரவல்ல காமதேனுவாக அமைந்து விட்டது. சான்றாக, பஞ்சாலைப் பொருள்கள், சணல், காகிதம் சர்க்கரை போன்ற பொருள்கள் கணக்கு வழக்கற்ற இலாபத்தைச் சம்பாதித்தன. இதன் விளைவு நாட்டில் பணவீக்க நிலை தோன்றியது.

நான்காவதாக, கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்த வேண்டித் தொழில்களை விரிவாக வளர்த்து விட்டாலும், சமமான வட்டார வளர்ச்சி என்பதனைப் பற்றி அக்கறையே காட்டவில்லை. இந் நாட்டின் தொழில் வளர்ச்சி அறிவியல் நெறியிலே திட்டமிட்டுச் செயல்படுத்தப்படவில்லை.

ஐந்தாவதாக, தொழில்களின் இட அமைப்பு, சந்தை வசதி, கச்சாப் பொருள்களின் அளிப்பு வசதி, உற்பத்தி அளவு, தொழில் நுட்ப நிதி நிலைமை போன்ற பொருளாதார அடிப்படைக் கருத்துகளை கவனத்தில் கொள்ளாமல், யுத்தகாலக் குறிக்கோள் களை மட்டுமே கருத்தாகக் கொண்டு தொழில்கள் வளர்க்கப் பட்டன.

இறுதியாக, தொழிலாளர்கட்குக் கிடைத்த ஊதிய விகிதத்தை விட தொழில் முயல்வோர் பெற்ற இலாப விகிதமே அதிகமாக இருந்தது இவ்வாறு யுத்தகாலத் தொழில் நிலைச் செழிப்பின் பங்கில் பெரும்பகுதி 'முதல்' என்ற ஓர் உற்பத்திக் காரணிக்கு மட்டுமே கிட்டியது. உழைப்புக் காரணி அறவே புறக்கணிக்கப் பட்டது.

பொதுவாக, இரண்டாம் யுத்தம் முடிவுற்ற வேளையில், இந்தியா தனது நவீனத் தொழில் துறையின் ஒரு நூற்றுண்டைக் கடந்து முன்னேறியது எனலாம்.

### G. 1945 முதல் 1947 வரையான காலம்

ஆகஸ்ட், 1945ல் இரண்டாம் யுத்தம் முடிவடைந்ததும் நமது பொருளாதாரத்தில் ஏற்பட்ட சுமையை உணர முடிந்தது. தொகுப்புகள் பூரணமாகப் பயன்படுத்தப்பட்டமையால் அவை மிகவும் பழுதுற்றிருந்தன. சீராக்க முயற்சிகள் மேற்கொள்ள முயலவில்லை; முயன்ருலும் இறக்குமதி அனுமதிக்கப்படவில்லை. இதன் காரணமாக நுகர்வுப் பொருள்கள் பற்றுக்குறை தொடர்ந்து நிலவியது; பணவீக்க நிலையும் நிலவியது.

இந்நிலையில் 1946–ல் இரும்பு, எஃகு, சிமெண்ட், சர்க்கரை, பஞ்சாலைப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தி குறைந்தமையால் பணவீக்க நிலை வலுத்தது. இதனுல் விலைக் கட்டுப்பாடு முறை களும் தொடர்ந்து நிலவின.

1946ல் முதல் முதலாவதாக 'உற்பத்தித் தொழில்களின் கணிப்பு' மேற்கொள்ளப்பட்டது. இக்கணிப்பின் மூலமாக, சர்க்கரை, தாவர எண்ணெய், பஞ்சாலைகள், சணல், இரும்பு, எஃகு பொதுவான பொறியியல் துறை போன்ற சில துறைகள் மட்டுமே தொழில் துறையில் முன்னணியில் நின்றன என்பது புலனு யிற்று. அதுப்பறிய விவரங்களைப் பக்கத்திலுள்ள அட்டவணை தெளிவாக்கும்.

**1946-ல் இந்திய உற்பத்தித் தொழில்களின் நிலை**

| வ. எண் | இனம் | எல்லாத் தொழில்களும் | சர்க்கரை | தாவர எண்ணெய் தயாரிப்பு | சிமெண்ட் |
|---|---|---|---|---|---|
| 1 | மொத்த ஆலைகள் (பதிவு செய்யப்பட்டன) | 5,013 | 166 | 569 | 11 |
| 2 | உற்பத்தி மூலதனம் (a) நிலைமுதல் (ரூபாய்) | 1,63,35,93,501 | 13,88,89,879 | 6,50,63,429 | 2,93,35,450 |
| | (b) மொத்த மூலதனம் ,, | 3,66,83,37,440 | 30,52,87,457 | 23,00,08,408 | 4,86,40,068 |
| 3 | பணிபுரிந்தோர் எண்ணிக்கை (a) தொழிலாளிகள் | 13,87,010 | 73,088 | 30,419 | 9,266 |
| | (b) மொத்தம் | 15,14,382 | 93,836 | 35,917 | 10,231 |
| 4 | சம்பளம், கூலி (ரூபாய்) | 1,01,80,48,701 | 3,82,87,053 | 1,90,39,715 | 50,15,967 |
| 5 | உற்பத்தி மதிப்பு (ரூபாயில்) | 6,00,84,51,346 | 37,99,76,438 | 59,93,73,160 | 3,85,02,841 |
| 6 | உற்பத்தித் துறைக்குச் சேர்க்கப் பட்ட மதிப்பு (ரூபாயில்) | 2,11,41,31,393 | 7,91,26,680 | 46,02,851 | 1,49,54,020 |

| வ. எண் | இனம் | காகிதம், காகித அட்டை | தீப்பெட்டி | பஞ்சாலைத் துறை (நூற்பு, நெசவு) | கம்பளி நெசவு ஆலைகள் | சணல் ஆலைகள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | மொத்த ஆலைகள் (பதிவு செய்யப்பட்டன) | 36 | 31 | 482 | 43 | 95 |
| 2 | உற்பத்தி மூலதனம் | | | | | |
| | (a) நிலைமுதல் (ரூபாயில்) | 3,13,20,625 | 54,36,591 | 55,39,98,126 | 1,00,61,680 | 19,98,58,748 |
| | (b) மொத்த முதல் „ | 5,37,16,130 | 1,19,05,224 | 1,30,60,70,364 | 3,94,18,524 | 50,05,72,288 |
| 3 | பணிபுரிந்தோர் எண்ணிக்கை | | | | | |
| | (a) தொழிலாளிகள் | 18,759 | 9,379 | 6,15,593 | 15,658 | 3,08,172 |
| | (b) மொத்தம் | 21,465 | 10,355 | 6,50,697 | 16,750 | 3,19,850 |
| 4 | சம்பளம், கூலி (ரூபாய்) | 1,41,18,988 | 71,49,610 | 51,23,73,242 | 1,30,78,743 | 16,06,80,326 |
| 5 | உற்பத்தி மதிப்பு (ரூபாயில்) | 8,86,74,716 | 4,76,02,568 | 11,34,606(lb) | 6,91,47,043 | 88,29,32,026 |
| 6 | உற்பத்தித் துறைக்குச் சேர்க்கப்பட்ட மதிப்பு (ரூபாயில்) | 3,26,70,464 | 2,69,92,870 | 97,27,34,378 | 3,08,55,353 | 36,97,76,660 |

| வ. எண் | இனம் | தையல் இயந்திரங்கள் | மின் விளக்குகள் | மின் விசிறிகள் |
|---|---|---|---|---|
| 1 | மொத்த ஆலைகள் (பதிவு செய்யப்பட்டன) | 3 | 6 | 34 |
| 2 | உற்பத்தி மூலதனம் | | | |
| | (a) நிலைமுதல் (ரூபாயில்) | 21,63,905 | 10,72,522 | 48,04,192 |
| | (b) மொத்த முதல் ,, | 33,16,325 | 32,16,203 | 1,20,09,733 |
| 3 | பணிபுரிந்தோர் எண்ணிக்கை | | | |
| | (a) தொழிலாளிகள் | 670 | 646 | 4,470 |
| | (b) மொத்தம் | 717 | 511 | 5,167 |
| 4 | சம்பளம், கூலி (ரூபாய்) | 4,69,663 | 7,52,698 | 42,01,815 |
| 5 | உற்பத்தி மதிப்பு ,, | 10,41,138 | 34,77,006 | 1,55,78,932 |
| 6 | உற்பத்தித் துறைக்குச் சேர்க்கப்பட்ட மதிப்பு (ரூபாயில்) | 5,32,251 | 8,56,006 | 79,36,590 |

Source : "Ten Years of Indian Manufacture (1946–55) Director of Industrial Statistics Cabinet Secretariat, Calcutta—Summary Tabulation from, 'India Planning for Industrialisation' Jagdish. N. Bhagwati & Padma Desai, p. 39–42.

**H. நாட்டுப் பிரிவினையின் விளைவுகள் (Effects of Partition)**

1947 ஆகஸ்ட் 15ம் நாள் நாட்டுப் பிரிவினையுடன் அரசியல் சுதந்திரம் பெற்ற நாம் பொருளாதாரத் துறையிலும் புதிய மாற்றம் பெற்றோம். புதிய சூழ்நிலைக் கேற்ப நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்படுத்திக் கொள்ள நாம் பல இன்னல்களை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. நாட்டுப் பிரிவினையால் தொழில் துறையில் ஏற்பட்ட அத்தகைய விளைவுகளை இங்குக் காணலாம்.

(i) **தொழில் துறைப் பங்கீடு :** பிரிக்கப்படாத இந்தியத் துணைக் கண்டத்தின் நிலபரப்பில் 77 சதவீதமும், மக்கட் தொகையில் 82 சதவீதமும், மொத்த தொழில் நிறுவனங்களில் 91 சதவீதமும், மொத்தத் தொழிலாளர்களில் 93 சதவீதமும் பிரிவினைக்குப் பின் இந்தியா பெற்றது. சணல் ஆலைகள், இரும்பு எஃகு ஆலைகள், காகித ஆலைகள் போன்றவைகள் பாகிஸ்தான் பகுதிக்குக் கிட்டவில்லை. சிமெண்ட், கண்ணாடி தீப்பெட்டி, இரசாயனப் பொருள்கள் போன்ற துறைகளிலும் பாகிஸ்தான் பகுதியில் போதுமான வளர்ச்சி கிடையாது. மாறாக நமக்கோ பலதிறப்பட்ட தொழில்களின் பரவலான வளர்ச்சியான விடுதலையின் போதே கிடைத்தது. அவ்வேளையில் லட்சம் மக்களுக்கு மேல் வேலை வாய்ப்பளித்த பெருந் தொழில் நிறுவனங்கள் நம்மிடம் 6 அமைந்தன; பாகிஸ்தானுக்கோ ஒன்றும் கிட்டவில்லை.

(ii) **தாதுப் பொருள்கள் பங்கீடு :** நிலக்கரி, மைகா, மாங்கனிஷ், இரும்புத்தாது போன்ற முக்கியமான தாதுப் பொருள்கள் கிடைக்கும் பகுதி நமக்கு அதிகம் கிடைத்தது. பிரிக்கப்படாத இந்தியாவின் மொத்த கனிப் பொருள் வளத்தில் 3 சதவீதம் மட்டுமே பாகிஸ்தானுக்கு வழங்கிட நேரிட்டது.

(iii) **வேளாண்மை சார்ந்த தொழில்கள் பங்கீடு :** நாட்டுப் பிரிவினையால் பாதிக்கப்பட்ட இரு முக்கிய தொழில்கள் சணல் ஆலைகளும், பஞ்சாலைகளுமே ஆகும், பிரிக்கப்படாத இந்தியநாடு சணல் உற்பத்தியில் உலகின் முற்றுரிமை பெற்ற நாடாக விளங்கியது. ஆனால் நாடு துண்டாடப்பட்ட பின்பு, 1947-க்கு முன்பு உற்பத்தி செய்த கச்சாச் சணல் அளவில் 81 சதவீதம் பாகிஸ்தானுக்குச் சென்று விட்டது. குறிப்பாக, உயர்ந்த ரக சணல் விளைந்ததோ. கிழக்கு வங்கம், என்றழைக்கப்பட்ட வங்காள தேசத்தில் ஆகும், எனினும் கச்சாச் சணல் பற்றாக்குறை விடுதலை பெற்ற பின்பு, தீவிர உற்பத்திப் பெருக்கத்திற்குப் பின்னர் சமாளிக்கப்பட்டது.

இதுபோல, நீண்ட மத்திய இழைப்பருத்தி உற்பத்தியிலும் இடையூறு ஏற்பட்டது. அவ்வகைப் பருத்தி விளையக்கூடிய சிந்து மேற்கு பஞ்சாப் பகுதிகள் பாகிஸ்தானுக்குச் சென்றன. விடுதலைக்கு முன்பிருந்த மொத்தப் பஞ்சாலைகள் 394ல் இந்தியாவிற்கு 380ம், பாகிஸ்தானுக்கு 14-ம் கிடைத்தன. ஆக, அதிக அளவு ஆலைகளும், குறைந்த அளவு கச்சாப் பொருள் விளைவுப் பகுதிகளும் நாம் பெற்றோம்.

(iv) **சந்தை வழிகள் இழப்பு :** நாட்டுப் பிரிவினையின் காரணமாக நமது பஞ்சாலைப் பொருள்கள், கண்ணாடி, அலுமினியப் பொருள்கள் சீனக் களிமண் பொருள்கள், தாவர எண்ணெய், இரப்பர் பொருள்கள், எனாமல், செப்புப் பொருள்கள், காலணிகள் போன்ற பலதுறைப் பொருள்களின் தேவை குறைந்தது இதற்குக் காரணம் பாகிஸ்தானின் பகுதி மக்கள், விடுதலைக்கு முன்பு அத்தகைய பொருள்களை அதிகம் நுகர்ந்தனர். எனவே நாம் சுதந்திரத்திற்குப் பின்பு புதிய சந்தைகளைப் பிடிக்க வேண்டியதாயிற்று.

(v) **தொழில் நுட்ப ஆற்றல் மிக்க தொழிலாளர்களும் நிர்வாக தொழில் முயல்வோர்களும் :** பாகிஸ்தான் பிரிக்கப்பட்டதால், தொழில் நுட்ப ஆற்றல் மிக்க பல தொழிலாளர்கள் பாகிஸ்தானுக்குச் சென்று விட்டனர். இதன் விளைவாகக் கண்ணாடித் தொழில், கம்பளித் தொழில், பனியன் தொழில், உலோகத் தொழில் போன்ற துறைகள் பாதிக்கப்படலாயின. ஆனால் நிர்வாக ஆற்றல் மிக்க தொழில் முயல்வோர்களோ இந்தியாவில் தங்கி விட்டனர். இவர்களின் பணியால் விடுதலைக்குப் பின் நாட்டின் தொழில் வளர்ச்சி விரிவடைந்தது.

(vi) **மூலதன வசதிகள் :** நாட்டுப் பிரிவினையாலும், அதனைத் தொடர்ந்து துணைக் கண்டத்தில் எழுந்த அமைதியின்மையும் நாட்டின் தொழில் துறையில் நிலைபெற்ற தன்மையை ஏற்படுத்தியது. இதனால் அந்நிய மூலதனம் வருவது தடைபட்டது.

(vii) **போக்குவரத்து துறைமுக வசதிகள் :** பிரிவினையின் காரணமாக நமக்கு 34,000 மைல்கள் நீள இருப்புப் பாதைகள்-அதாவது மொத்த இருப்புப் பாதை அளவில் 83 சதவீதம், நமக்குக் கிடைத்தது. இதனால் ஓரளவு நமது போக்குவரத்து வசதிகள் பாதிக்கப்பட்டன; தொழில் துறை உற்பத்திப் பொருள்களைச் சந்தைகட்கு எடுத்துச் செல்வதிலும் சிக்கல்கள் ஏற்பட்டன. நிலக்கரிச் சுரங்கங்களில் உற்பத்தி செய்த நிலக்கரி தேங்கிக் கிடந்தது. இதனால் பல தொழிற்சாலைகளுக்கு, உரிய நேரத்தில் நிலக்கரி கிட்டாமை

யால் அவற்றின் உற்பத்தியும் பாதிக்கப்பட்டது. மேலும் சிட்ட காங் துறைமுகம் பாகிஸ்தானுக்குச் சென்று விட்டதால், அஸ்ஸா மில் கிட்டிய பொருள்களை மேற்கு வங்காளத்திற்குக் கொண்டுவர புதிய இருப்புப் பாதை போட வேண்டியதாயிற்று.

## (I) ஐந்தாண்டுத் திட்டங்களின் கீழ் தொழில் வளர்ச்சி

ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடங்குவதற்கு முன்பு நாட்டி லிருந்த பெரும்பாலான தொழில்கள் நுகர்வுப் பொருள்கள் உற்பத்தி செய்வதில் மட்டுமே முனைந்திருந்தன. தொழில் வளர்ச்சிக்கு உதவிட வல்ல அடிப்படை ஆதாரத் தொழில்களோ, நுகர்வுப் பொருள்கள் தயாரிக்கும் தொழில்களுக்கான இயந்திரங்களைத் தயாரிக்க வல்ல கனரகப் பொறியியல் துறைகளோ அல்லது சாயப் பொருள்கள், மருந்துப் பொருள்கள், இரசாயனப் பொருள்கள் போன்ற துறைகளோ குறிப்பிட்டு இனங்காட்டத்தக்க வகையில் அமைந்திட வில்லை. இதனால் நம் நாட்டில் ஒரு புறச்சார்பான தொழில் வளர்ச்சியே (Lop sided development) இருந்தது. அடிப் படை, ஆதார கனரகத்தொழிற்சாலைகள் பேரளவில் இல்லையெனில் நாட்டின் தொழில் வளர்ச்சி நிலையானதாக, உண்மையான வளர்ச்சியுடையதாக இருக்காது. மேலும் விடுதலைக்கு முன்பு நம் நாட்டில் சமமான வட்டார வளர்ச்சி (Balanced Regional Development) இருக்கவில்லை. நாட்டின் சில பகுதிகள் தொழில் வளர்ச்சி யில் சிறந்திருக்க, வேறுசில பகுதிகள் பின்தங்கிய நிலையிலேயே தேங்கிக் கிடந்தது. இத்தகைய குறைகளை எல்லாம் நீக்கி முறை யான தொழில் வளர்ச்சிக்கு வித்திடவும், அதன் மூலம் தொழில் வளர்ச்சிக்கு மென்மேலும் வளர் விகிதத்தில் பெருகிடவும் ஐந்தாண்டுத் திட்டங்களில் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. திட்ட காலத்தில் இதன் பொருட்டு எத்தகைய முயற்சிகள் நடவடிக்கை கள் கையாளப்பட்டன என்பதனையும் அவைகளின் சாதனைகளை யும் திட்டவாரியாக இங்கே காணலாம்.

### (அ) முதல் ஐந்தாண்டுத் திட்டகாலம் : (ஏப்ரல் 1951 முதல் மார்ச் 1956 முடிய)

1950-ம் ஆண்டு மார்ச் மாதம் 15-ம் தேதி இந்திய அரசு திட்டக்குழுவை அமைத்தது. நாட்டின் இயற்கைச் செல்வங்கள், மனித சக்தி, மூலதனம் ஆகியவற்றைத் தெற்றென ஆராய்ந்து, அவைகளைத் திட்டமிட்டு முறைப்படியான அடிப்படையில் பயன் படுத்திச் சிறப்பான பொருளாதார வளர்ச்சி அமைப்பதற்கான சாத்தியக் கூறுகளை ஆயும்படி திட்டக்குழுவை அரசு கேட்டுக் கொண்டது. அதன்படி 1951 ஜூலையில் திட்டக் குழு முதல்

ஐந்தாண்டுத் திட்ட நகலை அரசிடம் சமர்ப்பித்தது. பின்னர் இத் திட்ட நகலின் திருத்திய பதிப்பு டிசம்பர் 1952ல் சமர்ப்பிக்கப் பட்டது.

**நோக்கங்கள் :** முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலீட்டுத் தொகை குறைவாக இருந்தமையாலும் வேளாண்மைத் துறைக்கே அதிக முக்கியத்துவம் தரப்பட்டமையாலும் தொழில் துறைக்குச் சிறப்பான இடம் ஒதுக்கப்படவில்லை.

திட்டக் குழுவானது பொதுவாக 1948-ம் ஆண்டுத் தொழிற் கொள்கைத் தீர்மானத்தை ஆதரித்தது. இத்தீர்மானத்தை அடிப் படையாகக் கொண்டே நாட்டின் தொழில் வளர்ச்சியும், நாட்டின் எதிர்காலத் தேவைகளுக்கான ஆக்கபூர்வ நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று திட்டக்குழு கருதியது எனவே பொதுத்துறையும் தனியார் துறையும் இணைந்து, செய்ய வல்ல கலப்புப் பொருளாதாரக் கொள்கையே (Policy of Mixed Economy) சிறந்தது என்றும் கருதியது. நியாயமான இலாபத் துடன் கனிச் செல்வங்களைப் பயன்படுத்தி பொருளாதார வளர்ச் சிக்கு உதவ வல்ல தனியார் செயல்பட வேண்டும் என்று உணரப் பட்டது. எங்கெங்கு தனியார் துறை நல்ல முறையில் திறம்படச் செயல்பட முடியாதோ அங்கெல்லாம் பொதுத்துறை ஈடுபடல் அவசியம் என்றும் உணரப்பட்டது. இவ்வாறு காப்புப் பொருளா தாரக் கொள்கைக்கு முக்கியத்துவம் தரப்பட்டது. இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு, முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கான நோக்கங்களுக்குக் கீழ்க்கண்ட முறையில் முக்கியத்துவம் (Priorities) தரப்பட்டது.

(i) சணல், இரும்பு, எஃகு போன்ற உற்பத்தியாளர் பொருள் களின் (Producer goods) தொழிற்சாலைகளின் நடப்பு உற்பத்திக் கொள்ளளவையும், பருத்தித் துணி, சர்க்கரை, வர்ணங்கள் (paints), வார்னிஷ்கள், சோப், வனஸ்பதி போன்ற நுகர்வுப் பொருள்கள் (consumer goods) தொழிற்சாலைகளின் நடப்பு உற்பத்திக் கொள்ளளவையும் முழுமையாகப் பயன்படுத்தல்.

(ii) இரும்பு, எஃகு, சிமெண்ட், அலுமினியம், கனரக இரசாயனப் பொருள்கள், உரங்கள், இயந்திரக் கருவிகள் போன்ற மூலதன மற்றும் உற்பத்தியாளர் பொருள்களின் கொள்ளளவை (capacity) மேலும் அதிகரித்தல்.

(iii) ஏற்கெனவே அரைகுறை முதலீடு செய்யப்பட்டு முற்றுப் பெறாமலிருக்கும் தொழில் நிறுவனங்களை முற்றுப் பெறச் செய்தல்.

(vi) புதிய நிறுவனங்களையும், இயந்திரத் தொகுப்புக்களையும் அமைத்து, நாட்டின் தொழிலமைப்புக்கு வலுக்கொடுத்து குறைகளைக் களைந்து, நிதி மூலங்கள் இடமளிக்குமளவிற்கு சிக்கல்களைத் தவிர்த்தல்.

நிதி முதலீடு: முதல் திட்ட காலத்தில், தனியார் துறை பொதுத் துறை ஆகிய இரு துறைகளின் வளர்ச்சி, நவீன மயமாக்கல், பழுதுபட்ட இயந்திரங்களைப் புதுப்பித்தல், நடப்புத் தேய்மானச் செலவினை ஈடுகட்டல் போன்ற பல்வகை நடவடிக்கைகளுக்காக ரூ 707 கோடி செலவிடுவதெனத் தீர்மானமாயிற்று. தனியார் துறையின் நவீனமாக்கல், புதுப்பித்தல், வளர்ச்சி போன்ற இனங்களுக்காக ரூ 463 கோடியும், நடை முதல் மூலதனத்திற்காக (working copital) ரூ 150 கோடியும் ஒதுக்கப்பட்டது. பொதுத் துறையில் ரூ 94 கோடி செலவிடத் தீர்மானிக்கப்பட்டது. அதில் மத்திய அரசின் நேரடிப் பொறுப்புள்ள தொழில்களுக்கு ரூ 83 கோடியும், மாநில அரசின் திட்டங்களைச் செயல்படுத்த ரூ 11 கோடியும் (இதில் ரூ 4.8 கோடியானது கடனாக) மத்திய அரசு வழங்குவது என்றும் முடிவு செய்யப்பட்டது. பொதுத் துறை முதலீடானது, முதலீட்டுப் பொருள்களை உற்பத்தி செய்யவும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உடனடித் தேவையாக உள்ள இடைப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்திடவும் பயன்படுத்தப் படும் என்று கூறப்பட்டது.

தனியார்துறை முதலீட்டுக்கு ஒதுக்கப்பட்ட ரூ 463 கோடியில், ரூ 233 கோடியானது தொழில் வளர்ச்சித் திட்டங்களுக்கும், ரூ 230 கோடியானது இயந்திரங்களையும் கருவிகளையும் புதுப்பித்தல், சீரமைத்தல், நவீன மயமாக்கல் போன்ற இனங்களுக்கும் செலவிட முடிவானது. இத்தொகை ரூ 233 கோடியில் ஏறத்தாழ 80 சதவிதமானது மூலதன, உற்பத்தியாளர் பொருள்களின் தொழிற்சாலைகளுக்குச் செலவிட எண்ணப்பட்டது. சான்றாக,

| | |
|---|---|
| இரும்பு எஃகுத் தொழிலில் | ரூ 43— கோடியும் |
| பெட்ரோல் சுத்திகரிப்புத் தொழிலில் | ரூ 64— கோடியும் |
| சிமெண்ட் தொழிலில் | ரூ 15.4 கோடியும் |
| அலுமினியத் தொழிலில் | ரூ 9— கோடியும் |
| உரங்கள், கனரக இரசாயனப் பொருள்கள் போன்ற தொழில்களில் | ரூ 11— கோடியும் |
| மின்சக்தி உற்பத்தியில் | ரூ 16— கோடியும் |

செலவிடுவதற்கு தீர்மானிக்கப்பட்டது.

நுகர்வோர் பொருள்கள் தயாரிப்புத் தொழிலில் ரேயான் உற்பத்தித் தொழில்களுக்கு ரூ 15·1 கோடியும், காகிதம், காகித அட்டைத் தொழிலுக்கு ரூ 5·35 கோடியும், மருந்துகள் தயாரிக்கும் தொழில்களுக்கு ரூ 34 கோடியும் செலவிடத் திட்டமிடப்பட்டது.

ரூ 707 கோடிக்கான நிதி மூலங்கள் கீழ்வருமாறு பெறுவது என்றும் தீர்மானிக்கப்பட்டது:

| | | |
|---|---|---|
| (i) அந்நிய முதலீடு | ரூ | 100 கோடி |
| (ii) தனியார் துறையின் கூட்டுப்பங்கு நிறுவனங்களின் பகிரப்படாத இலாபத்திலிருந்து | ரூ | 200 கோடி |
| (iii) புதிய பத்திரங்கள் வெளியிடுதல் | ரூ | 90 கோடி |
| (iv) இந்தியத் தொழிலக நிதி இணைக் கழகம் (IFC கடன்) | ரூ | 20 கோடி |
| (v) இந்திய அரசின் கடன் | ரூ | 5 கோடி |
| (vi) E. P. T. வைப்புக்களைத் திருப்பிச் செலுத்துதல் | ரூ | 60 கோடி |
| (vii) வணிக வங்கிகளின் குறுகிய காலக்கடன் | ரூ | 158 கோடி |

இனி, உண்மையில் முதல் திட்ட காலத்தில் செலவிடப்பட்ட தொகை அளவு என்ன என்பதை அறியலாம். பொதுத்துறைக்கு ஒதுக்கப்பட்ட ரூ 94 கோடியில் ரூ 57 கோடி மட்டுமே உண்மையில் செலவிடப்பட்டது. அதுவே போன்று, தனியார் துறைக்கு ஒதுக்கப்பட்ட ரூ 463 கோடியில், ரூ 340 மட்டுமே செலவிடப்பட்டது. இவ்வாறு இரு துறைகளிலுமே திட்டமிட்டதற்கும் குறைவாகவே செலவிடப்பட்டது. பொதுத்துறையில், திட்டமிட்டபடி செலவழிக்க இயலாமல் போனதற்கு காரணங்களாக இரும்பு,எஃகு, நிறுவனங்களைத் தோற்றுவிப்பதில் உண்டான காலதாமதம் அன்னிய மூலதனம், தொழில் நுட்ப அறிவு பெறுவதில் உண்டான காலதாமதம் ஆகியவைகளைக் கூறலாம். தனியார் துறையிலோ, சரியான இலாப ஈவு தரவியலாத தொழில்களிலெல்லாம் மூலதன அளவு குறைந்து விட்டது எனலாம்.

பேரளவுத் தொழில்களில் முடக்கப்பட்ட இம் முதலீடுகளைத் தவிர, கிராம, சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்கு ரூ 43 கோடி செலவிடப்பட்டது.

**சாதனைகள்:** முதல் திட்டத்தில் எல்லாத் துறைகளுமே சிறப்பான முன்னேற்றம் கண்டபடியால் தொழில் துறையிலும்

நல்ல வளர்ச்சி காண முடிந்தது, 1950ல் 105 ஆக இருந்த தொழில் உற்பத்திக் குறியீட்டெண் (Index) 1951-ல் 117·2 ஆக வும், 1952-ல் 128·9 ஆகவும், 1953-ல் 135·3 ஆகவும், 1954-ல் 146.6 ஆகவும், 1955-ல் 161. 5 ஆகவும் அதிகரித்துச் சென்றது. அதாவது சராசரியாக ஆண்டொன்றுக்கு 7 சதவீத அளவில் தொழில் வளர்ச்சி காண நேரிட்டது. ஏப்ரல் 1951 முதல் மார்ச் 1956 முடிய தொழில் வளர்ச்சிக் குறியீட்டெண் 38% அதிகரித்தது. உற்பத்தியாளர் பொருள்களின் உற்பத்தியில் 70 சத வீதமும், நுகர்வோர் பொருள்களின் உற்பத்தியில் 34 சத வீதமும், இடைப்பட்ட பொருள்களின் உற்பத்தியில் 34 சதவீதமும் அதிகரித்தது. தனிப்பட்ட தொழில்களை எடுத்து ஆராய்ந்தால், பஞ்சாலைத் தொழிலில் 28 சதவீதம், இரும்பு எஃகில் 32 சதவீதம், இரசாயனப் பொருள்களில் 79 சதவீதம், இயந்திரங்கள் உற்பத்தி யில் 92 சதவீதம் என்ற வீதங்களில் குறியீட்டெண்கள் அதிகரித்தன.

பொதுத் துறையில், சிந்திரி உரத் தொழிற்சாலை, சித்தரஞ்சன் இரயில் எஞ்சின் தொழிற்சாலை, இந்துஸ்தான் ஆண்டிபயோடிக்ஸ் (Hindustan Antibiotics), தந்திக் கம்பி தயாரிப்புத் தொழிற்சாலை (Hindustan Cables), இந்தியத் தொலைபேசி தயாரிப்புத் தொழிற் சாலை (Indian Telephones Industries) போன்றவைகள் புதிதாக அமைக்கப்பட்டன. இத் துறைகளில் வளர்ச்சி போற்றத் தக்க அளவில் அமைந்தது. ஆனால், சில மத்திய, மாநில அரசுத் திட்டங்களான இந்துஸ்தான் இயந்திரக் கருவிகள் தொழிற்சாலை (Hindustan Machine Tools), இந்துஸ்தான் பூச்சி கொல்லி மருந்து கள் தொழிற்சாலை (Hindustan Insecticides) இரயில் பெட்டி இணைப்புத் தொழிற்சாலை, பீகார் சூபர் பாஸ்பேட் தொழிற்சாலை, நேபா காகித ஆலை ஆகியவற்றின் வளர்ச்சியானது திட்ட இலக்கு களுக்குக் குறைந்தே இருந்தது. பொதுத் துறையின் 3 இரும்பு எஃகு ஆலைகள் நிறுவுவதற்கான ஆயத்த வேலைகள் மேற்கொள்ளப் பட்டன. மைசூர் எஃகாலையின் உற்பத்திக் கொள்ளளவு விரிவாக்கப்பட்டது.

தனியார் துறையில், சர்க்கரை, பஞ்சாலைத் துணிப் பொருள் கள், தையல் இயந்திரங்கள், வாகனங்கள், மின்சாரக் கடத்திகள் (Electric Transformers), காஸ்டிக் சோடா, கந்தக அமிலம், பென் சீன் ஹெக்ஸா குளோரைடு (Benzene Hexa Chloride) முதலிய இரசாயனப் பொருள்கள் என்பன போன்ற துறைகளில் திட்ட இலக்குகட்கு ஒப்ப உற்பத்தி அதிகரிக்கப்பட்டது. சிமெண்ட், காகிதம், சைக்கிள்கள், ரேயான் போன்ற துறைகளில் குறிப்பிடத்

தக்க அளவில் உற்பத்திக் கொள்ளளவுகள் அதிகரிக்கப்பட்டன. ஆனால் அலுமியம், சோப், அம்மோனியம் சல்பேட் போன்ற பொருள்களின் உற்பத்தியில் உற்பத்தி இலக்குகள் எட்டப்பட வில்லை. வானொலிப் பெட்டிகள், மின்சார விளக்குகள், அரிக்கேன் விளக்குகள், டீசல் இயந்திரங்கள் போன்ற எளிய பொறியியல் துறைகளில் உற்பத்தி இலக்கை அடைய இயலவில்லை. சணல் துறையிலே உற்பத்தி இலக்குக்கும் குறைவாக உற்பத்தி அமைந்தது.

உற்பத்தி இலக்கு, உற்பத்தி மதிப்பீடு, உற்பத்தி குறியீட்டெண் பற்றிய விவரங்களை, இணைப்பு I, II ஆகியவற்றில் கண்டால் உண்மை நிலை புலனாகும்.

(ஆ) இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலம் ஏப்ரல் 1951 முதல் மார்ச் 1961 வரை)

நாட்டைத் தொழில்மயமாக்கும் திட்டங்களுக்கு-குறிப்பாக அடிப்படை ஆதாரத் தொழில்களின் வளர்ச்சிக்கு-இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் முக்கிய இடம் அளிக்கப்பட்டது. தாதுப் பொருள்கள் மற்றும் தொழிலக வளர்ச்சிக்காக, பொதுத் துறை நிறுவனங்களை மிகவும் பெருக்குவது என்பது கொள்கையாகத் தீர்மானிக்கப்பட்டது. தொழில் வளர்ச்சித் திட்டங்களுக்குப் பொதுத் துறை நிறுவனங்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டாலும் கூட, தனியார் துறையைப் புறக்கணித்து விடவில்லை. இரண்டு துறைகளும் ஒரே அமைப்புப் போல நாட்டின் இரு கண்களெனப் பணியாற்றி பொருளாதார வளர்ச்சிக்கு உதவிட வேண்டும் என்று கருதப்பட்டது. எனவே 1956-ம் ஆண்டில் வெளியிடப்பட்ட இரண்டாவது தொழிற் கொள்கைத் தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டு தொழில் வளர்ச்சிக்கான திட்டங்கள் வகுக்கப்பட்டன. அதன்படி பொதுத் துறைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

நோக்கங்கள் : நமது தொழில் வளர்ச்சிக்குக் கீழ்க்கண்டபடி முக்கியத்துவம் தரப்பட்டது.

(i) இரும்பு, எஃகு, நைட்ரஜன் உரம் போன்ற கனரக இரசாயனப் பொருள்கள் ஆகியவற்றில் அதிக உற்பத்தியும், கனரகப் பொறியியல், இயந்திர உற்பத்தித் தொழில் ஆகியவைகளில் வளர்ச்சியும் காணல்.

(ii) வளர்ச்சிக்கான சாதனங்களைத் தயாரிக்கும் தொழில்களின் உற்பத்திக் கொள்ளளவை அதிகரித்தல், அலுமினியம், சிமெண்ட், இரசாயனக் காகிதக் கூழ், சாயப் பொருள்கள், பாஸ்பேட் உரங்கள், முக்கியமான மருந்து வகைகளின் உற்பத்தியைப் பெருக்குதல்.

(iii) தேசிய முக்கியத்துவம் பெற்ற சணல் ஆலைகள் பஞ்சாலைகள், சர்க்கரை ஆலைகள் போன்ற தொழில்களை நவீனமயமாக்கல், புதுக்கருவிகளைப் பொருத்துதல் போன்ற முயற்சிகளைக் கைக்கொள்ளல்.

(iv) இயங்கி வரும் தொழிற்சாலைகளின் உற்பத்திக் கொள்ளளவைப் பூரணமாகப் பயன்படுத்தல்; உற்பத்தி அளவிற்கும், கொள்ளவிற்கும் உள்ள இடைவெளியைக் குறைத்தல்.

(v) பொதுவான உற்பத்தித் திட்டங்களின் தேவைகளைக் கருத்திற் கொண்டு, நுகர்வோர் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்களின் கொள்ளளவை அதிகரித்தல்.

நிதி முதலீடு : இரண்டாம் திட்ட காலத்தில் பேரளவு அடிப்படைத் தொழில்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டமையால், இரும்பு, எஃகு, இயந்திரங்கள் தயாரிப்புத் தொழில், மின்சார சாதனங்கள், இரசாயனப் பொருள்கள், உற்பத்தித் தொழில்கள் ஆகியவைகளின் வளர்ச்சியின் மூலம் நாட்டின் பொருளாதார அமைப்பைச் சிறப்பாக்கவும் வலுவாக்கவும் முயற்சி செய்யப்பட்டது.

இரண்டாம் திட்ட காலத்தில், ஒழுங்கமைந்த பேரளவுத் தொழில்களுக்காக மொத்தம் ரூ 1620 கோடி செலவிடப்பட்டது. இதில் ரூ 770 கோடியானது பொதுத்துறையிலும், ரூ 850 கோடியானது தனியார் துறையிலுமாகச் செலவிடப்படலாயிற்று. ஆனால் முதலில் திட்டமிட்ட தொகையோ பொதுத் துறையில் ரூ 560 கோடியும், தனியார் துறையில் ரூ 685 கோடியுமாகும். மேலும், சிற்றளவு, கிராமத் தொழில்களின் வளர்ச்சிக்காக முறையே பொதுத் துறையில் ரூ 90 கோடியும், தனியார் துறையில் ரூ 175 கோடியும் செலவிடத் தீர்மானமாயின.

உற்பத்தியாளர் பொருள்கள் துறையில் பொதுத்துறை ரூ 468 கோடியும், தனியார் துறை மூலமாக ரூ 296 கோடியும் செலவிடப்பட்டது. தொழிலக இயந்திரங்கள் மூலதனப் பொருள்கள் உற்பத்தித் துறையில் பொதுத் துறை வழியாக ரூ 84 கோடியும், தனியார் துறை வழியாக ரூ 72 கோடியும் செலவிடப்பட்டது. நுகர்வோர் பொருள்கள் உற்பத்தித்துறையின் வளர்ச்சிக்காக

பொதுத் துறை ரூ 12 கோடியும், தனியார் துறை ரூ 167 கோடியும் செலவிடுவதாக முடிவெடுக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது.

**சாதனைகள் :** 1950-51ல் நாட்டின் தொழில் துறை உற்பத்திக் குறியீட்டெண் 100 எனக்கொண்டால், இக்குறியீட்டெண் 1955-56ல் 139 புள்ளிகளாகவும், 1960-61ல் 194 புள்ளிகளாகவும் உயர்ந்தது. பொதுவான தொழில் துறை உற்பத்திக் குறியீட்டு எண்ணானது 55 சதவீதம் அதிகரித்தது எனலாம். குறிப்பாக இரும்பு, எஃகு தொழிலில் 116 சதவீதம், இயந்திரக் கருவிகள் உற்பத்தியில் 311 சதவீதம், இரசாயனப் பொருள்கள் உற்பத்தியில் 109 சதவீதம், பஞ்சாலைத் தொழிலில் 5 சதவீதம் என்ற வீதங்களில் உற்பத்தி பெருகியது எனலாம்.

இத் திட்டத்தின் முக்கிய சாதனை என்னவென்றால், பொதுத் துறையின் கீழ் முப்பெரும் இரும்பு எஃகு ஆலைகளை அமைத்ததுவே ஆகும். ஆலை ஒன்றின் உற்பத்திக் கொள்ளளவு ஆண்டொன்றுக்கு 1 மில்லியன் டன்கள் என்ற அளவில் மேற்கு வங்கத்தில் துர்க்காபூரிலும், ஒரிஸ்ஸாவில் ரூர்கேலர்விலும், மத்திய பிரதேசத்தில் பிலாயிலுமாக இரும்பு எஃகாலைகள் நிறுவப்பட்டன. டாடா இரும்பு எஃகாலை, இந்தியன் இரும்பு எஃகு கம்பெனியின் எஃகாலை முதலியற்றை நவீன மயமாக்கி, முற்றுப் பெறாத திட்டங்களை நிறைவேற்றி அவைகளின் எஃகுப் பாளங்கள் உற்பத்திக் கொள்ளளவை 1.5 மில்லியன் டன்களாக உயர்த்தப்பட்டது. இரண்டாம் திட்ட காலத்தில் மட்டும் புதிதாக எஃகு உற்பத்தி செய்ய வல்ல கொள்ளளவை அதிகரித்த அளவானது ஆண்டுக்கு ரூ 200 கோடிக்குச் சமமாகும். இவ்வாறாக இரண்டாம் திட்ட காலத்தில் இரும்பு எஃகுத் துறையில் தனியார் துறை மூலமாக சுமார் ரூ 290 கோடியும், பொதுத்துறை மூலமாக ரூ 750 கோடியும் முதலீடு செய்யப்பட்டது எனலாம். எஃகுப் பாளங்கள் உற்பத்தி 1950-51ல் 1.41 மில்லியன் டன்களாக இருந்தது. இந்த அளவு 1.74 மில்லியன் டன்களாக 1955-56லும், 3.48 மில்லியன் டன்களாக 1960-61 லும் உயர்ந்தது. விணைமுற்றிய எஃகு, வார்ப்பு இரும்பு உற்பத்தியும் முறையே 2.39 மில்லியன் டன்கள், 1.1 மில்லியன் டன்களாக உயர்ந்தது.

இதே போன்று சிமெண்ட், அலுமினியம், பாஸ்பேட் உரங்களின் உற்பத்தி அளவுகளும் முறையே 8 மில்லியன் டன்கள், 18.8 ஆயிரம் டன்கள், 54 ஆயிரம் டன்கள் என்ற உற்பத்திக் கொள்ளளவிற்கு உயர்த்தப்பட்டது. சித்தரஞ்சன் இரயில் எஞ்சின் தொழிற்சாலையின் ஓராண்டு உற்பத்தி அளவு 126லிருந்து 300க்கு உயர்ந்தது.

சணல், பருத்தி, சர்க்கரை ஆலைகளில் புதிய கருவிகள் அமைத்தல், புதிய முறைகளை புகுத்தல் ஆகிய முயற்சிகள் அதிகமாக மேற் கொள்ளப்பட்டன. விவசாயம், போக்குவரத்து ஆகிய துறைகளுக்கான இயந்திரக் கருவிகள் தயாரித்தல், காகிதம் சுரங்கங்கள் ஆகிய தொழில் துறைகளுக்கான இயந்திரங்கள் தயாரிப்பதிலும் நல்ல முன்னேற்றம் கண்டோம். மாவரைக்கும் இயந்திரங்கள், மோட்டார்கள், மோட்டார் சைக்கிள்கள், சைக்கிள்கள், ஸ்கூட்டர்கள், மின் விசிறிகள், தையல் இயந்திரங்கள், மின் விளக்குகள் ஆகிய நுகர்வுப் பொருள்கள் உற்பத்தியும் பல்கிப் பெருகியது.

பொதுத்துறையின் கீழ் ஆன்டிபயோடிக் (antiblotic) பொருள்கள் தயாரிப்புத் தொழிற்சாலையும், D. D. T. உற்பத்தித் தொழிற்சாலையும், அமைக்கப்பட்டன. இந்துஸ்தான் இயந்திரக் கருவிகள் (H. M. T.) இந்தியன் தொலைபேசித் தொழிற்சாலை, இந்துஸ்தான் கம்பித் தொழிற்சாலை, தேசீய நுண்கருவிகள் தொழிற்சாலை போன்ற தொழிற்சாலைகளின் உற்பத்தி அளவுகள் விரிவாக்கப்பட்டன.

சிற்றளவுத் தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்களின் துறையிலும் சீரிய சாதனைகளைப் பெற முடிந்தது. ஆயிரம் தொழிற்சாலைகளை உள்ளடக்கிய 60 தொழிற் பேட்டைகள் அமைக்கப்பட்டன. கதர், கைத்தறிப் பொருள்களின் உற்பத்தி அளவானது 1773 மில்லியன் கெஜத்திலிருந்து 2349 மில்லியன் கெஜத்திற்கு உயர்த்தப்பட்டது. பல நுகர்வுப் பொருள்களின் உற்பத்தி அளவானது 25 முதல் 50 சதவீதம் அதிகரிக்கப்பட்டது.

இவ்வாறாக இரண்டாம் திட்டம் தொழில் புரட்சியின் முதல் முயற்சியிலீடுபடவும், நாட்டின் தொழில் அமைப்பின் அடிப்படையை வலுவாக்கவும், புதிய தொழில் நுட்பம், ஆற்றலைப் புகுத்தவும் வகை செய்தது. எனினும், திட்டங்களையும் இலக்குகளையும் எய்திட எவ்வாறு அந்நிய மூலதனத்தையும், அந்நிய தொழில் நுட்ப ஆற்றல் இயந்திரங்களையும் நம்பி நிற்க வேண்டியதாயிற்று என்பதனையும், நாட்டின் பொருளாதாரம் எத்தகைய இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கும் ஈடு கொடுக்க வேண்டியதாயிற்று என்பதும் புலனாயிற்று.

### (இ) மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் (ஏப்ரல் 1961 முதல் மார்ச் 1966 வரை)

கனரக அடிப்படைத் தொழில்களில் வளர்ச்சி கண்டு நாட்டின் தொழில் அமைப்பிற்கு வலுவூட்ட இரண்டாம் திட்டம்

முனைந்தது. இதனை வலுவூட்ட மூன்றும் திட்டத்திலும் முயற்சி நீடிக்கப்பட்டது. இரண்டாம் திட்டத்தில் தொடங்கப்பட்ட தொழில்களில் வளர்ச்சியும், விரிவும் காணவும், மூலதனப் பொருள்கள் உற்பத்தியாளர் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கவும், இயந்திரங்கள் தயாரிக்கும் தொழில்களை அதிகரிக்கவும், நிர்வாக ஆற்றல், தொழில் நுணுக்க அறிவு ஆகிய துறைகளில் மேலான வளர்ச்சியினைக் கண்டிடவும் மூன்றும் திட்டம் விழைந்தது. இனி வரும் 15 ஆண்டு காலத்திற்கான விரைவான தொழிலபிவிருத்திக்கு அடிப்படையிட்டு, தேசீய வருமானத்தைப் பெருக்கி, வேலை வாய்ப்புகளை அதிகரித்து, அடிப்படை மூலதன உற்பத்தித் தொழில்கள், இயந்திரப் பொறிகள் தொழிலை உரமிட்டு வளர்க்க நீண்ட காலக்கண்ணோட்டமுடன் முயற்சி மேற் கொள்ளப்பட்டது. இவைகள் அனைத்திற்கும் 1956-ம் ஆண்டு தொழிற் கொள்கைத் தீர்மானமே வழிகாட்டியாக அமையும் என்று கூறப்பட்டது. இரண்டாம் திட்ட காலத்தைப் போன்றே பொதுத் துறை தொழில்கள் தனியார் துறை தொழில்களுக்குப் போட்டியாக அமையாமல், துணையாக நிற்கும் என்றும் வலியுறுத்தப்பட்டது இருப்பினும் நடை முறையில் இக் கொள்கையில் சிறிதளவு மாற்றங்களும் செய்யப்பட்டன. சான்றாக உரப் பொருள்கள் உற்பத்தியில் பொதுத் துறைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. வார்ப்பு இரும்பு உற்பத்தியில் தனியார் துறைக்குச் சற்று வாய்ப்புக்கள் விரிவாக்கப்பட்டன.

**நோக்கங்கள்:** மூன்றும் திட்டக்காலத்தில் தொழில் வளர்ச்சித் திட்டங்களுக்கான முக்கியத்துவமானது கீழ்வருமாறு நிர்ணயிக்கப் பட்டது:

(i) 1957-58ல் ஏற்பட்ட அந்நியச் செலாவணி நெருக்கடி காரணமாக முற்றுப் பெறாத தொழில்களையும், இரண்டாம் திட்டத்தில் தொடங்கப் பெற்று நிறைவுறுதிருக்கும் தொழில்களையும் விரைவில் முடித்தல்.

(ii) கனரகப் பொறியியல், இயந்திரங்கள் உற்பத்தி, இரும்பு எஃகு, சிறப்பு எஃகு, இரும்பு சார்பான உலோகக் கலவைகள் (Ferro-Alloys), உரம், பெட்ரோலியம் பொருள்கள் உற்பத்தி ஆகிய துறைகளின் உற்பத்திக் கொள்ளளவை விரிவாக்குதலும் பல துறைகளில் வளர்ச்சி காணலும்.

(iii) முக்கியமான அடிப்படைக் கச்சாப் பொருள்களும், உற்பத்தியாளர் பொருள்களுமாகிய அலுமினியம், கனிப் பொருள், எண்ணெய் வகைகள் (Mineral Oils) பிற இரசாயனப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்குதல்.

(iv) இன்றியமையா மருந்துகள், காகிதம், துணி சர்க்கரை, தாவர எண்ணெய்கள், வீட்டுச் சாதனங்கள் போன்ற அடிப் படைத் தேவைப் பொருள்களை உள்நாட்டுத் தொழில்கள் மூலமாக அதிகம் உற்பத்தி பண்ணுதல்.

நாட்டின் தொழில் வளர்ச்சியானது தற்சார்புடையதாக விளங்கி, மென் மேலும் வளர்ச்சி அடைவதற்காக, இயந்திரங்கள் உற்பத்தித் திட்டங்களுக்கு இத்திட்டத்தில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

நிதி முதலீடு: தொழில்துறை, தாதுப்பொருள்கள் உற்பத்தித் துறை ஆகியவைகளின் வளர்ச்சிக்காக மூன்றும் திட்டத்தில் ரூ 2,993 கோடி செலவிட்டு திட்ட இலக்குகளை எய்துவது என்று திட்டமிடப்பட்டது. இதில் அந்நியச் செலாவாணித் தேவை மட்டும் ரூ 1,338 கோடி என மதிப்பிடப்பட்டது. அதன் விரிவான விளக்கத்தை 252ஆம் பக்க அட்டவணை தெளிவாக்கும்.

252ஆம் பக்க அட்டவணைப்படி பொதுத்துறையில் தொழில் வளர்ச்சிக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையான ரூ 1,330 கோடி யில் அந்நியச் செலவணித் தேவை ரூ 660 கோடியும், தனியார் துறையிலோ ரூ 450 கோடியுமாகிறது. ஆக மொத்தத்தில் ரூ 1,110 கோடி பெறுமான அந்நியச் செலாவணி மூன்றும் திட்டத்திற்குத் தேவைப்படும்.

இத்தகைய சூழ்நிலையில் பொதுத்துறைத் தொழில்களைக் கீழ் வருமாறு பிரித்தனர்;

(i) இரண்டாம் திட்ட காலத்தில் நிறைவுறுத திட்டங்களை இத்திட்ட காலத்தில் மேற்கொண்டு நிறைவேற்றல்,

(ii) முழுவதுமாகவோ அல்லது பாதி அளவிற்கோ வெளி உதவிகிட்டும் என்று உறுதியளிக்கப்பட்ட புதிய திட்டங்கள்.

(iii) வெளி உதவிக்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டிய புதுத் திட்டங்கள்.

இதில் முதலில் குறிப்பிட்ட (i) இனத்தின் தொழில்களை 3-ம் திட்டத்தில் நிறைவேற்றுவது என்றும், இரண்டாவது குறிப்பிட்ட (ii) இனத்திலும் பல தொழில்களை நிறைவேற்ற முயலுவது என்றும் கருதப்பட்டது. ஆயினும் நுண்கருவிகள் உற்பத்தித் திட்டம் (Precision Instruments Project) மற்றும் இரு கனரக மின்சார சாதனத் திட்டங்களை 4-ம் திட்டத்திற்கு நீட்டிச் செல்வது

(ரூபாய் கோடியில்)

| இனங்கள் | பொதுத் துறை | | தனியார் துறை | | இரு துறைகளும் இணைந்து | |
|---|---|---|---|---|---|---|
| | மொத்த முதலீடு | அந்நியச் செலாவணி | மொத்த முதலீடு | அந்நியச் செலாவணி | மொத்த முதலீடு | அந்நியச் செலாவணி |
| a புதிய முதலீடு | | | | | | |
| (i) தாதுப் பொருள்கள் வளர்ச்சி | 478 | 200 | 60 | 28 | 538 | 228 |
| (ii) தொழில் வளர்ச்சி | 1,330 | 660 | 1,125 | 450 | 2,455 | 1,110 |
| மொத்தம் | 1,808 | 860 | 1;185 | 478 | 2,993 | 1,338 |
| (iii) பழையன நீக்கி புதிதாக ஈடு செய்தல் (Replacement) | — | — | 150 | 50 | 150 | 50 |

**Source : Third Five Year Plan Summary P-123**

என்றும் கூறப்பட்டது. மூன்றாவது வகைத் தொழில்களை நிறை வேற்றத் தேவையான முயற்சிகளை விரைவு படுத்தப்பட வேண்டும் என்றும் கூறப்பட்டது.

பெரும்பாலான பொதுத்துறை நிறுவனங்கள் தமது சொந்த நிதி மூலங்களைக் கொண்டே புதுத் திட்டங்களையோ, விரிவாக்கப் பணிகளையோ மேற் கொள்ளல் வேண்டும் என்று கூறப்பட்டது. இத்தகைய முயற்சியில் சுமார் ரூ 300 கோடி புரட்டக் கூடும் என்று கருதப்பட்டது. சான்றாக H.M.T அமைப்பானது தனது ஒன்று அல்லது இரண்டு புதிய இயந்திரக் கருவிகள் உற்பத்தி அமைப்புகளைத் தனது சொந்த நிதியிலிருந்தே தொடங்கிட விழைந்தது. பொதுவில், மூன்றும் திட்ட காலத்தில் இரும்பு, எஃகு இயந்திரப் பொறிகள், கனரக மின்சார சாதனங்கள், முக்கிய மருந்துகள், உரங்கள், அடிப்படை இரசாயனப் பொருள்கள், பெட்ரோல் சுத்திகரிப்பு போன்ற துறைகளுக்கு அதிகம் முக்கியத்துவம் தர வேண்டும் என்று கூறப்பட்டது.

மாநில அரசுகளின் பொதுத்துறை நிறுவனத் திட்டங்களில் கீழ்வருவன முக்கியமாகக் கருதப்பட்டன.

(i) மைசூர் இரும்பு எஃகு ஆலை,

(ii) ஆந்திரா காகித ஆலை,

(iii) F.A.C.T. உரத்தொழிற்சாலையின் விரிவாக்கம்,

(iv) திருவாங்கூர்-கொச்சி இரசாயனப் பொருள்கள் தொழிற் சாலையின் வளர்ச்சி,

(v) துர்காபூர் தொழில் வாரியம் (Durgapur Industries) Board) மூலம் காஸ்டிக் சோடா, பீனாயில் போன்ற இரசாயனப் பொருள்கள் தயாரித்தல்.

இனி அடுத்ததாகத் தனியார் துறையினைக் காணலாம். இத் துறையின் கீழ் நிலைமுதல்கள் முதலீட்டுக்கு மொத்தம் கிடைக்க வல்ல நிதியானது பின்வருமாறு கணக்கிடப்பட்டது.

(ரூபாய் கோடியில்)

| | | | |
|---|---|---|---|
| 1. | நிறுவன அமைப்புகள் | ரூ | 130 |
| 2. | நேரடிக்கடன் மத்திய, மாநில அரசுகளின் உதவியும் தொழிலில் ஈடுபாடும் | ரூ | 20 |
| 3. | புதிய பத்திரங்கள் வெளியீடு | ரூ | 200 |
| 4. | வெளிநாட்டுக் கடன் அல்லது தொழில் ஈடுபாடு முறையில் கிடைக்கும் நிதி | ரூ | 300 |
| 5. | உள்நாட்டு நிதி மூலங்கள் | ரூ | 600 |
| | | ரூ | 1,250 |

இதன்படி நோக்கினால் தனியார் துறை திட்ட முதலீடு அளவிற்கு நிதி மூலங்கள் கிடைக்க இயலாது என்பது புலனாகிறது. இதோடு, ரூ 530 கோடி பெறுமான அந்நியச் செலாவணி பெற வேண்டிய சங்கடமும் தனியார் துறைத் தொழில்கட்கு இருந்தன.

ஆனால் உண்மையில் முதலீடு செய்யப்பட்ட தொகையானது, திட்டமிடப்பட்ட அளவிற்கும் அதிகமாக அமைந்து விட்டது. பொதுத்துறையில் ரூ 1,520 கோடியும் தனியார் துறையில் ரூ 1,200 கோடியுமாக மொத்தம் ரூ 2,720 கோடி செலவிடப்பட்டது. சுரங்கத் தொழிலையும் சேர்த்து கொண்டால் மொத்த முதலீடு சுமார் ரூ 3,000 கோடி ஆகும். அதாவது பொதுத் துறையில் ரூ 1,700 கோடியும், தனியார்துறையில் ரூ 1,300 கோடியும் முதலீடானது.

**சாதனைகள் :**—மூன்றும் ஐந்தாண்டு திட்டகாலத்தில் தொழில் துறை உற்பத்தி வளர்ச்சி வீதம் கீழ்வருமாறு அமைந்தது.

1961-62—7·0 சதவீதம்

1962-63—7·7 சதவீதம்

1963-64—8·5 சதவீதம்.

1964-65—7·0 சதவீதம்

1965-65—4·0 சதவீதம்

இரண்டாம் திட்ட சாதனையுடன் ஒப்பிடும் பொழுது இச் சாதனை மனநிறைவு தரத்தக்கதல்ல. குறிப்பாக திட்ட இறுதி ஆண்டில் சாதனை மிகவும் குறைவு. இதற்குப் பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு ஒரு காரணமாக இருக்கக் கூடும்.

### உற்பத்தி

### சில முக்கிய பொதுத்துறை உற்பத்தி இலக்குகள்

| | | | |
|---|---|---|---|
| (i) | இரும்பு தாது | 30 | மில்லியன் டன்கள் |
| (ii) | நிலக்கரி | 97 | ,, |
| (iii) | எஃகுப் பாளங்கள் | 9·2 | ,, |
| (iv) | வினைமுற்றிய எஃகு | 6·8 | ,, |
| (v) | விற்பனைக்கான வார்ப்பு இரும்பு | 1·50 | ,, ,, |
| (vi) | சர்க்கரை | 3·5 | ,, |
| (vii) | சிமெண்ட் | 13·0 | ,, |
| (viii) | பெட்ரோல் பொருள்கள் | 9·9 | ,, |
| (ix) | அலுமினியம் | 800 | ஆயிரம் டன்கள் |
| (x) | நைட்ரஜன் உரம் | 800 | ,, |
| (xi) | பாஸ்பேட் உரங்கள் | 400 | ,, |
| (xii) | காஸ்டிக் சோடா | 340 | ,, |
| (xiii) | பஞ்சாலைத் துணிகள் | 5,800 | மில்லியன் கஜம் |
| (xiv) | D.D.T. | 2,800 | டன்கள் |
| (xv) | டிராக்டர்கள் | 1,000 | எண்ணிக்கை |
| (xvi) | சைகில்கள் | 2,000 | ஆயிரம் |
| (xvii) | மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர்கள் | 50 | ,, |
| (xviii) | கார்கள், இதர ஊர்திகள் | 100 | ,, |

**Source:** Third Five Year Plan-Summary p. 205-207

இனி குறியீட்டெண் அடிப்படையிலும் வளர்ச்சி விகிதத்தைக் காணலாம்.

தொழில்துறை உற்பத்தி குறியீட்டெண்

| ஆண்டு | அடிப்படை ஆண்டு 1956 = 100 | அடிப்படை ஆண்டு 1960 = 100 |
|---|---|---|
| 1960 | 130.2 | 100.0 |
| 1961 | 141.0 | 109.2 |
| 1962 | 152.9 | 119.7 |
| 1963 | 167.3 | 129.7 |
| 1964 | 177.8 | 140.9 |
| 1965 | 187.7 | 150.9 |
| 1966 | 192.6 | 152.4 |

ஆண்டுக்குச் சராசரியாக 11 சதவீதம் வளர்ச்சி பெறத் திட்டமிடப்பட்டது. ஆனல் உண்மையில் 6·8 சதவீதம் வளர்ச்சி வீதமே கிட்டியதாக சுட்டிக்காட்டப்படுகிறது. இவ்வாறு அதிக அளவு வளர்ச்சி வீதம் குறைந்தது.

உலோகக் கலவைகள், கருவிகள், துருப்பிடியாத எஃகு துத்தநாகம் (Zinc) சுரங்க இயந்திரங்கள்காகில ஆலை இயந்திரங்கள் உரங்கள், செய்திகள் காகிதம், கந்தக அமிலம் போன்ற பொருள்கள் உற்பத்தியால், உற்பத்தி இலக்கினைவிட 60 சதவீதம் குறைவான உற்பத்தி கிட்டியது. எஃகுப் பாளங்கள், வணிகப் போக்குவரத்து வாகனங்கள், சர்க்கரை ஆலை இயந்திரங்கள், விவசாய டிராக்டர்கள், காஸ்டிக் சோடா, இரும்புத்தாது, கம்பளிப் பொருள்கள் உற்பத்தியில், உற்பத்தி இலக்கினைவிட 80 சதவீதம் முதல் 50 சதவீதம் வரை உற்பத்தி குறைவாக இருந்தது. இதனல் நமது தொழில் துறை முழுவதுமே பாதிக்கப் படலாயிற்று.

இவ்வாறு உற்பத்தியில் மந்த நிலை ஏற்படக் காரணங்கள் என்ன ? அவைகள் பின்வருமாறு:

(a) அந்நியக் செலாவணி சிக்கல்

(b) தக்க வேளையில் கிட்டாத தொழில் தொடக்க அனுமதிகள் (licenses)

(c) செஞ்சீனு, பாகிஸ்தான் ஆக்கிரமிப்புகள்

(d) நாட்டில் ஏற்பட்ட வறட்சி பஞ்சமும், வேளாண்மைத் துறையில் வீழ்ச்சியும்.

எனினும் சில முக்கியமான துறைகளின் உண்மையான உற்பத்தி அளவினைக் (ac ual pr oduc ion) கீழே காணலாம்.

உண்மையான உற்பத்தி அளவு —சாதனைகள்
(Ac ual Production achievements)

| | | மில். டன்கள் |
|---|---|---|
| 1 | எஃகு பாளங்கள் | 6.53 |
| 2 | வினை முற்றிய எஃகு | 6.9 |
| 3 | விற்பனைக்கான வார்ப்பு இரும்பு | 1.3 |
| 4 | இரும்புத் தாது | 24.9 |
| 5 | சுட்ட நிலக்கரி | 16.98 |
| 6 | சிமெண்ட் | 10.8 |
| | | ஆயிரம் டன்கள் |
| 7 | உலோகக் கலவையும் சிறப்பு எஃகும் | 40 |
| 8 | அலுமினியம் | 62.1 |
| 9 | செம்பு | 9.4 |
| 10 | நைட்ரஜன் உரங்கள் | 232 |
| 11 | பாஸ்பேட் உரங்கள் | 123 |
| 12 | பூச்சி கொல்லி மருந்துகள் | 13 |
| 13 | செய்திப் பத்திரிகை காகிதம் | 30.3 |
| 14 | ரேயான் இழை உற்பத்தி | 38.0 |
| 15 | நைலான் இழை உற்பத்தி | 1.5 |
| 16 | சணல் பொருள்கள் | 1,399.3 |
| 17 | சர்க்கரை (Sugar) | 3,541.0 |
| 18 | வனஸ்பதி | 401.2 |
| 19 | கண்ணாடி | 296.0 |
| 20 | சோப்பு | 163.0 |
| 21 | வர்ணங்கள், வார்னிஷ்கள் | 68.0 |

| | | ஆயிரம் டன்கள் |
|---|---|---|
| 22 | காகிதம், காகித அட்டைகள் | 558.0 |
| 23 | கார சோடா (Caustic Soda) | 218.0 |
| 24 | கந்தக அமிலம் | 662.0 |
| 25 | நிலக்கரிச் சுரங்க இயந்திரங்கள் | 5.1 |
| | | ஆயிரம் |
| 26 | வேளாண்மை டிராக்டர்கள் | 6.3 |
| 27 | சைக்கிள்கள் | 1,574.0 |
| 28 | மோட்டார் இயந்திரங்கள் | 40.7 |
| 29 | தையல் இயந்திரங்கள் | 430.0 |
| 30 | மின் விசிறிகள் | 1,358.0 |
| 31 | வானொலிப் பெட்டிகள் | 606.0 |
| | | மில் மீட்டர் |
| 32 | பஞ்சாலை மூலமாக துணி உற்பத்தி | 4,401 |
| 33 | கம்பளித் துணி | 9.2 |
| | | மில்லியன் |
| 34 | பஞ்சாலைத் தொழிலுக்கான இயந்திரங்கள் | 104.0 |
| 35 | சிமெண்ட் உற்பத்திக்கான இயந்திரங்கள் | 6.0 |
| 36 | சர்க்கரை ஆலைக்கான இயந்திரங்கள் | 44.0 |

Source : Fourth Five Year Plan Summary 1969-74 pp. 331-336

அக்டோபர் 1962, அக்டோபர் 1965 ஆகிய இரண்டு வேளைகளிலும் அந்நியத் தாக்குதல்கள் இல்லாதிருக்குமானால், வளர்ச்சி வீதம் சிறப்பாக அமைந்திருக்கும்.

(ஈ) நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் (ஏப்ரல் 1969 முதல் மார்ச் 1974 முடிய)

மூன்றும் திட்டகாலமாகிய (1961-66) 5 ஆண்டுகளில் அதனைத் தொடர்ந்த 3 ஓராண்டுத் திட்ட காலங்களிலும் ஆக மொத்தம் 8 ஆண்டுகளில் – தொழில் வளர்ச்சி சீராக அமையவில்லை. முதல் நான்காண்டுகளில தொழில் முதலீட்டுச் சூழ்நிலை சாதகமாக இருந்தமையால், தொழில் வளர்ச்சியும் சிறப்பாகவே

இருந்தது. ஆனல் அடுத்த மூன்று ஆண்டுகளிலும் நாட்டின் பொருளாதாரம் இன்னலுக்கும் இடைஞ்சலுக்கும் உட்பட்டு துயருற்றது எனவே தொழில் வளர்ச்சியும் மந்தமாக இருந்தது. ஆயினும் இறுதி ஆண்டாகிய 1968-69-ல் மீண்டும் பொருளாதாரம் மீட்சியுற்று, வளர்ச்சி நிலையில் நடைபெற்றது. இதனைக் கீழ் வரும் புள்ளி விவரங்கள் தெளிவாக்கும்.

தொழிலகப் பொருள்கள் உற்பத்திப் பெருக்கம்
(அடிப்படை ஆண்டு 1960)

| | | | |
|---|---|---|---|
| 1961 - 62 | — | 8·2 | சதவீதம் |
| 1962 - 63 | — | 9·6 | ” |
| 1963 - 64 | — | 9·2 | ” |
| 1964 - 65 | — | 8·8 | ” |
| 1965 - 66 | — | 5·3 | ” |
| 1966 - 67 | — | 0·2 | ” |
| 1967 - 68 | — | 0·5 | ” |
| 1963 - 69 | — | 6·5 | ” |

1967-68-ல் வேளாண்மைத் துறை உற்பத்தி முன்னேற்ற நிலை கண்டிடவே, தொழில்துறை முதலீடு அதிகரித்து, 1968-69ல் மீட்சிநிலை தோன்றியது. இத்தகைய காரணங்களினல் நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் ஏப்ரல் 1969-ல் தொடங்கப்பட்டது.

**அணுகு முறை (Approach):** நாட்டில் பொதுவாக வேளாண்மை மற்றும் வேளாண்மை சார்பற்ற துறைகளிலும், மனிதசக்தி முழுமையாகப் பயன்படுத்தப்படாமல், போதா வேலையின்மைப் பிரச்னை நிலவியது. உற்பத்தித் துறையிலோ நவீன தொழில் நுட்ப முறைகள் கையாளப் படவில்லை எனவே, தொழில் நுட்ப சக்தி, இயற்கை வளம், நிதிவளம், மனித சக்தி இவற்றை ஒருங்கிணைத்து தொழில் வளர்ச்சிக்கு வித்திடுதல் அவசியமாகும். எனவே முதலில் கவனிக்க வேண்டியது 'தற்சார்பு நிலையினை' (Self reliance) விரைவாக எட்டிடல் இன்றியமையாததாம். மொத்த வருமானம் அதிகரிக்கவும், மொத்த முதலீடு அதிகரிக்கவும், நாட்டின் பலதுறைகளின் மூலதனக் கருவிகள், உலோகங்கள், பெட்ரோல் பொருள்கள், இரசாயனப் பொருள்களின் தேவை அதிகரிக்கலாயிற்று. எனவே அடுத்த பத்தாண்டு காலத்துள் உள்நாட்டு உற்பத்தியைப் பெருக்கி நாட்டைச் சுயதேவை பூர்த்தி உடையதாக மாற்றல் அவசியமாகிறது.

இரண்டாவதாக தொழில் வளர்ச்சியைப் பரவலாக்குதல் (Dispersed Industrial Development) அவசியமாகும்.

மூன்றாவதாக, தொழில் நுட்ப வேலையின்மையை ஒழிப்பதற்காக - குறிப்பாக மரபு வழித் தொழில்களில் முயற்சியை மேற்கொள்ளல்.

1956-ம் ஆண்டுத் தொழிற் கொள்கைத் தீர்மானமே நான்காம் திட்ட காலத்திலும் கடைப்பிடிக்கப்படும்.

**நோக்கங்கள் :** ஏற்கெனவே அமைக்கப்பட்டுள்ள உற்பத்திக் கொள்ளளவுகளைப் பூரணமாகப் பயன்படுத்தவும், தொழிலமைப்பில் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் களைந்து வளர்ச்சி பெறுவதையும் கருத்திற் கொண்டு நான்காம் திட்டத்திற்கான தொழில் திட்டங்களும் கொள்கைகளும் வகுக்கப்பட்டன. அதே வேளையில் நமது அந்நியச் செலுத்து நிலையில் அதிகச் சுமை விழுந்து விடாத வண்ணம் தொழிலகப் பொருள்கள் உற்பத்தி, மற்றும் கொள்ளளவில் அமைத்தல் இன்றியமையாதன என்பதும் உணரப்பட்டது. பொதுவாக, நான்காம் திட்டகால தொழில் வளர்ச்சிக்கான நோக்கங்கள் கீழ்வருமாறு அமையும் :

(i) ஏற்கெனவே முதலீடு தொடங்கிய, அல்லது முதலீடு செய்வதற்கு ஒத்துக்கொண்ட திட்டங்களில் முதலீட்டைச் செய்து நிறைவேற்றல்

(ii) ஏற்றுமதிப் பெருக்கத்திற்காகவோ, இறக்குமதிப் பதிலீட்டுக்காகவோ, அல்லது இன்றியமையாப் பொருள்களுக்காக வளர்ந்து வரும் உள்நாட்டுத் தேவைகளை ஈடுகட்டுவதற்காகவோ தற்சமய மற்றும் எதிர்கால வளர்ச்சிக்கேற்றவாறு நடப்பு நிலையில் உள்ள உற்பத்திக் கொள்ளளவுகளை அதிகரித்தல்.

(iii) உள்நாட்டுத் தொழில் வளர்ச்சி அல்லது உள்நாட்டில் கிட்டவல்ல சலுகைகளைச் சாதகமாக்கிக்கொண்டு, புதிய தொழில்களையோ, அல்லது புதிய தொழில்களுக்கான அடிப்படையையோ அமைத்தல்.

(iv) பரவிக் கிடக்கும் தொழில் முயல்வோர், முறையை ஊக்குவித்து, தொழில்களின் மேல் கொண்டுள்ள உரிமையையும் கட்டுப்பாடுகளையும் மிக விரிவாகப் பரவலாக்குதல்.

(v) இவையனைத்தையும் குறைந்த பட்சக் கட்டுப்பாடுடன் அடைதல்.

முதலீடு : நான்காம் திட்டத்தின் முதலீடானது கீழ்வருமாறு அமையும் :

| வ. எண். | துறை | பொதுத்துறை | தனியார்த் துறையும் கூட்டுறவுத் துறையும் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1 | தொழில்துறை மற்றும் தாதுப் பொருள்கள் | 3,298 | 2,000 | 5,298 |
| 2 | கிராம, மற்றும் சிறு தொழில்கள் | 186 | 560 | 746 |
| | திட்டத்தில் மொத்த முதலீடு | 13,655 | 8,930 | 22,635 |

**Source : Fourth Five year Plan : pp. 52 & 53**

பொதுத்துறையில் முதலீடு ரூ. 3298 கோடியாக அமையும். இதிலிருந்து ரூ 250 கோடி நிதி உதவி நிறுவனங்கள் மூலமாக தனியார் துறைக்கும், கூட்டுறவுத் துறைக்கும் வழங்கப்படும். எனவே பொதுத்துறை முதலீடு ரூ. 3048 கோடியாக அமையும்.

பொதுத்துறையில் பல்வேறு வளர்ச்சித் திட்டங்கள் மேற்கொள்ளப்படவிருந்தாலும், ரூ. 17·5 கோடியில் அமைக்கப்படும் 'பஞ்சாலை இணைக்கழகமு'ம், ரூ 60 கோடியில் அமைக்கப்படும் காகித இணைக்கழகமும் மிக முக்கியமானவைகளாகும்.

சில முக்கிய உற்பத்தி இலக்குகள்

| எண் | | கொள்ளளவு | உற்பத்தி அளவு |
|---|---|---|---|
| | | (மில்லியன் டன்களில்) | |
| 1 | எஃகுப் பாளங்கள் | 12 | 10·8 |
| 2 | விளைமுற்றிய எஃகு | 9 | 8·1 |
| 3 | வார்ப்பு இரும்பு | 4·2 | 3·8 |
| 4 | இரும்புத் தாது | — | 51·4 |
| 5 | சிமெண்ட் | — | 18·0 |

| வகை | கொள்ளளவு | உற்பத்தி அளவு |
|---|---|---|
| | (ஆயிரம் டன்களில்) | |
| 6 நைட்ரஜன் உரம் | 3,000·0 | 2,500·0 |
| 7 பாஸ்பேட் உரம் | 1,200·0 | 900·0 |
| 8 பூச்சி கொல்லி மருந்துகள் | 69·0 | 65·0 |
| 9 ரேயான் இழை | — | 90·0 |
| 10 சணல் பொருள்கள் | — | 1,400·0 |
| 11 சர்க்கரை | — | 4,700·0 |
| 12 வனஸ்பதி | — | 625·0 |
| 13 சோப் | — | 250·0 |
| 14 வர்ணங்கள், வார்னிஷ்கள் | — | 140·0 |
| 15 காகிதம், காகித அட்டை | — | 850·0 |
| 16 கந்தக சோடா (Caustic Soda) | — | 500·0 |
| 17 நிலக்கரிச் சுரங்க இயந்திரங்கள் | — | 20·0 |
| | (ஆயிரத்தில்) | |
| 18 விவசாய டிராக்டர்கள் | 68·0 | 50·0 |
| 19 சைக்கிள்கள் | — | 3,200·0 |
| 20 மோட்டார் சைக்கிள்கள் | — | 210·0 |
| 21 தையல் இயந்திரம் | — | 600·0 |
| 22 மின் விசிறிகள் | — | 3,000·0 |
| 23 வானொலிப் பெட்டிகள் | — | 3,800·0 |
| | (மில்லியன் மீட்டர்) | |
| 24 பருத்தித் துணி (ஆலைகள் மூலம்) | — | 51·0 |
| 25 கம்பளிப் பொருள்கள் | — | 20·0 |
| | (ரூ. மில்லியன்) | |
| 26 பஞ்சாலைக்கான இயந்திரங்கள் | — | 450·0 |

| வகை | கொள்ளளவு | உற்பத்தி அளவு |
|---|---|---|
| | | ரு. மில்லியன் |
| 27 சிமெண்ட் ஆலைக்கான இயந்திரங்கள் | — | 190.0 |
| 28 சர்க்கரை ஆலைக்கான இயந்திரங்கள் | — | 210·0 |

**Soure : Fourth Five year Plan**

1971–ம் ஆண்டுப் பொதுத் தேர்தலுக்குப் பின், நான்காம் திட்ட இலக்குகள் மீண்டும் பரிசீலிக்கப்பட்டன. அதனால் 1971, டிசம்பரில் உற்பத்தி இலக்குகளில் சில மாற்றங்கள் கொண்டுவரப் பட்டன. திட்ட மறுபரிசீலனையினால் கீழ்வரும் இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டன.

(அடைப்புக் குறிக்குள் உள்ளவை முதலில் நிர்ணயிக்கப்பட்ட இலக்கு ஆகும்.)

| | | |
|---|---|---|
| 1 | எஃகுப் பாளங்கள் | 8.25 மில்லியன் டன்கள் (10.8 மில்லியன் டன்கள்) |
| 2 | நைட்ரஜன் உர உற்பத்தி | 1,800 ஆயிரம் டன்கள் (2,500 ஆயிரம் டன்கள்) |
| 3 | பாஸ்பேட் உர உற்பத்தி | 458 ஆயிரம் டன்கள் (900 ஆயிரம் டன்கள்) |
| 4 | சுட்ட நிலக்கரி (Coking Coal) | 21 மில்லியன் டன்கள் (25.4 மில்லியன் டன்கள்) |
| 5 | இரும்புத் தாது | 40 மில்லியன் டன்கள் (51.4 மில்லியன் டன்கள்) |
| 6 | பஞ்சாலைத் துணி உற்பத்தி | 4,500 மில்லியன் மீட்டர்கள் (5,700 மில்லியன் மீட்டர்கள்) |

இந்தியத் தொழில்துறை வளர்ச்சியின் கதை இதோடு நின்று விடவில்லை. முற்றுப் பெறாத தொடர்கதையாக, வளமான எதிர் காலத்திற்கு இட்டுச் செல்லும் நெடுஞ்சாலையாக அது இருக்கிறது. முன்னேற்றத்தின் எல்லைக் கற்கள் பல தாண்ட வேண்டிய நிலை இன்னும் உள்ளது. அத்தகைய சிறப்பான, வளமான எதிர்காலப் பொருளாதாரச் செழிப்புக்கு இதுவரை நாம் அடிப்படை மட்டுமே இட்டுள்ளோம்.

## இணைப்பு I

### முக்கிய தொழில் துறைகளின், இலக்குகள், சாதனைகள்

| வ. எண் | இனம் | 1950–51 உற்பத்தி | 1955–56 உற்பத்தி | 1960–61 உற்பத்தி | 1956-66 இலக்கு | 1956-66 உற்பத்தி | 1968–69 கொள்ளளவு | 1968–69 உற்பத்தி | 1973–74 இலக்கு கொள்ளளவு | 1973–74 இலக்கு உற்பத்தி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | (மில்லியன் டன்கள்) | | | | | | | | | |
| 1 | வினைமுற்றிய எஃகு (Finished Steel) | 1·04 | 1·30 | 2·39 | 6·9 | 4·51 | 6·9 | 4·7 | 9 | 8·1 |
| 2 | எஃகு பாளங்கள் (Steel ingots) | 1·47 | 1·74 | 3·48 | 9·35 | 6·53 | 9 | 6·5 | 12 | 10·8 |
| 3 | வார்ப்பு இரும்பு (Pig iron) | 1·69 | 1·95 | 4·31 | — | 7·09 | — | 7·73 | — | — |
| 4 | அலுமினியம் | 4·0 | 7·4 | 18·3 | 81·3 | 62·1 | 117 | 125·3 | 2·30 | 220 |
| 5 | சிமெண்ட் | 2·7 | 4·8 | 8 | 13·2 | 10·8 | 15·4 | 12·2 | — | 18 |
| 6 | சர்க்கரை | 1·13 | 1·89 | 3·03 | 3·6 | 3·54 | — | 3·55 | — | 4·7 |
| | (ஆயிரம் டன்கள்) | | | | | | | | | |
| 7 | நைட்ரஜன் உரங்கள் | 9 | 80 | 101 | — | 232 | 1,024 | 541 | 3,000 | 2,500 |
| 8 | பாஸ்பேட் உரங்கள் | 9 | 12 | 54 | 406 | 122 | 421 | 210 | 1,200 | 900 |
| 9 | கந்தக அமிலம் (Sulphuric acid) | 101 | 167 | 368 | — | 662 | 1,900 | 1,038 | — | 2,500 |
| 10 | காரசோடா | 12 | 36 | 101 | — | 218 | 400 | 304 | — | 500 |
| 11 | காகிதம், காகித அட்டை | 116 | 190 | 350 | 711 | 558 | 730 | 646·6 | — | 850 |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 12 | சணல் பொருள்கள் | 831 | 1,071 | 1,097 | — | 1,302 | 1,500 | 1,088·5 | — | 1,400 |
| 13 | ரேயான் இழை | 2·1 | 13·5 | 43·8 | — | 15·6 | 67 | 59·97 | — | 90 |
| | | | | (ரூபாய் ஆயிரத்தில்) | | | | | | |
| 14 | இயந்திரக் கருவிகள் | 3 | 8 | 70 | 300 | — | — | — | — | — |
| | | | | (மில்லியன் மீட்டர்) | | | | | | |
| 15 | பஞ்சாலைத் துணி | 3,401 | 4,665 | 4,649 | 5,304 | 4,401 | — | 4,298 | 5,100 | 4,500 |
| | | | | (இலட்சம் கிலோ) | | | | | | |
| 16 | கம்பளிப் பொருள்கள் | 87 | 98 | 130 | — | 170 | — | — | — | — |
| | | | | (ஆயிரம்) | | | | | | |
| 17 | சைக்கிள்கள் | 93 | 513 | 1,071 | — | 1,504 | 2,175 | 1,990 | — | 3,200 |
| 18 | மோட்டார் சைக்கிள்கள், ஸ்கூட்டர் | — | 0·9 | 19·4 | — | 40·7 | 149 | 84·6 | — | 210 |
| 19 | தையல் இயந்திரங்கள் | 33 | 111 | 333 | 700 | 430 | 450 | 427 | — | 600 |
| 20 | வானொலிப் பெட்டிகள் | 54 | 102 | 282 | — | 606 | 1,400 | 1,489 | — | 3,800 |
| | | | | (இலட்சம்) | | | | | | |
| 21 | மின்விசிறிகள் | 2 | 2·9 | 10.6 | — | 13·6 | 18·10 | 14·81 | — | 30 |
| | | | | (இலட்சம் டன்) | | | | | | |
| 22 | இரும்புத் தாது | 30 | 43 | 110 | — | 780 | — | 281 | — | 514 |
| 23 | நிலக்கரி | 328 | 399 | 555 | — | 703 | — | — | — | — |

**Source:** (1) Fourth Five Year Plan pp. 331-336 (2) India—A Reference Annual, 1970. p. 325

## இணைப்பு II

### தொழில்கள் உற்பத்திக் குறியீட்டெண் (Index Numbers of Industrial Productions)

(அடிப்படை ஆண்டு, 1960 = 100)

| வ. எண் | துறைப்பிரிவு | 1951 | 1956 | 1961 | 1966 | 1967 | 1968 | ஜனவரி-செப்டம்பர், 1969 | *மாற்றத்தின் சதவீதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பொதுக் குறியீட்டெண் | 54·8 | 78·4 | 109·1 | 152·4 | 151·4 | 161·1 | 171·1 | + 7·3 |
| 2 | சுரங்கம், சுரங்கம் வெட்டுதல் | 66·6 | 78·7 | 105·4 | 136·1 | 135·8 | 144 2 | 145 5 | + 1 8 |
| 3 | உணவுப் பொருள்கள் உற்பத்தி | 66·9 | 79.6 | 108·6 | 128·7 | 111 7 | 108·4 | 135·7 | + 26·1 |
| 4 | நெசவுத்துறைத் தொழில்கள் | 79·8 | 98·0 | 102·8 | 108·9 | 107·6 | 112 5 | 109·5 | – 3·9 |
| 5 | பஞ்சாலைத்துறை | — | — | 104·8 | 106·5 | 104·9 | 111·7 | 112·3 | – 0·3 |
| 6 | கம்பளி நெசவுத்துறை | — | — | 99·3 | 129·6 | 122·5 | 144 2 | 154·1 | + 16·4 |
| 7 | சணல் நெசவுத்துறை | — | — | 89·1 | 100·4 | 104·1 | 96 4 | 74·2 | – 26·5 |
| 8 | தோல் காலணிகள் | 63·5 | 67·4 | 115·4 | 184·2 | 194·3 | 192·1 | 181 0 | – 5·6 |
| 9 | காகிதம், காகித அட்டைகள் | 38·5 | 53·1 | 105·8 | 160·0 | 167·1 | 185 0 | 195·7 | + 6·9 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | இரப்பர் பொருள்கள் | 56·1 | 69·6 | 112·9 | 160·2 | 171·4 | 202·1 | 220·3 | + 13·0 |
| 11 | இரசாயனப் பொருள்கள் | 42·4 | 63·7 | 113·4 | 163 4 | 172·4 | 197 4 | 212·5 | + 10 6 |
| 12 | பெட்ரோல் சுத்திகரிப்புத்துறை | 11·0 | 69·6 | 106·0 | 195·9 | 234 2 | 260·1 | 281·4 | + 9·1 |
| 13 | உலோக சார்பற்ற தாதுப் பொருள்கள் | 39·0 | 62·0 | 106·9 | 143·1 | 155·8 | 154 8 | 169·2 | + 11·8 |
| 14 | அடிப்படை உலோகப் பொருள்கள் | 46·5 | 56·4 | 118·7 | 189·6 | 181·8 | 193 7 | 208·2 | + 12·5 |
| 15 | உலோகப் பொருள்கள் | 30·7 | 74·6 | 112·4 | 208·4 | 192·1 | 181·2 | 203·3 | + 13·3 |
| 16 | மின்சார இயந்திரங்கள் தவிர்த்த இயந்திரப் பொறிகள் | 22·2 | 52·2 | 121·2 | 291·2 | 299·3 | 327·6 | 345·2 | + 5·8 |
| 17 | மின்சார இயந்திரங்கள், சாதனங்கள் | 26·3 | 56·5 | 110·0 | 225·1 | 243·4 | 277·5 | 280·5 | + 4·7 |
| 18 | போக்குவரத்து | 19·6 | 102·8 | 116·7 | 156·6 | 138 6 | 142 9 | 136·4 | – 2·4 |
| 19 | இதர உற்பத்தித்துறைகள் | — | 58·9 | 102 7 | 109·6 | 140·6 | 101·7 | 100·1 | – 4·1 |
| 20 | மின்சாரம் | 35·7 | 58·5 | 116·3 | 207·8 | 230 7 | 266·6 | 296·5 | + 12·8 |

* ஜனவரி - செப்டம்பர் 1968 நிலையுடன், ஜனவரி - செப்டம்பர் 1969 நிலையில் மாறிய சதவிதத்தைக் குறிப்பிடுகிறது.

Source : "India—A Reference Annual", 1970, Publications Division, p. 327.

# 7. இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில்களின் பங்கு

## (ROLE OF SMALL INDUSTRIES IN INDIAN ECONOMIC DEVELOPMENT)

வளர்ச்சி பெற்று வரும் நாடுகளின் பொருளாதாரத்தில் சிறு தொழில்களின் பங்கு பற்றிய விளக்கம், பொதுப்படையாக நான்காம் அதிகாரத்தில் விரிவாகக் கூறப்பட்டது. இந்தியப் பொருளாதாரத்தில்-வளர்ச்சி பெற்றுவரும் பொருளாதாரத்திற்கு தலையாய சான்ருக விளங்கும் ஒரு பொருளாதாரத்தில் சிறு தொழில்கள் எத்தகையதோர் இடத்தைப் பெற்று, பங்கினைப் பெற்று அதன் வளர்ச்சிக்கு உறு துணையாக நிற்கின்றன என்பதனை இவ்வதிகாரத்தில் காணலாம்.

நமது நாடு விடுதலை பெறுவதற்கு முன்பு நிலவிய சுதந்திரப் போராட்ட காலத்தில், காந்தியத்துவமும், அத்தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட திட்டங்களுக்கும் முக்கியத்துவம் தரப் பட்டது. இவ்வகைத் திட்டங்கள் பற்றியே பொதுவாகப் பேசப் பட்டு வந்தது. இதன் காரணமாகவே, கதர் மற்றும் கிராமத் தொழில்களுக்குச் சிறப்பிடம் வழங்கப்பட்டது. கிராமப்புற மக்களிடையே வேலையின்றியோ அல்லது அரை குறை வேலை வாய்ப் புடையோரே இருப்போரெனில் அவர்களுக்கு தக்க வேலை வாய்ப் பினை நல்கி ஓரளவு வருமானம் ஈந்து கிராமங்களில் தன்நிறைவுச் சூழ்நிலை எய்திட, கதர் மற்றும் கிராமத் தொழில்களே ஏற்றவை என்ற கருத்தே ஏற்றம் பெற்றுத் திகழ்ந்தது.

இரண்டாம் உலகப் போர்க் காலத்தை யொட்டித்தான் இயந்திரங்கள் ஆளப்பட்ட நவீனமுறை சிற்றளவுத் தொழில்துறை

ஆக்கம் பெற்றது எனலாம். யுத்த வேளையானதால், உள் நாட்டு நுகர்வுப் பொருள் தேவைகளை ஈடுகட்டுதல் இயலாமற் போனது. சேமித்து வைத்த அரிய அந்நியச் செலாவணியினை இறக்குமதியில் வீணடிக்க நமது மனமோ ஒப்பவில்லை. இச் சூழ்நிலையில் நேச நாடுகளோ தம் யுத்தத் தேவைக்கான பொருள்களை இந்தியாவி லிருந்து இறக்குமதி செய்யத் தொடங்கினர். எனவே பற்பல தொழில்கள் இங்கே தொடங்கப் பெற்றன. ஏற்கனவே தொடங்கப் பட்டவை வளம் பெறலாயின. உள்நாட்டு நுகர்வுத் தேவை களையோ அல்லது அயல் நாடுகளின் இராணுவத் தேவைகளையோ ஈடுகட்டும் பொருட்டு யுத்த காலத்தில் தொடங்கப்பட்ட சிறு தொழில்கள், யுத்தத்திற்குப் பின்பும் அரசினுல் கவனிக்கப்படும் என்று இந்நேரத்தில் இந்திய அரசு அளித்த வாக்குறுதியும் நமது தொழில் துறைக்கு ஊக்கமளித்தது. உள்நாட்டுக் கச்சாப் பொருள்கள், தொழில்நுட்ப அறிவு, இயந்திரங்களைக் கையாண்டு தொழில் தொடங்கிட பல தொழில் முயல்வோர் வந்தனர். அரசு தான் தந்த வாக்குறுதியைக் காக்கும் வண்ணம் இடைக்கால காப்பு வரிக் குழுவினை ['Interim Tariff Board'] அமைத்து, அதன் மூலம் தகுதி வாய்ந்த தொழில்கட்கு கட்டுக் காப்பு வழங்கியது. எனவே பெருமளவில் ஸ்டர்லிங் நிதி நமது கணக்கில் குவிந்திடலாயிற்று. ஆனுல் யுத்தம் முடிந்த பின்பு நமது ஸ்டெர்லிங் இருப்பினைத் தாராள இறக்குமதிக் கொள்கையால் அழித்து விட்டோம். இதன் விளைவாக யுத்தகாலச் சிறு தொழில்கள் மிகவும் பாதிக்கப்பட லாயின.

நாடு விடுதலையடைந்த பின்பு நாட்டைத் தொழில் மயமாக்கு வதில் தீவிரப் போக்குக் காணப்பட்டது. அதன் பொருட்டு வகுக் கப்பட்ட தொழிற் கொள்கையில் சுதந்திரப் போராட்டக் காலங் களில் சிறு தொழில் பற்றி நிலவிய கருத்துக்களும், சித்தாந்தங் களும் கருத்தில் கொள்ளப்பட்டன. தேசியத் திட்டக் குழுவும், 1948-ம் ஆண்டு அரசின் தொழிற் கொள்கைத் தீர்மானமும் இதனைத் தெளிவாக்கின. 'உள்நாட்டு வளங்களைப் பயன்படுத்தி, அவை வழியாக இன்றியமையா, நுகர்வுப் பொருள்கள் சிலவற்றில் தன்னிறைவு எட்டிட குடிசைத் தொழில்களும், சிறு தொழில்களும் நமக்கு மிகவும் பொருத்தமானவை' என்று கருதப்பட்டது. அதன் பின்னர் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சிறு தொழில் துறையின் வளர்ச்சிக்கு சிறப்பிடம் நல்கப்பட்டது.

இந்தியப் பொருளாதாரத்தில் சிறு தொழில்கள் பெற்றுள்ள இடத்தினையும், பங்கினையும் இனிக் காணலாம்.

(i) பதிவு செய்து கொண்ட நிறுவனங்களின் வளர்ச்சி: (Growth of Registered Units)

ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள தொழில்துறை இயக்குநரிடம் பதிவு செய்து கொண்ட சிறு தொழில் நிறுவனங்களின் புள்ளி விவரம் கீழே தரப்பட்டுள்ளது.

பதிவு செய்துகொண்ட நிறுவனங்களின் வளர்ச்சி

| ஆண்டு | பதிவு செய்து கொண்ட நிறுவனங்கள் எண்ணிக்கை | முந்திய ஆண்டை விட அதிகரித்த நிறுவனங்கள் எண்ணிக்கை | முந்திய ஆண்டை விட அதிகரித்த சதவீதம் |
|---|---|---|---|
| 1961 | 36,109 | — | — |
| 1962 | 52,241 | 16,132 | 44·6 |
| 1963 | 74 857 | 22,616 | 43·2 |
| 1964 | 92,582 | 17,725 | 23·6 |
| 1965 | 1,06,883 | 14,301 | 15·4 |
| 1966 | 1,21,619 | 14,736 | 13·7 |
| 1967 | 1,36,273 | 14,654 | 20·4 |
| 1968 | 1,61,865 | 25,592 | 18·7 |
| 1969 | 1,78,210 | 16,345 | 10·0 |
| 1970 | 1,93,131 | 14,921 | 8·3 |
| 1971 | 2,14,004 | 20,873 | 10·8 |

கடந்த பத்தாண்டு காலத்தில் மிக விரைவான, சிறப்பான முன்னேற்றம் கண்டுள்ளன என்பதை மேற்கண்ட விவரங்கள் தெள்ளத் தெளிவாக்குகின்றன. அப்பத்தாண்டு காலத்தில் சிறு தொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 36,109லிருந்து 2,14,004 என்ற அளவிற்கு உயர்ந்துள்ளது. அதாவது ஏறத்தாழ 6 மடங்கு வளர்ச்சி கண்டுள்ளன. 1962, 1963 ஆகிய ஆண்டுகளில் வளர்ச்சியானது மிகவும் வியக்கத்தக்க வகையில் ஏற்றம் கண்டுள்ளது. அதன் பின்பு வளர்ச்சி வீதம் குறைந்தாலும் அதிகரித்து வந்த

தொழிற்சாலைகளின் எண்ணிக்கை குறைந்திடவில்லை. நாம் மேலே கண்டுள்ள விவரங்கள் பதிவு செய்து கொண்ட நிறுவனங்களின் எண்ணிக்கையை மட்டுமே குறிப்பிடுகின்றன. ஆனால் பதிவு செய்து கொள்ளாமலே அதிகரித்த நிறுவனங்களின் எண்ணிக்கையையும் சேர்த்துக் கொண்டால், வளர்ச்சி வீதம் இன்னும் சிறப்பாக இருக்கக் கூடுமென்பதை உணரலாம்.

(ii) மொத்த உற்பத்தி மதிப்பு (Value of Gross Out put)

சிறு தொழில்கள் மூலமாக உற்பத்தியாகும் பொருள்களின் மொத்த மதிப்பும் ஆண்டுக்காண்டு அதிகரித்தே வந்துள்ளது.

மொத்த உற்பத்தி மதிப்பு
1965—ரு 2374 கோடி
1970—ரு 3670 கோடி
1971—ரு 4050 கோடி

1970-71ல் மட்டும் மொத்த உற்பத்தியின் மதிப்பு 10·4 சத வீதம் உயர்ந்துள்ளது. பேரளவுத் தொழில்களின் உற்பத்தி வீதத்தோடு ஒப்பிட்டால், இந்த வீதமானது மிகவும் போற்றற்குரிய ஒரு சாதனையாகும். மூலதனப் பற்றுக்குறை மிக்க நம் நாட்டில் சிறு தொழில்களை இன்னும் வளப்படுத்துவதன் வழியாக நமது தொழில் வளத்தைச் சீராக்கலாம். இதே கருத்திற்கு ஆதரவாக, முதல்-உற்பத்தி விகிதத்தையும் இங்கே சுட்டிக் காட்டலாம். சான்றாக 1971-ல், சிறு தொழில் துறையில் நிலை முதல் முதலீட்டு மதிப்பு ரூ 475 கோடியாகும். அதே ஆண்டில் சிறு தொழில்களின் மொத்த உற்பத்தி மதிப்பு ரூ 4050 கோடியாகும். இது தொழில் துறையின் மொத்த உற்பத்தியில் 3 5 சதவீதமாகும். அவ்வாறெனில் முதல்-உற்பத்தி விகிதம் 1:8:5 என்றாகிறது. இதையே மாற்றிச் சொன்னால் சிற்றளவுத் துறையின் நிலை முதலில் நாம் ஒரு ரூபாய் முதலீடு செய்தால் அம்முதலீட்டிலிருந்து பெறவல்ல உற்பத்தியின் மதிப்பு ரூ 8:5க்கு சமமாகிறது. அதே வேளையில் பேரளவுத் தொழில் துறையில் முதல்-உற்பத்தி விகிதமானது 1:1 என்றுதான் அமைகிறது. அதாவது ஒரு ரூபாய் முதலீட்டால் ஒரு ரூபாய் பெறுமான உற்பத்தி மட்டுமே கிட்டுகின்றது. எனவே மூலதனப் பற்றுக் குறையான நமது நாட்டில், குறைந்த அளவு முதல் கொண்டு அதிக அளவு உற்பத்தி பெற சிறு தொழில்கள் தாம் நம்பிக்கை தரவல்ல விளைவுகளை அளித்துக் கொண்டிருக்கின்றன. குறைந்த அளவு முதல் கொண்டு பேரளவு உற்பத்தி பெறல் என்பது தானே சிறுதொழில்களின் முக்கிய சிறப்பியல்பாக அமைந்துள்ளது.

(iii) உற்பத்திப் பொருள்கள் வகை எண்ணிக்கை (Industrial Products))

1971-மார்ச் 31-ம் நாள் வரையான புள்ளி விவரங்களின்படி நூற்றுக்கு நூறு முழுக்க முழுக்க, சிற்றளவுத் தொழில்கள் மூலமாக உற்பத்தி செய்யப்பட்ட சிறுதொழில்கள் எண்ணிக்கை 30 ஆகும். இதில் மருத்துவத்துறைக்கான தெர்மா மீட்டர்கள், பித்தான்கள் தலைமுடி, கிளிப்கள் போன்ற இனங்கள் அடங்கும். இவை தவிர மொத்தத் தொழில்துறை உற்பத்திப் பொருள்களில் 40 முதல் 50 சதவீதம் வரை சிறு தொழில்கள் மூலமாக உற்பத்தி செய்யப்படும், பொருள்களின் எண்ணிக்கை 54 ஆகும் இந்த இரண்டாவது இனத்தில் டேப் ரிகார்டுகள், மின்சார சாதனங்கள் போன்றவை அடங்கும்.

சிறு தொழில்களுக்காக எத்தனை இனங்கள் ஒதுக்க வேண்டும் என்பதை ஆராய்வதற்காக 1966 இறுதியில் திரு ஏ. கே. ராய் (A. K. Ray) தலைமையில் (தொழில் துறை வளர்ச்சி இலாகாவின் முன்னாள் இணைச் செயலர்) அமைந்த குழுவொன்று சிறு தொழில்களுக்கு 79 இனங்களை ஒதுக்கிடப்பரிந்துரைத்தது. சிறு தொழில்கள் கூட்டமைப்புச் சங்கமும் (Federation of association of small Scale Industries) அதே போலவே பரிந்துரைத்தது இதன் விளைவாக இந்திய அரசு 47 தொழில்களை சிறு தொழில்களுக்கென ஒதுக்கியது. 1970-ஜனவரியில் மேலும் 8 தொழில்களை சிறு தொழில்களுக்கென ஒதுக்கியது. பின்னர் 24-21971-ல் மேலும் 73 இனங்கள் சேர்க்கப்பட்டு, சிறு தொழில்களுக்காக ஒதுக்கப் பட்ட மொத்தத் தொழில்கள் எண்ணிக்கை 128 என்று உயர்த்தப் பட்டது. (விரிவான விளக்கம் இவ்வதிகாரத்தின் இறுதியில் உள்ள இணைப்பில் காண்க.)

(iv) வேலை வாய்ப்பு விவரங்கள்

வெற்றிகரமான ஜனநாயகத்திற்கு தன்னாட்சி முறை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் சுயவேலைக் (Self-employment) கொள்கையும் என்று கார்வே குழு குறிப்பிட்டது. அது போலவே இந்தியாவில் சிறு தொழில்கள் பல தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளித்தன.

1961-ம் ஆண்டு பொதுப் பொருளாதாரக் கணிப்புப்படி' இந்தியாவில் குடும்பத் துறையைச் சார்ந்திருந்தோர் எண்ணிக்கை 16·5 மில்லியன் இதில் 12 மில்லியன் தொழிலாளர்களுக்கு முழு நேர, நேரடி வேலை வாய்ப்புக்களையும், 4·5 மில்லியன் தொழிலாளர்

களுக்கு துணை வேலை வாய்ப்புக்களையும் குடும்பத்துறை வழங்கியது.

தேசிய மாதிரி ஆய்வின் (National Sample Survey) 14-ஆம் முறை ஆய்வானது, ஜூன் 1958 முதல் ஜூலை 1959 முடிய மேற்கொள்ளப்பட்டது. அந்த ஆய்வின் முடிவுகளும், முதலில் கூறிய பொதுப் பொருளாதாரக் கணிப்பின் முடிவுகளுக்கொப்பவே அமைந்துள்ளது. தேசிய மாதிரி ஆய்வின் முடிவுகளுக்கொப்ப, சிறு தொழில் மற்றும் குடும்பத் துறையைச் சார்ந்திருந்தோர் எண்ணிக்கை 17.3 மில்லியன் ஆகும். இதில் 12 மில்லியன் நபர்கள் அத் தொழிலையே தங்களின் பிழைப்புக்கான முக்கிய முழு நேரத் தொழிலாகவும், 5.2 மில்லியன் நபர்கள் துணை வேலை வாய்ப்பாகவும் கொண்டிருந்தனர். மொத்தத்தில் தொழில் துறையில் வேலை வாய்ப்புகள் பெற்ற மொத்த நபர் எண்ணிக்கையில் 78.6 சதவீதம் அகத்துறையினையும், 7 சதவீதத்தினர் சிறிய அளவுத் தொழிலினையும சார்ந்திருந்தனர். அதாவது சிற்றளவுத் தொழில்களைச் சார்ந்து வேலை பெற்றோர், நாட்டின் மொத்தத்துறை தொழிலாளிகளின் எண்ணிக்கையில் 85.6 சதவீதம் என்றாகிறது இதற்கு மாறாக பேரளவுத் துறை நல்கிய வாய்ப்போ 11.1 சதவீதம் தான். இதனைக் கீழ்க்காணும் அட்டவணை தெளிவாக்கக் கூடும்.

**உற்பத்தித் தொழில்களில் வேலைவாய்ப்பு (1965)**

| வரிசை எண் | துறை | மொத்த வேலை வாய்ப்பு (மில்லியனில்) | சதவீதம் |
|---|---|---|---|
| 1 | குடும்பத்துறை அமைப்பு (House-hold enterprises) | 17·0 | 78·6 |
| 2 | சிறிய அளவு தொழில்துறை (Small sized units) | 1·5 | 7·0 |
| 3 | நடுத்தர தொழில் அமைப்பு (Medium sized units) | 0·7 | 3·2 |
| 4 | பேரளவுத் தொழில் அமைப்பு (Large sized units) | 2·4 | 11·1 |
| | மொத்தம் | 24·6 | 100·0 |

இவ்வாறு மொத்த வேலை வாய்ப்பில் 85·6 சதவீதம் சிறு தொழில்கள் மூலமாகக் கிடைக்கின்றபடியால், இந்தியப் பொருளாதாரத்தில் சிற்றளவுத் தொழிலின் சிறப்பு மிகுந்த பங்கினை நன்கு அறிந்து கொள்ளலாம்.

சிறுதொழில்கள் வளர்ச்சி அமைப்பு (Small Scale Industries Development Organisation) தருகின்ற விவரங்களின்படி நோக்கினுல், மார்ச் 1965 இறுதியில் சிறு தொழில்களில் வேலைவாய்ப்புப் பெற்ருேர் எண்ணிக்கை 27 லட்சம் என்று அறியப்படுகிறது. மார்ச் 1971-ல் இவ்வெண்ணிக்கை 33 இலட்சமாக உயர்ந்துள்ளது. மேலே தரப்பட்ட விவரங்கள் பதிவு செய்துகொண்ட நிறுவனங்களில் மட்டும் வேலை வாய்ப்புப் பெற்ருேர் எண்ணிக்கையாகும். இதோடு பதிவு செய்யப்படாத நிறுவனங்களில் (Unregistered units) பணிபுரிவோரின் எண்ணிக்கையையும் சேர்த்துக் கொண்டால் 1965-ம் ஆண்டில் சிறு தொழில்கள் வழியாக வேலை பெற்ருேர் எண்ணிக்கை 58 இலட்சமாகவும், 1971, மார்ச் இறுதியில் 65 இலட்சமாகவும் உத்தேசமாக இருக்கக் கூடும். ஆனுல் திரு. கே. எல். நஞ்சப்பா (வளர்ச்சி ஆணையர் சிற்றளவுத் தொழில்கள், வணிகத்துறை அமைச்சு – புதுடில்லி) அவர்கள் கூற்றுப்படி மார்ச் 1971-ல் சிற்றளவுத் தொழில்கள் மூலமாக வேலை வாய்ப்புப் பெற்ருேர் எண்ணிக்கை 65 இலட்சம் ஆகும். இது மொத்தத் தொழில்துறை வேலை வாய்ப்பில் 41 சதவீதம் ஆகும்.

இன்று நாடு எதிர்நோக்கியுள்ள தலையாய சிக்கல்களுள் வேலையின்மைச் சிக்கலும் ஒன்று என்பதை அனைவரும் அறிவர். வேலை தேடி வருவோர் எண்ணிக்கை ஆண்டுக்காண்டு அதிகரித்து வருகிறது. இத்தகைய சூழ்நிலையில், வருங்காலங்களில் சிறு தொழில்களைப் பெருக்குவதன் வாயிலாக வேலை வாய்ப்புக்களைப் பலருக்கு ஏற்படுத்தித்தர இயலும்.

வேலையின்மைப் பிரச்சினை எவ்வளவு விரைவாக அதிகரித்து வருகிறது என்பதை அறிந்தால், நாம் முன்னர் கண்ட கருத்தின் நியாயத்தை உணர இயலும். அதற்குத் துணையாக அடுத்த பக்கப் பட்டியல் உதவிடும்.

இவ்வாருக வேலையின்றியிருக்கும் மக்கள் தொகையுடன் அரை குறை வேலை வாய்ப்புப் பெற்றிருப்போரின் எண்ணிக்கையையும் கூட்டிப் பார்த்தால், நாட்டின் பொருளாதாரமே எவ்வாறு பாதிக்கப்படலாம் என்பதை உய்த்துணரலாம். இந்நிலையில் இப்பிரச்சினைக்கு ஓரளவு குறுகிய காலத் தீர்வு காண சிறு தொழில்கள் பெரிதும் உதவுமன்ருே ?

வேலையின்மை அதிகரிப்பு (மில்லியனில்)
(Increase in unemployment)

| ஐந்தாண்டுத் திட்ட காலம் | திட்டத் தொடக்கத்தில் ஏற்கனவே வேலை இன்றி இருப்போர் | புதிதாக வேலை தேடி வருவோர் | புதிதாக உருவாக்கப்பட்ட வேலைவாய்ப்புகள் | திட்ட இறுதியில் வேலை இல்லாதிருப்போர் |
|---|---|---|---|---|
| முதல் திட்டம் | 3·3 | 9·0 | 7·0 | 5·3 |
| இரண்டாம் திட்டம் | 5·3 | 11·8 | 10·0 | 7·1 |
| மூன்றாம் திட்டம் | 7·1 | 17·0 | 15·5 | 9·6 |
| நான்காம் திட்டம் | 13·6 | 27·3 | 18·0 | 22 9 |

**Source:** 'Report of study group on Employment and Training'—National commission Labour–1969, New Delhi.'

கல்வி கற்றோரிடையேயும் இன்று வேலையின்மைப் பிரச்சினை பெருகி வருவதை நாம் அறிகிறோம். பள்ளியிறுதி வகுப்பு முடித்தோ அல்லது மேற்பட்ட படிப்பை முடித்தோ வேலையில்லாதிருப்போர் பலர் அவர்கள் எல்லாம் வேலையின்றியிருப்பதற்கு, வேலை வாய்ப்பை ஒட்டிய கல்வி அளிக்கப்படாமை காரணமாக இருக்கலாம். அத்தகையோருக்கு சிறு தொழிலில் குறுகிய காலப் பயிற்சி அளிப்பதன் வாயிலாக, ஓரளவு வருவாய் மிக்க வேலை வாய்ப்புக்களை உருவாக்கலாம்.

இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களின் முக்கிய நோக்கங்களில் ஒன்று அனைவருக்கும் வேலை வாய்ப்பினை வழங்குதல் என்பதாம். இக்குறிக்கோளை எய்திட சிறு தொழில்களே சாலச் சிறந்த வழிமுறையாகும். இச் சிறு தொழில்கள் மூலமாக நாட்டில் வளர்ந்து வரும் சர்வாதீனப் போக்கை கட்டுப் படுத்தவோ அல்லது திருத்தவோ இயலும், என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும். தவிர வளர்ந்து வரும் நாடுகளின் பொருளாதாரக் கோபுரத்தைக் கட்டிட நிலையான தொழில் துறைக் கட்டுமானமும், சமமான– ஆனால் உறுதியான– பொருளாதார வளர்ச்சியும் இன்றியமையாதவை. இத்தகைய கோபுரத்திற்கான அடித்தளத்தை பல்

வகைச் சிறு தொழில்களாலன்றி வேறு துறைத் தொழில்களால் சிறப்பாக அமைத்திட இயலாது.

கற்றவர்களிடையே காணப்படும் வேலையின்மை அளவு

(வேலை வாய்ப்புத் தேடித்தரும் நிறுவனங்களில் பதிவு செய்து கொண்டோர் மட்டும்)

(ஆயிரத்தில்)

| எண் | கல்வித் தகுதி | டிசம்பர் 1966 | டிசம்பர் 1967 | அதிகரித்த சதவீதம் |
|---|---|---|---|---|
| 1 | பள்ளி இறுதித் தேர்வு வெற்றி பெற்றோர் | 619·5 | 714·1 | 15·3 |
| 2 | பள்ளி இறுதி வகுப்புக்கு மேல் கல்லூரிக் கல்வி பெற்று பட்டம் பெருதோர் (under graduates) | 204·4 | 251·8 | 23·2 |
| 3 | இளநிலை, முதுநிலைப் பட்ட தாரிகள் | 93·6 | 121·5 | 29·8 |
| | (i) கலைப் படிப்பு | 48·9 | 62·9 | 28·6 |
| | (ii) அறிவியல் | 21·8 | 25·6 | 17·4 |
| | (iii) வணிகவியல் | 15·1 | 18·3 | 21·2 |
| | (iv) பொறியியல் | 4·3 | 7·0 | 62·8 |
| | (v) மருத்துவவியல் | 0·6 | 1·2 | 100·0 |
| | (vi) பிறர் | 2·9 | 6·5 | 124·1 |
| | மொத்தம் | 917·5 | 1,087·4 | 81·5 |

**Source:** Report of the study group on Employment and Training, 1969–New Delhi

வாழ்க்கைத் துறையில் காட்டாற்று வெள்ளமெனப் பெருகி வரும் வேலை தேடி நுழைவோருக்கு வேலை வாய்ப்பளித்தல் நாகரிக அரசுகளின் கடமையாகும். இப் பிரச்சினை தீர்க்கப்படாமலே இருக்குமானுல், அதன் பின் விளைவுகள் மோசமாக இருக்கும் எனவே வருங்காலங்களில் சிறு தொழில்கள் மூலமாக இச்

சிக்கலுக்குத் தீர்வு காண வேண்டும். இதன் பொருட்டு சுய வேலை வாய்ப்புகளை (self emp'oyment) உருவாக்க விரும்பும் தொழில் நுட்ப வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு சிறு தொழில்கள் தொடங்கிட அரசு உதவி புரிய முன் வரவேண்டும். பெரிய பெரிய தொழில் நகரங்களை விடுத்து, சிறிய கிராமங்களில் தமக்கே சொந்த மான தொழில்களைத் தொடங்கி நடத்திட ஆற்றல் படைத்த இளைஞர்களுக்கு மானியங்கள், உதவித் தொகைகள், சலுகை வசதி கள், தள்ளுபடிகள் செய்து தர முன்வர வேண்டும். அவர்கள் தொழில் தொடங்கும் கிராமங்களில் உள்ளமைப்பு வசதிகள் போது மான அளவு இல்லையெனில், அத்தகைய வசதிகளையும், ஆலோசனைப் பணி வசதிகளையும், நீண்ட காலக்கடன், சுழல் முதல் போன்ற நிதி வசதிகளையும் கொடுத்துதவ வேண்டும். இவ்வாறு உதவிகள் புரிவதன் மூலம், வேலையின்றித் தவிக்கும் ஆயிரக்கணக்கான பொறியியல் பட்டதாரிகள் பயன் பெறுவர்.

இத் திட்டங்களால் மறைமுகப் பலன்களும் கிட்டும். இன்று கிராம மக்கள் வேலை தேடி நகர்ப்புறங்களை நாடிச் செல்கின்றனர். இதனால் நகர மக்கள் தொகை செறிந்து பற்பல தீமைகள், சுகா தாரக் கேடுகள் ஏற்படுகின்றன. அவ்வாறின்றி கிராமப் புறங்களில் சிறு தொழில்களைத் தொடங்கினால், கிராம மக்கள் நகரங்களை நோக்கிப் படையெடுப்பது குறையும். கிராம மக்களுக்கு நிறை வான வருமானம் தரும் வாய்ப்பும் கிட்டும்.

எனவே தற்சமயம் நமது குறிக்கோளானது, 'வேலை வாய்ப்புக் களுக்காக வளர்ச்சி' (Development for unemplovment) என்றே அமைய வேண்டும். அக்குறிகோள் நிறைவுற, சிறு தொழில்கள் வளர்ச்சியே இன்றியமையாததாகும். எனவே நெடுங்காலமாக புறக்கணிக்கப்பட்ட, அல்லது மறந்து விடப்பட்ட இத்துறையை வலுவாக்குவதன் மூலம் நாட்டின் முக்கியப் பிரச்சினையைத் தீர்க்க இயலும்.

(v) ஏற்றுமதித் துறையில் சிறு தொழில்களின் பங்கு

பின் தங்கிய அல்லது வளர்ந்து வரும் பொருளாதார அமைப்புக் கொண்ட நாடுகளாகிய ஆப்பிரிக்க நாடுகள், ஆசிய நாடுகள், இலத்தீன் அமெரிக்க நாடுகள் போன்றவற்றின் சந்தைகட்கும், அமெரிக்கா, ஜப்பான், மேற்கு ஐரோப்பிய நாடுகள் போன்ற வளர்ச்சி பெற்ற நாடுகளின் சந்தைகட்கும் தேவைப்படும் பல்வேறு வகையான பொருள்களை இன்று நமது சிறு தொழில்கள் உற்பத்தி செய்கின்றன. பொருள்களின் தரத்திலும், உற்பத்தி முறையில் ஆளப்படும் தொழில் நுட்ப முறைகளிலும் முன்னேறியுள்ளதால்

நமது சிறு தொழில்கள், வெளிநாடுகளில் சந்தை பிடிப்பது சாத்திய மாயிற்று எனலாம். அண்மையில் 1224 நிறுவனங்களில் ஒரு ஆய்வு மேற் கொள்ளப்பட்டது. இந் நிறுவனங்களில், இறக்குமதி செய்யப்பட்ட கச்சா பொருள்கள் மற்றும் துணைக் கருவிகளைத் தங்களுக்கு அளிப்பதற்கு அனுமதி வழங்குவதில் முதலுரிமை வழங்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டவையாகும். இந்த 1224 நிறுவனங்களில் 615 நிறுவனங்கள் அத்தகைய தகுதி பெற்ற நிறுவனங்கள் எனக் கூறப்பட்டன அதில் 413 நிறுவனங் கள் சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் ஆகும் அவைகளின் உற்பத்தி மதிப்பு ரூ 62 கோடி என்றும், அக்குறிப்பிட்ட ஆண்டில் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பு ரூ 20 கோடி என்றும் அறிவிக்கப்படுகிறது. அந்த 413 நிறுவனங்கள் சராசரி யாக தங்களின் மொத்த உற்பத்தியில் 32 சதவீதத்தை ஏற்றுமதி செய்தன. இங்கு கவனத்தில் கொள்ள வேண்டிய கருத்தும் ஒன்று உளது. அதாவது தங்கள் மொத்த உற்பத்தியில் 10 சதவீதத்திற் கும் குறைவாக ஏற்றுமதி செய்த சிறு தொழில் நிறுவனங்களின் பணி இங்கே சேர்த்துக் கொள்ளப்படவில்லை எனவே ஓர் உத்தேச மதிப்பீட்டின்படி நோக்கினால், நமது சிற்றளவுத் தொழில் களின் ஓராண்டுச் சராசரி ஏற்றுமதி மதிப்பானது ரூ 90 கோடி யிலிருந்து ரூ 95 கோடி வரை இருக்கலாம். இவ்வாறாக, சிறுதொழில் துறை ஏற்றுமதி பெருக்கத்திற்கான சாதகமான வாய்ப்புகளைக் கணிசமாகப் பெற்றுள்ளதை அறியலாம்.[1]

சிறு தொழில் பொருள்களின் ஏற்றுமதிப் பெருக்கத்தை ஊக்கு வதற்காக 'மத்திய சிற்றளவுத் தொழில்கள் வாரியமானது' (Central Small Industries Board) ஒரு 'நிலையான குழுவை' (Standing Committe) அமைத்துள்ளது. இந்த வாரியம் ஆக்க ரீதியான, பயன்தரு திட்டங்களையும், ஆலோசனைகளையும் வழங்கி யுள்ளது. ஆனால் அதே வேளையில் மத்திய வெளி வணிக அமைச் சானது அம் முயற்சிகளில் அதிகம் ஈடுபடுவதில்லை. மேலும் சிறு தொழில்கள் வளர்ச்சி இணைக் கழகத்தின் ஏற்றுமதிப் பெருக்க இயக்குநர் அலுவலகம் வலுவற்று விளங்குவதால் ஏற்றுமதிப் பெருக்க முயற்சியில் அதிகம் ஈடுபட இயலவில்லை. தவிர சிறு தொழில்கள் மூலமாக மட்டுமே உற்பத்தி செய்யவல்ல பொருள்களை அவற்றிற்கென்றே ஒதுக்கி வைப்பதிலும் அதிக அக்கறை கொள்ள வில்லை எனவே, சிறு தொழில்களை நவீனமாக்கி, 'புதிய தொழில் முறைகளைக் கையாண்டால், நமது ஏற்றுமதிப் பொருள்கள் விரைவாக அதிகரிக்கக் கூடும்.

1. Harden Singh—"Prospects of small Industries" Essay—Eastern Economist Annual, 1974, pp 1213—1214

## (vi) பாதுகாப்புத்துறையில் சிறு தொழில்களின் பங்கு

அண்மைக் காலங்களில் யுத்த முறை பற்பல மாறுதல்களைக் கண்டுள்ளது. துல்லியமான குறிகொண்டு நெடுந் தொலைவு வீச்சுக் கொண்ட துப்பாக்கிகள், சரியானதும் திறமை மிக்கதுமான செய்தித் தொடர்புக் கருவிகள் போன்றவை இன்றியமையாத சாதனங்களாக அமைந்துள்ளன. இந்தியா, தொழில் துறையில் இப்பொழுதுதான் முன்னேறிவரக்கூடிய ஒரு நாடாக இருந்தாலும், இத்தகைய நவீன யுத்த சாதனங்களைக் தயாரிப்பதிலும் தீவிரமாக ஈடுபட்டுள்ளது. இம் முயற்சிக்கு உறு துணையாக இருக்கும் விதத்தில் சிறு தொழில்களும் தம் பங்கினை ஆற்றி வருகின்றன. ஆயினும் சிறு தொழில்கள் மென்மேலும் படைக்கலன்கள் தயாரிப்பதில் அதிக அக்கறை கொண்டு தத்தம் உற்பத்திக் கொள்ளளவைப் பெருக்கிக் கொள்வதோடன்றி அக் கொள்ளளவைப் பூர்த்தி செய்வதற்கும் முயற்சிக்க வேண்டும். இதன் பொருட்டு ஒவ்வொரு சிறு தொழில் நிறுவனத்தின் உற்பத்தித் தரம் அளவு பற்றி விரிவான ஆய்வுகளை மேற்கொள்ளல் அவசியம். ஏனெனில் படைக்கலப் பொருள்களைத் தயாரிக்கும் சிறு தொழில்கள் பற்றிய புள்ளி விவரங்கள் தெளிவாக இல்லை என்றே கூறலாம். தம்மிச்சையான ஒரு முயற்சி மூலம் இத்தகைய ஆய்வு ஒன்று மேற் கொள்ளப்பட்டாலும் அம் முயற்சி வெற்றியாக அமையவில்லை. எனவே, தக்க சட்டப்பாதுகாப்புடன் ஆய்வு முயற்சியில் ஈடுபட வேண்டும்.

அரசும் சில நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிறது படைக்கலப் பொருள்களை பல இனங்களாகப் பகுத்தல் முதலில் இன்றியமையாதது. சான்றாக இரசாயனப் பொருள்கள் உற்பத்தி நிறுவனங்கள், இயந்திரப் பொறியியல் நிறுவனங்கள் (Meachnical Engineering) உந்து வண்டி பொறியியல் (Automobile Engineering) என்றெல்லாம் பாகுபாடு செய்யலாம். இத்தகைய பகுப்புக்களைச் செய்த பின்னர், தக்க நிறுவனங்களுக்கு, அவை தம் உற்பத்திப் பொருள்களுக்கான ஆணைகளை வழங்குதல் எளிதாக அமையும். இதுவரை பாதுகாப்புத் துறைப் பொருள்களை உற்பத்தி பண்ணுத சிறு தொழில்கள் இருக்கக் கூடும். ஆயினும் ஒரளவு இதுபற்றித் திட்டமிட்டால், நிச்சயமாக வெற்றிகிட்டக்கூடும்.

படைக்கலப் பொருள்கள் உற்பத்தியின் பொருட்டு சிறு தொழில்களைக் தக்கவகையில் பயன்படுத்திக் கொள்ளும் பொருட்டு இரண்டாம் உலக யுத்தத்தின் போது, அமெரிக்காவில் 'சிறிய யுத்த தளவாட இணைக்கழகம்' (Smaller War Plant Corporation)

ஒன்று அமைக்கப்பட்டது. போர்த்தளவாட வெடி மருந்துகள் பற்றி சிற்றளவுத் தொழில்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள இணைக் கழகத்திற்கு உரிமை கொடுக்கப்பட்டது. 'சிற்றளவு வணிகச் சட்டம்' (Small-Business Act) ஒன்றும் இதற்காக நிறை வேற்றப்பட்டது. இச்சட்டத்தினாலும், நிறுவப்பட்ட 'சிறிய யுத்த தளவாட இணைக் கழகத்தின்' முயற்சிகளாலும் பற்பல சிறு நிறு வனங்களின் உற்பத்தி கொள்ளளவு பயன்படுத்தப்பட்டு, யுத்தக் கருவிகள் உற்பத்தியும் பல்கிப் பெருகியது. இத்தகைய உற்பத்திப் பெருக்கத்திற்காக ஊக்கச் சலுகைகளும் தாராளமாக வழங்கப் பட்டன.

இங்கிலாந்திலும் இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. தனிப்பட்ட சிறிய நிறுவனங்கள் யுத்தத்திற்கான பொருள்களை உற்பத்தி செய்வதில் உதவிடும் பொருட்டு 70 அதிகாரிகளை அரசு நியமித்தது. இந்த நடவடிக்கை மூலம், எல்லா வகைச் சிறு நிறுவனங்களையும் யுத்தத்தின் உடனடித் தேவைகளை ஈடுகட்டிட முயலும்படி தூண்டப்பட்டது. இரண்டாம் உலக யுத்தத்தின் பிற்பகுதியில் இம்முயற்சிகளின் பலன்கள் தெளிவாகக் கிடடின. எனவே, இந்தியாவிலும் இதே போன்ற முயற்சிகளையும் நடவடிக்கைகளையும் மேற் கொள்ள வேண்டும்.

முதலில் பாதுகாப்புத்துறைக்குத் தேவைப்படும் பொருள்களைப் பல இனங்களாகப் பகுக்க வேண்டும். அதன் பின்னர், எந்தெந்த இனத்தின் பொருள்கள் தேவைப்படுமோ, அவ்வகைப் பொருள் களை குறிப்பிட்ட சிற்றளவுத் தொழில் நிறுவனங்களிடம் பெற வேண்டும். சான்றாக இராணுவச் சீருடைகள், தண்ணீர்க்குப்பி கள் அல்லது புட்டிகள் போன்ற பொருள்கள் இராணுவத்துறைக்கு தேவையென்று கொள்ளலாம். அவ்வாறெனில், அப்பொருள்களைத் தயாரிக்கும் துணி மற்றும் உடை தயாரிக்கும் நிறுவனங்கள், கண்ணாடிப் பொருள்கள் உற்பத்தித் தொழிற் சாலைகள் ஆகிய வற்றிடம் அப்பொருள்களுக்கான ஆணைகளை வழங்கலாம். ஆனால் வேறு சில இராணுவப் பொருள்களும் இருக்கின்றன. யுத்த காலத்தில் பயன்படுத்தப்படும் குண்டுகளை சாதாரண படைத்துறை சாரா நிறுவனங்கள் (Civilian units) தயாரிக்க இயலாது. எனவே இந்த இரண்டாம் இனத்தினைச் சார்ந்த பொருள்களுக்கு சிறு தொழில்களை நம்பியிருத்தல் கூடாது. இவ்விரு பகுப்புகளிலும் அடங்காத சில இராணுவத் தளவாட இனங்கள் இருக்கக் கூடும். அவற்றை தயாரிக்க, யுத்த தளவாடத் தொழிற் சாலைகளைத் தொடங்கலாம்.

நமது தற்சமய இராணுவத் தேவைப் பொருள்கள் பலவற்றை, "பொதுப் பொறியியல் நிறுவனங்கள்' என்று பகுக்கப்பட்ட பேரளவு அல்லது சிற்றளவு நிறுவனங்கள் மூலமே பெற்றுக் கொள்கின்றனர். ஆயினும் படைத்துறை சாரா நிறுவனங்கள் தமது இயந்திரத் தொகுப்புகளை தக்கவாறு மாற்றி அமைத்து, சிறப்புப் பொறி இயந்திரங்களைப் பொருத்தி, இராணுவத்துறைப் பொருள்களை உற்பத்தி செய்ய முயல வேண்டும்.

பாதுகாப்புத் துறைக்கான பொருள்களை இரு முறைகளில் உற்பத்தி செய்திட ஊக்குவிக்கலாம். முழுப் பொருளையும் உற்பத்தி செய்ய ஒரு நிறுவனத்திற்கு வாய்ப்பு அளிக்கலாம். முழுப்பொருளை யும் ஒரே நிறுவனமே உற்பத்தி செய்ய வல்ல ஆற்றலைப் பெற் றிருக்க வில்லையெனில்—அதாவது மிகச் சிறிய தொழில் நிறுவனங் களாக இருக்குமானல் – பொருளின் உற்பத்தியைப் பல பாகங்க ளாகப் பிரித்து பல நிறுவனங்களுக்குக் கொடுத்துவிடலாம். பல நிறுவனங்களில உற்பத்தி செய்யப்பட்ட உதிரி பாகங்களை ஒருங் கிணைக்கும் பொறுப்பை வேறு சில நிறுவனங்கட்கு அளிக்கலாம்.

(vii) சமமான வட்டார வளர்ச்சி

ஒருநாட்டில் எல்லா மாநில வட்டாரங்களும் சமமாக, வேகமாக முன்னேற முடியும் என்று பொருளாதார ரீதியாகக் கூற இயலாது. சில மாநிலங்கள் தீவிரமான முன்னேற்றங் கண்டிருக்க லாம். வேறு சில சராசரி வளர்ச்சி வீதத்தை விட பின் தங்கிய நிலையிலும் இருக்கலாம். ஆனல் இத்தகைய போக்கினை நீக்க வேண்டும்; அல்லது குறைந்த பட்சம் அவ்வேறுபாடுகளின் வீதங் களைக் குறைக்க வேண்டும். நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் இதனைத் தெளிவாக உணர்ந்துள்ளது. எனவேதான் 'புதிய ஆலை களைத் தொடங்குவதில் முதலீடு செய்பவர்கள், ஏற்கெனவே முன்னேறிவிட்ட பகுதிகளையே நாடிச் செல்கின்றனர். ஏனெனில் அப்பகுதிகள் அவர்களுக்கு வேண்டிய தொழில் வசதிகளைக்கொடுக் கின்றன. இப்போக்கைத் தடுத்திட தீவிரமான முயற்சிகளைச் செய்யவேண்டும் :

ஒரு வட்டாரமானது பின் தங்கிய வளர்ச்சி பெருத வட்டாரம் தானு என்பதைக் கண்டறிய 1968-ல் திட்டக் குழுவால் அமைக் கப்பட்ட பாண்டே குழுவானது (Ponde Panel) கீழ்க்கண்ட வரம்பு களை நிர்ணயித்தது:

(i) தலா வருமானம்

(ii) தொழில் மற்றும் சுரங்கத் துறையில் தலாவருமானம்

(iii) பதிவு செய்துகொண்ட ஆலைகளில் பணியாற்றும் தொழிலாளிகளின் எண்ணிக்கை.

(iv) மின்சக்தி அளிப்பு

(v) சாலை அமைப்பு நீளம்

(vi) இருப்புப்பாதை நீளம்

பின் தங்கிய மாநிலங்களை வரையறைசெய்ய 1968-ல் தேசிய வளர்ச்சிக் குழுவினால் அமைக்கப்பட்ட வாஞ்சூ குழுவும் (Wanchoo Committe) இதே காரணிகளைத்தாம் கருத்திற் கொண்டது மேற்கண்ட காரணிகளில் முதலாவதாகிய தலா வருமானத்தை எடுத்துக் கொள்ளலாம். 1964-65-ஆம் ஆண்டில் மாநிலங்களின் தலா வருமானத்தைக் கீழ்கண்ட அட்டவணையில் காண்போம்.

தலாவருமானம் (1964 - 1965)

| மாநிலம் | தலா வருமானம் ரு. |
|---|---|
| பஞ்சாப் | 619 |
| மகாராஷ்டிரம் | 529 |
| குஜராத் | 523 |
| ஹரியானு | 513 |
| மேற்கு வங்காளம் | 495 |
| ஆந்திரப் பிரதேசம் | 458 |
| மைசூர் | 441 |
| தமிழ் நாடு | 436 |
| அஸ்ஸாம் | 394 |
| கேரளா | 391 |
| மத்தியப் பிரதேசம் | 378 |
| உத்திரப் பிரதேசம் | 374 |
| ஒரிஸ்ஸா | 368 |
| ராஜஸ்தான் | 365 |
| பீஹார் | 292 |
| நாட்டின் சராசரி | 436 |

இரண்டாவது காரணியைக் கருத்தில்கொண்டு ஆராய்ந்தால், தொழில்துறையில் வளர்ச்சி பெற்ற பகுதிகளில், தொழில் மற்றும் சுரங்கத் தொழிலாளிகளின் தலா வருமானம் 1950-ல் ரூ. 840 எனவும் கிராமப்புற வேளாண்மைத் தொழிலாளியின் தலா வருமானமானது ரூ. 200 எனவும் அமைந்திருந்தது.

தொழில் துறையில் முன்னேறிய பகுதிகளாகிய பம்பாய், கல்கத்தா பகுதிகளில் தொழில்கள் மேலும். மேலும் செறிந்து வளரலாயின. சான்றாக 1951-ல் மொத்தம் பதிவு செய்து கொண்ட ஆலைகளில் 42 சதவீதமானது மேற்கூறிய இரு பகுதிகளில் மட்டுமே செயல்பட்டன. அவற்றில் மொத்தம் செலுத்திய மூலதனம் அனைத்து ஆலைத் தொழில்களின் மொத்தம் செலுத்திய மூலதனத்தின் 67 சதவீதமாக விளங்கியது. மொத்த ஆலைத் தொழில்களில் 63 சதவீதம் அங்கிருந்தன.

மேற்கூறிய விவரங்களைக் கொண்டு ஆராயும்பொழுது அஸ்ஸாம், பீஹார், மத்தியப்பிரதேசம், உத்தரபிரதேசம், ராஜஸ்தான், ஒரிஸ்ஸா போன்ற மாநிலங்கள் வளர்ச்சி குறைந்த மாநிலங்களாகக் கருதப்படுகின்றன. இத்தகையதோர் சூழ்நிலையில் பேரளவுத் தொழில்களில் முதலீடு செய்து அவ்வகைத் தொழில்களை பின் தங்கிய மாநிலங்களில் தொடங்குவதின் மூலம், சமமான வட்டார வளர்ச்சியை ஏற்படுத்த இயலுமா? இதற்கு விடை எதிர்மறைதான். சான்றாக, மத்திய அரசானது பேரளவுத் தொழில் திட்டங்களில் முதலீடு செய்த விவரங்கள் கீழே காணப்படுகின்றன.

பேரளவுத் தொழில்களில் முதலீடு

| மாநிலம் | முதலீடு செய்த ரூபாய கோடியில் |
|---|---|
| மத்தியப் பிரதேசம் | 459 |
| ஒரிஸ்ஸா | 418 |
| மேற்கு வங்காளம் | 408 |
| பீஹார் | 356 |
| உத்திரப் பிரதேசம் | 143 |

மேற்கூறிய மாநிலங்களில், மேற்கு வங்காளம் தவிர இதர மாநிலங்கள் இன்னும் பின் தங்கிய நிலையில்தாம் உள்ளன. எனவே, பேரளவுத் தொழில்களில் முதலீடு செய்வதால் ஒரு சிறு பகுதி

மட்டுமே வளர்ச்சியடையுமேயன்றி, அந்த வட்டாரம் முழுதுமே வளர்ச்சியுறும் என்று கூற முடியாது எனவே இந்த நிலையில், சமமான வட்டார வளர்ச்சி பெற்றிட, சிற்றளவுத் தொழில்களை விட்டால் வேறு கதியேதும் இல்லை என்பதை உணரலாம்.

எனவே திரு. கே. எல். நஞ்சப்பா கூறியபடி, வட்டார கச்சாப் பொருள்களையும், தொழில் திறமைகளையும் பயன்படுத்தி நவீன சிறு தொழில்களைப் பரவச் செய்வதன் மூலமே கிராமங்களை வளர்ச்சி யுறச் செய்யலாம்.[1] அதுபோலவே வட்டாரங்களின் சமமான வளர்ச்சிக்கும் உதவலாம்.

முதல் தீவிரப்படுத்தப்பட்ட நவீன பேரளவுத் தொழில்களுக் கும் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட மரபுத்தொழில்களுக்கு மிடையே ஒரு பொன்னுன வழியுண்டு அதுதான் நவீன தொழில் நுட்ப முறைகளை மேற்கொண்ட பொருளாதார உற்பத்தி, வேலை வாய்ப்புக்கள் தரவல்ல சிற்றளவுத் தொழில்களைப் பரவலாக வளர்ச்சியடையச் செய்வது. இதன் பொருட்டு அரசு ஆற்ற வேண்டியதெல்லாம் உள்ளமைப்பு வசதிகளையும், நிதிவசதி நிறுவனங்களையும் அளிப்பதுதான்.

இந்தக் காரணங்களை உணர்ந்தே அரசானது 1955 முதல் தேசிய அளவில் சிறு தொழில்கள் வளர்ச்சிக்காக பற்பல வசதி களைத் செய்து தருகிறது. நாட்டின் பல பகுதிகளில் தொழிற் பேட்டைகள் தொடங்கப்பட்டதன் நோக்கமும் அதுவேதான். அமைக்கப்பட்டுள்ள 493 தொழிற்பேட்டைகளில், நகர்ப்புறங் களில் 177ம் நகர்ப்புற மொத்த கிராமப்புறங்களில் (Semi Urban) அதாவது 5,000க்கு மேல் 50.000 வரை மக்கள்தொகை கொண்ட பகுதிகளில் - 184ம், கிராமப்புறங்களில் – அதாவது 5000க்கு குறைவான மக்கள் தொகை கொண்டபகுதிகளில் – 132ம் பரவலாக அமைக்கப்பட்டன. இந்த 493 பேட்டைகளில் உற்பத்தி தொடங்கிய பேட்டைகள் எண்ணிக்கை 248 ஆகும். இதனுள் 109 நகர்புறங்களிலும். 86 நகர்ப்புற மொத்தக் கிராமப் புறங்களிலும், 53 கிராமப்புறங்களிலும் தொடங்கப்பட்டன. 1969ம் ஆண்டில் தொடங்கப்பட்டன. 1969-ம் ஆண்டில் தொழிற் பேட்டைகள் பற்றிய குறிப்புக்கள் வருமாறு:

1. K. L. Nanjappa—'Prospects for Rural Industrialization' essay - Khadi Gramodyog' Journal Annual Number, Oct 1971.

தொழிற்பேட்டைகள் — ஒரு கண்ணோட்டம் மே - 1969

| | |
|---|---|
| தொடங்கப்பட்ட பேட்டைகள் | ... 493 |
| நிறைவுற்ற பேட்டைகள் | ... 311 |
| செயல்படும் பேட்டைகள் | ... 248 |
| (i) பேரளவுப் பேட்டைகள் (30 ஏக்கர்களுக்கு மேற்பட்டது) | ... 80 |
| (ii) நடுத்தரம் (10 முதல் 30 ஏக்கர் வரை) | ... 112 |
| (iii) சிறிய பேட்டைகள் (10 ஏக்கருக்கு குறைவானது) | ... 52 |
| (iv) பணிக்கூடாரங்கள் கொண்ட பேட்டைகள் (2 ஏக்கருக்குக் கீழே) | ... 4 |
| சராசரி ஆண்டு உற்பத்தி | .. ரூ. 900 மில்லியன் |
| அரசு முதலீடு | ... ரூ. 415 மில்லியன் |
| மொத்த வேலை வாய்ப்பு | ... 70,000 |

**Source: 'Yojana' dated 4th May 1969, pp. 26–27.**

எனவே சிற்றளவுத் தொழில்களைப் பரவலாக வளமுறச் செய்வதன் மூலமே சமமான வட்டார வளர்ச்சி ஏற்ற முற இயலும். பெரு நகரங்களின் நெரிசல்களையும், சுகாதாரக் கேடுகளையும் விலக்க முடியும்; வேலை வாய்ப்புக்களைப் பெருக்க முடியும்.

**(viii) சிறு தொழில்களின் நவீன நிர்வாக முறையின் பங்கு**

சிறு தொழில்களை முறைப்படி நிர்வாகம் செய்வது பற்றியும், அதன் முக்கியத்துவம் பற்றியும் இந்தியச் சிறு தொழில் அதிபர்கள் அதிகக் கவனம் செலுத்தவில்லை. பயிற்சி பெற்ற மேலாளர்களை வேலைக்கு அமர்த்தாமல், சிறு தொழில் அதிபர்களே நேரடியாக நிர்வாகம் செய்கின்றனர். ஆயினும் முறைப்படி அமைந்த நவீன வகை நிர்வாகமானது உற்பத்திப் பெருக்கத்திற்கு உதவும் என்பது இன்று உணரப்பட்டு வருகிறது. தேசிய உற்பத்தி பெருக்கக் குழுவும், சிறு தொழில் பணி நிறுவனங்கள் போன்ற அமைப்புக்கள் சிறு தொழில்களின் நிர்வாகப் பயிற்சித் திட்டங்களுக்கான நடவடிக்கைகளை மேற் கொண்டன. எனவே, கடந்த சில ஆண்டு

களாக, 'சிற்றளவுத் தொழில்கள் வளர்ச்சி அமைப்பு' ஹைதராபாத்திலுள்ள சிறு தொழில் விரிவாக்கப் பயிற்சி நிறுவனமும் (Small Industry Extension Institute) பயிற்சி வசதிகளை அளிக்கின்றன.

சிற்றளவுத் தொழில்கள் வளர்ச்சி அமைப்பைச் சார்ந்த 22 அதிகாரிகள், தொழில்கள் மற்றும் வட்டார வளர்ச்சி பற்றிய பயிற்சியினை ஹைதராபாத் 'சிறு தொழில் விரிவாக்கப் பயிற்சி' நிறுவனத்தில் பெற்றனர். தவிர சிறு தொழில்கள் பணி நிறுவனங்கள், நிதி உற்பத்தி, சந்தை, ஏற்றுமதிப் பெருக்கம் போன்ற துறைகளின் நிர்வாகம் பற்றி சிறு தொழில் தொடர்புடையோருக்கு பயிற்சி அளித்து வருகின்றன. ஏறத்தாழ 3500, சிறு தொழில் முயல்வோர்களும், அவர் தம் நிறுவனங்களின் நிர்வாகிகளும் பயிற்சிகளைப் பெற்றுள்ளனர். சிறு தொழில்களைத் திட்டமிடல், அமைத்தல் போன்ற பல துறைகளில் 384 தொழில் நுட்பப்பயிற்சிகள் நடத்தப் பட்டு, 3382 நபர்கள் சான்றிதழ்கள் பெற்றுள்ளனர். இந்தகைய பயிற்சிகளை மென்மேலும் விரிவாக்குவதன் மூலம் பல சிறு தொழில்கள் சீரமைப்புச் செய்யப்பட்டு நவீன மயமாக்கப்படலாம். இதனால் சிறு தொழில்களின் எதிர்கால வளர்ச்சி வீதம் சிறப்பாக அமையும்.

**(ix) பல்வேறு உற்பத்தித் துறைகளில் சிறு தொழில்களின் பங்கு:**

சிற்றளவுத் தொழில்கள் மக்களுக்குத் தேவையான நுகர்வுப் பொருள்களை மட்டுமின்றி உற்பத்தியாளர் பொருள்களையும் தயாரிப்பதில் அதிக ஈடுபாடு கொண்டுள்ளன. உணவுப் பொருள்களை மாவாக அரைத்தல், பருத்தி அரைத்தல், கைத்தறி நெசவு, உலோகப் பொருள்கள் தயாரித்தல் போன்ற நுகர்வுப் பொருள் சார்ந்த துறையில் ஆற்றி வரும் பணிகளும், வளர்ச்சியும் அதிகம். உலோகப் பொருள்கள் மொத்தத் தயாரிப்பில் 60 சதவீதம் வரை சிறு தொழில்கள் மூலமே நடைபெறுகின்றன. மின்சார சார்பற்ற பொறிகளின் (Non-electrical machinery) உற்பத்தியில் 46 சதவீதம் சிறு தொழில்களின் பங்காகும். அதே போன்று இரும்பு, எஃகு போன்ற ஆதாரத் தொழில்களிலும், இரும்பு சார்பற்ற உலோகப் பொருள்கள் உற்பத்தியிலும் மின்சார சாதனங்கள் சிற்றளவுத் தொழில்கள் கணிசமான பங்கு பணி ஆற்றுகின்றன. தோல் பதனிடல், கார்க் (cork) பொருள்கள், கல், களிமண் (clay) பொருள்கள், சிமெண்ட், கண்ணாடிப் பொருள்கள் ஆகிய பல வகைப் பொருள்களின் மொத்த உற்பத்தியில் 59 சதவீதம் முதல் 89 சதவீதம் வரை சிற்றளவுத் தொழில்களே உற்பத்தி செய்கின்றன. மற்றும் இரசாயனப் பொருள்கள், இரப்பர் பொருள்கள் மோட்டார் வாகன துணை உறுப்புகள், அச்சிடும் மை ஆகிய

பொருள்கள் உற்பத்தியிலும் நிறைந்த அளவு சதவீதம் உற்பத்தி செய்து கணக்கற்ற மக்களுக்கு வேலை வாய்ப்பளிக்கின்றன. மாநில மத்திய அரசுகள் தக்க கவனம் செலுத்தினால், இத்துறை இன்னும் நல்ல முறையில் வளர்ச்சியடையும்.

**சிறு தொழில்களின் எதிர்காலப் பணி அல்லது எதிர்கால வாய்ப்புக்கள்:**

சிறு தொழில்கள் குறிப்பிட்ட எந்த ஒரு துறையில் வெற்றி பெற வாய்ப்புகள் உள்ளன என்பது பற்றிக் குறிப்பிடுவது சற்று சிக்கலானது ஆயினும் சில பொருளாதார தொழில் நுணுக்க அடிப்படைகளை ஆதாரமாகக் கொண்டு, சிற்றளவுத் தொழில் எந்தெந்தத் துறைகளில் வளர்ச்சி அடையலாம் அல்லது வளர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புகள் பெற்றுள்ளன என்று கூற இயலும். அத்தகைய துறைகள் சில கீழே தொகுக்கப்பட்டுக் குறிப்பிடப் பட்டுள்ளன.

(1) இணைப்பு அல்லது தொகுப்பு (assembling), கலவை (mixing) போன்ற துறைத் தொழில்களில் சிறு தொழில்கள் நற்பணி ஆற்றக் கூடும். காலணிகள் தயாரித்தல், துணி நெய்தல், கூடாரத் துணிகள் தயாரித்தல், பனியன் போன்ற உள்ளுடைகள் தயாரித்தல், பின்னல் வேலைகள் போன்றவற்றல் தொழிலாளியின் கைகளுக்குத் தான் அதிக வேலை. எனவே அத்துறைகளில் சிறு தொழில்கள் நற்பணி ஆற்றக் கூடும். கலவை மற்றும் கூட்டுப் பொருள் உற்பத்தியாகிய இரசாயனக் கலப்புக்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள், மருத்துவப் பொருள்கள் போன்றவற்றிலும் சிறு தொழில்கள் வளம் பெறக்கூடும்.

பள்ளிகள் மற்றும் இதர நிறுவனங்களுக்கான சீருடைகள் தோல் பொருள்கள், அச்சிடும் மை, தொழிலக திரவங்கள், பிளாஸ்டிக் பொருள்கள் போன்ற பொருள்களின் உற்பத்தியிலும், நீடித்த உறுதிமிகு பொருள்களான வானொலிப் பெட்டி, சைக்கிள் கள், இயந்திரங்கள் போன்றவைகளை அந்தந்தப் பொருள்களின் துணை உறுப்புக்களைப் பேரளவு நிறுவனங்களிடமிருந்து தருவித்து, அவற்றை இணைப்பு அல்லது தொகுப்புப் பணியின் கீழ் முழுப் பொருளாக இணைத்தல் மிக்க தொழில்களில், சிறு தொழில்கள் ஆற்ற வல்ல பணிகள் அதிகம். எனவே, மேற்கூறிய துறைகளில் சிறு தொழில்கள் நல்ல வளர்ச்சி பெற இயலும்.

(2) பேரளவுத்தொழில்களுக்குத் தேவையான துணை உறுப்புக் களைத் தயாரிக்க வல்ல உற்பத்தித் தொழில்கள் அல்லது படி முறைத் தொழில்கள். பேரளவுத் தொழில்கள், தங்களுக்குத்

தேவையான துணை உறுப்புக்களைத் தாங்களே தயாரித்துக்கொள்ள இயலாது. எனவே அவ்வகைப் பொருள்களின் ஆக்கத்தில் சிறு தொழில்கள் அதிகம் ஈடுபடலாம். சான்றாக பஞ்சாலை இயந்திரங்களுக்குத் தேவையான துணை உறுப்புக்கள், மோட்டார் வாகனங்கள், சைக்கிள்கள் போன்றவற்றிற்குத் தேவைப்படும் துணை உறுப்புக்களை சிறு தொழில்கள் உற்பத்தி செய்யலாம். இத்துறையில் இன்னும் அதிகக் கவனம் செலுத்தலாம். அதுபோலவே படிமுறைத் தொழில்களாகிய பருத்தி அரைத்தல், விதை நீக்கல், பருத்தியைத் தூய்மை செய்து இறுக்குதல், தாவரப் பொருள்களிலிருந்து எண்ணெய் தயாரித்தல் போன்ற துறைகளிலும் சிறு தொழில்கள் வளம் பெற வாய்ப்புகள் அதிகம் உள்ளது மேலும் சிலவகை இடைப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்வதிலும் ஈடுபடலாம். குறிப்பாக மருந்துப் பொருள்கள், சாயப் பொருள்களுக்குத் தேவையான இரசாயனப் பொருள்களைத் தயாரிக்கலாம். இவ்வகைப் பொருள்களையெல்லாம் பேரளவுத் தொழில்கள் அதிகம் நம்பியுள்ளபடியால், இவற்றை உற்பத்தி செய்ய சிறு தொழில்கள் முன் வரலாம். இத்தகைய உற்பத்தித் துறைகளைத் தவிர வேறு சில பணிகளிலும் சிறுதொழில்கள் ஈடுபடலாம். மெருகிடுதல் (Enamelling,) முலாம் பூசுதல் (Plating), பளபளப்பாக்குதல் (Polishing), மின் ஆற்றலுண்டாக்கல் (Galvanizing), கனரக வார்னீஷ் பூசுதல் (Lacquering) என்பன போன்ற பணி சார்ந்த துறைகள் சிறு தொழில்கள் ஈடுபட மிகவும் சாலப் பொருத்தமானவையாகும். ஏனெனில் ஜப்பானில் இவ்வகைப் பணிகளில் சிறு தொழில்களே அதிகம் ஈடுபட்டுள்ளன. 1958ஆம் ஆண்டுக் கணக்குப்படி, 10 முதல் 49 வரை தொழிலாளர்கள் கொண்ட நிறுவனங்கள் நாட்டின் மின் முலாம் பூசும் தொழிலில் 62 சதவீதத்தையும், உலோக மேற்பூச்சுத் தொழிலில் (Coating) 68 சதவீதத்தையும், மின் ஆற்றலாக்கும் தொழிலில் 30 சதவீதத்தையும் பெற்றிருந்தன. இத்தகைய தொழில்களை புறக்கணியாமல், இந்தியச் சிறு தொழில்கள் அதிகம் ஈடுபடுமேயானால் நல்ல வாய்ப்புகள் கிட்டும்.

(3) நேரடி நுகர்விற்குப் பயன்படும் பொருள்களையும் தொழில் துறைக்குப் பயன்படும் இறக்குமதி இனம் சார்ந்த சிற்றளவுப் பொருள்களைத் தயாரிப்பதிலும் அதிகக் கவனம் செலுத்தலாம். கம்பளி உடைகள், மருந்துப் பொருள்கள் உற்பத்தி, புகைப்படத் தொழிலுக்குத் தேவையான இரசாயனக் கலவைகள் மற்றும் கருவிகள், தொழில் துறையில் பயன்படும் பொருள்களைக் கடத்தும் கருவிகள், இயந்திரக் கலப்பைகள் போன்ற நில ஊர்திப் பொறிகளுக்கான உறுப்புக்களையும் சிறு தொழில்கள் அதிகமாகத் தயாரிக்கலாம். இதன் மூலமாக நாம் இறக்குமதிப் பதிலீட்டு

(Import Substitutes) உற்பத்தியை பெருக்க முடியும். அதன் வழியாக இன்னல்கள் பலவுற்று சம்பாதித்த அந்நியச் செலாவணியை மிச்சம் செய்து வேறு வகையான பொருளாதாரத் திட்டங்களுக்குப் பயன்படுத்தலாம்.

(4) எடைமிகு பொருள்களையும் (weight-gaining products) இடமடைக்கும் பொருள்களையும் (Bulk-gaining products) சிற்றளவுத் தொழில்கள் உற்பத்தி செய்ய முனைந்தால் நல்ல பலன் பெற வாய்ப்புண்டு. செங்கல்கள், ஓடுகள், கான்கிரீட் அட்டைகள் அல்லது கல்நார் அட்டைகள் போன்ற எடைமிகு பொருள்களையும் கலப்பைகள் இதர உழுகலன்கள், உழுத நிலத்தில் பரம்படிக்கும் கருவிகள் (Harrows), உலோகத்தாலான வாளிகள் (Buckets), தகரப் பெட்டிகள், உலோக மற்றும் மரத்தாலான தட்டுமுட்டுச் சாமான்கள் போன்ற இடமடைக்கும் பொருள்களையும், போக்குவரத்துச் செய்வதில் சிக்கல் உண்டு. மேலும் அவ்வகைப் பொருள்கள் சிறு தொழில்கள் மூலமே நடத்தப்படுகின்றன. போக்குவரத்து வசதிகள் பெருக்கம், வேளாண்மையை நவீன மயமாக்கல், கட்டுமானத் தொழில்களின் பெருக்கம், வட்டாரங்களின் வளர்ச்சி போன்றவை, ஐந்தாண்டுத் திட்ட நடவடிக்கைகளால் பெருகி வருவதால், சிறு தொழில்கள் அத்தேவைப் பெருக்கத்தை ஈடுகட்ட வேண்டும். இதன் பொருட்டு, முதலில் கூறப்பட்ட பொருட்களை உற்பத்தி பண்ணவல்ல இயந்திரத் தொகுப்புகளை விரிவாக்க வேண்டும்.

(5) எடை இழக்கவல்ல அல்லது பெரிய வடிவத்தை இழக்கவல்ல மூலப் பொருள்களின் படிமுறைத் தொழில்கள் பல உள்ளன. இவைகளை மூல வளங்கள் ஒழுங்கமைந்த தொழில்கள் (Resource-Oriented Industries) என்பர். சான்றாக நெல் திரித்தல், உணவுப் பொருள்களை அரைத்தல், பருப்பு மற்றும் எண்ணெய் தயாரிப்பு ஆலைகள், மர அறுவை ஆலை (Saw mills), தோல் பதனிடல் போன்ற கணக்கற்ற தொழில்கள் நாம் கண்ட மூல வளங்கள் ஒழுங்கமைந்த தொழில்களுக்குச் சான்றுகளாகும். இத்துறையில் இன்றும் வளர்ச்சி பெறுவதற்கு வாய்ப்புகள் உள்ளன.

(6) கை வேலைத் திறமை மிக்க மரபு வழிப் பொருள்களைத் தயாரிப்பதிலும் சிறு தொழில்கள் ஈடுபடலாம். எடுத்துக் காட்டாக தந்தத்தில் வேலைப்பாடு மிக்க கைவினைப் பொருள்கள் தயாரித்தல், மருத்துவமனைகளுக்கான வெப்பமானிகள் (Thermometers) தயாரித்தல் என்பன போன்ற துறைகளில் சிறு தொழில்கள் அதிகம் ஈடுபடலாம்.

'வறுமை ஒழிப்பு' என்ற கொள்கை தீவிரப்படுத்தப்பட்டுவரும் இந்நாட்களில், நாட்டின் வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்த்திட அல்லது குறைத்திட கிராமங்களிலிருந்து வெளியேறும் மக்கட்கு வேலையளித்திட, பொதுவாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திட சிறு தொழில்கள் வரும் காலங்களில் தீவிரப் பணியாற்ற நேரிடும். அப்பொறுப்புக்களை சிறுதொழில் முயல்வோர் கருத்திற் கொண்டால் இந்தியாவும் விரைவில் பொருளாதார வளத்தில் ஒரு ஜப்பானாக மாற முடியும். இவ்வளர்ச்சிக்கு ஊன்றுகோலாக, கொழு கொம்பாக இருக்கத் தக்க வகையில் அரசின் கொள்கைகளும், நடவடிக்கைகளும், அமைதல் அவசியமாகிறது. தொழில் நுட்ப வணிகத் தகவல்களை அளித்தல், புதிய பொருள்கள் உற்பத்தி பற்றி தகவல் அளித்தல் உள்ளமைப்பு வசதிகளைப் பெருக்கல், தொடர்பற்று விளங்கும் காரணிகளில் நெருக்கத்தையும், ஒருங்கிணைப்பையும், உருவாக்கல் என்பன போன்ற பணிகளில் ஈடுபட வேண்டும். வளமான சிறு தொழில்களின் வளர்ச்சியில்தான் இந்தியப் பொருளாதார வளர்ச்சி உள்ளது என்பதையும் நன்கு உணரவேண்டும்.

இணைப்பு

## RESERVED INDUSTRIES

### (ஒதுக்கப்பட்ட தொழில்கள்)

**Industries reserved exclusively for development in the small-scale sectors are :—**

(1) Absorbent cotton (2) Automobile radiators (except for expansion on merits) (3) Barbed wire (4) Beam scale (5) Bichromates (except for exports) (6) Bolts and nuts (except for high tensile and other special types) (7) Conduit pipes-metalic (8) Domestic electrical appliances and accessories such as electric irons, roasters, heaters, washing machines etc., other than vaccum cleaners, industrial washing and dry-cleaning machines etc. (9) Dyes — (i) Azodynes (directs and acids) and (ii) Basic dyes (10) (a) Electrical wiring accessories; (b) Electrical light fittings such as chokes, starters, reflectors etc. (11) Expanded metal (12) Fireworks (13) Formulated perfumery compounds (14) Full PVC foot wear (chappals, sandals and shoes) except for export by pre-

dominantly export-oriented units (15) Glass hollow ware by semi automatic process (16) Gun metal bushes (17) Hand numbering machines (18) Hand stapling machines (19) Hurricane lanterns. (20) Hypodermic needles (21) Insecticide dusters and sprayers (manual) (22) Laundry Soap (23) Leather foot wear (except for expansion of the exciting units for exports and new units for exports) (24) Machine screws (except for socket head and special types) (25) Machine shop vices. (26) Metal clad switches upto 30 amps. (27) Miniature bulbs. (a) Miniature vacuum bulbs. (b) Torch bulbs (c) Radio panel bulbs (d) Cycle-dynamo bulbs and (e) Decoration bulbs (28) Paints and Varnishes — Dry distemper, red lead, red-oxide, aluminium paints, wagon blacks, graphite paint, all paste paint. (29) Palm rosa oil (30) Paper conversion products. (31) Pine oil (except for composite schemes) (32) Plaster boards (33) Plastic processed products (i) Bottle caps, buttons, lamp shade etc. produced by the fabrication technique, excluding the technique of vacuum forming; (ii) Polythelene films (Films with a thickness of less than 0.10 m.m). and products from the film such as coloured printed film and bags (iii) Blow-moulded containers and other similar products manufactured by the blow — moulding technique (except for captive use, PVC containers and change over by existing units manufacturing metal containers to plastic containers), (iv) spectacle frames from sheets by fabrication technique or by injection moulding; (v) manufacture of polyester sheets for buttons and the processing of the sheets so produced to manufacture buttons. (34) Rivets of all types (including bifurcated). (35) Rolling shutters. (36) Roofing, flooring and glazed tiles (except plastic and ceramic tiles of sizes 4"×4" and above.) (37) Safety matches. (38) Steel wool. (39) Students microscopes (40) Surgical gloves (except plastic) (41) Telescopic aerials (for radio receivers) (42) Thermometres (up to 150° C) (43) Water meters (44) Welded wire mesh (45) Wire brushes and fibre brushes (46) Wire products (47) Wood screws (48) Steel furniture (49) Cycle tyres and tubes (50) Mechanical toys (51) Aluminium utensils (52) Fountain pens and ball point bens (53) Electric horn (54) Hydraulic jacks below 30 tonnes capacity (55) Tooth paste (56) Pressure die castings (57) Drums and barrels (58) Tin containers

(59) Flash light torch cases (60) Truck body building (61) Battery cell tester (62) Pressure gauges (63) Low tension insulators (64) A A and ACSR canductors (65) Electric transmission line hardware. (66) Grease nipples and grease guns (67) Exhaust mufflers (68) Zinc oxide. (69) Auto springs (70) Chaff cutter blades (71) PVC and VIR wires of domestic type (72) Metal fittings for garments and leather goods (73) Weights (74) Sodinm sylicate (75) Domestic utensils (76) Steel measuring tapes (77) Cashew shell oil (78) Room coolers (desert type) (79) Cotton measuring tapes. (80) Rubberished cloth (81) Household knitting machines (82) Para-Dichloro benzene balls. (83) Potassium sylicates (84) Calcium sylicate (85) Fuel tank caps (86) Fuel lines (87) Wiring harness (88) Tail lamp assembly (89) Sids lamp assembly (90) Stop lamp assembly (91) Horn buttons (92) Bulb horn (93) Seats for buses and trucks (94) Ornamental fittings (95) Rear view mirrors. (96) Sun shades (97) Sun viser (98) Luggage carriers (99) Tyre inslators (100) Ash trays (101) Hub caps (102) Wind shield wipers (103) Electrical fuses. (104) Electrical fuse box (105) Battery cables and fittings (106) Spokes and nipples (107) Steering wheels (108) Spot lamp assembly (109) Armature tester (110) Battery terminal lifters (111) Condensors and resistance testors (112) Fenderspoons and hammers (113) Feeler gauges (114) Flaring tools (115) Gear flushers (116) Puller (117) Screw extractors (118) Spark plug testors and cleaners (119) Toe-in gauges (120) Tyre valve pull out tools (121) Stud removers (122) Tube cutters (123) Flanging tool (124) Valve lifters (125) Valve replacing tools (126) Camber testing equipment (127) Ring expanders (128) Ring compressors.

**Source:-** Eastern Ecomomist, Annual, 1972 p. 1213-1214.

# 8. இந்தியாவில் சில சிறு தொழில்கள்

ஒரு காலத்தில் இந்தியா குடிசைத்தொழில் துறையிலும், சிறு தொழில் துறையிலும் புகழ் பெற்று விளங்கியது. உள்நாட்டு அங்காடிக்கு மட்டுமல்லாது வெளி நாடுகளுக்கும் நம் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. எண்ணற்ற மக்களுக்கு இத் தொழில்கள் வேலை வாய்ப்பினை நல்கின. இவ்வாறு சீரும், சிறப்பும் பெற்று விளங்கிய நமது சிற்றளவுத் தொழில் துறை, ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் முற்றிலும் சிதைந்து நலிந்து விட்டது.

சுதந்திரத்திற்குப் பின் காந்தியடிகள், நேரு போன்ற சில தேசியத் தலைவர்கள் சிறு தொழில் துறையின் இன்றியமையாமை பற்றி வலியுறுத்தினாலும், திட்ட அமைப்பாளர்கள் அதில் மிகவும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. பேரளவுத் தொழில்துறை மட்டுமே நாட்டில் விரைவான பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்தும் என்று அவர்கள் கருதினார்கள்.

ஆனால் அண்மைக் காலத்தில் இந்தியாவில் ஏற்பட்ட தொழில் தேக்கம், வேலையில்லாத் திண்டாட்டம் விலைவாசி உயர்வு போன்ற பிரச்சனைகள் சிறு தொழில் துறையின் முன்னேற்றத்தைப் பற்றி திட்ட அமைப்பாளர்களை மறு பரிசீலனை செய்யும்படி தூண்டியுள்ளன.

இவண் நாம் இந்தியாவில் உள்ள சில முக்கியமான சிறு தொழில்கள் பற்றியும் அவற்றின் பிரச்சினைகள் பற்றியும் ஆராய்வோம்.

**கைத்தறித் தொழில் (Handloom Industry)**

இந்தியாவில் உள்ள முக்கியமான சிறு தொழில்களில் சிலவற்றில் கைத்தறி நெசவுத் தொழிலும் ஒன்றாகும். ஒரு காலத்தில் நன்னம்பிக்கை முனையிலிருந்து, சீனாவரை ஒவ்வொரு ஆணும், பெண்ணும் இந்தியாவில் தயாரான கைத்தறி நெசவுப் பொருள்

களையே அணிந்தனர். ஆனால் அந்த நிலைமை தொடர்ந்து நீடிக்க வில்லை. இத்தொழிலின் உற்பத்திப் பொருள்களுக்கு உள்நாட்டுத் தேவை அதிகரிப்பதற்குக்கூட அரசு பல்வேறு சலுகைகள் தர வேண்டிய நிலை ஏற்பட்டது.

1900-01ல் கைத்தறித் துணி உற்பத்தி 646 மில்லியன் கஜமாகும். நாட்டிலிருந்த நவீன நெசவாலைகள் நமது மொத்தத் தேவையில் 10 சதவீதத் தேவையினைத்தான் பூர்த்தி செய்தன ஆகையால் ஏராளமான அளவில் துணிகள் இறக்குமதி செய்யப் பட்டன. இந்த நூற்றாண்டின் முதல் பதினைந்து ஆண்டுகளில் இத்தொழில் படிப்படியாக வளர்ச்சி பெற்றது.

முதல் உலகப் போரின் போது நூல் இழைகளின் பற்றாக் குறை யால் இத்தொழிலானது சிறிது இன்னலுற்றது. 1922-க்குப் பிறகு ஜப்பானில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட துணிகளும், நவீனப் பஞ்சாலைகளில் தயாரிக்கப்பட்ட துணிகளும், கைத்தறித்துணி களுடன் போட்டியிட்டன. 'பருத்தித் துணி சுங்கவரி வாரியம்,' (Cotton Textile Tariff Board) 1922ல் வெளியிட்ட அறிக்கையில் அச்சமயம் 19,84,950 கைத்தறிகள் இருந்தன எனக் கூறுகின்றது. 1931ல் எடுக்கப்பட்ட கணிப்பு (Census) இத் துறையில் 25,75,000 மக்கள் வேலைவாய்ப்புப் பெற்றனர் எனக் கூறுகின்றது.

1930-33 ஆண்டுக் காலங்களில் ஏற்பட்ட பொருளாதாரத் தேக்கம், இத்துறையைப் பெரிதும் பாதித்தது இத்துறைக்கு நிதி உதவி அளிக்க வேண்டுமென்று 1933ல் தொழில்துறை மாநாடு (Industries Conference) பரிந்துரைத்தது, இதன்படி இந்திய அரசு ஐந்து ஆண்டு காலத்திற்கு ரூ 25 இலட்சம் செலவு செய்தது.

1941 அரசினால் நியமிக்கப்பட்ட 'நிலைமை ஆய்வுக் குழு.' (Fact Finding Committee) கைத்தறி நெசவுத் தொழிலின் நிலை திருப்திகரமாக இல்லை என எடுத்துரைத்தது. அதன் உற்பத்திச் செலவு அதிகமாக உள்ளது; நெசவாளர்களுக்குக் குறைந்த இலாபமே கிடைக்கின்றது என்றும் கூறியது.

இரண்டாம் உலகப்போரின் போது கப்பல் போக்குவரத்து. தடைப்பட்டமையால், இறக்குமதி பாதிக்கப்பட்டது இதனால் கைத்தறித்துணிகளுக்குத் தேவை அதிகரித்தது 1942ல் கூட்டப் பட்ட சிற்றளவுத் தொழில்கள் மாநாட்டில் யுத்தத்திற்கு வேண்டிய பொருள் தேவையில் 25 சதவீதமானது சிற்றளவுத் தொழில்கள் மூலம் பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்று தீர்மானம் நிறை வேறியது.

1951ல் சுமார் 28·7 இலட்சம் கைத்தறிகள் இருந்தன. இதில் 26 இலட்சம் கைத்தறிகள் பருத்தி கைத்தறி நெசவுத் தொழிலிலும், 2 இலட்சம் கைத்தறிகள் பட்டு நெசவுத் தொழிலிலும், ஏறத்தாழ எழுபதாயிரத்திலிருந்து எண்பதாயிரம் கைத்தறிகள் கம்பளித் தொழிலிலும் ஈடுபட்டிருந்தன. அவ்வேளையிலும் தமிழ் நாட்டில் தான் அதிக கைத்தறிகள் இருந்தன. இதற்கடுத்த படியாக ஆந்திர மாநிலத்தில் இருந்தன.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கைத்தறித் தொழில் முன்னேற்றத்திற்குத் தனிக் கவனம் செலுத்தப்பட்டது. இத் துறையின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு, 1952ல் அகில இந்திய கைத்தறி வாரியம், (All India Handloon Board) அமைக்கப் பட்டது. முதல் ஐந்தாண்டு திட்டக் காலத்தில், கைத்தறித் தொழில் துறை வளர்ச்சியின் பொருட்டு ரூ 12 கோடி செலவிடப் பட்டது. இத்தொகையைப் பெறுவதற்கு பஞ்சாலைகளின் மேல் தனியாக வரி ஒன்று விதிக்கப் பட்டது. இவ்வரி ரூ 11 கோடி அளித்தது.

1950ல் வெளியிடப்பட்ட அறிவிப்பு ஒன்று வேட்டிகள், சேலைகள், லுங்கிகள் முதலியன கைத்தறித் தொழில்துறை மூலம் மட்டுமே உற்பத்தி செய்யப்பட வேண்டும் எனக் கூறியது. பேரளவுத் தொழில்கள் 1951-52ம் ஆண்டின் மொத்த உற்பத்தி யில் 60 சதவீதத்திற்கு மேல். கரை உள்ள வேட்டிகளை உற்பத்தி செய்தால், உற்பத்தி வரியை மேலும் உயர்த்தி விதிக்கப் படுமென்று 1953ல் அறிவிக்கப்பட்டது.

கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு அமைப்பதற்குப் பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. கூட்டுறவுத்துறையில் நெச வாளர்களை ஊக்குவிப்பதற்கு நடைமுறை முதலீட்டை அரசு கடனாக அளித்தது. பருத்தியைப் பயன்படுத்தும் கைத்தறிக்கு ரூ 200ம், பட்டு பயன்படுத்தும் கைத்தறிக்கு ரூ 500ம் கடனாக அளிக்கப்பட்டது. மொத்தத்தில் கூட்டுறவுத்துறை பங்கு முதலீட்டிற்கு ரூ 464 இலட்சமும், நடைமுறை மூலதனத்திற்கு ரூ 408 இலட்சமும் அளிக்கப்பட்டது.

கைத்தறித்துணி உற்பத்தி 1951ல் 843 மில்லியன் கஜத் திலிருந்து 1955-56ல் 1,450 மில்லியன் கஜத்திற்கு அதிகரித்தது. கூட்டுறவுத்துறையில் அமைந்த கைத்தறிகள் எண்ணிக்கை 1953-54ல் 7,88,000த்திலிருந்து 1955-56ல் 10 26,000க்கு உயர்ந்தது. இக் கூட்டுறவுச் சங்கங்கள், இயந்திரங்கள் வாங்கு வதற்கும், சாயத் தொழில் போன்றவைகளுக்கு நவீன இயந்திரங்

கள் வாங்குவதற்கும் கடன்கள் வழங்கின. கைத்தறிப் பொருள் களின் அங்காடியை அதிகரிப்பதற்கு விற்பனை நிலையம், நடமாடும் விற்பனை வண்டி, தள்ளுபடித் திட்டப் போன்றவற்றைச் செயல் படுத்தும்படி கூட்டுறவுச்சங்கள் கேட்டுக் கொள்ளப்பட்டது. 1955ல் அகில இந்திய கைத்தறித்துணி கூட்டுறவுச் சங்கம் (All India Handloom Fabrics Co-operative Society) அமைக்கப் பட்டது. கைத்தறித்துணியின் விற்பனையை அதிகரித்தல், முக்கிமான நகரங்களில் விற்பனை நிலையங்கள் அமைத்தல், கிட்டங்கள் ஏற்படுத்துதல் முதலியன இதன் குறிக்கோளாகும்.

இரண்டாம் திட்டக்காலத்தில் கீழ்க்கண்ட குறிக்கோள்கள் நிர்ணயிக்கப்பட்டன.

(1) கைத்தறி நெசவுத் துறையில் கூட்டுறவு அமைப்பினை அதிகரித்தல்.

(2) தற்போதுள்ள கைத்தறிகளின் திறனை அதிகரித்தல்.

(3) பயன்படுத்தப்படாமல் வீணே கிடக்கும் கைத்தறிகளை உபயோகத்திற்குக் கொண்டு வருதல்.

இதற்காக சுமார் ரூ 30 கோடி செலவிடப்பட்டது. கைத் தறியினை விசைத்தறியாக மாற்றுவதற்கும் திட்டங்கள் வகுக்கப் பட்டன.

கூட்டுறவுத் துறையில் உள்ள கைத்தறிகளின் எண்ணிக்கை 1953ல் 7 இலட்சத்திலிருந்து 1960ல் 13 இலட்சத்திற்கு அதிகரித்தது. கைத்தறித் துணி உற்பத்தி 1955-56ல் 1 000 மில்லியன் கஜத்திலிருந்து 1960-61ல் 10,000 மில்லியன் கஜத்திற்கு அதிகரித்தது.

1959ல் 'கைத்தறிப் பொருள்கள் ஏற்றுமதி அமைப்பு,' (Handloom Export Organisation) ஒன்று இந்திய அரசு வணிக இணைக்கழகத்திற்குத் துணையாக ஆரம்பிக்கப்பட்டது. ஆப்பிரிக்கா, ஆசியா முதலியவற்றில் ஏற்கனவே உள்ள அங்காடியினைத் தவர, அமெரிக்கா, கனடா, போன்ற நாடுகளிலும் அங்காடி ஏற்படுத்தப்பட்டது. அமெரிக்காவில் 'வண்ணம் மாறும் சென்னைத் துணி, (Bleeding Madras) என்ற கைத்தறித்துணி மிக்கப் புகழடைந்தது.

மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் நெசவாளர்களுக்கு வேலை நிறைவு அளிக்க வேண்டும் என்பதையும், நவீன தொழில்

நுட்பத்தை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற குறிக்கோளினை யும் அடிப்படியாகக் கொண்டு திட்டங்கள் வகுக்கப்பட்டன. எனினும் கைத்தறித் தொழில்துறையில் கீழ்க்கண்ட சிக்கல்கள் தோன்றின.

முதலாவதாக, அடிக்கடி கைத்தறிப் பொருள்கள் விற்பனை ஆகாமல் தேங்கி விடுகின்றன. இதனால் நெசவாளிகள் வேலை யில்லாமல் வாடினர். இரண்டாவதாக, நூல் இழைகள் அதிக விலையிலும் ஒழுங்கற்ற முறையிலும் கைத்தறி நெசவாளர்களுக்குக் கிடைக்கின்றது. இவை கைத்தறித் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் இடையூறாக உள்ளன. இவ்விரு சிக்கல்களையும் தீர்த்தல் இன்றியமையாததாகும்.

## கதர், கிராமத் தொழில் துறை

குடிசைத் தொழில் துறையில் கைராட்டை நூற்பும், கை நெசவும் முக்கியமானவையாகும். கி. பி. 1500க்கு முன்னரே இவ் வகை கைநெசவுத் தொழில் புகழ் பெற்று விளங்கியது. இந்தியப் பருத்தியின் இழை அமைப்பு சிலந்தி வலைக்கு ஒப்புமையாகக் கூறப்பட்டது. ஆனால் அந்நியர் ஆட்சி காலத்தில் இத் தொழில் தான் முதலில் சிதைந்தது.

1932ல் 'சுங்கவரி வாரியம்' (The Tariff Board) தனது அறிக்கையில் பின்வருமாறு கூறியுள்ளது விவசாயிகளுக்கு வேளாண்மைத் தொழில் இல்லாத காலங்களில் கதர் உற்பத்தி யானது வேலை வாய்ப்பினைக் கொடுக்கின்றது. அதன் பின்னர் அமைக்கப்பட்ட 'நிலைமை ஆய்வுக் குழு' வேறு வேலை கிடைக்காத ஏராளமான மக்களுக்கு, இத் தொழில் தான் வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கின்றது என்று கூறியது. நாட்டு விடுதலைக்குப் பின், இத்துறையினை வளர்ச்சியடையச் செய்வதற்குப் பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கதர்த் தொழில் துறைக் காக ரூ 8.2 கோடியும், கிராமத் தொழில் துறை வளர்ச்சிக்காக ரூ 6.8 கோடியும், செலவழிக்கப்பட்டன. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கதர், கிராமத் தொழில் துறை வேளாண்மைத் துறை யோடு சேர்ந்தே மதிக்கப்பட்டது. வேளாண்மைத் துறையினைச் சார்ந்திருக்கும் உபரி மக்கள் தொகையை கதர், கைத்தறி தொழில் துறைக்குத் திருப்புவது என்ற குறிக்கோள் அமைக்கப்பட்டது. 1953-ல் அகில இந்திய கதர் மற்றும் கிராமத் தொழில் துறை வாரியம் (All India Khadi and Villaga Industries Board)

அமைக்கப்பட்டது. 1955-56ல் கதர் உற்பத்தியின் மதிப்பு ரூ 5.35 கோடியாகும். நான்கு நூற்புக் கதிர்களைக் கொண்ட 'அம்பர் சர்க்கா' (Ambar Charka) அறிமுகப்படுத்தப்பட்டது.

இரண்டாம் திட்ட காலத்தில் கதர்த் தொழில் துறைக்கு ரூ 65 கோடி ஒதுக்கப்பட்டது. அம்பர் சர்க்காவிற்காக ரூ 18 கோடி ஒதுக்கப்பட்டது. 1957ல் கதர் மற்றும் கிராமத் தொழில் துறை ஆணைக்குழு (Khadi and Village Industries Commission) அமைக்கப்பட்டது. அதன் குறிக்கோள்கள் கீழ் வருவனவாகும்.

(1) நெசவாளர்களுக்குப் பயிற்சி அளித்தல்

(2) நெசவாளிகளுக்கு மூலப் பொருள்கள் கிடைப்பதற்கு வழி வகை செய்தல்.

(3) கதர் பொருள்களை விற்பனை செய்தல்.

(4) உற்பத்தி முறையில் மாறுதல்களையும், முன்னேற்றத்தையும் ஏற்படுத்துதல்.

(5) கூட்டுறவு அமைப்பினை ஆதரித்தல்.

1956-57ல் ரூ 8 கோடி மதிப்புள்ள 44 மில்லியன் கஜம் கதர்த் துணி உற்பத்தி செய்யப்பட்டது. இது 1958-59ல் ரூ 14 கோடி மதிப்புள்ள 72 மில்லியன் கஜந்திற்கு உயர்ந்தது. 1959-60ல் இதன் உற்பத்தி குறைந்தது கதர் விற்பனை இரண்டாம் திட்ட காலத்தில் ரூ 5.25 கோடியிலிருந்து ரூ 11.3 கோடிக்கு அதிகரித்தது. எனினும் இது உற்பத்தியை விடக் குறைவே. இதனால் கதர் பொருள்கள் விற்காமல் தேங்கிக் கிடந்தன. 1956-57-ல் இது 83 இலட்ச மக்களுக்கு வேலை வாய்ப்பினைக் கொடுத்தது. 1959-60-ல் இது 17 இலட்சத்திற்கு அதிகரித்தது எனினும் இதில் 15 இலட்ச மக்கள் இதனைப் பகுதி நேர வேலையாகவே கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கதர்த் தொழில் வளர்ச்சிக்காக நடைமுறை முதலீடு கடனுதவி வழங்கப்பட்டு வருகின்றது. விற்பனையை அதிகரிப்பதற்காக, விழாக் காலங்களில் தள்ளுபடி முறை இருந்து வருகின்றது.

மூன்றாம் திட்ட காலத்தில் கதர்த் தொழில் துறைக்காக ரூ 69 கோடி ஒதுக்கப்பட்டது. ஆறு நூற்புக் கதிர்கள் கொண்ட அம்பர் சர்க்காவானது, பன்னிரண்டு நூற்புக் கதிர்களையுடையதாக அமைக்கப்பட்டது. அம்பர் சர்க்கா உபயோகிப்பது பற்றி நெசவாளர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.

1965-66 கதர் உற்பத்தி 85 மில்லியன் மீட்டர் ஆகும். இது ரூ 27 கோடிக்கு மதிப்பிடப்பட்டுள்ளது. 1964-65ல் இத்துறை 19.16 இலட்ச மக்களுக்கு வேலை வாய்ப்பினை அளித்துள்ளது. ஆனால் இது 1966-67க்குப் பின்னர் படிப்படியாகக் குறைந்தது. 1970-71ல் இது 9.41 இலட்சத்திற்குக் குறைந்தது.

தற்சமயம் கதர்ப் பொருள்கள் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. 1969-70ல் ரூ 5.28 இலட்ச மதிப்புள்ள கதர் அமெரிக்கா, கனடா, பிரான்ஸ், இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது கதரின் ஏற்றுமதியை அதிகரிப்பதற்காக, கதர் மற்றும் கிராமத் தொழில் துறை ஆணைக் குழுவானது, ஐந்து அகில உலகப் பொருட் காட்சியில் அங்கம் வகித்துள்ளது. மிலான் (இத்தாலி), டான்ஜானியா, மேற்கு பெர்லின், யூகோஸ்லோவியா, டல்லாஸ் போன்ற இடங்களில் நடைபெற்ற பன்னாட்டுப் பொருட்காட்சிகளில் கலந்து கொண்டது.

## கிராமத் தொழில்கள்

எண்ணெய் எடுத்தல், சோப்புத் தயாரித்தல், மட்பாண்டங்கள் செய்தல், தோல் பொருள்கள் செய்தல், சர்க்கரை, வெல்லம், காகிதம், கோந்து, குங்கிலியம் தயாரித்தல், தேனி வளர்த்தல், முதலியன கிராமத் தொழில்களாகும் இவற்றில் எண்ணெய் எடுத்தல், சோப்புத் தயாரித்தல், வெல்லம், சர்க்கரைத் தொழில்கள் சிறந்து விளங்குகின்றன.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கிராமத் தொழில்களுக்காக ரூ 6.8 கோடி ஒதுக்கப்பட்டது. 1955-56ல் இதன் உற்பத்தி ரூ 10.93 கோடியாகும்; 3 இலட்ச மக்களுக்கு வேலை வாய்ப்பினை அளித்துள்ளது.

இரண்டாம் திட்ட காலத்தில் கிராமத் தொழில் துறையினை கூட்டுறவு அமைப்பின் மூலம் வளர்ச்சியடையச் செய்வதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இத் திட்ட காலத்தில் தொழில் துறைக்காக ரூ 16.3 கோடி ஒதுக்கப்பட்டது. இரண்டாம் திட்ட ஆரம்ப காலத்தில் கிராமத் தொழில் துறையின் உற்பத்தி ரூ 12.72 கோடியாகும். 1960-61ல் இவ் உற்பத்தி ரூ 33.16 கோடிக்கு அதிகரித்தது 1960-61ல் 5.64 இலட்ச மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டது.

மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கிராம தொழில் துறைக்காக ரூ 69 கோடி ஒதுக்கப்பட்டது. 1961ல் இத்துறை

உற்பத்தி மதிப்பு ரூ 37.77 கோடியிலிருந்து 1965-66ல் ரூ 55.87 கோடிக்கு அதிகரித்தது. 8.75 இலட்ச மக்களுக்கு 1965-66ல் வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டது. தொழில் நுட்ப அறிவு பற்றி பயிற்சி அளிக்கப்பட்டது. 1965-66ல் கிராமத் தொழில் துறைக்காக ரூ 11.80 கோடி நடைமுறை முதலீடு கடனாக கொடுக்கப்பட்டது.

கதர், மற்றும் கிராமத் தொழில் துறையில் மிகவும் பழமையான சாதனங்கள் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. இதனை நவீன முறையில் மாற்றி அமைத்து உற்பத்தியையும், தொழிலாளர் உற்பத்தித் திறனையும் அதிகரிக்க வேண்டும். இத் தொழிலினை மேற்கொள்பவர்களின் எண்ணமும் மாற்றப்பட வேண்டும். இவர்கள் தங்கள் தேவைக்கு மட்டுமே உற்பத்தி செய்கின்றனர். இதனால் அவர்கள் உற்பத்தியை அதிகரிப்பது பற்றியும் தரத்தை அதிகரிப்பது பற்றியும் கவனம் செலுத்துவதில்லை. எனவே இவர்களது குறிக்கோள், முதலில் மாற்றி அமைக்கப்பட வேண்டும். கிராமத் தொழில் துறையானது, பேரளவுத் தொழில் துறை பயிற்சிக்கு அடிப்படையாக விளங்கக் கூடியவை. எனவே அதனைச் சீர்படுத்துவதில் கவனம் செலுத்தப்பட வேண்டும்.

## கம்பளித் தொழில்

இராணுவத் தேவைகளை ஈடுகட்டுவதற்காக முதல் கம்பளித் தொழிற்சாலை 1887-ல் அமைக்கப்பட்டது. ஆனால் 1951-1961 ஆகிய காலத்தில்தான் அத்தொழில் நல்ல நிலையினை அடைந்தது. சுமார் 92 நிறுவனங்கள் பஞ்சாப், ஹரியானா, மகாராஷ்டிரம் போன்ற பகுதிகளில் செறிந்துள்ளன. ஏறத்தாழ ஆயிரம் சிறிய நிறுவனங்கள் பஞ்சாப், ஹரியானா மாவட்டங்களில் மட்டும் பரவலாக அமைந்துள்ளன. இவைகள் உழைப்பு தீவிரப் படுத்தப்பட்ட தொழில்களாகும். ஆனால் பரவலாகக் கிடக்கும் சிறு தொழில் நிறுவனங்கள் தங்களுடைய மூலப் பொருள் தேவைகட்கு செறிந்துள்ள தொழிற்சாலைகளை நம்பியுள்ளன.

இத்துறையில் 3 துணைத்துறைகள் (Sub-Sector) உள்ளன. அவைகள்,

(1) குறைந்த ரகப்பொருள்களை உற்பத்தி செய்யும் துறை

(2) கம்பளித் துணித் துறை

(3) கந்தல் இழையினால் மறுபடி நெசவு நெய்த ஆடை தயாரிப்புத் துறை (Shoddy Sector)

## அட்டவணை 1

**தேர்ந்தெடுக்கப்பட்ட சில தொழில்களில், தொழில் நுட்ப மாற்றத்தால் ஏற்பட்ட வேலை வாய்ப்புகளின் போக்கு (1901—1951)**

(இருபாலரும் கொண்ட தொழிலாளர்கள் எண்ணிக்கை ஆயிரத்தில்)

| வ. எண் | | 1901 | 1911 | 1921 | 1931 | 1951 |
|---|---|---|---|---|---|---|
| 1 | கைக்குத்தல் அரிசி, மாவரைத்தல், பருப்பு வகைகள் தயாரித்தல் | 1,245 | 1,232 | 873 | 685 | 526 |
| 2 | தாவர எண்ணெய் தயாரிப்பு, மற்றும் சுத்திகரிப்பு | 483 | 528 | 471 | 503 | 250 |
| 3 | தோல், தோலாலான பொருள்கள், காலணிகள் | 1,143 | 1,066 | 1,002 | 868 | 760 |
| 4 | பஞ்சாலைகள் | 3,243 | 3,018 | 2,639 | 2,718 | 3,034 |
| | மொத்தம் | 6,114 | 6,844 | 4,985 | 4,774 | 4,570 |

**Source:** Census of India 1961, Monograph Series Monograph No. 4, occupational Structure and Level of Economic Development in India—A Regional Analysis.

## அட்டவணை 2

**சராசரி ஒரு தொழிலாளியின் ஒரு நாள் சராசரி வருமானம், (ரூபாய்கள்)**

| வ. எண் | தொழில் | இரண்டாம் திட்டம் | மூன்றாம் திட்டம் | நான்காம் திட்டம் |
|---|---|---|---|---|
| 1 | கதர் | 0·50 | 1·00 | 2·00 |
| 2 | தானியங்கள், பயிறுகள் படிமுறைத் தொழில் | 1·00—1·50 | 1·00—2·50 | 2·00— 5·00 |
| 3 | கிராமத்துறை எண்ணெய் உற்பத்தி | 2·50—3·50 | 3·50—4·00 | 4·00— 5·00 |
| 4 | தோல் உரிப்பு | 1·50 | 1·75—2·50 | 3·00— 4·00 |
| 5 | தோல் பதனிடல் | 2·50 | 3·00 | 3·50— 5·00 |
| 6 | காலணிகள் | ... | 5·00 | 6·50—10·00 |
| | | ... | ... | 3·00— 4·00 |
| 7 | கருப்பட்டி | 2·40 | 3·17 | 3·00— 4·00 |
| 8 | குடிசைத் தொழில் தீப்பெட்டி | 1·00—1·25 | 1·50—2·00 | 2 00— 3 00 |

| | | | | |
|---|---|---|---|---|
| 9 | சமையலுக்குப் பயன்படாத எண்ணெய், மற்றும் சோப் | 1·40 | 2·30 | 3·00— 5·00 |
| 10 | கையால் தயாரித்த காகிதம் | 2·50 | 3·00—3·25 | 4·00— 4·50 |
| 11 | மண் பாண்டங்கள் | 0·75 | 1·60 | 2·00— 5·00 |
| 12 | கயிலி தவிர இதரவகை இழைகள் | 1·46 | 2·85 | 3 00— 3 50 |
| 13 | தச்சு, கருமான் தொழில் | 1·50—2·00 | 2·00—3·00 | 5·00— 8 00 |
| 14 | தேனீ வளர்த்தல் | ... | ... | 3·00— 4·00 |
| 15 | எலுமிச்சை வளர்ப்பு | ... | ... | 3·00— 4·00 |

Source: Commerce 23—9—1972. p. 773

## அட்டவணை 3

**கதர் ஆணைக்குழு—தேர்ந்தெடுக்கப்பட்ட சில முக்கிய இனங்களின் வளர்ச்சி**

| | | 1955-56 | 1960-61 | 1965-66 | 1968-69 | 1970-71 |
|---|---|---|---|---|---|---|
| I அமைப்புகள்: (எண்ணிக்கை) | | | | | | |
| (i) மாநிலவாரியங்கள் | | 2 | 14 | 15 | 15 | 15 |
| (ii) நிறுவனங்கள் | | 242 | 720 | 1,037 | 678 | 675 |
| (iii) கூட்டுறவுகள் | | 60 | 11,765 | 19,371 | 20,079 | 23,298 |
| | மொத்தம் | 304 | 12,499 | 20,423 | 20,772 | 23,988 |
| II உற்பத்தி: (ரூ. கோடியில்) | | | | | | |
| (i) கதர் | | 5·6 | 14·2 | 26·8 | 23·4 | 25 9 |
| (ii) கிராமத் தொழில்கள் | | 10·9 | 33·2 | 55·9 | 74·5 | 85·6 |
| | மொத்தம் | 16·4 | 47·4 | 82 7 | 97 9 | 111·5 |
| III விற்பனை (ரூ. கோடியில்) | | | | | | |
| (i) கதர் | | 4·4 | 14·1 | 19·7 | 20·7 | 25·7 |
| (ii) கிராமத் தொழில்கள் | | 0·9 | 28·4 | 49 7 | 64 0 | 74·3 |
| | மொத்தம் | 5·3 | 42·5 | 69·4 | 84·7 | 100·0 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **IV** வேலைவாய்ப்பு: (லட்சத்தில்) | | | | | |
| **கதர்த் துறை** | | | | | |
| (i) முழுநேர வேலைவாய்ப்பு | 0·61 | 2·06 | 1·82 | 1·32 | 1·17 |
| (ii) பகுதிநேர வேலைவாய்ப்பு | 5·96 | 15·08 | 17·13 | 12·03 | 8·24 |
| **மொத்தம்** | **6·57** | **17·14** | **18·95** | **13·35** | **9·41** |
| கிராமத் தொழில்கள் | | | | | |
| (i) முழுநேர வேலைவாய்ப்பு | 0·08 | 1·18 | 1·72 | 0·79 | 1·04 |
| (ii) பகுதிநேர வேலைவாய்ப்பு | 2·94 | 4·46 | 7·03 | 7·37 | 8·75 |
| **மொத்தம்** | **3·02** | **5·64** | **8·75** | **8·16** | **9·79** |
| **V** கூலி (ரு. கோடியில்) | 6·9 | 15·1 | 26·4 | 24 6 | 28·4 |

**Source:** Commerce 23—9—1972, pp. 767–774.

## அட்டவணை 4

### கதர்த் துறை உற்பத்தி, விற்பனை, வேலைவாய்ப்பு

| ஆண்டு | உற்பத்தி மில்லியன் மீட்டரில் | உற்பத்தி ரூபாய் கோடியில் | விற்பனை (ரூ. கோடியில்) | வேலை வாய்ப்பு (லட்சத்தில்) |
|---|---|---|---|---|
| 1953–54 | 9.60 | 2.19 | 1.30 | 3.78 |
| 1954–55 | 15.99 | 3.58 | 3.38 | 5.17 |
| 1955–56 | 24.99 | 5.59 | 4.37 | 6.57 |
| 1956–57 | 36.20 | 8.23 | 6.24 | 8.80 |
| 1957–58 | 50.80 | 11.48 | 8.30 | 11.36 |
| 1958–59 | 60.04 | 13.76 | 8.61 | 13.99 |
| 1959–60 | 59.42 | 14.14 | 10.60 | 16.07 |
| 1960–61 | 53.77 | 14.23 | 14.07 | 17.14 |
| 1961–62 | 63.25 | 16.91 | 18.78 | 17.46 |
| 1962–63 | 74.66 | 21.22 | 20.37 | 17.98 |
| 1963–64 | 71.51 | 22.09 | 22.58 | 18.59 |
| 1964–65 | 80.63 | 20.98 | 21.12 | 19.16 |
| 1965–66 | 84.85 | 26.81 | 19.67 | 18.95 |
| 1966–67 | 78.56 | 27.84 | 25.76 | 18.60 |
| 1967–68 | 63.89 | 24.29 | 25.01 | 13.35 |
| 1968–69 | 60.02 | 23.38 | 20.74 | 13.35 |
| 1969–70 | 62.22 | 25.64 | 26.09 | 11.00 |
| 1970–71 | 56.74 | 25.85 | 25.73 | 9.41 |
| **சராசரிக் கூட்டு வளர்ச்சி விதம்** | | | | |
| 1953–54 முதல் 1970–71 வரை | 11.0 | 15.6 | 19.2 | 5.5 |
| 1956–57 முதல் 1970–71 வரை | 3.3 | 8.5 | 10.6 | 0.5 |
| 1956–57 முதல் 1965–66 வரை | 9.9 | 14.0 | 13.6 | 8.8 |

## அட்டவணை 5

### கிராமத் தொழில்களின் உற்பத்தி, விற்பனை, வேலைவாய்ப்புப் போக்கு

| ஆண்டு | உற்பத்தி (ரூ. கோடியில்) | விற்பனை (ரூ. கோடியில்) | வேலைவாய்ப்பு (இலட்சத்தில்) |
|---|---|---|---|
| 1953–54 | 0.59 | 0.59 | 0.11 |
| 1954–55 | 6.98 | 0.66 | 3.01 |
| 1955–56 | 10 93 | 0.90 | 3.02 |
| 1956–57 | 12.72 | 2.27 | 6.65 |
| 1957–58 | 14.50 | 4.72 | 5.18 |
| 1958–59 | 26.25 | 8.00 | 3.95 |
| 1959–60 | 27.62 | 19.08 | 4.75 |
| 1960–61 | 33.16 | 28.36 | 5.64 |
| 1961–62 | 37.77 | 36.87 | 5.86 |
| 1962–63 | 39.99 | 35.21 | 7.36 |
| 1963–64 | 43.42 | 39.50 | 7.24 |
| 1964-65 | 43.33 | 44.24 | 6 88 |
| 1965–66 | 55 87 | 49.73 | 8.75 |
| 1966-67 | 58.24 | 53.91 | 7.04 |
| 1967–68 | 73.73 | 61.71 | 7.68 |
| 1968–69 | 74.46 | 63.98 | 8.16 |
| 1969–70 | 76.77 | 64.20 | 9.04 |
| 1970–71 | 85.60 | 74.25 | 9.79 |
| ஓராண்டின் கூட்டுச் சராசரி வளர்ச்சி | | | |
| 1956–57 முதல் 1970–71 முடிய | 14.6 | 28.3 | 2.8 |

**Source:** Commerce 23-9-'72, p. 773.

## அட்டவணை 6

திட்டங்களில் நிதி ஒதுக்கீடு (கதர், கிராமத் தொழில் துறை)
(ரூபாய் கோடியில்)

| திட்ட காலம் | கதர் | கிராமத் தொழில்கள் | மொத்தம் |
|---|---|---|---|
| முதல் திட்டம் | 8·2 | 6·8 | 15·0 |
| இரண்டாம் திட்டம் | 67·5 | 16·3 | 83·8 |
| மூன்றும் திட்டம் | 69·0 | 23·4 | 92·4 |
| ஓராண்டுத்திட்டங்கள் | 32·5 | 10·6 | 43·1 |
| நான்காம் திட்டம் | 79·0 | 35·8 | 114·8 |
| மொத்தம் | 256·2 | 92·9 | 349·1 |

**Source** :-Commerce 23-9-72 p. 773.

இத்தொழில் துறையில் சுமார் ரூ 80 கோடிக்கு மேல் முதலீடு செய்யப்பட்டுள்ளது. ஒரு லட்சம் மக்களுக்கும் அதிகமான நபர்களுக்கு வேலை வாய்ப்பினைத் தருகின்றது. கூட்டுறவு நிறுவனங்கள் பெரும்பாலும் இறக்குமதி செய்யப்பட்ட கச்சாக்கம்பளியையே Raw wool) நம்பி உள்ளன. கம்பளியைத் தூய்மைப் படுத்துவதற்கு 10 நிறுவனங்கள் உள்ளன. இந்த நிறுவனங்கள் நாம் இறக்குமதி செய்து வந்த கம்பளிப் பொருள்களை நம்பியிருப்பதை நீக்கியுள்ளன. இதனுல் அந்நியச் செலாவணி மீத மாக்கப்பட்டுள்ளது.

**கம்பளி நூல் உற்பத்தி**

| ஆண்டு | உற்பத்தி (மில்லியன் பவுண்ட்) |
|---|---|
| 1961 | 5·5 |
| 1962 | 9·2 |
| 1963 | 13·4 |
| 1964 | 9·9 |
| 1965 | 11·1 |
| 1966 | 10·12 |
| 1967 | 18·18 |

**Source** : Commerce Annual Number 1968

1961லிருந்து 1967க்குள் நூற்புக் கதிரின் சக்தி 1,69,236 லிருந்து 2,26,908க்கு அதிகரித்துள்ளது. கம்பளிநூல் உற்பத்தி 1956ல் 11·6 மில்லியன் கிலோகிராமிலிருந்து 1963ல் 22·73 மில்லியன் கிலோ கிராமிற்கு அதிகரித்துப் பின் 1967ல் 16 மில்லியன் கிலோகிராமிற்கு குறைந்துள்ளது.

கம்பளித் துணிகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியும் செய்யப் படுகின்றன. 1971ல் கம்பளி வகைகளின் ஏற்றுமதி ரூ 30 கோடியை எட்டியுள்ளது. கம்பளிப் பின்னல்களை உடைய துணி களுக்கு வெளிநாடுகளில் அதிக கிராக்கி உள்ளது 1969-70ல் இதன் ஏற்றுமதி ரூ 5·37 கோடியிலிருந்து 1970-71ல் ரூ 10·5 கோடிக்கு அதிகரித்துள்ளது.

**சிக்கல்கள் :–**

கம்பளி உற்பத்தியில் ஆண்டுதோறும் ஏற்றத் தாழ்வுகள் இருந்து வருகின்றன. இதற்கு முக்கிய காரணம் என்னவென்றால் கம்பளித் தொழிற்சாலைகள் தங்களுடைய முழு உற்பத்தித் திறனைப் பயன்படுத்தவில்லை. ஏனென்றால் இத்தொழிற்சாலைகள் மூலப் பொருள்களுக்கு இறக்குமதியையே நம்பியுள்ளன. இறக்குமதி ஒரே சீராக இல்லாததால் இத்தொழிற்சாலைகள் தங்கள் முழுச் சக்தியை யும் பயன்படுத்தி வேலை செய்ய முடியவில்லை.

கம்பளித் தொழில் துறையின் தேவையினை இந்திய அரசு அறிந்தே உள்ளது. எனினும் கம்பளி ஒரே சீராகக் கிடைப்பதற்கு வழிவகை செய்யவில்லை. குறைந்த உற்பத்திக் கொள்ளளவில் பல நிறுவனங்கள் இயங்குவதால் கம்பளியின் உற்பத்திச் செலவு அதிகமாக உள்ளது. இதனால் இந்தியக் கம்பளியின் விலை வெளி உலக அங்காடியில் அதிகமாக உள்ளது. ஆனால் இந்தியக் கம்பளிகளின் தரம் உயர்ந்ததாக உள்ளதால் அவைகள் வெளியுலக அங்காடியில் நிலைத்து நிற்க முடிகின்றது.

மேலும் தொழில் நுட்பம் வெளிநாடுகளில் வேகமாக முன்னேறி வருகின்றது. அதற்கேற்றாற்போல் இந்தியாவிலும் தொழில் நுணுக் கத்தில் மாறுதல்கள் ஏற்படுத்த வேண்டும். இயந்திரங்கள் மாற்றியமைக்கப்பட்டு நவீன மயமாக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்யாவிட்டால், வெளி உலகப்போட்டியை வென்று இத்தொழில் துறையில் எதிர் நீச்சல் போட இயலாது.

**ஆயத் தீர்வை வரி** (Excise Duty) : கம்பளித் தொழில் ஆண்டு முழுவதும் வேலை செய்தாலும், பருவ காலத்தில் மட்டும் தான் கம்பளி விற்பனை ஆகின்றது. ஆனால் பணம் ஆயத்தீர்வை

பயன்படுத்தப்பட்ட கொள்ளளவு

| ஆண்டு | நேர்த்தியான கம்பளித் துறை | | | கம்பளித் துறை | | |
|---|---|---|---|---|---|---|
| | சக்தி | உற்பத்தி | பயன்படுத்தப் பட்ட சக்தி சதவீதம் | சக்தி | உற்பத்தி | பயன்படுத்தப் பட்ட சக்தி சதவீதம் |
| | | | (மில்லியன் கிலோ கிராம்) | | | |
| 1957 | 10·92 | 6·68 | 61·1 | | | |
| 1958 | 11·55 | 7·33 | 63·5 | | | |
| 1959 | 12·25 | 6·77 | 54 4 | | | |
| 1960 | 12 43 | 5·81 | 46·7 | | | |
| 1961 | 12·47 | 6·70 | 53·7 | 12·13 | 5·97 | 49 2 |
| 1962 | 12·71 | 7·18 | 56·5 | 12·13 | 7 76 | 64·0 |
| 1963 | 12·78 | 8 46 | 66·2 | 11·94 | 9·85 | 82 5 |
| 1964 | 12·78 | 6·88 | 52·3 | 11·94 | 9·37 | 78·5 |
| 1965 | 12·78 | 4·78 | 37·4 | 12·15 | 8·14 | 67 0 |
| 1966 | 12·78 | 4·04 | 31·6 | 12·15 | 8·65 | 71 2 |
| 1967 | 12·78 | 4·53 | 34·6 | 12·50 | 7·93 | 63·4 |

**Source :- Commerce Annual Number. 1968.**

யில் முடக்கப்பட்டுள்ளது. இதனால் ஏற்படும் இழப்பை உயர்ந்த விலையின் மூலம் சரிக்கட்டுகின்றனர். ஆயத்தீர்வையைக் குறைத்தால், விலையும் குறையும்; அங்காடியில் தேவையும் கூடும்.

ஆடு இனப்பெருக்கத் திட்டம்: (Sheep Breeding Projects) மூலப் பொருள்களுக்கு அந்நிய நாட்டைத்தான் நம்பியிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால் இது இன்னும் சிறிது காலத்திற்குத் தவிர்க்க முடியாது. கச்சாக் கம்பளியினை பெருக்குவதற்காக மெரினோ ஆடு இனத்தை நமது நாட்டிலேயே பெருக்க வேண்டும் என அரசுக்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளது. குஜராத், காஷ்மீர், மாநில அரசுகள் இதற்காக நடவடிக்கைகள் எடுத்துள்ளன.

இந்தியா போன்ற வெப்பமான நாடுகளுக்கு கம்பளி அவசியமில்லை. இதை மனதிற் கொண்டு கம்பளி உற்பத்தியில் பல மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன. கம்பளி இழையையும், செயற்கை இழையையும் கலந்து, புதிய துணிகள் நெய்யப்படுகின்றன.

இந்திய கம்பளி விரிப்புகளுக்கு நல்ல கிராக்கி உள்ளது. இவைகள் கைகளினால் தயாரிக்கப் படுகின்றன. இதனால் உழைப்பு தீவிரப் படுத்தப்பட்டு, செலவு அதிகமாக உள்ளது. இதனைப் போக்குவதற்கு இயந்திரங்களைப் பயன் படுத்தவேண்டும்.

அண்மைக் காலங்களில் கச்சாக் கம்பளியானது, அரசு வணிக இணைக் கழகம் (State Trading Corporatinn) மூலமாக இறக்குமதி செய்யப்பட வேண்டும் என முடிவெடுக்கப்பட்டு உள்ளது. ஆனால் இது தவறான கருத்தாகும். கம்பளியைத் தரம் பார்த்து வாங்குவது ஒரு கலையாகும். மேலும் கம்பளியின் விலை அவ்வப்பொழுது மாறக் கூடியதாகும். எதை எப்பொழுது வாங்க வேண்டும் என்பது அதில் ஈடுபட்டுள்ளவர்களுக்கே தெரியும். இதனால் கம்பளி இறக்குமதி பற்றி மறு பரிசீலனை செய்ய வேண்டும்.

இவ்வாறு கம்பளித் தொழில்துறை முன்னேறுவதற்குப் பல்வழி முறைகள் உள்ளன. மேலும் அவை அந்நியச் செலாவணியை சம்பாதித்துக் கொடுக்கின்றன. அவை மூன்றுவிதத் தேவையைப் பூர்த்தி செய்கின்றன. அவையாவன :-

(1) நாட்டின் தற்காப்பு

(2) உள்நாட்டு அங்காடி

(3) கடல் கடந்த வாணிபம்

இத்தொழில் துறைக்கு கச்சாக் கம்பளி சீராகக் கிடைத்து வந்தால் அவை உள்நாட்டுத் தேவையை மட்டுமல்லாது வெளி நாட்டுத் தேவையையும் பூர்த்தி செய்யும்.

**கயிற்றுப் பொருள்கள் தொழில்**

கயிறு உற்பத்தியில் நாம் முதலிடம் வகிக்கின்றோம். கயிறு ஏற்றுமதியில் நாம் உண்மையில் முற்றுரிமையை அடைந்துள் ளோம். ஆண்டுதோறும் ஏறத்தாழ 45,000 டன் ஏற்றுமதி செய் கிறோம். உலக நாடுகளின் மொத்த உற்பத்தியாகிய 2,86,000 டன்களில் நமது உற்பத்தி, 1,60,000 டன் என்ற அளவில் இருக் கின்றது. நமக்கு அடுத்தபடியாக இலங்கை ஆண்டுக்கு 1,00,000 டன் உற்பத்தி செய்து இரண்டாம் இடத்தைப் பெற்றுள்ளது.

கயிற்றுத் தொழில் இந்தியாவில், கேரள மாநிலத்தில் மட்டும் செறிந்து காணப்படுகிறது. நமது மொத்த உற்பத்தியில் கேரளா மட்டும் 1,50 000 டன் கயிறு உற்பத்தி செய்கின்றது. இத் தொழில் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட ஒரு தொழிலாகும். சுமார் 5 00,000 மக்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்துள்ளது.

கயிற்றுப் பொருள்களின் உற்பத்தியை பெருக்குவதற்கும், அப் பொருள்களை வெளிநாடுகளில் விளம்பரப்படுத்தி அதன் வழியாக ஏற்றுமதியைப் பெருக்கிடவும், 'அகில இந்தியா கயிற்றுப் பொருள்கள் வாரியம்' (All India Coir Board) அமைக்கப்பட் டுள்ளது. 1965 ல் இக்குழு ஒரு தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கு அனுமதி அளித்தது. அதனால் விசைகளுடன் கூடிய ஒரு தொழில் சாலை அமைக்கப்பட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதன் பொருட்டு ரூ. 3·13 கோடி ஒதுக்கப்பட்டது. கேரளாவில் ஆலப்புழைக்கு அருகிலும், மேற்கு வங்கத்தில் கௌரா மாவட்டத் திலும் இத்துறை சம்பந்தமான ஆராய்ச்சிக் கழகங்கள் நிறுவப் பட்டுள்ளன.

1964 ல் கயிற்றுப் பொருள்களின் ஏற்றுமதி லட்சம் டன் ஆகும். கயிற்றுப் பொருள்கள் ஏற்றுமதி செய்வதற்கு முன் உரிமை வாங்க வேண்டிய அவசியம் ஒழிக்கப்பட்டது. ஊக்க வீதமும் (Incentives) 1·5 சதவீதத்திலிருந்து 2 சதவீதத்திற்கு உயர்த்தப் பட்டது. இச்சலுகை காரணங்களினால் வரும் ஆண்டுகளில் நல்ல வெற்றியை எதிர்பார்க்கலாம்.

கயிற்றுத் தொழிலால் இன்னும் பல நன்மைகளைப் பெற வேண்டுமெனில் அத்துறையில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது அவசியமாக உள்ளது.

(1) கயிற்றுத் தொழில் முன்னேற்றத்திற்காகத் திட்டமிட்ட எவ்வித ஆராய்ச்சியும் நாம் இதுவரை மேற்கொள்ளவில்லை. ஆலப்புழை, கௌரா போன்ற இடங்களில் ஆராய்ச்சிக் கழகங்கள் அமைக்கப்பட்டாலும், அவை போற்றத்தக்க வகையில் எதனையும் ஆற்றிடவில்லை. இந்நிலை விரைவில் மாற்றி அமைக்கப்பட வேண்டும்.

(2) கயிறு, கயிற்றுப் பொருள்களின் ஏற்றுமதி பல ஆண்டுகளாக ஒரே நிலையிலேயே இருக்கின்றது. 1966 லிருந்து 1971 வரை இப்பொருள்களின் ஏற்றுமதியின் மதிப்பு ரூ 14 கோடியை ஒட்டியே அமைந்து வருகின்றது. ஆனால் இதே மதிப்பு 1961 லிருந்து 1966 வரை ரூ. 18 கோடியாக இருந்தது என்பதை நினைவிற்கொள்ள வேண்டும்.

(3) கயிற்றுக்குப் பதிலாக இரப்பர் முதலிய பொருள்கள் அங்காடியில் நுழைந்துள்ளதால் கயிற்றுப் பொருள்களின் அங்காடி பாதிக்கப்பட்டுள்ளது.

(4) இந்தியாவில் தயாராகும் கயிறு தரத்தில் குறைந்து காணப்படுகிறது அதே வேளையில் ஐரோப்பிய பொது அங்காடியில் உள்ள நாடுகளின் கயிற்றுப் பொருள்களின் தரம் சிறப்பாக அமைந்துள்ளது.

(5) கயிற்றுப் பொருள்களின் உற்பத்தியையும், விற்பனையையும் கூட்டுவதற்கு எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் போதா.

இவற்றை கவனித்திற்கொண்டு ஆக்க ரீதியான நடவடிக்கைகள் மேற்கொள்ளல் அவசியமாகிறது.

**சில பரிந்துரைகள்**

(1) **ஆராய்ச்சியும் முன்னேற்றமும்** (Resarch and Development) : இந்தியக் கயிற்றுப் பொருள்களின் தரத்திற்கும் ஐரோப்பிய பொது அங்காடியில் உள்ள நாடுகளின் கயிற்றுப் பொருள்களின் தரத்திற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை நீக்கிட வேண்டுமாயின் இத்துறையில் பல்வேறு ஆராய்ச்சிகள் நடத்தப்படவேண்டும். தரத்தைக் கூட்டுவதும், உற்பத்திச் செலவைக் குறைப்பதுமே ஆராய்ச்சியின் முக்கிய குறிக்கோள்களாக அமைய வேண்டும். 'இந்திய அயல்நாட்டு வணிகக் கழகம்' ('Indian Institute of Foreign Trade) இவ்வகை ஆராய்ச்சிக்காக ரூ. 32.7 இலட்சம் ஒதுக்கியுள்ளது என்பதை இங்கு குறிப்பிடலாம்.

(2) உற்பத்திக்கட்டுமானம் (Production Structure): மேற்கூறிய கழகம் கயிற்று உற்பத்தியில் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்த வேண்டும் எனக் கூறியுள்ளது. அதற்காக ரூ. 1·91 இலட்சம் செலவில் 21 மாதிரித்திட்டங்கள் அமைத்துக்கொடுத்துள்ளது. இதனால் 21.000 பேர் வேலை வாய்ப்பு பெறுவார்கள்.

விசைத்தறி (Mechanical Spinning): பாய் முடைவதற்காக இலங்கை இயந்திரத் தறியைப்புகுத்தியுள்ளது. இதனால் உற்பத்தித் திறன் கூடுவதோடு மட்டுமல்லாமல் செலவும் குறைகின்றது. அதேபோல் இங்கும் இயந்திரத்தை அறிமுகப்படுத்தி உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என இக்கழகம் பரிந்துரைத்துள்ளது. இதற்காக ரூ. 3·34 இலட்சம் முதலீடு செய்யப்பட்டுள்ளது.

கால்மிதிகளின் சாயம் போகாமலிருக்கவும், அதன் வடிவங்களை மாற்றவும், சாய ஆராய்ச்சிக் கழகம் ஒன்றை ஏற்படுத்துவதற்காக ரூ. 22 இலட்சம் ஒதுக்கப்பட்டுளளது.

நெருக்கமாகப் பின்னப்பட்டு அதிகத் தரத்துடன் உற்பத்தி செய்யப்படும் ஐரோப்பியப் பொருள்களைப்போல், நாமும் உற்பத்தி செய்ய வேண்டும். அதற்காக ஐரோப்பிய நாடுகளுடன் தொடர்பு கொண்டு கயிறு உற்பத்தியினை மேலும் முன்னேற்றவேண்டும்.

கேரளாவின், 'தங்க இழை' (Golden Fibre) எனக் கருதப் படுகிற கயிறு, அந்நியச் செலாவணியைச் சம்பாதித்துக் கொடுக்கின்றபடியால் அது மேலும் முன்னேறுவதற்கு ஆக்க ரீதியான வழிமுறைகளைச் செய்ய வேண்டும்.

**இரப்பர்**

முதல் இரப்பர் தொழிற்சாலை 1921ல் வங்காளத்தில் நிறுவப் பட்டது. இரப்பர் நுகர்வினையும், அதன் உற்பத்தியையும் வைத்து ஒரு நாட்டின் தொழில்துறை முன்னேற்றத்தைக் கண்டுகொள்ள லாம். சென்ற பதினைந்து ஆண்டுகளில் இத்தொழில் வெகுவாக முன்னேறியுள்ளது.

இரப்பர் நுகர்வு சமீப காலங்களில் முன்னேறியிருந்தாலும் செழிப்பான நாடுகளுடன் ஒப்பிட்டுப்பார்த்தால் நாம் இன்னும் பின் தங்கிய நிலையில் இருப்பது விளங்கும்.

அதிக அளவில் கிடைக்கும் கச்சாப் பொருளான இரப்பரும், அதனுடைய விரிந்த அங்காடியும், இரப்பர்த்தொழிலை முன்னேற்று வதற்கு பெரிதும் உதவின.

**தற்போதைய நிலைமை :** இன்று 900க்கு மேற்பட்ட நிறுவனங்கள் இரப்பர் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. இவற்றில் 80 சத வீதம் சிறு தொழில் துறையில் உள்ளன. எட்டு நிறுவனங்கள், கார் டயர், டியூப் உற்பத்தியிலும், இருபத்து நான்குக்கும் மேற்பட்ட நிறுவனங்கள் செருப்புக்கள் தயாரிப்பதிலும், இருபத்து ஒன்பதுக்கும் மேற்பட்ட நிறுவனங்கள் சைக்கிள் டயர், டியூப் உற்பத்தியிலும் ஈடுபட்டுள்ளன.

சில முக்கிய நாடுகளில் இரப்பர் நுகர்வு

| நாடு | மொத்த நுகர்வு (டன்களில்) |
|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடுகள் | 21,17,106 |
| ஜப்பான் | 5,07,850 |
| இங்கிலாந்து | 3,71,900 |
| மேற்கு ஜெர்மனி | 3,36,535 |
| பிரான்ஸ் | 3,00,035 |
| இந்தியா | 96,218 |

**Source:** Commerce Annual Number pp. 224–228-1968.

இத்தொழில் துறை உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்வது மட்டுமல்லாமல் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கின்றது. இரப்பர் ஏற்றுமதியும் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்தது வருகின்றது. இதைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்கும்.

இரப்பர் பொருள்களின் ஏற்றுமதி
(ரூபாய் லட்சக்கணக்கில்)

| ஆண்டு | ஏற்றுமதி (ரூபாய் இலட்சக் கணக்கில்) |
|---|---|
| 1960–61 | 126·8 |
| 1961–62 | 151·3 |
| 1962–63 | 194·4 |
| 1963–64 | 215·4 |
| 1964–65 | 390·6 |
| 1965–66 | 498·6 |
| 1966–67 | 596·7 |
| 1967–68 | 515·4 |

**Source : Commerce Annual Number p p. 124 – 128 - 1968**

கார் டயர், டியூப் தயாரிக்கும் தொழிற்சாலை மொத்த உற்பத்தியில் 55 சதவீதம் இரப்பரைப் பயன்படுத்துகின்றது. அடுத்தபடியாக செருப்புத் தொழில் 12 சதவீதமும், சைக்கிள் டயர், டியூப் தொழிற்சாலை 10 சதவீதமும் பயன்படுத்துகின்றது.

இரப்பரின் மொத்த உற்பத்தி ரூ. 180 கோடி என மதிப்பிடப்பட்டுள்ளது. இது 75,900 மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கின்றது. இத்தொழில்துறை மேற்கு வங்காளம், மகாராஷ்டிரம், தமிழ்நாடு முதலிய மாநிலங்களில் அதிகமாக குழுமியுள்ளது.

இயற்கை இரப்பரின் உற்பத்தி ஆண்டுதோறும் அதிகரித்து வந்தாலும் அதன் தேவை அதைவிட அதிகமாக ஏற்பட்டுள்ளது. மூலப் பொருளான இயற்கை இரப்பரின் உற்பத்தியைப் பெருக்குவதோடு மட்டுமல்லாமல் செயற்கை இரப்பரின் உற்பத்திக்கும் இரண்டாவது தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டும்.

**இயற்கை இரப்பரின் உற்பத்தியை பெருக்குவதற்கு வழிகள் :**

(1) இரப்பர் சாகுபடியை ஊக்குவித்தல்; இதற்கு அந்தமான் தீவுகளில் பெரிய அளவில் இரப்பர் தோட்டப் பண்ணைகளை ஆரம்பிக்கலாம்.

(2) நல்ல விவசாய முறையைக்கொண்டு ஒரு ஏக்கரிலிருந்து கிடைக்கும் உற்பத்தியை அதிகமாக்குதல்.

1942 லிருந்து இரப்பருக்கு விலைக்கட்டுப்பாடு இருந்து வருகின்றது. பல்வேறுபட்ட இரப்பர்களுக்கு இந்திய அரசு கீழ் மட்ட விலையும், மேல்மட்ட நிலையும் குறித்துவிடுகின்றது. இவ்விலைகள் மற்ற நாட்டில் உள்ள விலையைவிட அதிகமாக உள்ளன. இவ்வாறு இயற்கை இரப்பருக்கு அதிகவிலை கொடுப்பதால் அதைப் பயிரிடுபவர்கள் புதிய முறையில் உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்ற கருத்தினை வரவேற்பதில்லை இப்பொழுது உள்ள நிலையே அவர்களுக்கு இலாபகரமாக இருப்பதால் அவர்கள் அக்கரை இல்லாமல் இருக்கின்றனர். இந்த மன நிலை மாற வேண்டும்.

மேலும் இரப்பர் பயிரிடுவதற்கு இந்தியாவில் தட்பவெப்ப நிலை உள்ளது. இந்தத் தட்பவெப்பநிலை மலேசியா, இந்தோனேசியா போன்ற நாடுகளில்கூட இல்லை. எனவே இந்தியாவில் மேலும் அதிகமான நிலங்களை இரப்பர் சாகுபடிக்கு கொண்டுவரலாம்.

இயற்கை இரப்பருக்கு அடுத்தபடியாக, அதிகமாகத் தேவைப்படுவது செயற்கை இரப்பராகும். ஆனால் இச்செயற்கை இரப்பர்

அதிகச் செலவுடையதாக உள்ளது. இச்செயற்கை இரப்பர் தயாரிப்பதற்கு ஆல்கஹால் முக்கிய மூலப்பொருளாகும். ஆனால் இம் மூலப் பொருள் இந்தியாவில் போதிய அளவில் கிடைக்க வில்லை. ஆகலால் அதிகவிலை கொடுத்து இறக்குமதி செய்யப்பட வேண்டியுள்ளது. மேலும் மற்றொரு மூலப்பொருளானபென்ஜீனும் (B.nzeen) அதிக விலையுடையது. ஆனால் இந்த இரப்பரின் தேவை அதிகரித்து வருவதால் மற்றொரு தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டியுள்ளது.

பண்பட்ட இரப்பர் (Reclaimed Rubber) தயாரிக்கும் தொழிற் சாலைகள் கல்கத்தாவிலும், பம்பாயிலும் உள்ளன. இவைகள் நாட்டின் தேவையைப் பூர்த்தி செய்கின்றன.

புடைல் இரப்பர் என்ற மற்றொரு வகையான இரப்பரும் கார் டியூப், சைக்கிள் டியூப் போன்றவை தயாரிப்பதற்கு உபயோகப் படுத்தலாம். 1973-74 ல் இதன் தேவை 10,000 டன்னாகும். எனவே இந்தவகை இரப்பர் செய்யும் தொழிற்சாலையை ஏற்படுத்தி னால் இயற்கை இரப்பருக்கு உள்ள அதிகத் தேவை சிறிது குறையும்.

மோட்டார் கார் டயர் உற்பத்தி சாலைக்கு, மற்றொரு மூலப் பொருள் டயர் நாண்கள் ( Tyre Cords) ஆகும். இவைகள் பருத்தி டயர் நாண்கள், ரேயான் டயர்நாண்கள், நைலான் டயர்நாண்கள், என மூன்று வகைப்படும். இதில் முதலாவதாக உள்ளதற்கு இப்பொழுது தேவையில்லை. ரேயான் டயர் தயாரிப்பதற்கு மூன்று நிறுவனங்கள் உள்ளன. ஆனால் அடுத்த ஐந்து வருடத்திற்குள் நாலாவதாக ஒன்று வேண்டியிருக்கும். நைலான் டயர் நாண் களுக்கு தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. ஆனால் அளிப்புத் தேவையைப் பூர்த்தி செய்யவில்லை. சில நிறுவனங் களுக்கு இம் மூலப் பொருளைத் தயாரிப்பதற்கு உரிமை வழங்கப்பட் டிருந்தாலும் இன்னும் சரியான முன்னேற்றம் காணவில்லை.

இவ்வாறு இரப்பர் தொழில்துறை முன்னேறுவதற்கு அதிக வாய்ப்புக்கள் உள்ளன. இவ்வாய்ப்புக்களை ஒழுங்கான முறையில் பயன்படுத்தினால் இரப்பர் உற்பத்தியில் தன்னிறைவு காண்பது மட்டுமல்லாமல் ஏற்றுமதி செய்யுமளவுக்கு நாம் உற்பத்தி செய்யலாம்.

**பிளாஸ்டிக்**

பிளாஸ்டிக்கின் உபயோகம் பற்றி நாம் அதிகமாகக் கூற வேண்டியதில்லை. இப்பொருள் இன்று, தொழில் துறையில் பல்

வேறு மட்டங்களில் பயன்படுத்தப்படுகிறது. பிளாஸ்டிக் பார்வைக்கு நேர்த்தியாக இருப்பதால் அதுகொண்டு எத்தனையோ வகை வேலைப்பாடுகளைச் செய்யலாம். மின்சாரச் சாதனங்கள், வானொலி, தொலைபேசி சாதனங்கள், வாகனங்கள் முதலியன தயாரிக்கும் தொழிற்சாலைகளுக்கு இப்பொருள் மிக அதிகமாகத் தேவைப்படுகின்றது. இது தவிர இல்லங்களில் பயன்படத்தக்க தட்டுமுட்டுச் சாமான்கள் வாளி, மழைக் கோட்டு, விளக்குகளுக்கான துணை உறுப்புகள், காலணிகள் முதலியவற்றிற்கும் இப்பொருள் பெரும்பாலும் பயன்படுகிறது. இதனால் தகரம், உருக்கு, இரும்பு, அலுமினியம் போன்ற பற்றுக்குறைப் பொருள்கள் மிச்சமாகின்றன.

பிளாஸ்டிக் தொழில்துறை முதலாவது ஐந்தாண்டுத் திட்டங்களில் வெகு வேகமாக முன்னேறியது. ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் இத்தொழிலின் முன்னேற்றம் ஒரு தேக்க நிலையுற்றது. மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் பிளாஸ்டிக் மூலப்பொருள் உற்பத்தியானது 74,000 டன் இலக்கை அடைய வேண்டும் என்று குறிப்பிடப்பட்டது. நடைமுறையில் உற்பத்தியானது 1961-ல் 13,000 டன்னிலிருந்து 1965-ல் 37,000 டன்னாகக் கூடியது ஆனால் 1966-ல் 36,000 டன்னாகக் குறைந்தது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்ட இலக்கில் பாதியைக்கூட அடையவில்லை. பிளாஸ்டிக்கின் நுகர்வு 1965-ல் 52,000 டன்னிலிருந்து 1966ல் 48,000 டன்னாகக் குறைந்தது. பின் 1967-ல் 65,000 டன்னுக்கு உயர்ந்தது.

1967ல் பிளாஸ்டிக் உற்பத்தி குறைந்ததற்குக் காரணம், அடிப்படை இரசாயனப் பொருள்களான ஆல்கஹால், பென்சின், மெத்னால், பார்மால்டிஹைட், பெனால், செயற்கை இரப்பர் முதலியன போதிய அளவில் கிடைக்காமையே ஆகும். தற்போது இறக்குமதியின் மூலம் இவை போதிய அளவு கிடைப்பதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது. அத்துடன் ஏற்கெனவே உள்ள நிறுவனங்களின் கொள்முதல் அதிகரிக்கப்பட்டுள்ளது.

மற்ற நாடுகளுடன் ஒப்பிடுகையில் நம் நாட்டில் பிளாஸ்டிக் மூலப் பொருள்களின் விலை அதிகமாக உள்ளது. இதற்குரிய காரணங்களாவன :

(a) மூலப்பொருள் தொழிற்சாலைகளின் இலாபமற்ற கொள்ளளவு (Uneconomic capacity)

(b) விலை அதிகமான அடிப்படை இரசாயனப் பொருள்கள்

(c) செலவு அதிகமான உற்பத்திமுறை.

இதுமட்டுமல்லாது ஆயத்தீர்வை வரியும், குறிப்பிடத்தக்க அளவுக்கு விலையை உயர்த்துகின்றது. அண்மையில் தொடங்கப் பட்டுள்ள 'பெட்ரோ கெமிக்கல் காம்ப்ளக்ஸ்' (Petrochemical complex) பிளாஸ்டிக் பொருள்துறையின் சிக்கல்களை ஓரளவு நீக்கும்.

நாலாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பிளாஸ்டிக் மூலப் பொருள்களின் உற்பத்தி 2,35,000 டன் இலக்கை அடைய வேண்டும் எனக் குறிப்பிட்டுள்ளது. இவ்விலக்கை அடைவதற்கு உற்பத்திக் கொள்ளளவை 20 சதவீதத்தை அதிகரிக்க வேண்டும்

பிளாஸ்டிக் தொழில் துறையில் ஆயத்தீர்வை வரி அதிக அளவில் உள்ளது. இதுவே இத்தொழில் முன்னேறுவதற்குப் பெரும் தடையாக உள்ளது. பெறுமான விகிதவரி மதிப்பின்படி (Ad valoram) 36 சதவீதமாக உள்ளது. ஆயத்தீர்வை வரியி லிருந்து கிடைக்கும் வருவாய் 1961-62ல் ரூபாய் ஒரு கோடியி லிருந்து 1967-68ல் ரூ 11 கோடிக்கு உயர்ந்துள்ளது. நான்கா வது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், இத்தொழில் சீரிய முன் னேற்றம் அடைய வேண்டுமானால், இந்த ஆயத்தீர்வை வரி ஓரளவுக்குக் குறைக்கப்பட வேண்டும். மென்மேலும் புதிதாக நிறுவனங்கள் தொடங்கப்படுவதால் ஆயத்தீர்வை வரிவீதத்தைக் குறைப்பதால் உண்டான வருவாய் இழப்பு அரசுக்கு அதிகமாக இருக்காது.

இது தவிர ஒரு சில மாநிலங்களில் பிளாஸ்டிக் பொருள்கள் அதிக அளவில் விற்பனை வரிக்கு உள்ளாக்கப்பட்டுகின்றன. மகாராஷ்டிர மாநிலத்தில் விற்பனை வரி 6 சதவீதத்தில் இருந்து 8 சதவீதத்திற்குக் கூட்டப்பட்டுள்ளது.

1968-69ல் இந்திய அரசின் இறக்குமதிக் கொள்கையானது தேவையின் அடிப்படையில் மட்டுமில்லாமல் உற்பத்தித் தேவை யினையும் கருத்தில் கொண்டு, பிளாஸ்டிக் மூலப் பொருள்களை இறக்குமதி செய்வதற்குத் தாராளமான கொள்கையைக் கடைப் பிடித்தது.

பிளாஸ்டிக் மூலப் பொருள் உற்பத்தியில் வெகு விரைவில் தன்னிறைவு அடைவதற்காகவும், இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியைக் கூட்டவும், திட்டக்குழு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது' என்பதையும் ஈண்டு குறிப்பிடலாம்.

பிளாஸ்டிக் பொருள் ஏற்றுமதி 1966-67ல் ரூ 377 இலட்ச மாக இருந்தது, 1967-68ல் ரூ 329 இலட்சத்திற்கு குறைந்தது. நான்காம் ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் ஏற்றுமதியை நட்ப்பு

நிலையாகிய ரூ 12 கோடியிலிருந்து ரூ 15 கோடிக்கு உயர்த்திடத் திட்டமிட்டுள்ளது.

ஏற்றுமதியைப் பெருக்குவதற்கு அரசு கீழ்கண்ட நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்:

(1) அரசு ஒரு நீண்டகால ஏற்றுமதிக் கொள்கையை உண்டாக்கி அதனை விரைவாக நிறைவேற்ற வேண்டும்.

(2) உள்நாட்டில் தயாரிக்கப்பட்ட மூலப் பொருள்கள், உலக அங்காடி விலைக்குச் சமமாக கிடைப்பதற்கான வழி வகைகளைச் செய்ய வேண்டும்.

(3) பிளாஸ்டிக் தொழில் துறையை நவீன மயமாக்குவதற்காகவும், உற்பத்திறமையைக் கூட்டுவதற்காகவும், இயந்திரங்களையும், மற்ற சாதனங்களையும், தாராளமாக இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படவேண்டும்.

(4) தர நிர்ணயம், கப்பலில் ஏற்றுவதற்கு முன்னால் மேற்பார்வையிடல் போன்ற திட்டங்களை இதற்கு பயன்படுத்த வேண்டும்,

(5) ஏற்றுமதி செய்வதற்குரிய திறமை உள்ள நிறுவனங்களுக்கு 5 சதவீதம் கூடுதலான ஊக்க நன்கொடை அளிக்க வேண்டும்.

பிளாஸ்டிக் தொழில் துறையை முன்னேற்றுவதற்க்கு கீழ்கண்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

(1) பிளாஸ்டிக் மூலப் பொருள்கள் பெட்ரோ கெமிக்கல் காம்ப்ளெக்ஸ் உதவி கொண்டு குறைந்த செலவில் தயாரிக்கப்பட வேண்டும்.

(2) விவசாயத்துறை, கட்டடம், நிர்மாணத்துறை ஆகியவற்றில் பற்றுக்குறை உலோகங்களுக்குப் பதிலாக பிளாஸ்டிக்கை உபயோகிக்க வேண்டும்.

(3) இப்புதிய தொழில்துறை பற்றிப் பயிற்சி அளிக்க வேண்டும்.

எதிர் காலத்தில் பிளாஸ்டிக் தொழில் பெரிதும் முன்னேறி, நாட்டின் தேவையைப் பூர்த்தி செய்யும் என்பதில் எள்ளளவும்

ஐயமில்லை. மேலும் ஏற்றுமதியும் கூடி அந்நியச் செலாவணியைத் தேடிக் கொடுக்கும் என்பது உறுதி.

**சைக்கிள் (Bicycles)**

தொழில் துறையில் தற்சமயம் சைக்கிள் தொழில் புதிய அங்கம் வகிக்கின்றது. உண்மையில் செலவில்லாததும் எளிமையானதுமான போக்குவரத்துச் சாதனம் சைக்கிள் ஆகும். தற்காலத்தில் இது மிகவும் சிறப்புற்று விளங்கி வருவதோடு மட்டுமல்லாமல், இதற்கான அங்காடியும் நாளுக்கு நாள் விரிவடைந்து வருகின்றது. இன்று ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு சைக்கிளாவது வைத்துக் கொள்ள விரும்புகின்றனர்.

இரண்டாவது உலகப்போருக்குப்பின் சைக்கிள் தொழில்துறை வளர ஆரம்பித்து, சுதந்தரத்திற்குப்பின் திட்டக்குழுவின் திட்டங்களால் வெகு விரைவில் முன்னேறியது. இத்துறையின் முன்னேற்றம் விரைவானதும், வியக்கத்தக்கதுமாகும். இந்தியாவில் சைக்கிள் உற்பத்தி பேரளவுத் தொழிற்சாலை ரீதியாலும், சிறு தொழில் ரீதியாலும் நடந்து வருகின்றது. பல்வேறு மாநிலங்களிலும் மொத்தம் 12 தொழிற்சாலைகள் உள்ளன. அவை ஆண்டொன்றுக்கு சுமார் 30,00,000 சைக்கிள்களை உற்பத்தி செய்வதற்குத் திறமை பெற்றுள்ளன. இவை தவிர சிறு தொழில்கள் 5 லட்சம் சைக்கிள்கள் தயாரிக்கக் கூடிய நிலையில் உள்ளன. இச்சிறு தொழில் துறையில் சுமார் 150 நிறுவனங்கள் உள்ளன.

இன்று இந்தியா சைக்கிள் தயாரிப்பதில் உலகில் ஐந்தாவது இடம் வகிக்கின்றது. திட்டம் ஆரம்பிப்பதற்குமுன் சைக்கிள் உற்பத்தி 1,20,000 ஆக இருந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்ட இலக்கான 5·3 இலட்சம் சைக்கிள்கள் அக்காலத்திற்குள் வெற்றிகரமாக உற்பத்தி செய்யப்பட்டன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 12·5 இலட்சம் சைக்கிள்கள் உற்பத்தி செய்ய வேண்டும் என்று இலக்கு குறிப்பிடப்பட்டது. ஆனால் உற்பத்தி அதனையும் மிஞ்சி 13·10 இலட்சமாகியது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்கு 25 இலட்சம் என்று இலக்கு நிர்ணயிக்கப்பட்டது ஆனால் உற்பத்தியோ 18·3 இலட்சம்தான். இப்பொழுது சைக்கிள் உற்பத்தி 19 இலட்சமாக உள்ளது.

அயல் நாட்டுக் கூட்டுறவால் இத்தொழில் துறை வெகு விரைவில் முன்னேறியுள்ளது. உற்பத்தித் திறன் பன்மடங்கு பெருகியுள்ளது. அயல்நாட்டுக் கூட்டுறவு இல்லாத நிறுவனங்களும் தங்கள் உற்பத்தித் திறனில் முன்னேறியுள்ளன.

மூலப்பொருள் தட்டுப்பாடு

சைக்கிள் உற்பத்திக்கு உருக்கு மிகவும் முக்கியமான மூலப் பொருளாகும். ஆனால் இந்த மூலப் பொருளுக்கு அடிக்கடி தட்டுப் பாடு ஏற்படுவதால் சைக்கிள் உற்பத்தியும் அடிக்கடி பாதிக்கப்படு கின்றது. மூலப் பொருள் சரிவரக் கிடைக்காததால் ஒரு சில நிறு வனங்கள் தற்காலிகமாக கதவடைப்புச் செய்தன. 1964-ல் மூலப் பொருள்கள் இறக்குமதியும் தடை செய்யப்பட்டதால் நிலைமை மேலும் மோசமாகியது. உள்நாட்டில் கிடைக்கும் மூலப் பொருள்களின் விலையும் நாளுக்கு நாள் பெருகிவருகின்றது. இதனால் இத்தொழில்துறை சைக்கிளின் விலையைக் கூட்டும்படி கேட்டதற்கு அரசு அனுமதி வழங்கவில்லை.

1970-71-ம் ஆண்டுகளில் நிலைமை மேலும் மோசமாகியது. உருக்கின் விலை ஏறியது மட்டுமல்லாமல் அதிகமான உற்பத்தி வரியும், உயர்வீத மின் கட்டணமும் சைக்கிள் விலையைக் கூட்ட வேண்டும் என்ற நிலையை ஏற்படுத்தியது. இதன்படி ஒரு சைக்கி ளுக்கு ரு 16 வீதம் கூட்டுவதற்கு அனுமதி கேட்ட பொழுது ரு 9·5 மட்டுமே கூட்டுவதற்கு அனுமதி வழங்கப்பட்டது.

டயர், டியூப் முதலியவற்றின் அளிப்பும் ஒரே சீராக இல்லை. 1971-ல் இதன் அளிப்பு குறைவாக இருந்தாலும் இது தற்காலிக மாகத்தான் நிலவியது. இப்பொழுது இதன் அளிப்பு நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. இவை சைக்கிள், தொழில்துறை யின் தேவையை எதிர் காலத்தில் பூர்த்தி செய்து விடும் என்பதில் ஐயமில்லை.

உள்நாட்டு மூலப் பொருள்களை வைத்தே வெகு விரைவில் சைக்கிள் தொழில் துறை முன்னேற்றமடைந்துள்ளது. மூலப் பொருள்களின் அளிப்பில் முன்னேற்றம் அடைந்து அவை ஒரே சீராகக்கிடைக்கும் பொழுது சைக்கிள்கள் உற்பத்தி தன்னிறைவை எய்துதல் மட்டுமின்றி, வெளிநாடுகளுக்கும் பேரளவில் ஏற்றுமதி செய்யக் கூடும்.

ஏற்றுமதித் துறையிலும் இத்துறை சிறந்து விளங்குகின்றது. 1961-ல் இதன் ஏற்றுமதியின் மதிப்பு ரு 15 இலட்சமாகவே இருந்தது. ஆனால் 1969-ல் இதன் மதிப்பு ரு 140 இலட்சத்தை அடைந்தது. உதிரி உறுப்புக்களின் ஏற்றுமதியின் மதிப்பும் ரு 2·5 இலட்சத்திலிருந்து ரு 180 இலட்சத்தை அடைந்துள்ளது. நமது சைக்கிள்கள், தொழில் முன்னேற்றமடைந்துள்ள அமெரிக்காவில் கூட பிரபலமடைந்துள்ளன. ஈரான், பூடான், நைஜீரியா,

இந்தோனேஷியா, அமெரிக்கா போன்ற நாடுகளுக்கு நம் சைக்கிள்கள் பெருமளவில் ஏற்றுமதியாகின்றன. ஏற்றுமதியை அதிகரிப்பதற்கு அரசு பெருமளவில் ஊக்கம் அளித்து வருகின்றது.

நமது சைக்கிள் தொழில்துறை வெகு விரைவில் முன்னேற்றமடைந்ததற்கு முக்கிய காரணம், விரிவான அங்காடி, உள்நாட்டிலேயே கிடைக்கும் மூலப்பொருள் வசதி, உள்நாட்டு உற்பத்தித் திறன் போன்றவையாகும்.

**தோல் பொருள்கள் தொழில் (Leather Industry)**

தோல் பொருள்கள் தொழிலானது இந்தியாவின் மிகச் சிறப்பான ஒரு துறையாக விளங்குகின்றது. அந்நியச் செலாவணி சம்பாதித்துக் கொடுப்பதில் இத்துறையானது சணல், தேயிலை துணிவகைகள் முதலியவற்றிற்கு அடுத்தபடியாக நான்காவது இடம் வகிக்கின்றது. இதில் இரண்டு துறைகள் உள்ளன. அவை

(i) தோல் பதனிடும் துறை

(ii) தோல் பொருள் உற்பத்தி செய்யும் துறை

இத்துறையில் உற்பத்தி பெரும்பாலும் சிற்றளவுத் தொழில்களிலிருந்தே வருகின்றன. இது தவிர 35 பெரிய அளவுத் தொழில் நிறுவனங்கள் உள்ளன.

கச்சாத் தோல் அளிப்பு தட்டுப்பாடாகவே இருந்தாலும் இத் தொழில் உலக அங்காடியில் ஒரு சிறப்பு அங்கம் வகிக்கும் அளவுக்கு முன்னேறியுள்ளது. முன்பு கச்சாத் தோலாகவே ஏற்றுமதி செய்து வந்த இடத்தில், இன்று அரசின் பாராட்டத் தக்க நடவடிக்கையாலும், இத் தொழிலில் ஈடுபட்டுள்ள அதிபர்களின் ஆர்வத்தாலும் வினை முற்றிய தோல் பொருள்களாகவே ஏற்றுமதி செய்யக் கூடிய அளவுக்கு முன்னேறியுள்ளது.

இத் தொழில் சென்னை, பம்பாய், கான்பூர், கல்கத்தா முதலிய இடங்களில் அதிகமாகச் செறிந்துள்ளன. கான்பூரிலிருக்கு நல்ல தரமான தோல் உற்பத்தி செய்யப்படுகின்றது. கான்பூர் காலணிகள் மிகச் சிறப்பானவை என்பது நாடறிந்த ஒரு செய்தி.

ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இத் தொழில் துறை பல இடையூறுகளையும் தாண்டி, வெகு விரைவில் முன்னேறியுள்ளது. இதுவும் ஓர் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில் துறையானதால் அதிக வேலை வாய்ப்பினை மக்களுக்கு அளிக்கின்றன. இத்

தொழில் சிறு தொழிலாகவும், குடிசைத் தொழிலாகவும் இருந்து வருவதால் கிராமப்புற வாழ்க்கைத் தரத்தை உயர்த்திட உதவுகின்றது.

உள் நாட்டுத் தேவையில் தன் நிறைவு அடைவது மட்டுமல்லாமல், வெளி நாடுகளுக்கும் பேரளவில் தோல் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. தோல் பொருள்களின் ஏற்றுமதியின் மதிப்பு ரூ 80 கோடியாக உள்ளது. இதில் கச்சாத் தோல் 20 சதவீதமாகும். பதனிடப்பட்ட தோல் 67 சதவீதமாகும். வினை முற்றிய தோல் பொருள்கள் 13 சதவீதம் ஆகும். நமது முக்கியமான வாடிக்கையாளர்களுள் இரஷ்யா முதலிடம் பெறுகிறது. தோல் பொருள்களின் ஏற்றுமதிக்கு எதிர் வரும் காலங்களில் நல்ல வாய்ப்பு இருக்கின்றது. அண்மையில் தோல் காலணிகளுக்கு நல்ல கிராக்கி இருந்து வருகிறது. மேலும் ஏற்றுமதியை அதிகரிப்பதற்கு அரசு திட்டங்கள் வகுத்து ஊககுவிக்க வேண்டும்.

அரசின் ஏற்றுமதிக் கொள்கையும் இப்பொழுது மாறி வருகின்றது. நமது ஏற்றுமதியில் வழக்கமாக ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களே முக்கிய அங்கம் வகிக்கின்றன. ஆனால் அண்மைக் காலத்தில் புதிய பொருள்களை ஏற்றுமதி செய்வதற்காக அரசின் நடவடிக்கை மாறியுள்ளது. ஆனால் அதே சமயத்தில் வழக்கமாக ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களின் முக்கியத்துவத்தை உதறி விடக் கூடாது. இவ்விரு பொருள்களுக்கும் இடையில் எவ்வித பாகுபாடும் பிரிக்கப்படக் கூடாது. இவ்விரு பொருள்களுக்கும் ஒரே விதத்தில் ஊக்கம் அளிக்க வேண்டும்.

திட்டக் குழு, நான்காம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் ஏற்றுமதியை 7.5 சதவீதம் கூட்ட வேண்டும் எனத் திட்டமிட்டுள்ளது. அதனால் இதற்கென ஏற்றுமதிக் கொள்கை மாற்றியமைக்கப்பட்டு ஏற்றுமதியை நன்கு ஊக்குவிக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

தோல் தொழில்துறைப் பொருள்களின் ஏற்றுமதி மதிப்பு ரூ 100 கோடிக்கு உயர்த்தப்பட வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விலக்கினை அடைவதற்கு அரசின் உதவி மிகவும் அவசியம். மேலும் ஐரோப்பிய நாடுகளின் போட்டியினைத் தாக்குபிடிப்பதற்கு அரசு சிறந்த வகையில் நடவடிக்கை மேற் கொள்ள வேண்டும். அரசின் உதவியுடன் தோல் பொருள்கள் தொழில் நிறுவனங்களும் முயற்சி எடுக்க வேண்டும் என்பதை மறந்திடலாகாது.

முன்னேறி வரும் இத் தோல் பொருள் தொழில் துறையினை அரசும் சற்று ஊக்குவித்தால் அத்துறை உன்னதமான ஒரு நிலையை அடையும். மேலும் உள் நாட்டு கச்சாப் பொருளினை அதிகரிப்பதற்கும் வழி வகைகள் செய்ய வேண்டும். கச்சாப் பொருள்கள் எளிதில் கிடைத்தால் தான் இத் துறை பேரளவில் முன்னேற முடியும்.

### பட்டுத் தொழில் துறை

துணி வகைகளில் பட்டு மிகவும் சிறந்ததாகும். இது எல்லா வகை மக்களையும் கவர்கின்றது. பட்டு உற்பத்தியில் சீனு முதலிடம் வகித்து வந்தது. ஆனால் 19-ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஜப்பான் இத் தொழில் துறையில் ஈடுபட்டது. மிகக் குறுகிய காலத்திற்குள் ஜப்பான் இத்துறையில் மிக வேகமாக முன்னேறியுள்ளது. இதனல் சீனு இரண்டாவது இடத்திற்குத் தள்ளப் பட்டது. பத்து வருடத்திற்குள் ஜப்பான் பட்டு உற்பத்தியில் 10 மில்லியன் இராத்தல் அதிகரிக்க முடிந்தது. ஆனல் அதே இடைக் காலத்தில் மற்ற நாடுகள் 2 மில்லியன் இராத்தல் அளவு தான் அதிகரிக்க முடிந்தது.

இந்தியா பட்டு உற்பத்தியில் நான்காவது இடம் வகிக்கின்றது. இந்தியாவில் நான்கு வகையான பட்டு வகைகளும் கிடைப்பது குறிப்பிடத் தக்கதாகும். இந்தியாவில் இத் தொழில் சிறு தொழிலாகக் கிராமப்புறங்களில் நன்கு முன்னேறி வருவது குறிப்பிடத் தக்கது.

பட்டுத் தொழில் துறை 3 வகையாக உள்ளது பட்டுப்புழு முட்டைகளை உற்பத்தி செய்தல், பட்டுப் புழுக்களை இனவிருத்தி செய்தல், முசுக்கொட்டை மரம் வளர்த்தல் முதலியன விவசாயத் துறையில் அடங்கும். பட்டு இழை தயாரித்தல் தொழில் துறையிலும், அதனை விற்பதும் வாங்குவதும், வணிகத் துறையிலும் அடங்கும். இது கிராமத்தில் பகுதி நேர வேலையாக விளங்கி வருகின்றது. சுமார் 28 இலட்சம் மக்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்கின்றது.

பட்டுப் புழுவிலிருந்து உற்பத்தியாகும் பட்டு ஆண்டு தோறும் 11 5 இலட்சம் கிலோ கிராம் உற்பத்தி செய்யப்படுகின்றது இதன் மதிப்பு ரூ 7 கோடியாக மதிப்பிடப்பிடப்பட்டுள்ளது. ஆனல் நாட்டின் தேவையை வைத்துப் பார்க்கும் பொழுது இது குறைந்த அளவே ஆகும். தவிர ரூ 2 கோடி மதிப்புள்ள பிற வகைப் பட்டும் உற்பத்தி செய்யப்படுகின்றது.

பட்டுத் தொழில் உற்பத்தியினை ஊக்குவிப்பதற்கு 1949-ல் 'மத்திய பட்டு வாரியம்' (Central Silk Board) ஒன்று அமைக்கப் பட்டது. இந்த வாரியம் பட்டு உற்பத்திக்கு கடன்கள் வழங்கி வருகின்றது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இவ் வமைப்பு ரூ 4 கோடி செலவிட்டுள்ளது. குறிப்பாக ஆராய்ச்சிக் காக அதிகம் செலவிடப்பட்டுள்ளது. இதில் முக்கியமான செலவுகளாவன:

(i) பயிற்சிக் கூடங்கள் அமைத்தல்.

(ii) நீர்ப்பாசன வசதி அமைத்துக் கொடுத்தல்

(iii) அதிக நிலங்களில் பட்டுப்புழு வளர்த்தல்

(iv) தற்போதுள்ள சர்க்காவை புதுமைப் படுத்தல்

(v) அங்காடியை விரிவு படுத்தல்

முதலியனவாம். 1959-ல் ரூ 20 இலட்ச மதிப்புள்ள பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டது.

'மத்திய பட்டு வாரியம்' செய்து வரும் நடவடிக்கைகள் போற்றத் தக்கதாம். பட்டின் தரத்தை உயர்த்துவதற்கும் உற்பத்திச் செலவை குறைப்பதற்கும் பல வேறு நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன. அந்தந்த மாவட்ட மொழி களில் உற்பத்தி வளர்ச்சி பற்றிய பயிற்சி அளிக்கப்பட வேண்டும்.

1964-ல் பட்டு உற்பத்தி 19.48 இலட்சம் கிலோ கிராமாகும். இதில் பாதி மைசூர் மாநிலத்திலிருந்து கிட்டியது. அடுத்தபடி யாக, மேற்கு வங்காளம், அஸ்ஸாம், ஜம்மு-காஷ்மீர், மத்தியப் பிர தேசம், பீகார் முதலிய மாநிலங்கள் பட்டு உற்பத்தி செய்கின்றன.

மேற்கு வங்காளம், மைசூர், அஸ்ஸாம், பீகார் முதலிய மாநிலங்களில் பட்டு ஆராய்ச்சிக் கழகங்கள் அமைக்கப் பட்டுள்ளன. 1964-ல் இராஞ்சியில் 'மத்திய துசார் ஆராய்ச்சி நிலையமும்' (Central Tussar Research Station), லஹாவில் 'மத்திய துசார் பட்டுப்புழு ஆராய்ச்சி நிலையமும்' (Central Tussar Silk Worm Station) அமைக்கபட்டுள்ளன. இவைகள் பட்டுத் தொழில் துறையில் பல்வேறு முன்னேற்றங்களைக் கொண்டு வந்துள்ளன அகில இந்திய பட்டு வாரியமானது பட்டு உற்பத்தியை பெருக்கு வதற்காக வெளி நாட்டினரை வரவழைத்து இங்குள்ளவர்களுக்கு பயிற்சி அளிக்கவும் ஏற்பாடு செய்கின்றது. அதோடு இங்குள்ள வர்களும் வெளி நாட்டிற்கு பயிற்சியின் பொருட்டு அனுப்பப்படு கின்றனர்.

இத் துறையைக் கூட்டுறவு முறையில் அமைப்பதற்கும் இன்னும் அதிக ஊக்கம் அளிக்கப்பட வேண்டும். பட்டு உற்பத்தியை நவீன மயமாக்குவதற்கு ஆராய்ச்சி நிலையங்களில் எடுக்கப்பட்ட முடிவுகள் உடனுக்குடன் மக்களுக்கு தெரிவிக்கப் பட வேண்டும். கச்சாப் பட்டு பெறுவதற்காக இன்னும் அதிகமான நிலங்களை பட்டு உற்பத்திக்காகப் பயன் படுத்த வேண்டும். முசுக் கொட்டையானது இலாபகரமாகப் பயிரிடப்படக் கூடிய இடங் களில் முசுக் கொட்டை பயிரிடுவதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். இவ்வாறு பட்டு உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஊக்கம் அளித்தால் தான் பட்டு உற்பத்தியில் நாம் தன்னிறைவு அடைய முடியும்.

இவ்வாறு சிற்றளவுத் தொழில்கள் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்குகிறது. மொத்த உற்பத்தியில் ஏறத்தாழ 30 வகைப் பொருள்கள் சிற்றளவுத் தொழில்கள் மூலமாகக் கிடைக்கின்றன. இவை தவிர வேறு சில 40 வகைப் பொருள்களின் மொத்த உற்பத் தியில், 30 லிருந்து 40 சதவீதம் வரை சிற்றளவுத் தொழில்களே உற்பத்தி செய்கின்றன. பல பொருள்களின் மொத்த உற்பத்தியில் சிற்றளவுத் தொழில்களின் பங்கினை அடுத்த பக்கத்திலுள்ள அட்டவணையின் மூலம் அறியலாம்.

சிற்றளவுத் தொழில் துறையினையும், பேரளவுத் தொழில் துறை யினையும் ஒப்பிட்டு நோக்கும் பொழுது சிற்றளவுத் தொழில்கள் சிறந்து விளங்குவதை அறியலாம். பதிவு செய்யப்பட்ட மொத்த தொழிற்சாலைகளில் 90 சதவீதம் வரை சிற்றளவுத் தொழில் துறை யில் உள்ளன. வேலை வாய்ப்பினைப் பொறுத்தவரை 1970-71 ல் 33 இலட்ச மக்கள் இத்துறையில் ஈடுபட்டிருந்தனர். அதே ஆண்டில் சிற்றளவுத் தொழில்துறை வழியாக உற்பத்தி செய்யப் பட்ட பொருள்களின் மொத்த மதிப்பு ரூ 4,050 கோடி ஆகும். இத்துறையில் ஆளப்பட்ட நிலையான முதல் ரூ. 475 கோடி ஆகும். இதனால் சிற்றளவுத் தொழில் துறையில் 'முதலீடு உற்பத்தி அளவு விகிதம்' (Investment – Output ratio) 1:8:5 ஆக இருந்தது. ஆனால் அதே ஆண்டில் பேரளவுத் தொழில்களில் மேற்கூறிய விகிதமானது 1:1 என்ற அளவில் தான் இருந்தது. (Yojana Annual 1972-26th January 1972. 1970ஆம் ஆண்டில் சிற்றள வுத் தொழில்களின் வளர்ச்சி வீதம் (Growth rate) 11 சதவீத மாகும். ஆனால் அதே ஆண்டில் பேரளவுத் தொழில் துறையின் வளர்ச்சி வீதமோ இரண்டு சதவீதத்திற்கும் குறைவாகவே இருந் தது. ('The Journal of Industry and Trade' 'March, 1967. pp. 236 - 41.

**பல பொருள்களின் மொத்த உற்பத்தியில் சிற்றளவுத் தொழிலின் பங்கு**

| பொருள்கள் | மொத்த உற்பத்தில் சிற்றளவுத் தொழில்களின் பங்கு (சதவீதத்தில்) |
|---|---|
| மின் சாதனங்கள் | 10.9 |
| வர்ணங்கள், பூச்சு வர்ணங்கள் (Paints and Varnish) | 24.6 |
| கடிகாரம் | 28 0 |
| விஞ்ஞான அளவை சாதனங்கள் (Scientific measuring equipments) | 31.4 |
| கண்ணாடி மற்றும் கண்ணாடிப் பொருள்கள் | 36.0 |
| நாற்காலி மற்றும் தட்டுமுட்டுப் பொருள்கள் | 42.9 |
| ஒருசில உணவுப் பொருள்கள் | 49.3 |
| சீமைக் களிமண் வடிவமைப்புப் பொருள்கள் (Structural clay products) | 53.4 |
| காய் கனிகளைப் பக்குவம் செய்தல் | 55.7 |
| புகைப்படம் மற்றும் மூக்குக் கண்ணாடி (Optical) பொருள்கள் | 80.3 |
| தோல் பதனிடுதல் மற்றும் தோல் பொருள்கள் | 85.6 |
| பின்னல் வேலைப்பாடுடைய பொருள்கள் | 91.5 |

சிற்றளவுத் தொழில் துறை பற்றிப் போதிய புள்ளி விவரங்கள் கிட்டவில்லையென்றாலும் தற்போதுள்ள ஒரு சில புள்ளிவிவரங்களை வைத்துச் சிற்றளவுத் தொழில் துறையையும் பேரளவுத் தொழில் துறையினையும் ஒப்பிட்டு நோக்கலாம். 1960 இலிருந்து 1964 வரை சிற்றளவு மற்றும் பேரளவுத் தொழில்களின் வளர்ச்சி வீதம் அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது.

அந்த அட்டவணையிலிருந்து அறியப்படும் முடிவுகள் வருமாறு:

(1) 1960 லிருந்து 1964 வரை உள்ள காலத்தில் 5,420 சிற்றளவுத் தொழிற்சாலைகள் புதிதாக ஆரம்பிக்கப்பட்டன. ஆனால் 1,367 பேரளவுத் தொழில்களே அதே காலத்தில் ஆரம்பிக்கப் பட்டன. ஆக, சிற்றளவுத் தொழில்கள்தாம் அதிகமாக வளர்ச்சி பெற்று வருகின்றன.

(ii) ஒரு தொழிலுக்கு வேண்டிய நிலைமுதல் அளவினை (Fixed Capital per employee) அடிப்படையாகக் கொண்டு நோக்கும் போது வேலை வாய்ப்பினை அதிகரிக்கச் செய்யும் சக்தியானது பேரளவுத் தொழில்களைக் காட்டிலும் சிறு தொழில்களில் 7 மடங்கு அதிகமாக உள்ளது.

**1960-லிருந்து 1964 வரை சிற்றளவு மற்றும் பேரளவுத் தொழில்களின் வளர்ச்சி வீதம்.**

| எண் | விவரம் | 1960 மற்றும் 1964ல் பதிவு செய்யப் பட்ட தொழில் நிறுவனங்களின் உற்பத்தி | | | |
|---|---|---|---|---|---|
| | | சிற்றளவுத் தொழில்துறை[1] | | பேரளவுத் தொழில்துறை[2] | |
| | | 1960 | 1964 | 1960 | 1964 |
| 1 | தொழிற்சாலைகளின் எண்ணிக்கை | 36,457 | 41,877 | 2,418 | 3,785 |
| 2 | வேலைவாய்ப்பு (மில்லியனில்) | 1.338 | 1.504 | 2.138 | 2.935 |
| 3 | நிலைமுதல் (ரூ மில்லியனில்) | 2,115.7 | 2,743.7 | 12,167.3 | 36,872.0 |
| 4 | உற்பத்தியால் அதிகரித்த மதிப்பு (Value added by manufacture) (ரூ. மில்லியனில்) | 2,622.2 | 3,238.3 @ | 7,427·0 | 13,288.1 |

@ மதிப்பீடு.

[1] ரூ 5 இலட்சமும் அதற்கு குறைவான மூலதனம் உடைய தொழிற்சாலைகள்

[2] ரூ 5 இலட்சத்திற்கும் அதிகமான மூலதனம் உடைய தொழிற்சாலைகள்

**Source :** Report of the International Perspective Planning Team on Small Scale Industries and Annual of Industries for 1960 & 1964.

(iii) ஒரு அலகு நிலை முதலினால் (Per unit of Fixed Capital) அதிகரித்த உற்பத்தியின் மதிப்பானது பேரளவுத் தொழில்களில் உள்ளதைக் காட்டிலும் சிற்றளவுத் தொழிலில் 3 மடங்கு அதிகமாக உள்ளது.

இவ்வாறாக, மொத்த உற்பத்தி மதிப்பு, வேலை வாய்ப்பு அளவு ஆகியவற்றுள் சிற்றளவுத் தொழில்கள் அதிகச் சிறப்புப் பெற்றுள்ளன.

# 9. இந்தியச் சிறு தொழில்களின் சிக்கல்களும் அவற்றை நீக்க அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளும்

## (A) சிறு தொழில்களின் சிக்கல்கள் சில

கடந்த 10 ஆண்டுகளில் சிறு தொழில்களின் வளர்ச்சி சீராக அமைந்திருந்தாலும் அவ்வளர்ச்சி வீதம் போற்றுதற்குரிய ஒன்றல்ல. 1961 மார்ச் இறுதியில் பதிவு செய்யப்பட்ட சிறு தொழில்களின் எண்ணிக்கை 36,109 ஆகும். இந்த எண்ணிக்கை மார்ச் 1971-ல் 2,14,004 என்று உயர்ந்துள்ளது. ஆயினும் கூட கிராமப் பொருளாதார அமைப்புக் கொண்ட நமது நாட்டிற்கு இவ் வளர்ச்சி போதாது. நமது சிறு தொழில்கள் விரைவான வளர்ச்சி பெறாமைக்குக் காரணங்கள் சில உள்ளன. அவற்றை இனங்கண்டு கொள்வதன் மூலமாக, எதிர்கால வளர்ச்சிக் கேற்ற திட்டங்களை வகுக்க இயலும்.

இந்தியச் சிறுதொழில்கள் எதிர்நோக்கியுள்ள சிக்கல்கள் சில வருமாறு :

(I) நிதிப் பற்றுக்குறை

(II) கச்சாப் பொருள்கள் பற்றுக்குறை

(III) உற்பத்தி முறைச் சிக்கல்கள்

(IV) சந்தை பற்றிய சிக்கல்கள்

(V) நிர்வாக அமைப்புச் சிக்கல்கள்

(VI) வரி விதிப்பு

(VII) இதர சிக்கல்கள்

1. நிதிப் பற்றாக்குறை

ஃபோர்டு அறக்கட்டளை உதவியுடன் அமைக்கப்பட்ட 'பன்னாட்டுத் திட்டக்குழு' தனது ஆய்வு அறிக்கையில் இந்தியச் சிறு தொழில்களை எதிர் நோக்கியுள்ள பிரச்சினைகளில் நிதி வசதியின்மையும் ஒன்று என்று கூறியது. சிறு தொழில் உரிமையாளர்கட்குக் கருவிகள், இயந்திரங்கள், இயந்திரத் தொகுப்புகள் வாங்குவதற்கு நீண்ட காலக்கடனும், கூலிவழங்கல், கச்சாப் பொருள்கள் வாங்குதல் போன்றவற்றிற்குக் குறுகிய காலக் கடன்களும் பொதுவாகத் தேவைப்படுகின்றன. வணிக வங்கிகள் நாட்டுடைமை ஆக்கப்படுவதற்கு முன்பு, சிறு தொழில்களின் தேவைகள் அவ்வளவு சிறப்பாகக் கவனிக்கப்படவில்லை. சிறு தொழில்களுக்கு நிதி உதவி புரிவது பொருளாதார ரீதியில் இலாபகரமற்றது என்றே கருதினர். வேறுவகையில் நிதி வழங்கிட வல்ல ஆக்கபூர்வமான அமைப்புக்களோ அவ்வளவாக இல்லை. இதன் விளைவாக சிறு தொழில்கள் தங்களின் நிதித் தேவைகட்கு சுதேசி வங்கியாளர்களையும் (Indigenous Bankers) லேவா தேவிக்காரர்களையுமே (Money lenders) நம்ப வேண்டியதாயிற்று. அவர்கள் வசூலித்த வட்டி விதமோ மிக அதிகமாக இருந்தது தவிர, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை அத்தகைய லேவா தேவிக்காரர்களுக்கே விற்பனைசெய்ய வேண்டிய கட்டாயமும் ஏற்பட்டது. இதனால் சிறு தொழில்களின் பொருள்களுக்கு நியாயமான விலை கூட கிட்டவில்லை. இதன் காரணமாக சிறு தொழில் உற்பத்தியாளர்கள் உள்ளச் சோர்வுற்று தம் உற்பத்தி ஆற்றலை இழந்து வருகின்றனர்.

சிறு தொழில் அதிபர்கள் கடன் பெறுவதில் கீழ்க்கண்ட சிக்கல்களை எதிர் நோக்குகின்றனர் :

(i) **அதிக வட்டி வீதம் :** அரசுத்துறை கடன் வசதிகளைச்செய்து கொடுத்தாலும் பெரும்பாலான பகுதிகளில் அத்தகைய வசதிகள் முழுமையாகக் கிட்டவில்லை. இதர நிதி நிறுவனங்களின் வசதியும் கிடைப்பதில்லை. இதன் விளைவாக தனிப்பட்ட வணிகர்கள், இடையீட்டாளர்கள், லேவாதேவிகளிடம் கடன் வசதி பெற வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்படுகிறது. அவர்கள் வசூலிக்கும் வட்டி வீதம் மிக அதிகமாகக் காணப்படுகிறது. எம். ஸி. ஷெட்டி (M. C. Shetty) என்பவர் தாம் மேற்கொண்ட ஓர் ஆய்வின் வழியாக அறிந்த விவரங்களைத் தனது 'வளர்ந்து வரும் பொருளாதாரத்தில் சிறு தொழில்களும் குடும்பத்தொழில்களும்' (Small Scale and Household Industries in a Developing Economy') என்ற நூலில் குறிப்பிடுகிறார். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட 16

நிறுவனங்களில், பாதிக்கும் மேற்பட்ட நிறுவனங்கள் 50%க்கும் அதிகமான வட்டி வீதத்தை அளிப்பதாக கூறுகின்றார்.

(ii) **கடனுக்குப் பிணையம் வைக்கப் போதுமான சொத்துகள் இல்லை :** பொறியியல் சார்பான துறைத் தொழில்களை விட பெரும்பாலான தொழில்கள் தாம் பெறக்கூடிய கடன்களுக்கு ஈடாக வைக்க போதுமான சொத்துக்கள் பெற்றிருக்கவில்லை. இதனால் அவை கடன் பெறும் தகுதியை இழந்து நிற்கின்றன.

(iii) **ஒவ்வாத நிபந்தனைகள்:** கடன் வழங்குவோர் பெரும்பாலும் விதிக்கின்ற நிபந்தனைகள் சிறு தொழில் அதிபர்கட்கு ஒவ்வாதனவாக அமைகின்றன. தாம் நிர்ணயிக்கின்ற விலைக்குத் தமக்கே விற்கப்பட வேண்டும், என்று கூறுகிற நிபந்தனை, சிறு தொழில் உரிமையாளர்களின் உரிமையையே பாதிக்கின்றது.

(iv) **எளிதில் கிட்டுவதில்லை ;** கடன் வசதிகளைப் பெற பல்வகையிலும் முயற்சித்தாலும் அக்கடன்கள் எளிதில் கிட்டுவதில்லை. எனவே திட்டமிட்டுச் செயல்பட கடன் வசதியின்மை தடையாக அமைகிறது.

(v) **உரிய வேளையில் கிட்டுவதில்லை :** எத்தனையோ இன்னல்களுக்கிடையில் கடன் நிதி பெறுவதற்கு ஏற்பாடுகள் செய்தும் கூட, அக்கடன் தொகை உரிய நேரத்தில் உற்றுழி உதவுவதாக அமைவதில்லை. பூர்த்தி செய்ய வேண்டிய பத்திரங்கள், பெற்றுத் தரவேண்டிய சான்றிதழ்கள், நிர்வாகத்துறையின் காலதாமதம் போன்றவற்றால் உரிய நேரத்தில் நிதி கிடைப்பதில்லை.

இவை போன்ற வேறு பல காரணங்களும் கடன் பெறுவதற்கு இடையூறாக அமைகின்றன.

'தனியார் துறைக்கான நிதி' பற்றி ஆய்வதற்காக அமைக்கப்பட்ட ஷராப் குழுவானது (Shroff committee) ஜூன் 1954ல் 'ரிசர்வ் பேங்'கிடம் சமர்ப்பித்த அறிக்கையிலும் இப்பிரச்சினையை ஆய்ந்துள்ளது. தனது ஆய்வில் ரூ 10,000க்கு மேலும் ரூ 5 இலட்சத்திற்கும் இடைப்பட்ட சொத்து மதிப்புடைய சிறுதொழில்களை மட்டுமே எடுத்துக் கொண்டது. அக்குழு சில பரிந்துரைகளை வழங்கியது. அதன்படி சிறு தொழில்களின் நடைமுறை மூலதனத்திற்கு உதவிடுவதற்கு, அரசுத்துறை நிறுவனங்கள் சிறு தொழில்களிடம் வாங்கிடும் பொருள்களுக்கு உடனடியாகப் பணம் செலுத்திட வேண்டும் என்று கூறியது. மாநிலத் தொழில் உதவிச் சட்டங்கள் மூலமாக (State Aid to Industries Acts) நீண்ட காலக்

கடன் வசதிகளை மாநில அரசுகள் வழங்க வேண்டுமென்றும், மாநில நிதி இணைக் கழகங்களும் அத்தகைய நிதி வசதிகளைச்செய்திட வேண்டும் என்று கூறியது. மேலும் 'சிறு தொழில்களுக்கான சிறப்பு வளர்ச்சி இணைக் கழகம்' ஒன்றை ரூ 6·5 கோடி பங்கு மூல தனத்துடன் தொடங்கி அதன் மூலம் நீண்ட காலக் கடன்களை வழங்க வேண்டும் என்று பரிந்துரைத்தது.

'பன்னாட்டுத்திட்டக்குழுவும்' சில பரிந்துரைகளை வழங்கியது. அவைகளாவன :

(i) வணிக வங்கிகள் தம் கிளைகளுக்கு அதிக அதிகாரங்கள் வழங்கி, சிறு தொழில்களுக்கு அதிகமான கடன் வசதிகள் செய்து தர முன்வர வேண்டும்.

(ii) சிறு தொழில்களுக்கு நிதி வழங்கிட கூட்டுறவு வங்கிகளும் அதிக அக்கறை கொள்ள வேண்டும்.

(iii) ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு மாநில நிதி இணைக் கழகத்தை (State Financial Corporation) நிறுவிட வேண்டும். அவ்விணைக் கழகத்தின் ஒரு பகுதி நிதி சிறு தொழில்களுக்கு வழக்கப்படுவதற்கென்றே ஒதுக்கி வைக்கப்பட வேண்டும்.

(iv) நில உடைமைகளைப் பிணையமாகப் பெற்றுக் கொண்டு கடன் வழங்கு முறைகளை வளர்த்திட வேண்டும்.

இப்பரிந்துரைகளை ஏற்றுக் கொண்ட அரசு, மாநிலம் ஒவ்வொன்றிலும் ஒரு 'மாநில நிதி இணைக்கழகத்தை' அமைக்க உதவியது. மாநில நிதி இணைக் கழகங்கள் சிற்றளவுத் தொழில்களுக்கு நிதி வழங்கிடச் சிறப்புத் திட்டங்கள் வகுத்தன. சான்றாக செப்டம்பர் 1971 முடிய எல்லா மாநில நிதி இணைக்கழகங்களும் வழங்கிய மொத்தக் கடன் தொகை ரூ 115·36 கோடியாகும். இக்கடன்கள் நிலம், கட்டிடம், இயந்திரங்கள் போன்றவற்றில் முதலீடு செய்திட வழங்கப்பட்டன. வணிக வங்கிகளும் அண்மைக் காலங்களில் தம் பங்கினைச் சிறப்பாக ஆற்றியுள்ளன. குறிப்பாக வங்கிகளைச் சமூகக் கட்டுப்பாட்டினுள் (Social Control) கொணரப்பட்ட பின்பு, அவை சிறு தொழில்களின் தேவைகளைக் கவனிக்கத் தொடங்கின. 14 முன்னணி வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்ட பின்பு இப்பணி மேலும் அதிகரித்தது. சான்றாக 1947 டிசம்பர் முடிய தேசிய மயமாக்கப்பட்ட 14 வணிக வங்கிகள் 'சிறு தொழில்களுக்கு வழங்கிய கடன் தொகை ரூ 482·84 கோடியாகும். இக்கடன்கள் 1,48,969 சிறு தொழில்களுக்கு

வழங்கப்பட்டன. வங்கிகள் அளிக்கும் கடன் தொகைகள் சிறு தொழில்களின் நடைமுறை மூலதனத்திற்குப் பயன்படுகின்றன. இந்திய அரசு அமைத்துள்ள 'கடன் உறுதி மொழித் திட்டம்' (Credit Guarantee Scheme) மூலமாக, சிறு தொழில்களுக்கு வணிக வங்கிகளால் வழங்கப்பட்ட கடன்களில் 75 சதவீதம் வரை ஏற்படும் இழப்புகளுக்கு உறுதி மொழி வழங்கப்படுகிறது. ஸ்டேட் பேங்க் ஆப் இந்தியாவும் அதன் துணை வங்கிகளும் ஆற்றியுள்ள பணிகளை இங்கு நினைவு கூறவேண்டும். மொத்தச் சிறு தொழில் நிறுவனங்களில் 40 சதவீதம் வரையான நிறுவனங்கட்கு ஸ்டேட் பேங்க் ஆப் இந்தியா மற்றும் அதன் துணை வங்கிகள் உதவி புரிந்துள்ளன. அண்மைக் காலங்களில் இத்தகைய மாற்றம் கொண்ட கொள்கையைக் கடைப்பிடிப்பதால் சிறு தொழில்களின் நிதித் தேவைகள் ஓரளவு கவனிக்கப்பட்டாலும், அத்துறையின் முழுத் தேவைகளையும் ஈடுகட்டி விட்டதாகக் கூற முடியாது. எனவே தான், 1954ல் ரிசர்வ் பேங்க் ஆப் இந்தியாவால் அமைக்கப்பட்ட ஷராப் குழுவானது 'சிறப்பு வளர்ச்சி இணைக் கழகம்' (Special Development Corporation) ஒன்றை நிறுவும்படி ரிசர்வ் வங்கியைக் கேட்டுக் கொண்டது. அவ்விணைக் கழகத்தின் தொடக்க கால பங்குப் பத்திர மூலதனம் ரூ 5 கோடியாக இருக்க வேண்டும் என்றும், அப்பங்குகள் ரிசர்வ் வங்கி, வணிக வங்கிகள், காப்பீட்டு நிறுவனங்கள், தனி நபர் போன்ற துறைகள் மூலம் முதலீடு செய்யப்பட வேண்டும் என்றும் பரிந்துரைத்தது.

## II. கச்சாப் பொருள்கள் பற்றாக்குறை :

குடிசைத் தொழில் மற்றும் சிற்றளவுத் தொழில் அதிபர்களுக்குத் தேவையான தரமான கச்சாப் பொருள்கள் நியாயமான விலையில், தேவைப்படும் அளவிற்குக் கிடைப்பதில்லை. பேரளவுத் தொழில்களே கச்சாப் பொருள்களின் பெரும்பகுதியை வாங்கி விடுகின்றன. கம்பளி நெசவாளர்கள் இத்தகைய குற்றச்சாட்டைக் கூறியுள்ளனர். தங்கள் பகுதியில் கிடைக்கவல்ல கச்சாக் கம்பளியில் பெரும்பகுதியை பேரளவுக் கம்பளித் தொழிற்சாலைகள் வாங்கிக் கொள்வதாகக் கூறினர். சில இடங்களில் வேறு வழிகளில் கச்சாப் பொருள்களில் பற்றாக்குறை ஏற்படுகிறது. சான்றாக, மேற்கு வங்காளத்திலுள்ள கைத்தறி நெசவாளர்களுக்குத் தேவையான நூலானது, சென்னை, பம்பாய் போன்ற பகுதிகளிலிருந்து கொண்டு செல்லப்பட வேண்டியுள்ளது. ஆனால் அவர்களுக்குத் தேவைப்படும் அளவிற்கு நூலின் அளிப்பு இருப்பதில்லை என்று கூறியுள்ளனர்.

இப்பற்றுக் குறையினை நான்கு வகையாகப் பிரித்து ஆராய இயலும்.

தரமான கச்சாப் பொருள் கிட்டாமை : எம். எஸ். ஷெட்டி ஆய்ந்த ஒரு ஆய்வின்மூலம், பொதுப்பொறியியல், சோப் தயாரிப்பு போன்ற பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் இப்பிரச்சினை மிக அதிகமாக இருந்தது.

(ii) மொத்தக் கொள் முதலுக்கு நிதியின்மை : கச்சாப் பொருள்கள் கிடைக்கின்ற வேளையில் மொத்தமாகக் கொள்முதல் செய்து இருப்பு வைத்துக் கொள்ளக் கூடிய அளவிற்கு சிறு தொழில்களிடம் நிதி வசதி இல்லை. பல சிறு தொழில் நிறுவனங்கள் இக் குறையைக் குறிப்பிட்டுள்ளன. பாத்திரங்கள் தயாரிப்புத் தொழில், சோப் தயாரிக்கும் தொழில், சாயம் காய்ச்சும் தொழில் போன்ற தொழில்களில் இப்பிரச்சினை அதிகமாக இருப்பதாக எம். எஸ். ஷெட்டி கூறுகிறார்.

(iii) சந்தையில் அதிகவிலை : மொத்தக் கொள்முதல் செய்வதற்கு சிறு தொழில்களுக்கு வாய்ப்பு இன்மையால் அவை அவ்வப் பொழுது, சிறுகச் சிறுக வாங்க வேண்டியதாகிறது. இதன் விளைவாக அதிகவிலை கொடுத்து கச்சாப் பொருள்களை வாங்க நேரிடுகிறது. இரும்பு, எஃகு, நிலக்கரி போன்ற கட்டுப்பாடுகள் மிக்க பொருள்களில் விலை உயர்வு அதிகம் காணப்படுவதால், தம் தேவைக்கேற்ற அளவு கச்சாப் பொருள்களை வாங்க இயலுவதில்லை.

(iv) போக்கு வரத்துச் சிக்கல் : சரக்குகளைப் போக்குவரத்துச் செய்வதற்குப் பதிவு செய்தல், இரயில் பெட்டிகள் பற்றுக்குறை ஆகியவைகளோடு, அதிகமான போக்குவரத்துக் கட்டணமும் இப் பிரச்சினையில் அடங்குகிறது. திருந்திய சாலை வசதிகளோ, இணைப்புச் சாலைகளோ இல்லாமை போன்றவைகளும் இச்சிக்கல்களுள் அடங்கும்.

(v) இறக்குமதி கச்சாப்பொருள்கள் கிட்டாமை : முன்னுரிமைத் தன்மை பெற்ற தொழில் இனங்கள் பட்டியலில் இருக்கின்ற சிறு தொழில்களுக்கு இறக்குமதி செய்யப்படும் கச்சாப் பொருள்களிலிருந்து, அவற்றின் முழுத் தேவையளவிற்கும், கச்சாப்பொருள்கள் அளிக்கப்படும் என்று அரசு அறிவித்தது ஆனால் துரதிஷ்டவசமாக அந்தப் பட்டியலில் ஒரு சில சிறுதொழில்கள் மட்டுமே இடம் பெற்றன. எனவே பெரும்பாலான சிறு தொழில்கள்,

இறக்குமதி செய்யப்பட்ட கச்சாப் பொருள்களிலிருந்து, தங்களுக்குத் தேவைப்படும் அளவில் 20 முதல் 25 சதவீதமே பெற முடிந்தது.

அண்மைக் காலங்களில் சிறு தொழில்களுக்கு வழங்கப்படும் தொழில் அனுமதிகள் அதிகரிக்கப்பட்டுள்ளன. ஆயினும் அதே வேளையில் புதிதாகத் தொடங்கப்படும் சிறு தொழில் நிறுவனங்கள் எண்ணிக்கையும் அதிகரித்து வருவதால், பல நிறுவனங்கள் தங்களுக்குத் தேவையான கச்சாப் பொருள்களை பெரும்பாலும் வெளிச் சந்தையில் அதிக விலைகொடுத்து வாங்குகின்றன. எனவே, தொழிலக வளர்ச்சி அமைச்சில கூடுதல் செயலராக (Additional Secretary) பணியாற்றிய திரு. கே. பாலசந்திரன் தலைமையில் அமைந்த குழுவானது, இறக்குமதி செய்யப்படும் கச்சாப் பொருள்கள் தேவைப்படும் சிறுதொழில்களை, 100 சதவீதம், 75 சதவீதம், 50 சதவீதம் தேவைப்படும் தொழில்களெனப் பிரித்தது. இப்பரிந்துரையை மத்திய சிற்றளவுத் தொழில்கள் வாரியமானது ஏற்றுக் கொண்டாலும், அதனைச் செயல்படுத்தவில்லை. கச்சாப்பொருள்கள் பற்றுக்குறையை நீக்கிட அரசுக்கு 1951-ஆம் ஆண்டு தொழில்கள் வளர்ச்சி மற்றும் ஒழுங்கு படுத்தல் சட்டத்தின் மூலம் அதிகாரங்கள் வழங்கப்பட்டும் கூட, அரசு இதில் அதிக அக்கறை காட்டவில்லை. இவ்வாறு கச்சாப் பொருள்கள் பற்றுக்குறையாலும், கச்சாப் பொருள்களின் விலை உயர்வாலும், சிறுதொழில்கள் உற்பத்தித்துறையில் போட்டியிட இயலவில்லை. எனவே இப்பிரச்சினையைத் தீர்த்துவிட அதிக அக்கறை காட்டவேண்டும்.

### III உற்பத்தி முறைச் சிக்கல்கள் :

சிறு தொழில் உற்பத்தியாளர்களில் பலர் காலத்திற்கொவ்வா பழைய உற்பத்தி முறைகளை கையாளுகின்றனர். பயன் படுத்தும் கருவிகளும், பழமையானவை. உற்பத்தி முறை பற்றிய பயிற்சியினையோ, ஆராய்ச்சியினையோ மேற்கொள்ளவில்லை. இதனைத்தான் ஃபோர்டு அறக் கட்டளைக்குழு இவ்வாறு கூறியது: ‘பெரும்பாலும் தொன்மையான உற்பத்தி முறைகளே கையாளப்படுகின்றன. அம்முறைகள் தலைமுறை, தலைமுறையாக மாற்றப்படாமல் உள்ளன. எனவே தலா உற்பத்தி வீதம் குறைவாக உள்ளது. இதனால் குறைந்த கூலியும் குறைந்த வருவாயுமே கிட்டுகின்றன’.

இந்தியத் திட்டக்குழுவும் இதே வகையான கருத்தைத்தான் கொண்டுள்ளது. சில தொழில்கள் வளர்ச்சியானது, குறைந்த மட்ட தொழில் நுட்பம், பயிற்சியும் அனுபவமும் பெற்ற மேற்பார்வை நிபுணர்கள் இல்லாமை காரணங்களால் பாதிக்கப்படுகிறது.

'இந்தத் தொழில்கள் கிராமக் கைவினைக் கலைஞர்களுக்கும், நிறை குறை வேலைவாய்ப்பு பெற்ற பெண்களுக்கும் ஒரு பகுதி நிவாரணம் அளிக்கவல்ல வேலை வாய்ப்புகளை அளித்திட்டாலும், அவை முழுக்க முழுக்க முறையான, நல்ல வருமான மிக்க வேலைகளை வழங்கவில்லை. அல்லது சிலவகைப் பயிற்சி, கல்வி போன்ற நடவடிக்கைகளாலும் இளைஞர்களைக் கவரவில்லை.'[1] சிறுதொழில்களில் இந்நிலை ஓரளவு மட்டுப் படுத்தப்பட்டிருந்தாலும் கிராமத் தொழில்களில் பழைய நிலையே நீடிக்கின்றது.

பெரும்பாலான சிறுதொழில்களும், குடிசைத் தொழில்களும் இடைத்தரகர்கள் போன்ற இடையீட்டாளர்களிடம் சிக்கிக்கொண்டிருக்கின்றன. இவ்விடையீட்டாளர்கள் சிறு தொழில்களை நவீனமயமாக்கல், தொழிலில் முன்னேற்றம் காணல் என்பதில் அக்கறை அற்றவர்களாக விளங்குகின்றனர். பேரளவுத் தொழிலில் இந்நிலை காணப்படவில்லையாதலால் அவை சீரிய முன்னேற்றம் பெறுகின்றன. இத்தகையதோர் சூழ்நிலையில் நமது குடிசைத்தொழில்களும் சிறு தொழில்களும் வளம் பெற வேண்டுமெனில் முறையான முன்னேற்றம் பெற வேண்டுமெனில், அரசு தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டு பயிற்சி வசதிகளை அதிகரிக்கவேண்டும். ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவும் தனது அறிக்கையில் பல்நோக்கு தொழில் நுட்பக் கழகங்களை அமைக்கவும் தேசிய வடிவமைப்புப் பள்ளி ஒன்று அமைக்கவும் பரிந்துரைத்தது (இக்குழுவின் விரிவான அறிக்கை பிற்சேர்க்கையில் இணைக்கப்பட்டுள்ளது.) இப்பரிந்துரைகளை ஏற்று அரசு நான்கு பல்நோக்குத் தொழில்நுட்பக் கழகங்களையும், பல சிறு தொழில் பணி நிறுவனங்களையும் அமைத்துள்ளது. அவை முறையான தொழில்நுட்பப் பணிகளை ஆற்றுகின்றன. ஆயினும் அரசு இத்துறையில் இன்னும் அதிக ஈடுபாடு கொள்ள வேண்டும்.

## IV சந்தை பற்றிய சிக்கல்கள்

குடிசைத் தொழில் மற்றும் சிறு தொழில்களின் உற்பத்திப் பொருள்களுக்கு மிகவும் குறுகிய சந்தைப் பரப்பு வசதிகளே உள்ளன. அந்தந்த வட்டாரங்களுக்குள்ளேயே அல்லது அந்தந்த மாநிலங்களுக்குள்ளேயே மட்டும் தான் பெரும்பாலான நிறுவனங்களின் பொருள்கள் விற்பனை செய்யப்பட வேண்டியுள்ளன. இதன் காரணமாக இலாபகரமான விலைகளை அப் பொருள்கள் பெறுவதற்கான வாய்ப்புகள் குறைந்து வருகின்றன. ஒரு சில நிறுவனங்கள்தாம் நுகர்வோரின் மாறி விட்ட விருப்பங்களை அறிந்து அதற்

2. Third Five Year Plan Chapter 25.

கேற்றாற்போல் தயாரிக்க முற்படுகின்றன. மேலும் சிறு தொழில்கள் தத்தமக்குள்ளே கடுமையான போட்டிகளில் ஈடுபட்டிருப்பதால் அவை இப் போட்டியின் காரணமாகவே நியாயமான விலைகளைத் தம் பொருள்களுக்குப் பெற இயலவில்லை

இரண்டாம் உலக யுத்தத்தின் போதும் அதை ஒட்டி அமைந்த சிற்சில ஆண்டுகளிலும் சிறு தொழில் துறையினரின் பொருள்களின் அளிப்பை விட தேவை சற்று அதிகமாகவே இருந்தது. ஆயினும் கூட அவர்கள் தங்கள் பொருள்களுக்கு கிட்டிய விலையின் நியாயமான இலாபத்தை அடைய இயலவில்லை. இதற்குக் காரணம் அத் துறையில் இருந்த கணக்கு வழக்கற்ற இடையீட்டாளர்கள் என்பர். அதோடு அவர் தம் பொருள்களின் தரம் குறைந்த தன்மையும் நல்ல இலாபத்தினைப் பெற்றுத்தர இயலவில்லை. ஜமீன்தாரி ஒழிப்பு முறையும், மன்னராட்சி முறையும், மன்னர் மானிய முறையும் நடை முறையில் ஒழிக்கப்பட்ட பின்பு, சில வகைத் தொழில்களின் உயர்ந்த ரக கைவினைப் பொருள்களின் விற்பனை பாதிக்கப்படவே, இத் தொழில் மீண்டும் துயர் நிலையுற்றது. சான்றாக காசிப்பட்டு வகைகள், காஷ்மீர்ச் சால்வைகள் போன்ற பொருள்கள் இத்தகைய பாதிப்பை அடைந்தன.

பொதுவாக, அண்மைக் காலங்களில் பொது மக்களின் வாங்குந் திறன் விலைவாசி உயர்வினால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது சிறு தொழில் பொருள்களுக்கு ஏற்றுமதி வாய்ப்புக்களைப் பெருக்கினாலன்றி இப்பிரச்சினைக்கு மாற்றுத் தீர்வு கிடையாது. அமெரிக்கா கனடா, ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, மத்திய கிழக்கு நாடுகளில் நமது குடிசைத் தொழில் மற்றும் சிறு தொழில்களைச் சார்ந்த கைவினைப் பொருள்களுக்கான தேவை சிறப்பாக இருக்கின்றபடியால், அந் நாடுகளுக்கு ஏற்றுமதியைப் பெருக்க வாய்ப்புக்கள் உள்ளனவா என்பதைத் தெளிவாக, விரிவாக ஆராய வேண்டும். கலை நுட்ப, கைவினைப் பொருள்கள், கலை நுட்ப ஆடைத்துணிகள், பின்னல் வேலை மிக்கத் துணிகள், விளையாட்டுச் சாதனங்கள் போன்றவற்றை இந்நாடுகள் விரும்புகின்றன. எனவே இவ் வாய்ப்புகளைப் பயன்படுத்த வேண்டும். ஆயினும் அவைகள் நாம் காட்டுகின்ற மாதிரிப் பொருள்களின் தரத்திற் கொப்ப, பேரளவில் நம்மிடமிருந்து இறக்குமதி செய்ய விரும்புகின்றன. எனவே, ஏற்றுமதிப் பொருள்களின் தரத்தை உயர்த்தி அவர்களின் தேவைக்கு ஈடுகட்ட வேண்டியது அவசியம்.

'முறையான சந்தை பற்றிய ஆய்வு ஒன்றினை மேற்கொண்டால், அவ் வாய்வானது சிறு தொழில்களுக்கு உள்ள பல

வாய்ப்புகளை வெளிப்படுத்தும். நன்றாக உருவாக்கப்பட்ட, மின் ஆற்றல் தேவைப்படாத விவசாயக் கருவிகள், இல்லங்களுக்குப் பயன்பட வல்ல சிறிய கருவிகள் போன்றவைகளைத் தரமுடன் அதிக அளவில் தயாரிக்க முற்பட வேண்டும்' என்று ஃபோர்டு அறக் கட்டளைக்குழு கூறியுள்ளதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும். மேற்கூறிய குழு சந்தை வசதிகள், வளர்ச்சிக்கு கீழ் வரும் முறைகளை மேற் கொள்ள வேண்டும் என்று கூறியுள்ளது.

(i) இந்தியாவில் தயாரிக்கப்பட்ட பொருள்கள் தரமிக்கதாக வும், சீரான ஒரே தரம் கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

(ii) நுகர்வோர் தேவைக்கேற்றவாறு பொருள்கள் உற்பத்தியைப் பெருக்கத் தூண்ட வேண்டும். மக்களின் உள் ளார்ந்த தேவைகளையும் தூண்டும் வண்ணம் பொருள்களின் வடிவமைப்பை மாற்ற வேண்டும்.

(iii) கிராமத்தில் தயாராகும் பொருள்களுக்கு பேரளவு வாய்ப்புக்களை உருவாக்க வல்ல விதத்தில் தீவிர முயற்சிகள் மேற் கொள்ளப்பட வேண்டும்.

மேலும் வெளி நாடுகளுக்கு நமது பொருள்களை ஏற்றுமதி செய்வதை அதிகரிக்க 'ஏற்றுமதி வளர்ச்சி அலுவலகங்கள்' அமைக்க கேண்டும் என்று அக்குழு கூறியுள்ளதையும் கவனத்திற் கொள்ள வேண்டும்.

சிறு தொழில் பொருள்களின் சந்தைப் பிரச்சினையைத் தீர்த் திட, அமெரிக்க வல்லுநர் ஒருவர் கூறியவாறு 'அரசு தனக்குத் தேவைப்படும் பொருள்களை சிறு தொழில்களிடம் கொள் முதல் செய்ய வேண்டும்;' இதை அரசு கைக் கொண்டுள்ளது. ஆயினும் மத்திய அரசு சிறு தொழில்களின் பொருள்களைக் கொள்முதல் செய் கின்ற அளவு இன்னும் குறைவாகவே உள்ளது. அதனை அடுத்த பக்கத்து அட்டவணை தெளிவாக்கும்.

சிறு தொழில் மூலம் பெற வேண்டிய பொருள்கள் என்பதனைத் திட்டமிட்டு சுமார் 167 இனங்களை ஒரு பட்டியலில் ஒதுக்கி யுள்ளது. ஆனாலும் அரசின் முழுத் தேவைகளையும் ஈடுகட்ட வல்ல சில வகைச் சிறு தொழில்களின் பொருள்களை வாங்கும்படி அத் தொழில்களிலிருந்து அரசுக்கு வேண்டுகோள்கள் விடுக்கப் பட்டும், அந்த நியாயமான வேண்டுகோள்கள் பூரணமாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. எனவே அமெரிக்க அரசு சிறு தொழில் களுக்கு கொடுத்த ஊக்கம் போலவே மத்திய மாநில அரசுகள்

வாங்கிட முயற்சிக்க வேண்டும். மத்திய அரசு தனது துறைகளுக்குத் தேவைப்படும். பல இனப் பொருள்களை பேரளவுத் தொழில்களிடமிருந்து வாங்குவதை விடுத்து, சிறு தொழில்களிடம் வாங்க முற்பட வேண்டும். அவ்வாறுனால்தான், சிறு தொழில் பொருள்களின் சந்தைப் பிரச்சினைகளைத் தீர்க்க இயலும்.

**மத்திய அரசு கொள்முதல் செய்த சிறு தொழில் பொருள்களின் மதிப்பு**

| ஆண்டு | மத்திய அரசு வாங்கிய மொத்த உள் நாட்டுப் பொருள்கள் | 'குடிசை மற்றும் சில தொழில்கள்' துறைப் பொருள்களின் கொள்முதல் மதிப்பு |
|---|---|---|
| | (ரூபாய் கோடியில்) | |
| 1969–70 | 430·79 | 32·27 |
| 1970–71 | 518·30 | 42 63 |
| 1971–72 (28—2—1972 முடிய உத்தேச மதிப்பு) | 675·24 | 80·13 |

**Source :** 'Commerce' Supplement '25 years of Independence—A Survey–p.69—19–8–1972

**V நிர்வாக அமைப்புச் சிக்கல்கள்.**

முன்னர் கண்ட சிக்கல்கள் அனைத்துமே இங்கும் அடங்கும். அவற்றை மீண்டும் கூறினல், கூறியது கூறிய குற்றமாகும். சிறு தொழில்களை முறைப்படி அமைத்து சீரிய நிர்வாகம் செய்தால், பற்பல சிக்கல்களைத் தீர்க்க இயலும். உற்பத்திப் பொருள்களின் தரம், கொள்முதல், விற்பனை பற்றிய பயிற்சிகள், நிதி, நிர்வாக முறை ஆராய்ச்சி போன்றவற்றில் சரியான பயிற்சி அளிக்க வேண்டும். இத்தகைய நிர்வாகச் சிக்கல்களையும், அமைப்புச் சிக்கல்களையும், கூட்டுறவுகள் மூலமே சீராக்க முடியும். ஜப்பானில் இத்தகைய கூட்டுறவுகள் ஆற்றிய பங்கு மிக போற்றத் தக்க வகையில் அமைந்துள்ளன.

ஃபோர்டு அறக் கட்டளைக்குழுவின் பரிந்துரைகளுக்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ள, நான்கு 'பல் நோக்கு வட்டார தொழில் நுட்பக் கழகங்கள்', சிறு தொழில்களுக்குத் தேவையான ஆராய்ச்சி முறைகளை மேற் கொள்வதோடன்றி பயிற்சி வசதிகளையும், நவீன விஞ்ஞான நுட்பங்கள் வணிக, நிதி, நிர்வாகம், சந்தை

வசதி போன்றவற்றில் பயிற்சிகளையும் அளிக்கின்றன. இத்தகைய முயற்சிகள் சிறு தொழில் துறைகளின் நிர்வாகச் சிக்கல்களைப் போக்குவதில் ஓரளவு வெற்றி காண இயலும். ஆயினும் மாறி வரும் சூழ்நிலைக்கேற்ப சிறு தொழில்களின் நிர்வாகச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு உரிய வகைகளைக் கூறிட வல்ல ஆய்வுகளையும் அமைப்புகளையும் அமைப்பது இன்றியமையாதது.

## VI வரி விதிப்பு :

இந்திய அரசின் தொழிற் கொள்கைத் தீர்மானங்கள், சிறு தொழில்களுக்கும், பேரளவுத் தொழில்களுக்கும் வேறுபட்ட வரிக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கூறுகின்றன. ஆனால் நடை முறையில் எல்லாச் சிறுதொழில்களுக்கும் வரிச் சலுகைகள் வழங்கப்படவில்லை. மின்சக்தி பயன்படுத்தாத சிறு தொழில்களின் பொருள்களுக்கும் அல்லது மிகச்சிறிய சிறுதொழில் நிறுவனங்கட்கும் மட்டுமே தீர்வை வரி விதிப்பிலிருந்து விலக்கு கொடுக்கப்பட்டுள்ளது. அல்லது குறைந்த வரி வீதங்கள் வசூலிக்கப்படுகின்றன. சிறு தொழில்கள் வளர்ச்சியின் பொருட்டு, அதிக அளவு 'வளர்ச்சிக் கழிவு' (Development Rebate) வீதமானது சிறு தொழில்களுக்கு வழங்கப்படவில்லை. எனவே நவீன உலகின் பல் வேறு போட்டிகளுக்கு சிறு தொழில்கள் ஈடுகொடுக்க வேண்டு மெனில், அவற்றிற்கு ஓரளவு வரி விதிப்புகளிலிருந்து சலுகை வழங் கப்பட வேண்டும். அவ்வாறானால்தான் அவை பேரளவுத்தொழில் களுடன் போட்டியிட இயலும்.

## VII இதர சிக்கல்கள்

(i) **பேரளவுத் தொழில்களின் போட்டி :** சிற்றளவுத் தொழில்கள் உற்பத்தி பண்ணவல்ல பொருள்களை, பேரளவுத் தொழில்கள் சிலவும் உற்பத்தி பண்ணுகின்றன. சில வேளைகளில் அதே வகைப் பொருள்கள் இறக்குமதியும் செய்யப்படுகின்றன. இத்தகைய பொருள்களுடன் சிற்றளவுத் தொழில்கள் தொடர்ந்து போட்டியிட வேண்டியுள்ளன. எனவே சிறு தொழில்கள் நல்ல முறையில் உற்பத்தி பண்ணவல்ல பொருள்களை பேரளவுத் துறைக்கு ஒதுக்கக்கூடாது,

(ii) **மின்சக்தி அளிப்பு இன்மை :** கிராமப்புறங்களுக்கு மின்சக்தி அளிப்பு விரிவாக்கப்படாமையால் பல நிறுவனங்களுக்கு மின்சக்தி கிட்டுவதில்லை. அப்படியே கிடைத்தாலும், குறைந்த விலையில் கிட்டுவதில்லை. எனவே மின்சக்தி அளிப்பினை சிறு தொழில்களுக்கு சிறந்த முறையில் அளித்தல் அவசியம்.

(iii) **குறைந்த செலவில் போக்குவரத்து வசதி இன்மை :** பற்பல சிறு தொழில்களின் உற்பத்திப் பொருள்களைத் தொலைதூரப் பகுதிகட்கும் கொண்டு விற்பனை செய்ய போதிய போக்குவரத்து வசதிகள் இல்லை. அத்தகைய வசதிகள் கிடைத்தால்கூட, போக்குவரத்துக்கட்டணங்கள் அதிகமாக உள்ளன. இப்பிரச்சினையையும் தீர்த்து வைத்தல் முக்கியமானதாகும்.

(iv) **தரம் பிரிக்காமை :** சிறு தொழில் பொருள்களைப் பல்வேறு இனங்களாகத் தரத்தின் அடிப்படையில் பிரித்து, அதற்கேற்றவாறு நியாயமான விலைகள் பெற இயலவில்லை. எனவே தரம் பிரித்தல், 'அக் மார்க்' முத்திரை அளித்தல் போன்றவற்றில் நல்ல பயிற்சிகளை சிறு தொழில் துறையினருக்கு அளிக்க வேண்டும்.

இவையே சிறுதொழில்கள் எதிர் நோக்கியுள்ள சில பிரச்சினைகள். இச்சிக்கல்கள் சிலவற்றை தீர்த்திட அரசு தீவிரமாக முயன்று வருகிறது. இப்பிரச்சினைகளை ஆய்ந்து தக்க பரிந்துரைகள் வழங்கும் பொருட்டே அரசானது 'கார்வே குழு' 'ஃபோர்டு அறக்கட்டளைக்குழு' போன்ற குழுக்களை நியமித்து, அக்குழுக்களின் பரிந்துரைகளைச் செயல் படுத்த, ஆக்க ரீதியாக அரசு முயன்று வந்துள்ளது. இம் முயற்சிகளையும், நடவடிக்கைகளையும் அரசு தீவிரமாக்குவதன் மூலம், சிறு தொழில்களின் சிக்கல்கள் பலவற்றை வேரோடு களைய இயலும்.

## (B) அரசு மேற் கொண்ட நடவடிக்கைகள் :

இதற்கு முந்திய அத்தியாயங்களில் சிற்றளவுத் தொழில்களின் அவசியம் பற்றியும், இந்தியாவில் உள்ள ஒரு சில சிற்றளவுத் தொழில்கள் பற்றியும் அறிந்து கொண்டோம். இவ்வத்தியாயத்தில் இச் சிற்றளவுத் தொழில்துறை வளர்வதற்கு. இந்திய அரசு எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகள் பற்றியும், அவற்றிற்கு அளித்துள்ள உதவிகள் பற்றியும், அறிவோம்.

### சிற்றளவுத் தொழில் துறைக்கு உதவி அவசியமா?

இன்று அரசு மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளை இரு பிரிவாகப் பிரிக்கலாம்.

(i) நிதி சார்புடைய நடவடிக்கைகள்

(ii) நிதி சார்பற்ற நடவடிக்கைகள்

இவ்விரண்டினைப் பற்றித் தனித் தனியாகக் அடுத்துவரும் பகுதிகளில் விரிவாகக் காண்போம்.

(அ) நிதி

வளர்ச்சியுறும் நாடுகளில் மூலதனப் பற்றுக் குறையைப் பற்றி முன்னரே கண்டோம். அதில் கூறப்பட்டுள்ள மூலதனப் பற்றுக் குறைக்குரிய காரணங்கள் இந்தியாவிற்கு மிகவும் பொருந்து வதாகும். மூலதனப் பற்றுக்குறை நம் நாட்டில் சிற்றளவுத் தொழில்களைக் கூடப் பாதித்துள்ளது. சிற்றளவுத் தொழில்கள் தொடங்கி அதனைச் செம்மையுற நடத்துவதற்கு அரசின் நிதி உதவியினை நாடி நிற்கும் நிலையில் சிற்றளவுத் தொழில்கள் உள்ளன. குறைந்த வருமானம், குறைந்த சேமிப்பு, குறைந்த முதலீடு போன்ற நச்சுச் சுழலை உடைப்பதற்கு இன்று இந்திய அரசு பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துள்ளது. இந்திய அரசு எடுத்துக்கொண்ட நிதி உதவிகளை அறிவதற்கு முன் சிற்றளவுத் தொழில்களுக்கான நிதித் தேவையை அறிந்துகொள்வது நலம்.

(1) சிற்றளவுத் தொழில்களுக்கான நிதித் தேவைகள் :

பொதுவாகச் சிற்றளவுத் தொழில் துறைக்கான மூலதனத்தை இருவகையாகப் பிரிக்கலாம்.

(i) சாதாரண பங்குப் பத்திர மூலதனம். (Equity or Risk Capital)

(ii) கடன் வாங்கிய முதல். (Borrowed Capital)

கடன் வாங்கிய மூலதனத்தை மேலும் இரண்டாகப் பிரிக்கலாம்.

(1) நீண்ட காலக் கடன்கள். (Long-term loans)

(2) குறுகிய காலக் கடன்கள். (Short-term Credit)

இத்தகைய பல்வேறு மூலதனங்களின் அளவு வெவ்வேறு சிற்றளவுத் தொழில் நிறுவனங்களுக்கு அவற்றின் அளவினைப் பொருத்தும் உற்பத்தி செய்கின்ற பொருள்களின் தன்மையைப் பொருத்தும் மாறுபடும்.

(i) சாதாரணப் பங்குப் பத்திர மூலதனம் : பெரும்பாலும் நிறுவனத்தின் உரிமையாளரால் அளிக்கப்படுகின்றது. இத்துடன் அவ்வுரிமையாளரின் நண்பர்களோ, உறவினர்களோ, தங்கள் பணத்தினையும் போட்டுப் பங்காளியாகவோ அல்லது பங்குதாரராகவோ ஆகின்றனர். இம் முதல் நிலம், கட்டிடம், இயந்திரங்கள் போன்ற நிலையான சொத்துக்களில் முதலீடு செய்வதற்குப் பயன் படுகிறது. எஞ்சியுள்ளது நடைமுறை முதலாகப் பயன் படுத்தப் படும்.

(ii) a. **நீண்டகாலக் கடன் :** தொழில் வளர்ச்சிப் பணிகளுக்கும், நவீன மயமாக்கும் நடவடிக்கைகளுக்கும், நீண்ட காலக் கடன் தேவைப்படுகிறது. சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள், இத்தொகையைப் பெறுவதற்குப் பிணையாகப் போதிய நிலையான சொத்துக்கள் வைத்திருந்தால் இதனை எளிதில் பெறலாம்.

b. **குறுகிய காலக் கடன் :** நடைமுறை முதலுக்காகக் குறுகிய காலக் கடன் சிற்றளவுத் தொழில்களால் வாங்கப்படுகின்றன. மூலப் பொருள்கள் வாங்குவதற்கும், தொழிலாளர்களுக்குக் கூலி கொடுப்பதற்கும் இக்கடன் தொகைகள் பயன்படுத்தப்படுகின்றன. பொதுவாகச் சிற்றளவுத் தொழில் துறைகளில் குறுகிய காலக் கடன், நீண்ட காலக் கடனைவிட அதிகமாக இருக்கும். இக்கடன் வசதி அளிப்பதற்கு வணிக வங்கிகள் தயங்குகின்றன. வேளாண்மைத் துறைக்குக் கடன் உதவி அளிக்க மட்டுமே கூட்டுறவு வங்கிகள் அமைக்கப்பட்டன. ஆதலால் அவைகளும் தொழில் துறைக்குக் கடன் வழங்குவதில்லை. ஆகையால் அவை லேவா தேவிக்காரர்களையே நம்பி இருக்க வேண்டியுள்ளது. இவர்களிடம் 6 முதல் 15 சதவீதவட்டி செலுத்தி கடனைப் பெறுகின்றனர். அண்மைக் காலங்களில் சிற்றளவுத் தொழில்களின் நடைமுறை முதலுக்குத் தேவை அதிகரித்துள்ளது. ஆனால் அவற்றின் வளங்கள் கூடவில்லை.

நிதி என்பது தொழில் துறைக்கு உயிர்க்குருதி (life – blood) போன்றதாகும். இதன் தேவை சிற்றளவுத் தொழில்துறையில் மிகவும் உணரப்படுவதாகும். தொழில் துறையின் பல்வேறு கோணங்களிலும் நிதியின் தேவையை உணரலாம். சிற்றளவுத் தொழிலதிபர்கள் தங்கள் நிறுவனத்தின் முழுப் பொறுப்பையும் தாங்களே எடுத்துக்கொண்டு அந்நிறுவனங்கள் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் இருப்பதையே விரும்புகின்றனர்.

சிற்றளவுத் தொழில் துறைக்கு நிதி உதவி கிடைப்பது எளிதான செயலல்ல. மூலப் பொருள் பற்றுக்குறையும், நடைமுறை மூலதனப் பற்றுக் குறையும், பழமையான இயந்திரங்களும், உற்பத்திப் பொருள்களுக்கு அங்காடியில் தேவை இல்லாதது போன்ற சூழ் நிலை எனப் பல் வேறு சிக்கல்கள் அவர்களை எதிர் நோக்கி உள்ளன. இந்த இடர்களை நீக்குவதற்கு போதிய நிதி உதவி அளிக்காவிட்டால் நாளடைவில் இந் நிறுவனங்கள் மூடப்பட்டு வாட நேரிடலாம். இந்தியாவில் பல்வேறு நிறுவனங்களின் நிதி நிலைமையினை ஆராயும் பொழுது பல்வேறு நிறுவனங்கள் போதிய மூலதனம் இல்லாமல் இருப்பது தெரிய வருகின்றது, ஹௌராவில் (Howrah) உள்ள 152 பொறியியல் தொழில் துறை

களின் நிதி நிலைமையினை ஆராயும் பொழுது ஒவ்வொரு நிறுவனத்திலும் எழுப்பப்பட்ட மூலதனம் சராசரி ரூ 13,700 ஆகும். இவற்றின் கடன் தேவை ஒரு வருடத்திற்கு ரூ 1·93 இலட்சமாக மதிப்பிடப்பட்டுள்ளது. இதில் ரூ 1·13 இலட்சம் மூலப் பொருள்களாக வாங்கப் படுகின்றது. சிற்றளவுத் தொழில்களில் நிலையான முதலின் மேல் முதலீடு அதிகம் இருக்காது. இலாபமும் குறைவாகவே இருக்கும். இதனால் தங்களுக்கு வேண்டிய நிதித் தேவையை இலாபத்தை வைத்துச் சரிக்கட்ட முடிவதில்லை. இவைகளின் மூலதன அமைப்பு மிகவும் பலவீனமாக இருப்பதால், எளிதில் நீண்டக் காலக்கடன் வசதி இவர்களுக்குக் கிடைக்காது. குறைந்த காலக் கடன் கூடத் தனிப்பட்ட லேவா தேவிக்காரர்களிடமிருந்து அதிக வட்டி வீதத்தில்தான் பெற வேண்டியுள்ளது. தேய்மானத்திற்கு எந்த வித சேமிப்பு நிதியும் ஒதுக்குவதில்லை ஆதலால் இயந்திரம் பழுதடைந்ததும் அதனைச் செப்பனிடுவதற்கும் மாற்றி அமைப்பதற்கும் போதிய வசதி இல்லாமல் அல்லலுறுகின்றன.

மேற் கூறியவற்றினால், சிற்றளவுத் தொழில்துறை நிதி வசதி கிடைக்காமல் இன்னலுறுவது புலனாகின்றது. இத்துறைக்குப் போதி நிதி வசதி அளிப்பது மட்டுமல்லாமல், அங்காடி ஆய்வு, தொழில் நுட்ப அறிவு வழங்குதல், ஊக்கம் அளித்தல் போன்ற பல்வேறு உதவிகளும் வழங்கினால் இவை மேன்மேலும் வளர்ச்சி பெறுவதற்கு வாய்ப்புண்டு. இதனை மனதிற் கொண்டே இந்திய அரசு சிற்றளவுத் தொழில் துறைக்கு நிதி சார்புடைய உதவிகளும், நிதி சார்பற்ற பல்வேறு உதவிகளும் அளித்து வருகின்றது.

## (2) நிதி மூலங்கள் (Source of Finance)

(i) மரபு சார்ந்தவை: (Traditional Source) உறவினர்கள், நண்பர்கள், லேவாதேவிக்காரர்கள் முதலியோர் வழியாகக் கிட்டும் மூலதனமே மரபு சார்ந்த நிதி மூலங்கள் எனக் கூறலாம். ஏனென்றால் சிற்றளவுத் தொழில் முறை பன்னெடுங் காலமாகத் தனக்குத் தேவையான நிதி வசதியினை மேற்கூறிய துறைகளின் மூலமாகத் தான் பெறுகின்றன. அதிலும் லேவாதேவிக்காரர்கள் மிகவும் முக்கியமானவர்கள். சிற்றளவுத் தொழில்கள் தமக்குத் தேவையான நிதியினை வணிக வங்கிகள் (Commericial Banks) மூலமாகப் போதிய அளவுக்குப்பெற முடியவில்லை. இதனை அடுத்துவரும் அட்டவணை விளக்கும்.

| எண் | கடன் மூலங்கள் | மொத்தக் கடனில் கிடைத்த சதவீதம் |
|---|---|---|
| 1 | லேவாதேவிக்காரர்கள் | 50·7 |
| 2 | வணிக வங்கி | 18·9 |
| 3 | மற்றவை | 30·4 |

சிற்றளவுத் தொழில்களுக்கு நிதி உதவி அளிப்பதில் லேவா தேவிக்காரர்கள் முக்கிய பங்கு பெறுகின்றனர். மொத்த நிதித் தேவையில் ஏறத்தாழ 50 சதவீதம் அவர்கள் வழங்குகின்றனர். சிற்றளவுத் தொழில்களுக்கு நிதி உதவி செய்வதற்கு எத்தனையோ மாற்று வசதி செய்து கொடுத்தும் லேவாதேவிக்காரர்களின் கை ஓங்கியே உள்ளது. ஏனென்றால் இவர்களிடம் கடன் மிக விரைவில், எளிதில் கிடைக்கின்றது. இவர்கள் சொந்தப் பிணையத்தில் (Personal Security) கடன்களைக் கொடுக்கின்றனர். இதனால் சிறு தொழில் அதிபர்கள் விளக்கினை நாடிச் செல்லும் விட்டில் பூச்சிகள் போல லேவாதேவிக்காரர்களையே தஞ்சம் அடைகின்றனர்.

இந்த லேவாதேவிக்காரர்களால் பல தீய விளைவுகளும் உண்டு. இவர்கள் தாங்கள் கொடுக்கும் கடனுக்கு அதிக அளவில் வட்டி வசூலிக்கின்றனர். இதனால் பல வேளைகளில் சிறு தொழில் அதிபர்கள் கடனைக் கட்ட முடியாமல் திவாலாகக் கூடிய நிலையும் ஏற்படுகின்றது. இது தவிர அவர்களது உற்பத்திச் செலவுகளும் அதிகரிக்கின்றன.

(ii) புதிய நிறுவன நிதி மூலங்கள் : (Institutional Credit) சிறு தொழில் துறைகள் லேவாதேவிக்காரர்களைச் சார்ந்திருப்பதைத் தடுப்பதற்கும் இன்று அவர்களுக்குச் சுலபமான வழியில் கடன் உதவி செய்வதற்கும் பல்வேறு நிறுவனங்கள் நிறுவப்பட்டுள்ளன. அந் நிறுவனங்கள் வழங்கிய நிதி உதவியின் அளவினைப் பற்றி இங்கு காண்போம்.

(a) மாநில நிதி இணைக் கழகங்கள் (State Financial Corporations) தொழிலக நிதி இணைக் கழகம் (Industrial Finance Corporation) பேரளவு தொழில் துறைக்கு மட்டும் நிதி உதவி செய்வதற்காக நிறுவப்பட்டது சிற்றளவுத் தொழில் துறைக்கு நிதி உதவி அளிப்பதற்காக ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு மாநில நிதி இணைக் கழகம் அமைப்பதற்காக 1951-ல் மாநில இணைக் கழகங்கள் சட்டம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது.

**அமைப்பும், நிர்வாகமும்:** இவ்விணைக் கழகங்களின் முதல் அந்தந்த மாநில அரசுகளால் உறுதி செய்யப்படும். ஆனால் ரூ 50 இலட்சத்திற்குக் குறையாமலும், ரூ 5 கோடிக்குக் கூடாமலும் இருக்க வேண்டும். மொத்தப் பங்கில் 75 சதவீதம் பங்குகள் மாநில அரசும், மத்திய அரசும் முன்னணி வணிக வங்கிகளும் (Scheduled Bank), கூட்டுறவு வங்கிகளும், காப்பீட்டு நிறுவனங்களும் மற்ற நிதி நிறுவனங்களும் அந்தந்த மாநில அரசு குறிப்பிட்ட வீதத்தில் ஒதுக்கப்படும். மீதி 25 சதவீதப் பங்குகள் மக்களால் வாங்கப்பட்டன. இவை தங்கள் முதலை அதிகரிப்பதற்குக் கடனீட்டுப் பத்திரங்களும் (Bonds and debentures) வெளியிடலாம். ஆனால் இது செலுத்திய முதலுக்கு (Paid-up Capital) ஐந்து மடங்குக்கு மேல் இருக்கக் கூடாது. இம் முதலைத் திருப்பிக் கொடுப்பதும், வட்டி வழங்குவதும் மாநில அரசால் உத்திரவாத மளிக்கப்படும். மேலும் அவை ஐந்து வருட கால வைப்புகளும் (deposits) மக்களிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். ஆனால் இது செலுத்திய முதலுக்கு மேல் இருக்கக் கூடாது.

இவ்விணைக் கழகத்தினை நிர்வகிப்பதற்குப் பத்து இயக்குநர்கள் (Directors) கொண்ட குழு அமைக்கப்படும். இதில் மூவர் அரசால் நியமிக்கப்படுவார்கள். இது தவிர, ஒரு நிர்வாக இயக்குநரும் (Managing Director) அரசால் நியமிக்கப்படுவார்.

முதலில் இவ்விணைக் கழகங்கள் ஏற்கெனவே அமைக்கப்பட்டு வேலை செய்கின்ற நிறுவனங்களுக்கு மட்டுமே நிதி உதவி செய்தன. ஆனால் புது நிறுவனங்களுக்கும் நிதி உதவி அளிக்க வேண்டும் என்ற கருத்து நிலவியதால் 1956-ல் இச் சட்டம் திருத்தப்பட்டு புதிதாகத் தொடங்கப்படும் நிறுவனங்களுக்கும் நிதி உதவி அளிக்கப்பட்டது.

**பணி முறைகள் (Function):** (i) சிற்றளவுத் தொழில்கள் எழுப்பிய கடன்களுக்கு உத்தரவாதம் அளித்தல். இக்கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய காலம் 20 வருடங்களுக்கு மேல் இருக்கக் கூடாது.

(ii) சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் வெளியிடும் பங்கு, கடனீட்டுப் பத்திரங்களை மக்கள் வாங்காவிட்டால் இவ்விணைக் கழகங்கள் வாங்கிக் கொள்ளும் (Under Writing)

(iii) வணிக வங்கிகள், மாநில அரசு, மாநிலக் கூட்டுறவு வங்கிகள் முதலியன உத்திரவாதம் அளித்தால் கடன்கள் வழங்கப்படும்.

(iv) தொழிலக நிதி இணைக் கழகம், மாநில, மத்திய அரசுகளின் முகவராக விளங்கும்.

மேற்கூறியவை சிற்றளவுத் தொழில்களுடன் தொடர்பு இவ்விணைக் கழகங்கள் மூலமாக வைத்துக் கொள்ளும்.

இதன் நடவடிக்கைகளை அவ்வப்பொழுது ரிசர்வ் வங்கி மேற்பார்வை இடும். இவ்விணைக் கழகங்கள் ரிசர்வ் வங்கியிலிருந்து குறைந்த காலக் கடன்கள் பெற்றுக் கொள்ளலாம். இவ்விணைக் கழகங்கள் மற்ற மாநில இணைக் கழகங்களுடனும் ஒருங்கிணைந்து செயல் புரியலாம். ஒரு சிற்றளவுத் தொழில் நிறுவனத்திற்கு ஒரு நேரத்தில் மொத்தம் செலுத்திய முதலில் 10 சதவீதத்திற்கு மேல் கடன் ஒப்பந்தத்தில் ஈடுபடக் கூடாது. அது போல் ரூ 10 இலட்சத்திற்கு மேல் முன்பணம் (Advance) வழங்கக் கூடாது. கடன் அளிப்புத் தொகை குறைந்தது ரூ 1000 ஆவது இருக்க வேண்டும்.

இவ்விணைக் கழகங்களிலிருந்து கடன் பெறுவதற்கு நிலம், கட்டடம், நிறுவனம், இயந்திரங்கள் முதலியன ஈடாகச் காட்ட வேண்டும். இது தவிர அந் நிறுவனத்தின் மூலதன அமைப்பை வைத்தும், அதனுடைய தகுதியினை வைத்தும் கடன் வழங்கப்படுகின்றது. மேலும், இந்நிறுவனங்கள் அவ்வப்பொழுது மேற்பார்வையிடப்படும். சில இணைக் கழகங்கள் பொறியியல், துணி மற்றும் இரசாயனத் தொழில் நிறுவனங்களில் ஆலோசனைக் குழுக்கள் (Advisory Committees) நியமித்துள்ளன.

இவ்விணைக் கழகங்கள் பொறியியல், மோட்டார் வாகனத் துணை உறுப்புக்கள், சைக்கிள், மின்விசைப் பொருள்கள், சர்க்கரை காகிதம், தோல், புகையிலை, கண்ணாடி, தீப்பெட்டி, இரப்பர், சோப்பு, பிஸ்கெட்ஸ் முதலிய தொழில் நிறுவனங்களுக்கு நிதி உதவி அளித்துள்ளன. "தமிழ்நாடு தொழிலக முதலீட்டு இணைக் கழகத்தையும் (Tamil Nadu Industrial Investment Corporation) சேர்த்து தற்சமயம் 18 மாநில நிதி இணைக்கழகங்கள் உள்ளன. இவ்விணைக் கழகங்கள் 1962-63ல் ரூ 19·4 கோடியும், 1963-64ல் ரூ 17·9 கோடியும், 1964-65ல் ரூ 20 கோடியும் கடனுதவி வழங்கியுள்ளன. இவ்விணைக் கழகங்கள் ஆரம்ப காலத்தில் இருந்து 1965ஆம் ஆண்டு வரை ரூ 85 கோடிக்கும் மேல் கடன் உதவி தந்துள்ளது. 1965ல் 11 இணைக்கழகங்கள் ரிசர்வ் வங்கியிடமிருந்து ரூ 5·5 கோடி இடைக்காலக் கடனுதவி (Medium-Term Credit) பெற்றன.

தற்சமயம் இவ்விணைக் கழகங்களின் அனுமதிக்கப்பட்ட மூல தனம் ரூ 30 கோடிக்கும் மேல் ஆகும். இதில் செலுத்திய மூல தனம் ரூ 14·42 கோடி ஆகும். எனினும் இவ்விணைக் கழகங்கள் சிற்றளவுத் தொழில் துறைக்கு விரும்பிய அளவுக்கு நிதி உதவி அளிக்க முடியவில்லை. ரூ 1 இலட்சத்திற்கும் குறைவாக உள்ள சிற்றளவுத் தொழில்களுக்கு இவை உதவி புரியவில்லை. இவ் விணைக் கழகங்களிடம் கடன் பெறுவதற்காக எடுத்துக் கொள்ளும் நடைமுறைகள் எளியவை அன்று. மேலும் கடன் பெறுவதும், அதிக கால தாமதமாகின்றது. இது தவிர கடன் வாங்குவதின் மொத்தச் செலவு (வட்டி, பதிவுக் கட்டணம், (Registration Charges), முத்திரை வரி (Stamp duty) முதலியன 9 சதவீதத்தி லிருந்து 10 சதவீதத்திற்கு வருகின்றது. எனவே சிற்றளவுத் தொழில்களுக்குப் பெரிதும் உதவுவதற்கு இவை தங்கள் கடன் கொள்கைகளை எளிமை உடையதாக்க வேண்டும்.

**b. ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியா (State Bank of India)**

சிற்றளவுத் தொழில்துறை தங்களுக்குத் தேவையான நடை முறை மூலதனத்தை ஸ்டேட்பேங் ஆஃப் இந்தியா மூலம் பெற்றுக் கொள்ளலாம். சிற்றளவுத் தொழில்களுக்குக் கடன் வசதி அளிப்ப தாக 1956ல் இவ்வங்கி ஒரு முன்னோடித் திட்டத்தை (Pilot-Scheme) ஆரம்பித்தது. இதன்படி முதல் 8 மையங்கள் (Centres) தேர்ந்தெடுக்கப் பட்டன. அவையாவன: கோயம்புத்தூர், சென்னை, விஜயவாடா, கோலாப்பூர், சூரத், பம்பாய், ஆக்ரா, லூதியானா, டில்லி. இந்த முன்னோடித் திட்டத்தை நன்கு செயல் படுத்துவதற்குப் பல்வேறு நிதி நிறுவனங்களும் முகவர்களாகப் பணிபுரிகின்றன. இவை சிற்றளவுத் தொழில் துறையின் பல்வேறு காலக் கடன் தேவையைப் பூர்த்தி செய்கின்றன. இம் முன்னோடித் திட்டத்தில் பங்குபெறும் நிறுவனங்களும் அவை அளிக்கும் நிதி உதவி பற்றியும் கீழே தரப்பட்டுள்ளன. ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியா குறைந்த காலக்கடன் வசதி அளிக்கின்றது. மாநில அரசுகளின் தொழில் இலாகா (Industrial Departments of State Governments) குறைந்த காலக் கடனும், நீண்ட காலக் கடனும் வழங்குகின்றது. மாநில நிதி இணைக் கழகம் இடைக்காலக் கடன் வசதி அளிக்கின்றது. சிறுதொழில்துறை பணி நிறுவனம் (The Small industries Service Institute) சிற்றளவுத் தொழில் துறைக் குத் தொழில் நுட்ப அறிவு பற்றி அறிவுரை வழங்குகின்றது இது தவிர சிறு தொழில் அதிபர்கள் கடன் பெறுவதற்காக இந்நிறுவனம் தேசிய சிறு தொழில் இணைக்கழகத்திற்குப் (National small Industries Corporation) பரிந்துரை செய்கின்றது, சிற்றளவுத் தொழில் துறைப் பொருள்கள் விற்பதற்கும் உதவி செய்கின்றது.

மேற்கூறிய முகவர்களின் பணியினை ஒருங்கிணைப்பதற்காகப் பல்வேறு குழுக்கள் உள்ளன. அவை : வட்டார செயற்குழு (Local working Party), வட்டார ஒருங்கிணைப்புக்குழு (Local co-ordination) Committee), மைய ஒருங்கிணைப்புக்குழு (Central-Co-ordination Committee).

நிதி உதவி வேண்டுபவர்கள் ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியா விற்கு மனுச் செய்யவேண்டும். இம் மனுவை எல்லா நிறுவனங் களும் பரிசீலனை செய்து கடன் வழங்குகின்றது. ஒரு மனு தள்ளு படி செய்யப்பட்டால் ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியா அதனைச்சிறு தொழில் துறை பணி நிறுவனத்திற்கு அனுப்பும். அந்நிறுவனம் மனுதாரருக்கு வேண்டிய தொழில் நுட்பம், நிர்வாகம் முதலிய வற்றில் மாறுதல் ஏற்படுத்துவது பற்றிப் பரிந்துரைக்கும்.

முன்னோடித் திட்டத்தில் சிற்றளவுத் தொழில் துறைக்கு நிதி உதவி அளிப்பதற்கு ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியா தாராளமான கடன்கொள்கையைப் பின்பற்றும். ஒரு குறிப்பிட்ட நிறுவனம் கடன் வசதி பெறுவதற்குரிய தொழில் நுட்பத்திலும் நிர்வாகத்திலும் வளர்ச்சியுறுமல் இருந்தால் அது அவ்விரு துறைகளிலும் வளர்ச்சி பெறுவதற்குத் திட்டங்கள் அமைத்துக் கொடுக்கப்படும்.

மாநில நிதி இணைக் கழகங்கள் தாங்கள் கடன் கொடுத்த நிறு வன அதிபர்களின் நிதி நிலைமை பற்றியும், அந்நிறுவனத்தின் நிலை பற்றியும், அந்நிறுவனங்கள் தாங்கள் பெற்ற கடனை பயன்படுத்தும் முறைபற்றியும் விவரங்கள் சேகரித்து அனுப்புவது ஸ்டேட் பேங் ஆப் இந்தியாவின் கடமையாகும்.

1956ல் இத்திட்டம் ஆரம்பித்த பொழுதுள்ள கடன் கொள்கை மிகவும் கண்டிப்பாக இருந்தது. ஆனால் சிற்றளவுத் தொழில் துறைக்கு உதவுவதற்குக் கடன் கொள்கை தாராளமாக இருக்க வேண்டும் என்பது பின்னர் உணரப்பட்டு அதற்குரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1959 முதல் சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் கடன் வசதிக்காக எளிதில் ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியாவினை அணுகலாம். சாதாரணமாக சுமார் 120 மனுக்களில் 13 மனுக்களே கடன் வசதி தருவதற்கு ஒத்துக் கொள்ளப்படும். ஆனால் தற்சமயம் தாராளமான கொள்கையைப் பின்பற்றுவதால் சுமார் 110 நிறுவனங்கள் கடன் வசதி பெறுகின் றன. 1965ல் இவ்வங்கி ரூ 53·16 கோடி கடன் வழங்கியுள் ளது. இதனுல் 8,234 நிறுவனங்கள் பயன் பெற்றன. இயந்திரங் கள் வாங்குவதற்குத் தவணைமுறை கடன் திட்டத்தின்கீழ் 1965ல்

ரூ 1·8 கோடி கடன் வழங்கப்பட்டது. 1959 முதல் முன்னோடித் திட்டம் பல்வேறு கிளைகளுக்கும் பரப்பப் பட்டது.

முன்னோடித் திட்டத்தின் கீழ் பயன் பெறும் மையங்கள் ஒரு முகமாக வளர்ச்சி பெறவில்லை. இம் மையங்களின் வளர்ச்சி ஒன்றுக் கொன்று மாறுபட்டுள்ளன. எனினும், பொதுவாக இத் திட்டம் வெற்றிகரமாக நடைபெறுகின்றது என்றே கூறலாம். இதனால் பல்வேறு சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் மூடிவிடக் கூடிய நிலையிலிருந்து தப்பித்து இன்று நன்கு இயங்கி வருகின்றன. தற்சமயம் இவ்வங்கியில் கடன் பெறுவதற்குப் பிணையமாக வைக்கப்படும் பொருள்களின் பட்டியலும் அதிகமாக்கப் பட்டுள்ளது. எல்லாக் கூலிகளும் உட்பட சிற்றளவுத் தொழில் நிறுவனங்களிடம் இருந்து வாங்கப்படும் வட்டி வீதம் ஆறு சதவீதமாக்கப்பட்டது.

**(c) தேசிய சிறு தொழில் இணைக் கழகம்**
**(National small Industries Corporation)**

1953ல் அழைக்கப்பட்ட ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவின் பரிந்துரையின்படி 1955ல் தேசிய சிறு தொழில் இணைக் கழகம் ரூ 10 இலட்சம் அனுமதிக்கப்பட்ட மூலதனத்துடன ஆரம்பிக்கப் பட்டது. பின்னர் இது ரூ 50 இலட்சமாக உயர்த்தப் பட்டது.

**பணிமுறைகள்.**

(i) துணை நிறுவனங்கள் அமைப்பதற்கு உதவி புரிதல்.

(ii) சிற்றளவுத் தொழில் துறைப் பொருள்களுக்கு அரசிடமிருந்து ஆணை (Order) பெறுவதற்கு உதவி புரிதல்.

(iii) தவணை முறையில் இயந்திரங்களை வழங்குதல்.

(iv) அங்காடி பற்றிய உதவிகள் அளித்தல்—சிற்றளவுத் தொழில் துறைப் பொருள்களின் தரத்தைக் கூட்டுதல், மூலப்பொருள்கள் பங்கீடு செய்தல், இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்கள் கிடைப்பதற்கு உதவி புரிதல் முதலியன.

(v) ஒக்லா, ராஜ்காட், கேரளா முதலிய இடங்களில் அமைக்கப்பட்ட மூல முன் மாதிரி உற்பத்தி, பயிற்சி மையங்களை (Prototype and training Centre) நிர்வாகம் செய்தல்.

(vi) ஒக்லா, நைநி போன்ற இடங்களில் தொழிற்பேட்டைகளை ஆரம்பித்து நிர்வாகஞ் செய்தல்.

(vii) சிற்றளவுத் தொழில் பொருள்களின் விற்பனையைக் கூட்டுவதற்காகப் பொருட்காட்சிசாலைகளில் பங்குகொள்ளுதல்.

இது தவிர ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியாவின் துணையுடன் இவ்விணைக் கழகம் உத்தரவாதத்திட்டம் எண் 2. (National small Industries Corporation Guarantee Scheme No. 2) என்ற திட்டத்தை ஆரம்பித்துள்ளது. இதன்படி சிறுதொழில் நிறுவனங்கள் மூலப் பொருள்கள் வாங்குவதற்கு ஸ்டேட் பேங் ஆஃப் இந்தியாவின் உதவியுடன் கடன் வசதி செய்து கொடுக்கும் சிறுதொழில் நிறுவனங்கள் மூலப் பொருள் வழங்குபவர்களிடம் மூலப்பொருள் கடனாகப் பெறும் பொருட்டுப் பற்றுத்திருமுகம் (Letter of Credit) வழங்கும்.

4. **வணிக வங்கிகள் (Commercial Banks)**

இயல்பாக வணிக வங்கிகள் சிற்றளவுத் தொழில் துறைக்குக் கடன் வசதி அளிப்பதில்லை. சிற்றளவுத் தொழில் துறையைப் பொருத்தமட்டில் 'என்னைத் தொடாதே' (Touch me not) என்ற கொள்கையினைக் கடைப் பிடித்துவந்தது. ஏனென்றால் சிற்றளவுத் தொழில்களுக்கு நிதிஉதவி அளிப்பது என்பது ஓர் இடர் நிறைந்த பணியாகும். சிறு தொழிலதிபர்கள் போதிய பிணையம் வைத்திருப்பதில்லை. மேலும் அவர்களின் வளர்ச்சியினைப் பற்றி விவரமான அறிக்கை வைத்திருக்கமாட்டார்கள். எனவே அவர்களின் கடன் தேவையினைப் பற்றி நன்கு அறிய முடியாது. இது தவிர சிற்றளவுத் தொழில் துறைகளின் பொருள்களுக்கு நாட்டில் நல்ல வரவேற்பு இல்லாததாலும், சிற்றளவுத் தொழில் துறைக்குக் கடன் வசதி வழங்குவதற்கு வணிக வங்கிகள் தயங்குகின்றன. வணிக வங்கிகளால் சிற்றளவுத் தொழில்துறை எவ்வளவு தூரத்திற்கு ஒதுக்கப் பட்டது என்பதைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்கும்.

**மொத்த பணத்தில் வெவ்வேறு தொழில் நிறுவனங்களுக்கு அதன் சொத்தின் அளவினை வைத்துக் கொடுக்கப்பட்ட கடன் - சதவீதத்தில்.**

| எண் | | நிறுவனங்களின் சொத்துக்கள் (ரூபாய் இலட்சத்தில்) | | | |
|---|---|---|---|---|---|
| 1 | தொழில் நிறுவனம் | 1·0 | 1·5 | 5·20 | 20-ம் அதற்கு மேலும் |
| 2 | சராசரிக் கடன் வசதி (சதவீதம்) | 3·0 | 7·8 | 13·6 | 75·6 |

மேலே கொடுக்கப்பட்ட அட்டவணையிலிருந்து ரூ 20 இலட்சத்திற்கு மேல் முதலீடு செய்துள்ள நிறுவனங்களுக்கு வணிக வங்கிகள் மொத்த கடன் வசதியில் 75 சதவீதம் அளிக்கின்றன. ஆனால் ரூ. 5 இலட்சத்திற்கும் குறைவாக முதலீடு செய்துள்ள நிறுவனங்களுக்கு 10 சதவீதமே கடன் வசதி செய்துள்ளன.

சமீப காலமாகத்தான் சிற்றளவுத் தொழில் துறையின் முக்கியத்துவம் உணரப்பட்டு அதற்கு எல்லாவித உதவிகளும் வழங்கி ஊக்குவிக்கப்பட வேண்டும் என்பது ஒத்துக் கொள்ளப்பட்டுள்ளது. சிற்றளவுத் தொழில் துறைக்கு வணிக வங்கிகள் உதவி புரிய வேண்டும் என்ற நோக்கத்தோடு வங்கிகளின் மேல் சமூகக் கட்டுப்பாடு (Social Control over Banks) கொண்டுவரப்பட்டது. ஆனால் இக்கட்டுப்பாட்டின் சாதனையை அறிவதற்கு முன்னால் 14 முக்கிய வணிக வங்கிகள் தேச உடைமை ஆக்கப்பட்டன. இன்று வேளாண்மை, சிற்றளவுத் தொழில்துறை ஏற்றுமதித்துறை போன்ற மூன்று துறைகளும் முன்னுரிமைத் துறைகளாகக்(Priority Sector) கருதப்படுகின்றன இதன்படி இந்த முன்னுரிமைத் துறைக்கு தேசிய மயமாக்கப்பட்டுள்ள வங்கிகள் கடன் உதவி அளிக்க வேண்டும் என அறிவிக்கப்பட்டுள்ளது. இதனால் இன்று தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் சிற்றளவுத் தொழில் துறைக்கு அதிக அளவில் கடன் வசதி செய்ய வந்துள்ளன. 1966-67 ல் ரிசர்வ் வங்கியின் ஆய்விலிருந்து சிற்றளவுத் தொழில் துறைக்கு அளித்துள்ள கடன் வசதியில் 1965-66ல் இருந்ததைப்போல் இரண்டு மடங்கு கூடியுள்ளது என்பது தெரிகின்றது. 1966-67ல் வழங்கிய கடன் வசதி ரூ 178·55 கோடியாகும். எனினும் இது இவ்வங்கிகள் அளித்துள்ள மொத்த கடன் வசதியில் 6·3 சதவீதமே ஆகும். ஆனால் இவ்வங்கிகள் தனது வைப்புகளில் 31 சதவீதம் சிற்றளவுத் தொழில் துறைக்குப் போதிய கடன் வசதி தருவதாக ஒப்புக்கொண்டது.

ஜப்பான் நாட்டில் சிற்றளவுத்தொழில் துறைக்காக அங்குள்ள வங்கிகள் மொத்தக் கடன் வசதியில் சுமார் 60 சதவீதம் வழங்குகின்றது.

அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளில் சிற்றளவுத் தொழில் துறைக்குக் கடன் வசதி அளிப்பதற்காகச் சிற்றளவுத் தொழில் நிறுவனங்களின் நிலையினை அவ்வப்பொழுது எடுத்துக் கூறுவதற்குத் தனியாக விவரம் சேகரிக்கும் (Information Bureau) குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன இது தவிர சிற்றளவுத் தொழில்கள் வாங்கும் கடனுக்கு உத்தரவாதம் அளிப்பதற்குப் பல்வேறு நிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்தியாவும், இந்த நாடுகளின் அனுபவத்தைப் பின்பற்றிச் சிற்றளவுத் தொழில்துறைக்கு வணிக வங்கிகள் கடன் வசதி அளிப்பதற்கு வழிவகை செய்ய வேண்டும். இதற்காகவே ரிசர்வ் வங்கி உத்திரவாதத் திட்டம் ஒன்றினை ஆரம்பித்துள்ளது. இது

தவிர தேசிய சிறுதொழில் இணைக்கழகமும் சிற்றளவுத் தொழில் துறையாங்கும் மூலப் பொருள்களைக் கடன் முறையில் வாங்குவதற்கு உத்தரவாதம் அளித்து வருகின்றது.

மேலும் தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் சிற்றளவுத் தொழில துறைக்கு மிக அதிக அளவில் நிதி உதவி செய்து வருகின்றன.

5. **கடன் உத்தரவாதத் திட்டம்** (Credit Guarantee Scheme)

ஜப்பான் அமெரிக்க நாடுகளின் அனுபவத்தைப் பாடமாகக் கொண்டு சிற்றளவுத் தொழில்துறை வாங்கும் கடன்களுக்கு உத்தரவாதம் அளிக்கும் பொருட்டு 1960ல் ரிசர்வ் வங்கி, 'கடன் உத்தரவாதத் திட்டம்' ஒன்றினை ஆரம்பித்தது. இதன்படி வங்கிகள் வழங்கும் முன்பணத்தில் ஏதாவது இழப்பு ஏற்பட்டால் அந்த இழப்பானது அரசுக்கும் வங்கிக்கும் இடையே ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் பகிர்ந்து கொள்ளப்படும், இத்திட்டம் 1960ல் தேர்ந்தெடுக்கப்பட்ட 22 மாவட்டங்களில் ஆரம்பிக்கப்பட்டன. பின் இது 30 ஆக உயர்த்தப்பட்டது 1963ல் நாடு முழுவதும் ஆரம்பிக்கப்பட்டது. தற்சமயம் இத்திட்டத்தின்படி ஏதாவது இழப்பு ஏற்பட்டால் ரூ இலட்சம் வரை அரசிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். 1960லிருந்து 1965க்குள் 'கடன் உத்தரவாத அமைப்பிற்கு (Credit Guarantee Organisation) 2 ,262 மனுக்கள் வந்துள்ளன. இதில் 22,802 மனுக்கள் உத்தரவாத மளிக்கப்பட்டுள்ளன.

மேற்கூறியவற்றால் சிற்றளவுத் தொழில் துறையின் தேவை பற்றியும் அதனை நிறைவு செய்வதற்கு அரசு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளையும் நாம் அறிந்து கொண்டோம். ஆனால் இத்தகைய பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டாலும் அவை வளர்ந்து வரும் சிற்றளவுத் தொழில் துறையின் தேவைகளை நிறைவு செய்ய முடியவில்லை. இன்னும் கணக்கற்ற சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் ஒழுங்கமைந்த புதிய நிதி நிறுவனங்களின் கருணைப் பார்வைக்கு இலக்காகவில்லை. இந்த நிறுவனங்களில் கடன் கிடைப்பதற்குத் தாமதமாகிறது என்றும், ஒரு சில வேளைகளில் எதற்காகக் கடன் கேட்டார்களோ அந்த காரியம் நடந்து முடிந்த பிறகு கடன் வசதி கிடைக்கின்றது என்றும், சிறு தொழில் அதிபர்கள் கூறுகின்றார் மேலும் சிவப்பு நாடாவும், கையூட்டு முதலியன இந்நிறுவனங்களில் பெரிதும் பரவியுள்ளதால் இவர்கள் ஒழுங்கமைந்த நிதிநிறுவனங்களை அணுகுவதற்குத் தயங்குகின்றனர். மேலும் கடன் பெறுவதற்குப் பல்வேறு செயல்

முறைகள் (Procedure) பின்பற்றப்படுகின்றன. இந்தச் செயல் முறைகளை நன்கு அறிந்தவர்களே எளிதில் கடன் வசதி பெற முடிகின்றது. இவ்வழி முறைகளை அறியாதவர்கள் இந் நிறுவனங்களை அணுகுவதற்குத் தயங்குகின்றனர்.

இந்நிறுவனங்கள் அதே சமயம் எண்ணற்ற சிறுதொழிலதிபர்கள் கடன் வாங்குவதற்கே லாயக்கற்றவர்கள் என்றும், அவர்களின் நிறுவனம் நன்கு செயல்படக் கூடிய நிலையில் இல்லை என்றும், அந்தகையோர்க்குக் கடன் வசதி அளிப்பது என்பது விரயமே என்றும் தங்கள் பகுதியிலிருந்து விவாதிக்கின்றனர்.

ஆனால் நாம் இரு விவாதங்களையும் தள்ளிவிட முடியாது இரு விவாதங்களிலும் ஓரளவு உண்மையுள்ளது, என்பதை ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும். நிதி நிறுவனங்களின் நிர்வாகத்தினை மாற்றி அமைத்து அது கடன் வழங்குவதற்கு வகுக்கும் வழி முறையினை எளிதாக்குவது மிகவும் அவசியம். அதே சமயத்தில் சிற்றளவுத் தொழில் நிறுவனங்களின் தகுதியை உயர்த்துதல் அவசியம். இந்த அவசியம் நம்மை நிதி சார்பற்ற உதவிகளுக்கு இட்டுச் செல்கின்றது.

**ஆ. நிதிச் சார்பற்ற நடவடிக்கைகள்**

இன்று சிற்றளவுத் தொழில் துறைக்கு நிதி உதவி அளிக்க வேண்டிய அவசியமட்டுமல்லாது, அவர்களுக்குப் பல்வேறு நிதிச் சார்பற்ற நடவடிக்கைகளையும் எடுக்கவேண்டியுள்ளது. சிற்றளவுத் தொழில் துறையின் முக்கிய நன்மைகளாக உள்ளூரில் உள்ள விரிவடையாத அங்காடியின் தேவையை நிறைவு செய்தலும், சாதாரணமான தொழில் நுட்பமும் என முந்திய அத்தியாயங்களில் கண்டோம். ஆனால் இந்தியாவில் விரிவடைந்த அங்காடி இருந்தும் அதனை நன்கு பயன்படுத்திக் கொள்ளுகின்ற நிலையில் சிற்றளவுத் தொழில் துறைகள் இல்லை. இன்று சிற்றளவுத் தொழில் துறை தனது தொழில் நுட்பத்தை மாற்றி அமைக்க வேண்டிய நிலையில் உள்ளது. மரபு சார்ந்த தொழில் நுட்ப அறிவை விட்டொழித்து நவீன முறையில் இயந்திரங்களை அமைத்தால்தான் சிற்றளவு தொழில் துறை நிலைத்து நிற்க முடியும்.

எனவே அங்காடி பற்றிய ஆய்வு, அங்காடி ஏற்படுத்தித் தருதல், தொழில் நுட்பம் தொடர்பாக அறிவுரை வழங்குதல், ஆராய்ச்சி நிலையங்கள் ஏற்படுத்தி நவீன தொழில் நுட்ப அறிவை வளர்த்தல் போன்ற நடவடிக்கைகளைச் சிற்றளவுத் தொழில் துறைக்காக எடுக்க வேண்டியது இன்றியமையாத தேவையாகின்றது.

இத்தகைய நிதிச் சாரபற்ற உதவியினை அளிப்பதற்கு இன்று இந்திய அரசு பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துள்ளது. அந்த நடவடிக்கைகளைப் பற்றி நாம் இப் பகுதியில் காண்போம்.

(a) குழுக்கள், வாரியங்கள், ஆணைக்குழுக்கள் : (Committees, Boards, Commissions)

சிற்றளவுத் தொழில்களின் அடிப்படைச் சிக்கல்கள், அவைகளை நீக்குவதற்குரிய வழி முறைகள், வளர்ச்சிக்கான ஆலோசனைகள் கூறுவதற்குப் பல்வேறு வாரியங்கள் அமைக்கப்பட்டன. அவைகளில் முக்கியமானவை :

(i) குடிசைத் தொழில் துறை வாரியம் (Cottage Industries Board)

(ii) அகில இந்திய கைத்தறி வாரியம் (All India Handloom Board-1952)

(iii) அகில இந்திய கைவினைத் தொழில் வாரியம் (All India Handicrafts Board-1952)

(iv) பட்டுத் தொழில் வாரியம் (Silk Board-1952)

(v) கயிற்றுப் பொருள் வாரியம் (Coir Board-1954)

(vi) அகில-இந்தியக் காதி, கிராமத் தொழில்கள் வாரியம்—(All India Khadi and Village Industries Board 1953)

தவிர சிற்றளவுத் தொழில்துறை வளர்ச்சி பற்றி ஆராய்வதற்கு இரு குழுக்கள் அமைக்கப்பட்டன:

(i) கார்வே குழு

(ii) ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவின் பன்னாட்டுத் திட்டக் குழு.

இக்குழுக்கள் பற்றி பிற்சேர்க்கையில் காண்க.

**தேசிய சிறு தொழில் இணைக் கழகம்**

நாம் முன்பே கூறியதுபோல் தேசிய சிறுதொழில் இணைக் கழகம் நிதி உதவி கிடைப்பதற்கு வழி வகைகள் செய்வது மட்டுமல்லாமல் நிதி சார்பற்ற உதவிகளும் செய்து வருகின்றன. இக் கூற்றினை அதன் குறிக்கோள்களைக் கொண்டு அறியலாம்.

(i) பேரளவு தொழில்துறைக்கு துணை நிறுவனங்கள் அமைப்பதில் உதவி செய்தல்.

(ii) சிறு தொழில் துறைப் பொருள்களுக்கு அரசிடமிருந்து ஆணைகள் பெற்றுத் தருதல்.

(iii) தவணை முறையில் இயந்திரங்கள் வழங்குதல்.

(iv) அங்காடி பற்றிய ஆய்வுகள் மேற் கொள்ளுதல், தகவல்கள் அளித்தல்—சிற்றளவுத் தொழில்களின் தரத்தைக் கூட்டுதல், மூலப் பொருள்களை வழங்குதல், இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்களை தவணைக் கொள்முறைத் திட்டத்தில் அளித்தல்.

(v) ஒக்லா, ராஜகோட், கௌரா போன்ற இடங்களில் அமைக்கப்பட்ட மூல முன் மாதிரி உற்பத்தி, பயிற்சி மையங்களை நிர்வாகித்தல்.

(vi) ஒக்லா, நைநி போன்ற இடங்களில் தொழில் பேட்டைகள் அமைத்து அதனை நிர்வாகஞ் செய்தல்.

(vii) சிற்றளவுத் தொழில் துறைப் பொருள்களின் விற்பனையை அதிகரிப்பதற்கு பொருட்காட்சிகளில் பங்கேற்றல்.

அங்காடி பற்றிய உதவிகள் அளிப்பதற்கும் தவணை முறையில் இயந்திரங்கள் கொடுப்பதற்காகவும், இவ்விணைக் கழகம் பம்பாய், சென்னை, கல்கத்தா, டில்லி போன்ற நகரங்களில் தனது கிளை அலுவலகங்களை அமைத்துள்ளது.

இவ்விணைக் கழகம் சிறு தொழிலதிபர்களுக்கும் அரசுக்கும் இடையே இடையீட்டாளாக விளங்குகின்றது. அரசுக்கு வேண்டிய பொருள்களை சிறு தொழில் துறைகளிடம் பெற்று அவைகளை அரசுக்கு அளிக்க உதவி செய்து வருகின்றது. இத் துறையில் ஆண்டுக்கு ஆண்டு இதன் பணி அதிகரித்து வருகின்றது என்பதை அடுத்த பக்க அட்டவணை விளக்கும்.

மிக அதிகமான சிறு தொழில் நிறுவனங்களைத் திட்டத்தின் கீழ் கொண்டு வர சிறு தொழில் இணைக்கழகம் அந்தந்த நிறுவனங்களின் தகுதியை வைத்து தேர்ந்தெடுக்கின்றது. இந்த நிறுவனங்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது.

அரசிடமிருந்து ஆணை பெற்றுத் தருவது மட்டுமல்லாமல், இவ்விணைக் கழகம் தனியார் துறையில் உள்ள பேரளவுத் துறைகளிடமிருந்தும் சிற்றளவுத் தொழில் நிறுவனங்களுக்கு ஆணைகள் பெற்றுத் தருகின்றன. இதனால் சிற்றளவுத் தொழில்களுக்கும், பேரளவுத் தொழில்களுக்கும் இடையே ஓர் இணைப்பினை

ஏற்படுத்தி அதன் மூலம் சிற்றளவுத் தொழில்களைப் பேரளவு தொழில்களுக்குத் துணை நிறுவனங்களாக மாற்ற முயற்சி செய்கின்றன. மேலும் சிற்றளவுத் தொழில் நிறுவனங்களே துணை நிறுவனங்கள் ஏற்படுத்துவதற்கு உதவி செய்கின்றன.

அரசிடம் பெற்றுத் தந்த ஒப்பந்தங்களும் அவற்றின் மதிப்பும்

| ஆண்டு | ஒப்பந்தம் | மதிப்பு ரூபாயில் |
|---|---|---|
| 31—3—1957 வரை | 10 | 5,87,:03 00 |
| 1057-58 | 113 | 62,14,964 00 |
| 1958-59 | 707 | 2.56.12,337 00 |
| 1959-60 | 984 | 2 64.31,226 00 |
| 1960-61 | 1,427 | 3,88 10,259 00 |
| 196:-62 | 1,921 | 7,93.77,695 00 |
| 1962-63 | 2,065 | 14 51,58,311 00 |
| 1963-64 | 3,995 | 34,18,43,561 35 |
| டிசம்பர் 1964 வரை | 2,621 | 12,77.04,968 10 |
| மொத்தம் | 13,843 | 79,17,90,371 45 |

Source: National Small Industries Progress-10 years of Progress, p. 10

**அங்காடி வசதிகள்:**

சிற்றளவுத் தொழில்களுக்கு உள் நாட்டிலும் வெளி நாடுகளிலும் அங்காடி வசதி செய்து கொடுக்கின்றது மேற் கூறிய இணைக் கழகம். இந்தியாவிலேயே கிராமங்களில் 300 மில்லியன் மக்களும், நகரங்களில் 60 மில்லியன் மக்களும் சிற்றளவுத் தொழில் துறை பொருள்களை வாங்குவதற்கு தயாராக உள்ளனர். ஆனால் தரம் பிரிக்கப் படாததாலும், அங்காடியுடன் தொடர்பு இல்லாததாலும் சிற்றளவுத் தொழில் பொருள்கள் நுகர்வோரை அணுக முடியவில்லை. மேலும் சிறு தொழிலதிபர்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்தவுடன் விற்பனை செய்ய வேண்டிய நிலையில் உள்ளனர். சான்றாக தோல் பொருள்களை உற்பத்தி செய்யும் ஒரு சிறு தொழில் நிறுவனம் மறு நாளுக்கு வேண்டிய மூலப்பொருள்கள் வாங்குவதாகாக இடைப்பட்ட மனிதனிடம் (Middle man) விலை முடிக்கப்பட்ட பொருள்களை

உடனே விற்று விடுகின்றது. நடைமுறை மூலதனம் இல்லாதது இதற்கு முக்கிய காரணமாகும். ஆதலால் தங்கள் பொருள்களை வைத்திருந்து நல்ல விலை வரும் பொழுது விற்கக் கூடிய நிலையில் இல்லை. சில வேலைகளில் இரும்புக் கருவிகள் போன்றவை குறைந்த உற்பத்தி செலவில் செய்யப்பட்டு உலக அங்காடியில் போட்டியினை ஈடுகட்ட முடிகின்ற நிலையில் இருந்தாலும் போதிய அங்காடித் தொடர்பு இல்லாததால் உள்ளூர் அங்காடியில் குறைந்த விலைக்கு விற்க வேண்டியுள்ளது. எனவே செய்தித் தொடர்பு இல்லாததும் சிற்றளவுத் தொழில்களின் பொருள்களுக்குரிய அங்காடியைப் பாதிக்கின்றது.

இத்தகைய இடர்களை நீக்குவதற்கு இன்று தேசிய சிறு தொழில் இணைக் கழகம் பல்வேறு வழி முறைகளைக் கையாண்டுள்ளது. இதற்காக இவ்விணைக் கழகம் ஆரம்பத்தில் நடமாடும் விற்பனை வண்டியினை ஆரம்பித்தது. ஆனால் இது வெற்றிகரமாக இல்லாததால் 1959-ல் இதனைக் கைவிட்டது. தற்சமயம் இது வெற்றிகரமாக நடப்பது மட்டுமல்லாமல் வளர்ச்சி பெறுவதற்கும் வாய்ப்புகள் உள்ளன.

## ஏற்றுமதியை உயர்த்துதல்

சிற்றளவுத் தொழில்களுக்கு உலக அங்காடியினை ஏற்படுத்தி கொடுப்பதற்காக நல்ல தரமுள்ள ஒரு சில சிற்றளவுத் தொழில் நிறுவனங்களின் பொருள்களைத் தேர்ந்தெடுத்து வெளிநாடுகளுக்கு மாதிரிகள் அனுப்பியும், விளம்பரமும் செய்து வருகின்றது. அத்துடன் பன்னாட்டு பொருட்காட்சி அமைப்புகளிலும் கலந்து கொள்ளுகின்றது. இதனால் பல சிறு தொழில் துறைப் பொருள்களுக்கு வெளி நாட்டு அங்காடி ஏற்பட்டுள்ளது. தோல் பொருள்களுக்கு இரஷ்யா போலந்து போன்ற நாடுகளிலிருந்து பெருமளவில் ஆணைகள் வாங்கித் தந்துள்ளது. இது போல் பல பொருள்களுக்கு வெளி நாட்டினர் மாதிரி கேட்டும், விலை குறிப்பிட்டும் அனுப்புவது இந்திய சிறு தொழில் பொருள்களின்மேல் வெளிநாட்டினருக்கு ஏற்பட்டுள்ள ஈடுபாட்டை விளக்கும். இதில் வெற்றி பெறுவதற்கு தரத்தை அதிகரித்தல் இன்றியமையாதது ஆகும். எனவே ஏற்றுமதிக்கு முன் பொருள்களை நன்கு சோதித்தே அனுப்ப வேண்டும்.

## இயந்திரங்களை தவணை முறையில் வழக்குதல்

சிற்றளவுத் தொழில்களின் குறைந்த உற்பத்தித் திறனுக்கு முக்கிய காரணம், தேய்ந்த, பழைய இயந்திரங்களை உற்பத்தியில் ஆளுதலாகும். பொதுவாக சிறு தொழில் அதிபர்கள் தேய்

மானத்திற்கென்று தனியாக ஓர் ஒதுக்கு நிதியினை ஏற்படுத்துவ தில்லை ஆதலால் இயந்திரங்கள் தேய்வுறற பொழுதும், பழுதுற்ற பொழுதும் அதனை மாற்றுவதற்கும் பழுதுபார்ப்பதற்கும் முடியாமல் தவிக்கின்றனர். இதனால் அவர்களுக்குத் தவணை முறையில் இயந்திரங்கள் வழங்கும் திட்டம் ஒன்றினை ஆரம்பிக்கும்படி ஃபோர்டு அறக்கட்டளைக் குழுவின் பன்னாட்டுத் திட்டக்குழு பரிந் துரைத்தது. அதன் பேரில் மாநில சிறு தொழில் இணைக் கழகம் இத் திட்டத்தினை மார்ச் 1956-ல் ஆரம்பித்தது.

சிறு தொழில் துறை நிறுவனங்களின் தேவையினைப் பூர்த்தி செய்வதற்கு ஆண்டொன்றுக்கு ரூ 13 கோடி அந்நியச் செலா வணி தேவைப்படுகின்றது. அந்நியச் செலாவணி பற்றாக் குறை யால் இத் தேவையை முழுதுமாக பூர்த்தி செய்ய முடியவில்லை. ஆதலால் உள் நாட்டில் நல்ல தரத்துடன் தயாரிக்கும் நிறுவனங் களிடமிருந்து இயந்திரங்கள் வாங்கி சிற்றளவுத் தொழில் துறை யின் தேவையினை பூர்த்தி செய்கின்றது சிற்றளவுத் தொழில் துறை பொருளாதாரத்தில் முக்கிய பங்கு வகிக்க வேண்டியிருப்ப தால் அந்நியச் செலாவணிப் பற்றாக்குறை அதன் வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கக் கூடாது. ஆகையால் போதிய அந்நியச் செலாவணி அளித்து உதவ வேண்டும். நாளடைவில் அந்நிய நாட்டின்மேல் சார்ந்திருப்பதை ஒழிப்பதற்கு அத்தகைய இயந் திரங்கள் உள் நாட்டிலேயே தயாரிக்கப்பட வேண்டும். இதற்கு ஒக்லா, ராஜ்கோட் போன்ற இடங்களில் அமைக்கப்பட்டுள்ள முன் மாதிரி உற்பத்தி மையங்கள் அதிகம் ஏற்படுத்தி அவைகள் வளர்ச்சி பெறுவதற்குப் பெரிதும் உதவ வேண்டும்.

இவ் விணைக் கழகம் அளித்துள்ள இயந்திரங்களின் எண் ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. எனினும் கொடுப்பதாக ஒப்புக் கொண்ட இயந்திரங்களின் எண்ணிக்கை யும், இயந்திர உற்பத்தியாளர்களிடம் பிறப்பித்துள்ள ஆணைக்கும் இடையில் அதிக இடைவெளி உள்ளது. மேலும் இவ்வியந்திரங் களை பங்கீடு செய்வதில் அதிக காலதாமதம் ஏற்படுவது இத் திட்டம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு இடையூறாக உள்ளது.

**மூல முன்னோடி உற்பத்தி, பயிற்சி, மையங்கள்:**

சிற்றளவுத் தொழில் துறைக்கு உதவுவதற்கு வேண்டிய அறி வுரைகளை வழங்கும் பொருட்டு இரண்டாவது தடவையாக ஃபோர்டு அறக்கட்டளைக் குழு அழைக்கப்பட்டது. இக்குழுவின் பரிந்துரைப்படி டில்லி, கல்கத்தா, ராஜ்கோட் போன்ற இடங்களில் மூல முன்னோடி உற்பத்தி, பயிற்சி மையங்கள், மேற்கு ஜெர்மனி,

அமெரிக்கா போன்ற அரசுகளின் உதவியுடன் அமைக்கப்பட்டன. இம் மையங்கள் இறக்குமதி செய்யப்பட்ட இயந்திரங்களை மாதிரி யாகக் கொண்டு மாற்று இயந்திரங்கள் அமைப்பதும் சிறு தொழில் அதிபர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும் பயிற்சி அளிப்பதும் போன்ற பணிகளை ஆற்றுகின்றன. இம்மையங்களைத்தொடங்கியதி லிருந்து இயந்திரங்களின் இறக்குமதி குறைந்துள்ளது. இதனால் குறிப்பிடத்தக்க வகையில் அந்நியச் செலாவணி சேமிக்கப் பட்டுள்ளது.

**நீட்சி மையங்கள் :**

சிற்றளவுத் தொழில் துறையில் தொழில் நுட்ப அறிவு குறை வாக இருப்பதாலும், நன்கு பயிற்சி பெற்ற தொழிலாளர்களும், தொழிலதிபர்களுக்கு கிடைக்காததால் இன்று இதன் வளர்ச்சி பெரிதும் தடைபட்டுள்ளது இத்தடையினை நீக்க சிறு தொழில் அதிபர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் தொழில் நுட்பம் பற்றிய பயிற்சி அளிப்பதற்காக நீட்சி மையங்களைப் பல இடங்களில் அரசு ஏற்படுத்தி வருகின்றது. தற்சமயம் 65 நீட்சி மையங்கள் செயல் படுகின்றன. இவை தவிர 22 பணி நிலையங்கள் உள்ளன.

**பேதங்காட்டும் நடவடிக்கைகள்:**

சிற்றளவுத் தொழில்களை ஊக்குவிப்பதற்கு சுமார் 128 பொருள்களின் உற்பத்தியினை சிற்றளவுத் தொழில் துறைக் கென அரசு ஒதுக்கியுள்ளது, இப்பொருள்களைப் பேரளவு முறையில் உற்பத்தி செய்வதற்கு அனுமதி அளிக்கப்பட மாட்டாது. மேலும் ஏற்கெனவே இப்பொருள்களை உற்பத்தி செய்யும் பேரளவுத் தொழில் நிறுவனங்களின் கொள்ளளவை அதிகரிப்பதற்கு அனுமதி அளிக்கப்பட மாட்டாது.

**இந்திய சிறு தொழில் சங்கங்களின் கூட்டமைப்பு ; (Federations of Associations of Small Industries of India)**

அரசு எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளை சிறு தொழில் அதிபர்கள் அறிந்து கொள்ளவும் அவர்களது விருப்பங்களை அறிந்து கொள்ளும் பொருட்டும், சிறு தொழில் அதிபர்கள் கூடிக் கலந்து அவர்களுக்கு வேண்டிய உதவிகளை அவர்களே செய்து கொள்ளும் பொருட்டும் இந்திய சிறு தொழில் சங்கங்களின் கூட்ட மைப்பு ஒன்றினை இந்திய அரசு ஆரம்பித்துள்ளது. இதன் தலைமை அலுவலகம் டில்லியில் உள்ளது. இது தவிர நான்கு வட்டாரங் களிலும் கிளை அலுவலகங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இதன்படி பல சிறு தொழில் நிறுவனங்கள், சங்கங்கள் அமைத்தபின் இக் கூட்டமைப்பில் உறுப்பினர்களாவதற்கு வசதிகள் செய்யப்பட்

டுள்ளன. இதனுல் பல்வேறு நிறுவனங்களின் அதிபர்கள் ஒன்று கூடித் தங்கள் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான வழிவகைகளை ஆய் வதற்கு வசதி ஏற்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் சுமார் 3,000 உறுப்பினர்களைக் கொண்ட 250 சங்கங்கள் இயங்குகின்றன. இத் திட்டத்திற்காக மத்திய அரசும் மாநில அரசுகளும் முதல் திட்ட காலத்தில் ரு 5·2 கோடியும், இரண்டாம் திட்ட காலத்தில் ரு 53 கோடியும் மூன்றும் திட்ட காலத்தில் ரு 108·27 கோடி யும் செலவழித்துள்ளன. நான்காம் திட்ட காலத்தில் ரு 123·33 கோடியும் செலவழிப்பதென முடிவு செய்யப்பட்டுள்ளது.

**தொழிற் பேட்டைகள் :** (Industrial Estates)

அண்மைக் காலங்களில் சிற்றளவுத் தொழில் துறையில் ஏற்பட்டுள்ள முக்கியமான முன்னேற்றம் யாதெனில் தொழில் பேட்டைகள் அமைப்பதுவேயாகும் இதன்படி எல்லா வசதிகளும் ஒருங்கே அமையப்பட்ட இடங்களில் சிறு தொழில் நிறுவனங்கள் அமைப்பதற்கு இடவசதி அளித்துத் தருவதாகும்.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 52 தொழிற் பேட்டைகள் செயல்பட்டன. இது தவிர 14 தொழிற்பேட்டை கள் ஏற்படுத்தி முடிக்கப்பட்டிருந்தன. 1963-ம் ஆண்டின் இறுதியில் 141 தொழிற் பேட்டைகள் அமைக்கடபட்டதில் 100 தொழிற் பேட்டைகள் செயல்பட்டன. 1969ல் 389 தொழிற் பேட்டைகள் இருந்தன. இவைகள் 1,985 சிறு தொழில் நிறு வனங்களுக்கு இடவசதி அளித்துள்ளது.

**(இ) தொழிற் பேட்டைகள்**

தொழிற் பேட்டை என்பது தண்ணீர், மின்சக்தி, போக்கு வரத்து, அஞ்சல் நிலையம், சிற்றுண்டிச்சாலை போன்ற பொதுவான வசதிகளைக் கொண்ட இடங்களில், சிக்கன முறையில் சிறுதொழில் நிறுவனங்கள் தொடங்கிட எல்லா வசதியும் செய்து கொடுப்ப தாகும்.

அமெரிக்காவில் இப்பேட்டைகள் 'தொழிற் பண்ணை' என்றும் தொழில் மாவட்டம் (Industrial district என்றும், தொழில் வட்டாரம் (Industrial Tract) என்றும் அழைக்கப்படுகின்றன.

**குறிக்கோள்கள் :** (i) சிறு தொழில்களுக்கு உதவி புரிந்து அவற்றை வளர்ச்சியடையச் செய்தல்.

(ii) பெரிய நகரங்களில் மக்கள் நெருக்கத்தைத் தவிர்த்தல்

(iii) பொருளாதாரத்தில் போதா வளர்ச்சியுள்ள வட்டாரங்களிலும், கிராமப்புறங்களிலும் தொழில் துறை முன்னேற்றத்தை ஏற்படுத்துதல்.

(iv) பேரளவுத் தொழில்களுக்குத் துணைத் தொழில்களாகச் சிறு தொழில்களை வளர்த்தல்.

**நன்மைகள்:** (i) (தொழிற்பேட்டைகள் அதிக தொழில் நிறுவனங்களுக்கு வேண்டிய பணிகளும், இட வசதியும் அளிக்கின்றன.) இவைகளில் தொழிற்சாலைக் கட்டடங்கள் எல்லா வகையான அளவுகளிலும் கிடைக்கின்றன.

(ii) சிறு தொழில் அதிபர்களுக்கு தொழிற்சாலைக் கட்டடங்கள் அமைத்துக் கொடுப்பதால் அவர்களுக்கு அக்கட்டிடங்கள் கட்டுவதற்கு வேண்டிய செலவுகள் குறைகின்றது. பல்வேறு பொதுப்பணி வசதிகளுடன் இக்கட்டடங்கள் குறைவான வாடகையில் கிடைக்கின்றன.

(iii) புறச்சிக்கனங்கள் கிடைப்பதற்கு வாய்ப்புகள் ஏற்படுகின்றன.

(iv) நகர்ப்புறங்களில்மக்கள் நெருக்கத்தைக் குறைக்கின்றது.

(v) உள்ளூர் மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கின்றது.

(vi) சிற்றளவுத் தொழில் துறையினை நவீனமயமாக்குவதற்கு உதவி புரிகின்றன.

(vii) வட்டார வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றன.

(viii) குறைந்த வாடகையும், குறைந்த செலவில் கிடைக்கும் பொதுப்பணி வசதிகளும் சிறு தொழில் அதிபர்களுக்கு ஊக்கம் அளிக்கின்றது.

தொழிற் புரட்சியின் முன்னோடியான இங்கிலாந்தில்தான் முதன் முதலில் தொழில் பேட்டை ஆரம்பிக்கப்பட்டது. அங்கு மான்செஸ்டர் துறைமுகத்திற்குப் பக்கத்தில் 12,000 ஏக்கர் பரப்பில் 1896-ல் அமைக்கப்பட்ட 'ட்ரஃபோர்ட் பண்ணைப் பேட்டைகள் நிறுவனம்' (Trafford Park Estates Limited) தொழிற்பேட்டையின் முன்னோடியாகக் கருதப்படுகின்றது. இங்கிலாந்தில் பொருளாதாரத்தில் போதா வளர்ச்சி நிலையிலுள்ள வட்டாரங்களை, வளர்ச்சி பெறச் செய்வதற்காகத் தொழிற் பேட்டைகள் ஊக்குவிக்கப்பட்டன.

அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளிலும் தொழிற்பேட்டைகள் ஊக்குவிக்கப்பட்டுள்ளன. அமெரிக்காவில் தொழிற்சாலை

களுக்கு இடவசதி செய்துகொடுப்பதற்காகவும், கனடாவில் வட்டார வளர்ச்சிக்காகவும் தொழில்துறை முன்னேற்றத்திற்காகவும் தொழிற்பேட்டைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.

**இந்தியாவில் தொழிற் பேட்டைகள் :** இங்கிலாந்தில் தொழிற் பேட்டைகள் அடைந்த வெற்றியினைக்கண்டு சிற்றளவுத் தொழிற் துறை வாரியம் இங்கும் அம்மாதிரியான தொழிற் பேட்டைகள் தொடங்கும்படி பரிந்துரைத்தது.

தொழிற்பேட்டைகளை ஆரம்பித்து அதனை நிர்வாகம் செய்வது மாநில அரசுகளின் பொறுப்பாகும். ஆனால் ஓக்லா, நைநி போன்ற இடங்களில் அமைக்கப்பட்டுள்ள தொழிற் பேட்டைகளை தேசிய சிறு தொழில் இணைக்கழகம் நிர்வாகம் செய்துவரும். இச் செலவினை மத்திய அரசு மாநில அரசுகளுக்கு கடனாக வழங்குகின்றது. இத்தொழிற்பேட்டைகளில் தனது தொழிற்சாலையை அமைத்துள்ள சிறு தொழிலதிபர்களுக்கு அத் தொழிற்சாலைக் கட்டிடம் சொந்தமாவதற்குத் தவணை முறையில் விற்கப்படும். இதன்படி முதலில் அத்தொழில்சாலைக்குண்டான மொத்த செலவினில் 20 சதவீதம் அளிக்கப்படவேண்டும். பின் மீதியிருக்கும் தொகையனைச் சுலபமான தவணையில் கொடுக்கலாம். இது தவிர இப் பேட்டைகளில் உள்ள தொழிற்சாலைகள் வார அடிப்படையிலும் (Rental basis) வழங்கப்படுகின்றன. மேலும், இப்பேட்டைகளில் சிறு தொழில் அதிபர்கள் தாங்களாகவே தொழிற்சாலைகள் அமைத்துக் கொள்ளலாம்.

**தொழில் பேட்டைகளின் அமைப்பு :** தொழில்பேட்டைகளின் அமைப்பு பற்றி இருவேறு கோணங்களில் அறிந்து கொள்ளலாம். தொழிற்பேட்டை அமைந்துள்ள இருப்பிடத்தின் அடிப்படையில் ஒரு சில தொழில் பேட்டைகளை முதல் வகையில் பிரிக்கலாம்.

(i) நகர்ப்புறம்

(ii) பகுதி நகர்ப்புறம்

(iii) கிராமப்புறம்

கொடுக்கப்பட்டுள்ள வசதிகளின் அடிப்படையில் இரண்டாவது வகையினை மேலும் இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்,

(i) வேலை சார்ந்த தொழில் பேட்டை

(ii) துணைத் தொழில்பேட்டை

**நகர்ப்புறத் தொழில் பேட்டை :** இவைகள் நகர்புறங்களில் அல்லது பொருளாதாரத்தில் முன்னேறியுள்ள பகுதிகளில் அமைக்கப்படுகின்றன. ஒரு பகுதி பொருளாதாரத்தில் வளர்ச்சி பெற்றுள்ளதா இல்லையா என்பதைக் காண கீழ்கண்ட விதி முறைகள் கையாளப்படுகின்றன.

(i) அப்பகுதியின் தலா வருமானமும், தலா நுகர்வும்,

(ii) மக்கள் தொகை அடர்த்தி

(iii) செய்தித் தொடர்பு

(iv) மின்சக்தி நுகர்வின் அளவு

பொதுவாக சுமார் 50,000 மக்களுக்கு மேல் அதிகமான பகுதியை நகரமாகக் கருதப்படும். முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் மொத்த தொழிலபேட்டையில் 50 சதவீதத் தொழில் பேட்டைகள் சுமார் 50,000 மக்களுக்கு மேல் உள்ள பகுதியில் அமைக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் உள்ள தொழில் பேட்டை கள் நன்கு செயல்படுகின்றன.

**பகுதி நகர்புற தொழில்பேட்டைகள் :** 10,000த்திலிருந்து 50,000 வரை மக்கள் வாழ்கிற சிறு நகரங்கள் பொருளாதாரத்தில் வளர்ச்சி குன்றிய நகரங்களாக கருதப்படும். ஆனால் இப்பகுதி களில் உள்ள தொழில் பேட்டைகள் வெற்றிகரமாக நடைபெற வில்லை. இதற்குக் காரணம் தொழில்முயல்வோர் கிடைக்காதது. திறமை மிக்க தொழிலாளர்கள் கிடைக்காதது, உள்ளமைப்பு வசதி சரிவரக் கிடைக்காதது ஆகியவையாகும். ஆகையால் இப்பகுதியில் உள்ள தொழில் பேட்டைகளுக்கு அரசு அதிக சலுகைகள் அளிக்கின்றது.

**கிராமப்புற தொழில் பேட்டைகள் :** 5,000 மக்களுக்கும் குறை வாக உள்ள சிற்றூரைக் கிராமப்புறமாகக் கருதப்படும். கிராமப் புறங்களில் வசிக்கும் கைவினைக் கலைஞர்களை இத்தொழில் பேட் டைகள், ஊக்குவிப்பதோடு மட்டுமல்லாமல் அவர்களுக்கு நவீன இயந்திரங்கள் கிடைப்பதற்கும் வழிவகைகள் செய்கின்றன.

**வேலை சார்ந்த தொழில் பேட்டைகள் :** (Functional Industrial Estates) ஒரு குறிப்பிட்ட தொழிலைச் சார்ந்த பல்வேறு தொழில் சாலைகளுக்கு மட்டுமே இப்பேட்டைகளில் இடவசதி அளிக்கப் படும். ஒரு பொருளுக்கு வேண்டிய பல்வேறு சில சாதனங்களைப் பல்வேறு நிறுவனங்கள் செய்கின்றன. மேலும் சில நிறுவனங்கள் அவற்றை ஒன்று சேர்த்து விளைமுத்திய பொருளாகச் செய்து

முடிக்கின்றது. இத்தகைய பல்வேறு நிறுவனங்களை ஒரு தொழில் பேட்டையினுள் கொண்டுவருவதால் சில நன்மைகள் ஏற்படு கின்றன. அவையாவன.

(i) பொருள்களின் தரத்தில் முன்னேற்றம்
(ii) பேரளவு உற்பத்தியின் சிக்கனங்கள்
(iii) கூட்டுறவு மனப்பான்மை வளருகின்றது

**துணைத் தொழிற் பேட்டைகள் :**

சிறு தொழில் நிறுவனங்கள் பேரளவுத் தொழில் நிறுவனங் களுக்குத் துணையாக இருக்கும் பொருட்டு இப் பேட்டைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. ஹிந்துஸ்தான் மெசின்டூல்ஸ் Hindus-tan Machine Tools Ltd) நிறுவனம் பெங்களூரில் அமைத்துள்ள துணைத் தொழிற்பேட்டையை இதற்குச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம். இப் பேட்டைகளில் உள்ள சிற்றளவுத் தொழிற் சாலைகள், பேரளவு தொழில் நிறுவனத்துக்கு வேண்டிய சிறிய கருவிகளை உற்பத்தி செய்கின்றன.

**திட்ட காலங்களில் தொழிற் பேட்டைகளின் வளர்ச்சி :**

முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில் தொழிற் பேட்டை வளர்ச்சிக்காக எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. எனினும் இத் திட்டக் காலத்தில் பத்து இடங்களில் தொழிற் பேட்டைகள் அமைக்கப்பட்டன. அவையாவன : கிண்டி, விருதுநகர் (தமிழ் நாடு), கான்பூர், ஆக்ரா (உ. பி,), பால்காட், திருவனந்தபுரம், கோட்டயம், கொல்லம், திருச்சூர் (கேரளா), கல்யாணி (மே. வங்காளம்).

இவை தவிர ஒக்லா (டில்லி)விலும் நைநி (அலகாபாத்)யிலும் தேசிய சிறு தொழில் இணைக் கழகம் இரு தொழிற் பேட்டைகளை ஆரம்பித்தது.

1956-ம் ஆண்டு தொழிற் கொள்கை தீர்மானமானது தொழிற் பேட்டையின் அவசியத்தை எடுத்தியம்பியது. சிறு தொழில் துறை வளர்ச்சிக்காகவும், வேலை வாய்ப்பு பெருகுவதற் காகவும் தேசிய வருமானம், நகட்டு மக்களிடையே சமமாகப் பகிர்ந்து அளிக்கப்படுவதற்காகவும் தொழிற் பேட்டையின் வளர்ச்சி அவசியமாகும் என அத் தீர்மானம் வலியுறுத்துகின்றது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 100 புதிய தொழிற் பேட்டைகள் தொடங்குவதென முடிவு செய்யப்பட்டது. ஆனால்

இது மறு பரிசீலனையின் போது 87 ஆக குறைக்கப்பட்டது. இதற்காக ரூ 12·8 கோடி செலவாகும் என மதிப்பிடப்பட்டது.

எனினும் இத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு கால தாமதம் ஏற்பட்டது. ஏனெனில் நிலங்களைப் பெறுவதிலும் தொழிற்சாலை கட்டுவதிலும் கால தாமதம் ஏற்பட்டது. தொழிற்பேட்டைகளுக்கான திட்டங்கள் தயாரிக்கவும், மதிப்பீடு செய்வதற்கும் இரண்டு ஆண்டுகள் ஆயின. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு தொழில் பேட்டைகள் பற்றி திட்டங்கள் அமைப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட நடை முறை குழுவின் கூற்றுப்படி இத் தொழில் பேட்டைகள் வளர்ச்சி குன்றிய பகுதிகளில் சிறுதொழில துறைகள் அமைப்பதில் வெற்றி பெறவில்லை. நாடாளு மன்றத்திஞல் அமைக்கப்பட்ட பேட்டைகள் குழு (Estates Committee) தனது அறிக்கையில், 'தொழில் துறை வளர்ச்சியைப் பரவலாக்குதல் என்ற குறிக்கோள் தொழில் பேட்டைகள் அமைப்பதால் நிறைவேற்றப்படவில்லை' எனக் குறிப்பிட்டுள்ளது.

இரண்டாம் திட்ட கால முடிவில் 52 தொழில் பேட்டைகள் செயல்பட்டன. இது தவிர மேலும் 14 தொழில் பேட்டைகள் கட்டி முடிக்கப்பட்டுள்ளன.

மூன்ரும் திட்ட காலத்தில் 300 புதிய தொழில் பேட்டைகள் ஆரம்பிப்பது எனத் திட்டக்குழு முடிவு செய்தது. இவைகளைப் பல வேறு சிறிய நகரங்களிலும, கிராமப்புறங்களிலும் அமைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது. கைவினைக் கலைஞர்கள் அதிகமாக உள்ள இடங்களில் இப் பேட்டைகளை அமைப்பது அவசியம் என்றும் வலயுறுத்தப்பட்டது. அவ்வாறு செய்தால்தான் கைவினைக் கலைஞர்கள் நவீனக் கருவிகளை கையாள முடியும்.

இது தவிர தேர்ந்தெடுக்கப்பட்ட சில பல்கலைக் கழகங்களில் மாணவர்கள் படிக்கும் போதே பொருளீட்டுவதற்கு வழி செய்யும் பொருட்டும் அவர்களுக்குச் சிற்றளவுத் தொழில் துறையில் பயிற்சி அளிக்கும் பொருட்டும் தொழில் பேட்டைகள் அமைப்பது பற்றி ஒரு முன்னேடித் திட்டம் அமைக்கபபட்டது.

மார்ச் 1965-ல் 235 தொழில் பேட்டைகள் அமைத்ததில் 154 தொழில் பேட்டைகள் செயல்பட்டன. இவைகள் 2,586 சிறு தொழில் நிறுவனங்களுக்கு இடவசதி செய்து கொடுத்துள்ளன. இந் நிறுவனங்கள் ரூ 60 கோடி மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்கின்றன.

இத் தொழில் பேட்டைகளில் மாநில அரசுகளும் முதலீடு செய்துள்ளன. ஒக்லா தொழில் பேட்டையில் மொத்த மூலதனத்தில் மாநில அரசின் மூலதனம் 40 சதவீதம் ஆகும் லூதியானுவில் 61 சதவீதமாகும். சானட் நகரில் 51 சதவீதமாகும். கேரளாவில் 59 சதவீதமாகும்.

**தொழில் பேட்டைகளின் அளவு :**

ஆரம்பத்தில் அமைக்கப்பட்ட தொழில்பேட்டைகளின் அளவு மிகவும் பெரியதாக இருந்தது. இவை ஒவ்வொன்றும், நூற்றுக்கு மேற்பட்ட நிறுவனங்களுக்கு இடவசதி அளித்தன. ரு. 2 கோடி செலவில் அமைக்கப்பட்ட கிண்டி, ஒக்லா தொழில் பேட்டைகளை இதற்குச் தக்கசான்றுகளாகக் கொள்ளலாம்.

ஆனால் பின்னுல் அமைக்கப்பட்ட தொழில் பேட்டைகளின் அளவும், செலவும் குறைக்கப்பட்டன. போதா வளர்ச்சி பெற்ற பகுதிகளில் ரு. 15 இலட்சம், ரு. 8 இலட்சம் ரு 8 இலட்சம் செலவிலும் தனித்தனியாகப் பல்வேறு இடங்களில் அவ்வப்பகுதிகளின் நிலைகளுக்கேற்ப அமைக்கப்பட்டன. மூன்றும் திட்ட காலத்தில் தனியார் துறையினர் கூட்டுறவு அமைப்பாகவும், நிறுவனங்களாகவும் தொழில் பேட்டைகள் அமைத்தனர்.

**சில தொழில் பேட்டைகள் : (i) ஒக்லா தொழில்பேட்டை :** தற்சமயம் இத் தொழில் பேட்டை 110 ஏக்கரில் அமைந்துள்ளது. இத் தொழில் பேட்டையின் தொழில் சாலைகள் மூன்று படி நிலைகளில் கட்டி முடிக்கப்பட்டன. முதல் படி நிலை 1957-ல் முடிக்கப்பட்டது. இப்படிநிலையில் 39 தொழில் சாலைகளும், ஒரு வங்கியும், ஓர் அஞ்சல் நிலையமும், ஒரு தீயணைப்பு நிலையமும், ஒரு மருத்துவமனையும், வணிக உரிமைக்குறி (Trade Mark) வழங்கும் அலுவலகம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளன. இது தவிர போதுமான போக்குவரத்து வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

இப்பேட்டையில் இருக்கும் தொழிலதிபர்களுக்கு நடைமுறை மூலதனம் தொழில் துறை இயக்குநர், டில்லி (Director of Industries, Delhi) கடனுக வழங்குகின்றுர். தவணை முறையில் இயந்திரங்களைத் தேசிய சிறு தொழில் இணைக்கழகம் வழங்குகின்றது. இப்பேட்டைக்கு அருகில் சிறு தொழில் பணிக்கழகம் ஒரு பணிமனையினை ஆரம்பித்தது. தொழில் நுட்ப உதவி செய்து வருகின்றது.

25 ஏக்கரில் 40 தொழில்சாலைகள் இரண்டாம் படி நிலையில் அமைக்கப்பட்டன. இவைகள் பின்வரும் மூன்று அளவுகளில் பிரிக்கப்படும்.

| வகைகள் | அளவு சதுர அடி | தொழிற்சாலைகள் |
|---|---|---|
| A | 5,000 | 8 |
| B | 4,000 | 24 |
| C | 3,000 | 8 |

8 ஏக்கர் நிலத்தினை 61 மனைகளாகப் பிரித்து பல்வேறு போட்டி, விளையாட்டுகளுக்குரிய பொருள்கள் தயாரிக்கும் பல் வேறு தொழில்சாலைகள் அமைக்கப்பட்டன.

இப்பகுதியில் தொழிற் கல்வி அளிப்பதற்கு 1961-ல் பல் தொழில் நுணுக்கப் பயிற்சி கழகம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. அத்துடன் ஜெர்மன் உதவியுடன் அமைந்த, 'முன்னோடி மாதிரி உற்பத்தி மையமும்' பொறியியல் கல்வி வளர பெரிதும் உதவு கின்றது. இப்பேட்டையில் சுமார் 3,000 பேர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. 1963-64ல் சுமார் ரூ 4 கோடி மதிப்புள்ள பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

(ii) கிண்டி தொழிற் பேட்டை: இப்பேட்டை 120 ஏக்கர் நிலப் பரப்பில் அமைக்கப்பட்டது. இதற்கு சுமார் ரூ. 1 கோடி செல விடப்பட்டது. இப்பேட்டையில் தொழிற்சாலைகள் மூன்று வகை களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

| வகைகள் | அளவு சதுர அடி |
|---|---|
| A | 4,280 |
| B | 3,044 |
| C | 1,836 |

தமிழ் நாட்டின் தொழில்துறை இலாகா நியமிக்கும் மேலாளர் ஒருவர் இப்பேட்டையை நிர்வாகஞ் செய்து வருகின்றார். இப்பேட் டையின் அலுவலகத்தில் வேலை பார்ப்பவர்களுக்கும், குறைவான ஊதியம் பெறும் தொழிலாளர்களுக்கும் வீட்டுவசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது. பல்வேறு பேரளவு தொழில் நிறுவனங் கள் இப்பேட்டையில் உள்ள சிற்றளவுத் தொழில் நிறுவனங் களுக்கு உதவி புரிகின்றன.

(iii) நைநி தொழிற்பேட்டை : (Naini Industrial Estate) இப் பேட்டை அலகாபாத்திலிருந்து ஏழு கல்கள் தொலைவில அமைந்துள்ளது. இப்பேட்டை தேசிய சிறு தொழில இணைக் கழகத்தால் 1959-ல் தொழிற்சாலைகளுடன் அமைக்கப்பட்டது. இப்பேட்டையில் இரு சிற்றுண்டிச்சாலைகளும், ஒரு தீயணைப்பு நிலையமும், ஒரு மருத்துவ மனையும், ஓர் அஞ்சல் நிலையமும், ஒரு விருந்தினர் விடுதியும், இந்திய அரசு வங்கியின் கிளையும் உள்ளன. ஆனல் இப்பேட்டையில் எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை. ஏனென்ருல் இங்கு தொழில் வளர்ச்சி அடைவதற்குச் சாதகமான நிலையில்லாததேயாகும்.

(ஈ) தொழில் கூட்டுறவுகள் : (Industrial Co-operatives)

கைவினைஞர்களும், தொழிலாளர்களும், சிறு தொழிலதிபர் களும், ஒருங்கிணைந்து ஒரு பொருளினை உற்பத்தி செய்வதற் காகவோ, அல்லது தங்களுக்கு வேண்டிய வசதிகளைத் தாங்களே ஏற்படுத்திக் கொள்வதற்காகவோ அமைக்கப்பட்ட அமைப்பே, தொழில் கூட்டுறவு எனப்படும். இதில் கைவினைஞர்கள் என்பவர் கள் பொதுவாக நெசவாளர்கள், தோல் பதனிடுபவர்கள், தச்சு வேலை செய்பவர்கள், மண்பாண்டம் செய்பவர்கள் முதலியோரைக் குறிக்கும்.

1930 முதல் 1940 வரையான ஆண்டுகளில் தொழில் கூட்டுறவுகள் சில தோன்றினும் அவை சிறப்பாகச் செயல்பட வில்லை விடுதலைக்குப்பின் நமது அரசு அதன் முக்கியத்துவத்தை நன்குணர்ந்து அவைகள் வளர்ச்சி பெறுவதற்குப் பல்வேறு ஊக்கங்கள் கொடுக்கப்பட வேண்டும் என்பதை 1948-ல் தொழிற் கொள்கைத் தீர்மானத்தில் தெரிவித்தது. இத் தீர்மானத்தின்படி கிராமக் குடிசைத் தொழில்களை கூட்டுறவு அடிப்படையில் அமைக்க வேண்டும், என முடிவெடுக்கப்பட்டது. 1956-ல் வெளியிடப்பட்ட தொழில் கொள்கைத் தீர்மானமும் இதனையே வலியுறுத்துகின்றது.

**தொழில் கூட்டுறவுகளின் வகைகள்:**

தொழில் கூட்டுறவுகளை இரு வகையாகப் பிரிக்கலாம். (1) உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழில் கூட்டுறவுகள் (2) உறுப் பினர்களுக்குத் தொழில் தொடர்பான பணிகளை ஆற்றுவதற்காக அமைக்கப்பட்ட கூட்டுறவு அமைப்புகள். இவைகளைப் பற்றி கீழ் வரும் பகுதியில் விரிவாகக் காண்போம்.

(1) உற்பத்தியில் ஈடுபட்டுள்ள கூட்டுறவு குழு

இதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

(i) பொதுப் பட்டறையில் உற்பத்தி செய்தல் : (Production in Common in shed)

இவ் வகை கூட்டுறவில் உறுப்பினராக இருப்பவர்கள் தங்களிடமுள்ள கருவிகளையும், மூலதனத்தையும் கூட்டாக இட்டுப் பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். அவரவர்கள் போட்ட மூலதனம், கருவிகள், உழைப்பு முதலியவற்றிற்கு ஏற்றபடி தங்கள் பங்கினை பகிர்ந்து கொள்ளுகின்றனர். இவர்கள் எல்லோரும் ஒரு பொதுவான பட்டறையில் வேலை செய்வர். கிடைப்பது இலாபமாயினும், இழப்பாயினும் இவர்கள் அனைவரும் சமமாக பகிர்ந்து கொள்கின்றனர்.

(ii) உறுப்பினர்களின் பணிமனைகளில் உற்பத்தி : (Production in Member's Workshop)

உறுப்பினர்கள் தங்கள், தங்கள் வீடுகளிலோ அல்லது பணிமனைகளிலோ உற்பத்தி செய்தலாகும். கூட்டுறவுச் சங்கங்கள் இவர்களுக்கு வேண்டிய மூலப்பொருள்களையும் பொருள்களின் தரத்தைப் பற்றியதுமான விவரங்களையும் கொடுத்து விடுகின்றது. இச்சங்கங்களிலிருந்து பெற்ற மூலப் பொருள்களைக் கொண்டு தங்கள் பணிமனையில் வைத்து கூட்டுறவு சங்கங்கள் விரும்புகின்ற வகையில் பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். இனி இதனை அங்காடியில் விற்பது கூட்டுறவுச் சங்கத்தின் கடமையாகும். இம்முறையினால் ஏற்படும் நன்மை என்னவென்றால் உறுப்பினர்கள் தத்தம் வீடுகளில் அல்லது பணிமனைகளில் வைத்து உற்பத்தி செய்வதால் குடும்ப உறுப்பினர்களையும் உற்பத்தியில் ஈடுபடுத்தலாம். நமது நாட்டில் கைத்தறி தொழில் துறையில் இவ்வகையான கூட்டுறவு அமைப்பு அதிகமாகப் பரவியுள்ளது.

(2) தொழில் சம்பந்தமான பணிகள் புரியும் கூட்டுறவுச் சங்கம்

இவ்வகையான சங்கங்கள் தனது உறுப்பினர்களுக்கு மூலப் பொருள்கள், கருவிகள் முதலியன வழங்குகின்றன. வேறு சில சங்கங்கள் உறுப்பினர்கள் உற்பத்தி செய்த பொருள்களை அங்காடியில் விற்றுக் கொடுக்கின்றன. பல சங்கங்கள் இரண்டு பணிகளையுமே செய்கின்றன. சில கூட்டுறவு சங்கங்கள் பொருள்கள் விற்கா விட்டால் திருப்பிக் கொடுத்து விடுவது என்ற ஒப்பந்தத்தின் கீழ் உறுப்பினர்களிடமிருந்து பொருள்களைப் பெற்றுக் கொள்கின்றன. இதனால் பொருள்கள் விற்காவிட்டால் நட்டமடைவது உறுப்பினர்களே. வேறு சில சங்கங்கள் உற்பத்தி செய்த பொருள்களை விலை கொடுத்து வாங்கிக் கொள்கின்றன. இங்கு இழப்பு

ஏற்பட்டால் ஏற்றுக் கொள்வது கூட்டுறவுச் சங்கங்களேயன்றி உறுப்பினர்கள் அல்ல.

(3) பொது வசதிப் பணிமனை : (Common Facility Workshop)

சிறு தொழில் அதிபர்களின் தகுதிக்கு அப்பாற்பட்ட சில தொழில் நுட்பங்களும் செயல் முறையும் தனது உறுப்பினர்களுக்கு கிடைக்கும் பொருட்டு சில கூட்டுறவு சங்கங்கள் இத்தகைய பொதுவான வசதிகளை செய்து கொடுக்கின்றன. சான்றாக நிக்கல் மூலாம் பூசுதல் போன்றவைகளைச் சிறு தொழில் நிறுவனங்கள் சொந்தமாக ஏற்று நடத்த முடியாது இச்சமயத்தில் அதன் வசதியினை வேண்டுகின்ற வேறு சில சிறு தொழில் அதிபர்கள் ஒருங்கிணைந்து அதற்குரிய இயந்திரத்தினை வாங்கி ஒரு கூட்டுறவு சங்கம் அமைக்கின்றனர் இதனால் உறுப்பினர்கள் தங்கள் பொருள்களுக்கு நிக்கல் மூலாம் பூசிக் கொள்ளலாம்.

(4) கூட்டமைப்பு நிறுவனங்கள் : Federal Bodies)

பல்வேறு தொழில் கூட்டுறவு சங்கங்கள் ஒருங்கிணைந்து செயல்படுகின்ற அமைப்பே கூட்டமைப்பு நிறுவனம் எனப்படும். ஒரே தொழிலைச் சார்ந்த கூட்டுறவு சங்கங்கள் தனியாக கூட்டமைப்பு நிறுவனங்கள் அமைக்கலாம் அல்லது பல்வேறு தொழில் செய்பவர்களும் ஒருங்கிணைந்து கூட்டமைப்பு நிறுவனம் அமைக்கலாம். இச்சங்கங்கள் இன்று நாடு முழுவதும் பரவியுள்ளன அகில இந்திய கைத்தறித் துணி விற்பனை கூட்டுறவு சங்க நிறுவனம் (All India Handloom Fabric Marketing Co-operative Society Ltd) தேசிய தொழில் கூட்டுறவு கூட்டமைப்பு நிறுவனம், டெல்லி, (National Federation of Industrial Co-operative Ltd, Delhi) ஆகிய இரண்டினையும் சிறந்த சான்றுகளாகக் கொள்ளலாம். இச்சங்கங்கள் தனது உறுப்பினர்களுக்கு மூலப் பொருள்கள் கிடைப்பதற்கும், அவர்களின் பொருள்கள் விற்பனை செய்வதற்கும், அவர்களுக்கு வேண்டிய நவீன இயந்திரங்கள் கிடைப்பதற்கும் வழி வகைகள் செய்கின்றன.

**கூட்டுறவு தொழிற் பேட்டைகள் :** சமீப காலங்களில் தொழிற் பேட்டைகள் அமைப்பதில் முக்கியமான மாறுதல் என்னவென்றால் சில தொழிலதிபர்கள் தாங்களாகவே ஒருங்கிணைந்து கூட்டுறவு முறையில் தொழிற் பேட்டைகள் அமைப்பதாகும். இவ்வமைப்பில் உறுப்பினர்கள் தங்களுக்கு வேண்டிய வசதிகளை தாங்களாகவே செய்து கொள்கின்றனர் மொத்தத்தில் இப்பேட்டைகள் அரசு அமைத்துக் கொடுக்கின்ற பேட்டைகள் போலவே இயங்குகின்றன.

நிர்வாகம் : தொழில் கூட்டுறவுகளை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகக் குழுக்கள் நிர்வாகம் செய்கின்றன. ஆரம்ப காலத்தில் சில வருடங்களுக்கு அரசு இக்குழுக்களை நியமிக்கும். தவிர ஒழுங்கான நிர்வாகம் இல்லாத இடங்களிலும் அரசு நிர்வாகக் குழுக்களை நியமிக்கும். அரசும் இக்கூட்டுறவு அமைப்பில் முதலீடு செய்திருந்தால் நிர்வாகக் குழுவில் சில உறுப்பினர்களை நியமிக்க அரசுக்கு அதிகாரம் உண்டு. வெவ்வேறு தொழில் புரிபவர்கள் இக்கூட்டுறவு அமைப்பில் உறுப்பினர்களாக இருந்தாலும் அவரவர்கள் தங்கள் பிரதிநிதியாக ஒவ்வொருவரை தேர்ந்தெடுப்பர்.

வளர்ச்சி : 1948, 1956 ஆம் ஆண்டுகளில் அறிவிக்கப்பட்ட 'தொழிற் கொள்கை தீர்மானம்' தொழில் கூட்டுறவுகள் அமைப்பின் அவசியத்தை பெரிதும் வலியுறுத்துகின்றன. இரண்டாம் திட்டகால இறுதியில் 33,266 தொழில்துறை கூட்டுறவு சங்கங்கள் இருந்தன. அதில் 11,847 கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள், 855 காதியையும், 11,346 கிராமத் தொழில்களையும் 1984 கைவினைத் தொழில்களையும், 446 கயிற்றுப் பொருள்கள் உற்பத்தியினையும், 21 நூற்பாலைகளையும், 6,599 சிற்றளவுத் தொழில்களையும், 10 தொழில் கூட்டுறவு வங்கிகளையும், சார்ந்தவையாகும். 1963ல் மொத்த கூட்டுறவு தொழில்துறை 45,000ஐ எட்டியது. இதனால் 29.5 இலட்சம் மக்கள் உறுப்பினர்களானார்கள்.

கூட்டுறவு தொழில் துறைக்கு நிதி வசதி அளிப்பவை மைய கூட்டுறவு வங்கிகளும், மாநில கூட்டுறவு வங்கிகளும் ஆகும். ஆனால் இவ்வங்கிகள் இதுவரை வேளாண்மைத் துறைக்கே நிதி உதவி அளித்து வந்துள்ளன. தொழில் துறைக்கு நிதிஉதவி அளிப்பது என்பது இவைகளுக்குப் புதிய செயல்களாகும். எனவே கூட்டுறவு தொழில் துறைக்கு இவைகளின் கடன் வசதியினைப் பெருக்குவதற்கு உத்தரவாதத் திட்டம் ஒன்றினை மத்திய அரசு ஆரம்பித்துள்ளது. இதன்படிக் கூட்டுறவுத் தொழில் துறைக்குக் கூட்டுறவு வங்கிகள் வழங்கும் கடன்களுக்கு மத்திய அரசு உத்தரவாதம் அளிக்கின்றது. அதன்படி ஏதாவது இழப்பு ஏற்பட்டால் 90 சதவீத இழப்பை அரசு ஏற்றுக் கொள்ளும். இதனை 50 : 40 என்ற விகிதத்தில் மத்திய அரசும், மாநில அரசும் பகிர்ந்து கொள்ளும்.

இது தவிர மையநிதிக் கழகங்களும் கூட்டுறவுத் தொழில் துறைக்கு நிதி உதவி செய்து வருகின்றன. இக்கழகங்கள் ரூ 10 இலட்சம் வரைக்கும் கடனும், முன்பணமும் அளிக்கின்றன,

கூட்டுறவுத் தொழில் துறை எழுப்பும் கடன் பத்திரங்களையும் இக் கழகங்கள் வாங்குகின்றன. இவைகள் சுமார் இருபது வருடத்திற்கு திரும்பப் பெறப்பட வேண்டும்.

தேசிய சிறு தொழில் கழகமும் கூட்டுறவு, தொழில் துறைக்கு தவணைமுறையில், இயந்திரங்கள் வாங்குவதற்கு உதவிபுரிகின்றன. 1962 வரைக் கழகம் 87 கூட்டுறவு சங்கங்களுக்கு ரூ 11·24 இலட்ச மதிப்புள்ள 527 இயந்திரங்களை வழங்கியுள்ளது.

இது தவிர அரசும் கூட்டுறவு தொழில் துறை வளர்வதற்கு பல்வேறு கடன் வசதிகள் அளிக்கின்றது. புதிதாக கூட்டுறவு தொழில் நிறுவனம் நிறுவுவதற்கு நிலையான முதலும் நடைமுறை முதலும் 2·5 சதவீத வட்டி வீதத்தில் வழங்குகின்றது. இது பத்துவருட தவணையில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும்.

கூட்டுறவு தொழில்துறை, தமிழகம், மகாராஷ்டிரா பஞ்சாப், குஜராத், மைசூர், ஆந்திரப் பிரதேசம் போன்ற மாநிலங்களின் மிகச் சிறப்பாக முன்னேறியுள்ளது மகாராஷ்டிரம் குஜராத் போன்ற மாநிலங்களில் கூட்டுறவுத் தொழில் பேட்டைகள், சிறந்து விளங்குகின்றன.

# 10. இந்திய அரசின் தொழிற் கொள்கை

அரசின் தீவிர ஒத்துழைப்பும் உதவியும் இல்லையெனில் தொழில் துறையில் சீரிய வளர்ச்சி அமைய இயலாது. நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் அரசின் பங்கு என்றுமில்லா அளவில் இன்று அதிகரித்துள்ளது. வளர்ச்சியுறும் நாடுகளில் மட்டுமல்லாது நன்கு தொழில் துறையில் வளர்ச்சி பெற்ற நாடுகளில்கூட அரசின் உதவி தேவைப்படுகின்றது. தொழில் துறையில் வளர்ச்சி பெற்ற நாடுகளில், அவற்றின் நிலையான பொருளாதார வளர்ச்சியையும், வேலை நிறைவையும் அழியாமல் காத்து வருவதற்கு அரசின் உதவி இன்றியமையாததாகும். வளர்ச்சியுறும் நாடுகளில், அரசின் உதவி வேறு வகையில் தேவைப்படுகிறது. அந்நாடுகளில் காணப்படும் நச்சுச் சுழலைத் தகர்த்தெறிந்து, தொழில் துறை வளர்ச்சியினை விரிவு படுத்துவதற்கு அரசின் உதவி இன்றியமையாததாகிறது. இதற்குச் சான்றாக, ஜப்பானையும், ஜெர்மனியையும் எடுத்துக் கொள்ளலாம். ஜப்பானை நவீனத் தொழில் மயமாக்குவதில் அரசின் பங்கு பெரிதும் போற்றத் தக்கதாகும். ஜெர்மனியில், தொழில் துறை வளர்ச்சிக்கு அரசு அளித்த ஊக்கமும், அதன் வளர்ச்சிக்கு உறு துணையாக அரசு நின்றதுமே முக்கிய காரணங்களாகும். எனவே, வளர்ச்சி பெற்ற நாடுகளிலும், பொருளாதார வளர்ச்சியில் அரசு முக்கிய பங்கு வகிக்கின்றது என்பதை உணரலாம்.

## I. தொழிற் கொள்கையின் தேவை

வளர்ச்சியுறும் நாடுகள் பொருளாதார வளர்ச்சி பெறும் பொருட்டு, அவை இன்று திட்டமிட்ட கொள்கைகளைச் செயல்படுத்துகின்றன. இத்தகைய பொருளாதாரத் திட்டத்தில் அந்தந்த நாடுகளின் தொழில் கொள்கை முக்கிய அங்கம் வகிக்கின்றது. தொழில் கொள்கையின் முக்கிய நோக்கம் யாதெனில், பொருளாதாரத்தில் உள்ள ஒரு சில குறைபாடுகளை நீக்கி, அதனை வளர்ச்சி

யடையச் செய்வதேயாகும். பின்வரும் காரணங்களுக்காக ஒரு நாட்டில் தொழில் கொள்கை மிகவும் இன்றியமையாததாகும்.

(1) பொருளாதாரத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை நீக்கி, ஒரு நிலையான, சரி சமமான பொருளாதார வளர்ச்சி அடைதல்.

(2) பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாத துறைகளில் நாட்டின் வளங்களைப் பயன்படுத்துதல்.

(3) நாட்டிலுள்ள வளங்களைப் பாதுகாப்பதோடன்றி, அவை நீடித்துக் கிடைப்பதற்காக, அவ்வளங்களைச் சிக்கனமாகவும், நேர்மையாகவும் பயன்படுத்துதல்.

(4) உற்பத்தி பெருக்கத்தாலும், தொழில் துறை முன்னேற்றத்தாலும், கிடைத்துள்ள பயன்களை எல்லா மக்களும் அனுபவிப்பதற்கு ஏற்ற வகையில் சமமாகப் பங்கிடுதல்.

(5) சுரண்டலைத் தவிர்ப்பதற்கும், விற்பனை முற்றுரிமை,வணிக நிலையங்களின் கூட்டணி போன்றவற்றைக் கட்டுப்படுத்தவும்.

(6) ஒரு சிலரிடையே செல்வம் குவிந்து விடாமல் தடுத்தல்; வாய்ப்புகளை அனைவருக்கும் சமமாகக் கிடைக்கச் செய்தல்.

மேற்கூறிய காரணங்களால் தொழில் கொள்கையின் முக்கியத்துவத்தை நன்கு அறியலாம். மேலும், இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளில், அதன் தேவை மிகவும் அவசியமாகும். பின் வரும் பகுதிகளில் இந்திய அரசின் தொழில் கொள்கையைப் பற்றி விரிவாகக் காண்போம். இந்திய அரசின் தொழில் கொள்கையினை

(i) விடுதலைக்கு முன்பு நிலவிய அரசின் தொழில் கொள்கை

(ii) விடுதலைக்குப் பின் அரசின் தொழில் கொள்கை என இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

**(i) விடுதலைக்கு முன்பு அரசின் தொழில் கொள்கை:** தொழில் கொள்கை என்பது ஒரு நாட்டின் தொழில் துறை பற்றிய வழி முறைகள், கோட்பாடுகள், கொள்கைகள், அதனைக் கட்டுப் படுத்துகின்ற சட்ட திட்டங்கள் முதலியவற்றை வரையறுத்துக் கூறுவதாகும். அத்துடன் நிதி மற்றும் பணவாக்கக் கொள்கைகள் (Fiscal and monetary Policies), சுங்க வரிக் கொள்கை, தொழிலாளர் கொள்கை, மற்றும் தனியார் துறை, பொதுத்துறை பற்றிய அரசின் கொள்கை போன்றவைகளையும் விவரமாகக் கூறுவதாகும்.

சுதந்திரம் அடைவதற்கு முன்பு சமமான தொழில் வளர்ச்சிக்காக ஆங்கில அரசு எவ்விதக் கொள்கையையும் வகுக்கவில்லை.

எனினும் முதல் உலகப்போரின் விளைவாக ஒரு சில தொழில்கள் வளர்ச்சி பெற்று தொழில் துறை வளர்ச்சிக்கு அடிகோலின. ஆனால் அரசு தனது பரம்பரைக் கொள்கையான 'தலையிடாக் கொள்கை'-யையே (Laissez-Faire Policy) தொடர்ந்து பின்பற்றி வந்தது.

இரண்டாம் உலகப்போர் ஆரம்பித்த பின்னும் கூட அரசின் கொள்கை மாறவில்லை. எனினும் போர் தீவிரமடைந்த பொழுது நேச நாடுகளுக்குப் படைக் கலன்கள் அளிப்பதற்காக இந்தியத் தொழில் துறையை விரைவாக வளர்ச்சியடையச் செய்தல் அவசியம் என்பதை உணர்ந்தது. இதனால் 1941-ல் பாதுகாப்புச் சாதனங்கள் உற்பத்தி செய்வதற்கும், வெடி பொருள்கள் தயாரிப்பதற்கும், வேறு சில பொருள்கள் உற்பத்தி செய்வதற்கும், சிறு தொழில் துறையினை விரிவு படுத்துவதற்கும், மிகப் பெரிய திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது. எனினும், இந்தியர்களால் கட்டுப்படுத்தப் பட்டும், நிர்வாகம் செய்யப்பட்டும் வந்த கனரகத் தொழில் துறையின் விரைவில் வளர்ச்சி அடைவதற்கு அரசு இடையூறாகவே இருந்து வந்தது.

இரண்டாம் உலகப் போரினால் சில தீமைகளும் ஏற்பட்டன. போர்க்காலத்தில் இயந்திரங்கள் இடைவிடாது பணியாற்றியதாலும், அக் காலங்களில் சரிவரப் பேணப்படாமையாலும் போர் முடிந்த பிறகு பெரும்பான்மையான இயந்திரங்கள் தேய்வுற்றுப் பழுதுற்றுப் போயின. இதனால் அவைகளைப் புதுப்பிப்பதற்கும் பழுது பார்ப்பதற்கும் பேரளவில் அதிக மூலதனம் தேவைப் பட்டது. ஆனால் மூலதனமானது போதிய அளவு கிடைக்காததால் இன்னும் கூட ஒரு சில ஆலைகள் பழுதடைந்த இயந்திரங்களைக் கொண்டே இயங்கி வருகின்றன.

இந்தியா விடுதலை அடைந்த பொழுது உற்பத்தி அளவு குறைந்த பண வீக்கம் அதிகமாக இருந்தது மேலும் நாட்டுப் பிரிவினையும், அதனையொட்டி எழுந்த அகதிகளுக்கு மறுவாழ்வு அளித்தல் போன்ற பிரச்சினைகள் பணவீக்கத்தைத் தீவிரப் படுத்தின. எனவே, சுதந்திரத்திற்கு பின் தொழில் துறை வளர்ச்சிக்காக தேசிய அரசால் மிகத் தீவிரமான நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன.

**(ii) விடுதலைக்குப் பின்பு அரசின் தொழிற் கொள்கை:** விடுதலைக்குப் பின், அரசு வகுத்துக் கொண்ட தொழில் கொள்கையை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்,

**(1) தொழில் கொள்கைத் தீர்மானம், 1948,**

(2) தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்கு படுத்துதல்) சட்டம், 1951, மற்றும் 1953, 1956ம் ஆண்டு திருத்தச் சட்டங்கள்.

(3) தொழில் கொள்கைத் தீர்மானம், 1956.

இம் மூன்றினைப் பற்றியும் விரிவாகக் கீழே காண்போம்.

**1. தொழிற் கொள்கைத் தீர்மானம், 1948**

A தீர்மானம் கொண்டு வரப்பட்ட சூழ்நிலை: தொழில் துறை உற்பத்திக் குறைவு, மக்கள் தொகைப் பெருக்கம், பணவீக்கம் போன்ற சூழ்நிலைகளில் நாம் சுதந்திரம் அடைந்தோம் இவை களைத் தவிர தொழில் உரிமை பற்றி நாட்டில் பல்வேறு மாறுபட்ட கருத்துக்கள் நிலவி வந்தன. எல்லா நிறுவனங்களையும் தேசிய மயமாக்க வேண்டும் என்று ஒரு சாரார் கூறினர் தொழில் துறை வளர்ச்சியடைவதற்கு தனியார் துறைக்கே முழுப் பங்கு அளிக்க வேண்டும் என்று தொழிலதிபர்கள் கூறினர். சில அரசியல் தலைவர்கள் அந்நியர்கள் நிர்வாகம் செய்யும் தொழில்களையும், அந்நிய மூலதனத்தையும் நாட்டுடைமையாக்க வேண்டும் என்றனர் இத்தகைய மாறுபட்ட கருத்துகள் நிலவிய சூழ் நிலையில், நாட்டின் நிலையான தொழில் வளர்ச்சியடைவதற்கு, விரிவான ஒரு தொழில் கொள்கை தேவை என்பது உணரப் பட்டது. இதனை மனதில் கொண்டு 1948ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6ம் தேதி தொழில் கொள்கைத் தீர்மானம் ஒன்று நாடாளு மன்றத்தில் நிறைவேற்றப்பட்டது.

B நோக்கங்கள் (Objectives): (i) எல்லா மக்களுக்கும் சம மான வாய்ப்பளித்து சமூக நீதி (Social Justice) நிலவிடும் சமூக அமைப்பினை ஏற்படுத்துதல்,

(ii) பின்வரும் வழிகளில் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்.

(அ) பயன்படுத்தப்படாத அல்லது வெளிக்கொணரப் படாத வளங்களைப் பயன்படுத்துதல்.

(ஆ) உற்பத்தியைப் பெருக்குதல்.

(இ) எல்லோருக்கும் வேலை வாய்ப்பளித்தல்.

சுருக்கமாகக் கூறினால், எல்லாவிதமான முறைகளையும் பயன் படுத்தி. உற்பத்தியைப் பெருக்குதலும், அதனைச் சமமாகப் பங்கிடு தலும், இன்றியமையாதன ஆகும் என்றுணரப்பட்டது. மூலதனச்

சாதனங்கள் மற்றும் மக்களின் அடிப்படைத் தேவையைப் பூர்த்தி செய்யும் பொருள்களை உற்பத்தி செய்தல்; அந்நியச் செலாவணியை ஈட்டிக் கொடுக்கக்கூடிய ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்வதில் அதிகக் கவனம் செலுத்துதற்கும் அக்கறை கொள்ளப்பட்டது.

இத்தொழில் கொள்கைத் தீர்மானத்தின் முக்கியமான கருத்து யாதெனில் கலப்புப் பொருளாதாரக் கொள்கையை அரசு ஏற்றுக் கொண்டதாகும். இக்கொள்கைப்படி நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் தனியார் துறையும், பொதுத்துறையும், இணைந்தே செயல்படும். இவ்விரு துறைகளுக்கும் தனித்தனியாகச் சில தொழில்கள் ஒதுக்கப்பட்டன.

C முக்கிய தோற்றக் கூறுகள் : (i) தொழில்களை நான்கு வகையாகப் பிரித்தல : இத்தீர்மானம் கலப்புப் பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்டதால், நாட்டின் பல்வேறு தொழில்களும் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு அவற்றில் தனியார் துறைக்கும், பொதுத்துறைக்கும் உள்ள பங்கினைப்பற்றி விரிவாகக் கூறப்பட்டது. அப்பிரிவுகள் வருமாறு :

(a) அரசின் முற்றுரிமைத் தொழில்கள்: இராணுவத் தளவாடங்கள் உற்பத்தி செய்தல், அணுசக்தி உற்பத்தி மற்றும் கட்டுப்பாடு, இருப்புப் பாதை போக்குவரத்தின் உரிமை மற்றும் நிர்வாகம் முதலியனவற்றை அரசே ஏற்று நடத்திவரும். மேலும் அவசரக் காலங்களில் நாட்டுப் பாதுகாப்பிற்கு மிகவும் இன்றியமையாத தொழிலை அரசே ஏற்றுக் கொள்ளும்.

(b) அரசின் முனைப்பிற்காக (State Initiative) ஒதுக்கப்பட்ட தொழில்கள் : (i) இப்பிரிவில் நிலக்கரி, இரும்பு மற்றும் எஃகு, விமான உற்பத்தி, கப்பல் கட்டுதல், தொலைபேசி உற்பத்தி செய்தல், தந்தி மற்றும் (வானொலிப்பெட்டி தவிர்த்த) கம்பியில்லாச் செய்தித் தொடர்புக் கருவிகள் (Wire-less apparatus) கனிப்பொருள், எண்ணெய் வகைகள் (Mineral oils) போன்ற ஆறு தொழில்கள் இப்பிரிவில் அடங்கும்.

(ii) தனியார் துறையில் இப்பிரிவுத் தொழில்கள் ஏற்கெனவே இயங்கி வந்தால் அவை தொடர்ந்து தனியார் துறையில் இருப்பது பற்றி 10 ஆண்டுகள் கழித்து மறுபடியும் ஆராயப்படும். தேவைப்பட்டால் தேசியமயமாக்கப்படும். தேசியமயமாக்கப்பட்டால், அதற்குரிய இழப்பீட்டுத் தொகை கொடுக்கப்படும்.

(iii) இப்பிரிவில் அடங்கும் தொழில்களைப் புதிதாக அரசுத் துறையில் மட்டுமே தொடங்க இயலும்.

(iv) இவ்வாறு அரசு ஏற்றுக் கொண்ட தொழில்கள் அரசின் கட்டுப்பாட்டில் உள்ள தனியான இணைக்கழகங்களால் நிர்வாகம் செய்யப்படும்.

(c) அரசின் ஒழுங்கு முறைகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்ட தொழில்கள் : அடிப்படை முக்கியத்துவம் பெற்ற தொழில்களான உப்பு, உந்து வண்டிகள், இயந்திரக் கலப்பைகள், (Tractors) மின்சக்தி சாதனங்கள், கனரக இயந்திரங்கள் மற்றும் கனரக இரசாயனப் பொருள்கள், உரம், சாராயவகைகள், ஆகாயம் மற்றும் கடல் போக்குவரத்து, இயற்கை வளங்கள், நாட்டின் பாது காப்பிற்குச் சம்பந்தப்பட்ட தொழில்கள், பருத்தி மற்றும் கம்பளித் துணி உற்பத்தி, சிமெண்ட், சர்க்கரை, காகிதம், மருந்துவகைகள் முதலியன அரசின் கட்டுப்பாட்டிற்குள் அடங்கும். இப்பிரிவில் 20 தொழில்கள் அடங்கும். அதிக முதலீடு, தொழில் நுணுக்க அறிவு தேவைப்படும் தொழில்களும், அகில இந்திய முக்கியத் துவமும் பெற்ற தொழில்களும் இப்பிரிவில் அடங்கியுள்ளன. எனவே, அவற்றைச் சீர்திருத்திக் கட்டுப்படுத்த மத்திய அரசுக்கு உரிமையுண்டு.

(d) தனியார் துறை : மேற்கூறிய பிரிவுகளில் அடங்காத தொழில்கள் இப்பிரிவுகளில் சேர்க்கப்பட்டன. எனினும் உரங்கள், இன்றியமையாத மருந்து வகைகள், உற்பத்தியை அதிகரிப்பதிலும் அரசு தீவிரமாகப் பங்கு கொள்ளும். தனியார் துறையில் உள்ள ஏதாவது ஒரு நிறுவனத்தின் வளர்ச்சி திருப்திகரமாக இல்லையென்றால் அரசு தலையிடுவதற்குத் தயங்காது.

மேற்கூறியவாறு தனியார்துறை, பொதுத் துறைக்குரிய தொழில்களைப் பிரித்தமையால், தொழில்துறையில் அரசானது ஈடுபட வழிவகை செய்து, அதன்மூலம் கலப்புப் பொருளாதாரம் (Mixed Economy) எனும் பொருளாதாரக் கொள்கை தோன்றிட வித்திட்டது எனலாம். சிற்றளவு மற்றும் குடிசைத் தொழில்களின் பங்கு, தொழிலாளர் நிர்வாக உறவு, அந்நிய மூலதனம், வரிக் கொள்கைகள் பற்றியும் இத் தொழில் கொள்கைத் தீர்மானம் தெளிவுற விளக்கியுள்ளது.

(II) சிற்றளவு மற்றும் குடிசைத் தொழில்களின் பங்கு :

பொருளாதார வளர்ச்சியில் சிற்றளவு மற்றும் குடிசைத் தொழில்கள் மிகவும் இன்றியமையாதனவாகும். தனி மனிதனுக்கு சீரான வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பதிலும், கிராமப்புறவாழ்க்கைத் தரத்தை முன்னேற்றுவதிலும் சிறுதொழில்கள் சிறந்த பணியாற்ற

வல்லன. வட்டாரங்களில் கிடைக்கும் வளங்களை பயன்படுத்து வதற்கும், நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியில் அந்தந்த வட்டாரங்கள் தன்னிறைவு அடைவதற்கும் சிறுதொழில்கள் பெரிதும் உதவுவனவாகும். இவை பேரளவுத் தொழில் துறையுடன் ஒருங்கிணைந்து செயல்படுவதற்கு அரசு உதவி புரியும்.

### (III) தொழிலாளர் – நிர்வாக உறவு

தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்திற்கும் இடையே சுமுகமான உறவு நிலவுவதற்கு தொழிலாளர்களின் நிலையை உயர்த்துவது அவசியம். அத்துடன் உற்பத்தியை அதிகரிப்பதற்கும் தொழிலாளர்–நிர்வாகத்தினர் ஆகியோரிடையே ஒற்றுமை நிலவ வேண்டும். இதன் பொருட்டு தொழில் அமைதி குலையக்கூடிய வாய்ப்புகளைக் குறைப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்படும். தொழிலாளர்களுக்கு நியாயமான கூலியாவது (Fair wage) கிடைப்பதற்கு வழி வகைகள் செய்யப்படும் நிர்வாகத்தில் தொழிலாளர்களும் பங்கு கொள்வதற்கு ஊக்குவிக்கப்படும்.

### (IV) அந்நிய மூலதனம்

அந்நிய மூலதனமும், அந்நிய நிறுவனங்கள் நம் நாட்டில் தொழில் தொடங்குவதும் நமது தொழில் வளர்ச்சிக்கு உதவியாக இருக்கும். இதனால் தொழில் நுட்ப அறிவு பெறுவதற்கு வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன. அந்நிய மூலதனத்தால் இந்திய மக்களும் தொழில்களை நிர்வகிக்கும் திறன் பெறுகின்றனர். இதன்பொருட்டு, அந்நிய நிறுவனங்கள் இந்தியர்களுக்கு நிர்வாகப் பயிற்சியளித்தல் முக்கியமாகும். பொதுவில், நாட்டின் நலன்களுக்கு ஊறுவிளைவிக்காத அந்நிய மூலதனத்தைப் பெறுவதில் தவறு இல்லை.

### (V) சுங்கவரிக் கொள்கையும் (Tariff Policy) வரிக் கொள்கையும் (Tax Policy)

முறையற்ற வெளிநாட்டுப் போட்டியைத் தடுப்பதற்கும், நாட்டின் கனிவளங்களை மக்கள் பயன்பெறும் வகையில் ஈடுபடுத்துவதை ஊக்குவிப்பதற்கும் திறமையான சுங்க வரிக் கொள்கை ஒன்று உருவாக்கப்படும் என்று தொழிற்கொள்கை உறுதியளித்தது. அத்துடன், வரிவிதிப்பு முறைகளும் மாற்றி அமைக்கப்படும். பயன் தரத்தக்க வகையில், சேமிப்பையும், முதலீட்டையும் தூண்டுவதற்கும், ஒரு சிலரிடையே செல்வம் குவிவதைத் தடுப்பதற்கும் புதிய வரிக் கொள்கை ஒன்று உருவாக்கப்படும்.

மதிப்பீடு

**நன்மைகள் :** முதலாவதாக தொழில் கொள்கைத் தீர்மான மானது இந்தியத் தொழில்துறை வளர்ச்சியில் புதிய யுகத்தை தோற்றுவித்தது என்றே கூறலாம். தனியார் துறைக்கும், பொதுத் துறைக்கும் பல்வேறு தொழில்களைப் பிரித்து அதனதன் பொறுப் பினை நன்கு உணர்த்தியுள்ளது.

இரண்டாவதாக, சிற்றளவு மற்றும் குடிசைத் தொழில்களின் இன்றியமையாத தன்மையை நன்கு எடுத்துரைத்துள்ளது. மேலும் அத்தொழில்களுக்கு உரிய மூலப் பொருள்கள் கிடைப்பதற் கும், அங்காடி வாய்ப்பினைப் பெருக்குவதற்கும் நிதி உதவி புரிவதற் கும், தொழில் நுட்பத்திறன் அதிகரிப்பதற்கும் பல்வேறு நட வடிக்கைகளை அரசு எடுத்தது.

மூன்றாவதாக, உற்பத்தி பெருகுவதற்கு தொழில்துறை அமைதி யினைக் காப்பதன் முக்கியத்தை உணர்ந்து தகுந்த வரிவிதிப்பு அமைப்பினைக் கொண்டு தொழிலதிபர்கள் உயர்மிகுத இலாபம் அடைவதைத் தடுத்து வந்தது.

நான்காவதாக, அந்நிய மூலதனத்தின் தேவை நன்குணர்த்தப் பட்டுள்ளது. அந்நிய மூலதனத்தை அதிக அளவில் கவர்ந்திட வல்ல வகையில் பொருத்தமான சட்டம் இயற்றப்பட்டது.

**குறைகள் :** இத்தகைய நன்மைகள் பல தொழில் கொள்கை யால் ஏற்பட்டாலும் அதில் சில குறைகள் இல்லாமலில்லை. முதலா வதாக பத்து ஆண்டுகள் கழித்து ஒரு சில தொழில்களைத் தேவைப் பட்டால் தேசியமயமாக்கப்படும் என்ற அறிவிப்பானது, முக்கிய மான தொழில்களில் முதலீடு செய்யப்படுவதைக் குறைத்தது. இக் குறையினை நீக்கிட, அரசானது தானே முதலீடு செய்யக்கூடிய நிலையிலும் இல்லை. எனவே இவ்வறிப்பானது தொழில்துறை வளர்ச்சிக்கு ஓரளவு இடையூறாகவே இருந்தது.

இரண்டாவதாக, தொழில் கொள்கையில் மத்திய அரசுக்கும், மாநில அரசுக்கும், எவ்வித ஒற்றுமையும் இல்லை. பத்து ஆண்டு காலத்திற்கும் பின்பே சில தொழில்கள் தேவைப்பட்டால், தேசிய மயமாக்கப்படும் என்று கூறினாலும், தமிழ்நாடு, உத்திரப்பிரதேசம், பம்பாய் போன்ற மாநில அரசுகள் உடனே சில தொழில்களைத் தேசியமயமாக்குவதற்கு முனைந்தன. சாலைப் போக்குவரத்தானது சில மாநிலங்களில் தேசிய மயமாக்கப்பட்டது. தமிழ்நாடு, உத்தரப் பிரதேசம், மகாராஷ்டிரம் போன்ற மாநிலங்களில் மின்சக்தி

அளிப்பு தேசிய மயமாக்கப்பட்டது. இரண்டாம் பிரிவில் அடங்காத போக்குவரத்துக்கூட தேசிய மயமாக்கப்பட்டது. இத்தகைய செயல்கள் தனியார் துறையில் முதலீடு செய்வதற்கு அச்சத்தை ஏற்படுத்தின.

மூன்றாவதாக, தனியார் துறையின் முன்னேற்றத்திற்கு வழி காட்டியாகவும், துணை நிற்கக்கூடியதாகவும் தொழில் கொள்கை அமையவில்லை. தனியார் துறையை ஊக்குவிக்கும் முறையில் ஆற்றவல்ல பல்வேறு உதவிகளைப் பற்றி எதுவும் கூறவில்லை. தொழில்துறை முன்னேற்றத்தில் அரசு அதிக ஆர்வம் காட்டியதே யன்றி அதற்கான அனுபவம் இல்லை. தொழில்களைக் கட்டுப் படுத்தல், ஒழுங்கு கட்டுப்படுத்துதல், தேசிய மயமாக்குதல் போன்ற பல அச்சுறுத்தல்கள் தனியார் துறையில் முதலீடு செய்வ தற்குப் பெரும் இடையூறுகளாக அமைந்தன. தொழில்துறையில் பெரும்பகுதியைப் பொதுத்துறைக்கென ஒதுக்கினாலும், த் தொழில்களில் முதலீடு செய்வதற்குப் போதிய மூலதனவசதி இல் லாததால், பொதுத்துறையின் முதலீடு பெருகவில்லை. இவ்வாறு தனியார் துறையிலும், பொதுத்துறையிலும் போதிய முதலீடு இல் லாததால் இன்று வேலையின்மைப் பிரச்னை பெருகியுள்ளது எனலாம்.

குறைகள் சிலவற்றைக் களையும் நோக்கத்தோடு அரசானது சில முக்கிய நடவடிக்கைகளை மேற்கொண்டது.

(1) தொழில் வளர்ச்சியை ஊக்குவிக்க, அக்டோபர் 1948-ல் பல்வேறு வரிச்சலுகைகள் அறிவிக்கப்பட்டன. மூலப் பொருள்களை இறக்குமதி செய்வதற்கு இறக்குமதி வரி ஒழிக்கப்பட்டது. இயந் திரங்கள் மற்றும் இயந்திரத் தொகுப்புக்களை இறக்குமதி செய்வ தற்கு, இறக்குமதி வரியானது 10 முதல் 15 சதவீதம் வரை குறைக்கப் பட்டது. புதிதாக ஆரம்பிக்கப்பட்ட தொழில்களுக்கு ஐந்து ஆண்டு காலத்திற்கு இலாபத்தின் மேல் விதிக்கப்படும் வருமான வரிக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

(2) பேரளவுத் தொழில்துறைக்கு நிதி உதவி அளிப்பதற்காக ஜூலை 1948ல் தொழிலக நிதி இணைக்கழகம், (Industrial Finance Corporation) ஆரம்பிக்கப்பட்டது.

(3) பொருத்தமான நிதிக்கொள்கை ஒன்றினைப் பரிந்துரைப் பதற்கு 1949ல் முதலாவது நிதிக்குழு அமைக்கப்பட்டது. இக் குழுவின் பரிந்துரைப்படி 1952ல் 'இந்திய சுங்கவரிக் குழு', ஒன்று அமைக்கப்பட்டது.

(4) தொழில் நுட்பம் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கு 37 தேசிய ஆராய்ச்சிக் கூடங்கள் அமைக்கப்பட்டன.

**2. தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்கு படுத்தல் சட்டம், 1951, மற்றும் 1953, 1956ம் ஆண்டுத் திருத்தச் சட்டங்கள் )**

1948-ம் ஆண்டுத் தொழில் கொள்கைத் தீர்மானத்தைச் செயல் படுத்துவதற்காக, 1951ல் தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்கு படுத்தல்) சட்டம் [Industries (Development and Regulation) Act of 1951] நிறைவேற்றப்பட்டு, மே, 1952ல் அமுலுக்கு வந்தது.

(i) **நோக்கங்கள் :** (1) திட்டமிட்ட தொழில் வளர்ச்சியின் பொருட்டு அரசு தனது கொள்கைகளைச் செயல் படுத்துவதற்கு அரசிற்கு உரிமையளித்தல், மற்றும், தேசிய முக்கியத்துவம் வாய்ந்த தொழில்களை ஒழுங்கு படுத்துதல்.

(2) தொழில் ஆரம்பிப்பதற்குரிய இட அமைப்பு, ஏற்கெனவே உள்ள தொழில்களை விரிவு படுத்துதல், தனியார் துறையில் தொழில் தொடங்குதல் முதலியவற்றை அரசு கட்டுப்படுத்து வதற்கு உரிமை வழங்குதல் இதனால் விரும்பிய பகுதிக்கு முதலீட்டைச் செலுத்தலாம்; அதன் மூலம் சமமான வட்டார வளர்ச்சி பெறலாம்.

(3) நன்கு திறம்பட இயங்காத நிறுவனங்களையும், மக்கள் நலனுக்குப் புறம்பாகச் செயல்படும் நிறுவனங்களையும் அரசு மேற்கொள்வதற்கு வழிவகை செய்தல்.

(4) தொழில்துறை திட்டத்தினை வகுப்பதற்கு 'வளர்ச்சிக் குழுக்கள்' (Development council) அமைத்தல்.

(ii) **வரையறை :** இச்சட்டத்தின் முதல் அட்டவணையில் உள்ள எல்லாத் தொழில்களுக்கும் இச்சட்டம் பொருந்தக் கூடியதாகும். ஆரம்பத்தில் 37 தொழில்கள் மட்டுமே இதில் குறிக்கப்பட்டன. பின்னால் ஏற்பட்ட பல்வேறு திருத்தங்களால் தற்சமயம் 240 தொழில்களுக்கு இச்சட்டம் பொருந்தும். ஆரம்பத்தில் இச்சட்டம் ரூ. 1 இலட்சமும் அதற்கு மேலும் முதலீடு செய்யப்பட்டுள்ள தொழில்களுக்குப் பொருந்தும். பின்னால் 1954ல் ஏற்பட்ட திருத்தச் சட்டத்தின்படி மின்சக்தியின் உதவிகொண்டு 50 தொழிலாளர்களைக் கொண்ட தொழில்களுக்கும் மின்சக்தியினை உபயோகிக்காமல் 100 தொழிலாளர்களைக் கொண்ட தொழில்களுக்கும் பொருந்துவதாகமாற்றி அமைக்கப்பட்டது. 1960ல் ஜம்மு-காஷ்மீர் மாநிலத்திற்கும் இச்சட்டம் பொருந்தும்படி திருத்தப்பட்டது.

சிறு தொழில்துறை மற்றும் நடுத்தரத் தொழில் துறையினைத் தூண்டுவதற்காக ரூ 10 இலட்சத்திற்கும் குறைவான நிலைமுதலைக் கொண்டுள்ளதும், 100 தொழிலாளர்களைக் கொண்ட தொழில்கள் அனுமதி பெற வேண்டியதில்லை என்று அறிவிக்கப்பட்டது. ஒரு சில தொழில்களில் புதிய கொள்ளளவைப் பெறுவதற்காக, தாராள முறையில் அனுமதி கொடுப்பதற்காகக் 'கட்டுப்பாடற்ற அனுமதிப் பட்டியல்' (Free list of Licensing) ஒன்று தயாரிக்கப்பட்டு, அதில் 44 தொழில்கள் தொகுக்கப்பட்டன. இவற்றில் 23 தொழில்கள் பொறியியல் துறையைச் சார்ந்தவை. 1962ல் பொன், வெள்ளி போன்ற விலையுயர்ந்த உலோகங்களும் இச்சட்டத்தின் கீழ்வந்தன. 1966ல் தொழில்துறை அனுமதிக் கொள்கை தளர்த்தப்பட்டது, இதன்படி இரும்பு, மற்றும் எஃகு வார்ப்புப் பொருள் உற்பத்தி, சாராயம், சிமெண்ட், ஓட்டுப்பலகை, கட்டுமானத் தொழிலுக்கு காகிதம் போன்றவற்றைத் தயாரிக்கும் தொழில்கள் தங்கள் கொள்ளளவை விரிவு செய்வதற்கு அனுமதி பெற வேண்டியதில்லை என்று வகுக்கப்பட்டது. பின் 1968ல் விவசாயக் கருவிகள், வனஸ்பதி, முதலியன தயாரிக்கும் தொழில்களுக்கும் இச்சட்டம் விஸ்தரிக்கப் பட்டது.

1968ல், 218 அனுமதிகளும் (Licences) 153 தொழில் தொடங்க உரிமை முடங்கல்கள் (Letters of intent) வழங்கப் பட்டன.

(iii) முக்கிய தோற்றக் கூறுகள் : இச்சட்டத்தின் முக்கிய தோற்றக் கூறுகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

(1) தடுப்பு நடவடிக்கைகள் (Preventive measures)

(2) நிவாரண நடவடிக்கைகள் (Curative measures)

(3) உறுதியான, ஆக்கவளமுடைய மற்றும் புதிதாகத்தோற்று விக்கும் நடவடிக்கைகள் (Positive, Constructive and Curative measures)

### தடுப்பு நடவடிக்கைகள்

தேசிய பொருளாதாரக் கொள்கைக்கு எதிராகச் சில நிறுவனங்கள் இயங்குவதைத் தடுப்பதே, தடுப்பு நடவடிக்கைகளின் நோக்கமாகும். இந்நடவடிக்கைகள் பின்வருமாறு அமையும்.

(a) தொழில் நிறுவனங்களைப் பதிவு செய்தல் மற்றும் அனுமதி வழங்குதல்;

(b) அவற்றின் நடவடிக்கைகளைக் கவனித்தல்;

(c) தேவைப்பட்டால் அனுமதியைத் தள்ளுபடி செய்தல்.

(a) தொழில் நிறுவனங்களைப் பதிவு செய்தல் மற்றும் அனுமதி வழங்குதல் :

இச்சட்டம் வருவதற்கு முன்பே செயல்படும் நிறுவனங்கள் அரசிடம் தம்மைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். புதிதாகத் தொழில் நிறுவனங்களைத் தொடங்கவோ அல்லது ஏற்கெனவே இயங்கும் தொழில்களை விரிவு படுத்தவோ அரசின் அனுமதி உத்தரவைப் பெறவேண்டும். இவ்வனுமதி வழங்கு கொள்கை மூலம் தனியார்துறையைத் திட்டமிட்ட வளர்ச்சித் துறையில் ஒழுங்குபடுத்தலாம். ரூ. 5 கோடிக்கும் அதிகப்படாத நிலை முதலைக் கொண்டுள்ள, பதிவு செய்யப்பட்ட அல்லது அனுமதி பெற்ற நிறுவனங்கள், தங்கள் உற்பத்திக்கொள்ளளவை ஓரளவுக்கு விரிவு செய்திட அனுமதி பெற வேண்டியதில்லை. தொழில் நிறுவனங்கள் தங்கள் உற்பத்தியைப் பல்வகைப்படுத்துவதற்கு அனுமதிக்கப்பட்ட கொள்ளளவைவிட மேற்கொண்டு 25 சதவீதத்திற்குக் கொள்ளளவை அதிகரிக்க அனுமதி பெற வேண்டியதில்லை.

தொழில் அனுமதி பெற வேண்டிய நிபந்தனை இல்லாத தொழில்கள், தொழில்நுட்ப வளர்ச்சிப் பொது இயக்குநர் அலுவலகத்திலோ (Directorate General of Technical Development) அல்லது மத்திய அரசில் அதற்குத் தொடர்பான அலுவலகத்திலோ, பதிவு செய்து கொள்ளவேண்டும். சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் மத்திய அரசின் அதிகாரத்திற்குட்பட்ட அலுவலகங்களில் பதிவு செய்ய வேண்டியதில்லை. எனினும் அவை தமக்குத் தொடர்பு கொண்ட மாநில அரசு அலுவலகங்களில் பதிவு செய்தல் வேண்டும்.

பதிவு செய்ய விரும்பும் தொழிலதிபர்கள் தங்கள் மனுவில், தாங்கள் உற்பத்தி செய்யப்போகும் பொருள்களின் முழுவிவரம், எதிர்பார்க்கின்ற ஓராண்டு உற்பத்தி அளவு, அப் பொருள்கள் தயாரிப்பதற்கு வேண்டிய சாதனங்கள் பற்றியும் விரிவாகக் குறிப்பிட வேண்டும்.

(1) அனுமதிக் குழு : (Licensing Committee) தொழில் தொடங்க அனுமதி கேட்டுவரும் மனுக்களைப் பரிசீலனை செய்தல் அனுமதிக் குழுவின் பணியாகும். தொழில்துறை வளர்ச்சி மற்றும் நிறுவன நடவடிக்கைகள் இலாகாவின் செயலாளர் (Secretary of the Department of Industrial development and Company Affairs,) இக்குழுவின் தலைவராக விளங்குவார். திட்டக்குழு நிதி அமைச்சு, மாநில அரசுகள் முதலியவற்றின் பிரதிநிதிகள் இக் குழுவில் அங்கம் பெறுவர். இவர்கள் மூன்று வாரத்திற்கு ஒருமுறை

சந்தித்து தொழில் தொடங்குவதற்கு அனுமதிகேட்டு வந்துள்ள மனுக்களை நிபந்தனையுடன் அல்லது நிபந்தனை இல்லாமல் அனுமதி வழங்குவதா என்பது பற்றியும், அல்லது அந்த மனுவை முழுவதுமாகத் தள்ளுபடி செய்து விடுவதா என்பது பற்றியும் விவாதிக்கும்.

பின்வரும் காரணங்களுக்காக ஒரு தொழிலுக்கு அனுமதி கொடுக்காமல் இருப்பதற்கு இக்குழுவுக்கு உரிமையுண்டு.

(அ) மனுவில் குறிப்பிட்டுள்ள தொழிலின் திட்டம் அரசின் கொள்கைக்கு மாறாக இருத்தல்.

(ஆ) புதிய நிறுவனம், தொடங்குவதற்காகக் குறிப்பிட்டுள்ள இடத்தில் ஏற்கனவே மிக அதிகமான நிறுவனங்கள் இருத்தல்

(இ) குறிப்பிட்ட இடத்தில் போதிய போக்குவரத்து வசதி இல்லாமை, மூலப்பொருள்களை எளிதில் பெற இயலாமை, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்வதற்குச் சாதகமான சூழ்நிலை இல்லாமை முதலியவற்றாலும் அனுமதி வழங்கப்படாமல் இருக்கலாம்.

எனவே, தொழில்கள் ஓரிடத்தில் குவிவதைத் தடுப்பதற்கும் தொழில் துறையில் பின்தங்கிய இடங்களில் புதிய தொழில்கள் ஆரம்பிப்பதற்கும் அனுமதிக் கொள்கை உறுதுணையாக உள்ளது.

அனுமதி பெற்ற நிறுவனம், குறிக்கப்பட்ட காலத்திற்குள் நிறுவப்படவில்லையென்றால், அவ்வனுமதி தள்ளுபடி செய்யப்படும் அல்லது தேவைப்பட்டால் திருத்தி அமைக்கப்படும், மேலும் பதிவு செய்ததில் தவறான செய்திகள் கூறியிருந்தாலும், அனுமதி வழங்கப்பட மாட்டாது. தவிர. அனுமதி பெற்ற தொழிலதிபர் தனது நிறுவனத்தின் அரையாண்டு வளர்ச்சி பற்றிய அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டும்.

### (2) அனுமதி பெறுவதற்காக வகுக்கப்பட்ட தொழில்களின் பட்டியல் (List of Industries for Licensing)

தொழில் அனுமதி வழங்கும் பொருட்டு தொழில்துறை அமைச்சகமானது (Ministry of Industry) தொழில்களை மூன்று வகைப் பட்டியலில் பிரிக்கின்றது. இப்பட்டியல்கள் ஆண்டு தோறும் மாறுகின்ற சூழ்நிலைக் கேற்ப திருத்தி அமைக்கப்படும்.

(அ) நிபந்தனையற்ற தொழில்களின் பட்டியல்: (Free List) அனுமதிக் குழுவினைக் கலந்தாலோசிக்காமல் அனுமதி வழங்கப்படும் தொழில்கள் இப்பிரிவில் அடங்கும்.

(ஆ) சிறப்புத் தகுதிப் பட்டியல் (Merit List) : அனுமதிக்குழு நன்கு பரிசீலனை செய்தபின் அனுமதி வழங்கப்படும் தொழில்கள் இப்பிரிவில் அடங்கும்.

(இ) நிராகரிக்கப்பட்ட அல்லது தடை செய்யப்பட்ட தொழில்களின் பட்டியல் (Rejected or Banned List) : அனுமதிக் குழுவைக் கலந்தாலோசிக்காமல், குறைவான கொள்ளளவில் இயங்குகின்ற தொழில் நிறுவனங்களின் அனுமதியானது ரத்து செய்யப்படலாம். அவ்வகைத் தொழில்கள் இப்பிரிவில் அடங்கும்.

(ஈ) 1964 முதல் முக்கிய தொழில்கள் பட்டியலும் (Key industries List) சேர்க்கப்பட்டது. அடிப்படை மற்றும் முக்கியமான தொழில்களும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாத தொழில்களும இப்பட்டியலில் அடங்கும்

(உ) இது தவிர மேலும் ஒரு முன்னுரிமைத் தொழில்கள் பட்டியலும் (Priority List) உள்ளது. அந்நியச் செலாவணி ஒதுக்கீடு, இறக்குமதி செய்யப்பட்ட இயந்திர சாதனங்கள் மற்றும் மூலப் பொருள்களின் ஒதுக்கீடு ஆகியவற்றின் முக்கியம் பெற்ற தொழில்கள் இபபட்டியலில் அடங்கும்.

(b) நிறுவனங்களின் நடவடிக்கைகளைக் கவனித்தல்: அட்டவணையில் குறிப்பிட்டுள்ள நிறுவனங்களின் அன்றாட நடவடிக்கைகளைக் கவனிப்பதற்கு அரசிற்கு உரிமை உண்டு. அத்தொழில் நிறுவனங்களில் உற்பத்தி குறைந்தாலும் அப்பொருள்களின் விலை உயர்ந்தாலும், அல்லது தவறாக நிர்வாகம் செய்யப்பட்டாலும் அதுபற்றி அரசு ஒரு விசாரணையினை மேற்கொள்ளும். இவ்விசாரணைக்குப் பின் குறிப்பிட்ட நிறுவனம் உண்மையிலேயே பல்வேறு குறைபாடுகளுடன் இயங்குவதாக அறியப்பட்டால், அக்குறைபாடுகளை நீக்கும் பொருட்டு, அந்நிறுவனத்தின் உற்பத்தி, பொருள்களின் விலை, மற்றும் பங்கீடு முதலியவற்றை அரசு கட்டுப் படுத்தும்.

(c) அனுமதியைத் தள்ளுபடி செய்தல் : ஒரு நிறுவனத்திற்கு அளிக்கப்பட்ட அனுமதியினைக் கீழ்கண்ட காரணங்களால் தள்ளுபடி செய்வதற்கு அரசுக்கு உரிமை உண்டு.

(i) தவறான தகவல்கள் தந்து பதிவு செய்திருந்தால்.

(ii) குறிப்பிட்ட காலக்கெடுவிற்குள் அந்நிறுவனம் அமைக்கப் படாமலுமிருந்தால் வழங்கப்பட்ட அனுமதியானது தள்ளுபடி செய்யப்படும்.

(2) நிவாரண நடவடிக்கைகள்

(a) நேரடி நிர்வாகம் (Direct Management) மேற்கூறிய தடுப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டும், ஒரு நிறுவனம் திருப்திகரமாக இயங்கவில்லை என்றால், அந்நிறுவனத்தின் நிர்வாகத்தை, 5 ஆண்டுகளுக்குக் குறைவில்லாத காலத்திற்கு அரசு ஏற்று நடத்தும்,

(b) பொருள்களின் அளிப்பையும் பங்கீட்டையும் கட்டுப்படுத்துதல் (Control of Supply and Distribution) : அட்டவணையில் குறிப்பிடப்பட்ட தொழில்களின் உற்பத்திப் பொருள்களை சமமாகப் பங்கீடு செய்வதற்கு அரசுக்கு உரிமை உண்டு. இதன் பொருட்டு அரசு,

(i) அப்பொருள்களின் விலையை நிர்ணயம் செய்யலாம்;

(ii) அனுமதியின் பங்கீட்டை ஒழுங்குபடுத்தலாம்;

(iii) அப்பொருள்களின் விற்பனை அளவைக் குறைக்கும் முயற்சிகளைத் தடுக்கலாம்.

(iv) ஒரு குறிப்பிட்ட நபரிடம் அல்லது முகவரிடம் மொத்த உற்பத்திப் பொருள்களையுமோ அல்லது குறிப்பிட்ட ஒரு பகுதி அளவுப் பொருள்களையோ விற்கும்படி கூறலாம்.

(3) உறுதியான, ஆக்கவளமுடைய மற்றும் புதிதாகத் தோற்றுவிக்கும் நடவடிக்கைகள் : குறிப்பிட்ட தொழில்களை வளர்ச்சியடையச் செய்வதற்கும், அவைகளை ஒழுங்குபடுத்துவதற்கும் பல்வேறு குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

(அ) மத்திய ஆலோசனைக் குழு (The Central Advisory Council) இக்குழுவில் தலைவரையும் சேர்த்து மொத்தம் 30 உறுப்பினர்கள் இருப்பர். மத்திய அரசினால் நியமிக்கப்படும், தொழிலாளர்கள், தொழிலதிபர்கள், நுகர்வோர், சம்பந்தப்பட்ட அட்டவணையில் உள்ள தொழில்களின் பிரதிநிதிகள் ஆகியோர்.

நோக்கங்கள் : (a) குறிப்பிட்ட தொழில்களின் வளர்ச்சி மற்றும் ஒழுங்கமைத்தல் போன்றவற்றில் அரசிற்கு ஆலோசனை வழங்குதல்

(b) தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குபடுத்தும்) சட்டத்தைச் செயல்படுத்தல்.

இக்குழுவின் உதவியுடன் அரசு 1959ம் ஆண்டு 'தொழில் துறை நிறுவனங்கள் (செய்தி மற்றும் புள்ளி விவரம் சேகரித்தல்) சட்டத்தினை' [Industrial undertakings (collection of Information and Statistics) Rules 1959] அமைத்தது. இச் சட்டத்தின்

முக்கிய நோக்கம் என்னவென்றால், அட்டவணையில் உள்ள தொழில்களில் 10 முதல் 50 தொழிலாளர்களையுடைய நிறுவனங்கள் பற்றி விரிவான புள்ளி விவரங்கள் சேகரித்தல் ஆகும்.

(ஆ) **நிலையான குழு** (Standing Committee) : தேவைப்பட்ட சமயத்தில் தனிப்பட்ட தொழில்களின் நிலையைப்பற்றி ஆராய 16 அங்கத்தினர்களைக் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது. இயந்திரங்கள் உற்பத்தி, இரசாயனம், உரங்கள், பிளாஸ்டிக், இயந்திரக் கருவிகள், நுகர்வுப் பொருள்கள் உற்பத்தி, போக்குவரத்து மற்றும் செய்தித் தொடர்பு போன்ற தொழில்களுக்குத் தேவையான இயந்திர சாதனங்களைப் பற்றி ஆராய்வதற்கு இக்குழு நியமிக்கப்பட்டுள்ளது.

(இ) **வளர்ச்சிக் குழுக்கள்** : (Development Councils) தனியார் துறைக்கும், பொதுத்துறைக்கும் இடையே இணைப்பினை ஏற்படுத்த இக்குழுக்கள் அமைக்கப்பட்டன. இவைகளின் முக்கிய பணி, யாதெனில்,

(i) உற்பத்தி அளவிற்கான இலக்கினைப் பரிந்துரைத்தல்; உற்பத்தி இலக்குடன் உற்பத்தித் திட்டங்களை ஒருங்கிணைத்து அவ்வப்பொழுது அதன் வளர்ச்சி பற்றி ஆராய்தல்;

(ii) மூலவளங்கள் வீணாக்கப்படுவதைத் தடுப்பதற்கும் உற்பத்தியை உச்ச அளவு பெருக்குவதற்கும், தரத்தினை உயர்த்துவதற்கும் பல்வேறு திறன்மிகு வழிவகைகளை எடுத்துக் கூறுதல்;

(iii) அமைக்கப்பட்டுள்ள கொள்ளளவை முழுவதும் பயன்படுத்துவதற்கு ஆலோசனை வழங்குதல்;

(iv) கட்டுப்பாடு விதிக்கப்பட்ட பொருள்களை பங்கீடு செய்வதில் உதவி புரிதல்; மற்றும் தொழில்களுக்குத் தேவையான பொருள்கள் கிடைப்பதற்கு வழிவகை செய்தல்;

(v) விஞ்ஞான மற்றும் தொழில்துறை ஆராய்ச்சியை வளர்த்தல்; அத்துடன் புள்ளி விவரங்கள் சேகரித்தல்;

(vi) தொழிலாளர்களுக்குத் தொழில் நுட்பப் பயிற்சியினை அளித்தல்;

(vii) அரசின் ஆலோசனைப்படி தனக்கு அரசால் அளிக்கப்பட்ட விஷயங்களில் தேவைப்பட்ட விவரங்கள் குறித்து விசாரணை நடத்துதல்.

தற்சமயம் 14 தொழில்களுக்கு வளர்ச்சிக் குழுக்கள் உள்ளன (1) பஞ்சாலைகளுக்கான இயந்திர உற்பத்தி; (2) கரியகச் சேர்க்கையில்லா இரசாயனப் பொருள்களின் (Inorganic Chemi-

cals) உற்பத்தி, (3) கனரக மின்சக்தி சாதனங்கள் உற்பத்தி, (4) மருந்து வகைகள் உற்பத்தி, (5) செயற்கை இழைகொண்டு உற்பத்தி செய்யப்படும் துணிகள் உற்பத்தி, (6) இயந்திரக் கருவிகள், (7) எண்ணெய், சோப்பு, வர்ணம், ஒப்பனைப் பொருள்கள் (cosmetics). (8) உணவினைப் பக்குவப் படுத்துதல், (9) கரியகச் சேர்க்கையுள்ள இரசாயனப் பொருள்கள் (Organic Chemicals) (10) உந்து வண்டிகள், போக்குவரத்திற்குரிய வாகனங்கள், இயந்திரக் கலப்பைகள், (11) காகிதக்கூழ் மற்றும் அது சார்ந்த தொழில்கள், (12) தோல் பொருள்கள், (13) கம்பளி, (14) சர்க்கரை

(ஈ) வல்லுநர் குழுக்கள்: (Expert Committees) பல்வேறு தொழில்களின் பிரச்னைகள் பற்றி ஆராய்வதற்கு இக்குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. தொழில் துறை சாதனங்கள், அறுவை சிகிச்சைக்கு வேண்டிய சாதனங்கள், மின் சாதனங்கள் மற்றும் கம்பியில்லாச் செய்தித் தொடர்பு சாதனங்கள், ஊடுகதிர் (X-ray) சாதனங்கள், கடியாரம், மற்றும் கைக்கடிகாரம் முதலிய தொழில்களுக்குத் தனித் தனியாக வல்லுநர் குழு அமைக்கப்பட்டது.

(உ) தீர்வை வரி விதித்தல்: (Imposition of cess) தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குபடுத்தல்) சட்டத்தில் குறிப்பிட்ட முதல் அட்டவணையில் உள்ள தொழில்கள் உற்பத்தி செய்யும் பொருள்களின் மேல் ஒரு தனி வரி விதிக்கப்படும். இதன் மூலம் கிடைக்கும் வருவாயை அத் தொழில் சம்பந்தப்பட்ட ஆராய்ச்சி நடத்துதல், வடிவமைப்புக்களைத் திருத்தி அமைத்தல், தரத்தை உயர்த்துதல், தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளித்தல், போன்ற பணிகளுக்குப் பயிற்சி அளித்தல் போன்ற பணிகளுக்காக வளர்ச்சிக் குழுக்கள் செலவு செய்யும்.

(ஊ) அபராதம் (Penalties) : அரசு கூறிய வழிப்படி செயல்படத் தவறியவர்களுக்கு 6 மாத சிறைத் தண்டனை அல்லது ரூ 5000 அபராதம் அல்லது இரண்டுமே விதிக்கப்படும்.

மதிப்பீடு: (1) தொழில் அனுமதிக் கொள்கையானது இன்றியமையாத வளங்களை, நாட்டிற்குத் தேவையான முன்னுரிமைத் துறைகளில் முதலீடு செய்வதற்கு, ஒழுங்குபடுத்தல் மற்றும் வழி காட்டுதல் மூலம் வழி வகை செய்கின்றது.

(2) சர்வாதீனம் ஏற்படுவதைத் தடுக்கின்றது.

(3) தொழில்கள் ஒரிடத்தில் குவிவதைத் தடுத்து, நாட்டின் பல் வேறுபட்ட இடங்களிலும், பின் தங்கிய வட்டாரங்களிலும் தொழில்கள் பரவுவதற்கு உதவுகிறது.

(4) பேரளவுத் தொழில்களுக்கும், சிற்றளவுத் தொழில்களுக்கும் இடையே ஏற்படும் போட்டியினைத் தவிர்க்கின்றது.

(5) இன்றியமையா அந்நியச் செலாவணியை உத்தம அளவில் பயன்படுத்துவதற்குத் துணையாக இருக்கின்றது.

எனினும், இச்சட்டம் மேற் கூறிய குறிக்கோள்களை அடையத் தவறி விட்டது என்பதை 'சர்வாதீனக்குழு' (Monopoly Commission) ஹசாரிக் குழு (Hazari Committee), தத் குழு (Dutt Committee), போன்ற குழுக்களின் அறிக்கைகளிலிருந்து அறியலாம். மேற் கூறிய குழுக்களின் அறிக்கைகள் தொழில் அனுமதிக் கொள்கையை மாற்றி அமைக்கும்படி பரிந்துரைத்துள்ளன. இச் சட்டம் ஏற்பட்ட பிறகும் கூட செல்வம் ஒரு சிலரிடையே குவிவது அதிகரித்துள்ளது; வட்டார ஏற்றத் தாழ்வுகள் உள்ளன; புதிதாகத் தொழில் முயல்வோர் தோன்றவில்லை. எனவே, அரசின் தொழில் கொள்கையானது இக் குறைகளை நீக்கக் கூடியதாக இருக்க வேண்டும்.

### தொழில் கொள்கைத் தீர்மானம்–1956

1948-ம் ஆண்டு தொழில் கொள்கைத் தீர்மானத்தின் குறைபாடுகளை நீக்குவதற்காக மட்டுமல்லாமல் எட்டு ஆண்டுகளில் மாறியுள்ள சூழ்நிலைக்கேற்ப புதியதோர் தொழில் கொள்கையை உருவாக்கல் அவசியமாயிற்று. இத்தகைய முக்கிய மாறுதல்கள் என்ன வென்றால்

(i) இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் வகுக்கப்பட்டு குடி மக்களுக்கான அடிப்படை உரிமைகளும், அரசுக் கொள்கையின் நெறி செய் நியதிகளும் (Directive Principles of State Policy) வகுக்கப்பட்டன.

(ii) ஒழுங்கமைந்த முறையில் திட்டங்கள் வகுக்கப்பட்டு முதல் ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாகச் செயல்பட்டது.

(iii) சமதர்ம சமுதாயம் அமைப்பதே அரசின் சமூக, பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை நாடாளுமன்றம் ஏற்றுக் கொண்டது.

(iv) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் மக்கள் முன்னால் சமர்ப்பிக்கப்பட்டு அத் திட்டம் ஆரம்பக் கட்டத்தில் இருந்தது.

எனவே 1956-ம் ஆண்டு ஏப்ரல் 30-ம் நாள் இரண்டாவது தொழில் கொள்கைத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

குறிக்கோள்கள்: (i) பொருளாதார வளர்ச்சி வீதம் மற்றும் தொழில் மயமாக்குதலை விரைவு படுத்துதல்.

(ii) பொதுத் துறையை விரிவு படுத்தல்.

(iii) நன்கு வளர்ச்சியுறுகின்ற கூட்டுறவு துறையை பேரளவில் விரிவு படுத்தல்.

(vi) தனியார் முற்றுரிமைகளையும், செல்வம் ஒரு சிலரிடையே குவிவதையும் தடுத்தல்

(v) வருமானத்தில் மற்றும் செல்வத்தில் காணும் ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தல்.

(vi) வேலை வாய்ப்பினை அதிகரித்தல் மற்றும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல்.

(vii) கனரகத் தொழில்களையும், இயந்திரங்கள் உற்பத்தி செய்யும் தொழில்களையும் வளர்ச்சி அடையச் செய்தல்

(viii) புதிய தொழில் நிறுவனங்கள் அமைப்பதிலும் போக்கு வரத்து வசதியைப் பெருக்குவதிலும், அரசு வணிகத்தைப் பேரளவில் அதிகரிப்பதிலும், அரசின் நேரடிப் பொறுப்பு அதிகரிக்கும்.

(2) தோற்றக் கூறுகள்:

(a) தொழில்களின் பிரிவு: திட்டக்குழுவின் உதவியுடன் பல்வேறு தொழில்களை அட்டவணை A, அட்டவணை B, அட்டவணை C என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன.

அட்டவணை A:

அரசு முற்றுரிமைத் தொழில்கள்: இவ்வட்டவணையில் 17 தொழில்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவைகளின் எதிர்கால வளர்ச்சிக்கு அரசே பொறுப்பேற்க வேண்டும். அத்தகைய தொழில்கள் வருமாறு:

(1) படைக்கலப் பொருள்கள் (2) அணுசக்தி உற்பத்தி மற்றும் கட்டுப்பாடு (3) இரும்பு, எஃகு (4) இரும்பு வார்ப்படம் மற்றும் உலைக்கலன் (5) கனரக இயந்திரத் தொழில் (6) கனரக மின் சக்தி சாதனங்கள் (7) நிலக்கரி மற்றும் பழுப்பு நிலக்கரி (8) மண்ணெண்ணை (9) இரும்புத் தாது, மங்கனீஷ் தாது, கந்தகம், தங்கம் மற்றும் வெள்ளி முதலியவற்றின் சுரங்கங்கள் (10) தாமிரம், ஈயம், துத்தநாகம், வெள்ளீயம் முதலியவற்றின் சுரங்கம் மற்றும் பக்குவப்படுத்தும் தொழில் (11) அணு சக்தி தயாரிப்பதற்குப் பயன்படுத்தும் கனிப் பொருள்கள் (12) ஆகாய

விமானத் தொழில் (13) விமானப் போக்குவரத்து (14) இருப்புப் பாதை போக்குவரத்து (15) கப்பல்கட்டும் தொழில் (16) தொலை பேசி தந்தி, கம்பியில்லாத் தொடர்பு கருவிகள் (17) மின் சக்தி உற்பத்தி மற்றும் பங்கீடு.

எனினும் தற்சமயம் தனியார் துறையில் உள்ள தொழில்கள் விரிவடைவதற்கு வாய்ப்பளிக்கப்படும் புதிய நிறுவனத்தினை அரசு அமைக்கும் பொழுது, தேவைப்பட்டால் தனியார் துறையின் ஒத்துழைப்பையும் நாடும்.

## அட்டவணை B

காலப்போக்கில் படிப்படியாக அரசு உரிமை கொள்ளும் தொழில்கள்: இப் பிரிவில் 12 தொழில்கள் அடங்கும். இத் தொழில்களில் பொதுத்துறையும், தனியார் துறையும் சேர்ந்து இயங்கினாலும் தனியார் துறையில் உள்ளவை காலப் போக்கில் அரசின் கைக்கு மாறும். எனவே இத் தொழில்கள் புதிதாக நிறுவனம் அமைப்பது அரசின் பொறுப்பாகும். இந்த அட்டவணையில் கண்ட தொழில்கள் வருமாறு:

(1) 'கனிப் பொருள்கள் சலுகைச் சட்டத்தில்—1949' (Minerals Concession Rules—1949) 'சிற்றளவுக் கனிப் பொருள்கள்' என்று குறிப்பிடப்பட்ட கனிப் பொருள்களைத் தவிர மற்ற கனிப் பொருள்கள் (2) அலுமினியம் மற்றும் அட்டவணையில் சேர்க்கப்படாத உலோகக் கலவைகள் (3) இயந்திரக் கருவிகள் (4) இரும்புக் கலவைகள் மற்றும் எஃகுக் கருவிகள் (5) பிளாஸ்டிக், இரசாயனப் பொருள்கள், சாயப் பொருள்கள், மருந்து வகைகள் முதலியவற்றிற்குத் தேவையான அடிப்படை மூலப் பொருள்கள் (6) 'ஆண்டிபயோடிக்ஸ்' மருந்துகள் (Antibiotics) (7) உரங்கள் (8) செயற்கை இரப்பர் (9) நிலக் கரியாக்குதல் (10) இரசாயனக் காகிதக் கூழ் (11) சாலைப் போக்குவரத்து (12) கப்பல் போக்குவரத்து.

## அட்டவணை C

தனியார் துறை: மேற்கூறிய அட்டவணைகளில் சேர்க்கப் படாத தொழில்கள் யாவும் தனியார் துறை முனைக்கு ஒதுக்கப் பட்டுள்ளது. எனினும் அரசு விரும்பினால் இப்பிரிவில் உள்ள தொழில்களைத் தொடங்கவும் அரசுக்கு உரிமை உண்டு. தனியார் துறை வளர்ச்சி அடைவதற்கு உள்ளமைப்பு வசதிகள் அதிகரிக்கப் படும். மேலும் நிதி உதவியினை அதிகரிப்பதோடு மட்டுமல்லாமல் புதிய தொழில் நிறுவனங்கள் கூட்டுறவு முறையில் அமைப் பதற்கும் ஊக்குவிக்கப்படும்.

(b) மூவகைத் தொழில் பிரிவுகள் நெகிழச்சியற்ற கட்டுப்பாடான பிரிவுகள் அன்று. மேற்கூறிய பிரிவுகள் நெகிழ்ச்சியற்ற கட்டுப்பாடுடன் அமைந்தவை என்று கருதக் கூடாது. உண்மையில் தனியார் துறையும், பொதுத் துறையும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவை. தனது தேவைக்காகத் தனியார் நிறுவனம் அட்டவணை A யில் குறிப்பிடப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்ய லாம். சான்றாக ஒரு நிறுவனம் தனக்கு வேண்டிய மின் சக்தியைத் தானே உற்பத்தி செய்து கொள்ளலாம். பொதுத்துறை தனக்குத் தேவையான பொருள்களைத் தனியார் துறையிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். அட்டவணை A யில் கண்டுள்ள தொழில்களின் தனியார் நிறுவனங்கள் விரிவடைவதற்கு உரிமை கொடுக்கப் பட்டுள்ளது. மற்றும் புதிதாக நிறுவனம் அமைத்தால் நாட்டின் நலனை மனதில் கொண்டு அரசு தனியார் துறையின் ஒத்துழைப்பை நாடும். தேவை ஏற்படும் பொழுது தனியார் துறைக்கு ஒதுக்கப்பட்ட தொழிலையும் அரசு மேற் கொள்ளும்.

(c) தனியார் துறையை புறக்கணியாமை: ஐந்தாண்டுத் திட்டங் களின் தேவைக்கேற்றபடி தனியார் துறை வளர்ச்சிக்குப் பெரிதும் ஊக்கம் அளிக்கப்படும். அத்துறை வளர்ச்சிக்காக, உள் ளமைப்பு வசதிகள் அதிகரிக்கப்படும். அதிக நிதி உதவி அளிப்ப தற்கு நிதி நிறுவனங்கள் விரிவாக்கப்படும். வேளாண்மை மற்றும் தொழில் துறையில் நிறுவனங்கள் கூட்டுறவு அமைப்பில் செயல் படுவதற்கு உதவிகள் அளிக்கப்படும். தனியார் துறை வெளியிடும் கடன் பத்திரங்களில் அரசு முதலீடு செய்யும். ஒரே தொழிலில் தனியார் துறையும், பொதுத் துறையும் சேர்ந்து இயங்கினால், இரண்டும் சமமாகவே கருதப்படும்.

(d) குடிசைத் தொழில் மற்றும் சிற்றளவுத் தொழில்களின் பங்கு: குடிசைத் தொழில்களும், சிற்றளவுத் தொழில்களும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் உறுதுணையாக இருப்பவை கள். அத் துறை வளர்ச்சி அடைவதற்காக

(i) பேரளவுத் தொழில் துறையின் உற்பத்தி அளவைக் கட்டுப்படுத்துதல்

(ii) வேறுபட்ட வரி விதிப்பு முறையினைப் பின்பற்றுதல்

(iii) நேரடியாக சிறு தொழில் துறைக்கு உதவித் தொகை அளித்தல் போன்ற நடவடிக்கைகள் மேற் கொள்ளப்படும்.

சிற்றளவுத் துறை பேரளவுத் துறையுடன் போட்டியிடும் அளவிற்கு அதனுடைய திறமையை வளர்ச்சி அடையச் செய்தல்,

அதன் பொருட்டு சிற்றளவுத் தொழில் துறையின் உற்பத்தி முறையை மாற்றி அமைத்தல், நவீன இயந்திரங்கள் அமைத்தல் முதலியவற்றிற்கு உதவி செய்யப்படும். தொழில் பேட்டைகள் அமைத்தல், கிராம சமுதாயப் பணிமனைகள் அமைத்தல், கிராமங்களுக்கு மின் வசதியளித்து மின்சக்தியினை குறைந்த கட்டணத்தில் சிறு தொழில்களுக்கு அளித்தல் முதலியனவும் இக் கொள்கையின் திட்டங்களாம்.

(e) **வட்டார ஏற்றத் தாழ்வுகளைக் களைதல்:** பொருளாதார வளர்ச்சியினால் ஏற்பட்டுள்ள நன்மைகளை நாட்டின் எல்லாப் பகுதியில் அனுபவிக்க வேண்டுமென்றால், வட்டார ஏற்றத் தாழ்வினைக் களைதல் அவசியம் அதன் பொருட்டு, தொழில் துறையில் பின் தங்கியுள்ள மற்றும் வேலை வாய்ப்பினை அதிகரிக்க வேண்டிய வட்டாரங்களில் தொழில்கள் பரவுவதற்காக போக்குவரத்து வசதிகள், மின் சக்தி அளிப்பு மற்றும் ஏனைய வசதிகளும் அமைத்துக் கொடுக்கப்படும். ஒவ்வொரு வட்டாரத்திலும் தொழில் துறை வளர்ச்சியானது சமமாக இருந்தால்தான், நாட்டில் உள்ள எல்லா மக்களின் வாழ்க்கைத் தரமும உயரும்.

(f) **தொழில் நுட்ப, நிர்வாக வல்லுநர்களுக்குப் பயிற்சி அளித்தல்:** வளர்ந்து வரும் பொது மற்றும் சிற்றளவுத் தொழில் துறையின் தேவையினைப் பூர்த்தி செய்வதற்குத் தொழில் நுட்ப வல்லுநர்களுக்கும், நிர்வாகிகளுக்கும் பயிற்சி அளிக்கப்படும். அதன் பொருட்டு தொழில் பயிற்சித் திட்டங்கள் அமைக்கப்படும். பல்கலைக் கழகங்களிலும் மற்ற கழகங்களிலும் வணிக நிர்வாகம் பற்றிய பயிற்சி அளிக்கப்படும்.

(g) **தொழில் அமைதியைக் காத்தல்:** தொழில் துறை வளர்ச்சிக்குத் தொழில் அமைதி இன்றியமையாதது. அதன் பொருட்டு ஜனநாயக சோசலிச சமுதாயத்தினை அடிப்படையாகக் கொண்ட இந்நாட்டில், பொருளாதார வளர்ச்சியில் தொழிலாளர்களின் பங்கு அதிகரிக்க வேண்டும். அவர்களின் வாழ்க்கை நிலையும் வேலை செய்கின்ற சூழ்நிலையும் திருத்தி அமைக்கப்பட வேண்டும் தொழில் நிர்வாகம் சம்பந்தப்பட்ட விவரங்களில் தொழிலாளர்களையும் கலந்தாலோசித்தல் அவசியம். நிறுவனத்தை நிர்வாகம் செய்வதில் தொழிலாளர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். இதற்கு முன்னோடியாகப் பொதுத்துறை நிறுவனங்கள் விளங்கலாம்.

(h) **பொதுத்துறை நிறுவனங்களின் நிர்வாகம்:** வளர்ந்து வரும் பொதுத் துறை நிறுவனங்களைச் சிறந்த முறையில் நிர்வாகம்

செய்தல் அவசியம். இதன் பொருட்டு நல்ல பொறுப்பு மிகுந்த சிறப்புத் தகுதி வாய்ந்த அதிகாரிகளை நியமித்தல் அவசியம். அதிகாரத்தைப் பல்வகைப்படுத்தி அதன் மூலம் அதிகாரிகள் தொழில் சம்பந்தப்பட்ட முடிவுகளை விரைவில் எடுப்பதற்கு வழி வகை செய்யப்படும். இவ்வாறு செய்தால்தான் பொதுத்துறையில் ஏற்படவல்ல இழப்பினைத் தவிர்த்து வருவாயை அதிகரிக்க முடியும்.

(i) அந்நிய மூலதனம் : அந்நிய மூலதனம் பற்றி 1968–ல் தீர்மானிக்கப்பட்ட கொள்கையே இப்பொழுதும் ஒத்துக் கொள்ளப் பட்டது. இதில் எவ்வித மாற்றமும் இல்லை.

(j) மதிப்பீடு : இக் கொள்கையில் சமதர்ம சமுதாயத்தை அடைவதற்கு வழிகள் கூறப்பட்டாலும், இக் கொள்கை பலராலும் தாக்கப்பட்டது. சுட்டிக் காட்டப்பட்ட குறைகள் சில வருமாறு:

(i) முந்திய தொழில் கொள்கையைப் போல் இக் கொள்கை யானது தாராளமானதாக இல்லை. தனியார் துறைக்கான தொழில் கள் பெரிதும் குறைக்கப்பட்டன. காலப்போக்கில் அட்டவணை Bயில் உள்ள தொழில்களை அரசு ஏற்றுக் கொள்ளும் என்று அறிவிக்கப்பட்டதானது தனியார் துறைக்கு எவ்வித ஊக்கத்தை யும் அளிக்கவில்லை.

(ii) அச்சமயத்தில் உலக வங்கியின் தலைவராக இருந்த இயூஜின் பிளாக் இக் கொள்கையால் சிக்கல்கள் ஏற்படலாம் என்றார். இக் கொள்கையை நீக்குப் போக்கின்றிப் பின்பற்றினால் ஏற்கனவே திறன்பட உபயோகிக்கப்படாத பொதுத் துறையின் நிதி வளங்கள் மற்றும் நிர்வாக வளங்களில் மேலும் அதிக பளுவை ஏற்படுத்தும் என்று அவர் கூறினார். எனவே தனியார் துறை, பொதுத் துறை முதலியவற்றின் தகுதிக்கேற்பத் தொழில்களைப் பிரிக்க வேண்டும்.

(iii) தனியார் துறைக்கு இரண்டாவது முக்கியத்துவமே அளிக்கப்பட்டுள்ளது. பொருளாதார வளர்ச்சியில் தனியார் துறையின் பங்கினைக் குறைத்து மதிப்பிடல் நன்றன்று. எனவே அரசின் கொள்கை கருத்துத் தொகுதியாக இருக்கின்றதேயன்றி பயனீட்டுவாதமாக இல்லை.

(iv) அதிகாரிகளின் கையில் அவசியமற்ற பற்பல அதிகாரங்களை அரசு அளித்துள்ளது. இத்தகையோருக்குத் தொழில் திட்டங்கள் அமைப்பதுபற்றி போதிய அனுபவம் இருக்காது. இத்தகைய மையக் குவிமிகு ஆட்சியானது நாட்டின் முன்னேற்றத்திற்கு உகந்ததல்ல. இம் மாதிரியான ஆட்சியில், சிவப்பு நாடா முறை

யையும் முடிவுகள் எடுப்பதில் காலதாமதமாவதையும் பல்வேறு ஊழல்கள் மிக்க தன்மையையும் காண நேரிடலாம்.

(v) எதிர் காலத்தில் அமைக்கப்படும் கூட்டுறவு அமைப்பினை அரசு தான வழிகாட்டிச் செல்லும் என்றும், அக் கூட்டுறவுச் சங்கங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களுக்கு எவ்விதப் பங்கும இல்லை என்றும் கூறியிருப்பது தவறான பாதையில் கூட்டுறவு இயக்கத்தை இட்டுச் செல்வதாகும். இப் போக்கானது கூட்டுறவுத் துறைக்கு ஊறு விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை. மேற் கூறிய நான்காவது முறையில் கூறியுள்ள தீமைகளே இங்கும் ஏற்படலாம்.

மேற் கூறிய குறைகளை வைத்து, இக் கொள்கையே நல்லதல்ல என்று ஒதுக்கி விடக் கூடாது பொதுத் துறைக்கு அதிகத் தொழில்கள் ஒதுக்கப்பட்டிருந்தாலும், 'தொழில் மயம்' என்பது மிகவும் விரிவடைந்த வரையறை கொண்டது. அதில் தனியார் துறை அதிகமாகப் பங்கு கொள்வதற்கு வாய்ப்புகள் உள்ளன. ஏற்கெனவே கூறியபடி, இக் கொள்கையானது நெகிழ்ச்சியற்ற கட்டுப்பாடான பிரிவுகளைக் கொண்டதல்ல. பொருளாதார வளர்ச்சியில் பொதுத் துறையும், தனியார் துறையும் சம பங்குடையவைகள் என்பது இக் கொள்கையில் நன்கு தெளிவாக்கப் பட்டுள்ளது. தனியார் துறை வளர்ச்சிக்கு உள்ளமைப்பு வசதிகளும் நிதி உதவி அளிப்பதற்கு நிதி நிறுவனங்களின் பணிகளையும் விரிவாக்கப்படும் எனக் கூறப்பட்டுள்ளது. எனவே தனியார் துறை வளர்ச்சிக்கு இக் கொள்கை ஊறு விளைவிக்க வல்லது எனக் கூறுவது தவறாகும்.

### (4) 1948, 1956ம் ஆண்டு தொழிற் கொள்கைத் தீர்மானங்கள்—ஓர் ஒப்புமை :

1956ம் ஆண்டுத் தொழில் கொள்கை தீர்மானமானது 1948-ம் ஆண்டுத் தொழில் கொள்கையை விடச் சில சிறப்பியல்புகளைக் கொண்டது அவையாவன :

(i) இக் கொள்கையில், பொதுத் துறை விரிவடைவதற்கு அதிக தொழில்கள் ஒதுக்கப்பட்டன.

(ii) படைக்கலப் பொருள்கள் உற்பத்தி, அணுசக்தி, இருப்புப் பாதை, விமானப் போக்குவரத்து ஆகியவற்றில் அரசுக்கு முற்றுரிமை அளிக்கப்பட்டது. 1948 ம் ஆண்டு தொழில் கொள்கையில் விமானப் போக்குவரத்து சேர்க்கப் படவில்லை.

(iii) அரசின் முனைப்புக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொழில்களில் ஈடுபட்டுள்ள தனியார்துறை நிறுவனங்களின் நிலைபற்றி 10 ஆண்டுகள் கழித்து மறு பரிசீலனை செய்யப்படும் என்ற நிபந்தனை யானது 1956ஆம் ஆண்டுக் கொள்கையில நீக்கப்பட்டது. தனி யார் நிறுவனங்கள் புறக்கணிக்கப்பட மாட்டாது என்றும் உறுதி அளிக்கப்பட்டது.

(iv) முந்தியதைப் போல் 1956ம் ஆண்டுத் தொழிற் கொள் கையில் தேவைப்பட்டால் தனியார் நிறுவனங்களை அரசு ஏற்றுக் கொள்ளும் என்று கூறப்படவில்லை.

(v) கூடிய மட்டும் தனியார் துறையில் கூட்டுறவு அமைப் பினை வளரச் செய்தலுக்கு முக்கியத்துவம் காணப்பட்டது.

(vi) தனியார் துறைக்கு உதவிடும் பொருட்டு உள்ளமைப்பு வசதிகளும். நிதி நிறுவனங்களின் வசதிகளும் அதிகரிக்கப்படும் என்றும் உறுதி அளிக்கப்பட்டது.

(5) தொழில் அனுமதிக் கொள்கை

அரசின் தொழில் அனுமதிக் கொள்கைபற்றி இவ்வதிகாரத் தில் 'தொழில் வளர்ச்சி மற்றும் கட்டுப்படுத்தல், சட்டம்—1951' என்ற பகுதியில் கண்டோம். அரசின் தொழில் அனுமதிக் கொள் கையைப் பரிசீலனை செய்வதற்கு முக்கியமாக இரு குழுக்கள் அமைக்கப்பட்டன. இக்குழுக்கள் கண்டறிந்த உண்மைகளும், கூறிய பரிந்துரைகளும் முக்கியமானவை.

ஹசாரி குழு : 1966-ல் பேராசிரியர் ஆர். கே. ஹசாரி என்பவ ரைத் தலைவராகக் கொண்டு குழு ஒன்றினைத் திட்டக்குழு அமைத் தது. அரசின் தொழில் அனுமதிக் கொள்கையைப்பற்றி ஆராயும் படி இக்குழு கேட்டுக் கொள்ளப்பட்டது. இக்குழுவின் முக்கிய நோக்கம் என்னவென்றால்

(i) தொழில் அனுமதிக் கொள்கையின் நடைமுறையை மறு பரிசீலனை செய்தல்

(ii) அக் கொள்கையினை மாற்றி அமைப்பதற்கான ஆலோ சனைகள் வழங்குதல்.

இக்குழு 1967-ல் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.

ஹசாரிக் குழு கண்டறிந்த உண்மைகள் : (i) சில முக்கிய தொழி லதிபர்களின் குடும்பங்கள் பல்வேறு பொருள்களுக்கும் அல்லது ஒவ்வொரு பொருளுக்கும், அதிகமான மனுக்களைச் சமர்ப்பிக் கின்றன. இதனால் நான்கைந்து பொருள்களின் உற்பத்திக்கு

அனுமதி கிடைப்பதற்கு வழி ஏற்படுகின்றது. மேலும் சட்டத்தில் உள்ள நெளிவு சுளிவுகளை இவர்கள் நன்கு தெரிந்து வைத்துள்ளனர் இது தொழில் துறைக்கு அனுமதி விரைவில் கிடைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளைச் செய்வதற்கு வழி வகுத்தன. பிர்லா, டாடா போன்ற குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒரே பொருளுக்கு நான்கைந்து மனுக்கள் சமர்ப்பித்து எங்ஙனமாவது அனுமதி பெற்று விடுகின்றனர்.

இது தவிர அனுமதி வழங்கும் முறையானது முதலில் பெற்றுக் கொள்ளப்பட்ட மனுக்கள் தாம் முதலில் கவனிக்கப்படும் என்ற வணிக, தொழில் முறையில் அமைந்திருந்தது. இதன் பொருட்டு பெரிய நிறுவனங்கள் டில்லியில் ஒரு அலுவலகத்தை வைத்துக் கொண்டு, அவ்வப் பொழுது தங்கள் மனுக்களை முதலில் சமர்ப்பித்து விடுகின்றன. இதனால் புதிய தொழில் முயல்வோர் தோன்ற முடிவதில்லை. இந்த நடை முறையானது பொருளாதார சக்தியை ஒரு சிலரிடையே குவியச் செய்துள்ளது.

(ii) புதிய தொழில் முயல்வோர்களுக்கு ஏற்படும் பல்வகை இடையூறுகளில் அனுமதி பெறுவது என்பதே முதல் இடையூறாக உள்ளது.

(iii) எதிர் நோக்கிய அளவுக்கு வட்டார வளர்ச்சி ஏற்படவில்லை.

(iv) அனுமதி வழங்குவதற்குரிய விதி முறைகள் காலத்தை விரயமாக்குவதோடு மட்டுமல்லாமல், அனுமதி பெறுவதற்குரிய செலவையும் அதிகரிக்கின்றது.

(v) அனுமதி வழங்கியபின் சம்பந்தப்பட்ட நிறுவனத்தின் வளர்ச்சி பற்றி எவ்வித பின் நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்வதில்லை.

பரிந்துரைகள் : (i) சிற்றளவுத் தொழில்களுக்கும் பேரளவுத் தொழில்களுக்கும் தனித் தனியாகத் தொழில்களை ஒதுக்க வேண்டும். இதனால் இவ்விரு தொழில்களுக்கிடையேயுள்ள போட்டியினைத் தவிர்க்கலாம்

(ii) குறிப்பிட்ட பத்து அல்லது பதினைந்து தொழிலதிபர்களின் குடும்பங்களுக்கும் அவர் தம் உறவினர்களுக்கும், ஏற்கனவே நடைமுறையில் உள்ள பொருள்களை உற்பத்தி செய்வதற்கான அனுமதியினை வழங்கக் கூடாது அத்தகைய தொழில்களை தனிப்பட்ட வணிகர்கள் அல்லது சிறு வணிக நிறுவனங்களுக்கே அளிக்கப்பட வேண்டும் ஆயினும் அவர்கள் புதிய தொழிலை அல்லது ஏற்றுமதி செய்வதற்குரிய பொருள்களை உற்பத்தி செய்வவல்ல

தொழில்களுக்கு அனுமதி கேட்டால் அவ்வனுமதி வழங்கப்படலாம். அதிலும் சிறிய மற்றும் புதிய தொழில் செய்ய முனைபவர்களுக்கு முற்றுரிமை வழங்கிய பின்தான் அவர்களின் மனுவைப் பரிசீலனை செய்ய வேண்டும்.

(iii) தொழில் திட்டங்களை 'வலுக்கட்டாயத் திட்டங்கள் (Compulsive programmes), 'சுட்டிக் காட்டும் திட்டங்கள்' (Indicative programmes) என இருவகையாகப் பிரிக்கவேண்டும். வருமான உற்பத்தியிலும், முதலீட்டிலும் அதிக முக்கியம் வகிக்கும் தொழில்களை 'வலுக்கட்டாயத் திட்டங்கள்' எனலாம். இவை கட்டாயமாக நிறைவேற்றியே தீரவேண்டிய திட்டங்கள் ஆகும்.

(iv) தொழில்களின் இலாப வாய்ப்புகள், திட்ட நோக்கங்கள், உற்பத்தி முறைகள், சந்தை வாய்ப்புகள் ஆகியவற்றின் அடிப்படையில் தொழில்களுக்கு அனுமதி வழங்குவதில் முன்னுரிமை வழங்க வேண்டும். முன்னுரிமை பெற்ற தொழில்களுக்குப் பற்றாக்குறைத் தன்மைபெற்ற கச்சாப் பொருள்கள், கடின அந்நியச் செலாவணி போன்றவைகளின் பங்கீடும் முதலிடம் தரப்பட வேண்டும்.

(v) தொழில் அனுமதி பெறுவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டிய வரம்பானது ரூ 25 இலட்சத்திலிருந்து ரூ 1 கோடிக்கு உயர்த்தப்படவேண்டும். ஏற்கனவே நடைபெறும் தொழில்களின் விரிவுப் பணிகளைப் பொறுத்த வரையில் 25 சதவீதம் உற்பத்திக் கொள்ளளவு அதிகரிப்பு அல்லது ரூ 25 இலட்சம்—இதில் எந்த வரம்பு அதிகமோ அந்த வரம்பிற்கு விலக்குத் தரப்பட வேண்டும். புதிய வகைப் பொருளகளாயின் ரூ 25 இலட்சம் வரம்பு நிர்ணயிக்கலாம். ஆனால் தொழில் முயல்வோர் குறிப்பிட்ட காலக் கெடுக்குள் தமது திட்டத்தை நிறைவேற்றிவிட வேண்டும்.

(vi) ஒரு தனி நிறுவனத்திற்கு அல்லது வணிகப் பிரிவுக்கு ஒரு திட்டத்திற்கு ஒரு தடவையில் ஓர் அனுமதிக்கு மேல் வழங்கப்படக் கூடாது.

'தொழில் அனுமதிக் கொள்கை விசாரணைக்குழு' அல்லது 'தத்' குழு [Industrial Licensing Policy Enquiring Committe (or) Dutt Committe] : 1967-ல் தொழில் அனுமதிக்கொள்கை விசாரணைக் குழு ஒன்று திரு. சுபிமால் தத் தலைமையில் அமைக்கப்பட்டது. இக்குழுவின் நோக்கங்கள் வருமாறு :

(i) தொழில் அனுமதிக் கொள்கையினால் பெரிய தொழில் அதிபர்களின் குடும்பங்களே மென்மேலும் பயன் பெற்றுள்ளனவா என்பதை அறிதல்.





(ii) அவ்வாறு அனுமதி பெற்றவர்கள் அதனைச் சரியாகப் பயன்படுத்தியுள்ளார்களா என்பதை அறிதல்.

(iii) சமமான வட்டார வளர்ச்சி ஏற்பட்டுள்ளதா என்பதை அறிதல்.

(iv) நிதி நிறுவனங்கள் பெரிய தொழில் அதிபர்களுக்கே அதிக முன்னுரிமை தந்துள்ளதா என்பதை அறிதல்.

இக்குழு தனது அறிக்கையை ஜூலை 1969-ல் சமர்ப்பித்தது.

**இக் குழு கண்டறிந்த உண்மைகள் :** இக் குழு விரிவான ஆய்வுக்குப்பின் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.

(a) 1966-ம் ஆண்டில் இருந்த 26,895 (பொதுத்துறை மற்றும் தனியார் துறை) நிறுவனங்கள் பற்றி ஆய்ந்ததில் 2,197 நிறுவனங்கள் பெரிய தொழிலதிபர்களைச் சேர்ந்ததாகும். தனியார் துறை நிறுவனங்களுக்காக வழங்கப்பட்ட 7,445 அனுமதிகளில் 2,804 அனுமதிகளை ரூ 35 கோடிக்கு மேற்பட்ட சொத்துடைய பெரிய தொழில் குடும்பங்கள் பெற்றன. அதாவது, 8 சதவீத நிறுவனங்கள், தனியார் கூட்டுப் பங்குத் துறையின் 38 சதவீதத் தொழில் அனுமதிகளைப் பெற்றன. எஞ்சிய 92 சதவீத நிறுவனங்கள் 64 சதவீத தொழில் அனுமதிகளை மட்டுமே பெற்றன. இந்திய ஒத்துழைப்பும் பெரிய தொழில் அதிபர்களுக்கே அதிக அளவில் கிடைத்துள்ளது.

(b) 51 பொருள்கள் உற்பத்தியில் பெரிய தொழில் அதிபர்கள் 50 சதவீத அனுமதிகளைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ளனர். சான்றாக, செயற்கை இழை தயாரிக்கும் தொழில்கள் பெரிய தொழில் குடும்பங்களின் கட்டுப்பாட்டில் இருந்தன. அவற்றில் முக்கியமானவை பிர்லா நிறுவனம் (21 சதவீதம்), டாடா நிறுவனம் (20 சதவீதம்), சாராபாய் (15·5 சதவீதம்), மஃபத்லால் (20 சதவீதம்).

சோடா உப்புத் தொழிலில் 80 சதவீதக் கொள்ளவைப் பெரிய குடும்பங்கள் கட்டுப்படுத்துகின்றன. கல்நார் அட்டைகள் தயாரிப்பதற்கு 1956-66ல் அனுமதிக்கப்பட்ட கொள்ளவில் 60 சதவீதம் பிர்லா குடும்பத்தைச் சென்றடைந்தது.

(c) இறக்குமதி செய்யப்பட்ட முதல் கருவிப் பொருள்களில் 40·4 சதவீதம் 20 பெரிய தொழிலதிபர்களைச் சென்றடைந்தது.

(d) நிதி நிறுவனங்கள் தங்கள் மொத்தக் கடன் உதவியில் 56 சதவீதம் வரை பெரிய தொழில் துறைக்கே வழங்கியிருந்தன.

இதில் 23 சதவீதம் 20 பெரிய தொழில் அதிபர்களுக்குக் கிடைத்தது. இவர்கள் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிடமிருந்து பெற்ற நீண்டகாலக் கடன்களின் பங்கு 82 சதவீதமும், L.I.C. யில் 70 சதவீதமும் ஆகும்.

(e) வழங்கப்பட்ட அனுமதியினை நிறைவேற்ருமல் வீணுக்கியதில் பிர்லா குடும்பத்தின் பங்கு மிக அதிகமாகும். இக்குடும்பம் 166 அனுமதிகளை நிறைவேற்ருமலே வைத்திருந்தது. டாடா குடும்பத்தின் பங்கு 47 அனுமதிகள் (licenees) ஆகும். வழங்கப்பட்ட 7,445 அனுமதிகளில 1,0o7 அனுமதிகள் நிறைவேற்றப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மற்றும் 2,103 அனுமதிகள் தள்ளுபடி செய்யப்பட்டன.

(f) ஒரே பொருளை உற்பத்தி செய்வதற்கு ஒரே குடும்பத்திற்கு மட்டும் அதிக அனுமதிகள் வழங்கப்பட்டுள்ளன. தேவைக்கும் மேற்பட்ட கொள்ளளவானது இக்குடும்பங்களுக்கு வழங்கப்பட்டன. உண்மையில் இககுடும்பங்கள், அரசின் உயர்மட்ட அதிகாரிகளைக் கவர்ந்து, தங்கள் கைக்குள் வைத்துள்ளனர் என்றே கூறலாம். ஒரு சில தொழிலகளில் அனுமதிககப்பட்ட கொள்ளளவும் பயன்படுத்திய கொள்ளளவும் அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது.

இயந்திரக் கருவிகள் உற்பத்தியில் இந்துஸ்தான் இயந்திரக் கருவிகள் நிறுவனம் 9 அனுமதிகள் பெற்றது. ஆனல் தனியார் துறையோ 226 அனுமதிகள் பெற்றது. உர உற்பத்தியில் 42 அனுமதிகள் தனியார் துறைக்கும் 12 அனுமதிகள் பொதுத்துறைக்கும் வழங்கப்பட்டன. அலுமினிய உற்பத்தி தனியார் துறையிடமே இருந்தது. இத்தொழில்கள் அட்டவணை A, Bயில் அடங்கியவை ஆகும். இவ்வாறு அரசின் தொழில் கொள்கைக்கு எதிராக அனுமதி வழங்கும் நடவடிக்கையாக அமைந்துள்ளது.

மகாராஷ்டிரம், மேற்கு வங்காளம், குஜராத், தமிழ்நாடுபோன்ற தொழில் துறையில் முன்னேறியுள்ள மாநிலங்களிலிருந்து அனுமதி கேட்டு வந்துள்ள மனுக்களின் பங்கு மொத்த மனுக்களில் 59 சதவீதமாகும். மொத்த அனுமதியில் 62 சதவீதம் இம்மாநிலங்களுக்குக் கிடைத்தன. இவ்வாறு தொழில் துறையில் பின் தங்கிய வட்டாரங்களில் தொழில்களைப் பரப்புதல் என்ற கொள்கை தோல்வி அடைந்தது. மேலும் தலைநகர் மற்றும் பெரிய நகரங்களிலிருந்து வரும் மனுக்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது.

இவ்வாறு தொழில் கொள்கையின் குறிக்கோள்கள் பலவும் நிறைவேற்றப்படாமல் தோல்வி அடைந்ததை 'தத்' குழு நன்கு

| எண் | பொருள்கள் | அமைக்கப் பட்ட கொள்ளளவு | உற்பத்தி | அனுமதிக்கப் பட்ட கொள்ளளவு 1–4–1966 வரை |
|---|---|---|---|---|
| | | (ரூபாய் கோடியில்) | | |
| 1 | சிமெண்ட் உற்பத்திக்கு வேண்டிய இயந்திரம் | 20·9 | 4·9 | 23·6 |
| 2 | சர்க்கரை உற்பத்திற்கு வேண்டிய இயந்திரம் | 16·0 | 7·7 | 17·7 |
| 3 | காகித உற்பத்தி இயந்திரங்கள் | 7·0 | 1·7 | 9·1 |
| | | (ஆயிரம் எண்ணிக்கை) | | |
| 4 | இயந்திரக் கலப்பை | 15·0 | 5·6 | 33·0 |
| | | (மில்லியன் பவுண்டு) | | |
| 5 | சாயப் பொருள்கள் | 22·0 | 15 9 | 30·2 |
| | | (ஆயிரம் டன்) | | |
| 6 | கந்தக அமிலம் | 132·20 | 654·0 | 2,120·0 |
| 7 | காகிதம் | 669·3 | 551 0 | 1,258·5 |
| 8 | எஃகு வார்ப்படம் | 146·0 | 59·0 | 421·4 |
| 9 | ஈயம் | 5·9 | 4·9 | 11·0 |
| 10 | காஸ்டிக் சோடா (Caustic Soda) | 264·0 | 214·0 | 695·3 |
| 11 | எஃகு ஆலை | 109·5 | 68·0 | 300·3 |
| 12 | நைட்ரஜன் சார்பு உரங்கள் | 497·0 | 228·4 | 2,059·9 |
| 13 | பாஸ்பேட் சார்பு உரங்கள் | 229·7 | 121·0 | 335·4 |
| 14 | செம்பு | 9·8 | 9·6 | 70·4 |
| 15 | செய்தித்தாள் அச்சிடுவதற்கான தாள் | 30·0 | 30·0 | 261·8 |
| | | (மில்லியன் எண்ணிக்கை) | | |
| 16 | மின்குழல் விளக்குகள் | 4·5 | 4·3 | 18·0 |
| 17 | சைக்கிள் டயர் | 16·5 | 18·1 | 39·5 |
| 18 | உலர் மின்கலம் | 290 0 | 283·0 | 586·5 |
| | | (மில்லியன் KVA) | | |
| 19 | மின்விசை மாற்றமைவு | 2·8 | 3·1 | 7·4 |

மூலம் : தொழில் அனுமதிக் கொள்கை விசாரணைக் குழு, ஜூலை 1969.

விளக்கியுள்ளது. 1956ம் ஆண்டு தொழில் கொள்கைத் தீர் மானத்தின் அட்டவணை A, Bயில் குறிப்பிடப்பட்ட தொழில்களில் தனியார்துறை முன்னுரிமை பெற்றுள்ளது.

குழுவின் பரிந்துரைகள் : (1) பெரிய தொழில் குடும்பங்களுக்கு அனுமதி வழங்குதல் புறக்கணிக்கப்பட வேண்டும். புதிய தொழில் செய் முனைவோர்களுக்கு முன்னுரிமை வழங்க வேண்டும்.

(2) தொழில்களை மூன்று துறைகளாகப் பிரிக்க வேண்டும். அவைகளாவன : (i) முக்கியமான துறை : (Core Sector) முன்னுரிமை அல்லது அடிப்படைத் தொழில்கள் இதனில் அடங்கும். இத்தொழில்களுக்கு மட்டுமே அனுமதி வழங்கும் கொள்கை கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

(ii) நடுத்தரத் துறை : (Middle Sector) இத்துறை பற்றி இக்குழு விவரமாகக் கூறவில்லை. பெரிய தொழில் குடும்பங்களும் இத்துறையில் அதிக பங்கு கொள்ளலாம் என்று கூறுகிறது. இது முன்னால் கூறிய பரிந்துரைக்கு எதிராக உள்ளது.

(iii) சிறு தொழில்களுக்கு மட்டும் ஒதுக்கப்பட்ட தொழில்கள் : எந்தெந்த தொழில்கள் இப்பிரிவில் அடங்கும என்பது பற்றி இக் குழு கூறவில்லை.

தனியார் துறையும் பொதுத்துறையும் இணைந்து செயல்பட வல்ல 'இணைந்த துறை' அல்லது 'கூட்டுத்துறை' என்ற துறையை வளர்ச்சியடையச் செய்யவேண்டும். அரசு அதிக நிதி உதவி புரிய வேண்டிய தனியார் துறைத் தொழில்களில் அரசு அதிக ஈடுபாடு கொள்ள வேண்டும்.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி, தொழிலக நிதி இணைக் கழகம் போன்ற நிதி நிறுவனங்கள் பொதுத்துறை நிறுவனங்கட்கு அதிக நிதி வசதி புரிந்தும் அப்பொதுத்துறை தொழில் நிறுவனங் களில் நிர்வாகப் பங்கில்லை. இந்நிறுவனங்களில் நிதி வழங்கு நிறு வனங்கள் பங்கு பெற உதவும் வகையில், அவை அளித்த நிதி களைப் பங்குப்பத்திரங்களாக மாற்றி அதன் மூலம் நிர்வாக உரிமை பெற வேண்டும்.

புதிய தொழில் அனுமதிக் கொள்கை : (New Licensing Policy) : 'தத்' குழுவின் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டு பிப்ரவரி 1970-ல் அரசு புதிய தொழில் அனுமதிக் கொள்கையை அறிவித்தது.

இக் கொள்கையின்படி முக்கியமானதுறை, கூட்டுத்துறை, நடுத்தரத்துறை என மூன்று துறைகள் ஏற்பட்டன. நடுத்தரத் துறையில் சிறுதொழில்களுக்காக ஒதுக்கப்பட்ட தொழில்களும் அடங்கும். அனுமதி பெறுவதற்கு வேண்டிய விதி விலக்கு ரூ. 25 இலட்சத்திலிருந்து ரூ 1 கோடிக்கு உயர்த்தப்பட்டது. பொதுத் துறையின் பங்கு விரிவாக்கப்பட்டது. முக்கியமான துறையில் உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள், இயந்திரக் கலப்பை, இரும்புத் தாது, எஃகு, உலோகக் கலவை, எண்ணெய் வகை, எண்ணெய் சுத்திகரிப்பு, செயற்கை இரப்பர், நிலக்கரி, கனரகத் தொழில், கப்பல் கட்டுதல், கம்பியில்லாச் செய்தித் தொடர்பு சாதனங்கள் முதலியன அடங்கும். இத்தொழில்கள் வளர்ச்சி அடைவதற்கு விரிவான திட்டங்கள் தயாரிக்கப்படும் இத்தொழில் களுக்கு வேண்டிய மூலப்பொருள்கள் முன்னுரிமை அடிப்படையில் வழங்கப்படும்.

முக்கியமான துறை தவிர ரூ. 5 கோடிக்கு மேல் முதலீடு செய்யப்படும் தொழில்கள் அதிக முதலீட்டுத் துறையில் அடங்கும். பொதுத்துறைக்கு ஒதுக்கப்பட்ட தொழில்கள் தவிர மற்ற தொழில் களில் பெரிய தொழில் குடும்பங்களும், அந்நிய ஒத்துழைப்பும் முதலீடு செய்வதற்கு வாய்ப்புகள் அளிக்கப்படும். கூட்டுறவுத் துறையில் கொள்கை அளவில் மட்டுமே நிதி நிறுவனங்கள் தங்கள் கடன் கொடுத்துள்ள நிறுவனத்தின் நிர்வாகத்தில் பங்கு கொள்ளும்.

ரூ. 1 கோடி முதல் ரூ. 5 கோடி வரை முதலீடு செய்யப்பட்டுள்ள நிறுவனங்கள் நடுத்தரத் துறையில் அடங்கும். இங்கு பெரிய தொழில் குடும்பங்கள் தவிர்த்து மற்ற நிறுவனங்களின் மனுக்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும். பெரிய தொழில் குடும்பங்களின் நிறுவனங்கள் மற்றும் அந்நிய ஒத்துழைப்புடன் இயங்கும் நிறுவனங்கள் விரிவடைவதற்காக மனுச் செய்தால், அதுபற்றி நன்கு பரிசீலிக்கப்படும். பெரிய தொழில் குடும்பங்கள் பற்றிய விளக்கம் அவ்வப்பொழுது மாற்றி அமைக்கப்படும். நடுத்தரத் துறையில் பெரிய தொழில் குடும்பங்கள் முதலீடு செய்வதற்கு எவ்விதத் தடையும் விதிக்கப்பட மாட்டாது. ஆனால் புதிய தொழில் செய் முனைவோர்க்கு முன்னுரிமை வழங்கப்படும்.

சிறு தொழில்களுக்காக ஒதுக்கப்பட்ட தொழில்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது. இதில் எஃகாலான தட்டு முட்டுப் பொருள்கள், அலுமினிய வீட்டுப்பொருள்கள், இயந்திரப் பொம்மைகள், பேனா, பற்பசை, சைக்கிள் டயர், டியூப், முதலியன சிறு தொழில்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன.

வேளாண்மை சார்ந்த தொழில்களான கரும்பைப் பக்குவப் படுத்துதல், சணல் மற்றும் வேளாண்மைப் பொருள்கள் பக்குவப் படுத்துகல், முதலியன கூட்டுறவு துறையில் அமைவதற்கு முன் னுரிமை அளிககப்படும்.

தொழில்கள் பல்வேறு பகுதிகளுக்குப் பரவுவதற்கு நட வடிக்கை எடுக்கப்படும். எனினும் இது மிகப் பெரிய பிரச்சினை யாகும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இக்கொள்கையின் முதல் கட்டத்தைத்தான் ஆரம்பிக்க முடியும். வளர்ச்சியுருத வட்டாரங்களில் தொழில் ஆரம்பிப்பதற்கு பண உதவி அளிக்கப் படும். கீழ்க்கண்ட 9 மாநிலங்களில் மாநிலத்திற்கு இரண்டு மாவட்டங்கள் என்ற அளவில் இவ்வுதவி அளிக்கப்படும் ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், பீகார், ஜம்மு-காஷ்மீர், மத்தியப் பிரதேசம், நாகாலாந்து ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், உத்தரப் பிரதேசம் ஆகியன அந்த ஒன்பது மாநிலங்களாகும் மற்ற மாநிலங்களில் ஏதேனும் ஒரு மாவட்டத்திற்கு மட்டுமே பண உதவி கிடைக்கும்.

இவ்வவாறு இந்தியாவில் தொழில்வளர்ச்சிகாண்பதில் அரசின் பங்கு விரிவடைந்துள்ளது. அவ்வப்பொழுது மாறும் சூழ்நிலைக் கேற்ப அரசு தனது கொள்கையினைத் தளர்த்தி மாற்றுக் கொள்கை களை கடைப்பிடித்து வந்துள்ளது. இக்கொள்கையின் குறிக் கோள்கள் நிறைவேற்றப்படவில்லை என்றாலும் இக்கொள்கையினுல் நாட்டில் தொழில்துறை நன்கு வளர்ச்சி பெற்றுள்ளது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# ஆசிரியரின் சில முடிவுகள்

இதுகாறும் ஆய்ந்துள்ளதை அடிப்படையாகக் கொண்டு நாம் சில முடிவுகளைத் தெளிதல் இயலும். முதல் இரு அத்தியாயங்களில் போதா வளர்ச்சிக்குரிய காரணங்கள் பற்றியும், அப்போது வளர்ச்சியிலிருந்து ஒரு நாடு விடுபடுவதற்குரிய வழி முறைகளைக் கூறும் சில மாதிரிப் படிவங்கள் பற்றியும் அறிந்து கொண்டோம். இந்தியாவில் நீண்ட காலத் திட்டங்கள் (Perspective Planning) ஹெராட்-டோமார் மாதிரிப் படிவத்தினை அடிப்படையாகக் கொண்டுள்ளன. ஹெராட்-டோமார் மாதிரிப் படிவத்தின் கூற்றுப் படி, ஒரு நிலையான பொருளாதார வளர்ச்சி வேண்டும் என்றால், முதலீட்டின் வளர்ச்சி வீதமானது முதலீட்டின் உற்பத்தித் திறன், இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் ஆகிய இரண்டினுடைய பெருக்குத் தொகைக்குச் சமமாக இருக்க வேண்டும். இதன் அடிப்படையில் நமது ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் நீண்ட கால இலக்குகள் வகுக்கப்பட்டுள்ளன.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் முதல் உற்பத்தி அளவு விகிதமானது 3:1 என்றமையுமென மதிக்கப்பட்டது. மேலும் சேமிப்பு வீதம் 5 சதவீதத்திலிருந்து 6½ சதவீத்திற்கு அதிகரிக்கும் என்றும் எதிர் பார்க்கப்பட்டது. இவ்விரண்டின் அடிப்படையில் தேசிய வருமானமானது 11 சதவீதம் அதிகரிக்கும் என்றும் கூறப் பட்டது. ஆனால்.முதல் திட்ட காலத்தில் சாதகமான சூழ்நிலை நிலவியதால், தேசிய வருமானமானது 18 சதவீதம் அதிகரித்தது.

பேராசிரியர் P.C. மகலனோபிஸ் (Prof. P. C. Mahalanobis) தமது புத்தகமான 'Talks on Planning'ல் குறிப்பிட்டுள்ள 'நான்கு துறை மாதிரிப் படிவத்தினை' (Four Sector Model) இரண்டாம் திட்டத்திற்கு அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. இம் மாதிரிப் படிவத்தின்படி நாட்டில் உள்ள பலவேறு துறைகளும் நான்கு வகையாகப் பிரிக்கப்படுகின்றன. அவைகள் வருமாறு:—

(i) மூலதனப் பொருள்கள் உற்பத்தி செய்யும் துறை (Capital-Goods Sector)

(ii) நுகர்வோர் பொருள்களை பெரிய தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யும் துறை (Factory produced Consumer Goods Sector)

(iii) சிறிய அளவில் நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் துறை (Small or house hold produced Consumer Goods Sector)

(iv) பணிகள் (மருத்துவம், கல்வி முதலியன) துறை [Services (Health, education etc) producing Sector].

இந் நான்கு துறைகளிலும் ஏற்படக் கூடிய முதல்—உற்பத்தி அளவு விகிதம் மற்றும் முதல் உழைப்பு விகிதம் (Capital Labour Ratio) முதலியவற்றை கருத்தில் கொண்டு ஒவ்வொரு துறைக்கும் எவ்வளவு முதலீடு ஒதுக்க வேண்டும் என்பதை கணிதத்தின் உதவி கொண்டு விளக்குகின்றார். எனவே உண்மையில் இம் மாதிரிப் படிவத்தினை ஏற்றதொரு வளர்ச்சி மாதிரிப் படிவம் என்று கூற முடியாது. இதனை 'ஒதுக்கீடு மாதிரிப் படிவம் என்றே கூற வேண்டும்' (Allocation Model). ஏனென்றால் இம் மாதிரிப் படிவம் பொருளாதார வளர்ச்சியினைக் கூறுவதற்குப் பதிலாக ஒவ்வொரு துறைக்கும் எவ்வளவு முதலீடு ஒதுக்க வேண்டும் என்பது பற்றியே கூறுகின்றது.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் முதல் உற்பத்தி அளவு விகிதம் 2:3:1 என்பதனையே கணக்கில் கொண்டால் அத் திட்ட இறுதியில் தேசிய வருமானமானது 25 சதவீதமாகவும், மூன்றும் திட்ட இறுதியில் 60 சதவீதமாகவும், நான்காம் திட்ட இறுதியில் 100 சதவீதமாகவும் ஐந்தாம் திட்ட இறுதியில் 152 சதவீதமாக வும் அதிகரிக்கும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் இரண் டாம் திட்ட காலத்தில் தேசிய வருமானம் 19.5 சதவீதம்தான் அதிகரித்தது மீண்டும் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் முதல்— உற்பத்தி அளவு விகிதத்தினை முன்பு போலவே 2:3:1 என்றும், சேமிப்பு வீதத்தை 12 சதவீதம் என்றும் கொண்டால் தேசிய வரு மானமானது 1966–இறுதியில் 36 சதவீதமும் 1971-ல் 72 சத வீதமும், 1976-ல், 120 சதவீதமும் அதிகரிக்கும் எனக் கணக் கிடப்பட்டது. ஆனால் மூன்றும் திட்ட காலத்தில் ஓராண்டு வளர்ச்சி வீதமானது எதிர்பார்த்த 5 சதவீதத்திற்கும் குறைவாகவே அமைந்தது. அடுத்து நான்காம் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் முதல்–உற்பத்தி அளவு விகிதமானது 2:1 ஆகவும் சேமிப்பு வீத மானது 12.6 சதவீதமாகவும் வகுக்கப்பட்டு வருட வளர்ச்சி வீதம் 5½ சதவீதமாக அமையும் எனக் கருதப்பட்டது.

இவ்வாறு நீண்ட காலத் திட்டத்திற்கு ஹெராட்-டோமார் மாதிரிப் படிவமானது அடிப்படையாகக் கொள்ளப்பட்டாலும் கூட, ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டத்திலும், ஒரு சில துறைகளுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைக் கொண்டு நோக்குமிடத்து, 'சரிசமநிலையில்லா வளர்ச்சி மாதிரிப் படிவத்தையே' திட்டக்குழு பின்பற்றுவதை அறியலாம். சரிசம நிலை இல்லா வளர்ச்சி என்பது ஒரு துறையினை மட்டும் முன்னேற்றமடையச் செய்யும்பொழுது மற்ற துறைகள் முந்தைய துறையின் வளர்ச்சியால் உந்தப்பட்டு வளர்ச்சி பெறுவதாகும். இதன்படி முதல் திட்டத்தில் விவசாயத் திற்கும், சமூக ஆக்கநிலை முதலுக்கும் அதிக முக்கியத்துவமும், இரண்டாம் திட்ட காலத்தில் தொழில் துறைக்கு முக்கியத்துவமும், மூன்றும் திட்ட காலத்தில் விவசாயத் துறைக்கு முக்கியத்துவமும் அளிக்கப்பட்டது.

எனினும், ஹெராட்-டோமார் மாதிரிப் படிவம், சரி சமநிலை இல்லா மாதிரிப் படிவம் போன்ற மாதிரிப் படிவங்களைக் கொண்டு எதிர் பார்த்த வளர்ச்சியினை நாம் அடையவில்லை ஏனென்றால் ஒரு துறைக்கு முக்கியத்துவம் அளிக்கும் பொழுது மற்ற துறைகள் பின் தங்கி விடுகின்றன. தொழில் துறையில் தொழில் செய்முனைவோர் கள் புதிதாகத் தோன்றுததால் வேளாண்மைத் துறைக்கு முக்கியத் துவம் அளிக்கும் பொழுது தொழில் துறை பின் தங்கியது. வேளாண்மைத் துறை இன்றும் பருவ மழையையே சார்ந்திருப்ப தால் அத்துறையில் நிலையான முன்னேற்றம் ஏற்படவில்லை.

ஆகவே இம் மாதிரிப் படிவங்களை நாம் முழுதும் நம்ப முடியாது. டோமார் கூறியது போல 'வளர்ச்சிக்குரிய மாதிரிப் படிவங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு செய்முறை வழி காட்டியாக (Practical guide) பயன்படுவது என்பது கவர்ச்சிகரமாக இருந் தாலும், அவ்வகை மாதிரிப் படிவங்களில் குறைபாடுகள் அதிகம் உள்ளன.[1]

எனவே இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகள் இம்மாதிரிப் படிவங்களையே நம்பியிராமல், அந்தந்த நாடுகளில் உள்ள சூழ்நிலை களுக்கேற்பவும், பொருளாதாரச் சார்புடைய மற்றும் பொருளா தாரச் சார்பற்ற காரணிகளை மனதில் கொண்டும் பொருளாதார வளர்ச்சிகேற்ற புதிய மாதிரிப் படிவத்தை வகுத்துத் திட்டங்கள் தீட்ட வேண்டும்.

1 Domar—'Essays in the theory of Economic Growth' Oxford, New York, 1957, p. 13.

அடுத்து, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது வேளாண்மைத் துறையின் வளர்ச்சியா அல்லது தொழில் துறையின் வளர்ச்சியா என்பதை ஆராயும் பொழுது தொழில் துறை வளர்ச்சியின் அவசியத்தை நன்குணரலாம் திரட்டிய மூலதனத்தை தொழில் துறையில் முதலீடு செய்வதன் மூலம் பொருளாதார வளர்ச்சியை எளிதில் அடைவதற்கு வழி கிட்டும். தனி நபர் தலா உற்பத்தியின் மதிப்பு வேளாண்மைத் துறையினைக் காட்டிலும், தொழில் துறையில் தான் உயர்ந்து காணப்படுவதோடு மட்டுமல்லாமல் விரைவாக அதிகரிக்கவும் செய்கின்றது வளர்ச்சியுறும் நாடுகள் கனிச் செல்வங்களை அப்படியே ஏற்றுமதி செய்யாமல் அக்கனிச் செல்வங்களையே வினை முற்றிய பொருளாக மாற்றி உலக அங்காடிகளில் விற்பனை செய்வதன் மூலம் அதிக விலை பெறலாம். இதற்கு மிகவும் உறுதுணையாக இருக்கும் பொருட்டுத் தொழில் துறையை முன்னேற்றுவிப்பது சாலச் சிறந்தது. தொழில் துறை வளர்ச்சியின் மூலம் வேளாண்மைத் துறைக்குத் தேவையான நவீன சாதனங்களாகிய, கலப்பை, அறுவடை இயந்திரங்கள், நவீன உரங்கள், பூச்சி கொல்லி மருந்துகள் முதலியன சீராகக் கிடைக்கப் பெறும் எனவே தொழில் மயமாக்குதல் என்பது பொருளாதார வளாச்சியின் உயிர்த் துடிப்பான தொன்றாகும்.

தொழில் மயமாக்குதல் எனும் கொள்கையை நாம் ஏற்றுக் கொண்டால் அதனை விரைவில் எய்திட சிற்றளவுத் தொழில்களே மிகவும் ஏற்றவை. வளர்ச்சியுறும் நாடுகளில் போதிய மூலதனம் கிடைக்காது என்பதை அறியலாம். இந் நாடுகள் பேரளவுத் தொழில்களுக்கு முக்கியத்துவம் அளிக்குமானால் அந் நாடுகளின் திட்டங்கள் தோல்வியில் முடிவதில் வியப்பேதுமில்லை. வளர்ச்சியுறும் நாடுகளில் பொருளாதாரப் பற்றுக்குறை, விரிவான அங்காடி இல்லாமை போன்றவை, பேரளவுத் தொழில்களின் வளர்ச்சிக்கு இடையூறாக உள்ளன. எனவே வளர்ச்சியுறும் நாடுகள் தமக்குத் கிடைக்கின்ற சிறிதளவு மூலதனத்தைச் சிற்றளவுத் தொழில்கள் செம்மையாகப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் இச் சிறு தொழில்களின் முதல் உறபத்தி விகிதம் குறைவாக இருப்பதோடன்றி அதிக வேலை வாய்ப்பினை அளிக்கக் கூடிய தன்மைகளையும் பெற்றுள்ளன.

வளர்ச்சியுறும் நாடுகளில் பொருளாதாரத் திட்டங்களை மேற்கொள்ளுவதால் மக்களின் வருமானம் அதிகரிக்கின்றது. இதனால் தேவை அதிகரிக்கின்றது. இவ்வதிகரித்த தேவையினை சிற்றளவுத் தொழில்களால்தான் விரைவில் ஈடுகட்ட முடியும். பேரளவுத்

தொழில்களின் உற்பத்திக் காலம் அதிக அளவில் இருப்பதால், விரைவாக அதிகரித்திடும் பொருள் தேவையினை சமாளிக்கக் கூடிய நிலையில் பேரளவுத் தொழில்கள் இல்லை. முன்பு கூறியது போல நாட்டு மக்களின் அதிகரித்த தேவையினை சிறு தொழில்கள் விரைவாக ஈடுகட்டுவதால் வளர்ச்சியுறும் நாடுகளில் பொதுவாகக் காணப்படும் விலைவாசி ஏற்றத்தை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தலாம்.

தவிர, மூலதனம் சிறிதளவே தேவைப்படுமாதலால் சிற்றளவுத் தொழில்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஆரம்பிப்பதற்கு வழி வகுக்கின்றன. இதனால் தொழில் குவிதல் தடுக்கப்பட்டுத் தொழில்கள் பரவலாக்கப்படுகின்றன. தொழில் பரவலாக்கு வதால் வருமான ஏற்றத்தாழ்வும், வட்டார ஏற்றத்தாழ்வும் மறை கின்றன.

இவைகளைக் கருத்தில் கொண்டே இந்திய அரசானது சிற்றளவுத் தொழில்களுக்கு அதிக முக்கியத்துவம் அளித்துள்ளது. பெருகி வரும் வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு சிறு தொழில்களை வளர்த்தலே உகந்த வழி எனத் திட்டக்குழு உணர்ந் துள்ளது. எனவே. சிற்றளவுத் தொழில்கள் முன்னேற்றத்திற்குப் பல்வேறு முயற்சிகளை அரசு எடுத்துள்ளது. அவற்றை ஒன்பதா வது அத்தியாயத்தில் விரிவாகக் கண்டோம்.

தொழில் மயமாக்குதல் என்பது மேற்கத்திய நாகரிகத்தின் விளைவே ஆகும். இந்தியாவும் விரைவில் தொழில் மயமாக்கப்பட வேண்டுமென்றால் அம்மேலை நாடுகளின் அனுபவத்தைப் புறக் கணிக்கக் கூடாது. தொடர்ந்து ஏற்பட்ட 'தொழில் *சீரமைப்பு*' மற்றும் ஆராய்ச்சிகளால்தான் அந்நாடுகளில் தொழில் புரட்சியை உருவாக்கிட முடிந்தது. அதுபோல இந்தியாவில் தொழில் புரட்சி யினை ஏற்படுத்திட தொழில்களைச் *சீரமைப்புச்*செய்வது இன்றியமை யாததாகிறது. 'சுங்கவரிச் சபையின்' (Tariff Board) அறிக்கை யின்படி இந்தியாவில் உள்ள நெசவாலைகளில் ஒரு தொழி லாளி 180 நூற்புக் கதிர்களை இயக்குகின்றான். ஆனால் ஜப்பானில் ஒரு தொழிலாளி 240 நூற்புக் கதிர்களையும், இங்கிலாந்தில் 600 நூற்புக் கதிர்களையும் அமெரிக்காவில் 1,120 நூற்புக் கதிர்களையும் இயக்குகின்றான். அதுபோல் இந்தியாவில் உள்ள ஒரு நெசவாளி 2 நெசவுத் தறிகளை மட்டுமே இயக்க முடிகிறது. ஆனால் ஜப்பா னில் 6 நெசவுத்தறிகளையும், அமெரிக்காவில் 9 நெசவுத்தறிகளையும், இங்கிலாந்தில் 6 நெசவுத்தறிகளையும் ஒரு நெசவாளரால் இயக்க முடிகின்றது. மேற்கூறிய உதாரணங்களிலிருந்து நமது நாட்டில் பல்வேறு துறைகளிலும் உற்பத்தித் திறனானது குறைவாகவே

உள்ளது என்பது புலனாகும். இக் குறைபாட்டுக்கு தொழிலாளர்களை மட்டும் குறைகூற முடியாது. இன்று பற்பல தொழிற்சாலைகளில் பழமையானதும் தேய்ந்துபோனதுமான இயந்திரங்களே உள்ளன. ஜோஷி குழு (Joshi Committee) அறிக்கையின்படி இன்று பஞ்சாலைகளில் உள்ள பெரும்பான்மையான இயந்திரங்கள் 40 ஆண்டுகளுக்கு முன்பே நிர்மாணிக்கப்பட்டவை, மேலும் அவைகள் இரண்டாவது உலகப்போரின் போது இடைவிடாது இயங்கியமையால் பழுதடைந்து, தேய்ந்து காணப்படுகின்றன. ஆதலால் இக் குறைபாடுகளை நீக்குவதற்கு தொழில் *சீரமைப்பு* முறை அவசியம்.

*சீரமைப்பு* முறை என்றால் என்ன என்பதுபற்றி அறிவதற்குப் பின்வரும் பன்னாட்டுப் பொருளாதார மாநாட்டின் (International Economic Conference) கூற்றினை நினைவிற் கொள்ளலாம். உழைப்பையும், ஆக்கப்பொருள்களையும் உபயோகிக்கும் பொழுது ஏற்படக்கூடிய இழப்பினை வெகுவாகக் குறைப்பதற்கு எடுக்கப்படும் நடவடிக்கையே தொழில் *சீரமைப்பு* எனப்படும் இந்த நடவடிக்கையில் விஞ்ஞான நிர்வாகம், உற்பத்தி செய்யும் பொருள்களின் தரத்தை அதிகரித்தல், தரமான மூலப் பொருள்களையே உபயோகித்தல், உற்பத்தி முறையை எளிதாக்குதல், போக்குவரத்து மற்றும் விற்பனை முறைகளை நன்கு அமைத்தல், முதலியன அடங்கும். எனவே *சீரமைப்பின்* குறிக்கோள்கள் :-

(i) குறைவான உழைப்பின் மூலம் அதிக அளவு உழைப்புத் திறனைப் பெறுதல்.

(ii) பழைய பகுதிகளை அல்லது இயந்திரங்களை மாற்றி அமைத்தல்.

(iii) மூலப் பொருள்கள் மற்றும் சக்தி வீணாவதை தடுத்தல்.

(iv) பொருள்களின் விநியோகத்தை எளிதாக்குதல்

(v) தேவையில்லாத போக்குவரத்தினை நீக்குதல், உபயோகமில்லாத தரகர்களை நீக்குதல் முதலியவையாகும்.

நமது இந்திய ஆலைகள் பழமையானவையாக இருப்பதால் உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதாக முன்னர்க்கண்ட உதாரணத்தின் மூலம் தெரிந்தோம். இந்நிலையில் நமது பேரளவுத் தொழில்கள் வளம் பெற வேண்டுமாயின், தொழில் *சீரமைப்பு* என்பது முக்கியமாகிறது.

தொழில் சீரமைப்பில் முக்கியத்துவம் பெறுவது "விஞ்ஞான நிர்வாகம்" ஆகும். இவ்வேளையில் 'விஞ்ஞான நிர்வாகம்' என்றால் என்ன என்பது பற்றியும் சற்று அறிதல் அவசியம். விஞ்ஞான நிர்வாகத்தில் கால ஆயவு (Time study), சலன ஆய்வு (Motion study) சோர்வு பற்றிய ஆய்வு (Fatigue study) முதலியன அடங்கும், மேலும் தேவையற்ற போட்டியைத் தவிர்ப்பதற்குச் சில நிறுவனங்கள் இணைந்து செயல்படலாம். இதனால் திறமை யற்ற நிறுவனங்கள் நீக்கப்படலாம்.

விஞ்ஞான நிர்வாகத்திலும், தொழில் சீரமைப்பினாலும், இந்தியத் தொழில் துறையில் பல நல் விளைவுகள் ஏற்படக் கூடும் பொருட்கள் உற்பத்தி பெருகலாம். தரம் கூடலாம்; விலை குறைய லாம்; கச்சாப் பொருள்கள் விரயம் தவிர்க்கப்படலாம்; உற்பத்தித் திறன் பெருகலாம்; இந்திய மக்களின் வருமானம் பெருகலாம், ஆக தொழில் சீரமைப்பு முயற்சிகளினால் பேரளவுத் தொழில் துறை வளர்ச்சியடையக் கூடும். ஆயினும் இந்நன்மைகளுக்கிடையே ஏற்படக் கூடிய முக்கியமான ஒரு தீமையை மறந்து விடக் கூடாது.

தொழில் சீரமைப்பு முயற்சிகளினால் இயந்திரங்கள் புகுத்தப் படல், புதிய உற்பத்தி முறைகளைக் கையாளல் போன்றவற்றால், ஏற்கெனவே வேலையிலிருக்கும் பலருக்கு வேலையில்லாது போக லாம். அத்துடன் மாறிய சூழ்நிலைக்கேற்ப திறமையுடன் பணிபுரிய இயலாத நிறுவனங்கள் மூடப்படக்கூடும். அவ்வாறு அவைகள் மூடபபடுவதாலும் வேலையிழப்போர் பலராக இருக்கக்கூடும், ஆக மொத்தத்தில் தொழில் சீரமைப்பு முயற்சிகளினால் வேலை யிழப்போர் எண்ணிக்கை அதிகமாக இருக்கலாம்.

இதனால் ஏற்படும் பின் விளைவுகள் யாவை? நமது நாட்டில் ஏற்கெனவே வேலையின்மைப் பிரச்சினை மிகச் சிக்கலாக உள்ளது. இந்தியாவில் புதிதாக வேலை தேடி வருவோரோடு தொழில் சீரமைப்பு முயற்சிகளினால் வேலையிழந்தோரும் பணிதேடி வருவ தால், மொத்தவேலையின்மைப் பிரச்னையின் அளவு மிகவும் அதிக மாகிறது. இச்சிக்கலைத் தீர்ப்பது எங்ஙனம்?

இவ்வாறு தொழில் சீரமைப்பால் வேலை இழந்தோரை வேளாண்மைத் துறைக்கு அனுப்பலாம். அவ்வாறு செய்வதால் இரு புதிய சிக்கல்கள் தோன்றக்கூடும்.

(i) ஏற்கெனவே அதிகமான நபர்கள் நிலத்தை நம்பியுள்ள சூழ்நிலையில் மேலும் பலர் வேளாண்மைத் துறைக்குச் செல்ல

வேண்டியுள்ளது. இந்திய விவசாயத்தில் ஒளிந்துள்ள வேலை யின்மை காணப்படுவதால் இத்துறையின் இறுதிநிலை உற்பத்தித் திறனானது பூச்சியமாக இருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில் புதிதாகச் சிலரையும் வேளாண்மைத்துறைக்குக் கொண்டு வர முடியாது.

(ii) இங்கு இன்னொரு கருத்தையும் உணர வேண்டும். இத்தகைய தொழிலாளர்களுக்கு விவசாய வேலையோ, அதன் நுட்பங்களோ தெரிந்திரா; அல்லது மறந்திருக்கக்கூடும். ஆகவே அவர்களை வேளாண்மைத் துறைக்கு அனுப்புதல் நன்றல்ல.

இதற்கு முடிவு தான் என்ன? தொழில் துறையில் தொடர்பு கொண்டு ஏற்கனவே ஓரளவுத் தொழில்துறை நுட்பங்களையும் அனுபவங்களையும் மற்றுள்ள அவர்களது திறமையை செவ்வனே பயன்படுத்திக் கொள்ள வேண்டுமெனில், அவர்களுக்கு மீண்டும் தொழில் துறையிலேயே வேலை வாய்ப்பினை அளிக்கவேண்டும். இங்குதான் சிறு தொழில்களின் முக்கியத்துவம் உணரப்படுகிறது.

நாட்டின் பல்வேறு பகுதிகளில்—குறிப்பாக கிராமப் புறங் களில்—சிறு தொழில்களைத் தொடங்கலாம். அவ்வகைத் தொழில் களுக்கு குறைந்த மூலதனமே போதுமாதலால் கிராமப்புறங்களில் தொடங்குவது சாத்தியமே. அவ்வாறு புதிதாக தொடங்கப்படும் சிறு தொழில்களில், சீரமைப்பால் வேலையிழந்த தொழிலாளர் களுக்கு வேலை வாய்ப்பளிக்கலாம். அதன் பொருட்டு தொழிலாளர் களுக்கு ஓரளவு பயிற்சி கொடுத்தால் போதும். மேலும் அவர் களிடத்து தன்னம்பிக்கையை வளர்த்து தாமே சுய தொழிலாகச் சிறு தொழில்களைத் தொடங்கிட ஊக்குவிக்கலாம். தேவையான நிதி, தொழில் நுட்பம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, கச்சாப் பொருள்கள் போன்ற வசதிகளை அரசு அளிக்கலாம்.

இவ்வாறாக தொழில் சீரமைப்பு மூலமாக பேரளவுத் தொழில் சீரமைப்பு மூலமாக பேரளவுத் தொழில்களும் வளர்ச்சி பெறுகின்றன; நன்மைகள் பெறுகின்றன; அதே வேளையில் தீமையிலும் நன்மை என்பது போல, சிறுதொழில் வளர்ச்சியிலும் தொழில் சீரமைப்பின் தீமையையும் களையலாம்.

பின்னிணைப்பு I

# காந்தீயமும் சிறு தொழில்களும்

அறிவியல் முன்னேற்றங்கள் பலவற்றால் தூண்டப்பட்ட வளர்ச்சியடைந்துள்ள தொழில் நாகரிகத்தை (Industrial civilisation) மனித வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய நிகழ்ச்சியாகக் கொள்ளலாம். இக் காலத்தில், அனைத்து நாடுகளும் இதற்குச் சிறப்புத் தந்து போற்றுகின்றன. மேலை நாடுகள் பெற்ற தன்னுரிமைகூட இதனை வாய்ப்பாகக் கொண்டுள்ளதைப் பார்க்கலாம். இதன் விளைவாகப் பொருளாதார நடவடிக்கைகள் முக்கியத்துவம் கொண்டு விளங்கின. இவற்றிற்கு மிதமிஞ்சிய சிறப்பினை வழங்கிய காரணத்தினால் ஆன்மீகத்துறை புறக்கணிக்கப்பட்டுவிட்டது. சமுதாயமே படுகுழிக்குள் விழ வேண்டிய அவல நிலை ஏற்பட்டாலும் அதில் வியப்பேதுமில்லை என காந்தீயவாதிகள் தெரிவிக்கின்றனர்.

ஆகவே, பருப்பொருள் சார்ந்த (Material) நடவடிக்கைகளையும், ஆன்மீகச் (Spiritual) செயல்பாடுகளையும் எவ்வாறு ஒருங்கிணைத்து, சமுதாயத்திற்கு நிகழவிருக்கும் சீர்குலைவினைத் தவிர்ப்பது எவ்வாறு என்பது தலையாயப் பிரச்சினையாக உள்ளது. நாகரிகத்தைச் சிதைத்த பகுதிகளாக ஏற்றுக் கொள்வது சிறப்பாகாது எனும் ஆர்னல்டு டாயின்பீயின் (Arnold Toynbee) கருத்தை இங்கு நினைவு கூறலாம்.

இதே பிரச்சினைக்குத்தான், காந்தியடிகளும் தீர்வு காண முயன்றார். ஆன்மீகத்தினால்தான் பருப்பொருள் சிக்கல்களை வெல்ல இயலும் என ஆணித்தரமாக அவர் எடுத்துரைத்தார். அஹிம்சை எனும் ஆன்மீக சக்தி கொண்டு செல்வத்தின்மீது மக்கள் கொண்டுள்ள பற்றிற்குத் தீர்வு காணலாமென அவர் அறிவித்தார். இவ் வியக்கத்தில் மனிதன் ஆற்ற வேண்டிய கடமைகள் இரு வகைப்பட்டவையாகும்—அவையாவன:

(1) ஒருவனுக்குரிய பருப்பொருள் தேவைகளை உடனடியாகக் குறைத்துக் கொள்ள வேண்டியது.

(2) அவ்வாறுள்ள மிகக் குறைந்த தேவைகளை நிறைவு செய்யும்பொழுது பிற மனிதர்களுக்குத் துயர் துடைக்க உதவும் வகையில் அமைய வேண்டும். இவ் விரண்டு கருத்துகளின் கோவைதான் காந்தியடிகளின் 'சுதேசி விதி' (Law of Swadeshi) என்று கூறப்படுகிறது.

தொழிலை இயந்திரமாக்குவதற்குக் காந்தியடிகள் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. ஆனால் இக் கொள்கையைச் செயல்படுத்தும் விளைவாக, மனித உழைப்பானது வேலையின்மையில் வாடுவ தானால், அதனை எப் பாடுபட்டாவது களைந்திட வேண்டுமெனத் திட்டமாக எடுத்துரைத்தார். திருந்திய (Improved) கலப்பையை வரவேற்கலாம். ஆனால், இலட்சக்கணக்கான மக்கள் வேலை யின்றித் தவிக்கும் வகையில், இந்தியாவில் நூதனமான கலப்பை யொன்றைக் கொண்டு நாட்டிலுள்ள அனைத்து நிலத் துண்டங்களை யும் தன்வசப் படுத்தி முதலாளி ஒருவர் பயிர் செய்வதாக இருந்தால், அதன் காரணமாகத் தோன்றும் கொடிய விளைவுகளைக் கற்பனை செய்தும் பார்க்க முடியாது. இந் நிலையைத் தான் அண்ணல் வன்மையாகக் கண்டித்தார். குடிசைத் தொழிலில் சிறு இயந்திரங்களைப் புகுத்துவதில் காந்தியடிகள் ஆதரவு காட்டி னார். அதே வேளையில், அவ்வியக்கத்தினால் வேலையில்லாப் பிரச்சினை எங்கேனும் தலை தூக்குவதாக இருந்தால், அத்தகைய கொள்கையை வெறுத்தார். வறுமையையும், சோம்பலையும் நீக்கப் படும் முகமாக இந்தியாவில் இயந்திரங்கள் புகுத்தப்படுவதாக இருந்தால் அதனை வரவேற்க அவர் சித்தமாயிருந்தார்.

உழைப்பைச் சேமிக்கும் கருவிகளாக (Labour Saving Devices) இயந்திரங்கள் விளங்க வேண்டுமேயன்றி வேலை யிலமர்ந்த தொழிலாளர்களை விலக்கும் வகையில் அவை அமைந் திடலாகாது. கைராட்டையில் சில சீர்திருத்தங்களைத் தோற்று வித்து நம் நாட்டில் பரவலாக அதனைப் புகுத்திடலாமெனக் கருத்துத் தெரிவித்தார். பேராசையைத் தூண்டவல்ல கருவியாக அறிவியல் துறையில் கண்டு பிடிப்புக்கள் நடந்தேறக் கூடாது அவ்வாறு தோன்றும் புதுமைகள் கொண்டு, தொழில் அதிபர்கள் மிகுதி இலாபத்தை அடைந்திடும் கருத்தோடு, தொழிலாளர் களிடம் அதிக வேலை வாங்க முனைவார்கள். ஆக, இயந்திரங்கள், வேலையைச் சேமித்துத் தருவதற்குப் பதிலாக, வேலையின்மையை ஊக்குவிக்கும் கருவிகளாகவே மாறி விடுகின்றன. சற்றே ஊன்றிப் பார்க்கையில், மேம்பாடு பெற்ற இயந்திரங்கள் யாவுமே இந் நிலையைத் தோற்றுவிக்கலாம் எனக் கண்ட காந்திஜி, இவை அறவே தோன்ற வேண்டியதில்லை என்றே கூறினார். மனித

நாகரிகத்தின் சின்னமாக விளங்கும் இயந்திரங்களைப் பாவச் சின்ன மாகக் கருதினர். இயந்திரங்கள் ஆட்சி புரிகின்ற இடங்களில், மாநகரங்கள் தோன்றியிருக்கும்; அம் மாநகரங்களில் ஊர்திகளும் புகைவண்டிகளும் மலிந்து காணப்படும். இவை காரணமாக உடல் நலம் நலியும் என மருத்துவர் கூறுவர்.

புதிய கண்டு பிடிப்புக்கள் தற்காலிகப் பயனைத்தான் தரக் கூடும். அவை குறுகிய காலத்திற்குப் போற்றப் படலாம். ஆனால் நீண்ட காலத்தில், நிரந்தரத் தன்மை பெற வேண்டிய மக்கள் நலம் பெருமளவிற்கு இதனால் பாதிக்கப்படலாம். சுருங்கக் கூறின், இயந்திர மயமாக்குதல் எனும் கொள்கை இந்தியா போன்ற நாடு களுக்கு இன்றியமையாததெனக் கருத இயலாது பார்க்கப்போனால் குறிப்பிட்ட ஓர் இலக்கினை அடைந்திட, இயற்கை மக்களுக்குக் குறுக்கு வழி ஏதும் கூறவில்லையே. மக்கள் நன்மையை அமைந்திட இயந்திரங்கள் மக்களுக்குக் குறுக்கு வழிகளாகவே அமைந் துள்ளன. இவ்வாறு மனிதனை அடிமை கொள்ளவிருந்த இயந் திரங்களைக் காந்தியடிகள் மாற்றி அமைத்திட முயன்றார். காலத் தையும் தூரத்தையும் வெல்லும் நோக்கத்தோடு செயற்கையான முறையில் கண்டு பிடித்து புகுத்தப்பட்ட இயந்திரங்கள் வாயிலாக உண்மையான மகிழ்ச்சியை மக்கள் பெற்றிட முடியாது என அவர் குறிப்பிட்டார். மனிதத் தன்மை மிகுதியாகக் குறைக்கப்பட்டு 'விலங்கின் வெறி' ஆட்கொள்வதை 'இயத்திர மயமாக்கப்பட்ட நிலையில் காணமுடியும். அவரவர் உடலுறுப்புக்களைப் பயன்படுத்தி அதனின்று கிடைக்கும் வினைப் பயன்கள்தாம் உண்மை மகிழ்ச்சி யாகும்.

வேலைப் பளுவைக் குறைக்கும் முறையில் கண்டுபிடிக்கப் பட்ட இயந்திரங்களை (சான்று: தையல் இயந்திரம்) இலாப நோக் கேதுமில்லா வகையில் அரசுடமையின் கீழ்க்கொணர வேண்டு மெனக் காந்தியடிகள் கூறினர் பேராசைக்குப் பதிலாக அன்பு தான் அங்கே இலக்காக இருக்கும். படைப்பினாலேயே மனிதனின் உறுப்புக்கள் குறிப்பிட்ட தூரத்திற்கும், காலத்திற்கும் ஒவ்வும் வகையில்தான் அமைந்துள்ளன. அவனது இயக்கங்கள் யாவுமே கட்டுப்படுத்தப்பட்ட நிலையில்தானிருக்க வேண்டும் என்ற இயற்கை நியதிக்குட்பட்டுத்தான் கடவுள் மனிதனைப் படைத் துள்ளார். இதனைப் புறக்கணித்து, பிறருக்கு பயன் கருதித் தொண்டு ஆற்றுவது போலப் பாசாங்குக்காரர் சிலர் இயந்திரக் கண்டு பிடிப்புகள் வாயிலாக மனித குலத்திற்கு நன்மையெனப் பறைசாற்றிக் குறுக்கு வழிகளை வகுத்துள்ளனர் தமக்குத்தாமே பல குழப்பங்களைத் தோற்றுவித்த நிலையில் அவற்றிற்குரிய

காரணங்களை ஆராயும்பொழுது, அவை இயற்கையை மீறிச் செய்த செயல்களாக விளங்குகின்றன. இப்போக்கைத் தான் அடிகளார் வெறுத்தார்.

தற்சார்புடைய பொருளாதாரங்களாக அமையப்பெற்ருல், முதலாளித்துவக் கட்டுமானத்தில் உள்ளது போன்று சுரண்டலோ பணக்குவியலோ, உறுதியின்மையோ, நெடுந்தூரப் பயணமோ, தேவையிராது. ஆக்கமும் நுகர்வும் ஒரே இடத்தில் நிகழ்ந்து விடுகின்றன. இயந்திரங்களுக்கு இங்கு வேலை இருக்காது. பேரளவுத் தொழில்களின் வெற்றியானது சுரண்டுதற்குரிய ஆற்றல், அந்நியச் சந்தைகளின் அமைப்பு மற்றும் போட்டியின்மையைப் பொருத்துத் தான் இருக்கும். பேரளவுத் தொழில்களும் அவற்றிற்கு ஊக்கமளிக்கும் இயந்திரங்களும் தடை செய்யப்பட்டால்தான் அத் தீய விளைவுகளிலிருந்து தப்ப முடியும் எனக் காந்திஜீ வலியுறுத்திஞர்.

உபரி உற்பத்தியால் உண்டாகும் வாணிபமே ஒத்துக்கொள்ளக்கூடியதாகும். சான்ருக, ஒருவன் எட்டு லட்டுகள் வைத்துள்ளான். இதில் ஐந்திணைத் தின்று திருப்தி அடைகின்ருன். ஆனுல் அதே சமயத்தில் அவனுக்குத் தண்ணீர்த் தாகம் ஏற்படுகின்றது. அச் சமயம் ஒருவன் தண்ணீர் செம்புடன் வருகின்ருன். லட்டு தின்றவன் அத் தண்ணீரைப் பெறுவதற்குத் தன்னிடம் மீதமுள்ள லட்டினைக் கொடுப்பதற்குத் தயாராக இருக்கின்ருன். இவ்வாறு இருவர்களுடைய விருப்பமும் பூர்த்தி அடைகின்றது. எனவே வாணிபம் உபரி உற்பத்தி இருந்தால்தான் ஏற்படவேண்டும்.

பணம் ஈட்ட வேண்டும் என்ற நோக்கம் பல தவருன காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது. இந்த நோக்கமே உணவுத் தானியங்கள் பயிரிடும் நிலத்தில் இலாபகரமான வாணிபத் தானியங்களான புகையிலை, கரும்பு முதலியனவற்றைப் பயிரிடத் தூண்டுகிறது. மேலும், இதே நோக்கமே நுகர்வுப் பொருள்கள் தயாரிப்பதற்குப் பதில், ஆடம்பரப் பொருள்களைத் தயாரிக்கத் தூண்டுகிறது.

கிராம மக்கள் ஒருவருக்கொருவர் நல்லிணக்க உதவி புரிவதற்குக் கூட்டுறவு முறை மிகவும் அவசியமாகும். கூட்டுறவு முறை கிராமப்புறத்தில் ஒற்றுமையை ஏற்படுத்துகின்றது. பொருளாதாரம் பின் தங்கிய நிலையிலிருந்து முன்னேறுவதற்கு கூட்டுறவு முறை அவசியமாகும்.

ஒரு நாடு தனது முக்கியமான அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் முதலியவற்றில் தன்னிறைவு

அடையாவிட்டால் அந் நாடு சுதந்திரம் அடைந்ததாகக் கருத முடியாது. பேரளவுத் தொழிற்சாலைகளே மக்கள் நலனைக் கருத்தில் கொள்வதில்லை. அவற்றின் குறிக்கோள் அதிகமான விலையை ஏற்படுத்துவதாகும். அதற்காக அளிப்பினைக் குறைக் கின்றனர்.

நிலத்தைச் சொந்தம் கொண்டாடுவது பாவமான செயலாகும். நிலம் இயற்கை கொடுத்த சொத்தாகும். இவ் வியற்கை கொடுத்த சொத்து எல்லோருக்கும் பொதுவானது. கதிரவனின் ஒளியை எவ்வாறு யாரும் கொண்டாடுவதில்லையோ அதுபோல் கடவுள் கொடுத்த பொதுச் சொத்தினை யாரும் சொந்தம் கொண்டாடக் கூடாது.

அரசு தான் வாங்கும் வரிகளை விவசாயிகளிடமிருந்து தானிய மாகவே வாங்க வேண்டும். அறுவடைக் காலங்களில் தானியங் களின் விலை குறைவாக இருக்கும். இதனால் வரியைச் செலுத்தும் அவர்கள் அதிகமான தானியங்களை விற்க வேண்டியுள்ளது. இதனால் இழப்புறுவது விவசாயிகளே. எனவே வரியைத் தானிய மாகவே வாங்கவேண்டும். ஆனால், நிர்வாகக் கஷ்டங்கள் உள்ளன என்பது உண்மையே. ஆனால் இதனை நிர்வத்தி செய் வதற்குக் கூட்டுறவு முறையினை ஏற்படுத்தவேண்டும். கூட்டுறவுத் துறை மக்களிடமிருந்து வரியினைத் தானியமாக வாங்கிப் பின் அரசின் விருப்பப்படி கிராமத்தில் செலவிடலாம்.

வளர்ச்சியுறும் நாடுகள் வளர்ச்சிப் பாதைக்குத் தாமதமாக வந்துள்ளன. ஆனாலும், பொருளாதார வளர்ச்சியினை ஒரே 'தாவில்' அடைய விரும்புகின்றனர். அது அரைக் கிணறு தாண்டிய கதையாக முடிகின்றது. ஒருவனுக்கு உணவாக இருப்பது மற்றவனுக்கு நஞ்சாகலாம். சான்றாக அதிகத் தண்ணீர் தாகத்தில் இருக்கும் ஒருவன், தண்ணீர் கிடைத்தவுடன் அதை ஒரே மடக்கில் குடிப்பதின் மூலமே இறந்து விடுகின்றான்.

இதுபோல் வளர்ச்சியுறும் நாடுகள் பொருளாதார வளர்ச்சி யினை ஒரே மூச்சில் அடைய விரும்பித் தொழில்மயமாக்குவதற்கு முனைகின்றன. இதனால் நவீன தொழில் நுட்பங்களை இறக்குமதி செய்கின்றன. ஆனால் அதனை இயக்குவதற்கும், முன்னேற்று வதற்கும், போதிய திறமையில்லாமல், தோல்வியடைகின்றது.

இந்தியாவின் பின் தங்கிய நிலைக்கு பொருளாதாரம் காரணமே யன்றி அரசியல் காரணமேயன்று. இன்று நாம் பொருளாதார வளர்ச்சி அடைவதற்கு மேலை நாடுகளின் நவீனத் தொழில்

நுட்பத்தை இறக்குமதி செய்கின்றோம். ஆனால் இது தகுதிக்கு அப்பாற்பட்டதாக இருக்கின்றது.

உதாரணமாக இங்கிலாந்தில் ஓர் இயந்திரத்தை அமைப்பதற்கு £ 1,000 ஆகின்றது. இது அந் நாட்டில் உள்ள மக்களின் ஒரு வருட தலா வருமானமாக இருக்கும். எனவே இத் தொகை அங்கு ஒரு சாதாரண விஷயமாகும். ஆனால் இந்தியா போன்ற வளர்ச்சியுறும் நாடுகளில் £ 1,000 என்பது ஒரு மனிதன் இருபது அல்லது முப்பது வருட வருமானமாக இருக்கும். எனவே இங்கிலாந்து போன்ற நாடுகள் இதனை ஏற்றுக்கொள்ளும் தகுதியுடனிருக்கின்றன. ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளுக்கு இது தகுதிக்கு அப்பாற்பட்ட செயலாகும். புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக்கொள்ளக் கூடாதன்றோ?

மேலை நாட்டுத் தொழில் நுட்பத்தைப் பின் தங்கிய நாடுகள் எளிதில் கற்றுக்கொள்ள முடியாது. இதனால் இத் தொழில் நுட்பத்தை எளிதில் அறிந்து கொள்ளும் ஒரு சிலர் தங்கள் நிலையை விரைவில் முன்னேற்றிக்கொள்கின்றனர். இதனால் வளர்ச்சியுறும் நாடுகளில் ஏற்றத் தாழ்வுகள் விரிவடைகின்றன.

முன்னேறியுள்ள முதலாளித்துவ நாடுகளில் முதல் அதிகமாகவும், உழைப்பானது பற்றுக்குறையாகவும் உள்ளது. இதனால் அவர்கள் முதலைத் தீவிரப்படுத்தி உழைப்புச் சேமிப்பு இயந்திரங்களைத் தயாரிக்கின்றனர். ஆனால் வளர்ச்சியுறும் நாடுகளில் முதல் பற்றுக்குறையாக உள்ளது. ஆகவே வளர்ச்சியுறும் நாடுகள் உழைப்பு தீவிரப்படுத்தப்பட்ட தொழில் துறையைத்தான் பின்பற்ற வேண்டுமே அன்றி, உழைப்பின் சேமிப்பு இயந்திரங்களைப் பயன்படுத்தக்கூடாது.

### தர்மகர்த்தா முறையும், சமத்துவமும் (Trusteeship and Equality)

தர்மகர்த்தா முறை மற்றும் சமத்துவம் பற்றி அடிகளாரின் கருத்துகள் பின்வருமாறு அமைந்துள்ளன:

ஒருவன் தனது தேவைக்கு மேல் பொருள்களை வைத்திருப்பானால் அவன் திருடனாகக் கருதப்படுவான். இவ் வுலகில் கிடைக்கும் ஒவ்வொரு பொருளும் கடவுளால் அல்லது இயற்கையால் அளிக்கப்படுபவை ஆகும். ஆகவே அப் பொருள்கள் அனைவருக்கும் பொதுவானவையாகும். ஒவ்வொருவரும் தத்தம் அன்றாட தேவைகளுக்கு உரிய பொருள்களை மட்டுமே எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு பெற்றுக் கொண்டால் இவ் வுலகில்

வறுமையும், பட்டினிச் சாவும் இரா. தேவைக்குமேல் அதிக பங்கினை எடுத்துச் சேமித்து வைக்கக்கூடாது.

வணிகத்தின் மூலமாகவோ, தொழிற்சாலை மூலமாகவோ ஒருவன் அதிகச் சொத்து சேர்த்திருந்தால், அச் செல்வம், தன்னுடையதல்ல என்பதை மக்கள் உணர வேண்டும். ஒருவனின் தேவைக்கும் அதிகமான உபரிச் சொத்தானது பொது மக்களைச் சார்ந்ததாகும். அத்தகைய உபரிச் சொத்திற்கு அச் செல்வந்தன் தர்மகர்த்தாவாக விளங்கி அச் சொத்தினைப் பொது மக்களின் நல் வாழ்வுக்காகப் பயன்படுத்த வேண்டும். இம் முறையையே காந்தி அடிகள் 'தர்மகர்த்தா முறை' எனக் கூறுகின்றார்.

மேற்கூறிய தர்மகர்த்தா முறை பொதுவுடைமைத் தத்துவத்திலிருந்து வேறுபட்டதாகும். பொதுவுடைமைத் தத்துவத்தில் தனியார் சொத்துரிமை இல்லை. அங்கு தேவைக்குமேல் அதிகமாக வைத்திருக்கும் உபரிச் சொத்தானது வன்முறையாக அபகரிக்கப்படும். ஆனால் காந்தியடிகள் வன் முறையை விரும்பியதே யில்லை. எனவே அஹிம்சை முறையில் அமைந்த தர்மகர்த்தா முறையினை அண்ணல் பரிந்துரைக்கின்றார். அஹிம்சை முறையில் சுரண்டல் தவிர்க்கப்பட்டு சமதர்ம சமுதாய முறைக்கு வழி வகுக்கப்படுகின்றது.

இத் தர்மகர்த்தா முறையினை அரசு மக்களிடையே திணிக்கக் கூடாது. இம் முறையானது மக்களிடமிருந்தே ஆதரவு பெற்று வளர வேண்டும். தர்மகர்த்தா முறையின் நன்மைகளை நன்குணர்ந்து மக்கள் தன்னிச்சையாக அதனைப் பின்பற்ற வேண்டும். அவ்வாறிருந்தால்தான் அம் முறை நிலைத்து நிற்கும். இதுபோல மக்களால் ஏற்படுத்தப்பட்ட இம் முறைக்கு அரசு பாதுகாவலனாக விளங்க வேண்டும்.

### தொழில்கள் பரவலாக்குதல்

தொழில்கள் நாடு பூராவும் பரவி இயங்க வேண்டும் என்னும் கொள்கையை காந்தியடிகள் ஆதரிக்கின்றார். தொழில்கள் பெரிய நகரங்களில் குவியக்கூடாது. அவ்வாறு ஒரு சில பகுதிகளில் குவிவதால் வருமான ஏற்றத்தாழ்வும், வட்டார ஏற்றத்தாழ்வும் உருவாகின்றன. தொழில்கள் பரவலாக்கப்படுமாயின் நாட்டின் எல்லாப் பகுதிகளும் சீரான முறையில் வளர்ச்சி பெறும். தொழில்களை ஏன் பரவலாக்க வேண்டும் என்பதற்குப் பின்வரும் இரண்டு காரணங்களை காந்தியடிகள் கூறுகின்றார்.[1]

1 'புதியதோர் உலகு செய்வோம்'- (சர்வோதய தத்துவம் — சில குறிப்புகள்)—T.D. திருமலை.

(i) இந்தியப் பண்பாட்டின் நல்லவையெல்லாம் கிராம வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டவை. எனவே இந்தப் பண்பாட்டைக் காப்பாற்ற வேண்டும்.

(ii) வாழ்க்கை வசதிக்கு வேண்டிய சிலவற்றை நகரங்களி லிருந்து பெறுவதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் அடிப்படைத் தேவைகளுக்கு நகரங்களையே எதிர்பார்க்கும் நிலையை என்னால் சகிக்க முடியாது.

மேலும் ஒரு கிராமம் அரசியல் உரிமை பெற்றால் மட்டும் போதாது. அதன் பொருளாதாரமும் தன்னிறைவு பெற்றிருக்க வேண்டும். அரசியல் அடிமைத்தனம், பொருளாதார அடிமைத் தனத்தையும், பொருளாதார அடிமைத்தனம், அரசியல் அடிமைத் தனத்தையும் விளைவிக்கும். எனவே இரண்டு துறைகளிலும் சுய நிர்ணயம் வேண்டும். மக்களுக்கு தேவையான எல்லாமே கிராமத்தில் உற்பத்தியாக வேண்டும். முக்கியமாக உணவு, உடை, இருப்பிடம் இம் மூன்றிலாவது அது பிறரைச் சாராமல் இருக்க வேண்டும். கிராம சமுதாயத்திற்கு அடிப்படை விவசாயமே! எனவே வேளாண்மை சார்ந்த தொழில்கள் வளர வேண்டியது இன்றியமையாதவை. தொழில் பரவலாக்குதல் மூலம் தொழில் களை கிராமப்புறங்களில் தொடங்குவதால், சமத்துவமும், சமமான வட்டார வளர்ச்சியும் ஏற்படும்.

இதுவரை நாம் ஆய்ந்தவைகளினின்று மூன்று முக்கிய கருத்துகள் புலனாகின்றன!

(i) வேலையின்மைப் பிரச்சினையைத் தோற்றுவிக்கக்கூடிய இயந்திரங்களை காந்தியடிகள் வெறுத்தார்.

(ii) வருமானம் மற்றும் வட்டார ஏற்றத்தாழ்வுகளை நீக்கிட சிறு தொழில்களையும், கிராமத் தொழில்களையும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் தொடங்கி தொழில் பரவலாக்கும் முறையை ஆதரித்தல்.

(iii) சமதர்ம சமுதாயம் ஏற்படுவதற்கும் சுரண்டலைத் தவிர்ப்ப தற்கும் தர்மகர்த்தா முறையினை ஆதரித்தார் என்பதும் விளங்கும்.

பின்னிணைப்பு II

# ஜப்பான் அனுபவத்திலிருந்து அறிய வேண்டிய சில பாடங்கள்

சென்ற நூற்றாண்டுகளில் குறிப்பாகச் சென்ற இருபது ஆண்டு களில் ஜப்பான் தொழில்துறையில் அடைந்துள்ள முன்னேற்றத் தைக் கண்டு பல நாடுகள், குறிப்பாக ஆசிய நாடுகள் அத னுடைய வழிமுறையைப் பின்பற்ற விரும்புகின்றன. தேக்க நிலையி லுள்ள விவசாயப் பொருளாதாரத்தை எவ்வாறு இயக்கநிலை தொழில்துறைப் பொருளாதாரமாக மாற்றுவது என்பதுதான் இன்று பின் தங்கிய நாடுகளை எதிர் நோக்கியுள்ள முக்கியப் பிரச்சினை ஆகும். இரண்டாவது உலகப் போர் நடந்த 25 ஆண்டுகளுக்குப் பின் இன்று ஜப்பான் உலகின் பொருளாதார வளத்தில் மூன்றாவது பெரிய நாடாக விளங்குகின்றது எஃகு, விசைவண்டிகள் போன்ற கனரகங்களின் உற்பத்தியில் முதலாவதாக விளங்கு கின்றது. அந்நாட்டில் ஓராண்டுக்கு பொருளாதார வளர்ச்சி வீதம் கடந்த 15 ஆண்டுகளாக 9·5 சதவீதமாக உள்ளது. அதனு டைய பொருளாதார வளர்ச்சி போற்றத்தக்கதாக மட்டுமல்லாமல் முன்னேறிய நாடுகளும், வளர்ச்சியுறும் நாடுகளும் பொறாமைப் படத்தக்க நிலையில் உள்ளது.

ஜப்பானின் நூறு வருட வளர்ச்சியை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

(i) இளஞ் சக்கரவர்த்தி மைஜியை (Meiji) மீண்டும் அரச பதவியில் அமர்த்தியபொழுது ஜப்பான் பொருளாதார வளர்ச்சிப் பாதையில் கால் எடுத்து வைத்தது.

(ii) இரண்டாவது பகுதி ஜப்பான் 1945-ல் நேச நாடுகளிடம் தோற்றதிலிருந்து ஆரம்பிக்கின்றது.

ஜப்பானும் இந்தியாவும், ஒரே சமயத்தில்தான் தங்கள் நாடுகளைத் தொழில் மயமாக்கத் தொடங்கின. இந்தியாவில் இருப்புப் பாதை போட்ட ஐந்து வருடங்களுக்குப் பிறகுதான் ஜப்பானில் டோக்கியோவிற்கும்—யோக ஹாமாவிற்கும் இடையே முதல் இருப்புப் பாதை போடப்பட்டது. அந்தச் சமயத்திலேயே இந்தியாவில் நெசவுத் தொழிற்சாலைகள் சிறந்து விளங்கின. ஆனால் 19-ம் நூற்றாண்டின் இறுதிக்குள் ஜப்பான் தொழில்துறை வளர்ச்சியில் இந்தியாவை முந்தி விட்டது. முதல் உலகப் போருக்கு முன் ஜப்பான் எந்நிலையில் இருந்ததோ அந்நிலையில்தான் இந்தியா இன்று உள்ளது.

1945-ல் நேச நாடுகளிடம் தோற்றாலும் மனம் தளராமல் மறுபடியும் தனது ஆக்க வேலைகளில் ஜப்பான் ஈடுபட்டது. இரண்டாம் உலகப் போருக்கு முன்னாலேயே தொழில்துறை முன்னேறியிருந்ததால் புதிய இயந்திரங்களை தயாரித்து, நவீன முறையில் தொழில் துறையை மேலும் புதுப்பிக்கத் தொடங்கியது. மேலும் இறக்குமதி செய்யப்பட வேண்டிய இயந்திரங்களுக்கு அயல் நாட்டுச் செலாவணி பெற்று, பின் அவ்வியந்திரங்களை இறக்குமதி செய்தது. இது தவிர அமெரிக்காவும் பொருளாதார உதவி செய்து வந்தது. எனினும் இப் பொருளாதார உதவியை இரு முறைதான் பெற்றுக் கொண்டது. ஏதாவது ஒரு வகை இயந்திரம் அதிக அளவில் தேவையிருந்தால் அவைகளுள் சிலவற்றை மட்டுமே இறக்குமதி செய்து, பின்னர் அவ்வியந்திரங்களைப் போன்ற இயந்திரங்களை சில மாறுதல்களுடன் விரைவில் தம் நாட்டிலேயே உற்பத்தி செய்து தேவையைப் பூர்த்தி செய்து கொண்டனர். தொழில் நுணுக்கத்தில் மற்ற நாடுகளுடன் கூட்டுச் சேர்ந்து தனது தொழில் வளர்ச்சியை விரைவுபடுத்தியது.

1964-ல் அந்நியக் கூட்டுறவு நிறுவனங்களுடன் (Foreign Collaboration) தொடர்பு கொண்டு, 66 நிறுவனங்கள் அமெரிக்காவின் உடனுழைப்பால் அமைக்கப்பட்டன. 1965-ல் இது 48க்கு குறைந்தது.

**ஜப்பானின் முன்னேற்றத்திற்கு முக்கிய காரணங்கள்**

தென்கிழக்கு ஆசிய நாடுகளைப் போல் ஜப்பான் குடியேற்ற ஆதிக்கத்திலிருக்கவில்லை, (Colonial Status), மற்ற நாடுகளைப் போல் ஜப்பானும், விவசாய நாடாகத்தான் விளங்கியது. பட்டு, தேயிலை, முதலியன அதன் முக்கிய விளைபொருளாகும். இவ்விரண்டு பொருள்களால் கிடைத்த அந்நியச் செலாவணியைக் கொண்டு தொழில் துறைக்கு வேண்டிய இயந்திரங்களை இறக்குமதி

செய்து கொண்டது. ஆனால் குடியேற்ற ஆதிக்கத்திலிருந்த ஆசிய நாடுகள் இவ்வாறு செய்ய முடியவில்லை. குடியேற்ற நாடுகளின் முக்கிய மூலப்பொருள்கள் தாய்நாட்டிற்கு ஏற்றுமதிசெய்யப் பட்டன. தாய்நாட்டின் வினைமுற்றிய பொருள்களுக்குக் குடியேற்ற நாடுகளே அங்காடியாக விளங்கின. இதே கதிதான் இந்தியாவிற்கும் ஏற்பட்டது. இராணுவத் தேவைக்காக ஒருசில தொழிற்சாலைகளும், இருப்புப் பாதையும், சாலைப் போக்குவரத்தும் அமைக்கப்பட்டன. மேலும் இந்நாடுகளில் கிடைக்கும் இலாபம் மறுபடியும் முதலீடு செய்யப்படுவதில்லை. கிடைக்கின்ற இலாபம் முழுவதும் தாய் நாட்டிற்கே அனுப்பப்பட்டுவிடும்.

குடியேற்ற நாடுகளில் அரசாங்கம் மற்றும் தொழில் துறையில் அந்நியர்களே முக்கியமான பதவிகளில் அங்கம் வகித்தனர். இவர்கள் அந்நாட்டு மக்களுக்குக் கல்வியறிவு கொடுப்பதுபற்றியும், தொழில் துறையில் பயிற்சி அளிப்பது பற்றியும் அக்கறை கொள்ளவில்லை. ஆனால் 19ம் நூற்றுண்டின் இறுதியிலேயே ஜப்பான் கல்வித் துறையில் சிறப்பாக முன்னேறியிருந்தது. மேலும், தன் நாட்டு மக்களை வெளிநாட்டிற்கு அனுப்பி தொழில் கல்வியினை அறிந்து வரச் செய்தது.

குடியேற்ற நாடுகளில் தாய் நாட்டிலிருந்து ஆடம்பரப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. எனவே அந்நாடுகளில் இயந்திரப் பொருள்களை இறக்குமதி செய்ய முடியவில்லை. ஆனால் ஜப்பான் பட்டு, தேயிலை போன்றவற்றின் ஏற்றுமதியால் கிடைத்த அந்நியச் செலாவணி கொண்டு தனக்குத் தேவையான இயந்திரங்களை இறக்குமதி செய்து கொண்டது.

ஜப்பான் ஏற்கெனவே இருந்த சிறுதொழில்களைச்சிதைக்காமல், அவற்றையே நவீனப் பாணியில் மாற்றியமைத்து, முன்னேற்றமடையச் செய்தன. ஆனால், இந்தியா தனது தொழில்துறை முன்னேற்றத்திற்கு சிறு தொழில்களைப் பலியிட்டது.

அடுத்தபடியாக, ஜப்பானியரின் தாய்நாட்டுப்பற்றினைக் கூறலாம். 19ம் நூற்றுண்டின் இறுதியில் சீனவுடன் போராடி அடைந்த வெற்றியும் 1905ல் ரஷ்யாவுடன் போராடி அடைந்த வெற்றியும் அதனைத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்தன. மேலும் ஜப்பானியர்கள் ஒழுக்க சீலர்கள். ஏதாவது புதுமைகளைப்பற்றி அறியவேண்டும் என்ற ஆவல் உடையவர்கள், கடினமாக உழைக்கக் கூடியவர்கள்.

இது தவிர, முக்கிய உற்பத்திக் காரணியான மூலதனத்தை விவசாயத் துறையிலிருந்து பெற்றுக்கொண்டிருந்தது. விவசாய

உற்பத்தி பெருகி தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. மேலும் ஜப்பானில் விவசாய வரி அதிகமாக இருந்தது. நிலவரி அதிக வருமானத்தைக் கொடுத்தது. பட்டும், தேயிலையும், அதிக அளவில் ஏற்றுமதி செய்ததால் அந்நியச் செலாவணி பெருமளவில் கிடைத்தது.

ஜப்பானின் வளர்ச்சியிலிருந்து ஆசிய நாடுகள் பல பாடங்களை அறிந்துகொள்ள வேண்டும். ஆசிய நாடுகளைப்போல ஜப்பானும் அந்தக் காலத்தில் ஒரு விவசாய நாடாகத்தான் விளங்கியது. வெளிநாட்டு இடையூறுகளான ரஷ்யா, சீனு போன்ற நாடுகளின் பகைமை இருந்து வந்தது. மக்கள் தொகையும் பெருகி வந்தது. இத்தகைய இடையூறுகளை யெல்லாம் வென்று, ஜப்பான் வெகு விரைவில் பொருளாதார முன்னேற்றம் காண முடிந்தது.

ஜப்பானின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருந்தவை சிறு தொழில்களாகும். ஜப்பான் இச்சிறு தொழில்கள் நசுங்கிவிடாமல் அவைகளையே நவீன இயந்திரங்களைக் கொண்டு புதுப்பித்தது. இதனுல் சிறு தொழில்கள் முன்னேறுவதற்கும் அவற்றை ஊக்குவிப்பதற்கும் ஜப்பான் பல்வேறு முயற்சிகளை எடுத்துக்கொண்டது.

**சிறு தொழில் வளர்ச்சிக்கு ஜப்பான் எடுத்துக்கொண்ட முயற்சிகள்**

(i) **விரிவான சட்ட திட்டங்கள்** (Comprehensive Legislation) சிறு தொழில் சம்பந்தமாக சுமார் 20 முதல் 25 சட்டங்களை ஜப்பான் தயாரித்துள்ளது. மேலும் அவை நடைமுறையில் செயலாற்றுவதற்குப் பல முடிவுகள் எடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் 'சிறு தொழில்களின் அடிப்படைச் சட்டம்,' (Basic Law of Small Enterprise) குறிப்பிடத்தக்கது. இதில் மற்றெந்த நாடுகளிலும் காணப்படாத சிறு தொழிலைப்பற்றிய விளக்கம் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் அரசியல் நிர்ணய சட்டத்திலும் சிறு தொழிலைப் பற்றிச் சரியான விளக்கம் தரப்படவில்லை. ஆனுல் ஜப்பானிலோ சிறுதொழில் ஆரம்பித்தால் உண்டாகும் நன்மையினை எவரும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் விவரிக்கப்பட்டுள்ளது. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட உதவித் தொகையும் தேசீய அளவில் இருந்ததால் இடத்துக்கு இடம் மாறுபடவில்லை.

(ii) **விரிவான இலக்கணம்** (Broad Definition): **எவை எவை** சிறுதொழில்களைச் சார்ந்தவை என்பதுபற்றி ஜப்பானில் **தெளிவாக** வரையறுக்கப்பட்டுள்ளது. முடி அலங்காரத் **தொழிலும்,**

அழகு படுத்தும் கடைகளும், விடுதிகளும், சிறுதொழில்களாகக் கருதப்படுகின்றன. இத் தொழில்களுக்கு மூலதனம் 10 மில்லியன் யென் (yen) ஆகவும் உற்பத்தித் தொழில்களுக்கு 50 மில்லியன் யென்னுகவும், வரையறுக்கப்பட்டுள்ளது. தொழிலாளர்களைப் பொறுத்த வரையில் முதலில் கூறியதற்கு, 50 பேர்களும், பின்னதற்கு 300 ஆகவும் வரையறுக்கப்பட்டுள்ளது. உண்மையிலேயே, சிறுதொழில் என்பது நடுத்தர அளவினதேயாகும். இதே கோட்பாட்டினை வைத்துப் பார்க்கும்பொழுது, ஜப்பானிலுள்ள சிறுதொழில் இந்தியாவிலுள்ள பெரிய தொழிலாகக் கருதப்படுகின்றது. இதிலிருந்து மிக அதிகமான தொழில்கள் சிறுதொழில்கள் வரிசையில் அடங்குவது விளங்கும். இதனுல் மிக அதிகமான தொழில்கள் அரசாங்கத்திடமிருந்து உதவி பெறுவதை உணரலாம்.

(iii) தொழில் நுட்பப் போட்டி (Aggressive Technical Competence) : ஜப்பானில் உள்ள சிறுதொழில் உரிமையாளர்கள் தங்களுக்கு ஏற்படும் போட்டியினைத் திறமையாகச் சமாளிக்கும் திறமையுடையவர்கள். இதனுல் அவர்கள் பெரிய தொழில் அதிபர்களிடம்கூட பேரம் பேசுகின்ற உன்னத நிலையில் உள்ளனர். மேலும், அவர்களுக்கு ஆலோசனை கூற அரசு பல்வேறு நிறுவனங்களை நிறுவியுள்ளது. இவை தொழில்துறை சம்பந்தமாக ஏற்படும் புதிய கருத்துகளை அவ்வப்பொழுது இவர்களுக்கு எடுத்துரைக்கின்றன. மேலும், பல்வேறு ஆராய்ச்சி நிலையங்களை நிறுவி, சிறுதொழில் சம்பந்தமாக எழும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு முயல்கின்றனர்.

(iv) நவீன மயமாக்குதல் (Modernisation) : தொழில்துறையில் ஏற்படும் மாறுதல்களை அவ்வப்பொழுது சிறுதொழில்துறைகளும் பின்பற்றுவதற்கு நிதி உதவி அளிக்கப்படுகின்றது. இத்தகைய மாறுதல்களைப்பற்றி தெரிவிப்பதற்காக, அரசு பல நிறுவனங்களை ஏற்படுத்தி உள்ளது. அவற்றின் முக்கிய நோக்கம் 'நவீன மயமாக்குதல், சீர்திருத்துதல்' என்பதாகும்.

(v) நிதி உதவி (Financial Assistance Programme) : பல்வேறு வகைகளில் சிறு தொழில் உரிமையாளர்களுக்கு நிதி உதவி கிடைக்கிறது. 'சிறுதொழில் முதலீட்டுக் கழகம்', (Small Business Investment Company) புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இது தவிர கடன்கள் பெறுவதற்கு 'மக்களுடைய நிதி இணைக் கழகம்', (People's Finance Corporation), 'சிறுதொழில் நிதி இணைக் கழகம்', (Small Business Finance Corporation) முதலியன உள்ளன. மேலும் இவர்கள், மைய வங்கியிலிருந்தும் (Central Bank) உதவி பெற்றுக்கொள்ளலாம். இது தவிர கடன்

உத்தரவாதமளிக்கும் கழகங்களும் அங்கு உள்ளன. இக் கழகங்கள் ஜப்பானில் 51 இருக்கின்றன. இவ்வாறு நிதி உதவி அளிப்ப தற்குப் பல்வேறு கழகங்கள் உள்ளன.

(vi) **கூட்டுறவுச் சங்கங்கள்** (Co-operative Associations): கூட்டுறவு முறையில் தொழிற்பேட்டைகளை (Industrial Estate) அமைப்பதற்கும் அரசு ஊக்கம் அளிக்கிறது. இது ஒரே தொழில் செய்பவர்கள் அல்லது அதனைச் சார்ந்த தொழில் புரிபவர் கள் கூட்டாகச் சேர்ந்து நடத்துவதாகும். இதற்குக் குறைந்தது இருபது நிறுவனங்களாவது சேர்ந்து உழைக்கவேண்டும். இவ்வாறு ஏற்படும் தொழிற்பேட்டைகளுக்கு அரசு தாராளமாக நிதி உதவி அளிக்கின்றது.

(vii) **உத்தம உற்பத்தித்திறன்** (Optimum Productivity-Mix): தொழிலாளர்கள், நிர்வாகிகள் முதலியோர்களின் உற்பத்தித் திறனைக் கூட்டுவதே ஜப்பானியர்களின் குறிக்கோளாகும். இதனை மனோதத்துவ அடிப்படையிலும் ஊக்குவிக்கின்றனர். சான்றாக, யாரேனும் ஒரு தொழிலாளி இயந்திரத்தில் ஒரு புதிய முன்னேற்றத்தைக் கண்டுபிடித்தால், அவர்களுடைய பெயரினைப் பலரறியப் பலகையில் எழுதுவதோடன்றிப் பணமும் பரிசாக அளித்து, ஊக்குவிக்கின்றனர். இதனால் தொழிலாளர்களுக்கு இயந்திரங்களை இயக்குவிப்பதோடன்றி அதனை முன்னேற்றவும் வேண்டும் என்ற முற்போக்கு எண்ணம் ஏற்படுகின்றது.

(viii) **உழைப்பு** (Labour): தொழிலாளர்களின் உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்கு முக்கிய காரணம், தொழிலாளர்களுக்கும், நிர்வாகத்தினருக்கும் இடையே உள்ள ஒற்றுமையாகும். நிர்வாகத் தினர் தொழிலாளர்களிடையே சேர்ந்து அளவளாவுவதோடு மட்டுமன்றி, அவர்கள் உணவு உண்ணும் இடத்திலேயே தாங்க ளும் உண்கின்றனர். மேலும், தொழிலாளர்களுக்கும் வீட்டு வசதி, உணவு, உடை, மருத்துவ வசதிகள் மற்றும் விடுமுறைகள் முதலியன கிடைக்கின்றன. இவ்வாறு தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் இடையே நல்லுறவு நிலவுவதால் அங்கே தொழில் அமைதி உள்ளது.

(ix) **மேற்பார்வையின்மை** (Lack of Line Supervision): தொழிலாளர்கள் தாங்கள் செய்யும் தொழிலின் மேல் பற்று தலும் கடின உழைப்பும் உடையவர்கள். ஆசிய நாடுகளில் உள்ளது போன்று வேலை செய்வதிலிருந்து நழுவும் வழிமுறை களைச் செய்யமாட்டார்கள். உண்மையில் நிர்வாகத்தினரே அவ் வப்பொழுது அவர்களுக்கு ஓய்வு அளிக்கின்றனர். ஆதலால் ஜப்பானில் மேற்பார்வையாளர்கள் தேவையில்லை மேற்பார்வை

யிருப்பதே பொதுவாக தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் ஒரு பகைமை ஏற்பட வழிவகுக்கும். இப்பகைமை ஜப்பானில் தவிர்க்கப்படுகின்றது.

(x) இதர நற்குணங்கள் (Miscellaneous) : இவை தவிர சமூக இடையூறுகள் இல்லாததாலும் தொழில் துறையில் ஜப்பான் வெகு விரைவில் முன்னேறியது. மேலும், அவர்கள் எளிய வாழ்க்கை நடத்துவதால் அவர்களுக்கு வாழ்க்கைக்குத் தேவையானவற்றை எளிதில் பெற முடிகிறது. மேலும் சிறுதொழில் அதிபர்கள் ஒரு கழகமாக ஒன்றுபட்டு இருப்பதால் அரசிடம் தங்கள் தேவைகளை வலியுறுத்த முடிகின்றது. ஆனால் இந்தியா, ஆசிய நாடுகளில் சிறுதொழில்கள் சிதறிக்கிடப்பதோடல்லாமல் தனித்தனியே பிரிந்தும் உள்ளன. இதனால் இத்தொழில் அதிபர்கள் தங்கள் தேவைகளை அரசிடம் வற்புறுத்த முடியாத நிலையில் உள்ளனர்.

பின்னிணைப்பு III

# ஃபோர்டு அறக்கட்டளைக் குழு

அல்லது

# பன்னாட்டுத் திட்டக் குழுவின் பரிந்துரைகள்

## (FORD FOUNDATION TEAM OR INTERNATIONAL PLANNING TEAM'S RECOMMENDATIONS)

இந்தியாவில் தொழில்துறை உற்பத்தியைப் பெருக்குவதிலும், வேலை வாய்ப்பினை அதிகரிப்பதிலும் உள்ள சாத்தியக்கூறுகளைக் கண்டு ஆய்ந்து அறிக்கை சமர்ப்பிக்கும்படி 1953-ல் பன்னாட்டுத் திட்டக் குழுவினை இந்திய அரசின் வாணிக மற்றும் தொழில் துறை அமைச்சு (Ministry of Commerce and Industry) வேண்டிக் கொண்டது. இக் குழுவிற்குப் ஃபோர்டு அறக்கட்டளை உதவி கிட்டியமையால் ஃபோர்டு அறக்கட்டளைக்குழு என்ற ஒரு பெயரும் உண்டு. இக்குழு இந்தியாவிற்கு 1954-ல் வந்தது. திரு ஸ்வென் ஹெக்பெர்க் (Mr. Sven Hagberg) என்பார் தலைமையில் அமைந்த ஐந்து பேர் அடங்கிய இக் குழு தொழில் துறையின் பல்வேறு பிரிவுகளை—உற்பத்தி, தொழில்துறை வளர்ச்சி, கூட்டுறவு சங்கங்கள், நிதி, வடிவமைப்பு, அங்காடி பற்றி ஆராய்ந்து பல பரிந்துரைகளை வழங்கியது.

### குழு கண்டறிந்த சில உண்மைகள்

இந்திய அங்காடி நன்கு விரிவடைந்த அங்காடியாகும். நகரங்களிலும், கிராமங்களிலும் பரவியுள்ள சந்தைகளை மேலும் வளர்ச்சி அடையச் செய்தால் உலகே கண்டிராத ஒரு தொழில் புரட்சியை ஏற்படுத்தும் திறன் உடையதாக விளங்கும். அத்துடன்

உலகிலேயே மிகச் சிறந்த உற்பத்தி மற்றும் நுகர்வு மையமாக இந்தியாவை ஆக்கவல்ல வல்லமையும் பெற்றுள்ளது.

இதுகாறும் வேளாண்மைத்துறைக்கு முன்னுரிமை அளித்துள்ளதால் அத்துறை ஓரளவுக்கு முன்னேறியுள்ளது. ஆனால் சிற்றளவுத் தொழில் துறையின் பொருள்களுக்கொத்த தேவையும், உற்பத்தியும் எதிர் பார்த்ததிற்கும் குறைவாக உள்ளது இதனால் அத்துறையில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு நல்ல கூலியும் கொடுக்கமுடியவில்லை; அவர்களது வாழ்க்கைத் தரத்தை முன்னேற்றவும் முடியவில்லை. இவ்வாறாகச் சிறுதொழில் துறையில் ஒரு சிக்கலான நிலையுள்ளது.

இக் குழுவின் கூற்றுப்படி சிற்றளவுத் துறை படிப்படியாக நசித்து வருவதற்குக் காரணம் என்னவென்றால்,

(i) சிற்றளவுத் தொழில் துறையின் அதிபர்களுக்கு எவ்வித ஊக்கமும், குறிக்கோளும் இல்லை;

(ii) அனைத்திற்கும் அரசையே சார்ந்திருத்தல்;

(iii) பழமையான உற்பத்தி மற்றும் விற்பனை முறை;

(iv) போதிய கடன் வசதி இல்லாமை;

(v) முன்னேற்றத்தின் பொருட்டு முறைப்படி அணுக இயலாமை;

எனவே, சிற்றளவுத் தொழில்துறையைச் சீர்திருத்தி அமைத்தல் இன்றைய இன்றியமையாத் தேவையாகும். சிற்றளவுத் தொழில் துறையைச் சீர்திருத்தி அமைப்பதிலும், நவீனமயமாக்குவதிலும் காலவிரயம் ஏற்பட்டால் அத்துறை ஒரு தேக்க நிலையை அடையும் என்பதில் ஐயமெதுவுமில்லை.

'நவீன மயமாக்குதல்' என்பது வேலையில்லாத் திண்டாட்டத்தில் முடியும் என்றஞ்சுவது தவறாகும். உண்மையில் பழமையான முறைகளைப் பின்பற்றுவதால் கிட்டக்கூடிய வேலை வாய்ப்பினை விட, நவீன மயமாக்கினால் ஏற்படக்கூடிய வேலை வாய்ப்பு அதிகமாக இருக்கும். நவீன மயமாக்குவதால் நல்ல, தரமுள்ள பொருள்களுக்கு குறைந்த செலவில் உற்பத்தி செய்யலாம். இதனால் தேவை, அங்காடி, வேலை வாய்ப்பு முதலியன பெருகுகின்றன. இத்தகைய நன்மைகளை நன்கு உணராததால் இன்று இந்தியாவில் சிற்றளவுத் தொழில்துறை தேங்கிய நிலையில் உள்ளது. எனவே, இப்போது உள்ள நல்ல வாய்ப்பினைப் பயன்

படுத்திக்கொள்வதற்குச் சிற்றளவுத் தொழில்துறையினை நவீன மயமாக்குதல் இன்றியமையாத ஒன்றாகும்.

நிலையான தொழில்துறை வளர்ச்சி காண்பதற்குத் தனியார் துறையை ஊக்குவித்தல் மிகவும் அவசியமாகும் இதில் அரசிற்கு முக்கிய பங்குண்டு. தொழில் வளர்ச்சியின் ஆரம்ப காலத்தில் சிறு தொழில் உரிமையாளர்களுக்கு நிர்வாகப் பயிற்சி, கட்டுப் பாடுகள் போன்றவற்றில் வழிகாட்டி, தக்க முயற்சிகளை மேற் கொள்ள வேண்டியது அரசின் பொறுப்பாகும். தான் தனியார் துறைக்கு உதவுவதில் பேரவா கொண்டுள்ளதை வெளிப்படுத்து கின்ற அதே வேளையில், குறிப்பிட்ட காலம் கழித்து, தான் அளித்த வசதிகளை, நிறுத்திக்கொள்ளவும் நேரிடலாம் என்பதையும் தொழில் துறையினருக்கு உணர்த்த வேண்டும். பொறுப்புடைய சுதந்தரமான சிறு தொழில்களின் படிப்படியான வளர்ச்சியானது கைவினைக் கலைஞருக்குச் சமூகத்தில் சிறப்பினையும் சிறுதொழில் அதிபர்களுக்குத் தற்சார்புத் தன்மையையும் உருவாக்கும். காலப் போக்கில் இது இந்தியாவில் சமூக பொருளாதார வளர்ச்சிக்கு நல் விளைவுகளை ஏற்படுத்தும்.

இவ்வாறாக இக் குழு சிற்றளவுத் தொழில்துறையின் பல்வேறு பிரச்சினைகளையும் ஆராய்ந்து, பின்வரும் பரிந்துரைகளை வழங்கி யுள்ளது.

**பரிந்துரைகள்**

(1) **பல்நோக்குத் தொழில் நுட்பக் கழகங்களை அமைத்தல்** (Multi-Purpose Institutes of Technology):

இவ் வகைத் தொழில் நுட்பக் கழகங்கள் இந்தியாவின் நான்கு முக்கியமான பகுதிகளில் அமைக்க வேண்டும். இக் கழகத்தின் முக்கியமான பணிகள் யாதெனில்;

(i) சிற்றளவுத் தொழில்துறைபின் உற்பத்தியைப் பெருக்கு வதற்கு, தொழில் நுட்பம், இயந்திர சாதனங்கள் மூலப் பொருள் கள், நல்ல தரமான பொருள்கள், அங்காடியை சீர்திருத்தல், கடன் வசதி அளித்தல் போன்றவற்றைப் பற்றிப் பல்வேறு ஆராய்ச்சி யையும், ஆய்வுகளையும் செய்தல்.

(ii) இவ் வாராச்சியினாலும், ஆய்வினாலும் கண்டறிந்த முடிவுகளை உடனுக்குடன் சிறுதொழில் அதிபர்களுக்கு அறிவிக்க வேண்டும். இதற்காக அவர்களுக்குக் குறுகியகாலப் பயிற்சி வழங்குதலும், நடமாடும் பயிற்சி நிலையங்களும், பல்வேறு இடங்

களுக்குப் பயணம் செய்யும் நீட்சிப் பணிபாளர்களும் நியமிக்க வேண்டும். சிற்றளவு தொழில்துறையில் சிறந்து விளங்கும் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும்.

ஒவ்வொரு கழகத்திற்கும், ஓர் இயக்குநரும், நன்கு பயிற்சி பெற்ற ஊழியர்களும், ஒரு சிறிய ஆலோசனைக் குழுவும் நியமிக்க வேண்டும். இந் நான்கு தொழில் நுட்பக் கழகங்களைக் கட்டுப் படுத்தி வழிகாட்ட மைய நிறுவனத்தில் நிர்வாகி ஒருவர் இருக்க வேண்டும்.

(2) **கைவினைப் பொருள்களின் தரத்தை உயர்த்துதல், அப் பொருள் களின் வடிவமைப்பு முறையை மாற்றுதல்:**

சிற்றளவுத் தொழில் பொருள்களின் விற்பனையை அதிகரிக்கக் கீழ்கண்ட நடவடிக்கைகளை உடனடியாக எடுக்க வேண்டும்.

(i) நல்ல வடிவமைப்பும், தொழில் நுட்பச் சிறப்பும் உள்ள பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும்.

(ii) அப்பொருளுக்கான மூலப் பொருள்களை அளிக்கவல்ல அமைப்புகள் ஏற்படுத்த வேண்டும்.

(iii) உள் நாட்டிலும், வெளி நாட்டிலும் விற்பனையை அதிகரிக்க வேண்டும்.

இதற்காகக் கீழ்க்கண்ட மூன்று நிறுவனங்களை அமைக்க வேண்டும்.

(i) **தேசிய வடிவமைப்புப் பள்ளி (National School of Design):** உற்பத்தித் துறையில் பல வடிவமைப்புகளையும், தினுசுகளையும் உருவாக்கவல்ல நிலையமாக இது விளங்க வேண்டும். இப் பள்ளி யின் முக்கிய பணி புதிய வடிவமைப்புகளைத் தயாரித்தல் ஆகும். இதன் பொருட்டு, இப் பள்ளியில் அமைந்த பணிமனையானது, திருந்திய மாதிரி முறைகள், வணிக ரீதியில் உற்பத்தியைப் பெருக்குதல், கண்டு பிடிக்கப்பட்ட மாதிரிகளை நடைமுறைக்குக் கொண்டு வருதல்—போன்றவற்றில் ஈடுபட வேண்டும் மேலும், இப் பள்ளி நல்ல வடிவமைப்பாளர்களுக்குப் பயிற்சி வசதியையும், இதர வகை ஆராய்ச்சி வசதிகளையும், மேற்கொள்வதோடன்றி, கண் காட்சிகள் நடத்துதல்; தகவல் பணிகளை ஆற்றுதல்; கைவினை ஞர்கள், வடிவமைப்பாளர்கள், பொது மக்கள் போன்ற முத்தரப் பினரும் தொடர்பு கொள்ளவும், வசதி செய்ய வேண்டும்.

(ii) **வாடிக்கையாளரின் பணி இணைக்கழகம் (Customers Service Corporation):** இவ்விணைக் கழகம் உற்பத்திப் பொருள்

களை அளிக்கவல்ல திருப்திகரமான ஓர் அமைப்பாக விளங்குவதோடன்றி, இந்திய, வெளி நாட்டு நுகர்வோரின் கொள்முதல் பணிகளுக்கும் உதவிட வேண்டும். நடப்பு உற்பத்தி, உற்பத்திக் கொள்ளளவு போன்றவற்றில் ஆய்வுகளையும்; இந்திய வெளிநாட்டு வாடிக்கையாளர்களுக்குத் தகவல்களையும், மாதிரிகளையும் அளித்தல்; அவர்கள் பொருட்டு கொள்முதல் செய்தல், வாடிக்கையாளரின் முகவராகச் செயல்படுதல், கைவினைஞர்களுக்குத் தேவையான கடன், நடைமுறை மூலதனம் போன்றவற்றைப் பெறுவதில் உதவுதல் என்பன போன்ற பல பணிகளை இவ்விணைக்கழகம் ஆற்றிட வேண்டும்.

(iii) **ஏற்றுமதி வளர்ச்சி அலுவலகங்கள்** (Export Development Offices : கைவினைப் பொருள்கள், கலை வண்ணப் பொருள்கள் போன்றவைகளின் பன்னாட்டு வணிகத்தைப் பெருக்குதல்; வெளி நாட்டு நுகர்வோரின் தேவைக்கேற்ற பொருள்களை வாங்கி அளித்தல், வளர்ச்சி நடவடிக்கைகளில் ஈடுபடல், என்பன போன்ற பணிகளை இவ்வலுவலகம் கவனிக்கும். வட அமெரிக்காவில் ஒன்றும், ஐரோப்பாவில் ஒன்றுமாக இத்தகைய ஏற்றுமதி வளர்ச்சி அலுவலகங்கள் அமைக்க வேண்டும்.

### (3) கடன் மற்றும் நிதி உதவிகள்

இக் குழுவின் கூற்றுப்படி, சிற்றளவுத் தொழில்துறை வேண்டிய மூலதனமும், கடன் வசதியும் இல்லாமல் தவிக்கின்றது. பொதுவாக, மூலப் பொருள்கள் வாங்குவதற்குத் தேவையான மூலதனம் சிறுதொழில் அதிபர்களிடம் இருப்பதில்லை. இதற்குக் காரணம், குறைந்த உற்பத்தித் திறனும், பல தொழில்களில் மக்கள் எண்ணிக்கைப் பெருக்கமும் ஆகும். வணிக வங்கிகள் அவர்களுக்குக் கடன் வசதி அளிப்பதில்லை. எனவே, சிற்றளவுத் தொழில்துறைக்கு நிதி உதவி அளிப்பதற்குக் கீழ்கண்ட பரிந்துரைகளை வழங்கியுள்ளது.

(a) வணிக வங்கிகள் கிராமப் புறங்களில் கிளைகளை ஆரம்பிக்க வேண்டும். அத்துடன் சிறு தொழில்களுக்குக் கடன் வழங்கிட கிராமக்கிளை வங்கிகளுக்குத் தேவையான அதிகாரங்களைத் தலைமை வணிக வங்கிகள் வழங்க வேண்டும்.

(b) வணிக வங்கிகள் வட்டார இயக்குநர் குழுவை நியமிக்க வேண்டும். அது சாத்தியமாகவில்லையெனில் வட்டார ஆலோசனைக் குழுக்களை நியமிக்கலாம். கிளை வங்கியின் நிர்வாகிக்கும் ஆலோசனைக் குழுவிற்கும் இடையே கடன்கோரி வந்த மனுவின்

மேல் சிக்கல் எழுந்தால், முடிவு பெறும் பொருட்டு மேலிட அதிகாரிகளை அணுக வேண்டும்.

(d) ஐந்தாண்டுத் திட்டத்தில் சிற்றளவுத் தொழில்துறைக்கு ஒதுக்கிய நிதியிலிருந்து ஒரு பகுதியைச் சிற்றளவுத் துறைக்குக் கடன் வசதி அளிப்பதற்கும் பயன்படுத்த வேண்டும். இந் நிதியிலிருந்து கணிசமான தொகையினை மாநில நிதி இணைக் கழகங்களுக்கு அளிக்க வேண்டும்.

(e) சிற்றளவுத் தொழில்துறைக்குக் கடன் வசதியை அதிகரிப்பதற்காக மாநில நிதி இணைக்கழகங்களை, எல்லா மாநிலங்களிலும் அமைக்க வேண்டும்.

(f) நவீன இயந்திரங்களும், சாதனங்களும் வாங்குவதற்குத் தவணை முறையில் கடன்வசதி அளிக்கப்பட வேண்டும்.

## (4) வணிகச் சங்கங்கள் (Trade Associations)

தற்சமயம் ஒரு சில வணிகச் சங்கங்களே உள்ளன. சில சங்கங்கள் பெயரளவிற்கு மட்டுமே இயங்குகின்றன. இச்சங்கங்களை நன்கு திருத்தி அமைப்பதின் மூலம் நவீன உற்பத்திமுறை பற்றிய கருத்துக்களைச் சிறுதொழிலதிபர்களிடையே பரப்புவதற்குரிய செய்தி மையங்களாக அமைந்திடலாம் என்பதில் ஐயமில்லை. அதன் பொருட்டு கீழ்கண்ட நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

(1) தற்சமயம் உள்ள உள்ளூர், மாநில, தேசிய வணிகச் சங்கங்களை நன்கு முன்னேற்ற வேண்டும்.

(2) இச் சங்கங்கள் புதிதாக ஆரம்பிப்பதற்கும் தொழிலதிபர்கள் தங்கள் பிரச்சினைகள் பற்றி விவாதிப்பதற்கும் மாநில, மற்றும் மத்திய அரசு சிறுதொழில் அதிபர்களை ஊக்குவிக்க வேண்டும்.

## (5) கூட்டுறவுச் சங்கங்கள்

கூட்டுறவு அமைப்பு ஒரு தனி மனிதனால் செய்ய முடியாத பல்வேறு பணிகளைச் செய்யும் திறன் உடையதாகும். கூட்டுறவு மனப்பான்மை மக்களிடமிருந்துதான் தோன்றி வளரவேண்டும். கூட்டுறவு அமைப்பினை அரசே ஏற்படுத்தினால் அம் முயற்சி வெற்றி அளிக்காது. கூட்டுறவு அமைப்பு வளர்வதற்குரிய நடவடிக்கைகளைத்தான் அரசு எடுக்க வேண்டும். இதற்காக கூட்டுறவு அமைப்பு பற்றிய கல்வியும், பயிற்சியும் மக்களுக்கு அளித்தல்

அவசியம். அம் முயற்சிக்கு உறுதுணையாக இருக்கும் பொருட்டு கீழ்வரும் பரிந்துரைகளை ஃபோர்டு அறக்கட்டளைக்குழு வழங்கியுள்ளது.

(a) கூட்டுறவு அமைப்பில் நேரடியாகப் பங்கு கொள்வதை அரசு படிப்படியாகக் குறைத்துக்கொள்ள வேண்டும். கூட்டுறவு அமைப்பு பற்றிய கல்வி அறிவினை வளர்த்தல் அதன் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும்.

(b) 'மக்கள் தொடர்புத் திட்டம்' (Public Relations Programme) ஒன்றினை அமைத்து, கூட்டுறவு அமைப்பு பற்றி மக்களுக்கு விவரமாக எடுத்துக்கூறவேண்டும். இம்முறை மக்கள் உள்ளத்தில் கூட்டுறவு அமைப்பு பற்றி ஏற்பட்டுள்ள தவருன கருத்துகளையும், மறுப்புணர்வினையும் நீக்கிட உதவும்.

(c) ரிசர்வ் வங்கி ஏற்படுத்தியுள்ள கூட்டுறவு அமைப்பு பற்றிய பயிற்சி வசதிகள் மேலும் விரிவாக்கப்பட வேண்டும்.

(d) குறுகியகாலக் கூட்டுறவுத்துறை பற்றிய பல கருத்தரங்குகள் போன்றவற்றை ஒவ்வொரு மாநிலத்திலும் ஏற்படுத்த வேண்டும்.

(e) கூட்டுறவுகளின் ஆராய்ச்சி மற்றும் பணிகள் பற்றிய துறை ஒன்றை நிறுவி அதனை உரிய அமைச்சின் கட்டுப்பாட்டிலோ அல்லது இதர அரசு அமைப்பிலோ கொணர்ந்து கூட்டுறவு பற்றிய கருத்துகளை வளர்த்து ஆய்வுகள் மேற்கொள்ள வேண்டும்.

(6) தொழில்துறை முறை (Industrial Process)

பொருள்களின் உற்பத்தி அதிகமாக இருந்தால்தான் அதிக அளவில் மக்களுக்குப் பகிர்ந்து அளிக்க முடியும். இதனுல் செல்வமும், கூலியும், வேலைவாய்ப்பும் அதிகரிக்கின்றன. இத்தகைய நடைமுறை ஓர் இரவினில் தோன்றக் கூடியதல்ல இது படிப்படியாக வளர்ச்சியடைய வேண்டிய ஒன்ருகும்.

இத்தகைய அடிப்படையான குறிக்கோளை மனதில் கொண்டு பின்வரும் பரிந்துரைகளைக் குழு வழங்கியது.

(அ) சிறு தொழில்கள் இணைக்கழகம் (Small Industries Corporation) அரசுக்குத் தேவைப்படும் பொருள்களைச் சிற்றளவு தொழில்துறை மூலம் அரசுக்கு வழங்கிட வழிவகை செய்தல்

இதன் கடமையாகும். இதனால் சிற்றளவுத் தொழில் துறையின் இயந்திரங்களை நவீன மயமாக்கவும் நிதி உதவியினை இவ்விணைக் கழகம் வழங்க வேண்டும்.

(ஆ) உற்பத்திக்கு உதவும் இயந்திரத் தொகுதியையும், பயிற்சி வசதிகளையும் அளித்தல்: மின் சக்தியினைக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்வதற்குச் சிற்றளவுத் தொழிலதிபர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். இதன் பொருட்டு ஒரு பெரிய இயந்திரத் தொகுதி ஒன்றினை ஏற்படுத்த வேண்டும். இவை 1,000 முதல் 2,000 வரை தொழிலாளர்கள் பணிபுரியக் கூடியதாக இருக்க வேண்டும். மொத்தத் தொழிலாளர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் பயிற்சி பெறுபவர்களாகவும், மீதியுள்ளோர் நிரந்தரமாகவும், இருக்க வேண்டும். இந்நிறுவனத்தில், நவீன இயந்திரங்கள், உற்பத்தி முறைகள், போன்றவை பலவும் இருக்க வேண்டும்.

### (7) அங்காடியும் பகிர்ந்தளித்தலும் (Marketing and Distribution)

ஏற்கெனவே கூறியபடி இந்தியாவில் அங்காடி நன்கு விரிவடைந்ததாக உள்ளது. அதனை உரிய முறையில் பயன்படுத்தினால் நாடு தன்னிறைவு அடையும் என்பதில் ஐயமில்லை. எனவே நல்ல அங்காடி வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்வதற்குக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

(1) நல்ல தரமுள்ள பொருள்களையே உற்பத்தி செய்ய வேண்டும்.

(2) நுகர்வோரின் விருப்பத்திற்கேற்ற பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும்.

(3) இன்னும் நெருங்க இயலாத கிராமப்புற அங்காடியை மேலும் விரிவடைவதற்கு தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

இதனை அடிப்படையாகக் கொண்டு தனது பரிந்துரைகளை வழங்கியது:

(a) தன்னாட்சித் தன்மை கொண்ட 'அங்காடி பணி இணைக் கழகம்', (Marketing Service Corporation) ஒன்றினை மத்திய அரசு ஏற்படுத்த வேண்டும். மக்களின் தேவை பற்றிய ஆய்வு, தொழில் அதிபர்களை அத்தேவையினைப் பூர்த்தி செய்வதற்கு

ஊக்குவித்தல், மொத்த, சில்லரை விற்பனையாளர்களிடமிருந்து ஆணைகள் வாங்கிக் கொடுத்தல் போன்றவை அவ்விணைக் கழகத்தின் பணிகளாக அமையும்.

(b) அங்காடி பற்றிய செய்திகளை அறிந்து உற்பத்தியாளர்களுக்கு வழங்குதல்.

(c) ஒவ்வொரு தொழில் சம்பந்தமாகத் தனித்தனியாக மாநாடு கூட்ட வேண்டும். இதன் மூலமாக நவீன விஞ்ஞான உற்பத்தி முறைகள் பற்றியும், ஏற்றுமதி வாய்ப்புகள் பற்றியும், சிறு தொழில் அதிபர்கள் அறிந்து கொள்வதற்கு வாய்ப்புகள் ஏற்படும்.

மேற்கூறிய பல்வேறு பரிந்துரைகளையும் அரசு ஏற்றுக் கொண்டு, பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துள்ளது. இதனை 'சிற்றளவுத் தொழில்களுக்கு அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள்' என்ற அத்தியாயத்தில் விரிவாகக் கண்டோம்.

பின்னிணைப்பு IV

# கார்வே குழு அறிக்கை

குடிசை மற்றும் சிற்றளவுத் தொழில்களின் சிக்கல்களை ஆய்வதற்காக இந்தியத் திட்டக் குழு 1955 ஜூனில் பேராசிரியர் கார்வேயின் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. இக் குழுவின் பெயர்: 'கிராம மற்றும் சிற்றளவுத் தொழில்கள் (இரண்டாம் திட்டம்) குழு' [Village and Small Scale Industries (Second Five year Plan) committee] என்று அழைக்கப்பட்டாலும், நடைமுறையில் குழுவின் தலைவர் பெயரை ஒட்டி, 'கார்வே குழு' என்றே அழைக்கப்படுகிறது. கீழ்க்கண்ட தன்மைகளைக் கண்டு ஆய்ந்து அதன் அறிக்கையினைச் சமர்ப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது.

(i) சாதாரணமாகத் தேவைப்படுகின்ற நுகர்வுப் பொருள்களை, கிராம, சிற்றளவுத் தொழில்துறை உற்பத்தி செய்து அளித்தல்

(ii) இத் தொழில்கள் மூலம் வேலை வாய்ப்பு அதிகரிப்பதற்கான சாத்தியக் கூறுகள்

(iii) இத் தொழில்துறையின் உற்பத்தி மற்றும் விற்பனையினை கூட்டுறவு அமைப்புகள் மூலம் மேற் கொள்ளல்

(iv) இதர சிக்கல்கள்

இக் குறிக்கோள்களை ஆய்ந்து விரிவான அறிக்கை சமர்ப்பிக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டது. செப்டம்பர் 1955-ல் இக் குழு தனது அறிக்கையை சமர்ப்பித்தது.

இக் குழுவின் கூற்றுப்படி, முதலாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சிற்றளவுத் தொழில்துறை குறிப்பிடத்தகக வகையில்

முன்னேறியுள்ளது. ஆனால் கூட்டுறவு முறையானது இத் தொழில்துறையில் எதிர்பார்த்த அளவிற்கு முன்னேறவில்லை. கைத்தறித் துறையில் மட்டும் கூட்டுறவுத் துறையின் முன் னேற்றம் பாராட்டத்தக்கதாகும்.

சிறு தொழில்துறைத் தொடர்பாக ஆராய்ச்சியும், பயிற்சியும் அளிக்கப்படுவது இன்றியமையாததாகும். இறக்குமதி செய்யப் பட்ட நவீன இயந்திரங்களையும், தொழில் நுணுக்கத்தையும் கண் மூடித்தனமாகப் பின்பற்றக் கூடாது. தற்போதுள்ள தொழில் நுணுக்கத்தையும், இயந்திரங்களையும் மாற்றி அமைத்து உற்பத்தி யினைப் பெருக்க வேண்டும். மேலும் கிடைக்கின்ற முதலை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்த வேண்டும்.

சிற்றளவுத்தொழில்துறையை வளர்ப்பது மூலம் நாம் மையப் படுத்தப்படாத பொருளாதார நிலையை அடையலாம். உற்பத்தித் திறன் பெருகுவதற்கும் நாம் பலவேறு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இத் துறையில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தையும் வேலை செய்கின்ற இடத்தின் நிலையினை யும் சீர்திருத்த வேண்டும்.

விவசாயத் துறையைச் சார்ந்துள்ள மக்களின் எண்ணிக்கை குறைக்கப்பட வேண்டும். மற்ற துறைகளில் வேலை வாய்ப்பினை அதிகமாக்கி அவர்கள் விவசாயத்துறையிலிருந்து அத் துறை களுக்கு மாற்ற வேண்டும். இதனால் விவசாயத்துறையில் உற்பத்தித் திறன் கூடுவதோடு மட்டுமல்லாமல் கிராமப்புறங்களில் வருமானமும் கூடுகின்றது. நுகர்வுப் பொருள்களுக்கு அங்காடி விரிவடைகின்றது. அங்காடி விரிவடைவதால் நுகர்வுப்பொருள்கள் தயாரிக்கும் தொழில்துறை வளர்ச்சி பெறுகின்றது.

சிறு தொழில்துறைக்கு வேண்டிய சாதனங்களைத் தயாரிபதற் காக ஆங்காங்கே பேரளவில் நிறுவனங்கள் அமைக்க வேண்டும். தற்போதுள்ள பெரிய நகரங்களின் வளர்ச்சி போதுமானதாகும். எனவே நாம் இனி புதிய சிறிய அல்லது நடுத்தரமான நகரங்களை அமைப்பதில் ஈடுபட வேண்டும். இதை மனதில் கொண்டே தற் சமயம் தொழில் பேட்டைகள் ஊக்குவிக்கப்பட்டு வருகின்றன. இதனால் புதிய நகரங்கள் தோன்றி முன்னேறி வருகின்றன.

மேலும், கிராமப்புறங்களில் மின் வசதியையும் பெருக்க வேண்டும். கிராமம் தொழில் மயமாவதற்கு இது பெரிதும் உதவி புரியும். மின்சக்தி மிகவும் மலிவாகக் கிடைத்தால் அதன் வளர்ச்சி பெருகும். நமது பொருளாதாரம் வெகு விரைவில் முன்

னேறுவதற்கும் மையப்படுத்தாத முறையில் தொழில்துறை வளர்வதற்கும் இது முக்கியமாக கருதப்பட வேண்டும். கிராமப் புறங்களை மின் மயமாக்குவதால் நாட்டின் பொருளாதாரம் முன் னேற்றமடையும். அவ்வாறு மின்சக்தி கிடைத்தால் விவசாயத் திற்கு மட்டுமல்லாது சிற்றளவுத் தொழில் துறைக்கும் பயன்படுத்த லாம். இம் மின்சக்தி அளிப்பதில் குடிசை, சிற்றளவுத் தொழில் துறையினை முக்கியமாகக் கருதவேண்டும்.

இத் தொழில்துறையின் உற்பத்திப் பொருள்கள் திட்டமிட்ட வகையில் மக்களுக்கு அளிக்கப்பட வேண்டும். இத் துறை மக்களுக்கு வேண்டிய அளவிலும், அவர்கள் விரும்புகின்ற தரத் திலும் பொருள்களை உற்பத்தி செய்வது அவசியம். இத் துறையை ஊக்குவிப்பதற்காக 'மையப்படுத்தப்பட்ட அமைப்பு' ஒன்று நிறுவி அதன் மூலம் பொருள்களை விற்பனை செய்ய ஏற்பாடு வேண்டும். இவ் வமைப்பு சிறு தொழில்துறைக்கு வேண்டிய பொருள்களைப் பேரளவில் வாங்கி சிற்றளவுத் தொழில்களுக்கு பங்கீடு செய்ய வேண்டும்.

சிறு தொழில்துறை வளர்ச்சிக்கு கூட்டுமுறை மிகவும் அவசிய மாகும். இக் கூட்டுறவு முறையினால் தான் அவர்களுடைய பேரம் பேசும் சக்தி (Bargaining Power) கூடுகின்றது. பேரளவில் தயாரிக்கப்படும் பொருள்களின் போட்டியினையும் ஈடுகட்ட முடியும். எனவே சிறு தொழில் வளர்ச்சிக்கு உற்பத்தித்துறை யிலும் விற்பனைத்துறையிலும் கூட்டுறவு முறை அவசியமாகும். இது கிராமப்புற வாழ்க்கைத் தரம் முன்னேறுவதற்கும் சிற்றளவுத் தொழில்துறை வளர்ச்சி அடைவதற்கும் வழி உண்டாக்கும்.

இச் சிறுதொழில் வளர்ச்சிக்கு முக்கிய பிரச்சினையாக இருப்பது முதலாகும். இதற்கு அரசு மிகவும் தாராளமான முறை யில் நிதி உதவி அளிக்க வேண்டும். இதற்காக 'மாநில நிதி இணைக்கழகம்' (State Finance Corporation) அதிக அளவில் நிதி உதவி அளிக்க வேண்டும். இதற்காகவே தனது அமைப்பில் தனியாக ஒரு பிரிவினை அமைக்க வேண்டும். இக் கழகத்தின் நிதி உதவி கூட்டுறவு அமைப்பின் மூலம் கிடைப்பதற்கு வழி வகை செய்ய வேண்டும். இந்தியாவின் மைய வங்கியான 'ரிசர்வ் பேங்க் ஆஃப் இந்தியா' (Reserve Bank of India) விவசாயத் திற்குத் தாராளமாக நிதி உதவி அளிக்க வேண்டும். இந்த நிதி உதவி கூட்டுறவு மைய வங்கியின் மூலம் வழங்கப்பட வேண்டும். இதற்காக ஒரு நன்மை பயக்கத்தக்க நிதிக் கொள்கையினை ஏற்படுத்துவது அவசியமாகும்.

கிராமப்புற தொழில்துறை வளர்ச்சிக்கு மூலப் பொருள்கள் வாங்குவது, சாதனங்கள், நிதி, கிட்டங்கி வசதி, விற்பனை முதலிய தொழில்துறையின் பல்வேறு நிலைகளுக்கும் சேர்ந்து ஒரு கொள்கை அவசியமாகும். எண்ணெய் ஆட்டும் தொழில்துறை யில் கூட்டுறவு அமைப்பு ஊக்குவிக்கப்பட வேண்டும். நிதி உதவி அளிப்பதில் மாநில நிதி இணைக்கழகம் முக்கிய பங்கு வகிக்க வேண்டும். அக் கழகத்திற்கு வேண்டிய நிதியினை 'ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியா' (State Bank of India) மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

பொருளாதார முன்னேற்றம் அடையும்பொழுது நுகர்வுப் பொருள்களுக்கு தேவை அதிகரிக்கும். இத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு சிற்றளவுத் தொழில்துறையின் பங்கு மிகவும் முக்கிய மான தாகும்.

இதற்காக முதலில் சிற்றளவுத் தொழில் துறையை ஊக்குவிக்க வேண்டும். அவைகளின் நிதி நிலைமையினையும் வணிக நிலையினை யும் முன்னேற்ற வேண்டும். இத் தொழில்துறையின் உற்பத்தி இலக்குகளை அடைவதற்கு முழு அளவுத் திறமையும் பயன்படுத்தப் பட வேண்டும். இதற்காக அரசின் உதவி மிகவும் இன்றியமை யாததாகும். சிறு தொழில்துறைக்கு எந்தப் பொருள்கள் ஒதுக்கப் பட வேண்டும் என்பது பற்றி இக் குழு சரியான முடிவெடுக்க வில்லை. சமூகப் பொருளாதாரத் தேவைகளை அளிப்பதில் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். இதில் உற்பத்தி முறையை மாற்றி அமைத்தல் மலிவான முறையில் போக்குவரத்து வசதிகளை அமைத்துக் கொடுத்தல், கடன் உதவி அளித்தல், மின்சக்தி அளித்தல் முதலியன அடங்கும். மேலும், தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தையும் அவர்கள் வேலை செய்யும் நிலையையும் முன்னேற்றுவது மிகவும் அவசியமாகும். சாதாரணமாகத் தேவைப் படும் நுகர்வுப் பொருள்களான பருத்தித் துணி, கம்பளி, கைக் குத்தல் அரிசி, எண்ணெய், சர்க்கரை, வெல்லம், கைத்தறிப் பொருள்கள், தீப்பெட்டி முதலியன சிற்றளவுத் தொழில்துறையின் மூலம் திட்ட காலத்தில் உற்பத்தி பெருக வேண்டும். வெவ்வேறு தொழில்களுக்கு எவ்வளவு ஒதுக்க வேண்டும் என்பது பற்றியும் இக் குழு முடிவு செய்துள்ளது.

**கைத்தறி நெசவு**

கைத்தறி தொழில் துறையின் உற்பத்தியை 3,000 மில்லியன் கெஜத்திற்கு உயர்ந்த சாதகமான நிலைகள் உருவாக்கப்பட வேண்டும். அத்துடன் இத் துறையை மாற்றி அமைப்பதற்கும்

தொழில் நுணுக்கத்தை முன்னேற்றவும் திட்டங்கள் வகுக்க வேண்டும். கூட்டுறவு முறையில் இத் துறையை முன்னேற்றுவது மிகவும் அவசியமாகும். இதற்காக அரசு எல்லாவித நடவடிக்கை களும் எடுக்க வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இத் திட்டத்துக்கு வேண்டிய நூலின் தேவை 375 மில் லியன் இராத்தல்களாக இருக்கும். இத் துறையினை முன் னேற்றுவதற்கு ரூ 80 கோடி திட்ட காலத்தில் செலவிடப்பட வேண்டும். நெசவாளிகளுக்கு வீட்டு வசதியினைச் செய்து தருவது மிகவும் அவசியமாகும். கம்பளி நெசவுத்துறையில் குடிசைத் தொழில்துறையின் உற்பத்தி 4.5 மில்லியன் கெஜமாக மதிப்பிடப்பட்டது. கம்பளித் துணியின் தேவை 3.5 மில்லியன் கெஜமாக மதிப்பிடப்பட்டது.

### கைக்குத்தல் அரிசி

இத் தொழில் உழைப்புச் செறிவுள்ளதாகும். எனவே, இது அதிக வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தருகின்றது. இத் துறையை ஊக்குவிப்பதற்காக அரிசி ஆலைகளுக்கு மேற் கொண்டு உரிமை வழங்கக் கூடாது. மேலும், அரிசி ஆலைகளில் தயாராகும் அரிசிக்கு உற்பத்தி வரி போட வேண்டும். இதனுல் கைக்குத்தல் அரிசிக்கு தேவை அதிகரிக்கும்.

### எண்ணெய் எடுத்தல்

அதிக வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தருவதில் எண்ணெய்ச் செக்குத் தொழில் அடுத்த முக்கியத்துவம் பெறுகின்றது. தற் போது இருக்கும் செக்குகளின் தரத்தினை முன்னேற்றி அவைகளை மாற்றி அமைக்க வேண்டும். மேலும், இத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களிடம் போதிய பண வசதி இல்லாததால் விதைகளை வாங்கி வைத்திருக்கும் சக்தி இவர்களிடம் இல்லை. இதனுல் விதைகளின் விலை கூடும்போது அவர்கள் எண்ணெய் உற்பத்தி செய்ய முடிவதில்லை. ஆகையால் அவர்களுக்கு போது மான அளவு நிதி உதவி அளிக்க வேண்டும்.

### தோல் பொருள் தொழில் துறை

தோல் காலணிகள் செய்தல், தோல் பதனிடுதல் முதலிய வற்றில் கூட்டுறவு அமைப்பு முறையினை ஏற்படுத்த வேண்டும் எனக் குழு எடுத்துரைத்துள்ளது. 'தோல் பொருள்களின் உற்பத்தியையும், தரத்தையும் அதிகரிப்பதற்குக் கடன்களும், நவீன சாதனங்களும் அளிக்கப்பட வேண்டும். இதற்காக இத் துறைக்கு ரூ 6.15 கோடி ஒதுக்கப்பட வேண்டும்' என குழு எடுத் துரைத்துள்ளது.

**சர்க்கரை, வெல்லம்**

இத் தொழில் துறையிலும் தொழில் நுட்பம் அதிகரிக்கப்பட வேண்டும். இத் தொழில்துறை முன்னேற்றத்திற்கு ரூ 8 கோடி ஒதுக்க வேண்டும்.

**தீப்பெட்டித் தொழில் துறை**

இத் தொழில் துறையில் உள்ள எல்லா நிறுவனங்களும் தொழில்துறை கூட்டுறவு அமைப்பில் சேர்க்கப்பட வேண்டும். இதனால் மேற் கொண்டும் 10,000 பேர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படும்.

**சிற்றளவுத் தொழில் துறை**

ரூ 5 இலட்சத்திற்கும் குறைவான முதலீட்டுடனும் 100 பேர்களுக்கு குறைவான நபர்களை வேலைக்கு வைத்துக்கொள்ளும் நிறுவனங்களைச் சிற்றளவுத் தொழில்துறையாகக் கருத வேண்டும். தொழில் பேட்டை முன்னேற்றப்பட வேண்டும். மேலும், அவை நகர்ப்புறங்களில் மக்கள் நெருக்கத்தை ஏற்படுத்தாதபடி அமைக்கப்பட வேண்டும். சிறு தொழில்துறை வளர்ச்சிக்கு ரூ 65 கோடி ஒதுக்க வேண்டும். அதில் ரூ 10 கோடி தொழில் பேட்டைகளுக்கென ஒதுக்க வேண்டும்.

சிறுதொழில்களின் வளர்ச்சிக்காக இன்று ஆறு குழுக்கள் உள்ளன. சிறு தொழில்துறை வளர்ச்சிக்காக ஓர் அமைச்சர் நியமிக்கப்பட்டு அவருக்கு உதவி செய்ய இத் துறைக்கென தனியாக ஒரு அதிகாரியை நியமிக்க வேண்டும். சிறு தொழில் துறையின் நிர்வாகத்தினையும், அமைப்பு முறையினையும் வளர்ச்சி பெறச் செய்வது அவரது முக்கிய கடமையாகும்.

கார்வே குழுவின் முக்கியமான பரிந்துரைகள் முழுவதும் செயல்படுத்தப் பட்டன. கூட்டுறவு துறையில் அமைக்கப்படும் சிறு தொழில்களுக்கு ரிசர்வ் வங்கி நிதி உதவி அளித்து சிறு தொழில் வளர்ச்சிக்காகப் பல்வேறு இடங்களில் ஆராய்ச்சி நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இந்த ஆராய்ச்சி நிலையங்களில் எடுக்கப்படும் முடிவுகள் உடனுக்குடன் மக்களுக்கு அறிவிக்கப்படுகின்றன. மேலும் பல்வேறு பயிற்சி நிலையங்களும் ஆரம்பிக்கப்பட்டன. எனவே சிறுதொழில் வளர்ச்சிக்கு கார்வே குழுவின் அறிக்கை மிகுந்த பயன்தரத்தக்கதாக அமைந்தது.

பின்னிணைப்பு V

# ஃபோர்டு அறக் கட்டளைக் குழுவின் பரிந்துரைகள்—1963

## (RECOMMENDATIONS OF THE FORD FOUNDATION TEAM-1963)

இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சி பற்றி ஆய்வதற்கும் சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்கு வேண்டிய வழிமுறைகளைப் பரிந்துரைப்பதற்கும், ஒரு பன்னாட்டுக் குழுவினை, 1953-ல் இந்திய அரசின் தொழில்கள் மற்றும் வாணிப அமைச்சானது அமைத்தது. இக் குழு 1954-ல் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. இக் குழுவின் பல பரிந்துரைகளை அரசு ஏற்றுக்கொண்டது. இவ் விவரங்களை பின்னிணைப்பு 4-ல் விரிவாகப் பார்த்தோம். அதன் பின்னர் மாறுபட்டுள்ள சூழ்நிலைக்கு ஏற்பவும் சிறுதொழில்கள் வளர்ச்சிக்கேற்ற திட்டங்களை அமைத்துக் கொடுப்பதற்கு 1962-ல் மற்றொரு பன்னாட்டுத் திட்டக் குழு அமைக்கப்பட்டது. இக் குழு 1963-ல் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது.

இக் குழுவானது, ஸ்வீடன் நாட்டு சிறுதொழில்கள், நடுத்தரத் தொழில்களின் கூட்டமைப்பின் நிர்வாக இயக்குநரான திரு ஹேன்ஸ் கிரண்ட்ஸ்டோம் (Hans Grundstroem) என்பார் தலைமையில் அமைந்தது. எச். இ இராபிசன் (H E. Robison), மாரீஸ்புடின் (Morris Budin), யூஜின் ஸ்டேலி (Eugene Staley) போன்றோர் இதர உறுப்பினர்கள் ஆவர். அதோடு, டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்கள் தலைமையில் அமைந்த அறுவர் குழுவான இந்தியக் குழுவும் பன்னாட்டுக் குழுவிற்குத் துணை நின்றது. இவ் விரு குழுக்களுக்கும் ஃபோர்டு அறக்கட்டளை

யிலிருந்து நிதி உதவி கிடைத்ததால் ஃபோர்டு அறக்கட்டளைக் குழு என்றும் இக் குழுக்கள் அழைக்கப்பட்டன.

குறிக்கோள்கள் : இக் குழுவின் குறிக்கோள்களைக் கீழ் வருமாறு வகைப்படுத்தலாம் :

(1) எதிர்காலத்தில் நாட்டின் வளர்ச்சியில் சிற்றளவுத் தொழில்களின் பங்கு பற்றி எடுத்துரைத்தல்.

(2) சிற்றளவுத் தொழில்களின் எதிர்கால வளர்ச்சிக்காக அரசு கடைபிடிக்க வேண்டிய கொள்கைகள், திட்டங்கள், சிறு தொழில்களுக்குரிய அமைப்புகள், முறைகள் ஆகியன பற்றிப் பரிந்துரைத்தல்.

(3) சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சி பற்றியும் அவற்றின் பிரச்சினைகள் பற்றி அரசு அதிகாரிகள் அறிவதற்குப் புள்ளி விவரங்கள் சேகரிக்கும் அமைப்பு ஒன்றும் அதன் செய் கடமைகள் பற்றியும் எடுத்துரைத்தல்.

விரிவான ஆய்வுக்குப் பின் இக் குழு பின்வரும் உண்மைகளையும் பரிந்துரைகளையும் கூறியுள்ளது.

**கண்டறியப்பட்ட உண்மைகளும் குழுவின் பரிந்துரைகளும்**

(A) இந்தியாவின் வளர்ச்சியில் சிறுதொழில்களின் பங்கு : 1960 வரை பதிவு செய்யப்பட்ட 36,400 சிறு நிறுவனங்கள், சுமார் 13,30,000 மக்களுக்கு வேலைவாய்ப்பளித்துள்ளன. தொழில் துறை அளித்துள்ள மொத்த வேலைவாய்ப்பினில், இது 38 சதவீதமாகும். மேலும், இவைகளில் முதலீடு செய்யப்பட்ட நிலை முதலானது, பதிவு செய்யப்பட்டுள்ள எல்லா நிறுவனங்களின் மொத்த நிலை முதலில் 17 சதவீதமாகும். உலோக வேலை (Metal-working) மற்றும் இயந்திரம் உற்பத்தி முதலியவற்றில் ஈடுபட்டுளள நன்கு திறமையான சிறுதொழில் நிறுவனங்கள் அடுத்த பத்து ஆண்டுகளில் வெகு விரைவில் நன்கு வளர்ச்சி பெறுவதற்குரிய வாய்ப்புகள் உள்ளன. மேலும், தோல் பொருள் உற்பத்தி, உணவுப் பொருள்கள் உற்பத்தி, துணி உற்பத்தி, பிளாஸ்டிக் பொருள்கள், விவசாயக் கருவிகள் உற்பத்தி முதலியவற்றிலும் சிறுதொழில்கள் வளர்ச்சி அடைவதற்கு நல்ல வாய்ப்புகள் உள்ளன. இவ்வாறு சிறு தொழில்கள், நுகர்வுப் பொருள்கள் உற்பத்தியிலும், மூலதனப் பொருள்கள் உற்பத்தியிலும் சிறந்து விளங்குகின்றன.

எளிதில் மூலப்பொருள்கள் கிடைத்தல், நிதி உதவி அளித்தல், தேர்ந்தெடுக்கப்பட்ட தொழில் நுட்பம் மற்றும் நிர்வாக உதவி அளித்தல் முதலியன நவீன சிறுதொழில்களின் முக்கியமான தேவைகளாகும்.

எதிர்காலத்தில் திட்டங்கள், கொள்கைகள் அமைப்பதில் சிறு தொழில்களைக் கிராமத் தொழில்களிலிருந்து தனியாகப் பிரித்து செயல்பட வேண்டும்.

(B) **மூலப் பொருள்கள், இறக்குமதி செய்யப்பட்ட கருவிகள் :** சிறுதொழில்களின் எண்ணிக்கையும், அவற்றின் முக்கியத்துவமும், அதிகரித்திருந்தாலும், பேரளவுத் தொழில்களுடன் ஒப்பிடுகையில், அவைகளுக்குப் போதிய அளவு மூலப் பொருள்களும், இறக்குமதி செய்யப்பட்ட கருவிகளும் ஒதுக்கப்படவில்லை. கொள்ளளவைக் கொண்டு ஒப்பிடுகையில் சிறுதொழில்களுக்கு ஒதுக்கப்படும் மூலப் பொருள்கள் மிகக் குறைவே ஆகும். எனவே, சிறுதொழில்கள் தமக்குத் தேவையான மூலப் பொருள்களை அதிக விலை கொடுத்து கள்ளச் சந்தையிலிருந்து பெறவேண்டியுள்ளது. இதனால் அவர்கள் பேரளவுத் தொழில்களுடன் போட்டியிட இயலவில்லை.

முன்னுரிமை கொடுக்கப்பட்டுள்ள பொருள்களின் உற்பத்திக்குத் தேவையான பொருள்களுக்கு ஒருமுனை வரி விதிக்கப்பட வேண்டும். மூலப் பொருள்களைச் சிறுதொழில்களுக்கும் பேரளவுத் தொழில்களுக்கும் ஒதுக்கிடும் முறையினை மாற்றி அமைக்க வேண்டும். சிறுதொழில்களுக்காக ஒதுக்கப்பட்ட அந்நியச் செலாவணியினை மூலப் பொருள்கள் இறக்குமதி செய்வதற்கு மட்டுமே செலவிட வேண்டும். இதன் அடிப்படையில்தான் எதிர்காலத்தில் சிறு தொழில்களுக்குக் கடன் வழங்க வேண்டும்.

(C) **மத்திய மற்றும் மாநில வளர்ச்சி அமைப்புகளின் கடமைகள் (Functions of Central and State Development Organisation) :** தற்சமயம் உள்ள சிறு தொழில்கள் திறமையுடன் விளங்குவதற்கு தொழில் நுட்ப வசதி அளிப்பதில் மத்திய மற்றும் மாநில அரசுகள் கவனம் செலுத்த வேண்டும்.

சிறுதொழில்களின் வளர்ச்சிக்கான கொள்கைகளை வகுத்தல், திட்டங்கள் அமைத்தல், தொழில் நுட்ப வசதி அளித்தல், பயிற்சி மற்றும் தொழில் நுட்பம் பற்றிய தகவல்கள் வழங்குதல் முதலிய மத்திய அரசின் பங்காகும். மத்திய சிறு தொழில்கள் அமைப்பானது சிறுதொழில்கள் வளர்ச்சிக்கு கிரியா ஊக்கியாக catalytic) செயல்பட வேண்டும்.

தற்சமயம் எல்லா மாநிலங்களும் நிதி, அங்காடி மற்றும் புள்ளி விவரப் பணிகள் போன்றவற்றைச் சிறுதொழில்களுக்காக ஆற்றி வருகின்றன. ஆனால், இப் பணிகள் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகின்றன. மாநிலத் தொழில்துறை அலுவலர்களின் தகுதியினையும் வேலை உயர்வு வாய்ப்பினையும் அதிகரிக்க வேண்டும். சிறுதொழில் பற்றிப் பயிற்சி அளிப்பதற்குச் சிறுதொழில்கள் விரிவாக்கப் பயிற்சி நிறுவனத்தினை (Small Industries Extension Training Institute) முழு அளவிற்குப் பயன் படுத்த வேண்டும்.

ஒவ்வொரு மாநிலத் தொழில்துறை இயக்குநர் செயலகத்திலும் (State Industries Directorate), ஒரு திட்டக் குழு அல்லது தொழில்துறை ஆலோசகர் குழுவினை அமைக்க வேண்டும். கொள்கைகள் வகுத்தல், திட்டங்கள் அமைத்தல், மாவட்ட அதிகாரியின் வேலையினை ஒழுங்குபடுத்துதல் மத்திய சிறுதொழில்கள் அமைப்புடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளுதல் முதலியன அக் குழுவின் பணியாகும்.

தேசிய சிறுதொழில்கள் இணைக் கழகமானது, சிறுதொழில்களுக்குத் தேவையான இயந்திரங்களையும், கருவிகளையும், தவணை முறையில் வழங்குவதில் சிறந்து விளங்குகின்றது. எனினும், இக் கருவிகள் கிடைப்பதற்குரிய காலதாமதத்தை நவீன அலுவலகக் கருவிகள் மூலம் குறைக்கலாம். சலுகை முறையில் வட்டி விதிக்கும் முறைக்குப் பதிலாக அங்காடியில் நிலவும் வட்டியினையே விதிக்க வேண்டும்.

மூல முன்மாதிரி உற்பத்தி மற்றும் பயிற்சி மையங்களில் நல்ல திறமையான பயிற்சியாளர்கள் இல்லை. மேலும், இந்திய அங்காடியின் தேவைக்கேற்ப இயந்திரங்களின் நுணுக்கங்களை இம் மையங்களில் உற்பத்தி செய்ய வேண்டும். முதல் கருவிகள், வளர்ச்சிக்கு வேண்டிய முன்னுரிமைப் பொருள்கள் தயாரிப்பதில் கவனம் செலுத்த வேண்டும். முன்மாதிரி இயந்திரங்களை விற்பனை செய்வதற்காக விற்பனை முகவர்களை நியமிக்க வேண்டும்.

(D) வளர்ச்சி மற்றும் உதவி பற்றிய திட்டங்களும் அவற்றின் நிர்வாகமும்: சிறு தொழில்களுக்குத் தொழில் நுட்ப உதவி அளிப்பதில், சிறு தொழில்கள் அமைப்பின் சேவை திருப்திகரமாக இல்லை. எனவே, முக்கியமான பகுதிகளில் இவ்வமைப்பின் சேவையினை அதிகரிக்க வேண்டும். நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான சிறு தொழில்களின் வளர்ச்சிக்கும், அத் தொழில்களில் சிறந்து விளங்கும் தொழிலதிபர்களுக்கு உதவி புரிவதிலும் முன்னுரிமை வழங்க வேண்டும். இதற்காக தகுதி வாய்ந்த நல்ல

தொழில் நுட்ப அதிகாரிகள் தேவைப்படுவதால், இவ்வதிகாரிகளின் தகுதியினை அதிகரிப்பதற்குப் பயிற்சி அளிக்க வேண்டும். இப் பயிற்சி அளிப்பதில் சிறுதொழில் விரிவாக்கப் பயிற்சி நிறுவனம் முக்கிய பங்கு வகிக்க வேண்டும்.

குறிப்பிட்ட நிறுவனத்திற்கு ஆராய்ச்சி சம்பந்தமாக மேற் கொண்டுள்ள பணிகளுக்கு அவற்றின் மதிப்புக்கேற்பவும் அப் பணியினைச் செய்வதற்குண்டான காலத்திற்கேற்றவாறும் கட்டணம் (Fees) வசூலிக்க வேண்டும். தொழில் வளர்ச்சியில் பின் தங்கிய இடங்களில் இப் பணிகள் செய்வதற்குண்டான செலவை விட, இக் கட்டணம் குறைவாக இருக்க வேண்டும்.

உற்பத்தி மற்றும் பொதுவான வசதிகள் அளிக்கும் மையங் களை அமைத்துத் தனி நபர்களுக்கு விற்றுவிட வேண்டும். ஆனால் இவ் வசதிகள் இன்று போதிய அளவில் பயன்படுத்தப் படவில்லை.

மத்திய சிறுதொழில்கள் அமைப்பில் உள்ள உயர்தர அலுவலர் கள் திட்டங்கள் அமைத்தல், கொள்கைகள் வகுத்தல், முதலிய வற்றில் அதிகமாகக் கவனம் செலுத்துகின்றனர். ஆனால் முக்கிய பிரச்சினைகளான சிறுதொழில்களை வளர்ச்சியடையச் செய்தல், அவற்றினைத் தகுதியுடையவைகளாக மாற்றுதல் போன்றவற்றில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

சீரமைந்த கொள்கைகள், திட்டங்கள் ஆகியன அமைக்கும் குழு ஒன்றினை ஏற்படுத்தி, அதனை வளர்ச்சி ஆணையாளர் அலுவலகத்துடன் இணைக்க வேண்டும். கொள்கைகள் வகுத்தல், திட்டங்கள் வகுத்தல் முதலியவற்றிற்கு உதவி புரிதல் போன்றவை இக் குழுவின் பணியாகும். சிறு தொழில்துறைப் பொருள்களுக்கு முன்னுரிமை வழங்குவதிலும், மூலப் பொருள்கள் ஒதுக்குவதிலும் இக் குழுவானது துணை புரிய வேண்டும்.

சில முக்கியமான பணிகளை வட்டார அடிப்படையில் அமைக்க வேண்டும். இப் பணிகளைச் சிறு தொழில்கள் பணிக் கழகம் மேற்கொள்ள வேண்டும்.

சிறுதொழில்கள் பணிக்கழகத்தின் இயக்குநர்கள் தொழில் நுட்பத்தில் சிறந்து விளங்கினாலும், அவர்களுக்குப் போதிய நிர்வாகத் திறமை இல்லை. எனவே இவர்களின் நிர்வாகத் திறமை யினை அதிகரிப்பதற்குப் பயிற்சி அளிக்க வேண்டும். போதிய திறமை அற்றவர்களை நீக்கிவிட வேண்டும். மூலப் பொருள்களில் ஒதுக்குவதில் ஏற்படும் தவறான செயல்களைத் தவிர்க்க வேண்டும்.

நிர்வாகத் திறமையினை அதிகரிப்பதற்குச் சிறுதொழில்கள் விரிவாக்கப் பயிற்சி நிறுவனத்தினைப் போல் ஒரு குழு அமைக்க வேண்டும்.

வெளி நாட்டிலிருந்து தொழில் நுட்ப ஆலோசகர்களை வரவழைத்து, இங்குள்ளவர்களுக்கு நன்கு பயிற்சி அளிக்க வேண்டும். ஆராய்ச்சி மற்றும் திட்டங்கள் அமைப்பதில் முதல் தரமான பொருளாதார ஆலோசகரை நியமிக்க வேண்டும். சிறுதொழில் அதிபர்களுக்கு உதவி செய்வதற்கு, பல்வேறு தொழில் நிறுவனங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரை, பகுதி நேர ஆலோசகர்களாக நியமிக்க வேண்டும்.

சிறுதொழில்களின் நிதிப் பிரச்சினைகள் மற்ற நாடுகளில் உள்ளதை விட இங்கு அதிகமாக உள்ளது. இந்தியப் பொருளாதாரத்தில் சிறுதொழில்கள் முக்கிய பங்கு வகித்தாலும் அவற்றிற்குப் போதிய அளவு நிதி உதவி கிடைக்கவில்லை. சிறுதொழில்களுக்கு உதவி அளிப்பதில் நிதி நிறுவனங்கள், வங்கிகள், நிதி இணைக் கழங்கங்கள் முதலியன தங்கள் போக்கினையும், கருத்தினையும் மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டும். சிறுதொழில்களின் மூலதனத் தேவையினைப் பற்றி அறிந்திடச் சிறந்த முறையில் ஆய்வு–ஒன்றினை நடத்த வேண்டும்.

சிறந்த பெரிய தொழில் நிறுவனங்களாக மாறுவதற்குத் தகுந்த முறையில் தொழில் பேட்டைகளை அமைக்க வேண்டும். இப் பேட்டைகளில், விடுமுறைக் காலங்களில் பயிற்சி வசதி அளிக்க வேண்டும். போக்குவரத்து வசதிகள், பொது தேவைகள், நிலம் வழங்குதல் முதலியவற்றில் அரசு முக்கிய பங்கு வகிக்க வேண்டும். தொழில் பேட்டைகள் அமைத்தல், வாடகைத் தொகை நிர்ணயித்தல், தொழில் பேட்டைகளின் செலவினைக் குறைத்தல் என்பனவற்றில் திட்டங்கள் வகுத்துச் செயல்பட வேண்டும்.

மூலப் பொருள்கள் ஒதுக்குதல், மீட்சிப்பணிகள் அளித்தல், தவணை முறையில் கருவிகள் வழங்குதல் ஆகியவற்றில் சில தொழில் பேட்டைகளுக்கு முன்னுரிமை வழங்க வேண்டியது அவசியமில்லை எனலாம்.

தரமான பொருள்களை உற்பத்தி செய்யும் சிறுதொழில்களைப் பேரளவுத் தொழில்களின் துணை நிறுவனங்களாக அமைக்க வேண்டும். இதற்காகத் திறமையான தொழில் நிறுவனங்களுக்குத் தொழில் நுட்ப உதவி மற்றும் மூலப் பொருள்கள் அளித்தல் முதலியவற்றில் சிறப்பிடம் ஒதுக்க வேண்டும்

'கட்டுப்பாடு' கொள்கைகள் தோல்வியடைந்ததோடு மட்டு மல்லாமல், சிறுதொழில் வளர்ச்சிக்குத் தடைகளாகவும் உள்ளன. பேரளவுத் தொழில்களின் கொள்ளளவை அதிகரிப்பதைக் கட்டுப் படுத்துவதின் மூலம் சிறுதொழில் நிறுவனங்கள் வளர்ச்சி அடைவதற்கு வாய்ப்பளிக்கலாம்.

(E) தொழில்களைப் பரவலாக்குதல்: சிறுதொழில்களை வளர்ச்சி அடையச் செய்வதன் மூலம் மட்டுமே தொழில்களைப் பரவ லாக்குதல் என்ற கொள்கையினை நிறைவேற்றலாம் எனக் கருதுவது தவறாகும். தொழில் தொடங்குவதற்கு இடவசதி, போக்குவரத்து மற்றும் மின்சக்தி வசதி போன்றவற்றை அளித்தலே தொழில் பரவலாக்கிட இன்றியமையாதவைகளாகும். அரசியல் காரணங்களுக்காக முக்கியமில்லாத இடத்தில் தொழில் ஊக்குவிக்கக் கூடாது. தொழில் தொடங்கப்படுகின்ற இடத்தில் உள்ள பொருளாதாரக் காரணங்களான, மின்சக்தி, அங்காடி திறமையான உழைப்பு, கல்வி, பயிற்சி, மூலப் பொருள்கள் அளிப்பு போன்றவற்றையும் கருத்தில்கொள்ள வேண்டும். இவைகளைப் புறக்கணித்தால், அரசின் பணம் விரயமாக்கப்படுவதோடு மட்டு மல்லாமல், சிறுதொழில்கள் வளர்ச்சிக்கும் அவைகளே இடையூறு களாகவும் விளங்கக் கூடும். எனவே இடத்தைப் பற்றி நிர்ண யிக்கும் பொழுது, பொருளாதாரக் காரணிகளை நன்கு ஆராய வேண்டும்.

மிகவும் பின்தங்கிய இடங்களில் அதிக தொழில்களை ஊக்கு வித்தல் என்ற கொள்கையானது தொழில் வளர்ச்சியை ஏற்படுத் தாது; அதற்குப் பதிலாக, தேர்ந்தெடுக்கப்பட்ட பொருளாதாரச் சிக்கனங்கள் மிகுந்த சில இடங்களில் மட்டும் முன்னோடித் திட்டங்கள் மூலம் செயலாற்ற வேண்டும்.

பன்னாட்டுத் திட்டக்குழுவின் பரிந்துரைகள் சிற்றளவுத் தொழில்துறை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியுள்ளன. அக்குழுவின் பரிந்துரைகள் பலவற்றையும் அரசு ஏற்றுக்கொண்டு, பல்வேறு நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது. இதனைப் பற்றி நாம் முந்தைய அத்தியாயங்களில் கண்டோம்.

# அட்டவணைப் பட்டியல்
## (LIST OF TABLES)

தொழிலக வேலை வாய்ப்பு பெருகி வருவதைக் காட்டும் புள்ளி விவரம்.

நான்காம் திட்ட முதலீடு.

நான்காம் திட்ட கால சில இலக்குகள்.

நான்காம் திட்டகால சில முக்கிய உற்பத்தி இலக்குகள்.

நான்காம் திட்ட காலத்தில் சில முக்கிய தொழில்துறைகளின் இலக்குகள்—சாதனைகள்.

நமது தொழில் வளர்ச்சி விகிதம்.

மத்திய அரசு பேரளவுத் தொழில் திட்டங்களில் முதலீடு செய்த விபரம்.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சில, இலக்குகளும், சாதனைகளும்.

மூன்றும் திட்ட காலத்தில் பொதுத்துறை மூலமாக வேளாண்மைத் துறையில் செலவிடப்பட்ட தொகை.

மூன்றும் திட்ட காலத்தில் வேளாண்மைத் துறையில் ஏற்பட்ட சாதனைகள்.

மூன்றும் திட்ட காலத்தில் சில முக்கிய பொதுத்துறை, பொதுத்துறை உற்பத்தி இலக்குகள்.

மூன்றும் திட்ட காலத்தில் தொழில்துறை உற்பத்திக் குறியீட்டெண்.

மூன்றும் திட்ட காலத்தில் சில முக்கியமான துறைகளின் உண்மையான உற்பத்தி அளவு.

மூன்றும் திட்ட காலத்தில் தொழில்துறை, தாதுப் பொருள்கள் உற்பத்தித்துறை வளர்ச்சிக்காக செலவிடப்பட்ட தொகை.

தொழிலக வேலை வாய்ப்பு பெருகி வருவதைக் காட்டும் புள்ளி விபரம்.

வெவ்வேறு தொழில் நிறுவனங்களுக்கு அதன் சொத்தின் அளவினை வைத்து கொடுக்கப்பட்ட கடன் சதவீதம்.

வேலையின்மை அதிகரிப்புப் பட்டியல்.

1853–1901-ல் இந்தியாவில் போடப்பட்ட இரயில் பாதைகளின் அளவு.

1815-1830 வரை இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பட்டுப் பொருள்களின் அளவு.

1857-1902 வரையான காலத்தில் இந்தியாவின் மொத்தக் கடன் பட்டியல்.

1869-ஆம் ஆண்டு இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பருத்தித் துணிகளின் அளவு.

1878-1901-ல் இந்தியாவின் ஏற்றுமதி, இறக்குமதிப் பட்டியல்.

1901-1902-ல் இந்தியாவில் நீர்ப்பாசனப்—பரப்பு.

1938-1945 வரையான காலப் பொதுத்துறை உற்பத்திப் பொருள்களின் பொதுக் குறியீட்டெண்.

1939-1944-ல் பதிவு செய்துகொண்ட நிறுவனங்களின் எண்ணிக்கையும், மூலதனமும்.

1946-ல் மேற்கொள்ளப்பட்ட 'உற்பத்திப் பொருள்களின் கணிப்பு'.

1948-1949 ம் ஆண்டு விலைவாசியை அடிப்படையாகக் கொண்ட தேசிய வருமானக் கணிப்பு.

1948-1968 வரை தலா வருமானத்தின் போக்கு.

1950-68 வரையான காலத்தின் பல்வேறு துறைகளில் முன்னேற்றம் பற்றிய பகுப்பு.

1960-1961ல் தேசிய வருமானமும், தலா வருமானமும்.

1961-1971 வரை பதிவு செய்து கொண்ட தொழில் நிறுவனங்களின் புள்ளி விபரம்.

1964-1965 ம் ஆண்டில் மாநிலங்களின் தலா வருமானம்.

1971ல் மறுபரிசீலனை செய்யப்பட்ட இலக்குகள்.

பல பொருள்களின் மொத்த உற்பத்தியில் சிற்றளவுத் தொழில்களின் பங்கு.

1960-லிருந்து 1964 வரை சிற்றளவு மற்றும் பேரளவுத் தொழில்களின் வளர்ச்சி வீதம்.

# மேற்கோள் நூல் பட்டியல்
## (BIBLIOGRAPHY)


Bhagwati, Jagdish, N. and Padma Desai—' Indian Planning for Industrialisation '.

Bright Singh, D.—' Economics of Development '.

Bryce, Murray, D.—' Policies and Methods for Industrial Development '.

Clark, Colin.—' Conditions of Economic progress '.

Dutt, Romesh—' The Economic History of India 1759-1837 '.

Dutt, Romesh—' The Economic History of India 1837-1900 '.

Dutt, Ruddar and Sundaram, K.P.M.—' Indian Economy '.

Hagen, Everette, E.—' The Economic Development of India '.

Higgins, Benjamin—' Economic Development—Principles, Problems and Policies '.

Hirschman, Albert—' The Strategy of Economic Development '.

Hodder, B.W.—' Economic Development in the Tropics '.

Jain, P.C—' Economic Problems of India '.

Jawaharlal Nehru Memorial volume—Edited by Bhuleskkar and Ashok, V.—' Indian Economic Thought and Development '.

Joan Robinson—' The accumulation of capital '.

Kuchhal, S C.—' The Industrial Economy of India '.

Leibenstin and Harvey—' Economic backwardness and Economic Growth '.

Lewis, W.A.—' The Theory of Economic Growth '.

Majumdar, R.C.—' An advanced history of India '.

Meier, Gerald, M., Baldwin and Robert, E —' Economic Development—Theory, History and Policy '.

Mountjoy, Alan, B.—' Industrialisation and under developed countries '.

Myrdal Gunnar —' Asian Drama '.

Myrdal Gunnar—' Economic Theory and under developed countries '.

Nurkse, Ragnar—' Problems of Capital formation in under developed countries '.

Raj, K. N.—' Indian Economic Growth—Reformance and prospects '.

Rastow, W. W.—' Stages Economic Growth '.

Rosen, George—' Industrial change in India '.

Samuelson, Paul—' Full employment after the war '.

Schumpeter, J. A.—' Theory of Economic Development '.

Tinbergan, Jan—' The relevance of Theoritical criteria in the selections of Investment plans '.

Utton—' Industrial Concentration '.

Vepa, Ram—' Small Industries in Japan '.

மஜும்தார், R. C., ராய் சௌதுரி, H. C., தத்தா, K.—' இந்தியாவின் சிறப்பு வரலாறு-II '. தமிழாக்கம் : உஷ்மான் ஷெரிப், A.

## Periodicals and Reports

Achievements of Planning (1965 Edition)—Publication Division.

Census of India—1961.

Central Statistical Organisation—Estimates of Capital formation.

Commerce Annual—1968 and 1972.

Eastern Economist Annual—1971 and 1972.

Economic Survey -1966-67; 1967-68 -Government of India.

Facts and Figures—February, 1972.

Finance and Development—Volume 9, March, 1972.

Five Year Plans—Government of India.

Fourth Five Year Plan—1969-74.

'India'—A reference Annual, 1970.

'Khadi-Gramodyog'—Journal Annual Number October, 1971.

'National Small Industries Progress'—10 years progress.

Report of the Fiscal Commission—Government of India.

Report of the Ford Foundation Team—1954.

Report of the National Small Industries Corporation.

Report of the study group on Employment and Training—National Commission Labour—1969, New Delhi.

Reserve Bank of India—Bulletins.

'The Hindu"—Industrial Surveys 1967, 68, 69 and 70.

Third Five Year Plan.

'தொழில் அனுமதிக் கொள்கை விசாரணைக் குழு'.

'Tamilnadu Small Industries Exhibition and Seminar, 1971—Souvenir.'

# கலைச்சொல்லகராதி
## (GLOSSARY)

### A

| | | |
|---|---|---|
| Accumulation of Capital | — | முதல் பெருக்கம் |
| Actual Growth rate | — | உண்மையான வளர்ச்சிவீதம் |
| Advalorem | — | விலைமதிப்பின்படி |
| Adverse Balance of trade | — | பாதக வாணிக நிலை |
| Advisory Committee | — | ஆலோசனைக் குழு |
| Age of high mass Consumption | — | உயர் அளவு நுகர்வுக் காலம் |
| Agents | — | முகவர்கள் |
| Agro-based | — | வேளாண்மை சார்ந்த |
| Ambar Charkha | — | அம்பர் சர்க்கா |
| Assembling | — | இணைப்பு அல்லது தொகுப்பு |
| Automobile Engineering | — | உந்துவண்டி பற்றிய பொறியியல் |

### B

| | | |
|---|---|---|
| Balanced diet | — | சரிவிகித உணவு |
| Balanced growth | — | சரிசமநிலை வளர்ச்சி |
| Balanced Regional Development | — | சமமான வட்டார வளர்ச்சி |
| Balance of payments | — | செலுத்தல் நிலைச் சமன்பாடு |
| Bargaining Power | — | பேரம் பேசும் சக்தி |
| Boards | — | வாரியங்கள் |
| Bonds and debentures | — | கடனீட்டுப் பத்திரங்கள் |
| Boom | — | செழிப்பு நிலை |
| Borrowed Capital | — | கடன் வாங்கிய முதல் |
| Bottomheavy | — | அடித்தளப் பளு |
| Brain Drain | — | அறிவு வடிமானம் |

B—cont.

**Bulk-gaining products** — இடமடைக்கும் பொருள்கள்
**Bureaucratic** — ஒருமுக மைய ஆட்சி
**Business Cycles** — வணிகச் சகடங்கள், வணிகச் சுழல்கள்

C

**Capital assets** — மூலதனச் சொத்துகள்
Capital formation — மூலதனத் திரட்சி, முதலாக்கம்
Capital-Intensive Policy — மூலதனத் தீவிரக் கொள்கை
Capitalist Sector — முதலாளித்துவத் துறை
Capital-Labour ratio — முதல்-உழைப்பு விகிதம்
Capital-Output ratio — முதல்-உற்பத்தி விகிதம்
Capital Projects — உற்பத்திக் கருவிகளை உருவாக்கும் திட்டங்கள்
Census of Manufacturing Industries — ஆலைத் தொழில்களின் கணிப்பு
Central Bank — மைய வங்கி
Central Co-ordination Committee — மைய ஒருங்கிணைந்த குழு
Central Small Industries Board — மத்திய சிற்றளவுத் தொழில்கள் வாரியம்
Central Statistical Organisation — மத்திய புள்ளிவிவர அமைப்பு
**Centres** — மையங்கள்
**Chain of Disequilibrium** — நிலையில்லாத சங்கிலி
Civil Aviation — பொது விமானப் போக்குவரத்து
Class Conflict — வகுப்பு மோதல்
Classical Model — தொன்மை பொருளாதார மாதிரிப் படிவம்
Classless Society — வகுப்பு பேதமற்ற சமுதாயம்
Coating — மேற்பூச்சு
Colonialism — குடியேற்றம்
Complementarity — நிரப்புத் தன்மை
Compulsive Programme — வலுக்கட்டாயத் திட்டங்கள்
**Commissions** — ஆணைக் குழுக்கள்
**Committees** — குழுக்கள்
**Common facility Workshop** — பொது வசதிப் பணிமனை
**Commonwealth Columbo Plan** — 'காமன்வெல்த்' கொழும்புத் திட்டம்

## C—cont.

Communication — செய்தித் தொடர்பு
Communist Receipt — பொது உடைமையாளரின் செயல்முறை
Consolidation of Holdings Act — நில இணைப்புச் சட்டங்கள்
Constant Capital — மாறு முதல்
Consumer Goods — நுகர்வுப் பொருள்கள்
Consumption Expenditure — நுகர்வுச் செலவு
Corporate Sector — கட்டமைப்புத் துறை
Core Sector — முக்கியமான துறை
Correlation — உடன் தொடர்பு
Cottage Industries — குடிசைத் தொழில்கள்
Costs and benefits — செலவுகளும், பயன்களும்
Credit Guarantee — கடன் உத்தரவாத அமைப்பு
Credit Guarantee Scheme — கடன் உத்தரவாதத் திட்டம்
Cumulative Progress — உற்பத்தித் திரள்
Curative Measures — நிவாரண நடவடிக்கைகள்
Customers Service Corporation — வாடிக்கையாளர்கள் பணி இணைக் கழகம்

## D

Decay of Capitalism — முதலாளித்துவத்தின் அழிவு
Deficit Financing — பற்றுக்குறை நிதியாக்கம்
Dependency Burden — சார்புப் பளு
Depreciation — தேய்மான மதிப்பு
Depressed Industry — வாட்டமுற்ற தொழில்
Depression — மந்தநிலை
Deposits — வைப்புகள்
Detrimental — தடை
Developed — வளர்ச்சியுற்ற
Development Council — வளர்ச்சிக் குழு
Development Economics — வளர்ச்சிப் பொருளாதாரம்
Development Planning — வளர்ச்சித் திட்டம்
Directive Principles — நெறிசெய் நியதிகள்
Directorate General of Technical Development — தொழில் நுட்ப வளர்ச்சி பொது இயக்குநர் அலுவலகம்
Directors — இயக்குநர்கள்
Direct Productive Activities — நேரடியான பயன் தருவள முடைய முதலீடு

D—cont.

Direct Relationship — நேரடித் தொடர்பு
Direct Taxation — நேர் முகவரி
Discriminating Protection — பேதங்காட்டும் காப்புச் சலுகை
Disguised unemployment — மறைமுக வேலையின்மை, ஒளிந்துள்ள வேலையின்மை
Dispersal of Industry — தொழில் பரவலாக்குதல்
Division of Labour — வேலைப் பகுப்பு
Draft — நகல்
Drive to Maturity — வளர்ச்சி நிறைவுருத் தூண்டுதல்
Dumping — குவித்தல்
Dynamic Economies — இயக்கநிலைப் பொருளாதாரம்

E

Economic Depression — பொருளாதார மந்தம்
Economic Diversification — பொருளாதாரப் பரவல்
Economic Growth Models — பொருளாதார வளர்ச்சியின் மாதிரிப் படிவங்கள்
Economic Instability — பொருளாதார நிலையின்மை
Effective Demand — உறுதித் தேவை
Effective Demand for Education — கல்விக்குண்டான உறுதித் தேவை
Elements of Industrial Development Strategy — தொழிலகவளர்ச்சி வழிமுறைக் கூறுகள்
Enamelling — மெருகிடுதல்
End Products — இறுதிப் பண்டங்கள்
Entrepreneur — தொழில் முயல்வோர்
Entrepreneurial and Managerial skills — தொழில் முயல்பு மற்றும் நிர்வாகத் திறமை
Equity or Risk Capital — பங்கு பத்திர மூலதனம்
Excess Capacity — உபரிக் கொள்ளளவு
Excise duty — ஆயத்தீர்வை வரி
Export Development Offices — ஏற்றுமதி வளர்ச்சி அலுவலகங்கள்
Export Promotion Policy — ஏற்றுமதி ஊக்குவிக்கும் அதிகரித்தல் கொள்கை
External Economics — புறச் சிக்கனங்கள்
Extractive Industries — பொறுக்குத் தொழில்
European Common Market — ஐரோப்பிய பொதுச் சந்தை

## F

Fact-Finding Committee — விவரங்கள் கண்டுபிடிப்புக் குழு
Fair Wage — நியாயமான கூலி
Fatigue Study — சோர்வு பற்றிய ஆய்வு
Federal Bodies — கூட்டமைப்பு நிறுவனங்கள்
Federation of Association of Small Scale industries — சிறுதொழில்கள்கூட்டமைப்புச் சங்கம்
Feed Back — மறு ஊட்டு
Feudalism — நிலப் பண்ணை உரிமை
Fiscal and Monetary Policies — நிதி மற்றும் பணவாக்கக் கொள்கைகள்
Fiscal commission Report — நிதிக்குழு அறிக்கை
Fixed capital asect chart — நிலையான மூலதனச் சொத்து அட்டவணை
Follow-up — தொடர் செயல்
Forced Savings — கட்டாயச் சேமிப்பு
Ford Foundation Team — ஃபோர்டு அறக்கட்டளைக்குழு
Foreign Collaboration — அயல் நாட்டுக் கூட்டமைப்பு
Foreign Exchange — அந்நிய நாட்டுச் செலாவணி
Free List of Licensing — கட்டுப்பாடற்ற அனுமதிப் பட்டியல்
Free Trade Policy — தடையில்லா வணிகக் கொள்கை
Full Employment Equilibrium — வேலைநிறைவுச் சமநிலை
Functional Industrial Estates வேலை சார்ந்த தொழிற் பேட்டைகள்

## G

Galvanising — மின் ஆற்றலுண்டாக்கல்
General Index — பொதுக் குறியீட்டெண்
Good will — நன்மதிப்பு
Government Sector — அரசுத்துறை
Great Depression — பொருளாதாரப் பெருமந்தம்
Gross National Products — நாட்டு உற்பத்தி அளவு
Gross Registered Tonnage — மொத்த பதிவு செய்த எடை
Growing Points — வளரும் முனைகள்
Grow more food campaigns — அதிக உற்பத்திப் பெருக்கத் திட்டங்கள்
Growth rate of Economy — பொருளாதார வளர்ச்சி வீதம்

## H

Handicrafts — கைவினைத் தொழில்கள்
Handloom Industries — கைத்தறித் தொழில்கள்
Have nots — இல்லார்
Haves — உடையார், உள்ளோர், இருப்போர்
Higher Saving Ratio — அதிக சேமிப்பு விகிதம்
Highly Developed — அமோக வளர்ச்சி
Highly overlapped Industrial Economy — மிதமிஞ்சிய வளர்ச்சி கண்ட தொழில் சார்ந்த பொருளாதாரம்
High Progressive Taxation — உயர் வளர் வீத வரி விதிப்பு
Home Charges — நாட்டு நிர்வாகச் செலவுக் கட்டணம்
House-hold Industries — குடும்பத் தொழில்கள்
House-hold Sector — அகத் துறை

## I

Idle Capacity — பயன்படுத்தப்படாத கொள்ளளவு
Immobile factors — அசைவற்ற உற்பத்திக் காரணிகள்
Import Oriented — இறக்குமதிக் குறிக்கோளான
Import Substitution — இறக்குமதிப் பதிலீடு
Imposition of Cess — தீர்வை வரி விதித்தல்
Income Creating effects — வருமானம் உண்டுபண்ணக் கூடிய விளைவுகள்
Index number of N. N. P with 1960-61 as base — 1960-61 ஆண்டை அடிப்படையாகக் கொண்ட நிகர தேசிய உற்பத்திக் குறியீட்டெண்
Index number of per Capita N.N.P. with 1960-61 as base — 1960-61 ஆண்டை அடிப்படையாகக் கொண்ட தலா நிகர தேசிய உற்பத்திக் குறியீட்டெண்
Indian Industrial Commission இந்திய தொழிலக ஆணைக் குழு
Indian iron and steel Company இந்திய இரும்பு எஃகு நிறுவனம்
Indian Planning Commission இந்தியத் திட்டக் குழு
Indicative Programme — சுட்டிக் காட்டும் திட்டங்கள்
Indigenous Bankers — சுதேசி வங்கியாளர்கள்

I—cont.

Indirect Taxation — மறைமுக வரி

Industrial Co-operative — தொழில் கூட்டுறவுகள்

Industrial Development — தொழில் வளர்ச்சி

Industrial Districts — தொழில் மாவட்டம்

Industrial Estates — தொழில் பேட்டைகள்

Industrial Finance Corporation — தொழிலக நிதி நிறுவனம்

Industrial Goods — தொழில் பண்டங்கள்

Industrial Reserve Army — தொழில்துறை கையிருப்புப் படை

Indusrial Revolution — தொழில் புரட்சி

Industrial Tract — தொழில் பெருகிய வட்டாரம்

Industrial undertakings (collection of information and statistics) Rules 1959 — தொழில் துறை நிறுவனங்கள் (செய்தி மற்றும் புள்ளி விவரம் சேகரித்தல்) சட்டம், 1959.

Industries Development and Regulation Act — தொழில்கள் வளர்ச்சி ஒழுங்கு முறைச் சட்டம்

Inflation — பண வீக்கம்

Information Bureau — செய்தி சேகரிக்கும் குழு

Infra structure — உள்ளமைப்புத் தொழில்கள் ; அக அமைப்புத் தொழில்கள்

Inland Water ways — உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து

Innovations — புதுமைகள்

Installed Capacity — உற்பத்திக்கு நிறுவப்பட்ட கொள்ளளவு

Institutional Credit — நிறுவன நிதி மூலங்கள்

Insured articles — காப்பீடு செய்த பொருள்கள்

Integration Policy — இணைப்புக் கொள்கை

Intensive Capital — செறிந்த முதல்

Intensive Method of Cultivation — தீவிரச் சாகுபடி முறை

Internal Economics — அகச் சிக்கனங்கள்

International division of labour — பன்னாட்டு வேலைப் பகுப்பு

International Institutions — பன்னாட்டிலும் பரந்த நிறுவனங்கள்

International Monetary Fund — பன்னாட்டுச் செலாவணி நிதி

## I—cont.

International Planning Team — பன்னாட்டுத் திட்டக் குழு
International Technology — நடுநிலைமையான தொழில் நுட்ப முறை
Inverse Relationship — தலைகீழ் தொடர்பு
Investment Dose — முதலீட்டு இடுமானம்
Investment Expenditure — முதலீட்டுச் செலவு
Investment in Human Capital — மக்கள் செல்வத்தின் மீது முதலீடு
Investment Multiplier — முதலீட்டுப் பெருக்கி
Investment Opportunities — முதலீட்டு வாய்ப்புகள்
Iron Law of Wages — கூலி நிர்ணய இரும்பு விதி

## J

Joint Family System — கூட்டுக் குடும்ப முறை

## K

Key Industries List — முக்கிய அல்லது ஆதாரத் தொழில்கள் பட்டியல்
Key or Basic Industries — ஆதாரத் தொழில்கள்
Know how — நுண்ணறிவாற்றல், நுட்ப அறிவு

## L

Labour-Intensive Policy — உழைப்புத் தீவிரக் கொள்கை
Labour-Intensive Traditional Industry — தீவிர உழைப்புடைய மரபுத் தொழில்
Labour Saving Devices — உழைப்பைச் சேமிக்கும் வழிகள்
Labour Supply — உழைப்பளிப்பு
Labour Theory of Value — உழைப்பளவை மதிப்புக் கோட்பாடு
Lack of Specialisation — சிறப்புத் தேர்ச்சி போதாமை
Lacquering — கனரக வார்னிஷ் பூசுதல்
Laissez-Faire Policy — தலையிடாக் கொள்கை
Law of Diminishing Returns — குறைந்து செல் விளைவு விதி
Law of Increasing Costs — உயர்ந்து செல் விளைவு விதி
Laws of Inheritence — வாரிசுரிமைச் சட்டம்
Leading Sector — தலைமைத் துறை
Less Capital Consuming — குறைந்த அளவு முதல் நுகர்வுடைய

L—cont.

Less Developed — வளர்ச்சி குன்றிய

Less Elastic Demand — நெகிழ்ச்சி மிகக் குறைந்த நிலை

Letter of Credit — பற்றுத் திருமுகம்

Letters of Intent — தொழில் தொடக்க உரிமை முடங்கல்கள்

Leverage — நெர்பு கோல்

Lewis Model of Unlimited Supply of Labour — லீவிஸின் அளவற்ற உழைப்பின் அளிப்பு மாதிரிப் படிவம்

Liabilities — பொறுப்புகள், செல்லுகள்

Local—Co-ordination Committee — வட்டார ஒருங்கிணைந்த குழு

Local Working Party — வட்டார நடைமுறைக் குழு

Long run trend — நீண்டகாலப் போக்கு

Long-Term Loans — நீண்டகாலக் கடன்கள்

Low Cost Labour — குறைந்த கூலியுடைய உழைப்பு

Luxury Goods — ஆடம்பரப் பண்டங்கள்

M

Machanical Engineering — இயந்திரப் பொறியியல் நிறுவனங்கள்

Machanisation of Agriculture — வேளாண்மையை இயந்திரமயமாக்குதல்

Machine Making Industries — இயந்திர உற்பத்தித் தொழில்கள்

Manager — மானேஜர், நிருவாகி

Managing Agency System — நிர்வாக முகவர் முறை

Managing Director — நிர்வாக இயக்குநர்

Man-Land Ratio — மக்கள்–நிலவீதம்

Manufacturing Industries — பொறி ஆள் தொழில்

Marginal Productivity of Capital — முதலின் இறுதிநிலை உற்பத்தித்திறன்

Marginal Propensity to save — இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம்.

Market Imperfections — சந்தை நிறைகுறைகள்

Marketing and Distribution — அங்காடியும் பகிர்ந்தளித்தலும்

Marketing Service Corporation — அங்காடிப்பணி இணைக்கழகம்

Market Survey — சந்தை ஆய்வு

Materialistic Philosophy — பொருள் சார்ந்த தத்துவம்

M—cont.

Means — வழிவகைகள்
Medium-Term Credit — இடைக்காலக் கடன்
Merit List — சிறப்புத் தகுதிப் பட்டியல்
Middle Sector — நடுத்தரத் துறை
Mineral Concession Rules — கனிப்பொருள் சலுகைச் சட்டங்கள்
Ministry of Commerce and Industry — வணிக மற்றும் தொழில்துறை அமைச்சு
Mixed Economy — கலப்புப் பொருளாதாரம்
Mixing — கலவை
Modernisation — நவீனமயமாக்குதல்
Money Order — பணவிடை
Mono Culture — ஒற்றைத் தொழில் அல்லது பயிர்
Monopoly — (விற்பனை) முற்றுரிமை, சர்வாதீனம்
Moorings — நிலைப்படுத்து
Multiple-Cropping — பல பயிர்ச் சாகுபடி
Multi purpose Institute of Technology — பல்நோக்குத் தொழில் நுட்பக் கழகங்கள்
Mutually Exclusive — ஒன்றை ஒன்று விலக்கும் தன்மை
Motion Study — சலன ஆய்வு

N

National Co-operative Farming Board — தேசியக் கூட்டுறவுப் பண்ணை வாரியம்
National-Building Projects — தேசியக் கட்டட அமைப்புத் திட்டங்கள்
National Federation of Industrial Co-operative Limited — தேசியத் தொழில் கூட்டுறவுக் கூட்டமைப்பு நிறுவனம
National Income at Constant Price — நிலையான விலைவாசிகளின் படியான தேசிய வருமானம்
National Income Committee — தேசிய வருமானக் குழு
National Income Per capital — தேசிய வருமானத்தை முதலின் அளவு உயர்த்தல்.
National Planning — தேசியத் திட்டம்
National Sample Survey — தேசிய மாதிரி ஆய்வு
National School of Design — தேசிய வடிவமைப்புப் பள்ளி

## N—cont.

| | | |
|---|---|---|
| National Small Industries Corporation | — | தேசிய சிறுதொழில் இணைக் கழகம் |
| Natural Growth Rate | — | இயல்பான வளர்ச்சி வீதம் |
| Net addition | — | நிகர அதிகரிப்பு |
| Net Capital-inflow | — | நாட்டினுள்வந்த நிகர அந்நிய மூலதனம் |
| Net Domestic Capital formation | | நிகர உள் நாட்டு மூலதனத் திரட்சி |
| Net National Product at Factor Cost | | உற்பத்திச் செலவில் நிகர தேசிய உற்பத்தி |
| Non Economic forces | — | பொருளாதாரச் சார்பற்ற சக்திகள் |
| Non Food Commercial Crops | | உணவுப் பொருளற்ற வணிகப் பயிர்கள் |

## O

| | | |
|---|---|---|
| Occupational Structure | — | தொழில்வகை அமைப்பு |
| One Man Show | — | தனிமனிதனின் முயற்சி |
| Optimum Productivity | — | உத்தம உற்பத்தித்திறன் |
| Optimum Size | — | உத்தம அளவு |
| Optimum Utilisation of resources | | உத்தம நிலையில் வளங்கள் யாவும் பயன்படுத்தல் |
| Order | — | ஆணை |
| Organised Securities Market | — | சீரமைந்த பத்திரச் சந்தை |
| Over head Cost | — | பொதுச் செலவு |

## P

| | | |
|---|---|---|
| Paid-up Capital | — | செலுத்திய முதல் |
| Part-time Agro type | — | பகுதி நேர வேளாண்மை மாதிரித் தொழில் |
| Pay Back Period | — | திரும்பத்தரவல்ல காலம் |
| Peak | — | முகடு |
| Penalty | — | அபராதம் |
| Per capita Net Product | — | தலா நிகர தேசிய உற்பத்தி |
| Perfect Market | — | சந்தை நிறைவுடையது |
| Perfection of Markets | — | சந்தைகளைச் செம்மைப் படுத்தல் |
| Per head value of out put | — | தனி நபர் உற்பத்தியின் மதிப்பு |
| Permission and Licensing Policies | — | இசைவு வழங்கும் கொள்கைகள் |

## P—cont.

Per shift — ஒரு வேலை நேர அளவு
Personal Security — சொந்தப் பிணையம்
Pilot Scheme — முன்னோடித் திட்டம்
Planned Economics — திட்டமிட்ட பொருளாதாரம்
Plantation Crops — தோட்டப் பண்ணைப் பயிர்கள்
Plantation Industries — தோட்டப் பண்ணைத் தொழில்கள்
Plant Protection Programme — பயிர்ப் பாதுகாப்புத் திட்டம்
Plating — முலாம் பூசுதல்
Ploughing back — மீண்டும் பயனுக்குக் கொண்டு வருதல்
Policy of Industrialisation — தொழில்மயக் கொள்கை
Policy of Rationalisation — சீரமைப்புக் கொள்கை
Polishing — பளபளப்பாக்குதல்
Political Expediency — அரசியல் வழித்துறை
Population explosion — மக்கள்தொகை வெடிப்பு
Positive, Constructive and Creative Measure — உறுதியான ஆக்கவளமுடைய மற்றும் புதிதாகத் தோற்றுவிக்கும் நடவடிக்கைகள்
Positive Savings — நேர்முகச் சேமிப்புகள்
Power, fuel, mineral — சக்தி, எரிபொருள், கனிப் பொருள்
Pre conditions for take off — அப்பால் இட்டுச் செல்வதற்குரிய நிபந்தனைகள்
Preventive Measures — தடுப்பு நடவடிக்கைகள்
Price behaviour — விலைவாசிப் போக்கு
Price Rigidity — விலை உறுதிப்பாடு
Primary Health Centres — ஆரம்ப மருத்துவ நிலையங்கள்
Primary Products — முதன்மைப் பொருள்கள், முதல் நிலைப்பொருள்கள்
Priorities — முக்கியத்துவ வரிசை
Priority List — முன்னுரிமைத் தொழில்கள் பட்டியல்
Priority Sectors — முன்னுரிமைத் துறைகள்
Problems — சிக்கல்கள்
Procedure — செயல்முறை
Processing machinery — பழமுறை இயந்திரங்கள்
Producer goods — உற்பத்தியாளர் பொருள்கள்
Production function — உற்பத்திச் சார்பு

P—cont.

Production in common shed — பொதுப் பட்டறையில் உற்பத்தி செய்தல்
Production in Member's Workshop — உறுப்பினர்களின் பணிமனைகளில் உற்பத்தி
Production structure — உற்பத்தி அமைப்பு
Productive capacity — உற்பத்திக் கொள்ளளவு
Productive factors — உற்பத்திக் காரணிகள்
Productivity — உற்பத்தித் திறன்
Propensity to consume — நுகர்வு நாட்டம்
Prosperity — செழிப்பு நிலை
Proto-type and training centres — மூல முன்மாதிரி, உற்பத்தி பயிற்சி மையங்கள்
Public debt — பொதுக் கடன்
Public Expenditure — பொதுச் செலவு
Public Relations Programme— மக்கள் தொடர்புத் திட்டம்
Public Utilities — பொதுப்பணி வசதிகள்
Public Utility Services — பொது வசதிப் பணிகள்
Purchasing Power — வாங்கும் திறன்

R

Rate of Growth of Capital — முதல் வளர்ச்சி வீதம்
Rate of Growth of percapita real income — தலா உண்மை வருமான வளர்ச்சி வீதம்
Rate of Growth of Population — மக்கள்தொகை வளர்ச்சி வீதம்
Rate of Profit — இலாப வீதம்
Rationalisation of Industry — தொழில் சீரமைப்பு
Raw Leather — கச்சாத் தோல்
Raw Materials — மூலப் பொருள்கள்
Raw wool — கச்சா ஆட்டு உரோமம்
Real per capita income — உண்மைத் தலா வருமானம்
Rebates — தள்ளுபடி
Reclamation — நில மீட்சி
Recommendations — பரிந்துரைகள்
Regional Board — வட்டார வாரியம்
Regional Development — வட்டார முன்னேற்றம்
Regional Economy — வட்டாரம் சார்ந்த பொருளாதாரம்
Regionalism — வட்டாரக் கொள்கை

## R—cont.

| | |
|---|---|
| Regional Planning of Industry | தொழில் பரவலாக்கும் திட்டம் |
| Regional Unbalanced Growth | வட்டார சரிசம நிலையில்லா வளர்ச்சி |
| Registration Charges — | பதிவுக் கட்டணம் |
| Rejected or Banned List — | நிராகரிக்கப்பட்ட அல்லது தடை செய்யப்பட்ட தொழில்களின் பட்டியல் |
| Rental Basis — | வார அடிப்படை |
| Research and Development — | ஆராய்ச்சியும், முன்னேற்றமும் |
| Resource-Oriented Industries | மூலவளங்கள் ஒழுங்கமைந்த தொழில்கள் |
| Ricardian Theory of Rent — | ரிக்கார்டோவின் வாரக் கோட்பாடு |
| Risks — | (இடர்கள்) ஆபத்துகள் |
| Rural Industries — | கிராமப்புறத் தொழில்கள் |

## S

| | |
|---|---|
| Saw-mills — | அறுவை ஆலைகள் |
| Scientific Management — | விஞ்ஞான நிர்வாகம் |
| School of thought — | கருத்துத் தொகுதி |
| Secular stagnation — | காலாந்தரத் தேக்கம் |
| Self Employment — | சுயவேலை |
| Self Generating Economy — | தன் முனைப்பு உற்பத்திப் பொருளாதாரம் |
| Self Sufficiency — | தன்னிறைவு நிலை |
| Semi finished — | பாதி முடிக்கப்பட்ட |
| Semi Skilled — | பகுதித் திறன்பெற்ற |
| Service Cooperation — | சேவைக் கூட்டுறவுகள் |
| Shipping — | கப்பல் போக்குவரத்து |
| Shoddy Sector — | கந்தல் இழையிலை மறுபடி நெசவு நெய்த ஆடைத் தயாரிப்புத் துறை |
| Short-Term Credit — | குறுகியகாலக் கடன்கள் |
| Siding — | ஒதுங்குபாடு |
| Skilled Labour — | திறன் பெற்ற உழைப்பு |
| Small Business Act — | சிற்றளவு வணிகச் சட்டம் |
| Small Business Administration — | சிற்றளவு வணிக நிர்வாகம் |
| Small Industries Corporation — | சிறுதொழில்கள் இணைக்கழகம் |

## S—cont.

| | | |
|---|---|---|
| Small Scale Industries Development Organisation | — | சிற்றளவுத் தொழில்கள் வளர்ச்சி அமைப்பு |
| Small Industries Service Institute | — | சிறுதொழில் பணி நிறுவனம் |
| Small Industry Extension Institute | — | சிறுதொழில் விரிவாக்கப்பயிற்சி நிறுவனம் |
| Small Scale | — | சிற்றளவு உற்பத்தி |
| Small Scale Subsidiary Industry | — | சிற்றளவுத் துணைத் தொழில்கள் |
| Small war Plant Corporation | — | சிறிய யுத்த தளவாட இணைக் கழகம் |
| Social control over Banks | — | வங்கிகளின்மேல் சமூகக் கட்டுப்பாடு |
| Social Mariginal Productivity | — | சமுதாய இறுதிநிலை உற்பத்தித் திறன் |
| Social Objectives | — | சமூக நோக்கங்கள் |
| Social Overhead Capital | — | சமூக ஆக்க நிலை முதல் |
| Socio Economic Overheads | — | சமூகப் பொருளாதார ஆக்க நிலை |
| Soil Conservation | — | மண்வளப் பாதுகாப்பு |
| Solid Technical base | — | நிலையான தொழில் நுட்ப அடித்தளம் |
| Sophisticated Products | — | பண்பட்ட பொருள்கள் |
| Source of Finance | — | நிதி மூலங்கள் |
| Special Development Corporation | — | சிறப்பு வளர்ச்சி இணைக்கழகம் |
| Stamp Duty | — | முத்திரை வரி |
| Standing Committee | — | நிலையான குழு |
| State Aid to Industries Act | — | மாநிலத் தொழில் உதவிச் சட்டங்கள் |
| State Finance Corporation | — | மாநில நிதி இணைக் கழகம் |
| State Trading Corporation | — | அரசு வணிக இணைக் கழகம் |
| Sub divisions aud fragmentations | — | உட்பிரிவும், சிதறலும் |
| Subsistence Level | — | பிழைப்பு மட்டம் |
| Subsistence Sector | — | பிழைப்புக்கு மட்டும் பாடுபடும் துறை |
| Substitute | — | பதிலீடு |
| Supplementing | — | உதவி புரிகின்ற |

S—cont.

Surfaced Roads — நல்ல மேற்பரப்பை உடைய சாலைகள்
Surplus Labour — உபரி உழைப்பு
Surplus Value — உபரி மதிப்பு

T

Take off — அப்பாலிட்டுச் செல்லுதல்
Tariff Board — சுங்கவரி வாரியம்
Tariff Policies — சுங்கக் கொள்கைகள்
Tax Policy — வரிக் கொள்கை
Technical competence — தொழில் நுட்பத் தகுதி
Teehnological changes — தொழில் நுட்ப மாற்றங்கள்
Teehnological efficiency level — தொழில் நுட்பத் திறமட்டம்
Tertiary Industries — மூன்றும் நிலைத் தொழில்கள்
Three tier — மூன்றடுக்கு
Time-limit — காலக் கெடு
Time Series Criterion — கால வெளியீட்டுத் தொகுதிக் கோட்பாடு
Time-Study — கால ஆய்வு
Trade Associations — வணிகச் சங்கங்கள்
Traditionol Society — மரபார்ந்த சமுதாயம்
Traditional Source — மரபு சார்ந்தவை
Trusteeship — தர்மகர்த்தா முறை

U

Unbalanced Growth — சரிசமமில்லா வளர்ச்சி
Under developed — போதாவளர்ச்சி, வளர்ச்சி குறைந்த
Under Employment — வேலைக்குறைவு
Under takings — வாங்கிக்கொள்வதாகத் தரும் உறுதி, தொழில் ஈடுபாடு
Undeveloped — வளர்ச்சியுரு
Uneconomic Capacity — இலாபமற்ற கொள்முதல்
Unemployment — வேலையின்மை
Unsurfaced Roads — சீரற்ற சாலைகள்
Upward Spiral — திருகுச்சுருள்
Utilisation of Capacity — பயன்படுத்தப்பட்ட கொள்ளளவு

U—cont.

Uuban Concentration — நகர்ப்புறச் செறிவு

Urbanisation or Urban development — நகர்ப்புற வளர்ச்சி, முன்னேற்றம்

V

Value of gross out put — மொத்த உற்பத்தி மதிப்பு

Variable capital — மாறும் முதல்

Viable — வளம் பெறக்கூடிய

Viscious circle of Poverty — வறுமையின் நச்சுச் சுழல்

Village Industries — கிராமத்தொழில்கள்

Volume of Investment — முதலீட்டுப் பருமம்.

Voluntary Savings — தன்னிச்சையான சேமிப்புகள்

W

Warranted Growth rate — உத்தரவாதமுள்ள வளர்ச்சி வீதம்

Weight-gaining Projects — எடைமிகு உற்பத்தித் திட்டங்கள்

Whole Sale index — மொத்த விலைக் குறியீட்டெண்.

Without Social and Political Cost — சமூக மற்றும் அரசியல் செலவின்றி

Working Capital — நடைமுறை மூலதனம்

Working Population — உழைக்கும் மக்கள் தொகை

World Bank — உலக வங்கி

